

பழனி அருள்மிகு

# தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில்

திருக்குட நன்னீராட்டுப் பெருவிழா

**2-9-1973**



# சிறப்பு மலர்

30-1

ஓம்
முருகா

# அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில் - பழனி



நாள் :
**2–9–1973**

## திருக்குட நன்னீராட்டுப் பெருவிழா



# சிறப்பு மலர்



அருள்மிகு சின்னக் குமரர் தங்கரதத் திருவுலாக் காட்சி



தமிழக ஆளுநர்

மேதகு கே. கே. ஷா அவர்கள்



தமிழக முதல்வர்
மாண்புமிகு டாக்டர் கலைஞர் மு. கருணாநிதி அவர்கள்



தமிழக அரசு, இந்துசமய அறநிலைய ஆட்சித்துறை அமைச்சர்
மாண்புமிகு மு. கண்ணப்பன் அவர்கள்



தமிழ்நாடு இந்துசமய அறநிலைய ஆட்சித்துறை ஆணையர்
உயர்திரு. கே. எஸ். நரசிம்மன், பி. ஏ., பி. எல்., ஐ. ஏ. எஸ்., அவர்கள்



**திரு. பு. மனோகரன்**
தலைவர்
அறங்காவற் குழு



**திரு. வி. சௌ. கோதண்டபாணி,**
பி. எஸ்சி., பி. எல்.,
துணை ஆணையர் - நிர்வாக அதிகாரி



திரு. R. M. கந்தசாமி, B. Sc.
அறங்காவலர்



திரு. N. நாச்சிமுத்து, M. L. A.
அறங்காவலர்



புலவர் திரு. சி. பழனிச்சாமி, M. L. A.
அறங்காவலர்



திரு. A. பச்சையப்ப கவுண்டர்
அறங்காவலர்

## முன்னாள் அறங்காவற் குழுத் தலைவர்கள்



அமரர் திரு. எம். பி. மங்கள கவுண்டர்
காணியாளர்
பழனி





திரு. ஐ. டி. ஓபுள கொண்டம
நாயக்கர் ஐயனவர்கள்
ஆயக்குடி ஜமீன்தார்





திரு. பி. எஸ். கே. லக்ஷ்மீபதி ராஜு
பழனி





அமரர் திரு. வி. வி. சி. ஆர். முருகேச முதலியார்
ஈரோடு





திரு. ஜி. சின்னதுரை
நெய்க்காரப்பட்டி



**திரு. கு. அருணாசலம்,** எம். ஏ.,
முதல்வர், கலைக் கல்லூரி



**திரு. டி. எஸ். ஆர். இராம்தாஸ்,** எம். ஏ.,
முதல்வர், இந்தியப் பண்பாட்டுக் கல்லூரி





**திருமதி ந. சரோஜினி தேவி,** எம். ஏ.,
முதல்வர், மகளிர் கலைக் கல்லூரி



**செல்வி பெரு. சேதுபதி,** எம். ஏ.,
முதல்வர், மகளிர் செந்தமிழ்க் கல்லூரி



திரு. S. நாகுரெட்டி
திருக்கோயில் அலுவலகக் கண்காணிப்பாளர்



திரு. V. பாலசுப்பிரமணியன்
மலைக்கோயில் கண்காணிப்பாளர்



திரு. S. G. கிட்டப்பா
சித்த வைத்தியர்
திருக்கோயில் சித்த மருத்துவ நிலையம்

## பொறியியல் துறை



திரு. K. L. முத்துசாமி, B. E.
உதவிப் பொறியாளர்
கட்டிடத்துறை



திரு. K. கணபதி, B. E.
உதவிப் பொறியாளர்
மின்துறை



திரு. S. காளியப்பன், B. E.
உதவிப் பொறியாளர்
கட்டிடத்துறை

## திருக்கோயில் மருத்துவ அதிகாரிகள்



டாக்டர் திரு. எம். பொன்னுசாமி,
பி. எஸ்சி., எம். பி., பி. எஸ்.





டாக்டர் செல்வி ஆர். அருணகுமாரி,
எம். பி., பி. எஸ்.



PRESS SECRETARY TO THE PRESIDENT,
RASHTRAPATI BHAVAN,
NEW DELHI-110004.

July 4, 1973

*Dear Shri Manoharan,*

The President is glad to know from your letter of the 22nd June, 1973 that the 'Kumbabishekham' of the Arulmigu Dandayuthapaniswami Temple, Palni, will be celebrated on the 2nd September, 1973. He sends his best wishes for the success of the celebration.

Yours sincerely,

*(Sd.) A. M. Abdul Hamid*




SECRETARY
TO THE VICE-PRESIDENT OF INDIA
NEW DELHI

*July 4, 1973*

*Dear Sir,*

The Vice-President is glad to know that the 'Kumbabishekham' of Arulmigu Dandayuthapaniswami Temple, Palni will be celebrated on 2nd September, 1973 and a souvenir brought out on this occasion. He sends his best wishes for the success of the celebrations and the publication.

Yours faithfully,

*(Sd.) V. Phadke*



MINISTER OF REVENUE AND EXPENDITURE
MINISTRY OF FINANCE INDIA
NEW DELHI - 110001

July 7, 1973

Dear Sir,

I am desired to acknowledge the receipt of your letter dated the 22nd June, 1973 addressed to Shri K. R. Ganesh, Minister of State for Finance, requesting for his message for inclusion in the Souvenir being brought out on the occasion of 'Kumbabishekham' of Arulmigu Dandayuthapaniswami Temple, Palni.

Yours faithfully,

*(Sd.) F. S. Zulfiquaruddin*

K. K. SHAH
GOVERNOR OF TAMIL NADU

RAJ BHAVAN
MADRAS-22

25th June, 1973

MESSAGE

I wish the Kuda Neerattu Vizha of Sri Dandayudhapani Swami Temple, Palni, success.

*(Sd.) K. K. Shah*




முதலமைச்சர்

16—7—1973

அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமி மலைக் கோயில் குடநீராட்டு விழாவினையொட்டி வெளியிடப் பெற இருக்கும் சிறப்புமலர், சமயம், இலக்கியம், பண்பாடு, கலை ஆகிய யாவும், சமுதாயத்தின் அடிமட்டத்தில் உள்ள மக்களின் வாழ்க்கைக்கு வளமூட்டவே என்பதையுணர்த்தும் வகையில் விளங்கவேண்டும் என்று மனமார விரும்பி, விழா இனிது நிறைவெய்தவும், மலர் மண மலராக வெளிவரவும் வாழ்த்துகிறேன்.

(ஒ–ம்) மு. கருணாநிதி

Dr. S. RADHAKRISHNAN

"GIRIJA"
30, EDWARD ELLIOT ROAD
MYLAPORE, MADRAS-4

June 29, 1973

*Dear Sir,*

Dr. S. Radhakrishnan is glad to know that the 'Kumbabishekham' of Arulmigu Dandayuthapaniswami Temple, Palni, is to be celebrated on the 2nd September, 1973. He sends his best wishes for the success of the holy function.

Yours faithfully,

*(Sd.) C. Ramasubban*

P. S. to Dr. S. Radhakrishnan.

Talipon : 207272
*Telephone : 207272*

Taligram : SEPADU

*Jalan Dato' Onn,*
*Kuala Lumpur*

MENTERI PERPADUAN NEGARA, MALAYSIA
*MINISTER OF NATIONAL UNITY, MALAYSIA*

Surat Saya :

Surat Tuan :

# MESSAGE

I am deeply honoured to have been asked for a message on the occasion of the completion of the renovation of the Rajagopuram of the Sri Arulmigu Dandayuthapaniswami Temple, Palani.

The members of my family and I have been fortunate to have had the opportunity to have prayed at this great centre of worship. The spiritual strength that is generated has to be imbibed by many of us if we are to sustain ourselves to continue in the mundane requirements of day to day endeavour.

Many thousands of Malaysians go every year to Palani seeking spiritual strength and no one leaves empty handed.

I pray that the blessings of the Lord be showered in plenty on those who come to worship and on those who have the good fortune to serve at the temple.

*(Sd.) V. T. Sambanthan*

28th July, 1973

DR. RAJAH
SIR MUTHIAH CHETTIAR
OF CHETTINAD

CHETTINAD HOUSE
RAJAH ANNAMALAIPURAM
MADRAS-28

30—7—73

அன்புள்ள ஐயா,

தங்கள் அன்புள்ள 25-6-73உ கடிதம் கிடைத்தது. நன்றி. தங்கள் தலைமையில் அருள்மிகு தண்டாயுத பாணி சுவாமி மலைக்கோயில் குடநீராட்டு விழா மலர் வெளிவர இருக்கிறதென்பது தெரிந்து மகிழ்ச்சி. தமிழ்க் கடவுள் எனப் போற்றப்பெறும் முருகப்பெருமானின் விழா மலரில் அப் பெருமானின் அருமை பெருமை பற்றிய செய்திகள் சிறப்பாக, தமிழ்மொழி, சமயம், இலக்கியம், பண்பாடு, கலை முதலியவற்றின் உயர்வுகள் பொதுவாகவும் வெளிவருதல், மிகவும் சிறந்த பயன் உள்ள பணியாகும். மலரும், விழாவும் இனிது நிறை வெய்த பிரார்த்திக்கின்றேன்.

தங்கள் அன்புள்ள,

(ஒ-ம்) மு. அ. முத்தையா செட்டியார்

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி

# ஜகத்குரு ஸ்ரீ சங்கராசார்ய சுவாமிகள் ஸ்ரீ மடம்

காஞ்சிபுரம்

முகாம் ருஷீகேசம் தேதி 23—7—1973

சிவபிரானுக்கும் அம்பாளுக்கும் குமாரராக ஆவிர்பவித்து சூரபத்மன், தாரகன் முதலிய அஸுரர்களை ஸம்ஹரித்து தேவர்களைக் காப்பாற்றி அருளிய முருகன் இவ்வுலகிலுள்ள பக்தர்கள் தன்னை வழிபடுவதற்காக பல்வேறு ஸ்தலங்களில், முக்யமாக ஆறுபடை வீடுகளில் கோயிற்கொண்டு பக்தர்களுக்கு அருள்புரிந்து வருவது கண்கண்ட உண்மை.

இப்படை வீடுகளில் சிவபெருமான் வைத்திருந்த பழத்தை விநாயகர் பெற்றுக் கொண்டதால் வருத்தமடைந்த முருகனை 'பழம்நீ' (நீயே பழம்) என்று சொல்லி சிவபெருமான் ஸமாதானப்படுத்திய ஐதிஹ்யத்துடன் கூடிய பழனி க்ஷேத்திரத்தில் மலையின் மீது ஆவிர்பவித்துள்ள தண்டாயுதபாணியான இம்முருகனின் கோயில் நிர்வாஹகர்கள் ஸமீபத்தில் இக்கோயிலில் கும்பாபிஷேகத்தை நடத்தி வைக்க முன்வந்திருப்பதை அறிந்து மகிழ்ச்சியடைகிறோம்.

பக்தர்கள் இக்கோயிலின் கும்பாபிஷேகத்தில் கலந்துகொண்டும், ஸ்ரீ தண்டாயுதபாணியை தர்சனம் செய்தும் இப்பெருமானின் அருளால் எல்லா மங்களங்களையும் அடைவார்களாக.

HIS HOLINESS
THE JAGADGURU SRI SANKARACHARYA
OF SRI SRINGERI MUTT

SRINGERI
(Chickmagalur District)

Date 26—6—73

தாங்கள் அனுப்பிய 19-6—73 கடிதம் கிடைக்கப் பெற்றோம். மகா சந்நிதானம் ஷை மலைக் கோவில் ஸ்ரீ தண்டாயுதபாணியின் குடநீராட்டு விழா ஒழுங்காய் சிறப்பாய் நடக்க வேண்டுமெனவும் பக்தர்கள் ஸ்ரீ தண்டாயுதபாணியின் அனுக்கிரகத்தால் நீடூழி நல் சுகவாழ்வு வாழ வேண்டுமென ஆசீர்வதித்து அருளிய மந்த்ராக்ஷதை ஸ்ரீ சாரதா சந்திர மௌளீஸ்வரப் பிரசாதம் இத்துடன் அனுப்பியிருக்கிறது. ஒரு படமும் அனுப்பியிருக்கிறது.

இப்படிக்கு,

(Sd.) Private Secretary

உ
சிவசிவ

ஸ்ரீலஸ்ரீ காசிவாசி
முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள்
அவர்கள்

ஸ்ரீ காசிமடம்
திருப்பனந்தாள்
P. I. N. 612504
(தஞ்சை ஜில்லா)

தேதி 30—6—1973

சில ஊர்களின் பெயரைச் சொன்னாலே நலம் வரும்; செல்வம் தந்திடும். ''பூந்துருத்தி பூந்துருத்தி என்பீராகில் பொல்லாப் புலால் துருத்தி போக்கலாமே'' என்பர் அப்பர். அங்ஙனமே 'பழநி' என்று சொன்னாலே போதும்; அங்ஙனம் சொல்லாதவர்களை நோக்கியே அருணகிரிநாதர் ''படிக்கின்றிலை பழநித் திருநாமம்'' என்று கூறுகிறார். அங்குக் கோயில் கொண்டுள்ள இறைவன் திருநாம மந்திரம் சடாக்ஷரம். ''இசைபயில் சடாக்ஷரமதனாலே இகபர சௌபாக்கியம் அருள்வாயே'' என்பர் அருணகிரிநாதர். ஆறெழுத்தும் அன்பினுடன் கூறுமவர் சிந்தையில் குமரன் எழுந்தருளியிருப்பர் என்பர் ஸ்ரீ குமர குருபரசுவாமிகள். ''முருகன் குமரன் குகன் என்று மொழிந்து உருகும்'' அடியார்கட்குக் குருவாய் வந்து கண்கண்ட தெய்வமாய் அருள் புரிகின்ற தண்டபாணித் தெய்வம் கோயில் கொண்டருளியுள்ள பழனியில், மலைக்கோயில் குடநீராட்டு விழா 2—9—1973உ நடைபெறுவதறிந்து மகிழ்கிறோம். அப்பொழுது வெளியிடப்படும் குடநீராட்டு விழா மலர் ஆறு படை வீடு கொண்டருளும் பெம்மான் புகழ் பரப்பும் முறையில் அமையும் என்பது திண்ணம். மன்பதைகள் குடநீராட்டு விழாப்பொலிவு கண்டு, விழா நினைவு மலரின் மணம் நுகர்ந்து, ''நாதா குமரா நம'' என்று ஓதி, ''இம்மைப் பிறப்பில் இருவாதனை அகற்றி மும்மைப் பெருமலங்கள் மோசித்து'' நலமெலாம் பெற்று வாழ்க எனச் செந்திலாண்டவன் திருவருளைச் சிந்திக்கின்றோம்.

சுபம்

சிவசிவ

TELEPHONE : 22793 உ TELEGRAMS : "AADHEENAM", MADURAI

HIS HOLINESS THIRUVARUL THAVAYOGA

*Sri-la-Sri Somasundara Sri Gnanasambanda Desika*

*Paramachariya Swamigal*

MADURAI AADHEENAM

70, South Avani Moola Street,
MADURAI
(S. INDIA)

*17—8—1973*

எல்லாம் வல்ல எம்பெருமானது இன்னருளால் எல்லா நலங்களும் எய்துக.

14-தேதி எழுதிய அழைப்புக் கடிதமும், விபூதி குங்குமப் பிரசாதமும் கிடைத்து மகிழ்ந்தோம்.

திருக்குட நன்னீராட்டுப்பெருவிழா யாதொரு விக்கினமுமின்றி வெகு சிறப்பாக நடந்தேறவும், அதனை ஆர்வத்துடனும், திறமையுடனும் நடத்திவரும் தர்ம கர்த்தாக் குழுவினர், நிர்வாக அதிகாரி, சிப்பந்திகள் ஆகியோருக்கும் அதில் பங்கு கொள்கின்ற பக்தகோடிகள் அனைவருக்கும், பக்தியும், பண்பாடும், அஷ்ட ஐஸ்வரிய ஆதிக்கமும், தீர்க்காயுளும், நித்திய மங்கள குரு கடாக்ஷமும், மென்மேலும் பெருக உண்டாகத் திருவருள் பாலிக்குமாறு, எல்லாம் வல்ல ஆண்டவனைப் பிரார்த்தித்து ஆசீர்வதிக்கிறோம்.

(ஒ—ம்) ஞானசம்பந்த தேசிகர்

K. RAJAH, B.A., B.L.
DEPUTY COMMISSIONER
H. R. & C. E. (ADM) DEPARTMENT

MADRAS-600034

1—8—1973

அருள்மிகு தண்டபாணி குழந்தையாக, குமரனாக, கிழவனாக, வேடனாக, ராஜாவாகக் கோலங்கள் கொள்ளுவதைப் பார்த்துப் பக்தர்கள் அவரவர் மனநிலைக்கு ஏற்பப் பரவசமடைந்து மனச்சாந்தி பெறும் திருக்கோயில் பழனிமலை. இந்தியக் குடியரசுத் தலைவர் முதல் இருப்பிடம் இல்லாது திரியும் ஆண்டிவரை மனதில் தியானித்திட ஏழை பங்காளனாய்த் திகழ்கின்றார். முருகன் இத்தலத்தில் 'வெற்றி வேல் பெருமாள் அடியார்க்கு நல்ல பெருமாள், அவுணர் குலமடங்கப் பொடி யாக்கிய பெருமாள்' ஆக அருள்பாலிக்கின்றார்.

கலியுக வரதனான முருகன் திருக்கோயிலைப் பராமரிப்பது பெரிய சோதனைகளுக்குள் அவ்வப்பொழுது தள்ளப்பட்டு மீண்டும் தூய்மையான எண்ணத்துடன் பணியில் ஈடுபடுவதாகும். அதன் பெருமை தர்மகர்த்தர் களுக்கும், நிர்வாகத்தில் இருக்கும் அலுவலர்களுக்கும், பணியாளர்கட்கும் ஏற் பட்டிருக்கும் நீண்டகால அனுபவம். இந்தத் திருக்கோயில் நிர்வாகத்தில் பங்குகொள்ள எனக்கு 1966-ம் வருடம் ஏப்ரல் முதல் 1968-ம் வருடம் மே மாதம் வரை இருந்த சந்தர்ப்பத்தில்தான் ஒரு பெரிய சக்தி வாய்ந்த தெய்வத்தின் திருக்கோயிலில், சமுதாயத்தில் உள்ள பொருளாதாரம், சமயம், கலை, நிர்வாகம் சம்பந்தமான எல்லாப் பிரச்சினைகளும், அவைகளில் ஏற்படுகிற சிக்கல்களும் அவைகள் தீர்க்கப்படவேண்டிய அவசியமும், அதற்குள்ள வழிவகைகளும் கோயில் பணிகளில் ஈடுபடுகிறவர்கள் மனத்திலும், சம்பந்தப்பட்டவர்கள் மனத்திலும் தோற்றம் ஏற்பட்டுத் தீர்க்கப்பட்டிருக்கின்றன என்று உணர வாய்ப்பு ஏற்பட்டது. தண்டபாணி தன்னுடைய திருக்கோயிலின் வளர்ச்சிக்கு ஏற்ப தகுதியுடையவர்களை நிர்வாகத்தில் அமைத்துக்கொண்டு மக்களுக்குக் கருணை புரியும் பேராற்றலின் பெருமையைப் போற்றி, நெஞ்சில் அவனுடைய பணியின் எண்ணமே நிறைந்திருக்கவும், அவனுடைய திருநாமங்களையே வாய் உச்சரித்துக் கொண்டிருக்கவும், இந்த நிலையிலேயே ஆனந்தமாக என்றும் எல்லா நலன் களுடன் வாழ்க்கை நடத்த அருள் புரியும்படி எங்கள் குடியின் குலதெய்வமான அவனுடைய திருவடிகளை வாழ்த்தி வணங்குகின்றேன். நீண்டகாலமாக நடைபெற்று வந்த தங்க விமானத் திருப்பணி திருவருளால் நிறைவு பெற்றுக் குடமுழுக்கு விழாவும் ஆகம முறைப்படி மிகவும் சிறப்பாக நடை பெறுவதற்குப் பெரிய முயற்சி எடுத்துக்கொண்டிருக்கும் தர்மகர்த்தர் குழுத் தலைவர் திரு. மனோகரன் அவர்களுக்கும், மற்றும் தர்மகர்த்தர் குழு அங்கத்தினர்களுக்கும், இறை பணியாளர் திரு. கோதண்டபாணிக்கும், அலுவலகம், உள்துறை பணியாளர்கட்கும் மற்றும் பொருளுதவி செய்த எல்லா அன்பர்களுக்கும், குடமுழுக்கு விழாவில் பல வகைகளில் சம்பந்தப்பட்ட எல்லா அன்பர்களுக்கும், எல்லா நலன்களையும் தண்டபாணித் தெய்வம் அருளப் பிரார்த்தித்துக் கொள்கின்றேன்.

(ஒ-ம்) க. ராஜா

"தமிழ்க் கடல்", "சிவமணி"
"சிவம் பெருக்கும் சீலர்"
ராய. சொக்கலிங்கன்

உ
சிவமயம்

போன் எண். 310
காரைக்குடி - 623001
இராமநாதபுரம் மாவட்டம்

நாள் 6—8—73

அன்புடையீர்,

பழநி ஆண்டவர் திருக்கோயில் குடநீராட்டு விழாவை ஒட்டி மலர் வெளியிடுவது குறித்து மிக்க மகிழ்ச்சி.

குடநீராட்டுவிழா, சிறப்புற நடந்தேறவும், மலர் பொலிவு பெற்று விளங்கவும், பழநி ஆண்டவர் அருள் சுரப்பாராக.

அன்புள்ள,
ராய. சொ.



மூலவர் தங்க விமானம்

மாண்புமிகு அமைச்சர் அன்பில், ஆணையர், அறங்காவற் குழுத் தலைவர்



மக்கள் காணிக்கை

# முருகன் பெருமை





திரு. கே. எஸ். நரசிம்மன்

**முன்னுரை :**

முருகன் வழிபாடு தமிழ்நாட்டில் தொன்றுதொட்டு நிகழ்ந்து வருகின்றது. மக்கள் முதன்முதல் தோன்றிய இடம் குமரிக் கண்டமே என்றும், அதன் கண்ணும் குறிஞ்சித் திணைப் பகுதியேயாகும் என்றும் ஆராய்ச்சியாளர் கூறுவர். இன்றைக்கு மூவாயிரம் ஆண்டுகட்கும் மிக முற்பட்டதெனக் கருதப்படும் தொல்காப்பியம் என்னும் பழந்தமிழ் இலக்கணம், முருகனைக் குறிஞ்சித் திணைக்குரிய தெய்வம் என்று சிறப்புறக் குறிப்பிடுகின்றது. இவ்வாற்ருல் முருகன் வழிபாடு மிகத் தொன்னெடுங் காலம் முதலே நிகழ்ந்து வருதல் தெளியப் படும்.

**இயற்கைத் தெய்வம் :**

முருகன் இயற்கைத் தெய்வம். இயற்கையோடு இயைந்த இன்ப எழில் வாழ்க்கை நடாத்தி வந்த பழந் தமிழ்ப் பெரு மக்கள், முருகனை இயற்கையின் வாயிலாக இனிதறிந்தனர். முருகனின் திருவுருவை இயற்கைக் காட்சியின் வாயிலாகக் கண்டு கருதிக் கவினுறப் போற்றிக் களித்தனர். நீலக் கடலில், காலைச் செங்கதிரவன் தோன்றும் அழகிய இனிய காட்சியைக் கண்டு மகிழ்ந்த பழம் பெரும் தமிழ்ச் சான்ருேர்கள், அக் காட்சியின் வாயிலாக, நீல மயில் மீது இவர்ந்து வரும் செந்நிறம் உடைய முருகனை நினைந்துணர்ந்து, மிகப் பழங்காலம் முதலே வழிபடத் தொடங்கினர் என்பர் அறிஞர்.

**சங்க நூல்கள் :**

முருகனைக் குறித்து முன்னைத் தமிழ்ப் பெருஞ் சான்ருேர்கள் விளக்கியருளிச் செய்துள்ள கருத்துக்கள், நினைந்துணருந்தோறும் அனைத்தெலும்பும் உள்ளுருக ஆனந்தத் தேன் சொரியும் இயல்பினவாக உள்ளன. முருகன் தன் அடியவர்கள் நினைத்தவற்றை எல்லாம் நிறைவேற்றி முற்றுவித்துத் தருதலில் சிறந்தவன் என்று புறநானூறு குறிப்பிடுகின்றது.

முருகன் அருளே வடிவானவன். தன் அடியவர்கள் செய்யும் குற்றங்களைப் பொறுத்துக்கொண்டு, அவர்களுக்கு அருள் புரிபவன். ஆதலின் தண்டிக்கும் தன்மையே இல்லாத சிறந்த கடவுள் என்னும் கருத்தில், ‘தெறல் அரும் கடவுள்’ என்று, அகநானூறு என்னும் சங்க நூல் முருகனைச் சிறப்பித்துக் கூறுகின்றது.

**தமிழ்க் கடவுள் :**

முருகன் தமிழ்க் கடவுள். முருகனே தமிழ் மொழியை முதன் முதலில் அகத்தியருக்கு அறிவுறுத்தினன் என்பது வரலாறு. மேலும் சிவபிரானுக்குப் பிரணவப் பொருளைத் தமிழிலேயே முருகன் உபதேசித்தான்.

கொன்றைச் சடையார்க்கு ஒன்றைத் தெரியக்
கொஞ்சித் தமிழால் பகர்வோனே

என்பது அருணகிரிநாதர் திருப்புகழ். கூடல் மாநகரில், ஆலவாய் அவிர்சடைக் கடவுளுடன் குன்றம் எறிந்த குமரவேளும் சங்கம் இருந்து தமிழ் ஆராய்ந்தான் என்பர் நக்கீரர். "சங்கத் தமிழின் தலைமைப் புலவன்" என்பர் குமர குருபர அடிகள். தமிழ் மொழியின் மெய் எழுத்துக்கள் பதினெட்டும் தன்னுடைய கண்களாகவும், தமிழில் வல்லினம் மெல்லினம் இடையினம் என விளங்கும் எழுத்துக்கள் ஆறும் திருமுகங்களாகவும், தமிழின் அகரம் முதலிய உயிர் எழுத்துக்கள் பன்னிரண்டு தோள்களாகவும், தனிநிலை எனப்படும் ஆய்தமே ஒப்புயர்வற்ற நிலையில் தனிச் சிறப்புற்றுத் திகழும் வேலாகவும் கொண்டு, தமிழ்த் தெய்வமாகிய முருகன், தமிழ் வடிவினனாக விளங்குகின்றான்.

கண்நிகர் மெய்யும், சென்னிக்
கணம்உறழ் இனத்தின் கூறும்,
திண்ணிய புயங்க ளேபோல்
திகழ்தரும் உயிரும், வேறொன்
றெண்ணிடற் கரிய தாகும்
எஃகமும், இயலிற் காட்டும்
புண்ணிய முருகன் செய்ய
பொற்பதம் போற்றி வாழ்வாம்

என்பது, புலவர் புராணம் பாடிய திருப்புகழ்த் தண்டபாணி சுவாமிகள் அவர்களின் அரிய திருப்பாடல்.

**பண்பு நலங்கள் :**

இந்து சமயத்திற்குரிய வேதாகம உபநிடதங்கள் முதலியன எல்லாம், கடவுளைச் சத்து–சித்து–ஆனந்தம் என்னும் முப்பெரும் பண்புகளும் ஒருங்கியைந்த பொருளாகக் கூறும். அவற்றுள் சத்து என்பது சிவம்; சித்து என்பது திருவருளாகிய சக்தி; ஆனந்தம் என்பது முருகன். இவ்வுண்மையினையே சிவபிரான் கோயில்களில் எல்லாம் வைத்து வழிபடப்பெறும் சோமாஸ்கந்த மூர்த்தம் உணர்த்துகின்றது.

மேலை நாட்டு நாகரிகப் பண்பாடுகள் அனைத்திற்கும் சாலவும் அடிப்படை வகுத்தவர்கள், கிரேக்க நாட்டு மக்கள் என்பர். அக் கிரேக்க நாட்டு மக்கள், உண்மை நன்மை அழகு என்னும் மூன்றையும் மிகச் சிறந்த பண்புகளாகப் போற்றுவர். அவற்றுள் உண்மையைச் சிவம் என்றும்; நன்மையைச் சக்தி என்றும்; அழகை முருகன் என்றும் நாம் கூறுதல் பொருந்தும். முருகன் என்னும் சொல்லுக்கு அழகு, இளமை, மணம், கடவுட்டன்மை என்னும் பொருள்கள் இருத்தல், இங்கு நாம் கருதுதற்குரியது.

முருகன் அடியவர்களுக்கு ஞானகுருவாக எழுந்தருள்கின்றான். பழநி ஆண்டவன் வடிவில் யோகியாக ஒளிர்கின்றான். வீரர்களுக்கெல்லாம் மிக்க பெரு வீரனாக விளங்குகின்றான். தேவர்களுக்கெல்லாம் தேவனாகத் திகழ்கின்றான். தவ முனிவர்களெல்லாம் முருகனையே தம் வழிபடு கடவுளாகக் கொள்ளுகின்றனர். கலைஞர்களுக்கும், புலவர்களுக்கும் அவன் கருணை புரிகின்றான்.

குழந்தைகளுக்குக் குழந்தை வேலன் ஆகவும், இளைஞர்களுக்குப் பாலசுப்பிரமணியன் ஆகவும், கலைஞர்களுக்கு ஆறுமுகம் கொண்ட அண்ணல் ஆகவும், வீரர்களுக்குத் தேவசேனாபதி ஆகவும், மந்திரோபதேசம் பெற விரும்பி வழிபடும் அன்பர்களுக்குச் சுவாமிநாதன் ஆகவும், இல்லற நிலையினர்க்கு வள்ளி தெய்வயானை சமேத சுப்பிரமணியசுவாமி ஆகவும், பற்றற்ற தூய ஞானத் துறவற நிலையினர்க்குப் பழநியாண்டவர் ஆகவும் பிறவாறும் விளங்கி, அவரவர்களுக்கு ஏற்ற நிலைகளிற் பல்வேறு வகைகளில், முருகப் பெருமான் அருள் புரிந்து காத்து வருகின்றான்.

**களவும் கற்பும் :**

தமிழிலுள்ள அகப்பொருள் இலக்கண நூல்கள் கூறும் கற்பு நெறி, களவு நெறி என்னும் இருவகை நெறிகளையும், தெய்வயானையின் திருமணத்தாலும், வள்ளியம்மையின் திருமணத்தாலும் உலகுக்கு முறையே உணர்த்தியருளினான் முருகன். வள்ளி அம்மையின் திருமணம் ஐம்புலன்களாகிய வேடர்களிடையே அகப்பட்டு உழன்று வரும் உயிர்களை, இறைவன் குருவாக வந்து தடுத்தாட்கொண்டருளும் தன்மையினையே, தத்

துவ முறையில் தகவுற உணர்த்துகின்றது. "பணியாது? என வள்ளி பதம் பணியும் தணியா அதிமோக தயாபரனை" முருகன் விளங்குதல், அவன் அடியார்களுக்கு எளியனும் இனிய இயல்புடையவன் என்னும் உண்மையினையே உருவக முகத்தால் உணர்த்துகின்றது.

**ஆறுபடை வீடு :**

முருகன் திருப்பரங்குன்றம், திருச்சீரலைவாய், திருவாவினன்குடி, திருவேரகம், குன்றுதோறாடல், பழமுதிர்சோலை என்னும் ஆறு தலங்களில் எழுந்தருளி விளங்குகின்றான். முருகன் படை வீரர்களுக்கெல்லாம் தலைசிறந்த படைவீரன் ஆதலின், அவன் எழுந்தருளி விளங்கும் தலங்கள், படை வீடுகள் எனப் பெயர் பெற்றன. ஆறுபடை வீடுகளிலும் முறையே ஒளிவடிவம், அருள் வடிவம், தலவடிவம், மந்திர வடிவம், எளிமை வடிவம், வியாபக வடிவம் என்னும் நிலைகளில், முருகன் விளங்கும் இயல்பினைத் திருமுருகாற்றுப்படை சிறப்புற விளக்குகின்றது.

**தொகுப்புத் தெய்வம் :**

முருகனை வணங்கினால், பல கடவுளரை வணங்கி அடையும் பயன்களையெல்லாம் நாம் ஒருங்கே பெறலாம். மைந்தனுக்குச் செய்யும் சிறப்பால், தந்தை தாயாராகிய சிவபிரானும் உமாதேவியும், தம்பியைப் போற்றுதலால் தமையனாகிய விநாயகரும், மருகனை வழிபடுதலால் மாமனாகிய திருமாலும், தலைவனை வணங்குதலால் தேவரும், முனிவரும் ஆகிய அனைவரும் மகிழ்ச்சி அடைவர். ஆதலின் முருகன் வழிபாடு மிக்க சிறப்புடையது. எல்லாக் கடவுளரின் இயல்புகளும் தன்பால் ஒருங்கே கொண்ட முருகனைத் தொகுப்புத் தெய்வம் என்பர் பெரியோர். முருகன்பால் நாம் அருளை எளிதாகவும் விரைவாகவும் பெறலாம். "மழக் கை இலங்கு பொற் கிண்ணம் என்றலால் அரியை என்றுனைக் கருதுகின்றிலேன்" என மாணிக்கவாசகர் பாடியது, முருகன் திறத்தில் மிகவும் பொருந்துவதாகும்.

முருகன் திருவடிகளில் அடைக்கலம் புகுந்தால், எத்தகைய கொடியவர்களும் திருந்தி நலம் பெற்று உய்வர். சில தெய்வங்கள் தம்மை எதிர்த்த பகைவர்களை அறவே அழித்தொழித்ததாக நாம் நூல்களில் அறிகின்றோம். ஆனால், முருகனோ தன்னை எதிர்த்து நின்ற கொடியவனாகிய சூரபதுமனையும் நல்லவனாக்கித் திருத்தி ஆட்கொண்டு காத்தருளினார்.

தீயவை புரிந்தா ரேனும்
குமரவேள் திருமுன் உற்றால்
தூயவர் ஆகி மேலைத்
தொல்கதி அடைவர் என்கை,
ஆயவும் வேண்டும் கொல்லோ?
அடுசமர் அந்நாட் செய்த
மாயையின் மகனும் அன்றே
வரம்பிலா அருள்பெற் றுய்ந்தான்!

— கந்தபுராணம்.

**கற்பக மரம் :**

முருகன் தன் அடியவர் வேண்டும் நலங்களை யெல்லாம், அவர்கள் வேண்டியவாறே விரும்பிக் கொடுத்தருளும் பெருந்தன்மை வாய்ந்தவன். கேட்டன எல்லாம் கொடுத்தருளும் மாட்சிமையால் அவனைக் கற்பக மரம் போல்பவன் எனக் கவிஞர்கள் புகழ்ந்து பாடுவர். வள்ளி தெய்வயானையரைக் கிளைகளாகக் கொண்டு, பல்லுயிர்க்கும் அருளைப் பூத்து, அவற்றின் பிறவியைக் காய்த்திட்டு, அன்பர்கள் எல்லோருக்கும் முக்திக் கனியை அளிக்கும் கற்பக மரமாக முருகன் விளங்குகின்றார்.

கல்லகம் குடைந்த செவ்வேற்
கந்தன்ஓர் தருவ தாகி
வல்லியர் கிரியை ஞான
வல்லியின் கிளையாய்ச் சூழப்
பல்லுயிர்க்கு அருளைப் பூத்துப்
பவநெறி காய்த்திட்டு அன்பர்
எல்லவர் தமக்கும் முத்தி
இருங்கனி உதவும் என்றும்.

— கந்தபுராணம்.

**முடிவுரை :**

முருகனை அன்புடன் வழிபட்டு முருகா முருகா எனப் பலகாலும் கூறித் தியானிப்பவர்கள், என்றும் குறையாத பெருஞ் செல்வத்தைப் பெறுவார்கள்; அவர்களை ஒரு போதும் எத்தகைய துன்பமும் அணுகாது; அவர்களுக்கு எந்த ஒரு நோயும் வராது. அவர்கள் சுற்றமும் கிளையும் சூழ, உயர்ந்த இன்பங்களை நுகர்ந்துகொண்டு நீடுழி காலம் வாழ்வார்கள்.

"முருகா எனஉனை ஓதும்
தவத்தினர் மூதுலகில்
அருகாத செல்வம் அடைவார்
வியாதி அடைந்து நையார்;
ஒருகால முந்துன்பம் எய்தார்;
பரகதி உற்றிடுவார்;
பொருகாலன் நாடு புகார்;
சமரா புரிப் புண்ணியனே."

— திருப்போரூர்ச் சந்நிதிமுறை.

அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில்
திருக்குட நன்னீராட்டுப் பெருவிழாவுக்கு
**எங்களது நல்வாழ்த்துக்கள்!**




திருமுருக கிருபானந்தவாரியார் அவதரித்த
புண்ணிய பூமி காங்கேயநல்லூரில்
*5-3-72உ இலட்சதீப விழாவில்*
**பழநி பரிமள விலாஸ்**
**S.சித்தநாதன்சன்ஸ் S.குருசாமி** அவர்களுக்கு
***சதானந்த விபூதி சக்கரவர்த்தி***
என்ற பட்டத்தை வெள்ளியினால் பொரித்த கேடயம் கொடுத்தபோது
**எடுத்த படம்.**

---

"பழனி பரிமள விலாஸ்"

# S. சித்தநாதன்

---

ஜவ்வாது வாசனை விபூதி ஸ்பெஷல் பஞ்சாமிர்தம்
மைசூர் கலவை சந்தனம் சிறந்தது

---

*Props:* S. சித்தநாதன் சன்ஸ், அடிவாரம், பழனி

# எங்கள் பழனி







திரு. பு. மனோகரன்

உருவாய் அருவாய் உளதாய் இலதாய்
மருவாய் மலராய் மணியாய் ஒளியாய்க்
கருவாய் உயிராய்க் கதியாய் விதியாய்க்
குருவாய் வருவாய் அருள்வாய் குகனே

திருவருள் ததும்பியது தமிழகம். இங்கு இறைவன் அருள் விளக்கம் மிகுதியும் பெற்ற திருத்தலங்கள் பல. அவற்றுள் பழனி காலவரையறைக்குட்படாத பழமையும் பெருமையும் உடையதாகும். முருகப் பெருமானது ஆறு படை வீடுகளில் மூன்றாவதாக வைத்து எண்ணப்படும் சிறப்புடையதாகும். இத்தலத்தின் வரலாற்றுச் சிறப்பும் தெய்வீகச் சிறப்பும் இன்பத்தைக் கொடுப்பதாகும்.

மிகவும் தொன்மை மிக்க காலத்தில் இத்தலத்தின் பெயர் ''பொதினி'' என்பதாக இலக்கியங்களில் காணப்படுகின்றது. ''ஆவியர் குடி'' என்று கூறப்படும் குடியினைச் சார்ந்த மன்னர்கள் இதனை ஆட்சி செய்து வந்தனர். 'நெடுவேள் ஆவி' என்ற மன்னன் இக்குடியைச் சார்ந்த பெரும் புகழ் பெற்ற மன்னன் ஆவான். இம் மன்னனைப் பற்றிக் குறிப்பிட்ட மாமூலனர் '' முருகனைப் போலப் போர் செய்து வெற்றி பெற வல்லவன்'' என்று சிறப்பிக்கின்றார். மேலும் நெடுவேள் ஆவியினுடைய 'பொன்னுடை நெடுநகர்ப் பொதினி' என்றும் இதைக் குறிப்பிடுவதால் இத்தலம் ஒரு காலத்தில் செல்வச் செழிப்பில் ஓங்கியிருந்ததையும் உணரலாம். இத்தலம் 'திருவாவினன்குடி' என்று திருமுருகாற்றுப்படையில் குறிக்கப் படுவதிலிருந்தும் ஆவியர் குடித் தொடர்பை அறியலாம். மயிலுக்குப் போர்வை ஈந்த வையாவிக் கோப் பெரும் பேகனும் இந்த ஆவியர் குடியைச் சார்ந்தவன் என்றே குறிக்கப் பட்டுள்ளான். வையாவி என்பது நாட்டுப் பெயராகவும், அதன் தலைவனே வையாவிக்கோ என்பதாகவும் எண்ண இட மேற்படுகின்றது. கடவுள் இருந்து காக்கின்ற உயர்ந்த உச்சியினையுடைய பெருங் கல் நாடனே பேகன் என்ற புறநானூற்றுக் குறிப்பும் இவண் நினைத்துப் பார்க்கத் தக்கதாகும். வஞ்சி நகரின் புறத்தில் 'வேளாவிக் கோமாளிகை' என ஒன்றிருந்ததாகச் சிலப்பதிகாரம் கூறும். இதிலிருந்து ஆவியர் குடிக்கும் சேரர்க்கும் தொடர்புண்டென்பது பெறப்படுகின்றது.

மலை மீதுள்ள திருக்கோயில் சேர நாட்டை நோக்கி, மேற்குத் திசை பார்த்து அமைக்கப்பட்டுள்ளது. போகர் என்ற சித்தரும் அவருடைய மாணாக்கர் புலிப்பாணியும் இம்மலையில் வாழ்ந்தனர். மலைக் கோயிலில் உள்ள முருகப் பெருமானது அருள் திருமேனி போகசித்தரால் நவ பாசாணங்களைக் கொண்டு அமைத்து எடுப்பிக்கப் பெற்றதாகும். இக்கோயில் சேர நாட்டு மக்களது ஆர்வத்தையும் பேருணர்ச்சியையும் பெற்றதாகும். இன்றும் கேரள மக்கள் இங்கு வந்து வணங்குவதைப் பேரார்வத்துடன் கடைப்பிடித்து வருகின்றனர். மலைக்கோயில் முதன் முதலில் சேரமான் பெருமாளால் கட்டப்பட்டது. மலை ஏறும்போது எதிர் நிற்கும் முதல் சிற்றாலயம் சேரவிநாயகருடையதாகும். அதன் வாயிலில் உள்ள ஒரு தனிக் கற்சிலையில் சேரர்கோன் தன் குதிரை மீது அமர்ந்துள்ளான். மலையின் மீதுள்ள கருவறை வடபக்கத்துச் சுவரிலும் சேரர்கோன் தன் குதிரை மீது செல்லும் தோற்றம் பொறிக்கப்பட்டுள்ளது. சுந்தரமூர்த்தி நாயனார் வெள்ளை யானை மீது கைலாயம் செல்லுகையில் சேரமான் பெருமாள் குதிரை மீதமர்ந்து பின் தொடர்ந்து சென்று முத்தி பெற்றனர் என்பர். அதற்கு ஏற்பக் குதிரை மீதமர்ந்து செல்லும் சேரமான் பெருமாளின் தோற்றம் இக்கோயிற்கண் பொறிக்கப்பட்டிருக்க வேண்டும்.

வீரகேரள வீரநாரணர், அமரபுஜங்க வர்மன் அதிராஜராஜ தேவன், வீரகேரள வர்மன் என்ற கேரள மன்னர்களாலும், பரகேசரி வர்மன், வீரநாரண அதிசய சோழன் என்ற கொங்குச் சோழ மன்னர்களாலும், திரிபுவனச் சக்கரவர்த்தி கோனேரின்மை கொண்டான் என்ற பாண்டிய மன்னர்களாலும் இக்கோயிலில் திருப்பணி செய்யப்பட்டுள்ளது. மலைக்கோயிலில் காணப்படும் எட்டுக் கல்வெட்டுக்களில் 13-ஆம் நூற்றாண்டில் ஆட்சி செய்து வந்த கோனேரின்மை கொண்டான் வீரபாண்டியத் தேவன், 15-ஆம் நூற்றாண்டில் ஆண்ட மைசூர் வீரநஞ்சைய உடையார் விஜய நகரத்துக் கிருஷ்ணதேவராயர் போன்றோர் தம் கல்வெட்டுக்கள் குறிப்பிடத் தக்கனவாகும். மலையடிவாரத்தில் உள்ள திருவாவிநன்குடிக் கோயிலிலும் பல கல்வெட்டுக்கள் இருந்தன. ஆனால் திருப்பணி செய்தவர்களால் அவை முற்றிலும் சிதைக்கப்பட்டு விட்டமையால் காணக்கிடைக்காமை வருந்தத்தக்கதாகும்.

இத்தலத்திற்குப் 'பொதினி' என வழங்கிய பழம் பெயரே 'பழனி' என மருவிற்று, என்று சில ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர். பழனங்கள் சூழ்ந்த இடமாதலால் 'பழனி' என்று ஆயிற்று என்றும் இறைவனும், இறைவியும் இளங்குழவி ஆகிய முருகனை "ஞானப்பழம் நீ" என அழைத்த இடமாதலின் "பழம் நீ" என்பதே 'பழனி' என்று ஆயிற்றென்றும் பெயர்க் காரணம் கூறுகின்றனர். "திருவாவிநன்குடி" என்பதே திருமுருகாற்றுப்படை இத்தலத்திற்கு வழங்கும் பெயராகும். மலையடிவாரத்தில் உள்ள குழந்தை வேலாயுத சுவாமி கோயில் திருவாவிநன்குடிக் கோயில் என்றே இன்றும் அழைக்கப்படுகின்றது. இதனையே மிகப்பழமையான கோயிலென்றும் கூறுவர். இங்குள்ள கல்வெட்டுக்கள், திருப்பணியாளர்களால் சிதைவு படுத்தப்படாமல் இருந்திருந்தால் மேலும் பல உண்மைகள் புலனாகியிருக்கக் கூடும்.

பழனிப் பொருப்பினின்றும் சுமார் ஏழு கல் தூரத்தில் மேற்கு மலைத்தொடரின் மற்றொரு பகுதியாகிய கோடைக்கானல் மலை விளங்குகின்றது. வெள்ளிய முகிலினங்கள் மேலே தவழ்ந்து செல்லப் பச்சைப் பசேலென விளங்கும் இம்மலைத் தொடர்கள் கண்ணுக்கு இனிமையும், குளிர்ச்சியையும் தருவனவாகும். பழனி மலைக்குச் சிறிது அணித்தே மற்றுமோர் சிறுகுன்று இடும்பன் மலை எனப் பெயர் பெற்று நிற்கின்றது. இவை கடல் மட்டத்திற்கு மேல் 1068 அடி உயர்ந்துள்ளவையாகும். இதனை அடுத்துள்ள இடும்பன் குளம் 147 ஏக்கர் பரப்புள்ளதாகும். பழனி மலை உச்சியில் அதன் மணிமுடி போல் முருகனது திருக்கோயில் விளங்குகின்றது.

பழனி மலேயும், இடும்பன் மலேயும் பற்றி ஒரு புராண வரலாறு கூறப்படுகின்றது. இவ்விரு மலேகளும், சிவகிரி சத்திகிரி எனக் கைலாயத்தில் இருந்தன. இவற்றை அகத்திய முனிவரிடம் சேர்ப்பிக்கப் பொதிகை மலேக்குக் கொண்டு போகுமாறு இடும்பாசுரனை ஆணையிட்டார் இறைவன். இவைகளைக் காவடி போல் கட்டித் தூக்கிவந்த இடும்பன் இங்கு களைப்படைந்து இறக்கி வைத்தான். அப்போது சிவகிரி மீது முருகன் கனிவாய்ச் சிறுவனைக் குராமரத்தின் கீழ்த் தோன்றியதால் மலே மிகவும் கனத்துக் களைப்பேற்பட்டதன் காரணம் இடும்பனுக்குப் புரிந்ததாம். உடனே இடும்பன் இளஞ்சேயான முருகனுடன் போரிட்டு அதனல் உயிர் நீத்தான். பின் அவன் மனைவி இடும்பியின் முறையீட்டால் உயிர் பெற்ருன். பின்னர் முருகனிடம் இடும்பன் இம்மலேக் கண்ணே, வாயில் காவலனைக நிற்க வரம் வேண்டி ஓர் இடம் பெற்ருன். அந்த இடம் இன்று ''இடும்பன் சந்நிதி'' என அழைக்கப்படுகின்றது. மற்றுமொரு வரத்தின் மூலம் தான் இரு மலேகளையும் காவடியாகத் தூக்கி வந்தது போலவே காவடிகள் தூக்கிவரும் அடியவர்களது வேண்டுதல்களை முருகன் கேட்டு அருள் புரிய வேண்டுமென இடும்பன் கேட்டுக் கொண்டனன். அன்று முதல் இங்குக் காவடி கொணர்ந்து காணிக்கை செலுத்தும் பழக்கம் மிகுதியாகக் காணப்படுகின்றது. யான், எனது என்ற அகப்பற்று, புறப்பற்று இரண்டையும் அடியார்கள் காவடி போலக் கட்டித் தூக்கி வந்து இறைவன் காலடியில் ஒப்படைத்து முருகனது அருளைப் பெற்று உய்வர் என்பதையே இது காட்டுகின்றது. முருகப் பெருமானை 'ஞானப்பழமாக' உலகிற்கு உணர்த்தும் புராண வரலாறும் அனைவரும் அறிந்ததாகும். பழனித் தலம் சேரர்க்குரியதாய், கொங்கு நன்ட்டைச் சேர்ந்ததன் காரணமாக முன்பு, கோவை மாவட்டத்தின் பகுதியாக இருந்தது. பின்னர் இது மதுரை மாவட்டத்தில் சேர்க்கப்பட்டு, பழனித் தாலூகா என்ற பகுதிக்குத் தலே நகராக விளங்கி வருகின்றது. புகைவண்டித் தொடர் தொடர்பும், பேருந்து வழித் தொடர்பும் உடையதாய்ப் போக்கு வரத்துக்கு வாய்ப்பாக இத்தலம் திகழ்கின்றது.

மலேமீதுள்ள கோயிலின் அமைப்பும் அழகும், கண்டு களிக்கத் தக்கனவாகும். இங்கு எழுந்தருளியுள்ள தண்டாயுதபாணி சுவாமியின் திருக்கோலம் பார்ப்பவர்க்கு பரவசமூட்டுவதாகும். மேற்கு நோக்கி நிற்கும் பாலமுருகனின் ஆண்டித் திருத்தோற்றம் அனைவரையும் ஆற்றும் அழகிய தோற்றமாகும். அவ் அண்ணலின் இணையற்ற திருமுகமும் அருள்கனிந்த திருநோக்கமும், புன்னகை தவழும் திருவாயும், மதாணி துலங்கும் திருமார்பும், ஒல்லிய அரையில் வைத்த இடக்கரத்தின் செவ்வியும், ஞான தண்டம் ஏந்திய வலக்கரத்து எழிலும், திருத்தாள்களின் பொலிவும் திருத்தண்டைகளின் அழகும் காண்போரைப் பரவசம் அடையச்செய்யும். அன்பர்கள் பலப்பலவான திருக்கோலங்கள் புனைந்து புனைந்து நோக்கும்தோறும் புதிய புதிய திருமுக மண்டலப் பேரொளியுடன் ஆண்டவர் விளங்குவார். நெஞ்சை நெகிழ்விக்கும் அத்திருத்தோற்றப் பொலிவன்ருே, பழமரம் தேடிய பறவைகளாய் இவ் உலகமெலாம் ஞானப்பழம் தேடிவரக் காரணமாய் அமைகின்றது! தேனும், தினேமாவும் முருகனுக்கு உகந்தவை. குன்றத்துக் குறவர்கள் இவற்றை முருகன்முன் வைத்து வழிபட்டனர். "சந்தனம்" மலேயில் கிடைக்கும் உயர்ந்த பொருள். இன்றும் பழனிமலேயில் கோயிலின் இராக்கால வழிபாட்டின்போது தேனும், தினேமாவும் படைக்கப்பட்டு மெய்யன்பர்களுக்கு வழங்கப்பெறுவது தொன்மரபைக் குறிக்கும். இராக்கால சந்தனம் பற்றியும் குறிப்பிடலாம். திருமேனி பட்டு வழங்கும் சந்தனம் பெரும் மருந்தாகப் பயன்படுகின்றது. மலேக்கோயில் எழுந்த காலத்தில் போக சித்தர் பழனிமலேயில் இருந்தார் எனக் கூறப்படுகின்றது. அதனல் இப்பகுதிக்குச் 'சித்தன் வாழ்வு' என்னும் பெயர் வழங்கி வருகின்றது. போகர் சித்தரால் அமைக்கப்பெற்ற ஆண்டவன் திருமேனி அருச்சகர்களாக முறையே போகரும், அவர் மாணக்கர் புலிப்பாணியும் பின்னர் அவர்

வழித்தோன்றல்களான சைவ மரபினரும் பரம்பரையாக விளங்கி வந்தனர். ஆனால் கி. பி. 17-ம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் மதுரை நாயக்க வமிசத் திலகரான திருமலை நாயக்க மன்னரின் தளவாய் ஆக விளங்கிய இராமப்ப அய்யன் பழனிக்குச் சுவாமி வழி பாட்டுக்குச் சென்று, அப்போது பிராமணர் அல்லாத அர்ச்சகரிடம் தீர்த்தப்பிரசாதம் வாங்க மனமில்லாது அப்போதிருந்த பரம் பரைப் பூசர்களை நீக்கி, ஆதிசைவ வேத மறையோர்களைத் தருவித்து, அவர் களையே பூசர்களாக நியமித்தார். முன்பு பூசை செய்தவர்களைத் திருவணுக்கத் தொண்டர்களாக மாற்றி நியமித்தார். இந்த விபரம் இராமப்ப அய்யரால் கொடுக்கப்பட்ட செப்புப்பட்டயம் ஒன்றில் காணப்பட்டு அது படி எடுக்கப்பட்டு அச்சாகியிருக்கிறது.

பழனியில் மலைக்கோயில் தவிர அடி வாரத்தில் திருவாவினன்குடி கோயில் அண்மையில் நகரத்தார் மரபினரால், திருப் பணி செய்யப்பட்டுத் திகழ்கின்றது. இவை தவிர ஊரின்கண் பெரியநாயகி அம்மன் கோயில் உளது. பெருமானுக்கு இரண்டு கோயில்களும், பிள்ளையார்க்கு ஐந்து கோயில்களும், மாரியம்மன் கோயிலும், அங்காளம்மன் கோயிலும் மேலும் பல கோயில்களும் இங்குத் திகழ்கின்றன. பழனித் தலவிருட்சம் நெல்லிமரமாகும். திருவாவினன்குடிக் கோயிலின், வடகிழக்கில் சரவணப்பொய்கை அமைந்துள்ளது. முன்பு இது கவலைக் கிணறாக இருந்தது. அதனைச் சட்டி சாமியார் என்ற பெரியார் புதுக்கினர். இப்போது அழகிய தடாகமாகக் கட்டப் பெற்றுக் குளிப்பதற்கேற்ற தற்கால வசதி களும் செய்யப்பட்டுள்ளன. பழனி முருகனைத் தரிசனம் செய்வோர் இப்பொய் கையில் நீராடிச் செல்வர். காவடி எடுப் போர், இத்தலத்தில் இருந்து தம் பிரார்த் தனைகளைக் கொண்டு செல்வர். பழனியில் மூன்று கல் தொலைவில் சண்முக நதி என்ற புனித நதி ஓடுகின்றது. அடியார்கள் சண்முக நதியிலும் நீராடிச் செல்வர். திரு விழாக்கள் பல இடையறாது நிகழுமிடம் பழனித் தலமாகும். ஆண்டுதோறும் நடை பெறும் பங்குனி உத்திரப்பெருவிழா மிகச் சிறப்பான திருவிழாவாகும். வைகாசி விசாகம், தைப்பூசம், சஷ்டி, திருக்கார்த் திகை போன்ற விழாக்கள் சிறப்பான முறை யில் கொண்டாடப்பட்டு வருகின்றன. மாதம்தோறும் கார்த்திகை நாளிலும், பக்தர் கள் வேண்டுகின்ற நாட்களிலும் முருகப் பெருமான் தங்கத் தேரிலும், வெள்ளித் தேரிலும் எழுந்தருளி வருகின்ற காட்சி கள் பார்ப்பவரைப் பரவசப்படுத்தும். இத்தலத்திற்கு வருவோர் தங்குவதற்குப் பல விடுதிகள் உள்ளன. தண்டபாணி நிலயம், திருக்கோயில் சத்திரம், குடில்கள் முதலியன குறிப்பிடத் தக்கனவாகும். மலை மீது செல்ல இழுவை ரயில் போடப்பட் டுள்ளது. மேலும் திருக்கோயில் அறங் காவலர்கள் பழனித் தலத்தைக் கலைக்கழக மாக மாற்றி வருகின்றனர். கல்வியும், கலை யும் தழைத்தோங்கவும், சித்த வைத்தியம் செழிப்புறவும், சைவமும் தமிழும் தழைத்து இனிதோங்கவும் இங்குப் பல நிறுவனங்கள் தோற்றுவிக்கப்பட்டு இயங்கி வருகின்றன. பழனியாண்டவர் இந்தியப் பண்பாட்டுக் கல்லூரி, பழனியாண்டவர் கலைக் கல்லூரி, பழனியாண்டவர் மகளிர் கலைக் கல்லூரி, பழனியாண்டவர் மகளிர் செந்தமிழ்க் கல்லூரி என நான்கு கல்வி நிறுவனங்கள் நற்றொண்டு புரிந்து வருகின்றன. நூலகம், படிப்பகம், செவிடர் ஊமையர் பள்ளி குழந்தைகள் காப்பகம், முதியோர் இல்லம், ஊனமுற்றோர் காப்பகம், ஏழைகள் அன்பு இல்லம் ஆகிய நிறுவனங்களும் திருக் கோயிலின் சார்பாக நடத்தப்பட்டு வருகின் றன. இந்து சமயத்தைச் சார்ந்த ஏழை மக்களுக்கு இலவசமாகத் திருமணம் செய்து வைக்கப்படுகின்றது. மேலும் நாதசுரக் கல்லூரி, சிவாகமப் பள்ளி, கார்த்திக் பாலர் பள்ளி, சித்த வைத்தியசாலை, மருத்துவமனை போன்றவைகளும் நடத்தப் பெறுகின்றன. திருக்குட நன்னீராட்டுவிழா 2—9—73-ஆம் நாளன்று பழனியாண்டவருக்கு அட்ட பந்தன, சுவர்ணபந்தனத்துடன் நடைபெறு கிறது. மூலவர் விமானம் தங்கத் தகடு களால் வேயப்பட்டுள்ளது. இவ்விழாவினை யொட்டித் தமிழகத்தில் திருக்கோயில் தொடர்புடைய அறுவகைக் கலைஞர்களைச்

சிறப்பிக்கும் வகையில் விருதுகள் வழங்கப்படுகின்றன. அருணகிரிநாதரால் உருக்க மிக்க பாக்களால் பெருமை பெற்ற பழனிப் பெருமானுக்குப் பெருமை நிறைய உண்டு. இயற்கை அழகால் இக்குறிஞ்சி நிலம் மின்னிப் பொலிகின்றது. பழனி மலை மீதிருந்து பார்க்குங்கால் இடும்பன் மலையும், இடும்பன் குளமும் மேற்குத் தொடர்ச்சி மலைகளும் சிற்றூர்களும் வரப்பெடுத்த வயலும், ஆறும், தண்ணீர் தேக்கிய நல் வாய்க்காலும், புதியதாகத் தோன்றிய கல்லூரிக் கட்டிட வரிசைகளும் கண்ணைக் கவரும். கோலமயில்மீது எழும் குமரனே, குன்றின்மீது எழுந்தருளியுள்ளான். இயற்கையைத் தெய்வமாகக் கண்ட தமிழர் பெருமைக்கு இத்தலம் சான்றுகூறி நிற்கின்றது. குறிஞ்சிநிலச் சிறப்பும் தமிழர் பண்பாட்டு விளக்கமும், தமிழ் மொழியின் வரலாற்று வழி உயர்வும் தமிழ் மக்களின் சமயநெறிப் பாங்கும் உணர விரும்புவார்க்குப் பழனித் தலம் ஒரு கண்கண்ட சான்றாக இலங்குகின்றது. இப்பழம் பெருமைக்கு ஏற்பப் பழனித் தலத்தைப் புதுக்கி அதனை முத்தமிழும் முழங்கும் கலை நகராகவும், மும்மலமும் நீக்கும் தெய்வத் தலமாகவும் மாற்றவேண்டியது நம் அனைவரின் கடமையாகும்.

படிக்கின் றிலைபழ னித்திரு நாமம் படிப்பவர்தாள்
முடிக்கின் றிலைமுரு காவென் கிலைமுசி யாமலிட்டு
மிடிக்கின் றிலைபர மானந்தம் மேற்கொள விம்மிவிம்மி
நடிக்கின் றிலைநெஞ்ச மேதஞ்ச மேது நமக்கினியே.

— கந்தரலங்காரம்



# அருள்மிகு அரங்கநாதர் திருக்கோயில்

## திருவரங்கம் - திருச்சி மாவட்டம்

(தொலைபேசி எண்: 4746)

வரலாற்றைத் தன்னகத்தே உள்ளடக்கியதும், வளம் கொழிக்கும் கலைச் செல்வங்கள் நிரம்பியதும், ஆழ்வார்கள் பதின்மர் அருளிப் பாடியதும், 'நிலவுலகின் வைகுந்தம்' எனும் நீள் பெயரைப் பெற்றதுமான 'திருவரங்கம், பெரிய கோயில்', வைணவத் திருக்கோயில் நூற்று எட்டிற்கும் தலைமை தாங்கும் பெற்றி வாய்ந்தது.

இறையுணர்வூட்டும் பரவாசுதேவர் தங்க விமானம், கலைச் சிறப்பால் இதயம் நெகிழச் செய்யும் சேசராயர் மண்டபம், கலையழகு கொஞ்சும் சிலையழகைச் சொல்லும் கலைக்கூடம் அத்தனையும் கண்கவர் காட்சி! கருத்துக்கு இனிய மாட்சி!!

காவிரியும், கொள்ளிடமும் கைகோத்துச் செல்ல, அந்தக் கார்முகில் வண்ணனின் திருக்கோயில் நகரின் நடுநாயகமாய்ப் பொலிவுற்று இலங்க, நாற்புறமும் 'கன்னி நன் மாமதில்'கள் சூழ்ந்திருக்க, ஒழுங்கான வீதிகளும், ஓங்கி உயர்ந்த கோபுரங்களும் காண்பார்தம் உள்ளத்தை ஈர்க்கும்; உவகையினைச் சேர்க்கும்.

கருணையின் வடிவாம் — கற்பகத் தருவாம் — வேண்டுவார்க்கு வேண்டுவன எல்லாம் வழங்கும் அருட்தாயாம் சமயபுரத்து அன்னை மாரியம்மனின் ஆலயம், இங்கிருந்து வடக்கே 12 கிலோ மீட்டர் தொலைவிலுள்ளது.

இவ்விரு பெரு ஆலயங்களுக்கும் திருப்பணிக் குழுக்கள் அமைக்கப்பட்டு மிகச் சீரிய முறையில் திருப்பணிகள் நடைபெற்று வருகின்றன.

இறைப்பணியோடு, அருட்பணியினையும் ஆற்றிடும் வண்ணம், சமயபுரத்தில் செவிடர், ஊமைப் பள்ளி ஒன்றும், இலவச சித்த வைத்தியசாலையும் நடத்தப்பட்டு வருகிறது.

வெளியூர்களிலிருந்து வரும் பக்தர்கள் தங்கிச் செல்லத் திருவரங்கம் தெற்குச் சித்திரை வீதியிலும், அம்மா மண்டபம் அருகிலும், காட்டழகிய சிங்கர் கோயிலிலும், சமயபுரத்திலும் தங்கும் விடுதிகள் கட்டப்பட்டுக் குறைந்த வாடகைக்குக் கொடுக்கப்பட்டு வருகிறது.

பெற்ற பிறவியின் பெரும் பயனை எய்திடவும், அரங்கனின் திருப்பணிக்கு, இயன்ற பொருள் நல்கி இறையருள் பெற்றிடவும், பக்தர் குழாத்தை, 'அரங்கம் வருக! அவனருள் பெறுக!' என அழைக்கின்றோம்.

பொருள் நல்கிட விரும்புவோர், '**செயலர், திருப்பணிக்குழு, அரங்கநாதர் திருக்கோயில், திருவரங்கம், திருச்சி மாவட்டம்**' என்னும் முகவரிக்கு அனுப்பிட வேண்டுகின்றோம்.

**திரு. க. இராசவேலு,** எம். ஏ., பி. எல்.,
அறங்காவலர் குழுத் தலைவர்

**எஸ். இரத்தினம்,** பி. ஏ., பி. டி.
உதவி ஆணையர் / செயல் அலுவலர்.

**திரு. சிங்கப்பெருமாள் உத்தமநம்பி,**
**திரு. ஆர். நல்லமுத்து நாட்டார்,**
**திரு. ஆர். எஸ். கிருஷ்ண ராவ்,** பி. ஏ., பி. எல்.,
**திரு. பி. வட வேங்கட கோனார்,**
அறங்காவலர்கள்.



# கந்தர் கலிவெண்பா





**திரு. ந.ரா. முருகவேள்**

முன்னுரை :

செந்தமிழ்ப் பெருங்கடவுளாம், திரு முருகப் பெருமானின் துதிநூல்களாகப் பெரியோர்களால் மிகவும் போற்றப்பெற்றுப் புகழ்மிக்குத் திகழும் நூல்கள் பலப்பல, அமிழ்தினும் இனிய நமது தமிழ்மொழிக்கண் உள்ளன. அவற்றுட் **கந்தர் கலிவெண்பா** என்னும் நூல், முருகப்பெருமான்மீது, குமர குருபர சுவாமிகள் பாடியருளியது என்று பலரும் அறிவர். **குமரகுருபர சுவாமிகள்** நம் தமிழ்நாட்டில் தோன்றியருளிய ஞானத் தவ முனிவர்கள் பலருள் தலைசிறந்த ஒருவர். இற்றைக்குச் சுமார் 300 ஆண்டுகளுக்கு முன்னர், **திருமலைநாயக்கர்** (கி. பி. 1623–1658) காலத்தில், அவராற் பெரிதும் மதித்துப் போற்றி வழுத்தப்பெற்று, வாழ்ந் திருந்தவர். அவர்தம் தவநலனும், ஞானச் சிறப்பும், கவிதை மாட்சியும் அளப்பரியன. இத்தகைய குமரகுருபரர், ஐந்து வயது வரையில் பேசாமல் ஊமைபோல் இருந்து, பின்பு முருகப் பெருமான் திருவருளால் பேசும் ஆற்றலும், கல்வி நலனும், கவிபாடும் திறமையும் பெற்றுர். அப்போது அவர் முதன்முதலாகப் பாடிய நூல் கந்தர் கலிவெண்பாவாகும்.

இந்நூல் முருகன் அடியார்கள் அனைவ ராலும் நாடோறும் பாராயணம் செய்யப் பட்டுப் பெரிதும் போற்றிவரப்பெறும் மாட்சிமை வாய்ந்தது. இதன்கண் சைவ சித்தாந்தத் தத்துவக் கருத்துக்கள் சுருக்கித் தொகுத்து விளக்கப் பெற்றுள்ளன. முருகனின் திருவுருவச் சிறப்பும், சிறந்த அருட் பண்புகளும் நன்கினிது விவரிக்கப் பட்டுள்ளன. முருகனின் வரலாறு கூறும் கந்தபுராணம் முழுவதும், இதன்கண் ஒரு குறிப்பும் விடாமல் சுருக்கித் தரப்பெற்றிருக் கின்றது. இதன் இறுதிப் பகுதியில், முருக னிடத்தில் அடியார்கள் வேண்டிப் பெறுதற் குரிய பல நலன்களும் ஒருங்கினிது தொகுத்து உணர்த்தப்பட்டுள்ளன. அளவால் சிறிதா யினும், பொருள் நலத்தாலும், கலை நலத் தாலும், கந்தர் கலிவெண்பாவானது பெரும் சிறப்புடையதாய்க் கவின்மிக்குத் திகழ் கின்றது. இந்நூலின் கருத்துச் சுருக்கத்தை, ஈண்டு இயன்றவரை ஒரு சிறிது காண்போம்.

சிவபிரானும் முருகனும், தந்தையும் மைந்தனும்போல வைத்துக் கூறப்படுவ ரெனினும், அவர்கள் தம்முள் வேற்றுமை உடையவர்கள் அல்லர். சங்கரனே சண் முகன், ஐம்முகச் சிவனே ஆறுமுகச் சிவன் என்பது பெரியோர்கள் கருத்தாகலின், சைவ

சித்தாந்த நூல்களில் சிவபிராணுகிய பதிப் பொருளுக்குக் கூறும் இயல்களும் செயல்களு மெல்லாம், ஈண்டு முருகன் மீது வைத்துக் கூறப்பெறுகின்றன.

**சைவ சித்தாந்தம் :**

முருகன், பிரமதேவனும், வேதங்களும், நாத தத்துவமும், நாதாந்தமும், போதாந் தமும் காண இயலாத மெய்ஞ்ஞான வடி வினன். முதல் நடு முடிவைக் கடந்தவன். என்றும் பேரின்பமாய்ப் பேரறிவாய் விளங் குபவன். இயல்பாகவே பாசங்கள் இல்லா தவன். பெயரும் குணமும் உருவமும் அற்று, எங்கும் நிறைந்த ஒளிரும் பரமசிவமாய் நிற்பவன்.

நம்முடைய அறிவிற்கு மேம்பட்டவனுய், படைத்தல் காத்தல் துடைத்தல் மறைத்தல் அருளல் என்னும் ஐந்தொழில்களுக்கும் அப்பாற்பட்டவனுய், மனம் சித்தம் புத்தி அகங்காரம் என்னும் நான்கு கரணங் களுக்கும் எட்டாதவனுய், தனது அருளினுல், பிரமன், திருமால், உருத்திரன், மகேசன், சதாசிவன் என்னும் ஐந்து வடிவங்கள் கொண்டு, எல்லா உயிர்கட்கும் பற்றுக்கோடு ஆகி, மேலான இன்பத்தைத் தருபவன் முருகனே. குறைவிலா நிறைவாய், என்றும் உள்ளவனுய், பிறத்தல், இறத்தல், நுகர்தல் என்பவைகள் இல்லாதவனுய், இவ்வுலகில் பலவகையான வியக்கத்தக்க இந்திரசாலச் செயல்களைச் செய்து, தான் மயங்காமல் பிறரை மயக்குபவன். எதன்கண்ணும் சாராது சார்ந்து, கருவின்றி நின்ற கருவாய், உருவின்றி நின்று அருளே உருவாய் விளங்கு பவன் முருகன். மனம் வாக்கு காயம் என்னும் முக்கரணங்களால் வரும் இச்சை ஞானம் கிரியை என்னும் சக்திகளால், முறையே இலயம் போகம் அதிகாரம் என்னும் மூன்று நிலைகளை உடையவனுக அவன் திகழ் கின்ருன்.

தான் ஒருவனே மகேசன் உருத்திரன் திருமால் பிரமன் என்னும் உருவத் திரு மேனிகள் நான்கும், சிவம் சத்தி நாதம் விந்து என்னும் அருவத் திருமேனிகள் நான்கும், சதாசிவம் என்னும் அருவுருவத் திருமேனி ஒன்றும் ஆகிய ஒன்பதிலும், உயிர்களின் பக்குவ நிலைக்கு ஏற்ற ஒரு திருமேனியைக் கொண்டு, ஆணவ மலத்தில் அழுந்தி, உலகியல் வாழ்வில் மயங்கிக் கிடக்கும் விஞ்ஞானுகலர் பிரளயாகலர் சகலர் என்னும் மூவகை உயிர்களுக்கும் முத்தியளித்தற்காக மலபரிபாகம் வரும்படி, முருகன் திருக் கடைக்கண் நோக்கம் வழங்கி அருள்கின்ருன்.

இவ்வாறு ஒன்பது வகைத் திருமேனிகள் தாங்கி, விந்து மோகினி மான் என முறையே வழங்கப்பெறும் சுத்த மாயைத் தொடர் புற்றுப் பல கடவுளராகி, மந்திரம் பதம் வன்னம் புவனம் தத்துவம் கலை என்னும் ஆறு அத்துவாக்களையும் தனக்குரிய உறுப்புக் களாக முருகன் கொண்டுள்ளான்.

அண்டசம் சுவேதசம் உற்பிச்சம் சராயுசம் என்னும் நால்வகைத் தோற்றம், தேவர் மக்கள் விலங்கு பறவை ஊர்வன நீர்வாழ்வன தாவரம் என்னும் எழுவகைப் பிறப்பு, எண்பத்து நான்கு இலட்சம் கரு வேறுபாடு என்பவற்றுள், ஒன்றில், அனுப வித்துத் தீர்ப்பதற்குரிய வினைக்கு ஏற்பப் பிறவி எடுத்துக் காற்ருடியும் சகடக்காலும் போல உழலும்படி, உயிர்களின்பால் முருகன் திரோதான சக்தியைச் செலுத்தி அருள்கின்ருன்.

இன்பமே நிறைந்த சுவர்க்கம், துன்பமே நிறைந்த கொடிய நரகம் என்பவற்றில் உயிர்கள் இன்ப துன்பங்கள் நுகருமாறு செய்தருள்பவன் முருகனே. அவ்வாற்ருல் உயிர்களின் வினைகள் பக்குவப்பட்டுச் சிறிது நல்ல காலம் வந்ததும், ஏணிப்படிகள் போல அமைந்துள்ள புறப்புறம், புறம், அகப்புறம்

என்னும் சமயநெறிகளில் அடைந்து ஈடுபாடு கொள்ளும்படி செய்து, பலவகை விரதங்கள் பிரம்மசரியம் கிரகஸ்தம் வானப்பிரத்தம் சந்நியாசம் என்னும் ஆச்சிரமங்கள் ஆகிய வற்றைக் கடைப்பிடிக்கச் செய்து, உயிர் களைப் படிப்படியே சரியை கிரியை யோகம் என்னும் சாதனங்களிற் செலுத்தி, சாலோகம் சாமீபம் சாரூபம் என்னும் பதமுத்தி இன்பங்களை, உயிர்கள் பெறுமாறு செய்து உதவுபவன் முருகனே.

பின்னர் உயிர்களுக்கு மெய்யுணர் வாகிய ஞானம் மேலோங்கச் செய்து, மந்ததரம், மந்தம், தீவிரம், தீவிரதரம், என்னும் நான்கு வகையான சத்திநிபாத நிலைகள் ஏற்படுதற்கு, இருவினையொப்பு, மலபரிபாகம் என்பன நிகழுமாறு செய்து, அறிவுக்கு அறிவாகி, அதற்கும் எட்டாத நெறியில் விளங்கும் தனது மேலான நிலையை விடுத்து, கருணையே வடிவமாய் இவ்வுலகில் ஞானசிரி யனாகப் போந்து, நம்மை ஆட்கொண்டு அருள்புரிகின்றான் முருகன்.

தன்னுடைய திருநோக்கால் உயிரினங் களின் சஞ்சிதம் என்னும் பழவினையைத் தன் அருட்பார்வையால் தூல தேகத்தின் கருவிகள் அறுபதும், சூக்கும தேகக் கருவிகள் எட்டும், மூலாதாரம் சுவாதிட்டானம் மணிபூரகம் அநாகதம் விசுத்தி ஆக்ஞை துவாதசாந்தம் என்னும் ஏழு நிலங்களும், மந்திரம் பதம் வன்னம் புவனம் தத்துவம் கலை என்னும் ஆறு அத்துவாக்களும், உயிர்களின் பார்வையிலிருந்து நீங்கும்படி, அறியாமை என்னும் ஆணவமல மறைப்புத் திரையைக் கிழித்து, அறிவினால் காண்பதற் குரிய மெய்ஞ்ஞானக் கண்ணைக் காட்டியருள் பவன் முருகன்.

திருவடி ஞானமாகிய சிவஞானத்தால் பதி பசு பாசம் என்னும் மூன்றையும் செவ்விதின் அறியும்படி செய்து, எங்கும் தேங்கி நீக்கமற நிறைந்துள்ள பேரின்ப நிலையைக் காட்டி, போக்கு-வரவு, நினைப்பு-மறப்பு, பகல்-இரவு முதலிய வேறுபாடுகள் நிறைந்த விபரீத ஞானத்தை நீக்கி, உயிர் களுக்கு இறவாத இன்பம் மருவும்படி முருகன் செய்தருள்கின்றான்.

முருகனின் திருவுருவம் :

கேவலம் சகலம் சுத்தம் என்னும் மூவகை அவத்தை நிலைகளையும் போக்கி, முத்தான்மாக்களுடைய கூட்டத்தில் சேர்த்து, பெரிய பரமுத்தியைத் தந்து, அகப்பற்று புறப்பற்றுக்கள் அற்ற இடமே தனது திருவடியாகவும், ஞானமே உருவா கவும், இச்சை ஞானம் கிரியை என்னும் சக்திகள் திருக்கண்களாகவும், இப்பெரிய உலகமே கோயிலாகவும் நிற்கும் ஒப்பற்ற தனிச் சுடராகத் திகழ்பவன் முருகன். அவனது திருமுன்னிலையில் எல்லா உயிர் களும் வேறுபாடின்றிச் சமமாக விளங்கும்.

நவமணிகளாலும் பசும் பொன்னாலும் செய்யப்பெற்று மின்னல்போன்று ஒளியிடு கின்ற திருமுடிகளும்; ஆறு பிறைகளை வரிசையாக வைத்தாற்போன்ற நெற்றிப் பொட்டழகும்; தாமரை மலர்போன்ற அழகிய பன்னிரண்டு விழிகளும்; பல சூரியர்கள் ஒருங்கே ஒளி வீசினாற்போல விளங்கும் மகரக் குழைகளும்; புன்முறுவல் தவழும் உதடுகளும்; பிறவி வெப்பம் தீர்க்கும் இன்சொல்லும் உடையவன் முருகப்பெருமான்.

ஆறுமுகங்கள் :

அவனுடைய ஆறு திருமுகங்களில் சூர பதுமனைத் தடிந்து பகைவர்களின் உயிரைப் போக்கி, அழியாத பேரின்ப வாழ்வைத் தருவது, ஒருதிருமுகம்; உயிர்களுக்கெல்லாம் அவற்றின் பிராரத்த கன்மத்தைப் போக்கி, அழியாத பேரின்ப வாழ்வை அளிப்பது, ஒரு திருமுகம்; வேதாகமங்கள் பலவற்றையும் ஐயமின்றி முற்றுப்பெறச் செய்வது, ஒரு திருமுகம்; உயிர்களின் மல இருளைப்

போக்கிக் கோடி சூரியர்களைப்போல ஒளி வீசுவது, ஒரு திருமுகம்; நேசமுடன் போகம் நுகரும் வள்ளி தெய்வானை அம்மையர்கட்கு மோகம் தருவது, ஒரு திருமுகம்; அருள் வேட்கையோடு திருவடியைச் சார்ந்தாரைக் காப்பது ஒரு திருமுகம் இங்ஙனம் ஆறு திருமுகங்களும் கொண்டு விளங்குபவன் முருகன்.

**பன்னிரு கைகள் :**

தேன் சொட்டும் கடப்ப மலர் மாலையும், மணம் மிக்க குரவமலர் மாலையும் அணிந்த பன்னிரண்டு தோள்களை உடையவன் முருகன். அவற்றுள் தேவர்களுக்கு அமிர்தத்தை அளிப்பது ஒன்று, தேவ மகளிரைத் தழுவி அணைப்பது ஒன்று, மழை பொழியச் செய்து உலக உயிர்களைக் காப்பது ஒன்று, பூமாலைகள் நெருங்க அணிந்திருப்பது ஒன்று' அடியவர்களை அஞ்சேல் என்றுகூறி மார்பிலே வைத்தது ஒன்று, தொடையிற் சார்த்தியது ஒன்று, வீரவளை யணிந்தது ஒன்று, மணி சேர்ந்தது ஒன்று, போரில் அங்குசம், பிடிப்பது ஒன்று, வாளேந்துவது ஒன்று, இத்தகைய பன்னிரண்டு திருக் கைகளை உடையவன் முருகன்.

**தெய்வ விளக்கு :**

குடம் போன்ற தனங்களும், சிவந்த இதழ்களும், கொடிபோன்ற மெல்லிய இடையும் உடைய வள்ளி தெய்வயானை என்னும் இருவரும் விரும்பித் தழுவும் அகன்ற மார்பும், பூப்போன்ற அழகிய பட்டாடையும், பொன்னால் அமைந்த அரை ஞாணும், கச்சையழகும், திருஅரையும், நாத தத்துவமாகிய வீரக் கழலும், பொற்கிண்கிணியும், பாதங்களில் அணிந்த சிலம்பும், ஒரு நூறாயிரம் உதய சூரியர்கள் ஒரே காலத்தில் ஒளி வீசுவது போன்ற பேரழகு வாய்ந்த தெய்வீக வடிவமும் ஆகியவற்றை அகக் கண்ணால் கண்டு அன்பு செய்து வழிபடுவோர்க்கு ஆருயிராய், அவர்களின் இதய கமலத்தில் வீற்றிருக்கும் தெய்வீக விளக்கொளியைப் போன்றவன் முருகன்.

அகரம் உகரம் மகரம் நாதம் விந்து எனப்பெறும் ஐவகை ஓங்காரத்து உள்ளொளிக்கும் உள்ளொளியாய், ஐந்தொழில்களை நடத்தும் பேருருவாய் நிற்பவன் முருகன். அவனுக்கு மந்திரமே இரத்தம்; பதமே மாமுடி, வன்னமே தோல், புவனமே உரோமம், தத்துவமே ஏழு தாதுக்கள், கலையே உறுப்புக்கள். இங்ஙனம் ஆறு அத்துவாக்களின் வடிவாய்க் காட்சியளிப்பவன் முருகன்.

பலகோடி அண்டங்கள் உருவாகவும், சராசரங்கள் உறுப்புக்களாகவும், இச்சை ஞானம் கிரியை என்னும் மூன்று சக்திகள் அகக் கருவிகளாகவும் கொண்டு வழிபடும் அன்பர்களுக்குச் சூக்கும ஐந்தொழில்களை ஏவி நடத்துபவன் முருகன். அவன் நிலம் நீர் தீ வளி விசும்பு ஞாயிறு திங்கள் உயிர் என்னும் அட்டமூர்த்தம் கொண்டு விளங்குகின்றான். இமயம் நியமம் ஆசனம் பிராணாயாமம் பிரத்தியாகாரம் தாரணை தியானம் சமாதி என்னும் எட்டுப் பகுதிகளையுடைய அட்டாங்கயோகத்தின் முடிவில், ஞானத்தை அளிக்கும் பயனாக இருப்பவன் முருகன்.

**தசாங்கங்கள் :**

அன்பர்கள் உள்ளத்தில் பொங்கி எழுகின்ற ஆனந்தமாகிய மலை; பேரின்ப வெள்ளமாகிய ஆறு; இன்பம் தரும் மேலுலகமாகிய நாடு; போக்குவரவு இல்லாத உயர்ந்த அழகிய நகரம்; ஐந்தெழுத்து ஓதிச் செலுத்தும் குதிரை; மதம் தோய்ந்து களித்துத் துதிக்கையினால் ஐந்து மலங்களையும் காய்ந்த சிவஞானமாகிய யானை; அறிவும் அன்பும் கொண்டு தொடுத்த மலர் மாலை; ஐந்தொழில் நடத்தும் உயர்ந்த கொடி; நவ நாதமாகிய முரசு; புவனங்களை ஆக்கி இயக்கும் ஆணை ஆகிய தசாங்கங்கள் கொண்டவன் முருகன்.

[என்று இதுகாறும் முருகனின் அருமை பெருமைகளை விளக்கும் முறையில், சைவ சித்தாந்தக் கருத்துக்கள் கந்தர் கலிவெண் பாவில் சந்தமுற நன்கினிது சுருங்கக் கூறி விளக்கப்பெற்றன. (கண்ணிகள் 1 முதல் 74 வரை). இனி, கண்ணிகள் 75 முதல் 108 வரையில் கந்தபுராண வரலாறுகள் கவின்மிகச் சுருக்கித் தொகுத்துக் கூறப்படுகின்றன]

கந்தபுராணச் சுருக்கம்:

கயிலாய மலையில் உமாதேவியுடன் சிவபெருமான் எழுந்தருளியுள்ளான். ஒருநாள், அசுரர்களின் கொடுமையைத் தாங்காத தேவர்கள், சிவபிரானிடம் சென்று தங்கள் குறைகளை முறையிட்டுக் கொள்கின்றனர். சிவபிரான் அவர்களின் முறையீட்டைக் கேட்டுத் திருவுள்ளம் இரங்குகின்றான். தனக்கு இயல்பாக உரிய ஈசானம் தற்புருடம் அகோரம் வாமதேவம் சத்தியோசாதம் என்னும் ஐந்து முகங்களுடன், கீழ்நோக்கிய அதோ முகம் என்னும் முகத்தையும் கொண்டு ஆறு முகங்கள் உடையவனாய், ஆறு நெற்றிக் கண்களினின்றும் ஆறு தீப்பொறிகளை வெளியே விடுத்தான். அவைகள் எல்லா உலகங்களிலும் பரவித் தேவர்களுக்கு அச்சத்தை விளைவித்தன. அதனால் சிவபிரான் அவற்றைத் திருக்கையால் எடுத்து வாயு தேவனிடம் தந்தான். அவன் அதனைத் தாங்கலாற்றாமல் அக்கினி பகவானிடம் அளித்தான். அவனும் அதைத் தாங்க முடியாமல் குளிர்ந்த கங்கை யாற்றில் விட்டான். கங்கையும் தாங்கமுடியாமல், தனது மடியில் தாங்கிக் கரையிலுள்ள சரவணப்பொய்கையிற் சேர்த்தாள். அங்கு அப்பொறிகள் ஆறும் ஆறு குழந்தைகளாயின. கார்த்திகைப் பெண்கள் ஆகிய அறுவரின் முலைப்பால் குடித்து விளையாடின. சிவபிரான் அக்குழந்தைகளை உமாதேவியாருக்குக் காட்டினான். தேவியார் அந்த ஆறு குழந்தைகளையும் ஒன்றாகச் சேர்த்து எடுத்து அணைத்தாள். அதனால் அவைகள் ஒருருவம் ஆயின. அது கண்டு மகிழ்ந்து கந்தன் எனப் பெயரிட்டு, முகத்தில் அணைத்து உச்சிமோந்து திருமுலைப் பால் ஊட்டி, உமாதேவியார் சிவபிரான் இடத்தில் அக்குழந்தையை அளித்தாள்.

உமாதேவியாரின் சிலம்பிலிருந்து சிதறிய நவமணிகளினின்று, மாணிக்கவல்லி, முத்துவல்லி, புஷ்பராகவல்லி, கோமேதகவல்லி, வைடூரியவல்லி, வைரவல்லி, மரகதவல்லி, பவளவல்லி, இந்திரநீலவள்ளி என்னும் நவ சக்திகள் தோன்றினர். அவர்கள், சிவ பிரானை விருப்புடன் நோக்கிக் கருக்கொண்டனர். அதனால் அவர்களிடமிருந்து வீரவாகு, வீரகேசரி, வீரமகேந்திரர், வீரமகேச்சுரர், வீரபுரந்தரர், வீரராட்சசர், வீரமார்த்தாண்டர், வீராந்தகர், வீரதீரர் என்னும் நவ வீரர்கள் தோன்றினர். அவர்களுள் ஒருவராகிய வீரவாகுவை அழைத்து, நாரதமுனிவர் செய்த வேள்வியில் தோன்றி, உலகத்தை யழித்து உலவிவரும் ஆட்டுக்கிடாயைக் கொண்டு வருக என்று முருகன் கட்டளையிட்டார். அங்ஙனமே வீரவாகு அதனைப் பிடித்துக் கொணர்ந்து விடுக்க, அதனை முருகன் எட்டுத் திக்குகளிலும் செலுத்தி விளையாடினான்.

ஒருகால் பிரமன் கயிலைக்குச் சென்ற போது அகந்தையால் முருகனை வணங்காது சென்றான். முருகன் அவனை அதட்டி அழைத்து 'நீ யார்? நீ செய்யும் தொழில் யாது?' என வினவினான். அதற்கு அவன் 'நான் பிரமதேவன், நான் செய்வது படைப்புத் தொழில்' என்றான். 'படைப்புத் தொழிலை நீ எவ்வாறு செய்கின்றனை' என முருகன் வினவ, 'வேதங்களை ஓதிச் செய்கிறேன்' என்றான் பிரமன். 'வேதங்களை ஓதிக் காட்டு' என முருகன் பணித்தான். பிரமன் வேதத்தை ஓதத் தலைப்பட்டு, முதலில் 'ஓம்' என்று கூறித் தொடங்கினான். முருகன் உடனே அவனை நிறுத்தி, 'நீ இப்போது ஓதிய ஓம் என்பதன் பொருளைக் கூறுக' எனப்

பணித்தான். அவன் தெரியாது விழித்தான். 'இதுதானும் அறியாத நினக்கு இத்துணைச் செருக்கா? நீ படைப்புத் தொழிலைச் செய்யுந் தன்மை யாங்ஙனம்?' எனக் கடிந்துரைத்து, அவனைத் தலையிற் குட்டிச் சிறையில் இடு வித்தான்.

பிரமன் சிறைபட்டதனால் வருந்திய திருமால், சிவபிரானிடம் சென்று முறை யிட்டார். சிவபிரான் நந்திதேவரை முருகன் பால் உய்த்து, பிரமனைச் சிறையினின்று விடு விக்கப் பணித்தார். முருகன் அதற்கு இசைத் திலன். சிவபிரான் நேரே போந்து முருகனைக் கண்டார். முருகன் சிவபிரானைப் பணிந்து, பிரமன் பிரணவப் பொருள் அறியாமை யினால் சிறைப்பட்டதனைக் கூறினார். சிவ பிரான், 'அற்றேல், பிரணவத்தின் பொருளை நீ எனக்குக் கூறவல்லையோ'? என்றார். 'முறைப்படி இருந்து கேட்பின் உரைப்பேன்' என்று முருகன் மொழிந்தருளினான். சிவ பிரானும் அதற்கு இசைய, முருகப்பெருமான் சிவனார் மனங்குளிர, உபதேச மந்திரம் இரு செவிமீதிலும் பகர்தல் செய்தான்.

தேவர்களின் துன்பத்தைத் தீர்ப்ப தற்காக முருகன் தாரகாசூரனை அழித்தான். அவனுக்குத் துணையாகப் போந்து மலையாக நின்ற கிரவுஞ்சன் என்னும் அசுரனையும், வீர வடிவேல் விடுத்து ஒழித்தான். கடல் அலை வீசும் திருச்செந்தூரில், கருணை வெள்ளம் போல உயர்ந்த பீடத்தில் வீற்றிருந்து, தேவேந்திரனுக்குத் தஞ்சமளித்தான். சூர பதுமனிடம் நல்லுரைகள் கூறிவரும்படி வீரவாகுவைத் தூதுவிடுத்தான். ஆனாலும் சூரபதுமன் தேவர்களைச் சிறைவிட மறுத்த மையால், தேர் யானை புரவி காலாள் என்னும் நான்கு வகையான படைகளையும் கொண்டுசென்று, பானுகோபன், சிங்கமுகன் முதலிய அசுரர்களை வதைத்து, வெற்றிமாலை யணிந்தான். அது கண்டு ஒளிந்த சூரனை இரண்டு கூறுகளாகப் பிளந் தான். அவற்றில் ஒன்று மயிலாகவும், மற் றொன்று கோழியாகவும் வடிவெடுத்து நின்றது. முருகன் மயிலை வாகனமாகவும், கோழியைக் கொடியாகவும் ஏற்றுக் கொண்டான்.

இவ்வாறு சூரபதுமனைத் தடிந்ததனால், முருகன் மும்மூர்த்திகளின் குறைகளைப் போக் கினான். தேவர்களைச் சிறையிலிருந்து விடு வித்தான். முருகன் அருளால் தேவர்கள் மகிழ்ந்தார்கள். தேவேந்திரன் தனக்கும் தேவர்களுக்கும் நலம் செய்த முருகனுக்குத் தன் நன்றியைப் புலப்படுத்த விரும்பினான். அதனால் தன் மகளாகிய தெய்வயானை யம்மையை முருகனுக்கு மணம் செய்துதர விரும்பினான். தன் மகளை மணந்து ஏற்றுக் கொண்டருளுமாறு முருகனைப் பணிந்து வேண்டிக் கொண்டான். அவனது வேண்டு கோளுக்கிசைந்து, தெய்வயானை யம்மையை முருகன் திருப்பரங்குன்றத்தில் மணம் புரிந்து கொண்டு மகிழ்வித்தான்.

திருமாலின் புதல்வியராகிய அமுதவல்லி, சுந்தரவல்லி ஆகிய இருவரும், முருகனை மணக்க விரும்பித் தவம் புரிந்தனர். முருகன் பணித்தபடி அமுதவல்லி விண்ணுலகத்தில் தெய்வயானையாகத் தோன்றி முருகனை மணந் தனள். மற்றொருத்தியாகிய சுந்தரவல்லி மண்ணுலகத்தில் சிவமுனிவர் என்பவரின் அருட்பார்வையால் மானொன்றின் வயிற்றில் கருவுற்று, வள்ளிக்கிழங்கு அகழ்ந்த குழியில் தோன்றி, வள்ளி எனப் பெயரிடப்பெற்று, நம்பிராசன் என்னும் வேடர் தலைவனால் எடுத்து வளர்க்கப்பட்டு வந்தாள். தமிழ் நூல்கள் கூறும் கற்பு களவு என்னும் இரு வகைத் திருமண முறைகளுள், கற்பு மணத் திற்குரிய எடுத்துக்காட்டாகத் தெய்வயானை அம்மையை மணந்த முருகன், களவு மணத் திற்கு இலக்கியமாகப் பலவகைத் திருவிளை யாடல்களை நிகழ்த்தி வள்ளியம்மையை மணந்துகொண்டான்.

இவையனைத்தும் கந்தபுராணம் கூறும் முருகனின் விரிவான வரலாற்றின் சுருக்கம்.

சுருங்கிய சில வரிகளில் கந்தபுராண வரலாறு முழுதினையும் முறைப்படத் தொகுத்து, ஒருங்கே தொடுத்து இனிது பாடியருளிய குமரகுருபரரின் கவிதைக் கலை நலமும், பக்தியுணர்வின் சிறப்பும் பெரிதும் மிகப் பாராட்டுதற்குரியனவாகும்.

வேண்டுகோள்

திருப்பரங்குன்றம் திருச்சீரலைவாய் திருவாவினன்குடி திருவேரகம் குன்றுதோருடல் பழமுதிர்சோலை என்னும் ஆறுபடை வீட்டுத் தலங்களையும் தரிசித்து, ஆறு எழுத்து மந்திரத்தைச் செபித்து, வழிபடும் அன்பர்களின் உள்ளத்தில் எழுந்தருளிக் குடி கொள்ளும் முருகனே! திருச்சீரலைவாய் ஆகிய திருச்செந்தூரில் எழுந்தருளியிருந்து, எல்லாப் பொருள்களையும் உயிர்களையும் பாதுகாத்து அருள்புரியும் செவ்வேளே!

எண்ணில்லாத தொன்னெடுங் காலமாக அடைந்து வருகின்ற பிறவித் துன்பமும், காலமின்றி எதிர்பாராமல் நேரும் இறப்புத் துன்பமும், பலகோடி இடையூறுகளும், பல வகையான நோய்களும், பலவகையான பாவங்களும், பில்லி சூனியம் போன்ற ஏவல் வினைகளும், பாம்பு பிசாசு கொடிய பூதம், பெரியதீ, நீர்வெள்ளம், தீங்கு விளைவிக்கப் பகைவர்கள் விடும் படைக்கலங்கள், தீமை விளைவிக்கும் கொடிய நஞ்சு, கொடிய விலங்குகள் முதலியன எவையாயினும், எப்போது வந்து எம்மை எதிர்த்தாலும், அவ்விடத்தில் அப்போதே நின்னுடைய பஞ்சை மயில் வாகனமும், பன்னிரண்டு திண்தோள்களும், அச்சம் அகற்றும் அயில்வேலும், கச்சைகட்டிய திருஅரையில், சிறிய மெல்லிய திருவடியும், அஞ்சேல் என்னும் திருக்கையும், அருள்பொழியும் பன்னிரண்டுதிருவிழிகளும், ஒளிவீசுகின்ற அழகிய ஆறு திருமுடிகளும், எல்லாத் திசைகளிலும் எதிரே தோன்ற வெளிப்பட்டு, இடுக்கண்களை யெல்லாம் பொடியாகச் செய்து, எல்லா வரங்களையும் தந்து, நீ எங்கள் உள்ளத்தில் புகுந்து உல்லாசமாகக் குடியிருத்தல் வேண்டும்.

எங்களுக்கு ஆசு மதுரம் சித்திரம் வித்தாரம் என்னும் நால்வகைக் கவிகளையும் பாடும் திறமையையும், அட்டாவதானம் என்னும் அருஞ்செயல் புரியும் ஆற்றலையும், இயல் இசை நாடகம் என்னும் மூன்று கூறாக அமைந்த பற்பல காவியங்களின் பயிற்சியையும், எழுத்து சொல் பொருள் யாப்பு அணி என்னும் ஐந்து இலக்கணத்திலும் தேர்ச்சி நிரம்பிப் பழுத்த தமிழ்ப் புலமையையும் சிறப்புறக் கொடுத்தருள்க. இப்பிறவியிலுள்ள அகப்பற்று புறப்பற்றுக்களாகிய இரண்டு வேதனைகளையும் அகற்றி ஆணவம் கன்மம் மாயை ஆகிய மூன்று மலங்களையும் நீக்கி, பசுபோதம் நீங்கி, ஒழுக்கம் வாய்ந்து, திருவருளின் சிறப்பை ஆராய்ந்து இன்புறுவதையே பொழுது போக்காகக் கொண்டுள்ள, சிறந்த பழைய அடியார்களுடன் கூடும்படி செய்! பேரின்பத்தை நிறைய நுகரச் செய்து, மனம் பொருந்திய சிவந்த தாமரை மலர் போன்ற நின் திருவடிகளைக் காட்டி ஆட்கொண்டு, அடியேங்களுக்கு முன்னின்று அருள்புரிவாயாக!

முடிவுரை :

இங்ஙனம் பற்பல நலன்களும், அற்புதக் கவிதைச் சிறப்பும் அமைந்து, பக்தியுணர்வை வளர்ப்பதற்குரிய பாராயணப் பனுவலாக விளங்கும் கந்தர் கலிவெண்பா என்னும் கவின் மிகு நூலை, நாம் அனைவரும் நாடோறும் ஓதி, முருகன் திருவருள் பெற்று உய்ய முயலுவோமாக!



பழனி ஆண்டவர் – உற்சவர்



# திருமலைத் திருக்கோயில்





திரு. வி. சௌ. கோதண்டபாணி

பல்லுயிரும் பலவுலகும் படைத்தளித்துத் துடைக்கினும் ஓர் எல்லையறு பரம்பொருளாய், எங்கும் நிறைந்தவனாய், எல்லாம் அறிந்தவனாய் இருப்பவன் இறைவன். அப்பேரொளிப் பிழம்பினைப் பிறப்பிறப்பில்லாப் பெம்மானை ஏத்தி இடர் களைந்து இறவாப் பெருவாழ்வை எய்த எண்ணுகிறது மனித உள்ளம். ஓர் உருவம் ஓர் நாமம் ஒன்றுமில்லாத அவ்வூழ் கடந்தானுக்கு ஆயிரம் திருப்பெயரை வைத்து அழைத்து வணங்குகிறது வையம். அருவாய், உருவாய், அருவுருவாய் இருக்கும் அவனுக்கு உருவமைத்து உயர்ந்த பல குணங்கூறி, உள்ளத்தே எண்ணியெண்ணி வண்ண முறுகிறது. எண்ணுதற் கெட்டாத எழிலார் கழலினனாகிய அவனைச் சிக்கெனப் பிடித்துச் சீர்பெறவிழைந்த உள்ளம் அவனைச் சிலையாக்கியது. தான் வடித்தெடுத்த வண்ணச்சிலையைச் செம்மைசேர் இடத்தே அமைத்துக் காதலாகிக் கசிந்துருகிக் கண்ணீர் மல்கக் கை கூப்பி இறைஞ்சி இன்புற்றது. மாயப் பிறப்பறுக்கும் மன்னன் நிலைகொண்ட திருவிடத்தைக் கோயிலாக்கி வலம் வந்து வாழ்வுபெறத் தொடங்கியது.

அதன் பயனே இன்று எங்கும் எழுந்து நின்று துலங்கும் திருக்கோயில்கள். மனித மனத்தின் வேட்கையின் விளைவாகத் தோன்றிய திருக்கோயில்கள் பலவற்றிலும் சிலவற்றிற்கே சீரும் சிறப்பும் கிடைத்துள்ளன. தமிழகத்திலே அவற்றில் முதன்மையான ஒன்றுதான் நமது ஞானப்பழமாகிய சிங்கார வேலனால் சிறப்புப் பெற்றுவரும் பழனித் திருக்கோயில். இந்நீலமா மலைமீது கோலமேதும் இன்றிக் கோவணத்தாண்டியாய், தண்டாயுதம் ஏந்தித் தண்டாயுத பாணியாய் இருந்து அருள்புரிகின்றான் ஈசன் மகன்.

தாயினும் தயாவான தத்துவனாகிய அப் பெருமானை முருகனென்றழைத்தனர் முன்னோர். இயற்கையில் தோன்றி, இயற்கையின் மடியில் தவழ்ந்து வளர்ந்து வாழ்வு பெற்ற தமிழ் நெஞ்சம், தன்னை வாழ வைத்த தெய்வத்தை இயற்கையை அழகாக்கி, அழகை முருகாக்கி, முருகை முருகனாக்கி வழிபட்டு நன்றிக்கடன் செலுத்தியது. அழகனாய் அரும்பெறல் மரபில் பெரும் பெயர் முருகனாய்த் தோன்றிய தூயவனைக் கந்தனாய், கடம்பனாய், கதிர்வடி வேலனாய், கார்த்திகேயனாய், ஆறுமுகனாய், சண்முகனாய், சரவணபவனாய், குகனாய், குமரனாய், கூர்வடிவேலனாய், வள்ளி மணாளனாய்க் கண்டனர் பின்னர் வந்த பெரியவர்கள்.

பால் நினைந்தூட்டும் தாயினும் சாலப் பரிந்து அலந்தோர்க்களிக்கும் பொலம்பூண் சேஎய் உறையும் திருநகரை ஆவினன்குடி என்று அழைத்தனர் சங்கத்துச் சான்றோர். அழகைப் பழமாக்கி, ஆவினன்குடியைப் பழனியாக்கிப் பக்தி கொண்டாடினர் பலர். மாறுபடு சூரரை வதைத்த மாயவன் மருகனுக்கு ஆறுபடை வீடமைத்துக் கொடுத்தனர். அப் படைவீடுகள் அனைத்திலும் அலகிலாப் புகழ்பெற்றுத் திகழ்வது பழநியே எனலாம்.

அதிசயம் அநேகமுற்ற பழநியைப் பற்றிய செய்தி எதுவும் பழம் பாடல்களில் இல்லை. பழநி பற்றிய செய்திகள் இல்லையாயினும் பொதினி என்னும் பதி பற்றி அகநானூற்றிலும் புறநானூற்றிலும் கூறப்பட்டுள்ளன. அவற்றில் குறிப்பிடப்படும் பொதினியே பழனியாகியது என்பது சிலரது துணிவு. பொதினிமலைப் பகுதியைச் சேர்ந்தஆவினன்குடி ஆறுபடை வீடுகளில் ஒரு வீடாகக் கூறப்படுவதைச் சங்க இலக்கியத்தின் துணை கொண்டு முதலில் கண்டு, பிறகு, பழனி பற்றிய செய்தியினைக் காண முயலலாம்.

நக்கீரர் பெருமான் தாம் அருளிய திருமுருகாற்றுப்படையில் ஆவினன்குடியைப் பற்றியும் முருகப் பெருமானின் திருவருட் பேறு பற்றியும் தெளிவுபடுத்துகிறார். "தாவு இல் கொள்கை மடந்தையொடு சின்னாள் ஆவினன்குடி அசைதலும் உரியன்" என்பது அவர் கூற்று. அவரால் குறிப்பிடப்படும் ஆவினன்குடி முன்னாளில் ஆவியர் குலத் தோன்றல்களால் ஆளப்பட்டது என்பதற்குச் சான்றுகள் பல உள. அவர்களுடைய ஆட்சிக் காலத்தேதான் இவ்வூர் பொதினி என்னும் பெயர் பூண்டு புகழ் பெற்றிருந்தது என்பதையும் அறியலாம். இந்நெடுநகர் நெடுவேள் என்பானுக்குரியதாக இருந்தது என்பதும் அதன் காரணமாகவே ஆவினன்குடி என அழைக்கப்பட்டது என்பதும் கீழ்வரும் சான்றுகளால் உறுதிப்படுகின்றன.

என்றுமுள தென் தமிழை இயம்பி இசைகொண்ட தமிழ் மக்களின் அகவாழ்வின் அன்பு நெறி பற்றிப் பேசும் அகநானூறு

"வண்டுபடத் ததைந்த கண்ணி ஒண்கழல்
உருவக் குதிரை மழவர் ஓட்டிய
முருகன் நற்போர் நெடுவே ளாவி
அறுகோட்டி யானைப் பொதினி
[யாங்கண்"

எனவும்

"முனைஅது முழவுறழ் திணிதோள்
நெடுவேளாவி
பொன்னுடை நெடுநகர்ப் பொதினி"

எனவும் குறிப்பிடுகின்றது. அதனையே அறம் நிறைந்த தமிழர்களின் மறம் பற்றிப் பாடும் புறநானூறு "மழைதவழ் பொதினி" எனப் பாடுகிறது. மேலும் இத்திருநகர் வையாவிக்கோ பெரும் பேகனுக்கு உரியதாகி, அவனால் ஆளப்பெற்றது உண்மையாயின் இப்பேரூர் நல்லூராய்ப் பெயர் பெற்றிருந்த நிலையினையும் காணலாம். பேகனைப் பாராட்டத் தொடங்கிய வன்பரணர் 'முல்லை வேலி நல்லூரனே' என்று பாராட்டுகின்றார்.

இனி உலகமெலாம் உவந்து பணிந்து ஏத்தும் அணிநிறை பழநிப் பெருநகர் பற்றிப் பார்ப்போம்.

உயிர்களுக்கெல்லாம் தாயாகிய உமையவள், கனி கிடைக்காத காரணத்தால் சினங் கொண்ட செந்தில் வேலனைப் பழம் நீ என அழைத்து அணைத்துக்கொண்டமையால் பழநி எனவாகியது என்பது பழநித் தலபுராணம். பழனங்களால் அதாவது வயல்களால் சூழப் பெற்ற பகுதியாக இருந்ததால் பழனி எனப் பெயர் பெற்றது என்பர் சிலர். இவர்தம் கூற்றுக்கு எவ்விதச் சான்றும் இல்லை. பலர் பல வகையில் கொடுக்கும் விளக்கங்களை ஆய்ந்து காலத்தை வீணாக்குவதை விட, இப் பழமையான ஊரின் சீரினைக் காண்பது பயன் தரும் செயலாகும். அதனால் அதனைக் காணலாம்.

கந்தரநுபூதி பெற்றுக் கந்தரநுபூதி சொன்ன எந்தை அருணகிரிநாதர் தனது திருப்புகழமிழ்தில் பழனியைப் பற்றிப் பல

# திருமலைத் திருக்கோயில்







திரு. வி. சௌ. கோதண்டபாணி

பல்லுயிரும் பலவுலகும் படைத்தளித்துத் துடைக்கினும் ஓர் எல்லையறு பரம்பொருளாய், எங்கும் நிறைந்தவனாய், எல்லாம் அறிந்தவனாய் இருப்பவன் இறைவன். அப்பேரொளிப் பிழம்பினைப் பிறப்பிறப்பில்லாப் பெம்மானை ஏத்தி இடர் களைந்து இறவாப் பெருவாழ்வை எய்த எண்ணுகிறது மனித உள்ளம். ஓர் உருவம் ஓர் நாமம் ஒன்றுமில்லாத அவ்வூழ் கடந்தானுக்கு ஆயிரம் திருப்பெயரை வைத்து அழைத்து வணங்குகிறது வையம். அருவாய், உருவாய், அருவுருவாய் இருக்கும் அவனுக்கு உருவமைத்து உயர்ந்த பல குணங்கூறி, உள்ளத்தே எண்ணியெண்ணி வண்ணமுறுகிறது. எண்ணுதற் கெட்டாத எழிலார் கழலினனாகிய அவனைச் சிக்கெனப் பிடித்துச் சீர்பெறவிழைந்த உள்ளம் அவனைச் சிலையாக்கியது. தான் வடித்தெடுத்த வண்ணச்சிலையைச் செம்மைசேர் இடத்தே அமைத்துக் காதலாகிக் கசிந்துருகிக் கண்ணீர் மல்கக் கை கூப்பி இறைஞ்சி இன்புற்றது. மாயப் பிறப்பறுக்கும் மன்னன் நிலைகொண்ட திருவிடத்தைக் கோயிலாக்கி வலம் வந்து வாழ்வுபெறத் தொடங்கியது.

அதன் பயனே இன்று எங்கும் எழுந்து நின்று துலங்கும் திருக்கோயில்கள். மனித மனத்தின் வேட்கையின் விளைவாகத் தோன்றிய திருக்கோயில்கள் பலவற்றிலும் சிலவற்றிற்கே சீரும் சிறப்பும் கிடைத்துள்ளன. தமிழகத்திலே அவற்றில் முதன்மையான ஒன்றுதான் நமது ஞானப்பழமாகிய சிங்கார வேலனால் சிறப்புப் பெற்றுவரும் பழனித் திருக்கோயில். இந்நிலமா மலைமீது கோலமேதும் இன்றிக் கோவணத்தாண்டியாய், தண்டாயுதம் ஏந்தித் தண்டாயுதபாணியாய் இருந்து அருள்புரிகின்றான் ஈசன் மகன்.

தாயினும் தயாவான தத்துவனாகிய அப் பெருமானை முருகனென்றழைத்தனர் முன்னோர். இயற்கையில் தோன்றி, இயற்கையின் மடியில் தவழ்ந்து வளர்ந்து வாழ்வு பெற்ற தமிழ் நெஞ்சம், தன்னை வாழ வைத்த தெய்வத்தை இயற்கையை அழகாக்கி, அழகை முருகாக்கி, முருகை முருகனாக்கி வழிபட்டு நன்றிக்கடன் செலுத்தியது. அழகனைய் அரும்பெறல் மரபில் பெரும் பெயர் முருகனைத் தோன்றிய தூயவனைக் கந்தனைய், கடம்பனைய், கதிர்வடி வேலனைய், கார்த்திகேயனைய், ஆறுமுகனைய், சண்முகனைய், சரவணபவனைய், குகனைய், குமரனைய், கூர்வடிவேலனைய், வள்ளி மணளனைய்க் கண்டனர் பின்னர் வந்த பெரியவர்கள்.

பால் நினைந்தூட்டும் தாயினும் சாலப் பரிந்து அலங்தோர்க்களிக்கும் பொலம்பூண் சேஎய் உறையும் திருநகரை ஆவினன்குடி என்று அழைத்தனர் சங்கத்துச் சான்ருேர். அழகைப் பழமாக்கி, ஆவினன்குடியைப் பழனியாக்கிப் பக்தி கொண்டாடினர் பலர். மாறுபடு சூரரை வதைத்த மாயவன் மருகனுக்கு ஆறுபடை வீடமைத்துக் கொடுத்தனர். அப் படைவீடுகள் அனைத்திலும் அலகிலாப் புகழ்பெற்றுத் திகழ்வது பழநியே எனலாம்.

அதிசயம் அநேகமுற்ற பழநியைப் பற்றிய செய்தி எதுவும் பழம் பாடல்களில் இல்லை. பழநி பற்றிய செய்திகள் இல்லையாயினும் பொதினி என்னும் பதி பற்றி அகநானூற்றிலும் புறநானூற்றிலும் கூறப்பட்டுள்ளன. அவற்றில் குறிப்பிடப்படும் பொதினியே பழனியாகியது என்பது சிலரது துணிவு. பொதினிமலைப் பகுதியைச் சேர்ந்தஆவினன்குடி ஆறுபடை வீடுகளில் ஒரு வீடாகக் கூறப்படுவதைச் சங்க இலக்கியத்தின் துணை கொண்டு முதலில் கண்டு, பிறகு, பழனி பற்றிய செய்தியினைக் காண முயலலாம்.

நக்கீரர் பெருமான் தாம் அருளிய திருமுருகாற்றுப்படையில் ஆவினன்குடியைப் பற்றியும் முருகப் பெருமானின் திருவருட் பேறு பற்றியும் தெளிவுபடுத்துகிருர். "தாவு இல் கொள்கை மடந்தையொடு சின்னள் ஆவினன்குடி அசைதலும் உரியன்" என்பது அவர் கூற்று. அவரால் குறிப்பிடப்படும் ஆவினன்குடி முன்னளில் ஆவியர் குலத் தோன்றல்களால் ஆளப்பட்டது என்பதற்குச் சான்றுகள் பல உள. அவர்களுடைய ஆட்சிக் காலத்தேதான் இவ்வூர் பொதினி என்னும் பெயர் பூண்டு புகழ் பெற்றிருந்தது என்பதையும் அறியலாம். இந்நெடுநகர் நெடுவேள் என்பானுக்குரியதாக இருந்தது என்பதும் அதன் காரணமாகவே ஆவினன்குடி என அழைக்கப்பட்டது என்பதும் கீழ்வரும் சான்றுகளால் உறுதிப்படுகின்றன.

என்றுமுள தென் தமிழை இயம்பி இசைகொண்ட தமிழ் மக்களின் அகவாழ்வின் அன்பு நெறி பற்றிப் பேசும் அகநானூறு

"வண்டுபடத் ததைந்த கண்ணி ஒண்கழல்
உருவக் குதிரை மழவர் ஓட்டிய
முருகன் நற்போர் நெடுவே ளாவி
அறுகோட்டி யானைப் பொதினி
[யாங்கண்"

எனவும்

"முரு அது முழவுறழ் திணிதோள்
நெடுவேளாவி
பொன்னுடை நெடுநகர்ப் பொதினி"

எனவும் குறிப்பிடுகின்றது. அதனையே அறம் நிறைந்த தமிழர்களின் மறம் பற்றிப் பாடும் புறநானூறு "மழைதவழ் பொதினி" எனப் பாடுகிறது. மேலும் இத்திருநகர் வையாவிக்கோ பெரும் பேகனுக்கு உரியதாகி, அவனல் ஆளப்பெற்றது உண்மையாயின் இப்பேரூர் நல்லூராய்ப் பெயர் பெற்றிருந்த நிலையினையும் காணலாம். பேகனைப் பாராட்டத் தொடங்கிய வன்பரணர் 'முல்லை வேலி நல்லூரனே' என்று பாராட்டுகின்ருர்.

இனி உலகமெலாம் உவந்து பணிந்து ஏத்தும் அணிநிறை பழநிப் பெருநகர் பற்றிப் பார்ப்போம்.

உயிர்களுக்கெல்லாம் தாயாகிய உமையவள், கனி கிடைக்காத காரணத்தால் சினங் கொண்ட செந்தில் வேலனைப் பழம் நீ என அழைத்து அணைத்துக்கொண்டமையால் பழநி எனவாகியது என்பது பழநித் தலபுராணம். பழனங்களால் அதாவது வயல்களால் சூழப் பெற்ற பகுதியாக இருந்ததால் பழனி எனப் பெயர் பெற்றது என்பர் சிலர். இவர்தம் கூற்றுக்கு எவ்விதச் சான்றும் இல்லை. பலர் பல வகையில் கொடுக்கும் விளக்கங்களை ஆய்ந்து காலத்தை வீணக்குவதை விட, இப் பழமையான ஊரின் சீரினைக் காண்பது பயன் தரும் செயலாகும். அதனல் அதனைக் காணலாம்.

கந்தரநுபூதி பெற்றுக் கந்தரநுபூதி சொன்ன எந்தை அருணகிரிநாதர் தனது திருப்புகழமிழ்தில் பழனியைப் பற்றிப் பல




குழந்தை வேலாயுத சுவாமி - மூலவர் திருவாவினன்குடி



குழந்தை வேலாயுத சுவாமி உற்சவர் திருவாவினன்குடி






# சைவக் கடவுள் முருகன்

உருவாய் அருவாய் உளதாய் இலதாய்
மருவாய் மலராய் மணியாய் ஒளியாய்க்
கருவாய் உயிராய்க் கதியாய் விதியாய்க்
குருவாய் வருவாய் அருள்வாய் குகனே!



திரு ஆர். எம். கந்தசாமி, பி. எஸ்சி.

ஐவகை நிலங்களுள் குறிஞ்சி நிலக் கடவுளாய் முருகன் விளங்குகின்றான். நம் தமிழகத்தில் திரு ஆவினன்குடி, திருப்பரங்குன்றம், பழமுதிர்சோலை, திருத்தணி, சுவாமிமலை, திருச்செந்தூர் எனும் ஆறு திருப்பதிகளிலும் முருகன் சிறப்பாக வீற்றிருந்து அருள் புரிகின்றான். முருகனுக்குத் தனிக் கோயில்கள் பல உள்ளன. சிவாலயங்களில் முருகன் கோயிலிலும் வழிபாடு சிறப்புற நடைபெற்று வருகின்றது. இம்முருகன் முழு முதற்பரம்பொருளாகிய சிவபெருமானே ஆவார். இதை

"ஈசனே அவன் ஆடலால்
மதலையாயினன் காண்
பேசில் ஆங்கவன் பரனோடு
பேதகன் அல்லன்"

எனக் கந்தபுராணம் இயம்புகிறது.

தக்ஷயாகத்தில் சிவநிந்தை நிகழ, அதனைக் கேட்டு நந்திதேவர் சபிக்க, தேவர்கள் அனைவரும் அசுரர்களால் நலிவுற நேரிட்டது. இதன் பொருட்டே சிவபெருமான் சூரபன்மனைத் தோற்றுவித்தார். வரம் பல பெற்ற அவனுடைய அடாத செயல்களினால் அவனை அழிப்பதற்காகச் சிவனே, தனது ஆற்றல் அனைத்தையும் கொண்ட ஒரு குழந்தையைக் கொண்டு அதனை முடிக்கத் திருவுளம் கொண்டார்.

முருகனுடைய திருநாமங்கள் பற்பல. அவற்றுள் ஒன்று முருகன் என்பது. முருகினை உடையவன் முருகன் என்றும், முருகு என்பதற்கு இளமை, அழகு, தேன், நறுமணம், கடவுள் தன்மை என்பது பொருள். முருகனது அழகு என்றும் நிலை பெற்ற அழகாகும். அழகும் அழியா அழகே. இதனை

"என்றும் இளையாய்; அழகியாய்"

என்பதனால் அறியலாம். அவன் தெய்வத் தன்மை வாய்ந்தவன் என்பதை

"ஞானந்தான் உருவாகிய நாயகன்"

என்பதால் அறியலாம்.

சரவணப் பொய்கையில் தோன்றியதால் சரவணபவன் எனும் பெயர் பெற்றான். ச - மங்கலம், ர - ஒளி அல்லது கொடை, வ - சாத்வீகம், ந - போர். மங்கலம், கொடை, ஒளி சாத்வீகம், போர் முதலிய தன்மைகளைக் கொண்டபடியால் சரவணபவன் எனும் பெயர் பெற்றான். மூலமந்திரம் "ஓம் சரவணபவாயநம" என்பதாகும். மேலும் அவருக்கு வேள், குகன், கடம்பன், விசாகன், காங்கேயன் எனப் பல பெயர்கள் உண்டு. முருகனது மூர்த்தங்கள் பல உள. அவை சுப்பிரமணியர், சண்முகர், சரவணபவர், ஞான சக்திதரர், தேவசேனாபதி,

கல்யாண சுப்பிரமணியர், மயில்வாகனர் முதலியனவாம்.

முருகனது ஆறு திருமுகங்களில் ஒவ்வொரு திருமுகமும் செய்யும் தொழில்களை நக்கீரர் திருமுருகாற்றுப்படையில் நன்கு சித்திரிக்கிருர்.

ஒருமுகமானது, பெருமையாகிய இருளை உடைய உலகம், குற்றமில்லாமல் விளங்கும் பொருட்டுப் பல கிரணங்களையும் தோற்றுவித்தது.

ஒருமுகமானது அன்பர்கள் துதித்ததால் அவர்கள் குற்றங்களை நீக்குவதற்கு உடன்பட்டு, அவர்களுக்கு இனியதாய் நடந்து, அவர்கள் மேற்சென்ற விருப்பத்திஞலே மகிழ்ந்து, அவர்கள் வேண்டும் வரங்களைக் கொடுத்தது.

ஒருமுகமானது, மந்திரத்தில் உடைய வேதத்தில் சொல்லிய, முறைமை தவருத பிராமணர்களை உடைய யாகங்களிலே தீங்கு வராதபடி நினையா நிற்கும்.

ஒருமுகமானது வேத ஆகமங்களிலே மறைந்துள்ளவற்றை ஆராய்ந்துபோதித்துச் சந்திரனைப்போல் திசைகள் எல்லாவற்றையும் விளக்கும்.

ஒருமுகமானது திருஉள்ளத்திலே நிகழாநின்ற சமத்துவத்தை ஒழித்துக் கோபங்கொண்ட திருஉள்ளத்துடனே, பகைவராகிய அசுரர்களை வதைத்துப் போர்க்கள வேள்வியை வேட்டது.

ஒருமுகமானது வேடருடைய மடப்பத்தை உடைய மகளும் கொடிபோலும் இடையினை உடைய இளம் பெண்ணுமாகிய வள்ளிநாயகியுடனே மகிழ்ச்சியைப் பொருந்திற்று.

முருகனுடைய பன்னிரண்டு கரங்கள் செய்யும் தொழில்கள்:- ஒரு கை தேவர்களையும், முனிவர்களையும் பாதுகாக்க அமைந்தது. அதற்கு இணையான கை மருங்கிலே கிடந்தது. மூன்ருவது கை அங்குசத்தைச் செலுத்துகின்றது. அதற்கு இணையான கை ஆடை உடுத்திய தொடையில் கிடக்கின்றது. ஐந்தும், ஆருவதுமாகிய கைகள் அழகிய பெரிய பரிசையோடு வேலாயுதத்தை வலமாகச் சுழற்றுகின்றன. ஏழாவது கை முனிவர்களுக்கு, உரை இறந்த பொருளை உணர்த்த மார்போடு சேர்த்து விளங்க எட்டாவது கை மார்பில் தாழ்ந்து தொங்கும் மாலையுடனே சேர்ந்து விளங்குகிறது. ஒன்பதாவது கை வளைகள் உடனே மேலே சுழன்று களவேள்வியை வேட்கும் முத்திரை கொடுக்கிறது. இதற்கு இணையான கை மணியை மாறி ஒலிக்கப் பண்ணுகிறது. பதினென்ருவது கை மழையைப் பெய்விக்கின்றது. அதற்கு இணையான கை தெய்வப் பெண்களுக்கு மணமாலை சூட்டுகின்றது. இக்கருத்தை "வீறுகேதனம்" எனத் தொடங்கும் கந்தபுராணப் பாடலால் அறியலாம்.

முருகனைச் சார்ந்து விளங்கும் வடிவேல் ஞானசக்தியாகும். இது சிவனல் முருகனுக்குக் கொடுக்கப்பட்டதையும் அதன் பெருமையையும் "ஆயுதற் பின்னரேவின்" எனத் தொடங்கும் கந்தபுராணப் பாடலில் அறியலாம். இவ்வேலின் விரத்தினைத் திருமுருகாற்றுப்படை நன்கு கூறுகின்றது.

"வீரவேல் தாரைவேல் விண்ணோர் சிறைமீட்ட
தீரவேல் செவ்வேள் திருக்கைவேல்– வாரி
குளித்தவேல் சூர்மார்புங் குன்றுந் துளைத்த
வேலுண்டே துணை"

இறைவனது கருணை அறக்கருணை, மறக்கருணை என இருவகைப்படும். நல்லவர்களை அறக்கருணையாலும், தீயவர்களை மறக்கருணையாலும் இறைவன் ஆட் கொள்ளுகிருன். சூரசம்ஹாரம் மறக்கருணையைச் சேர்ந்ததாகும். பக்தர்களை ஆட் கொள்ளுதல் அறக்கருணையாகும்.

சேவற்கொடி :

இறைவன் நாதாதீதன். நாத தத்துவம் அவன். சேவலானது "கொக்கறகோ" எனக்கூவி நாத தத்துவத்தை முழக்குகிறது.

கொக்கறக்கோ என்பதற்குப் பொருள் கொக்கு - சூரனாகிய மாமரத்தை, அறு- அறுத்து வீழ்த்திய. கோ - தலைவனாகிய முருகன் என்பது பொருள். எனவே நாதத்தை முழக்கும் சேவலைக் கொடியாகக் கொண்டு முருகன் விளங்குகிறான் என்பதை அறியலாம்.

**திருமணத் தத்துவம் :**

சிவஞானபோதம் எட்டாவது சூத்திரத்தில் கூறியவாறு; உயிர் தன் இயல்பறியாது. கருவிகளின் இயல்பே தன் இயல்பு என மயங்கி உணர்வற்றுக் கிடக்கும்பொழுது இறைவன் தோன்றி உணர்வினை நல்கி உபதேசித்துத் தன்னோடு இரண்டறச் சேர்த்துக் கொள்வான் என்பதாகும்.

சைவப் பிரிவுகளில் ஒன்றாகிய கௌமாரம் என்னும் மதத்திற்கு முருகன் கடவுள் ஆவார். ஆகவே சைவக் கடவுளாகிய முருகனை நாம் வழிபட்டு அவன் அருள் பெறுவோமாக. அருள்மிகு முருகனை அனுதினமும் தொழுவோம்.



"முருகன் தனிவேல் முனிநங் குருவென்
றருள்கொண் டறியார் அறியுந் தரமோ
உருவன் றருவன் றுளதன் றிலதன்
றிருளன் றொளியன் றெனநின் றதுவே"

— கந்தரனுபூதி

# அருள்மிகு இராமநாதசுவாமி திருக்கோயில்

## இராமேசுவரம்



இராமேசுவரம் தீவில் அமையப்பெற்றுள்ள அருள்மிகு இராமநாத சுவாமி திருக்கோயில் மனம் கவரும் புராதனச் சிற்பக்கலைக் காட்சிகளுடன் மிகப்பெரிய பிரகாரங்களையும் கொண்டதாக விளங்குகிறது. இராமாயண வரலாற்றுத் தொடர்பு கொண்டுள்ள இத்தலம் பன்னிரு ஜோதிர்லிங்கத் தலங்களுள் ஒன்றாக விளங்குவதுடன், வடக்கே காசியும், தெற்கே இராமேசு வரமும்என இந்துக்களுக்கு தலைசிறந்த இரு பெரிய புண்ணிய தலங்களில் ஒன்றாகும். தலம், தீர்த்தம், மூர்த்தி ஆகிய மூவகைச் சிறப்பும் உடையதாகும்.

இத்திருக்கோயிலில் எல்லா நவீன வசதிகளுடன் கூடிய தங்கும் விடுதிகள் கட்டப்பட்டுள்ளன. சேவார்த்திகள் வசதியாகத் தங்கவும், முறையாக வழிபடவும், இங்கு முக்கியமாகக் கருதப்படும், இலக்குமண தீர்த்தம், தனுஷ்கோடி, கந்தமாதன பர்வதம் இடங்களுக்குப் போவதற்கு வாகன வசதி பெறவும் இக்கோயில் நிருவாக அதிகாரியை அணுகக் கோரப்படுகிறது.

இக்கோயிலில் அருள்மிகு இராமநாதசுவாமிக்கும், பர்வதவர்த்தினி அம்பாளுக்கும் நடைபெறும் கோடி அர்ச்சனையில் சகஸ்ரநாமம் 1-க்கு ரூ. 10/- வீதம் கட்டணம் செலுத்தி அர்ச்சனை செய்து திருவருள் பிரசாதமும், வெள்ளிக் காசும் பெறலாம்.

இக்கோயிலில் நடைபெற்று வரும் மாபெரும் திருப்பணிக்குத் தாராளமாக நன்கொடை வழங்க வேணுமாய் வேண்டப்படுகிறது. இந்த நன்கொடைக்கு வருமானவரி விலக்கு அளிக்கப்பட்டுள்ளது.

*நிருவாக அதிகாரி,*

இராமேசுவரம்
தமிழ்நாடு

**அருள்மிகு இராமநாதசுவாமி திருக்கோயில்**

# பழனி முருகன் காவடிச் சிந்து



திரு பெ. தூரன்

சிந்து மெட்டு
தாளம்: ஆதி

கரஹரப் பிரியாவில்
பிறந்தது

அழகுத்தெய்வ மாகவந்து பழநிமலை மீதில்நிற்போன்
ஆதிசக்தி அன்னைதந்த பாலன் - அவன்
அசுரர்தம்மை வென்றவடி வேலன் - நல்ல
அமுதமென்னுமோர் தமிழில்பாடிடும் அன்பர்வாழவே கருணைசெய்குகன்
அரனுகந்த குருவாம் உயர்சீலன் - என்றும்
அருள் சாந்தே காக்கும்அனு கூலன்

குழந்தையாகக் குமரனாகக் கோவணாடைத் துறவியாக
கோலங்கொள்ளும் காட்சிஎன்ன சொல்வேன் - கண்டு
கூறும்மாய வினைகள்யாவும் வெல்வேன் - இந்தக்
குவலயத்திலோர் கலியுகப்பெரு வரதனாய்த்திகழ்ந் தருளும்கந்தனைக்
கும்பிட்டென்றன் பிணிகள்நீங்கிம கிழ்வேன் - உள்ளக்
குமுறல் ஓய்ந்தே நல்லவழி செல்வேன்

நீலமயில் மீதில்ஏறி ஆவினன்கு டியில்தோன்றும்
நிமலனாம்கு ழந்தைமுரு கேசன் - உயர்
நித்திலப்புன் முறுவல்வள்ளி நேசன் - அவன்
நீள்நிலந்தனில் அன்புசெய்திடும் அடியர்யாரையும் காத்துநின்றிடும்
நித்யஜோதி வடிவமாம்ப்ர காசன் - தூரன்
நெஞ்சை நீங்கா தென்றும்அங்கு வாசன்

# அருள்மிகு நடுதறிநாதசாமி ஆலயம்

## கோயில்கன்னப்பூர்



தஞ்சை மாவட்டம் நாகப்பட்டினம் வட்டத்தில் திருவாரூருக்கு வடக்கே சுமார் பன்னிரண்டுகல் தொலைவில் இவ்வூர் அமைந்துள்ளது.

சைவகுல நங்கை நல்லாளை வைணவகுல மகனுக்கு மணமுடித்தனர். நங்கை நாள்தோறும் சிவபூசனை செய்யும் வழக்கமுடையாள். கணவன் வீரவைணவனாய் இருந்தபடியால் சிவபூசை செய்ய வீட்டிலே வாய்ப்பு இன்மையால் மாட்டுக் கொட்டிலில் பசுங்கன்று கட்ட நட்டு வைக்கப்பட்டிருந்த நடு தறியையே சிவலிங்கமாகப் பாவித்துப் பசுவில் கறக்கும் பாலை நடுதறியில் ஊற்றி வழிபடலானாள். இச்செயல் கண்ட மாமியார் (கணவனின் தாய்) தன் மகனிடம் சொல்ல மகனும் மாட்டுக் கொட்டிலில் மறைந்திருந்தான். மனைவி பாலைக்கறந்து நடுதறியில் அபிடேகம் பண்ணும் தருணத்தில் வெளிப்பட்டுக் காரணம் கேட்க மனைவி தான் சிவலிங்கபூசனை செய்வதாகக் கூற அதுகேட்டு வெகுண்ட வீரவைணவன் கோடரி கொண்டு தறியைத் தாக்க அதனின்று குருதி பாய்ந்தது. பசுங்கன்றுகட்ட நட்ட தறியினின்றும் தோன்றியதால் இறைவன் நடுதறிநாதரானார்.

இத்தலம் நாவரசரால் பாடப் பெற்றது. தற்சமயம் ஆலய நிதியிலிருந்து நாள்தோறும் நாற்பது மாணவ மாணவியர்களுக்கு மதிய உணவு வழங்கப்பட்டு வருகிறது.

V. ரெங்கராமானுஜம்
அறங்காவலர் குழுத்தலைவர்

T. கோபால்சாமி
N. வேணுகோபால்
அறங்காவலர்கள்

ஆ. குமாரசுவாமி, B. A.,
நிருவாக அதிகாரி

# அறக் கோயில்







திரு. என். நாச்சிமுத்து

**த**மிழகம் மெய்யுணர்வையும், இறைவழி பாட்டையும் வளர்க்கும் தாயகம் எனலாம். இங்கு இறைவற்கு எண்ணற்ற ஆலயங்கள் அமைந்திருத்தலும், இங்குக் காலந்தவருப் பூசனைகள் சிறப்புற நடைபெறுதலும் எல்லாரும் அறிந்த ஒன்று. தமிழகத்தில், நிலத்திற் கேற்றாற்போல் கடவுளர் வணக்கம் இருந்தது என்பதைத் தொன்னூலாகிய தொல் காப்பியம்;

> 'மாயோன் மேய காடுறை உலகமும்
> சேயோன் மேய மைவரை உலகமும்
> வேந்தன் மேய தீம்புனல் உலகமும்
> வருணன் மேய பெருமணல் உலகமும்
> முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலெனச்
> சொல்லிய முறையாற் சொல்லவும்
> படுமே'

எனப்பகர்கிறது. இதன் பொருள் காட்டிற்குத் திருமாலும், மலைக்கு முருகவேளும், வயல் நிறைந்த இடத்திற்கு இந்திரனும், மணல் சார்ந்த கடற்பகுதிக்கு வருணனும் காத்தற் கடவுளாவர் என்பதாம். எனவே, கடவுள் வணக்கம் தமிழர்க்கு மிகத் தொன்மைக் காலத்திலிருந்தே பயின்று வரும் பண்பாகும். இது மட்டுமின்றி இறந்தவர்க்கு நடுகல் நாட்டுதலும், அதனை நீர்ப்படை செய்தலும், அக்கல்லில் களத்தில் மாண்ட வீரரின் பீடும் பெயரும் எழுதி வணங்கி வருதலும் பண்டைய மரபு என்பதைத் தொல்காப்பியம்:

> 'காட்சி கால்கோள் நீர்ப்படை நடுகல்
> சீர்த்த மரபிற் பெரும்படை வாழ்த்த
> லென்று
> இருமூன்று வகையிற் கல்லொரு புணரச்
> சொல்லப்பட்ட ஒரு மூன்று துறைத்தே'

என்று விளக்கும்.

இவ்வாறு, நிலந்தோறும் வணங்கப் பட்ட கடவுளர்க்கும், களத்தில் வீரம் விளைத்தோர்க்கும், பத்தினிக்கடவுளர்க்கும் கோயில் பல எடுக்கப்பட்டு, மக்கள் அங்குச் சென்று தொழுது தம் இறையுணர்வை வளர்த்து வந்தனர். இக்கோயில்கள் தமிழகத்தில் மிகப் பலவாயின. இவை இறையுணர்விற்கு மட்டும் நிலைக்களனாயின்றி, சிற்ப, ஓவியக்கலைகள் செறிந்திருக்கும் கலைக் கூடமாகவும் திகழ்ந்தன. அத்தகைய எழுபத்தெட்டு வகைக் கோயில்கள் இருந்தன. அவற்றின் சில பெயரைப் பின்வரும் பாடல் தொகுத்துரைக்கின்றது.

> பெருக்காறு சடைக்கணிந்த பெருமான்
> சேரும்
> பெருங்கோயிலெழு பதினெட்டு
> மற்றுங்
> கரக்கோயில் கடி பொழில் சூழ்
> ஞாழற் கோயில்

இருக்கோதி மறையவர்கள்
வழிபட்டேத்தும்
இளங்கோயில் மணிக்கோயில்
ஆலக்கோயில்
திருக்கோயில் சிவனுறையும் கோயில்
சூழ்ந்து
தாழ்ந்திறைஞ்சத் தீவினைகள் தீரும்
அன்றே.
(அடைவுத்திருத்தாண்டம் — 5)

கோயில்தொறும் இறையுணர்வை வளர்த்து வந்தன தமிழகத்தின் அகச் சமயங்களான சைவமும் வைணவமும். இவ்வகைச் சமயங்களுக்கெதிராகப் புறச் சமயங்கள் சில தமிழகத்தில் நுழைந்தன. அவற்றுள் தலையாயவை புத்த சமயமும் சமண சமயமுமாம். இச்சமயங்கள் தமிழகத்தில் அரசியலிலும், சமுதாய வாழ்விலும் விளைவித்த பூசல்களும், மாற்றங்களும் பலவாம்.

பல்லவர் காலத்தில், மன்னன் மகேந்திரன் சமண சமயத்தார்க்கு ஆதரவு காட்டியதோடு தானும் சமணனுகி, ஏற்கெனவே சமணத்திலிருந்து விலகிச் சைவரான திருநாவுக்கரசருக்கு விளைவித்த இன்னல்களை வரலாறு காட்டும்.

மதுரையில் கூன்பாண்டியன் சமணரைச் சார்ந்து சைவருக்குத் தீங்கு விளைக்க முயன்றதும், பாண்டிமாதேவி மங்கையர்க்கரசியார் அமைச்சர் குலச்சிறையாரின் துணையோடு, சைவக்கொழுந்தான ஞானசம்பந்தரை அழைத்து, அனல், புனல், வாதங்களால் சமணரை வென்று அவர்களைக் கழுவேற்றியதும் மறக்கமுடியாத நிகழ்ச்சிகள்.

இவ்வாறு அகச் சமயங்களோடு புறச் சமயங்கள் பொருதலும், அகச் சமயங்களான சைவமும் வைணவமும் தமக்குள் வெறிகொண்டு இறைவனின்

'வானுகி மண்ணுகி வளியாகி ஒளியாகி
ஊனுகி உயிராகி உண்மையுமாய்
இன்மையுமாய்'

நிற்கின்ற தன்மையையும், அறத்தினுள் அன்பாக, மறத்தினுள் மைந்தாக, வேதத்து முறையாக, பூதத்து முதலாக, வெஞ்சுடர் ஒளியாக, திங்களுள் அளியாக, அனைத்துமாக, அனைத்திலும் பொருளுமாக நிற்பதையும் மறந்து தமக்குள் போரிட்டு வந்ததும், சமய நோக்குள்ளார் அறிந்த செய்தி. காலப் போக்கில், இறையுணர்வையும், கலையுணர்வையும் வளர்ப்பதற்கென அமைக்கப்பட்ட கோயில்கள் சமயவெறியர்கள் போராடும் களமாயின. வகுப்பு வாதங்கள் பிறக்கும் இடமாயின. இறைவன் படைப்பில் 'பிறப்பொக்கும் எவ்வுயிர்க்கும்' என்ற உண்மையைப் புறக்கணித்துச் சாதிப்பிரிவினைக் காளான்கள் விளையும் நிலமாயின. ஆம்! கோயிலில் இறைவனை வணங்க இடப் புறத்தே நின்ருர் ஒரு சாதியெனவும், வலப் புறத்தே நின்ருர் பிறிதொரு சாதி எனவும் மனிதர் பிரித்துரைக்கப்பட்டார். முதலில் திருநீறு பெற்றவர் உயர்ந்தவர் எனவும், பின்னுல் பெற்றவர் தாழ்ந்தவரெனவும் மாறுபாடு கற்பிக்கப்பட்டார்கள்.

கோயிலைச் சமைக்கக் கல்லும், மண்ணும், கட்டையும் சுமந்து உழைத்த மக்கள் கோயில் கட்டிய பின்னர், தாமே கட்டிய அக்கோயிலுக்குள் செல்லும் உரிமையிழந்தனர். இறைவனைக் காணும் தகுதி இல்லாதாராயினர். இது தமிழகத்தின் பக்தி வரலாற்றில் ஒரு கொடுமையான காலம் எனலாம். எல்லாருக்கும் தாயும் தந்தையுமாய் விளங்குகின்ற கடவுளின் பெயராலே ஏற்றத்தாழ்வும். அன்பினைக் கற்பிக்க வேண்டிய சமயங்களின் பெயராலே கொடிய பழிச்செயல்களும் நிகழ்ந்தன. இந்த அறியாமையைச் சாடுவதுபோல, உண்மை ஆலயமும், இறைவனும் எது என்பதைத் திருமூலர் தன்பாடலில்

உள்ளம் பெருங்கோயில், ஊனுடம்பு
ஆலயம்
வள்ளற் பிரானுக்கு வாய்கோபுர
வாசல்
தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன்
சிவலிங்கம்
கள்ளப்புலனைந்தும் காளா
மணிவிளக்கே

என்று தெளிவு படுத்துகிருர்.

இப்படிக் கடவுளின் பெயரால் பிரிவினைகளும், சமயத்தின் பெயரால் பூசல்களும்

விளைவிக்கும் இறைவனை அறியா மக்களைச் சிவவாக்கியர் தம் பாடலில் கடுமையாகச் சாடுகின்றார். வெறும் சடங்குகளுக்கு அடிமையாகி இறைவனை மறந்துவிட்ட ஆஷாட பூதிகளை நையாண்டி செய்கிறார்.

"சாவதான தத்துவச் சடங்கு செய்யும் ஊமைகாள்
தேவர் கல்லு மாவரோ சிரிப்பதன்றி என்செய்வேன்"

என்றும்,

"காலை மாலை நீரிலே முழுகு மந்த மூடர்காள்
காலை மாலை நீரிலே கிடந்த தேரை என்பெறும்"

என்றும்,

"எங்கள் தேவ ருங்கள் தேவரென்றிரண்டு தேவரோ
இங்குமங்கு மாகிநின்ற ஆதிமூர்த்தி யொன்றலோ"

என்றும்,

"புலால்புலால் புலாலலென்று பேதமைகள் பேசநீர்
புலாலைவிட்டு மெம்பிரான் பிரிந்திருந்த தெங்களே"

என்றும் போலி மதவாதிகளை உள்ளத்தில் தைக்குமாறு கேட்கிறார்.

தெய்வங்களின் பெயராலே பேதமை வளர்ப் பாரைப் பாரதியார்,

"ஆயிரம் தெய்வங்கள் உண்டென்று சொல்லி
அலையும் அறிவிலிகாள்"

என்கிறார்.

கடவுளின் பெயரால் பூசலும் பிணக்குகளும் முற்றிப்போன காலத்தில் இராமலிங்க அடிகள் தோன்றி, அனைத்துச் சமயங்களும் ஒன்றே; அவைகாட்டும் பாதை வேறானாலும் சென்றடையும் முடிவு ஒன்றே என்பதை வலியுறுத்தும் பொருட்டுத் தான் சமரச சுத்த சன்மார்க்க சமயத்தை நிலைநிறுத்த முற்பட்டார்.

பிற்காலத்தில் மக்களிடையே கல்வியறிவும், பகுத்தறியும் உணர்வும் வளர வளர இவ்வறியாமையிலிருந்து விடுபட்டு வருகின்றனர் என்றே கூறலாம். சமயத்தின் பெயரால் கோயில்களில் நடத்தப்படும் தேவையில்லாத சடங்குகளும், காட்டப்பட்ட வேற்றுமைகளும் கைவிடப்பட்டு வருகின்றன.

தற்காலத்தில் புதிய அரசியல் விழிப்புணர்ச்சியாலும், சட்டங்களின் துணையாலும் கோயில்கள் அறம் வளர்க்கும் நிலையங்களாகத் திகழ்ந்து வருகின்றன. பாகுபாடுகள் ஒழிக்கப்பட்டு, கோயில் வருவாயனைத்தும் பயனுள்ள வழிகளிலே மக்கள் முன்னேற்றத்திற்குப் பயன்படுத்தப்பட்டு வருகிறது. கல்லூரிகளும், பள்ளிகளும், கலைக்கூடங்களும், மருத்துவ மனைகளும், அனாதை விடுதிகளும் நடத்த கோயில் வருவாய் செலவழிக்கப்படுகிறது. பாரதியார் கூறியது போல் 'அன்னசத்திரம் ஆயிரம் நாட்டலின் ஆங்கோர் ஏழைக்கெழுத்தறிவித்தல் நன்று' என்பதை நிலை நிறுத்துவதுபோல, பல்லோரிடத்திலிருந்து கோயிலுக்கு வரும் வருவாய் அறிவுக்கண் திறக்கவும், பிணி பல நீக்கவும் பயன்படுத்தப்பட்டுவருவது மகிழ்ச்சிக்குரிய செய்தியாகும். ஒருவகையில், இருப்போரிடமிருந்து பெற்று இல்லாருக்கு நலம் சேர்க்கும் அறக்கூடங்களாய் இறை ஆலயங்கள் திகழுகின்றன.

வளர்க பயனுள்ள சக்தி!
வாழ்க தமிழர்சமுதாயம்!





போகர் சமாதி

# முத்தொள்ளாயிரத் தேன் துளிகள்



புலவர் திரு. சி. பழனிச்சாமி

இலக்கியக் கடலிலே பல நன்முத்துக்கள் நமக்குக் கிடைத்திருக்கின்றன. தமிழன்னைக்கு அழகூட்டும் அணிகலன்களிலே முத்தொள்ளாயிரமும் ஒன்ருகும்.

அழகுமிகு அந்நூலில் அற்றைய தமிழ் அரசு நிலை, மக்கள் வாழ்க்கை, கலை, இலக்கியம் போன்ற - இன்னபிறவும் பெற்றிருந்த நிலையினை எடுத்துக் காட்டும் ஆடியாக விளங்குகிறது.

அவ்வாடி காட்டும் ஒரு சில இங்கே காண்போமாக.

தாய்நாட்டின் பெருமையைப் புகழ்வது தற்புகழ்ச்சி ஆகாது. அதுபோன்று இழிவுநிலைகளை இடித்துக் காட்டுவதும் சிறுமையாகாது.

சேரநாட்டின் ஒரு பகுதி. அதுவும் வயற்பகுதி. அந்த வயலை அணிசெய்யும் இனிய பொய்கைகள். அடுத்து அப்பதியைச் சூழ்ந்து அழகு செய்யும் மாளிகைகள். அங்கு கொங்குநாட்டு மங்கையர்கள் பொங்கித் ததும்பும் புன்னகை சிந்தும் பொன்னிள நங்கையர். இவர்களிலே முத்தொள்ளாயிரம் கண்ட புலவர் கண்களுக்கு இரு அணங்குகள் மட்டுமே தென்பட்டுள்ளனர்.

இந்த இருவரில் ஒருத்தி தலைவி. மற்றொருவள் தோழி. இருவரும் ஒருநாள் மாலை நேரம், வயலோரம் நடந்து வருகின்றனர். அவ்விருவரும் பருவப்பாவையர். எனவே அவர்களுக்கு இன்ப மாலையாக இருந்தது. கதிரவன் மறையும் நேரம்; இருளின் ஆட்சி தொடங்கும் வேளை. எங்கும் அரவமின்றிய அமைதி.

தலைவி! இருள் நெருங்குகின்றது. விரைந்து இல்லம் செல்ல வேண்டுமென்று உடன் தோழி கூறுகின்ருள்.

தோழி! அஞ்ச வேண்டா. அஞ்சக் கூடிய அவலநிலை நம் நாட்டிலில்லை. நஞ்சினும் கொடியதொரு வேல் நம் கொற்றவன் கையிலுள்ளது அதுகண்டே அயலவர் அஞ்சுகின்றனர். பகைவர் பதைக்கின்றனர்.

நாம் அடிக்கடி கேள்வியுறுகின்ருேமே அயல் நாடுகளைப் பற்றி. அங்கெல்லாம் தீயிடல், சூறையாடல், கொலை, கொள்ளை, பஞ்சம், பட்டினி, அயலார் படையெடுப்பு இவை அன்ருட நிகழ்ச்சியாகத் தோன்றும் அவலநிலை, நம் தமிழ் கொஞ்சும் சேர நாட்டிலே இல்லை. எனவே நீ அஞ்சாதே என்று தலைவி தோழிக்கு ஊக்கமூட்டுகின்ருள். மேலும் நிலையான எந்த ஒரு பயங்கர அரசியல் சூழ்நிலையையும் இலாகவமாகச்

சந்திக்கும் தலைவன் இருக்கின்றான்; அதனை இன்ப முடிவாக்கும் ஆற்றல்மிகு மன்னன் இருக்கின்றான் என்று கூறிய தலைவியும், அதைக் கேட்டு இன்புற்ற தோழியும் ஒரு குளக்கரையை அடைந்தனர்.

செவ்வாம்பல் மலர்கள் அக்குளத்திலே மலர்ந்து நீர் இருப்பதையே மறைத்திருந்தன. செந்நிறம் கொண்ட அம்மலர்கள் மலர்ந்திருப்பது, அக்குளம் தீப் பிடித்து எரிவது போன்று தோன்றுகிறது. அதைக் கண்டு உண்மை நெருப்பென்று அஞ்சிய பறவைகள் அஞ்சித்தன் குஞ்சுகளைச் சிறகுக்குள் ஒதுக்கிப் பாதுகாக்கின்றன. பறவைகளின் அச்சக் குரலொலியும், அவற்றின் சிறகுகளின் ஒலியும் தவிர வேறு ஆரவாரம் ஏதும் இல்லா நாடு நம் சேரநாடு என்று செப்புகின்றாள், தலைவியின் சொல்லுக்கு அழகூட்டுவது போன்று தோழி.

இதனைப் புலவர் வாயால் கேட்போம். ஏனெனில் நாம் எத்தனை எடுத்தியம்பினும் இனிக்காது. நகலாகத்தான் தோன்றும் இதோ அசலைக் காண்போம். நயம் பயப்போம்.

> அள்ளல் பழனத்து அரக்காம்பல் வாய்
> அவிழ
> வெள்ளம்தீப் பட்ட தெனவெரீஇப்-
> புள்ளினம்தன்
> கைச்சிறகால் பார்ப்பொடுக்கும்
> கவ்வை உடைத்தரோ
> நச்சிலைவேல் கைக்கோதை நாடு.

பாண்டிய அரசருக்கும். பகைவர்களுக்கும் போர் நடக்கிறது. பகைவர்களின் பிணங்கள் குவிந்தன. வேல்கள் மழுங்கின. குதிரைகள் வெட்டுண்டு இறந்தன. களிறுகள் மலையென உயிரிழந்து கிடந்தன.

தமிழ் மணக்கும் பாண்டியனின் களிறு ஒன்று பகை மன்னன் மார்பினிலே மருப்பால் குத்தி இழுக்கிறது. அதை நம் முத்தொள்ளாயிரப்புலவர் நமக்குப் பலப்பல வெற்றி எண்ணங்களை உருவாக்கிக் காட்டுகின்றார்.

அக்களிறு தன் கொம்பை எழுத்தாணியாக்கி, பகைவர்தம் மார்பை ஓலையாக்கி, பரந்துகிடக்கும் இவ்வுலகம் முழுவதும் சங்கம் கண்ட எம் பாண்டியனுக்கே உரிய எங்கள் தமிழகமாகும் என்று எழுதுவதாகக் காட்டும் அவ்வினிய காட்சி, மறவாத, மனதைவிட்டு நீங்காத, தமிழ்மறவர் பெருமைக்குரிய ஒரு சிறந்த காட்சியாகும்.

இதோ அஃது :

> மருப்பூசி யாக மறங்கனல்வேல்
> பின்னர்
> உருத்தகு மார்போலை யாகத்-
> திருத்தக்க
> வையகம் எல்லா மெமதென்
> றெழுதுமே
> மெய்யிலைவேல் மாறன் களிறு.






பெரியாவுடையார் கோவில்




இருப்பன் கோவில்

# பழநி மலை







திரு. பி. பச்சையப்ப கவுண்டர்

வேலாயுதத்தொடு தண்டேந்திச் சந்ததம் மேற்றிசையின்
பாலாய நோக்கத்துடனே நிற்கின்ற பழனிவெற்போன்
ஆலாலம் உண்டவன்சேயோ உமைகைக் கழகிய தோ
மாலானவன் புகழ் தேவோ மனித வடிவினனே.

— மகான் வண்ணச்சரபம் அருள்மிகு தண்டபாணி அடிகள்.

**கொ**ங்கு வேளிர்களால் ஆட்சி செய்யப் பெற்ற கொங்கு இருபத்துநான்கு நாடுகளுள் ஒன்று வையாபுரி நாடு. இந் நாட்டிற்குத் திருவாவினன்குடி நாடு என்ற பெயரும் உண்டு. இந்நாட்டின் தலைநகர மாகப் பழங்காலந்தொட்டுப் பழநியம்பதி திகழ்ந்து வந்துள்ளது. இந்நாடு கொங்கு வேளிர்களாலும், சேர மன்னர்களாலும் ஆட்சி செலுத்தப்பெற்றது. பிற்காலத்தில் குறுநில மன்னர்களின் ஆட்சிக்கு உட்பட்டி ருந்தது. கொங்கு வைகாவூர் நாட்டுப் பழம்பதியாகிய பழநி காலவரையறைக்குட் படாத பழமையும் பெருமையும் உடையது. தமிழ் இலக்கியங்களில் "சித்தன் வாழ்வு" எனச் சிறப்பிக்கப்பெற்ற இத்தலம், போகர் முதலான சித்தர்களின் அருள் விளையாடல் கள் நிகழ்ந்த இடமாகும்.

உமாதேவியாரும் சிவபெருமானும் முருகனை 'ஞானப்பழம் நீ' என அழைத் தமை காரணமாக இக்குன்றினுக்கும் இப் பதிக்கும் பழம் நீ எனப் பெயர் வழங்கப் பெற்றுப் பின் அச்சொல் மருவிப் பழநி என வழங்கலாயிற்று எனப் பழநித் தலபுராணம் கூறும். அப்பாடல் பின் வருமாறு.

"கூறுடையாளுங் குன்ருக் குணப்பெருங்குன்று ஞானப்
பேருடைப் பழநீயென்னப் பெயரது மருவி யெங்கள்
ஆறுமா முகவன் வைகும் நகரமும் அன்றுதொட்டு
வீறுதொல்பழ நீயென்றே விளம்பின உலக மூன்றும்"

மற்றொன்று பழனங்கள் (வயல்கள்) சூழ்ந்த இடம் பழனி என வழங்கலாயிற்று என்றும் கூறுவர்.

சங்க காலத்தில் திருவாவினன்குடி, பொதினி என்ற பெயர்கள் வழங்கி வரலாயின. திருவாவினன்குடி என்ற பெயர் இன்றும் வழங்கிவருவது. படை வீடுகளும் மூன்ருவதாகத் திகழ்வதாகும். திரு+ஆ+இனன் + கு + டி, திரு—இலக்குமி, ஆ—காமதேனு, இனன் — சூரியன், கு — பூமி தேவி, டி—அக்கினி என்ற தெய்வங்கள் பழநி முருகனை நோக்கித் தவம் செய்ததால் திருவாவினன்குடி எனப் பெயர் பெற்றது என்று புராண வரலாறு கூறும். வேளாவிக் கோப்பெரும் பேகன், மயிலுக்குப் போர்வை போர்த்த வள்ளல். அவன் ஆட்சி செலுத்திய பகுதியாதலால் ஆவினன்குடி என வழங்கலாயிற்று என்றும் கூறுவர். பொதினி, திருவாவினன்குடி, பழநி, பழனுபுரி, பழநியம்பதி, சிவகிரி என்ற பெயர்கள் இத்தலத்திற்கு வழங்கி வரப்பெற்றன.

இத்திருமலையின் மீது, போகரின் கருணையால் உருவமைக்கப்பெற்றதே ஞான தண்டாயுதபாணியின் அருள் திருமேனி ஆகும். போகசித்தர் திருமேனி அமைக்கப் பெற்றதால் மலைக்கோயிலின் காலம் வரையறைக்குட்படாததாக உள்ளது. முருகன் கோயில் கொண்டருளும் திருக்கோயில், சேர மன்னரால் அமைக்கப்பெற்றது என்பது சரித்திர உண்மையாக உள்ளது. இதனை

"சேரர் கோன் கட்டிவைத்த சீராலயம் வெளியில்
நேரிலகு மண்டபமும் நீள்சுற்று மாமதிலும்"

என்று இப்பதியை ஆட்சி செலுத்திய குறுநில மன்னர், விசயகிரித் துரையவர்கள் கூறிய சமயமாலைப் பாடலும்,

"சிவகிரிக் கட்புவனம் உய்யச் சேரர் கோன் புரிதருபச் சிமத்துவார
நவமணிப்பொன் சினகரத்து ஞான கருணைநிதியாய் நவைதீர் அன்பர்
தவவருச்சித்து உபசரிக்கும் சமயங்கள் தொறும்பல சுந்தர சொரூபம்
உவகை முற்றக்காட்டி யிருளோட்டி யொளிர்செழுஞ் சுடரைஉள்ளி
வாழ்வோம்''

என்று மாம்பழக் கவிச்சிங்க நாவலர் பாடலும் இதுபற்றிக் கூறுவதாகும். மலைக் கோயிலிற் சேர மன்னர் உருவம் பொறிக்கப்பெற்ற சிற்பங்களும் அமைந்துள்ளன. முருகப்பெருமானைப் பற்றிக் கூறும் மெய்க்கீர்த்திகளும் இம்முறையை விளக்கிக் கூறுவனவாகும்.

முருகப்பெருமான், இத்தலத்தில் "ஆகமவேதப் பொதுஞான தேசிகனை" நின்ற கோலத்துடன் ஞான தண்டாயுத பாணியாகக் காட்சி அளிக்கிருர். இந்தக் கோலத்தை,

"அயில் வேற்படையும் திருத்தண்டும்
அகலத்தொடு திண்கையிற் ருங்கி
அங்கை மலரொன் றிடப்பாகத்து
அவிருங்கடி மீதமைதர வைத்து
எயில்வேவுற நக்கவர் மகவென்று
யாரும் அறியும்படி வெண்ணீற்று
இயக்கம் காட்டிக் கண்டிகையும்
ஏற்றவயின் தோறினி தணிந்து
கயிலைக்கிரியின் நிரசிதம் போல
கவின் கோவணம் கீளொடு தரித்துக்
கழல்தாட் (கு) அருட்பாதுகை சாத்திக்
கனிவாய் முறுவலொடு நின்ருய்''

என்று மகான் வண்ணச்சரபம் தண்டபாணி அடிகள் போற்றி செய்துள்ளார். "பழனி மலைமேல் நின்ற சுப்பிரமணியா அமரர் பெருமானே" என அருணகிரிநாத சுவாமிகள் அருள்வாக்கு அருளச் செய்துள்ளது சிந்திக்கற்பாலது. இந்தக் கலியுக வரதனை கிய பழனியாண்டவரை வழிபடுபவர் எல்லா நலன்களும் பெறுவர் என்பது மிக மிக உண்மையாகும். இப்பெருமானை வழி படு முறைமையை

"தருமிரவி உதயமது கண்டு வைகாபுரி
தனைக்கண்டு சுத்திகண்டு
சண்முகப் புனல்கண்டு நியமாதி கண்டுபின்
சரவணப் பொய்கையாடி
அருள்பெருகு மாவினன்குடி கண்டு கைலாசர்
அம்மை பெரியம்மையைக் கண்டு
அம்பொன்மலை கண்டதி லிடும்பர் சந்நிதிகண்டு
அநேக கண்காட்சி கண்டு
கருணைகண்டருள் வள்ளி தெய்வயானையைக் கண்டு
களிகண்டிருக்கு முன்றன்
கமல பாதங்கண்ட பேரொருக்காலு மக்
காலனைக் கண்டிடுவரோ ?
பரிதிவலி கண்டவன் தனைவென்ற தம்பிதன்
பராக் ரமங்கண்ட துரையே
பழமறை சொலியசீல தொழுமவர்கள் அனுகூல
பழநிமலை வடிவேலனே"

என்று "வடிவேலர் சந்நிதிமுறை" கூறும். இந்தக் கண்கண்ட தெய்வமாகிய பழநியாண்டவரை வழிபட்டு நாம் எல்லா நலனும் பெற்று வாழ்வோமாக.



# அருள்மிகு மகுடேஸ்வரர் வீரநாராயணப் பெருமாள் திருக்கோயில்

## கொடுமுடி

ஈரோடு வட்டம் - கோவை மாவட்டம்



கொடுமுடி புகைவண்டி நிலையத்திற்கு அண்மையில் வனப்பு மிக்க காவிரிக் கரையின் ஓரத்தில் இத்திருத்தலம் அமைந்துள்ளது. தற்பொழுது அன்பர்களின் உதவியால் திருப்பணி நடந்துகொண்டு வருகிறது.

Government of India No. 375 F. No. 176/29/73–IT (AI): Section 80 G – ன் படி Income Tax விலக்கு அளிக்கப்பட்டுள்ளது. அதனால் இதனைக் கண்ணுறும் அன்பர்கள் அனைவரும் பொருள் உதவி செய்யுமாறு கேட்டுக் கொள்கிறோம்.

## கோயில் விளக்கம்

| | | |
|---|---|---|
| கோயில் | : | திருப்பாண்டிக் கொடுமுடி |
| இடம் | : | கொடுமுடி |
| மூலவர் | : | ஸ்ரீ மகுடலிங்கர் |
| தேவியார் | : | ஸ்ரீவடிவுடை நாயகி |
| திருமால் | : | ஸ்ரீ வீரநாராயணப் பெருமாள் |
| தேவியார் | : | திருமங்கை நாச்சியார் — மகாலட்சுமி |
| தீர்த்தம் | : | காவிரி முதலியன |
| மரம் | : | வன்னிமரம் (பிரமன்) |
| சுற்றளவு | : | கிழமேல் அடி 640, தென்வடல் அடி 434 |
| முக்கிய ஸ்தல சிறப்பு | : | மும்மூர்த்தி ஸ்தலம் |

உறுப்பினர்கள் :

K. P. தன்ஞசி

K. M. சண்முகம்

K. S. பழனியப்பன்



K. R. பாலசுப்ரமண்யம்
தலைவர்

M. ராமசாமி
செயலாளர் & பொருளாளர்

# பழனி ஆண்டவன் திருக்கோயில் குட நீராட்டு விழா





திரு. அ. உத்தண்டராமன்

''காவினன் குடிலுறு காமர் பொன்னகர்
மேவினன் குடிவர வினியச் சூர்முதல்
பூவினன் குடிலேயம் பொருட்டு மாலுற
ஆவினன் குடிவரும் அமலற் போற்றுவாம்''

பழனி மலை அடிவாரத்தில் உள்ளது திருவாவினன்குடி என்ற முருகன் திருப்பதிகள் ஆறில் மூன்றாவதாக நக்கீரரால் பாடப் பெற்ற திருக்கோயில். திருச்சீரலைவாய் என்ற திருச்செந்தூர் ஒன்றே படைவீடு. திருப்பரங்குன்றம் முருகன் திருப்பதிகளுள் முதலாவதாக உள்ளது. குறிஞ்சி நிலத்தில் அமைந்தது. செந்தில் நெய்தல் நிலத்தில் உள்ளது. திருஏரகம் மருத நிலத்தது. குன்றுதோறாடல் என்பது குன்றுகளில் எழுந்தருளி அடியாரைக் காத்தருளும் குறிஞ்சிக் கிழவன் முருகன் திருப்பதிகளைக் குறிக்கும். திருஆவினன்குடி முல்லை நிலத்தது. பழமுதிர்ச்சோலை இப்போது அழகர் மலை என வழங்கும் மலையில் உள்ளது. முருகன் என்ற சொல்லுக்கு அழகன் என்றும் பொருள் உண்டு. இளமை, மணம், இனிமை, மகிழ்ச்சி, தெய்வத் தன்மை என்னும் பொருள்களும் உள்ளன.

முருகன் குறிஞ்சிக் கடவுள் என்பதைத் தொல்காப்பியர் 'சேயோன் மேயமைவரை உலகமும்' என்று கூறியுள்ளார். சிவபெருமான் செம்மேனியுடையவன். அவனின்றும் வேறல்லாத முருகனும் செந்நிறமுடையவன். 'பவழத்தன்ன மேனி' என்பது சங்கப் புலவர் பெருந்தேவனார் வாக்கு. முருகன் தேவாதி தேவன், தேவருக்கும் அருள் செய்பவன். மனிதருக்கும் அருளும் பேரருளாளன். தேவர்கள் மேலிருந்து இறங்கி வந்து வழிபடவும் மனிதர்கள் மேலே ஏறி வணங்கி வழிபடவும் மலைமேல் விரும்பித் தங்கிக் கோயில் கொண்டு எழுந்தருளிக் காட்சியளிக்கிறான் போலும்.

'ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்' என்பது திருமந்திரம். 'ஆண்டவன் ஒருவனே, அவனை அடையும் நெறியும் ஒன்றே' என்பது எல்லாச் சமயங்களும் ஒப்புக்கொண்டுள்ள சமரச சன்மார்க்க அடிப்படைப் பொதுக் கொள்கை. ஆயினும் உலகம் பலவிதம். அதற்கேற்ப, ஒருமையைப் பன்மையாக இயக்குவது இயற்கை. இறைவனுடைய பல திருப் பெயர்களுள் முருகன் என்பது மிகமிகத் தொன்மை வாய்ந்

தது. 'சிவபெருமானும் முருகனும் வேறல்லர் ஒருவரே'. அங்கிங்கெனுதபடி எங்கும் பிரகாசமாய் விளங்கும் இறைவன் நான்கு திசைகளிலும் மேலும் கீழும் என்னும் ஆறு எல்லைகளால் குறிக்கப் பெறும் எல்லா இடங்களிலும் வியாபித்து இருக்கின்ருன் என்பதை முருகப் பெருமானின் ஆறு முகங்களும் புலப்படுத்துகின்றன. தத்புருடம், அகோரம், வாமம், சத்யோசாதம் என்பன நான்கு திக்குகளை நோக்கியும் ஈசான்யம் மேல் நோக்கியும் அதோ முகம் கீழ்நோக்கியும் உள்ளன. முருகனுக்குக் 'குகன்' என்றும் பெயர் உண்டு. எல்லோருடைய இருதயக் குகையினும் இருந்து அருள் செய்பவனும் அவனே என்பது குறிப்பு.

முருகா, குமரா, சரவணபவ என்னும் நாமங்களில் தமிழ் எழுத்துக்களிலுள்ள வல்லின, மெல்லின, இடையின எழுத்துக்கள் அமைந்துள்ளன. முருக மந்திரங்கள் குமராய நம, சரவணபவாய என்னும் ஆறெழுத்து மந்திரங்கள் என்பர் ஆன்ருேர். குமாரன் என்ற பெயரே முருகன் பேரழகைக் குறிக்கும். 'மாரனைக் குற்சிதம் செய்யும் அழகுடையான்' என்று பொருள் கூறுவர். 'சரவணபவ' என்னும் மந்திரத்தில் உள்ள 'சரம்' என்பது புனித நீரையும் 'வநம்' என்பது இருப்பிடம் என்னும் பொருளையும் 'பவ' என்னும் பதம் சிவன் என்னும் பொருளையும் தரும். சரவண என்பது நாராயணனையும் பவன் சிவனையும் குறிக்கும். சரவணபவ என்பது சிவம் சத்தியாகிய இரு இறைத் தத்துவங்களையும் குறிக்கும். ச (மங்களம்) ர (ஒளி) வ (அமைதி) ந (போர்) இந்நான்குடன் பவன் (தோன்றியவன்) என்றும் பொருள் கூறுவர். சுப்பிரமணியன் என்ற சொல்லுக்கு சு (தூய இன்பம்) ப்ரமம் (பெரிய பொருள்) ந்யம் (ஒளி) என்றும் பிரமமாகிய சிவனும் நய என்னும் திருமாலும் இணைந்த பரம்பொருள் என்றும் பொருள் காண்பர்.

வள்ளி தெய்வயானை வேல் என்பன முறையே இச்சா சக்தி, கிரியா சக்தி, ஞான சக்தியைக் குறிக்கும். நெருப்பில் சூடு, ஒளி, சுடுதல் ஆகிய பல சக்திகள் இருப்பது போல் முருகனுடைய சக்தியும் மூவகைப்படும். இச்சா சக்தி என்பது ஆன்மாக்களுக்கு முக்தியளிக்க விரும்புதல். ஞான சக்தி அவ்வான்மாக்களின் பாசத்தைப் போக்கும் முறைமையினை அறிவித்தல். கிரியாசக்தி அவ்வான்மாக்களின் கர்மங்களைப் பக்குவா பக்குவமறிந்து கூட்டுவித்தல். வள்ளியும் தெய்வயானையும் இருபுறமும் விலகி நிற்க முருகன் ஞான வடிவான வேலைத் தன் கையில் தாங்கியிருப்பது ஞானத்தின் சிறப்பைக் காட்டுவதாக அமைந்துள்ளது.

சிவபெருமானுக்கு அவனுக்கு வேறல்லாத முருகப் பெருமான் குருவாயிருந்து உபதேசம் செய்த வரலாறு குருவருளின் சிறப்பைக் காட்டுவதற்கேயாம்.

'தனக்குத் தானே மகனுகிய தத்துவன்
தனக்குத் தானே ஒருதா வரும் குருவுமாய்த்
தனக்குத் தானே யருள் தத்துவங் கேட்டலும்
தனக்குத் தானே தான் நிகரானுன் தழலங்கி நின்ருடினன்'

என்பது தணிகைப் புராணப் பாடல்.

முருகன் கலியுக வரதன். கண் கண்ட தெய்வம். செந்தமிழ்க் கடவுள். தமிழில் வைதாரையும் வாழவைப்போன். பாலரும், இடைப் பருவத்தினரும், கிழப் பருவத்தினரும் மக்கள் எல்லோரும் போற்றி வழிபடும் தனிப் பெருங் கடவுள். தொல்காப்பியம், திருமுருகாற்றுப் படை முதலிய சங்க நூல்கள், காப்பியங்கள் திருமுறைகளில் எல்லாம் பாராட்டப் பெற்ற முழு முதற் கடவுள்.

உலகிலுள்ள உயிர்கள் ஓரறிவு முதல் ஆறறிவு படைத்தவை. உயிர்களில் சிறந்தது ஆறறிவுடைய மனிதர். மனிதருள் சிறந்தோர் ஆத்மஞானிகள். உலகிலுள்ள பொருள்களை எல்லாம் ஆராய்ந்து அவைகளைப் படைத்த சக்தி ஒன்றிருக்க வேண்டும் என்றும் அது எங்கும் வியாபித்துள்ளது, எல்லாவற்றையும் இயக்குவது என்றும் அச்சக்தியே கடவுள் என்றும் கண்

டனர் ஞானிகள். மனம், மொழி, மெய் களுக்கு அப்பாற்பட்ட பரம்பொருளை வழி படக் கோவில்களும், தங்களுக்குக் காட்சி யளித்த உருவங்களும் அமைத்து வைத் தனர். கண்ணாற் காணும் காட்சியையே மனத்தால் நினைக்க முடியும்.

கோ (தலைவன், கடவுள்) இல் (இருப் பிடம்). கடவுள் எல்லாம் வல்லவர். கருணை வடிவினர். எங்கும் நிறைந்தவர். வேண் டுவார் வேண்டுவதே ஈவார். எல்லாச் சம யத்தினருக்கும் கோயில்கள் உண்டு. உருவ மின்றி வழிபடுவோர் ஒரு சாரார். அவர் களும் தங்கள் கோவிலில் இருந்து தம் மனத்துள் இறைவனை நினைந்தே வழிபடு கின்றனர். ஒரு பெருந் தலைவரோ, அர சரோ வரும்போது அவரிடம் அன்பும் மதிப்பும் கொண்டு ஊர்தி அலங்காரம், வீதி அலங்காரம், வாத்திய முழக்கம் முதலி யவைகளால் நம் அன்பின் நிகழ்ச்சியைக் காட்டுகின்றோம். ஒரு மனிதனிடமே இத் துணை அன்பு நிகழுமானால் தனிப் பெருங் கருணையே உருவாகிய கடவுளிடத்து நம் அன்பு எவ்வளவு அதிகரித்து திகழும் என் பதைக் கூறவும் வேண்டுமோ? கடவுளுக்கு இக் கோவில்களாலும் பூசனை விழாக்க ளாலும் யாதொரு பயனும் இல்லை. இக் கோயில்களை நம்பொருட்டே செய்து கொண் டோம். பசுவின் பால் மடி வழித் தோன் றுவது போலவும் மின்சக்தி மின்சார நிலைய வழிப் பயன் படுவது போலவும் இறைவன் உறைவிடங்களாக அமைக்கப் பெற்ற திருக் கோயில்களில் வழிபாடு செய்து மன அமைதியும் இறையருளும் பெறுகின்றோம். கோயில்கள் அமைக்கவும் அக்கோயில் களில் இறைத் தத்துவங்களை விளக்கும் திரு உருவங்கள் அமைக்கவும் ஆகம நூல்களில் விளக்கமான குறிப்புக்கள் உள்ளன.

பழனித் தலத்தில் மலையடிவாரத்தில் திருஆவினன்குடி என்ற திருக்கோயிலும் மலைமேல் பழனியாண்டவர் தண்டாயுத பாணி திருக்கோயிலும் உள்ளன. திரு (இலக்குமி) ஆ (காமதேனு) இனன் (சூரியன்) பூசித்ததால் திருவாவினன்குடி ஆயிற்று. ஆவியர் என்னும் குலத்தினர் வாழ்ந்த பதியாதலால் ஆவினன்குடி என்ற பெயர் பெற்றது என்பர். பழனி என்பது பழம் நீ என்பதன் திரிபு என்பர். நாரதர் சிவபெருமானுக்களித்த பழத்தை விநாயகர் முருகர் இருவரில் யார் உலகை வலம் வரு கின்றனரோ அவருக்குக் கொடுப்பதாகக் கூற, விநாயகர் எல்லா உலகையும் தன்னுள் கொண்ட சிவபிரானை வலம் வந்து பெற்றுக் கொண்டதால் முருகன் சினந்து பழனிமலை யில் வந்து நின்றான். சிவனும் உமாதேவி யும் இங்கு எழுந்தருளி, 'பழம் நீயாக இருக்க உனக்கு வேறு பழம் ஏன்' என்று போற்றிப் பாராட்டினர். ஆதலால் பழனி என்ற பெயர் உண்டாயிற்று என்பர், எல்லா உலகமும் இறைவனுள் அடக்கம். அவன் எங்கும் வியாபகமாய் உள்ளான் என்ற தத்துவத்தை உணர்த்துவதே இந்த வரலாறு.

'கூறுடை யாளுங் குன்றுக் குணம்
பெருங்குன்று ஞானம்
பேறுடைப் பழநீ என்னப் பெயரது
மருவி எங்கள்
ஆறுமா முகவன் வைகும் நகரமும்
அன்று தொட்டு
வீறு தொல்பழநீ என்றே விளம்பின
உலகமூன்றும்'

பழனிமலையின் பழைய பெயர் பொதினி. அதுவே பழனியாக மாறியது என்றும் கூறுவர். முருகன் சித்த வடிவில் உறை வதால் பழனிக்குச் சித்தன் வாழ்வு என்ற பெயரும், ஆறுமுகச் சிவம் எழுந்தருளிய பதியாதலால் சிவகிரி என்ற பெயரும் உண்டு.

முருகனைக் குறித்த விரதங்களில், கிருத்திகை நட்சத்திரம், சஷ்டி திதி, செவ் வாய், வெள்ளிக் கிழமைகள் சிறந்த விரத நாட்கள். விசாகம் முருகன் தோன்றிய நட்சத்திரம். சஷ்டியில் (சஷ்டி விரதம்) இருந்தால் அகப்பையில் (வயிற்றில், பிள்ளை) வரும் என்பது பழமொழி. முருகன் வலது கைகளில் வச்சிரம், சூம்பு, சக்தி, சக்கரம், பாசம், ஆகிய ஆயுதங்களும் அபயமுத்திரை யும் இடது கைகளில் சக்தி வில், கேடயம், கொடி, அங்குசம் ஆகிய ஆயுதங்களும் வரத

முத்திரையும் உள்ளன. இவை யாவும் அன்பர்களைக் காக்கும் பொருட்டு அவன் தாங்கியுள்ளவை.

ஆகமங்களில் கூறப்பட்டுள்ள முறைப்படி மந்திரபூர்வமாக அமைக்கப் பெற்ற மூர்த்திகளில் சிறப்பாக இருந்து அருள் புரியும் இடமே கோயில். ஒரு இடத்தில் புதிதாகக் கோயில் கட்டி மூர்த்திகள் அமைத்துக் குடநீராட்டுச் செய்யப்படுவதை ஆவர்த்தம் என்பர். ஏற்கனவே இருந்த கோயில்கள் சில காரணங்களால் சிதைவுற்றுப் பின்பு புதிதாக நிர்மாணிக்கப்பட்டுக் குட நீராட்டுச் செய்வதை அனுவர்த்தம் என்பர். கோயில்களில் சில பகுதிகள் பழுதுபட்டு அப்பகுதிகளைப் புதுப்பித்துத் திருப்பணிகள் செய்து மூல மூர்த்திகளின் அட்டபந்தனம் புதுப்பிக்கப் பெறுதற் பொருட்டு மூர்த்திகளை பாலாலயம் செய்து திருப்பணிகள் முற்றுப் பெற்ற பின் செய்யப் பெறும் குட நீராட்டு விழா புனராவர்த்தம் எனப்படும். 1959-ம் ஆண்டு பழனித் திருக்கோயில் குடநீராட்டுச் சிறந்த முறையில் நடை பெற்றது.

குட நீராட்டு விழாவினைப் பெருஞ்சாந்தி என்று மயிலைத் தேவாரத்தில் திருஞான சம்பந்தர் குறிப்பிட்டுள்ளார். சாதாரணமாக 5 குண்டங்கள், 9 குண்டங்கள் அமைத்துக் குட நீராட்டுச் செய்வது மரபு. 1959-ல் பழனியில் 33 குண்டங்கள் அமைத்து வெகு சிறப்பாகக் குட நீராட்டுச் செய்யப் பெற்றது. அதைக் காண இலங்கையிலிருந்தும் பிற இடங்களிலிருந்தும் அன்பர்கள் வந்திருந்தனர். அதன் பின்னர் தூத்துக்குடி, சேலம், விழுப்புரம் அருகில் உள்ள திருப்பனையபுரம் முதலிய இடங்களிலும் 33 குண்டங்கள் அமைத்துக் குட நீராட்டுச் செய்தனர். 'இரு நிலனாய்த் தீயாகி என்று தொடங்கும் தேவாரத்தில் அப்பர் பெருமான் இறைவனை அட்ட மூர்த்தியாகக் காண்கிறார். நிலம், நீர், நெருப்பு, காற்று, வான், ஞாயிறு, திங்கள், உயிர் என்ற எண் வகைப் பொருள்களிலும் கலந்து விளங்கும் ஈசன் எட்டுக் குண்டங்களில் விளங்குகின்றான். ஒவ்வொன்றுக்கும் நான்கு ஆவரணங்களாக மொத்தம் 32 குண்டங்கள் அமைப்பது தனிச் சிறப்பு. எம் பெருமானுடைய எண் குணங்களும் மூல மந்திரங்களும் பிரதான குடமாகிய 33 வது குண்டத்தில் விளங்கும். இம் முறையில் முதன் முதலாக 33 குண்டங்களுடன் 1959-ல் பழனியில் குட நீராட்டு விழா நடை பெற்றது.

பொதுவாக 12 ஆண்டுகளுக்கொரு முறை அட்டபந்தனம் புதுப்பித்துக் குட நீராட்டுச் செய்தல் உத்தமம். அநேக கோயில்களில் பல ஆண்டுகளாகக் குட நீராட்டுச் செய்யப் படவில்லை. பழனியில் 2–9–73ல் குட நீராட்டு விழா நடை பெற இருக்கிறது. இவ் விழாவினைக் கண்டு களிக்கும் பேறு பேற்றோர் வாழ்வில் எல்லா நலன்களும் பெற்றுப் பிறவிப் பயனையும் அடைவர்.

"மண்ணினிற் பிறந்தார் பெறும் பயன் மதிசூடும்
அண்ணலார் அடியார் தமை அமுது செய்வித்தல்
கண்ணினால் அவர் நல்விழாப் பொலிவு கண்டார்தல்"

என்பது பெரிய புராணம்.

'காசி யின் மீறிய பழனபுரி'
'அதிசயம் அநேகம் உற்ற பழனிமலை'
'படிக்கின்றிலை பழனித் திருநாமம்'
'உனது பழனிமலை என்னும் ஊரைச் சேவித்தறியேனே'

என்பன அருணகிரிநாதர் அருள் வாக்கு.

வாழ்க பழனி! வாழ்க சீர் அடியாரெல்லாம்!!





தங்கக்குதிரை வாகனம்



# பழனி என்ற திருத்தலம்







**திரு. நா. மகாலிங்கம்**

மூன்று தோறுடும் குமரக் கடவுள் உவந்தினிதிருக்கும் சிறந்த தலங்களில் ஒன்று பழனியம்பதி. நமது நாட்டின் இலக்கியங்களிலும் வரலாறுகளிலும் இத்திருத் தலம் தனிப்புகழ்பெற்று விளங்கி வருகின்றது. இதனைப்பற்றி நான் அறிந்த சில விஷயங்களை இங்குச்சொல்லக்கருதுகிறேன்.

ஆதிகாலத்தில் பழனி கொங்கு நாட்டின் பகுதியாக இருந்தது. கொங்கு நாட்டின் எல்லைகளைச் சொல்லும் ஒரு பழம் பாடல் மேற்கே வெள்ளியங்கிரியும், கிழக்கே குளித்தலையும், வடக்கே தலைமலையும், தெற்கே பழனியும் கொங்கு நாட்டின் எல்லைகள் எனக் குறிப்பிடுகின்றது.

வடக்குத் தலைமலையாம் வைகாவூர் தெற்கு
குடக்குவெள் ளிப்பொருப்புக் குன்று – கிழக்கு
கழித்தண் டலைசூழ்ல் காவிரிசூழ் நாடா
குழித்தண் டலையளவே கொங்கு
— (பழம்பாடல்)

இப்பாடல் தெற்கு எல்லையான பழனியை வைகாவூர் என்று சுட்டிக் காட்டுகின்றது.

கொங்கு நாட்டினுடைய சரித்திரப் பொக்கிஷமான கொங்கு மண்டல சதகம் இக்கருத்தை மேலும் வலியுறுத்துகின்றது. 'மதிற்கரை கீழ்த்திசை தெற்குப் பழனி' என்று தொடங்குகிறது அப்பாடல். மற்ற எல்லைகளைப்பற்றி வெவ்வேறு பாடல்களில் மாற்றிக் கூறினாலும் தெற்கு எல்லை பழனி என்பதை எல்லாப் பாடல்களும் ஒரே மாதிரி கூறுகின்றன. இப்பொழுது இருக்கக்கூடிய பழனி, திண்டுக்கல் தாலூகாக்களும் அவற்றிலுள்ள மலைச்சாரல்களும் கொங்கு நாட்டின் பகுதிகளாகவே இருந்து வந்திருக்கின்றன.

சரித்திர காலத்தில் கொங்கு நாடு இருபத்து நான்கு உள்நாடுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. ஆறைநாடு, பூந்துறை நாடு, காவடிக்க நாடு போல 24 உள்நாடுகள் இருந்தன. அவற்றில் வையாபுரி நாடு என்று ஒரு பிரிவு கூறப்பட்டுள்ளது. அது 'வையாவி புரி நாடு' என்பதுதான் மாறிப் பிற்காலத்தில் வையாபுரி நாடு என்று வழங்கியதாகச் சொல்கிறார்கள்.

சங்ககால வள்ளல்கள் ஏழு பேரில் ஒருவன் பேகன். மயிலுக்குப் போர்வை வழங்கிய இவனை 'வையாவிக் கோப்பெரும் பேகன்' என்று புறநானூறும் கூறும். இவன் ஆட்சி புரிந்த பகுதி பழனியும்

அதனைச் சார்ந்த பகுதிகளும் என்று சொல்லப்படுகிறது. அதற்கு ஆதாரமாக அறிஞர்கள் 'திரு ஆவி நன்குடி' என்ற பெயரைச் சுட்டிக் காட்டுகிறார்கள். பேகனது குடிப்பெயர் ஆவியர் குடி. அவன் ஆண்ட ஊர் அதனால் 'திரு ஆவிநன்குடி' என்று பெயர் பெற்றதாகக் கூறுவர். அவனது பெயர் 'வையாவி' என்று தொடங்குகிறது. அதன் சிதைந்த அடையாளமாக 'வையாபுரிக் குளம்' (வையாவிக்குளம்) விளங்குவதாகவும் அறிகின்றோம்.

பண்டைக் காலத்தில் பழனிக்குப் 'பொதினி' என்ற பெயர் இருந்ததாகவும் கேள்விப்படுகிறோம் சில ஆராய்ச்சியாளர்கள் வேறு காரணமும் கூறுகின்றனர். பழனம் என்றால் வயல். வயல்களாகிய பழனங்கள் சூழ்ந்த இடம் பழனி என மருவியது என்றும் கூறுவர்.

எவ்வாறாயினும் நமது புராணங்களில் வேறு விதமாக இதன் வரலாறு பேசப்படுகிறது. சிவபெருமான் கையிலிருந்த பழத்தைப் பெற விநாயகப் பெருமானும் முருகவேளும் விரும்பினர். யார் உலகை விரைந்து வலம் வந்து முதலில் வருகிறார்களோ அவர்களுக்கே பழம் என்றார் இறைவன். விநாயகர் தாய் தந்தையரை வலம் வந்து கனியைப் பெற்றார். முருகப் பெருமான் மயில்மீது ஏறி சுற்றித் திரும்பும் போது பழம் அவருக்குக் கிடைக்கவில்லை. சினம் கொண்ட முருகனைச் சமாதானப் படுத்தி இக்குன்றிலிருத்தி 'பழம் நீ' என ஆசி கூற இப் பெயர் வந்தது என்பர். ஆவினன்குடி என்பதற்கும் வேறு விளக்கங்களைப் புராணங்கள் கூறும். இந்த வித்தியாசங்கள் புராணங்களுக்கும் சரித்திரங்களுக்கும் இடையே இருப்பதில் ஆச்சரியமில்லை.

இத்தலத்தில் இலங்கும் இறைவனை 'முருகன்' என அன்புடன் வழிபடுகிறோம். அழகு, ஒளி, இளமை, மணம், கடவுள் தன்மை அனைத்தும் கலந்த அழகிய சொல் 'முருகு' எனப்பட்டது. எல்லையற்ற அழகும், மாறா இளமையும், இன்ப நறுமணமும், கருணை மிக்க கடவுள் தன்மையும் கொண்ட முருகப் பெருமானுக்கு இந்தப் பெயர் அற்புத நலத்தோடு பொருந்தி இருக்கின்றது. தமிழ் மக்கள் விரும்பி வணங்கும் தமிழ்க் கடவுள் முருகன். எத்தனை எத்தனையோ இடங்களில் அருணகிரிநாதர் இதனை மிக்க ஆர்வத்துடன் பாடிப் பரவசம் அடைந்துள்ளார்.

'செந்தமிழ் சொல் மாலைக்கார'
தண்டமிழில் மிகுநேய — முருகேசா'
'முத்தமிழால் வைதாரையும் அங்கு
வாழ வைப்போன்'

என்றெல்லாம் உருகி உருகித் தமிழ்க் கடவுளை — திருப்பழனி முருகனை வணங்குகின்றார்.

'பல குன்றிலும் அமர்ந்த பெருமாள்' எனப்படும் வேலவன் பழனியில் ஒரு தனி அழகுடன் வீற்றிருக்கின்றான். காலம் தோறும் புகழ் மிக்கதாய் விளங்கிய பழனியில் இன்று மீண்டும் ஒரு கும்பாபிஷேகத் திருநாள் வருகின்றது. இந்த மங்கல நாளில் பண்டைப் பெருமைகளை நினைந்து — குறிஞ்சிக் கடவுள் குமரனை வாழ்த்தி வணங்கி நலம் பெறுவோமாக.

உருவாய் அருவாய் உளதாய் இலதாய்
மருவாய் மலராய் மணியாய் ஒளியாய்
கருவாய் உயிராய்க் கதியாய் விதியாய்க்
குருவாய் வருவாய் அருள்வாய் குகனே.

— கந்தரநுபூதி.



# ஆறுமுகச் செம்பொருள்





திரு. லெ. நாராயணன் செட்டியார்

## தமிழ் மக்கள் கோயில் வழிபாடு

தமிழ் மக்கள் தமது வழிபடு தெய்வங்கட்குக் கோயில்களைச் சமைத்து வழிபாட்டு முறைகளை நெறிப்பட வகுத்து வைத்திருந்தனர் என்பதைச் சங்க இலக்கியங்களும் பிற்கால இலக்கியங்களும் தெளிவுறக் காட்டுகின்றன. நெல்லொடு மலர் தூவி, நல்லன எல்லாப் பொருளும் இறைவனுக்குப் படைத்து வணங்கிய பெருமையும், சமய விழாக்களைப் பெருமையுடன் கொண்டாடிய தகைமையும் நமக்குப் புலனாகின்றன.

மறுமை வாழ்விற்கு மட்டுமில்லாமல், இவ்வுலக வாழ்விற்கும், இவ்வுலக வாழ்விற்கு வேண்டிய அன்பு, இன்பம், அருள் என்ற நிலைகளைக் குறைவறப் பெறுவதற்கும் இறைவன் மீது கொள்ளும் பற்றுத்துணை நிற்கும் என்பதை நமது முன்னோர் உணர்ந்தனர்.

உலகப் பொருள்களின் மீது கொண்டுள்ள பற்றினைப் போக்கிக் கொள்வதற்குப் பற்றற்ற பரம்பொருளைப் பற்றிக் கொள்க எனத் தெய்வநெறி பேசுகின்றது திருக்குறள்.

## முருகன் அருள்

குறிஞ்சி மக்கள் முருகனை வணங்கி வந்தமை முருக வணக்கத்தின் பழமையைக் காட்டுகின்றது. குறிஞ்சி நிலப் பெண்ணாகிய வள்ளியை முருகப் பெருமான் மணந்து கொண்ட நிகழ்ச்சி உலக மக்களின் மீது பெருமான் கொண்டுள்ள அன்பின் திறத்தைப் புலப்படுத்துகின்றது. அருள் வடிவான முருகன் ஆறுபடைவீடுகளில் நிலையாகத் தங்கித் தொலையாத துன்பக் கடலில் கிடந்து துன்புறும் மக்களுக்கு அருள் வழங்கி வருகிறான் என்பதைத் திருமுருகாற்றுப் படையில் பெரும் புலவர் நக்கீரர் சிறப்புறப் பாடுகின்றார். திருப்பரங்குன்றம், திருச்சீரலைவாய் [திருச்செந்தூர்], திருவாவினன்குடி, திருவேரகம் [சுவாமிமலை], குன்றுதோறாடல், பழமுதிர்சோலை ஆகிய ஆறு படை வீடுகளில் முருகன் எழுந்தருளியிருக்கும் பெற்றியையும் மக்கள் திருவிழாக் கொண்டாடும் சிறப்பினையும் திருமுருகாற்றுப்படை தெளிவுறக் காட்டுகின்றது.

## முருகப்பெருமான் அருள் நூல்கள்

முருகப்பெருமானை வணங்கும் பக்தி நெறி இடைக்காலத்தில் தழைத்துப் பெருகியது. முருகப் பெருமானின் கருணையில்

தோய்ந்து மகிழ்ந்த புலவர் பெருமக்கள் பலர் பற்பல அருள் நூல்களை இயற்றினர்.

திருமுருகாற்றுப்படை — நக்கீரர்

முருகன் பிள்ளைத்தமிழ்
— பற்பல புலவர் பாடியது

முத்துக் குமாரசாமி பிள்ளைத்தமிழ்
— குமரகுருபரர்

கந்தபுராணம் — கச்சியப்ப முனிவர்

திருப்புகழ் — அருணகிரியார்

முதலிய நூல்களை இயற்றினர். அருணகிரிப் பெருமான் முருகனருளை நன்கு உணர்ந்து பல்வகைச் சந்தங்கள் அமையத் திருப்புகழை யாத்தனர். முருகப்பெருமானது அருள் வரலாற்றினை முழுவதும் கச்சியப்ப முனிவர் தமது கந்தபுராணத்துள் பாடியுள்ளார். முருகனைப் பிள்ளைப் பிராயத்தினளைக் கற்பனை செய்து பாடப் பெற்ற நூல்கள் முருகன் பிள்ளைத் தமிழும், முத்துக்குமாரசாமி பிள்ளைத் தமிழும்.

முருகனை நினைந்து பரவிப்பாடி உய்வு பெற வசதியான துதிப்பாடல் நூல்களும் நிறையத் தோன்றின. கந்தர் அநுபூதி, கந்தர் அலங்காரம், கந்தர் சஷ்டிக் கவசம், கந்தர் கலிவெண்பா, கந்தர் அந்தாதி முதலியன இவ்வாறு தோன்றியவை. வீட்டில் யாரேனும் நோயுற்றிருந்தால் இந்நூல்களைக் கனிவுடன் பாடி முருகப் பெருமானை மனத்தில் நினைந்து திருநீற்றினைப் பூசினால் நோய் நீங்குவதைக் காண்கிறோம். முருகனால் அருள்பெற்ற அநுபூதிமான்கள் எழுதிய நூல்களாகையால் இவற்றிற்கு இத்தகைய சிறப்பு வாய்த்திருக்கிறது.

கடல்கடந்த நாடுகளில் சென்று குடியேறிய தமிழ்ப் பெருமக்கள் அங்கெல்லாம் முருகனுக்குக் கோயில் கட்டி வழிபட்டனர். செய்கோன், மலேசியா, சிங்கப்பூர், பர்மா, இலங்கை ஆகிய நாடுகளில் பற்பல ஊர்களில் தண்டபாணித் தெய்வத்திற்குக் கோயில்கள் கட்டி அந்நாட்டு மக்கட்கும் முருக பக்தியை உருவாக்கிய பெருமை நகரத்தார் பெருமக்களையே சாரும். ஒவ்வொரு ஊரிலும் முருகப்பெருமானின் ஒவ்வொரு விழாவினை அங்குச் சிறப்பாகக் கொண்டாடி வருகின்றனர்.

### காவடி

முருகன் கோயிலுக்கு மட்டுமே மக்கள் காவடி சுமந்து செல்லும் மரபு தனிச் சிறப்பு வாய்ந்தது. எண்ணற்ற மைல்களுக்கு அப்பாலிருந்து பற்பல வகைக் காவடிகளைச் சுமந்து கால் நடையாகவே முருகன் கோயிலுக்குக் கொண்டு சேர்ப்பது பழநி மலையின் கண்கொள்ளாக் காட்சி. சிறுவர்களும், பெண்களும், இளைஞரும், முதியவரும் இவ்வாறு காவடிகளைச் சுமந்து முருகனது வேலை நினைப்பது ஒன்றே சிந்தனையாக இருப்பதும், மலேசிய நாட்டில் மலாய்க்காரர்களும், சீனமக்களும் தண்டாயுதபாணி கோயிலுக்குக் காவடி சுமந்து செல்வதும் முருகப்பெருமானின் அருளாற்றலை நமக்குணர்த்தி மயிர்க்கூச்செறியச் செய்கின்றன. காவடியின் சிறப்பினைப் பாடும் நெறி பெருகிவளர்ந்து காவடிச்சிந்து என்ற புதிய இலக்கிய வகையே உருவாயிற்று.

### திருக்கோயில் திட்டங்கள்

திருக்கோயில்களைச் செம்மையுற நடாத்தும் திட்டங்களை நம் நாட்டுப் பழமன்னர்கள் நிறைவேற்றி வந்தனர். திருக்கோயில் வாரியங்கள் என்ற குழுக்கள் இப்பணியை மேற்கொண்டிருந்தன. திருக்கோயில்களைக் கண்காணிப்பதும், சொத்துக்களைக் காப்பதும், வருவாயைப் பெருக்குவதும், வழிபாட்டு முறைகளை வகுப்பதும், மன நலனை வளர்க்கும் பணியினையும் ஏனைய வசதிகளையும் உருவாக்குவதும் இவ்வாரியங்களின் கடமைகளாக இருந்தன. அதே போல பழநி போன்ற பெரிய தலங்களில் லட்சக் கணக்கான பக்தர்கள் வருவதும், கணக்கற்ற பொருளை உண்டியலிற் குவிப்பதும், நடைபெறுவதால் திருக்கோயில்களை நிருவகிக்க நிலையான திட்டங்கள் பெருமளவில் காலத்திற்கேற்பத் தீட்டப் பெற்றுள்ளன. இந்து சமய அறநிலையப் பாதுகாப்புத் துறையினரும் அறங்காலவர் துறையினரும் ஒரு முகமாகச் செயல்பட்டு மக்கட்குத் தொண்டாற்றியும், திருக்கோயிலில் வழிபாட்டு முறைகளைச் செம்மைப் படுத்தியும்

வருகின்றனர். இவ்வாறு மக்கள் தொண்டும் மகேசன் தொண்டும் திருக்கோயில்களால் இன்று மிளிர்வதைக் காண்கின்றோம்.

இந்தியப் பண்பாட்டுக் கல்லூரி, கலைக் கல்லூரி, மகளிர் கல்லூரி, செந்தமிழ்க் கல்லூரி ஆகிய மக்கட்குப் பயன் நல்கும் இன்னும் பல திட்டங்களை உருவாக்கித் தொண்டாற்றும் தனிமாண்பு பழநி அருள்மிகு தண்டாயுதபாணி திருக்கோயில் முன்னாள் அறங்காவலர் குழுவினருக்கு உரியது. அதிலும் இந்நாள் அறங்காவலர் குழுவினர்க்கும், குறிப்பாக அதன் தலைவர் திரு. பு. மனோகரன் அவர்களுக்கும் தனிச் சிறப்பு உரியது.

**பக்தி நெறி**

பக்தி நம்பிக்கையின் அடித்தளத்தில் நிற்பது. இறைவனின் பெருமையை உணர்ந்து பக்தி செய்து உய்ய வேண்டுமென்பதே நமது சமயத்தின் உட்கோள். குற்றம் குறையுடையவர்களும், துன்பக் கேணியில் உழல்பவர்களும், குணம் நிறைந்தவர்களும், இன்பக்கேணியில் திளைப்பவரும், கல்லாதபேரும், கற்றறிந்தோரும், யாராயினும் முருகப்பெருமானை நினைந்து மனங்கசிந்து அவனருளாலே அவன் தாள் வணங்கி மன உறுதியுடன் பற்றுக் கொள்பவர்க்கு வெற்றி கிட்டுவது உறுதி. இம்மை மறுமைப் பயன்கள் வாய்க்கும், முன் வினைகள் நீங்கும்.

வேலுண்டு வினையில்லை
மயிலுண்டு பயமில்லை
குகனுண்டு குறையுமில்லையே.



# தணிகைப் பெருமான் தாள் வாழ்க!



பொய்ப்போத இருளிரியப் புக்கெனுடல்
பொருளாவி பொருந்த வாங்கி
மெய்ப்போதங் காட்டிமுடி மேல்நீட்டி
அடிநாளும் மேவச் சூட்டி
எய்ப்பேதும் அறவோட்டி இன்பநிலை
கூட்டியருள் எந்தாய் உன்னைக்
கைப்போது கொண்டுதிருத் தணிகையடைந்
தேனின்று காணு மாறே!

— திருத்தணிகைப் பதிகம்

# "நந்தவனத்திலோர் ஆண்டி"





திரு. எம். ஏ. முருகேசன்

"நந்தவனத்திலோர் ஆண்டி" என்றதும் ஏதோ ஒரு கதை என்று எண்ணிவிடலாகாது. இத்தொடர் நம் உடலைப் பற்றியதாகும். உடம்பு உணர்வால் செய்யப்பட்டது. அவ்வுடம்பின் தன்மை உணவைப் போன்றே இருக்கும். மண்ணால் கட்டப்பட்ட வீடு மண்ணாகவே இருக்கும். செங்கல் வீடு செங்கல்லாகவும், கருங்கல் வீடு கருங்கல்லாகவும் இருக்குமேயன்றி மண் வீடு கல் வீடாக மாறிவிடாது. அந்த உண்மையை ஏற்று ஆகாரத்திலும், தூலகூக்கும பகுதிகளை அறிந்து, உத்தமமான ஆகாரத்தைக் கையாளுவதே உடலிலும், மனத்திலும் நோயற்று வாழ்வதற்கான முறை. பரமார்த்திக வாழ்விற்கு இன்றியமையாத முறையும் அதுவேயாம்.

'உடம்பார் அழியில் உயிரார் அழிவர்
திடம்பட மெய்ஞ்ஞானம் சேரவுமாட்டார்
உடம்பை வளர்க்கும் உபாய மறிந்தே
உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே'

என்றும்,

'உடம்பினை முன்னம் இழுக்கென்றிருந்தேன்
உடம்பினுக்குள்ளே உறுபொருள் கண்டேன்
உடம்பினுக்குள்ளே உத்தமன் கோயில்
கொண்டானென்று
உடம்பினையான் இருந்து ஓம்புகின்றேனே'–

என்றும் திருமூலர் பாடியுள்ளார். இன்னும் தவ ஒழுக்கத்திலும், தாயன்பிலும் சிறந்த நம் பாட்டியான ஔவை மூதாட்டி

"உடம்பினாலாய பயனெல்லாம்
உடம்பினுள் உத்தமனைக்காண"

என்றார். அதனால் உடலைத் தூய்மைப் படுத்தி வைத்துக்கொள்வது நம் கடமையாகும். இன்னும் உடம்பினுள் உத்தமனைக் காண உள்ளத்தைப் பண்படுத்த வேண்டுவது இன்றியமையாதது.

மனிதன் மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற ஐம்புலன்களை உடையவன். அவற்றின் உதவியால் அவன் காண்கின்றான், கேட்கின்றான், உண்கின்றான், உயிர்க்கிறான், உற்றறிகிறான். இவற்றைச் செய்வது அவனுடைய அறிவாகும். இந்த அனுபவங்களில் சில அவனுக்கு இன்பம் தருகின்றன, சில துன்பம் தருகின்றன. இன்பம் தருவனவற்றை அவன் விரும்புகிறான். துன்பந் தருவனவற்றை வெறுக்கிறான். விருப்பு, வெறுப்பு அவனுடைய இச்சை எனப்படும். இனி விரும்புவனவற்றை அடையவும், வெறுப்பனவற்றை விலக்கவும், அவன் எப்போதும் முயற்சிக்கிறான். அம்முயற்சி அவனுடைய செயலாகும். இவ்விதமான அறிவு, இச்சை, செயல், என்ற மூன்று இயல்பையும் உடையவன் மனிதன்.

இந்த மூன்று கருவிகளின் உதவியினால் பண்டு முதல் இன்றுவரையுள்ள மக்கள்

கடலைக் கடந்தும், மலையைக் குடைந்தும், சூரிய சந்திரனை நோக்கிப் பறந்தும், அணு விலிருந்து அண்டம்வரை ஆராய்ந்தும் அள வற்ற அறிவைத் திரட்டி வைத்திருக்கின் றனர். மக்கள், விலங்குகள், மரங்கள், உலோகங்களைப் பற்றியும் ஓயாது ஆராய வும் செய்கின்றனர். ஆயினும் அவர்கள் முடிவு காணுமலும், மனத்தில் அமைதியோ சாந்தியோ ஏற்படாமலும் அறிவிற்கு வரம்பு தெரியாமலும் தவிக்கின்றனர்.

அவ்விதமே இச்சைக்கும் எல்லைகாண மாட்டாது அவர்கள் பரிதவிக்கின்றனர். அகிலமெலாம் கட்டி ஆளினும் அமைதியுறாது கடல் மீதிலே ஆணை செலுத்தத் துடிக்கின் றனர். அளகேசன் நிகராக அம்பொன் மிக வைத்தபேரும் ரசவாத வித்தைக்கலைகின் றனர். நெடுநாளிருந்த பெருங்கிழவரும் காயகற்பந்தேடி நெஞ்சு புண்ணுகின்றனர்.

"ஆசைக் கோரளவில்லை அகிலமெல்லாங் கட்டி
ஆளினும் கடல் மீதிலே
ஆணைசெலவே நினைவர் அளகேசன் நிகராக
அம்பொன் மிகவைத்த பேரும்
நேசித்து ரசவாத வித்தைக் கலைந்திடுவர்
நெடுநாளிருந்த பேரும்
நிலையாக வேயினுங் காயகற்பந்தேடி
நெஞ்சு புண்ணுவர் எல்லாம்
யோசிக்கும் வேளையிற் பசிதீர உண்பதும்
உறங்குவதுமாக முடியும்"

என்பர் தாயுமானவர்

ஆசையோ அளவற்றது. ஐசுவரியங்கள் அளவுக்கடங்கியவை. ஆனல் எல்லையற்றது ஒன்றே. அது தான் பரம்பொருளான வாலறிவன். பரம்பொருளான இறைவனைத் தேடுவார், வழிபடுவார் சிலரே. கற்றறிந்த தனலாய பலன் வாலறிவன் நற்றாள் தொழு வதன்றே! அவனைத் தொழாத வாழ்நாள் வீணாகும். பிறந்ததின் பயனை நாம் அடைய முடியாது. இந்தக் கருத்தைக் கொண்டு எழுதப்பட்டது தான் இந்த ஆண்டிப் பாட்டு. இப்பொழுது பாருங்கள்.

"நந்தவனத்திலோர் ஆண்டி – அவன்
நாலாறு மாதமாய்க் குயவனை வேண்டிக்
கொண்டு வந்தானொரு தோண்டி – அதைக்
கூத்தாடிக் கூத்தாடிப் போட்டுடைத்தாண்டி"

என்றபாடல் ஏழைகளின் வாய்ப்பாட்டாகக் காணப்படும். ஆனல் பொருள் செறிந்த கருத்து நிறைந்த சித்தரின் பாடல். பல நிறப் பூக்கள் கொண்ட நந்தவனம் பலவித வனப்புமிக்க இந்த உலகம். ஒன்றையும் பிறக்கும்போது கொண்டு வந்ததில்லை, பிறந்து மண்மேல் இறக்கும்போது கொண்டு போவதில்லை எனப்படும் ஆன்மா ஆண்டியே. நாலாறுமாதம் பத்து மாதக் கருவாகும் என்பது நாம் அறிந்ததே. குயவன் மாயைக் களிமண்ணில் உருச் செய்யும் இறைவன். தோண்டி ஒன்பது துவாரங்கள் கொண்ட நம் உடல். இதைப் பயனற்றதாகச் செய்வது, வேடிக்கையாகப் பொழுது போக்கி அவமே கழிப்பதுதான் கூத்தாடியான நாம் செய்யும் செயல். ஆனல் ஒரே குயவன் எண்ணிறந்த மட்கலங் களை ஒரே நேரத்தில் ஓரிடத்தில் வனைந்து கொண்டும், வேறோரிடத்தில் உலர்த்திக் கொண்டும் இருப்பானனல், அந்த மாயம் நம் மனத்திற்குப் புலப்படாததொன்று. அதனல் உலக மதங்களெல்லாம் முத் தொழில் இயற்றும் இறைவனை மூன்று மூர்த்திகளாக்கி அவருக்கு மூன்று பெயருங் கொடுத்து அழைக்கின்றன. ஆயினும் அம் மூவரும் ஒருவரேயென்றும், ஒருவரே அம் மூவரென்றும் ஞானநூல்கள் வற்புறுத்து கின்றன. 'ஒருவனய் உலகேத்த நின்ற நாளோ ஓருருவே மூவருமான நாளோ' என அப்பர் போற்றியதும் இதனையே. இந்த மூன்று மூர்த்திகளையும் பிரம்மா, விஷ்ணு, சிவன் என்று இந்து மதம் அழைக் கின்றது.

"அண்ட வாசல் ஆயிரம்; அகண்ட வாசல்
ஆயிரம்
ஆறிரண்டு நூறுகோடி ஆனவாசல் ஆயிரம்
இந்த வாசல் ஏழைவாசல்; ஏகபோகமான
வாசல்
எம்பிரானிருந்த வாசல்; யாவர்காண
வல்லரே"

என்று கேட்கிறர் சிவவாக்கியார். இந்தக் கள்ள வாசல்தான் மனமாகிய வாயில். மனிதனுக்குத் தெரியாமல் அப்பாலுக்கப் பாலாய் நாம் இருந்து விட்டால் அவர் களுக்குத் தெளிவு ஏற்படாமல் போய் விடுமே என்று நினைத்து, எல்லையில்லாத அருளாளனை இறைவன் மனிதனுடைய மனத்துள்ளே நிறைந்துள்ளான்.

இந்தக் கள்ள வாசல் வழியாக உள்ளே மறித்துப்பார்க்கும்போது ஆனந்த மயமான வெட்டவெளியைக் கண்டார் இராமலிங்க அடிகள். "அளவையெலாங் கடந்து மனங் கடந்து மற்றை அறிவையெலாங் கடந்து கடந்து பல அற்புதக் காட்சிகளையும், உயிர்க்குயிராய் வதியும், தேவனையும் காண்கிருர்". இதுவே 'சிதம்பர ரகசிய' மாகும். இதைத் தான் அப்பரடிகள் 'மனத்தகத்தா' னென்ருர்.

எனவே, உலகிலுள்ள மக்களனைவரும் உடம்பையும், உணர்வையும், உயிரையும் வளர்த்துக்கொள்ள வேண்டும். உடலை உணர்வினுலும், உணர்வைக் கலைகளாலும், உயிரைக் கடவுள் நினைவாலும் வளர்க்க வேண்டும்.

இறைவனுலன்றி உள்ளத்தில் அமைதி ஏற்படாது. தெய்வீக சக்தியோடு எல்லாம் வல்ல திருவருளின் நினைப்பிலேயே தோய்ந்துவிட்டால் கவலையின் சுவடுகூடக் கனவிலும் தோன்ருது. கடவுளுணர்வில் தோய்ந்து, தெய்வீக உணர்வலைகளை எழுப்பித் திளைக்கின்ற இந்த ஆன்மீக மறுமலர்ச்சியானது நம்முடைய பிறவிப் பிணியை அகற்றிவிடும் என்பது திண்ணம்.

நந்தவனத்தில் ஆண்டியாகப் பிறந்த நாம் கற்றதனுலாய பயன் நம்மைத் தோற்றுவித்த குயவனை வாலறிவனைத் தொழுதலே யாகும்.



திணியா னமனே சிலைமீ துனதாள்
அணியா ரரவிந் தமரும் புமதோ
பணியா வெனவள் ளிபதம் பணியும்
தணியா அதிமோ கதயா பரனே

— கந்தரனுபூதி

அருள்மிகு

# ஞான தண்டாயுதபாணி



நாத விந்துக லாதீந மோநம
வேத மந்த்ரசொ ரூபாந மோநம
ஞான பண்டித சாமீந மோநம வெகுகோடி

நாம சம்புகு மாராந மோநம
போக அந்தரி பாலாந மோநம
நாக பந்தம யூராந மோநம பரசூரர்

சேத தண்டவி நோதாந மோநம
கீத கிண்கிணி பாதாந மோநம
தீர சம்ப்ரம வீராந மோநம கிரிராஜ

தீப மங்கள ஜோதீந மோநம
தூய அம்பல லீலாந மோநம
தேவ குஞ்சரி பாகாந மோநம அருள்தாராய்

ஈத லும்பல கோலால பூஜையும்
ஓதலுங்குண ஆசார நீதியும்
ஈர முங்குரு சீபாத சேவையு மறவாத

ஏழ்த லம்புகழ் காவேரி யால்விளை
சோழ மண்டல மீதேம னோகர
ராஜ கெம்பீர நாடாளு நாயக வயலூரா

ஆத ரம்பயி லாரூரர் தோழமை
சேர்தல் கொண்டவ ரோடே முனாளினில்
ஆடல் வெம்பரி மீதேறி மாகயி லையிலேகி

ஆதியந்தவு லாவாசு பாடிய
சேரர் கொங்குவை காவூர்ந னாடதில்
ஆவி னன்குடி வாழ்வான தேவர்கள் பெருமாளே.

— திருப்புகழ்

# "வேற்றுமையில் ஒற்றுமை"





திரு. ம. சூரியராஜ்

உலகத்தில் காணும் பொருள்கள் யாவும் ஒவ்வொன்றும் மற்றதனின்று வேறுபட்டு உள்ளதைக் காண்கிறோம். அதனுலேயே நாம் ஒன்றை மற்றதனின்றும் தனித்துணர முடிகின்றது. எலகம் என்பது எண்ணற்கரிய விதவிதமான பொருட்களால் ஆகியுள்ளதையும் அதில் கோடானு கோடி உயிரினங்கள் ஒவ்வொன்றும் வேறுபட்ட வகையில், நிலையில் வாழ்கின்றன என்பதையும் அவைகளினூடே மனிதனும் ஒரு உயிரினம் என்றும் அத்தனை கோடி மனிதர்களும் ஒவ்வொருவரும் மற்றவர்களிலிருந்து உருவத்தால், அமைப்பால், நடைமுறையால், செயலால், செயல்முறையால் வேறுபட்டுள்ளார்கள் என்பதையும் உணரும் பொழுது இத்தனையும் படைத்து ஆட்டுவிக்கும் எம்பெருமானின் தன்மைதான் என்னே என்று வியக்காமல் இருக்க முடியாது. இத்தனை கோடி வேற்றுமைகளுள் ஆங்காங்கே பலப்பல ஒற்றுமைகள் காணப்படுவதையும் உணராமலிருக்க முடியாது. ஒரு பொருளுக்கும் பிறிதொன்றுக்கும் உள்ள ஒற்றுமைகளைக் கணக்கிட்டுச் சொல்லுங்கால் அது ஒரு எல்லையை நியதியைக் கடக்கும் பொழுது பின் எல்லாம் வேறுபாடுடன் அமைவதைக் காணலாம். அதனுல் வேற்றுமை என்பதை ஒற்றுமைகளின் முடிந்த எல்லை என்றோ ஒரு வழித்தன்மை பிரியும் இடம் என்றோ கொள்ளலாம். ஒரு வழிப்பாதை பல பல கிளைகளாகப் பிரிந்து பல பல இடங்களைச் சென்று சார்தல் போல ஒவ்வொரு பொருளும் ஒருமைப்பாட்டினின்று பிரிந்து பிரிந்து செயல்படுவதையும் அவ்வாறு பிரியும் வேற்றுமைகளுள் பலபல ஒற்றுமை நிலைகளையும் உணராமல் இருக்க முடியாது. ஆகவே வேற்றுமைகளின் இணக்கம் ஒற்றுமை என்று கொள்ளினும் அது பொருத்தமேயாகும்.

உலகத்தில் வாழ்ந்த, வாழ்கின்ற, இனி வாழப்போகின்ற அத்தனை உயிர்களும் ஒவ்வொன்றும் மற்றதினின்று உருவத்தால், இனத்தால், வாழும் நியதியால், மற்றும் பிற வாலும் தனிப்பட்டவைகளே. ஒரு மனிதனைப் போல் உருவம் கொண்ட மற்றொரு மனிதனை நாம் சந்திக்க முடியாது. அங்க அசைவுகளில் ஒருமைச் சாயல் இருப்பினும் நெருங்கிப் பார்த்தவுடன் அவர்கள் வேறுபட்டவர்களாகி விடுகிறார்கள். ஏன், ஒரு மனிதனின் விரலில் படிந்துள்ள ரேகை வேறு ஒரு மனிதனுடைய ரேகையைப் போன்று இராது என்று ஆராய்ச்சியாளர்கள் தீர்மானித்திருக்கும் பொழுது ஒரே உருவத்தைக்கொண்ட இருவரைக் காண்பது எங்ஙனம்? இந்நிலை மனிதனிடத்து மட்டுமல்ல எல்லா உயிரினங்களிடத்தும் உள்ளது. ஒரு

ஆட்டு மந்தையில் உள்ள ஆடுகள் அனைத்தும் சாதாரணமாக ஒருவனுக்கு ஒரே மாதிரித்தான் தெரிகின்றது. ஆனால் அவைகளை வளர்க்கும் இடையனுக்குத் தெரியும் அவை ஒவ்வொன்றும் வேறுபடும் விதம். தன் மந்தையிலுள்ள ஒரு ஆடு தவறிப் பிற மந்தையுடன் சேர்ந்து விட்டாலும் தன் ஆட்டை அவன் எளிதில் அடையாளம் கண்டுகொண்டு விட முடிவதைக்காணலாம். இவ்வாறாக ஒவ்வொன்றும் உயிரினமும் தனிப்பட்டதாகவும் தன்னுள் ஒவ்வொன்றும் வேறுபட்டதாகவும் இயங்குவதை உணரலாம். அதாவது உலகில் இயங்கும் ஒவ்வொரு உயிரணுவும் ஒரு சில நிலையில் ஒவ்வொரு இனமாக ஒருமைப்பாட்டுடன் இயங்கினும் அவைகள் ஒவ்வொன்றும் தனித்து வேறுபட்டு நிலைக்கின்ற தன்மையை உணர்கிறோம். இந்நிலையன்னியில் ஒவ்வொரு உயிரினமும் ஒரே தன்மையதாக ஒரு கண நேரம் சிந்தித்துப் பார்ப்போமேயானால் அதன் விபரீதங்கள் நம் சிந்தனைக்கு அப்பாற்பட்டதாகிவிடும். உதாரணமாக உலகத்தில் ஏன் ஒரு ஊரில் வாழும் எல்லா மனிதர்களும் அங்க அமைப்பில் ஒரே மாதிரி படைக்கப்பட்டிருப்பதாக நினைத்துக் கொள்வோம். அவர்களுள் எந்த நியதிதான் நிலைக்கமுடியும்? யார் யாருடைய பிள்ளை, யார் யாருடைய தகப்பன், யார் யாருடைய மனைவி, யார் யாருடைய தாயார் என்று தெரிந்து கொள்ள முடியுமா? இல்லை சற்று முன் நாம் யாரிடம் பேசினோம் அல்லது பழகினோம் என்றுதான் வேற்றுமைப்படுத்த முடியுமா? அங்கே ஒரே குழப்பத்தைத் தவிர வேறு என்ன நிலவ நியதியிருக்கின்றது. அத்தகைய சிந்தனையில் தான் நாம் வேற்றுமையின் முக்கியத்தை உணர முடிகிறது.

இத்தனை விதமான வேறுபட்ட சூழ்நிலையில் மனிதனுடைய சிந்தனை, செயல் ஆற்றல், செயல் முறை அனைத்தும் வேறுபடுவதில் ஆச்சரியமில்லை. அதனால் தான் அவன் ஆண்டவனைப் பற்றிய சிந்தனையிலும் பல்வேறு கருத்துக்களைக் கொண்டுள்ளான். அக்கருத்து வேறுபாடுகளே இன்று நாம் காணும் பல மதங்களாகும். ஒவ்வொரு மதமும் பல உட்கிளைகளுடன் இயங்குகிறது. நம் இந்து சமயத்தை எடுத்துக் கொண்டாலும் பல உட்கிளைகளுடன் அது பல்வேறு பூசல்களுக்குக் காரணமாக இயங்குவதைக் காணலாம். ஆகவே இதிலிருந்து நாம் உணர்ந்து கொள்ள வேண்டியது என்ன என்றால் மனிதன் உள்ளளவும் பல்வேறு சமயங்களும் அதனுள் உட்கிளைகளும் இயங்கத்தான் செய்யும் என்பதாகும். அவை அனைத்தையும் ஒன்று படுத்தி ஒரு சமயத்தின்கீழ்க் கொண்டுவந்து விடலாம் என்று நினைப்பது பேதமையாகும்.

அவ்வாறானால் சமயப் பூசல்கள் இருந்து கொண்டேதான் இருக்க வேண்டுமா என்னும் கேள்வி எழுகிறது. சமயங்கள் பலவாறாக இருந்தால் சமயப் பூசல்கள் இருக்கத்தான் வேண்டும் என்பது நியதியல்ல. பூசல்கள் நிலவுவதும், அஃது ஒழிவதும் சமயவாதிகள் கையில்தான் உள்ளது. சமயத்தைத் தனிப்பட்ட மனிதனின் உரிமையாகக் கொண்டு விட்டால் பின் பூசலுக்கு இடமேது. அப்படியானால் சமயப் பிரச்சாரம் செய்வது கூடாதா என்று கேட்கலாம். சமயப் பிரச்சாரம் என்பது அந்தந்த சமயத்தின் அடிப்படைத் தத்துவங்களையும் நடைமுறைகளையும் விளக்குவதாக மாத்திரம் அமைய வேண்டுமேயல்லாது பிறவற்றைப் பழிப்பதாகவோ தன்வழியைக் கட்டாயப்படுத்துவதாகவோ அல்லது சமயங்களுள் துவேஷத்தையும் குரோதத்தையும் வளர்ப்பதாகவோ அமையக் கூடாது என்பதுதான் கருத்து. இம்முறையில் சமயப் பிரச்சாரங்கள் மிகுந்த அளவு எல்லா சமயத்திற்கும் ஒவ்வொரு சமயத்தின் உட்பிரிவிற்கும் தேவை. அந்நிலையில்தான் மக்கள் அந்தந்தக் கருத்துக்களை நன்குணர்ந்து தன் சூழ்நிலைக்கும் தகுதிக்கும் ஏற்ற சிறந்த முறையைக் கடைப்பிடிக்க வாய்ப்பு ஏற்படுகிறது. கருத்தைத் தெரிந்து, பின் சிந்தித்து அதனின்றும் தெளிவு ஏற்பட்டு ஒருவன் ஒரு சமயத்தில் நம்பிக்கை வைப்பானானால் அவன் மன அமைதி அடைவதுடன் பிறருக்கும் நற்பயனுடையவனாய் விளங்குவான். ஆகவே சிந்தித்து வேற்றுமைகளை மிகைப்படுத்தாமல் ஒற்றுமையை வெளிப்படுத்திச் செயல்படல் சமயவாதிகள் கடைப்பிடிக்க வேண்டிய இன்றியமையாத அரிய குணமாகும். ❁



தட்சிணாமூர்த்தி - பெரியாவுடையார் கோவில்



சிலை - பெரியாவுடையார் கோவில்

# பெயர் தரும் பேறு



திரு. ஜி. சின்னதுரை

அரிது அரிது மானிடராய்ப் பிறத்தல் அரிது என்பது ஔவையின் அருள் வாக்கு. பெறற்கரிய பெரும் பேற்றைப் பெற்றுப் பிறந்த மனித இனம் மண்ணில் விண்ணைக் காண விழைகிறது. ஆனால் அதனுடைய நீண்ட பயணத்தில் நெஞ்சத்து ஆசைகளை நிறைவேற்றிக் கொள்ள இயலாத வகையில் தடைகள் பல நேரிட்டுத் தடுமாற்றத்தை உண்டாக்கி விடுகின்றன. எந்தவிதமான பற்றும் சுற்றமும் இல்லாது பிறந்த மனிதனை, அவன் வளர வளர, வாழ வாழ, பல்வேறு பற்றுக்கள் பற்றி அவனது ஆசைக்கனவுகளை முற்றுப்பெற விடாது தடைவிதித்து விடுகின்றன. உறவும் பிறவும் அவனுக்குச் சுமையாக, உலக வாழ்வையே வேம்பாக்கி விடுகின்றன. காதலும் கடமையும் அவனுடைய கண்களைக் குளமாக்கி விடுகின்றன. கவலைகள் ஏதுமின்றிப் பிறந்தவன் ஓயாக் கவலைகளுக்கு உறைவிடமாகி உழல்கிறான்.

வாழ்க்கைப் போராட்டத்தில் வெற்றி காண முடியாதவனை விம்மும் அவனது உள்ளம், உலகப் பெருமண்ணிலிருந்து விட்டு விடுதலையாகி நிற்கும் சிட்டுக் குருவியைப்போல் விடுதலைகாண வேட்கை கொள்ளுகிறது. விடுதலைக்கு வழிதேடி ஓடி அலையும் மனிதனின் உள்ளம் வானை நோக்கி நிமிர்கிறது. அங்கு எதனையோ தேடுகிறது. தேடித்தேடி அலுத்தும் நாட முடியவில்லையே அந்நற்பொருளை என்று ஏங்குகிறது. நலிந்தும் மெலிந்தும் உலர்ந்து விட்ட மனிதன் தனக்குத் துணையாம் தலைவனின் தாள்பற்றும் முயற்சியில் தன்னை மறந்து ஈடுபடுகிறான். விண்ணிறைந்து, மண்ணிறைந்து, மிக்காய், விளங்கொளியாய், எண்ணிறந் தெல்லையிலாதவனை இருக்கும் ஆராத இன்பம் அருளும் மலையின் திருவுருவைத் தனது எண்ணத்திரையில் வண்ண ஓவியமாக, வரைந்து வைத்துக் கொண்டு

"அன்ன விசாரம் அதுவே விசாரம் அது ஒழிந்தால்
சொன்ன விசாரம் தொலையா விசாரம் நல் தோகையரைப்
பன்ன விசாரம் பலகால் விசாரம் இப்பாவி நெஞ்சுக்கு
என்ன விசாரம் வைத்தாய் இறைவா கச்சி ஏகம்பனே"

என்று வாய்விட்டழத் தொடங்குகிறான். படமுடியாதினித் துயரம் பட்டதெல்லாம் போதுமே என்று ஓலமிடுகிறான். அந்நிலையில் அவனுக்குப் பேரின்பவீடு பெற வேண்டும் என்ற எண்ணம் எழுகிறது. மீட்டிங்கு வந்து வினைப்பிறவி சாராமல் அல்லற்பிறவி அறுக்க ஆவல் கொள்ளுகிறான்.

இவ்வாறு அல்லற் பட்டாற்ருது அழுது புலம்பி நையும் மனிதனுக்கு ஆறுதல் அளிக்கும் வகையில்தான் இறைநலந்துய்த்த நிறை குணத்தவர் பலர் பேராது நின்ற பெருங் கருணைப் பேராற்றில் சென்று கலக்கச் சிறந்த வழிகள் பலவற்றை எடுத்துக் கூறினர்.

"வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை மற்றது வேண்டாமை வேண்ட வரும்'' என்றும் குறட்பாவிலே தெய்வப் புலவர் திருவள்ளுவர் அவாவினை அறுத்தொழித் தால் பிறவிப் பெருங்கடலை நீந்திப் பேரின்பக் கரை சேரலாம் என்கிருர். அதனையே "வேணும் என்று தேடுகின்ற வேட்கையைத் துறந்தபின், வேணுமென்ற அப்பொருள் விரைந்து காணல் ஆகுமே" என்கிருர் சிவவாக்கியர். ஆசை அறுமின்கள் ஆசை அறுமின்கள் என்று ஆசையின் ஆணிவேரைக் கல்லி எறிக எனக் கட்டளையிடுகிருர் திருமூலர். "பற்றே பிறப்பை யுண்டாக்கும் தாண்டவக் கோனே அதைப், பற்ருது அறுத்துவிடு தாண்டவக்கோனே'' என்று வீடுபெற விரும்பும் மனிதனை வேண்டுகிருர் இடைக்காட்டுச் சித்தர். பட்டினத்தடிகளோ "ஐந்து பொறியை அடக்கியுனைப் போற்ருமல் நைந்துருகி நெஞ்சம் நடுங்கினேன் பூரணமே'' என்று புலம்பிப் புலனடக்கமே புரைமனம் புகாப் புண்ணியனை அடைய வழி எனப் புகழ்கிருர்.

போக்கும் வரவுமில்லாப் புண்ணியனின் பூங்கழல் நீழலை எய்த நெஞ்சில் எழும் ஆசைகளை அகற்று; அடங்காப் புலன்களை அடக்கி ஆட்சி செலுத்து; பற்றுக்களைத் துற எனப் பல்வேறு உறுதி பயக்கும் உண்மைகளை எல்லாம் ஊன்றி உணர்ந்த மெய்யுணர்வுடைய மேன்மக்கள் மேலும் சில மென்மையான வழிகளையும் எடுத்துக் கூறினர்.

வான்கலந்த மாணிக்கவாசகர் தனது தேன் கலந்த திருவாசகத்தில்

"மெய்தா னரும்பி விதிர்விதிர்த்
துன்விரை யார்கழற்கென்
கைதான் தலைவைத்துக் கண்ணீர்
ததும்பி வெதும்பி உள்ளம்
பொய்தான் தவிர்ந்துன் னைப்போற்றி
சயசய போற்றி யென்னுங்
கைதா னெகிழ விடேனுடை
யாயெனைக் கண்டு கொள்ளே''

என்றுபாடித் தூண்டா விளக்கின் சுடரனையானைப் பெறவேண்டின் காதலாகிக் கசிந்துருகிக் கண்ணீர் மல்க வேண்டும் என்கிருர்.

"மெய்ம்மையாம் உழவைச் செய்து
விருப்பெனும் வித்தை வித்திப்
பொய்ம்மையாம் களையை வாங்கிப்
பொறையெனும் நீரைப் பாய்ச்சித்
தம்மையும் நோக்கிக் கண்டு
தகவெனும் வேலி யிட்டுச்
செம்மையுள் நிற்பா ராகில்
சிவகதி விளையு மன்றே''

என்று சிவகதிபெற வழிவகுத்துக் கொடுக்கிருர் திருநாவுக்கரசர். அப்பரின் அருட் பாடலில் ஆழ்ந்த ஈடுபாடு கொண்டிருந்த வீரமா முனிவரும்

"ஊக்கஏர் பூட்டி நோன்பால்
உடற்செறு உழுது, நன்றி
வீக்கமேல் விரதச் செந்நெல்
வித்தி நல்லொழுக்க நீரைப்
போக்கி நீடுஇறைத்துத் தன்ஐம்
பொறியெனும் வேலி காக்கில்
ஆக்கமாய்ப் பெருவீட் டின்பம்
அண்டமேல் விளைக்குந் தானே''

என்று மண்ணில் விண்ணைக் கண்டு இன்புற ஏற்றவற்றை எடுத்துக் காட்டுகிருர்.

இவ்வாறு ஆன்றவிந்தடங்கிய சான்ருேர் பலரும் ஈன்ருளினும் இனியனை இறைவனை எய்துவதற்குரிய வழி வகைகளை வரைந்து வைத்துச் சென்றனர். அவர்கள் தெளிந்த திருமுறைகளைக் கடைப்பிடிப்பதென்பது எல்லார்க்கும் எளிய செயலன்று, என்பதை உணர்ந்த உத்தமர் அருணகிரிநாதர் எளியதோர் வழியை எடுத்துச் சொல்கிருர்.

தெய்வப் பழனியில் திருமலைக் கோயிலில் நின்றருள்புரிபவன் நெடுமாலின் மருகன் முருகன். அவன் அவலக் கவலைகளைப் போக்கிப் பேரின்ப வீடளிக்கும்

பேரருளாளன். அவனைப் பாடும்போதும் அவன் பெயரைக்கூறு; பிறப்பென்னும் பேரிருள் விலகும். முருகா என முழங்கு; முன்னைவினை யாவும் சின்னாபின்னமாகச் சிதறிவிடும் என்றெல்லாம் கூறி முருகன் திருவருளைப் பெருமையோடு பேசுகிறார். பிறந்த பிறப்பறுக்கும் எங்கள் பெருமானைப் பற்றி அவர்பாடும் பாட்டு இதுதான்.

"முடியாப் பிறவிக் கடலிற் புகார்
முழுதுங் கெடுக்கு
மிடியாற் படியில் விதனப் படார்
வெற்றி வேற்பெருமான்
அடியார்க்கு நல்லபெருமாள் அவுணர்
குலமடங்கப்
பொடியாக்கிய பெருமான் திருநாமம்
புகல்பவரே"

தனது வாழ்க்கையில் கண்டபயனை, பெற்ற பெரும் பேற்றினை, தான் பெற்றவின் பத்தினை வையகமும் பெறவேண்டும் என்ற வாஞ்சையோடு, அருணகிரியார் அருளிய ஒரு வழியை உயர்ந்த வழியாக உவந்தேத்தி, உலகுபுகழ் தெய்வத்தின் திருப்பெயரை முழுங்கி மும்மலங்கெடுத்து முத்திநலந் துய்ப்போமாக.







புன்னெறி அதனிற் செல்லும் போக்கினை
விலக்கி மேலா
நன்னெறி யொழுகச் செய்து நவையறு
காட்சி நல்கி
என்னையும் அடிய னாக்கி இருவினை
நீக்கி யாண்ட
பன்னிரு தடந்தோள் வள்ளல் பாதபங்
கயங்கள் போற்றி

— கந்தபுராணம்







# சுவாமி மலை

பாதி மதிநதி போது மணிசடை
நாத ரருளிய குமரேசா
பாகு கனிமொழி மாது குறமகள்
பாதம் வருடிய மணவாளா

காது மொருவிழி காக முறவருள்
மாய னரிதிரு மருகோனே
கால னெனையணு காம லுனதிரு
காலில் வழிபட அருள்வாயே

ஆதி யயனொடு தேவர் சுரருல
காளும் வகையுறு சிறைமீளா
ஆடு மயிலினி லேறி யமரர்கள்
சூழ வலம்வரு மிளையோனே

சூத மிகவளர் சோலை மருவுசு
வாமி மலைதனி லுறைவோனே
சூர னுடலற வாரி சுவறிட
வேலை விடவல பெருமாளே.






பாலசமுத்திரம் கோவில் முகப்புத் தோற்றம்



பெரியாவுடையார் கோவில் பின்புறத் தோற்றம்




உற்சவர், மூலவர் விக்கிரகம்
அகோபில வரதராஜப் பெருமாள் கோவில் - பாலசமுத்திரம்

# இம்முடிச்ஜமீன் பாலசமுத்திரம் விசயகிரித் துரை





திரு. ஆர். கோதண்டபாணி துரைராஜ நாடான்வார்

நம் பழநியம்பதி சங்ககாலம் தொட்டுப் பல்லாண்டு காலமாகச் சீரும் சிறப்பும் பெற்ற முருகன் திருத்தலமாக விளங்குகிறது. இந்தப் பழநியம்பதி, சேர மன்னர்கள் ஆட்சிக் காலத்திற்குப் பின் குறுநில மன்னர்களின் ஆட்சித் தலைநகராக இருந்து வந்தது. இந்தக் குறுநில மன்னர்களின் ஆட்சிக்கு உரியதான இவ்வையாபுரி நாடு, திருவாவினன்குடி நாடு என்று பெயர் வழங்கப் பெற்றது. இது கொங்கு முதலிய இருபத்து நான்கு நாடுகளில் ஒன்று. திருப்புகழில் அருணகிரி நாதர், "சேரர் கொங்கு, வைகாவூர், நன்னாடதில்-ஆவினன் குடி" என்று பாராட்டியுள்ளார். இந்த வையாபுரி நாடு, இன்றுள்ள பழநிவட்டம் முழுவதும், உடுமலை, திண்டுக்கல், தாராபுரம் வட்டத்தின் சில பகுதிகளையும் கொண்டதாக இருந்தது. ஆறு ஆறு, நூறு ஊர், எட்டு மங்கலங்களைத் தன் அங்கமாகப் பெற்றிருந்தது. "ஆராறு நூறொரொடு அட்ட மங்கலம் சூழ்ந்த — வீராவிசயகிரி வேலாயுத சாமி" என்ற சமயமாலைப் பாடல் இக்குறிப்பினை விளக்கியுள்ளது.

**விஜயகிரித்துரை :**

கி. பி. பதினெட்டாம் நூற்றாண்டில் இந்த வையாபுரி நாட்டை ஆண்டு வந்தவர் குறுநில மன்னர்களுள் ஒருவரான விஜயகிரித்துரை என்பவர் ஆவர். இவர் சிறப்பு வாய்ந்த மன்னர். புவியரசாகவும், கவியரசாகவும் விளங்கினார். இவர் பாலசமுத்திரம், இம்முடிச் ஜமீன் விஜயகிரித்துரை என்றும் வையாபுரித்துரை என்றும் அழைக்கப் பெறுவார். இவர் திருமுருகன் அருள் பெற்ற தவச் சீலர். இவர் பரம்பரையினர் தங்கள் இயற்பெயருடன் "சின்னோவையன்" என்ற பெயரையும் இணைத்துப் பட்டப் பெயராகக் கொண்டிருந்தார்கள். அது போலவே "விசயகிரி வேலர்," தன் பெயருடன் 'சின்னோவையன்' என்ற சிறப்புப் பெயரையும் இணைத்து விஜயகிரிவேலச் சின்னோவையன் என்ற பட்டப் பெயர் பெற்றிருந்தார் என்று தெரிய வருகிறது. இவரது சிறப்பினைப் புலவர் பெருமக்கள் பாராட்டியுள்ளார்கள். இந் நகரில் வாழ்ந்த முத்தமிழ்ச் சக்கரவர்த்தி, மாம்பழக் கவிச்சிங்க நாவலர், "கீர்த்தி

விஜயகிரித் துரை காலத்தினிற் செய் பூர்த்தி மகிமை யெல்லாம் பொய்யோ தயாநிதியே'' என்றும்''விஜயகிரித் துரை நாளில் அநேக விசேட மின்னுட்டு — இசையை நடாத்தினே'' என்றும் கூறியவற்ருல், இவர் முருகன் அருள் பெற்றுப் பல சித்திகள் செய்து வந்தார் என்றும் நாம் உணர முடிகிறது. இவர் பழனிப் பிள்ளைத் தமிழ் வையாபுரிப் பள்ளு, சமயமாலை, வருகைப் பத்து முதலான நூல்கள் பாடியுள்ளார். மகான் வண்ணச் சரபம் தண்டபாணி சுவாமிகள், கௌமாரத் தொகை நூலில் இவரைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார். இவர் கொடை வள்ளலாக வாழ்ந்து வந்தார். இவர் காலத்தினரான சிவநெறிச் செல்வர், கோட்டைத்துறை அமரம் உத்தண்டிக் கவுண்டர் என்பவர்க்கு, பல்லக்கு முதலான விருதுகள் வழங்கினர் என்பதை, இதைப் பற்றி அருட்கவி தொண்டைமண்டலம் இராமசாமி முதலியார் அவர்கள்

தென்பழனியான் விசயகிரிவேலச்
சின்னேவையன்
சிந்தை கூர்ந்து — அன்புடனே சிவிகை
தரப்பெற்ருனும் உத்தண்டியகிலன்

என்று விளக்கியுள்ளார்.

(புதையல் பெற்ற பொற்குவியலை மன்னருக்கு வழங்கிய உத்தண்டிக் கவுண்டர் அவர்களுக்குப் பல்லக்கு முதலிய வரிசை இம்மன்னர் வழங்கினர் என்பது செவி வழிச் செய்தியாகும்.)

இவர் பழனி மலைக் கோவிலிலும் பழனி மலையைச் சுற்றியுள்ள கோவிலிலும் பல திருப்பணிகளைச் செய்துள்ளார். தடம், மடம், தண்ணீர்ப் பந்தல், சாலை செப்பனிடல் முதலிய அறப்பணிகள் இவரது ஆட்சிக் காலத்தில் நடைபெற்று வந்தன என்பது பழங்காலச் சின்னங்களாலும், செவிவழிச் செய்திகளாலும் உணர முடிகிறது. இவரது பாடல்கள் திருப்பணிக் குறிப்பினைத் தெளிவாக விளக்கியுள்ளன. இன்று தங்க விமானம் இயற்றித் திருக்குடநன்னீராட்டு விழா நடத்தும் நமது பழநி மலைக் கோவிலில், இவர் காலத்தில் இம்மன்னர் கோவில் திருப்பணியும், தெய்வப் பிரதிட்டையும் செய்து முருகப்பெருமானை வழிபட்டு வந்தார் என்ற முறைமையினை, இவராற் பாடப் பெற்ற சமயமாலைப் பாடலில்,

கலியின் நாலாயிரமுங் கடந்தபின்ன
ரெண்ணூற்றில்
மலிநந்தன வருடம் மங்கள நேர்தைப்
பூசம்
சிலைதிருத்தி நாற்பதுநாள் திருப்பணிப்
பிரதிட்டை செய்து
மலையடனைப் போற்றி செய்தேன்
என்றும்,
சேரர்கோன் கட்டிவைத்த சீராலயம்
வெளியில் போதரவே அமைத்துப்
பேணறைகள் செய்து வைத்தேன்

என்றும் கூறியுள்ளார். இதனுல் இவ்வுண்மை நன்கு புலனுகின்றது. இவரின் — இவரைச் சார்ந்த மன்னர்களின் திரு உருவச் சிலைகளை மலைக் கோவிலிலும், சுற்றுக் கோவிலிலும் நாம் காணலாம். இதே மன்னரின் சரித்திரமும் இவர் இயற்றிய பாமாலைகளும் வெளியீடு செய்வது இன்றியமையாதது. இத்துடன் திருவாவினன்குடிப் பாலசுப்பிரமணியக் கவிராயர் பாடியருளிய பழனித்தல புராணம், அண்ணமலைக் கவிராயர் பாடியருளிய பழநிப் பதிற்றுப்பத்தந்தாதி, அருள்மிகு மகான் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் அருளிய பழநிப் பன்னிரு பதிகம், முத்தமிழ்ச் சக்ரவர்த்தி பழனி மாம்பழக் கவிச்சிங்க நாவலர் இயற்றியருளிய துதிப்பாடல்கள் முதலியனவும் வெளியீடு செய்வது சாலச்சிறந்தது. இவை நிறைவு பெற எல்லாம் வல்ல முருகப் பெருமான் திருவருள் முன் நிற்க வேண்டும் என்று முருகன் இணையடிகளை வணங்குகிறேன்.

# பழனிக்குப் புதிய அழகு



**கவிஞர் திரு. கண்ணதாசன்**

குன்றத்துப் பழனம் சேர்ந்தான்
குடும்பத்தின் நீங்கி வந்தான்
மன்றத்தில் குவிவார்க் கெல்லாம்
மனவிளக் கேற்றி வைத்தான்
அன்றந்தச் சேரன் தந்த
அழகிய கோவில் கொண்டு
நின்றனன் தண்ட பாணி
நீணிலம் காக்க வென்றே.

கழனியிற் செந்நெல் ஆட
காற்றுலாம் வயல்கள் ஊடே
உழவர்கள் தமிழிற் பாட
ஊரெலாம் முருகா என்று
இழையுமோர் கவிதை ஓட
எங்கணும் காண்பார் வந்த
பழனியின் தெய்வத் தோற்றம்
பக்தியின் திருநீ ரோட்டம்.

அரசினர் அமைத்து வைத்த
அறமன்றத் தார்இந் நாளில்
முருகனுக் கழகுஞ் சேர்த்தார்
முறைமுறை கல்வி தேர
பொருள்நிறை பள்ளி; மன்றம்
புதியன கண்டார்; கந்தன்
திருவருள் அவரைக் காக்கும்
தேசமும் புகழே பாடும்!

## பழனித் திருக்கோயிலைப் பற்றி

*"பழனிக்கோயில் பழைய மலைக்கோயில். சீர்திருத்தப் பணிகளில் தொன்மைக் கலாச் சாரம் திகழ்ந்திடல் வேண்டும். பாதுகாக்கப் படவேண்டிய பழந்தமிழர் சின்னம் இது."*

(ஒ-ம்) **மு. கருணாநிதி**
தமிழக முதலமைச்சர்

*14—2—'72*



*"நல்வாழ்த்து, நல்வாழ்த்து, நல்வாழ்த்து! சிறப்பாகத் தொண்டாற்றும் அனைவர்க்கும் நல்வாழ்த்து!*

*இன்று நாங்களும், சகோதரர் பொன். பரமகுரு குடும்பத்தாரும் இனிது பழனி ஆண்ட வரைத் தரிசித்து இன்புறும் பேறு பெற்றோம். மீண்டும் விரைவில் வந்து வழிபட்டு இறைவன் திருவருள் பெற வேண்டுகிறேன்."*

(ஒ-ம்) **வி. திருஞானசம்பந்தன்**
மலேயா அமைச்சர்

*4—1—'73*

# இறைநெறி





திரு. சி. இரத்தினம்

ஆதிகாலந்தொட்டு இன்று வரை மனிதனின் நிலையைக் கவனிக்குமிடத்து மகத்தான வளர்ச்சியின் உச்சியை வந்தடைந்துள்ளான் என்பதை நன்குணரலாம். இன்னும் வளர்ந்து கொண்டே போவான். அவ்வளருந்தன்மை இயல்பாகவே அமைவதோடு அவனது சுற்றுப்புறச் சூழ்நிலையையும் வளர்க்கப் பெரிதும் உதவுகின்றது. மனிதனின் தேவைகள் நாளுக்கு நாள் பெருகிக் கொண்டே வருகின்றன. அவைகளைப் பூர்த்தி செய்யும் சாதனங்களும், வசதிகளும் புதிய புதிய தோற்றத்தில் புத்தம் புதிய சக்திகளுடன் பெருகிக்கொண்டே போகின்றன. அம்புலிமாமா என்று குழந்தைகளுக்கு விளையாட்டுப் பொருளாகக் கொள்ளப்பட்ட நிலா இன்று மனிதன் போய் இருந்து, பூமிக்குத் திரும்பக் கூடிய சந்திரமண்டலமாக ஆகிவிட்டது. அந்த அளவிற்கு மனிதன் விஞ்ஞான வளர்ச்சி அடைந்துள்ளான். அதே நேரத்தில் இவ்வளவு வளர்ச்சிக்கும், மாற்றத்திற்கும் இடையே மனிதன் தனது அங்க அமைப்பு மட்டும் எந்தவித மாற்றமுமின்றி அன்று தொட்டு இன்றுவரை ஒரே நிலையில் இருப்பதை உணர்கின்றான். அதே நிலையில்தான் மனிதனின் இறைநெறி அல்லது இறை நம்பிக்கையும் அடைந்திருக்கின்ற வளர்ச்சிக்கும், மாற்றங்களுக்குமிடையே எந்தவித மாற்றமுமின்றி நிரந்தரமாக ஒளி விட்டுப் பிரகாசித்துக் கொண்டே இருக்கின்றது. அந்த ஒளி விளக்கே வாழ்வில் வெற்றிக்கு அடித்தளமாக அமைந்துள்ளது.

மனிதன் பல வகை உணர்ச்சிகளின் நிலைக்களமாகத் திகழ்கின்றான். கூடிவாழ்தல், காதல் புரிதல், உண்டி, உறையுள் தேடுதல், பொருளீட்டல், தற்காத்தல் முதலிய பல இயல்பூக்கங்கள் (instincts) இயல்பாக மனித உயிர்கட்கு அமைந்திருப்பினும் இறைநெறி (Religious instinct) என்பது அவைகளில் தலையாயதொன்றாகும். இதுவே மனிதனை இவ்வையத்து வாழ் வாங்கு வாழவைத்து, வானுறையும் தெய்வத்துள் சேர்த்து வைக்க உதவும் பக்தி நெறியாகும். மணிவாசகப் பெருமான்

> "முத்தி நெறி அறியாத
> மூர்க்கரொடு முயல்வேனைப்
> பக்தி நெறி அறிவித்துப்
> பழவினைகள் பாறும் வண்ணம்
> சித்தமலாம் அறுவித்துச்
> சிவமாக்கி எனை ஆண்ட
> அத்தன்"

என்று பக்தி நெறியின் சிறப்பினை இயம்புகின்றார்.

வைணவப் பெரியார் நம்மாழ்வார் பக்தி இன்றி உயிர் வாழ்தல் இயலாது என்று ஆணித்தரமாகக் கூறுகின்றார். இளமையிலேயே அவர் ஓதாது உணர்ந்த ஞானச் சிறப்புடையவர்.

"அறியாக் காலத்துள்ளே அடிமைக்கண்
அன்பு செய்வித்து
அறியாமாமாயத்து அடியேனை வைத்தாயால்"

எனத் திருவாய்மொழி மலர்ந்துள்ளார்.

எம்பெருமான் ஐம்புலன்கட்கும் அப்பாற்பட்டவர். உணர்வு ஒன்றினால் மட்டும் அனுபவிக்க முடியும், உயிர்க்கு உயிரானவன், பற்றற்ற நிலையில் அவனை அடையலாம் என்று தனது அனுபவத்தை அழகாக எடுத்தியம்புகின்றார் நம்மாழ்வார்.

"யாவையும் எவரும் தானாய்
அவரவர் சமயந்தோறும்,
தோய்விலன் புலனைந்துக்கும்
சொலப்படான் உணர்வின் மூர்த்தி
ஆவிசேர் உயிரின் உள்ளால்
ஆதுமோர் பற்றிலாத
பாவனை அதனைக் கூடில்,
அவனையும் கூடலாமே"

என்னும் அழகு பிரபந்தத்தில்.

முருகப் பெருமான் தன்னை அடைந்தவர் துயர் தீர்த்துத் தன்னை உணர அருள் பாலிப்பவன் என அருணகிரியார் ஓதுகின்றார். அழகு முருகனின் அழியா இளமையையும், தெய்வத் தன்மையையும், அருணகிரிநாதர் தான் அனுபவித்த அனுபூதியிலே பின்கண்டவாறு இயம்பியுள்ளது இங்கு நோக்கற்பாலது.

"முருகன் குமரன் குகன் என்று மொழிந்து
உருகும் செயல் தந்து உணர்வு என்று
அருள்வாய்
பொருபுங்கவரும் புவியும் பரவும்,
குருபுங் கவஎண் குணபஞ் சரனே"

இறையுணர்வு மானிட வர்க்கமின்றி விலங்கினங்களுக்கும் இயற்கையிலேயே அமைந்துள்ளது என்பது மாறாத பக்தியுணர்வோடு தொழுத யானையை முதலையின் வாயிலிருந்து காப்பாற்றிய எம்பெருமான் அருளிச் செயலால் அறியப்படுகிறது.

"பதக முதலை வாய்ப்பட்ட களிறு
கதறிக் கைகூப்பி என் கண்ணா! கண்ணா
என்ன
உதவப் புள்ளூர்ந்து அங்குறுதுயர் தீர்த்த
அதகன்"

என்பது பெரியாழ்வார் வாக்கு.

"துப்புடையாரை அடைவதெல்லாம்
சோர்விடத்து ணையாவரென்றெ
ஒப்பிலேனாகிலும் நின்னடைந்தேன்
ஆனைக்கு நீ அருள் செய்தமையால்"

என்ற பெரியாழ்வார் பாசுரம் ஈங்கு நோக்கற்பாலது.

மேற்கூறியவற்றால் ஆண்டவன் உயிர்க்கு உயிராய் இருந்து எங்கும் பரவி இருந்து உயிர்களின் செயல்கள் யாவினுக்கும் தானே ஏவுதற் கருத்தாவாயமைந்து அவ்வுயிர்களை விட்டுப் பிரியாதவனாய் என்றும் காத்து நிற்கின்றான் என்பதும், உயிர்கள் அனைத்தும் அவன் வடிவினவாய் உள்ளன என்பதும், பக்தி நெறியினால் அவனை என்றும் அணுகலாம் என்பதுமாகிய உண்மைகள் புலனாகின்றன. இவற்றையே நம் இந்து சமயம் எடுத்தியம்புகின்றது.



# செவ்வேள் பணியில் சைவப் பெருவள்ளல்





டாக்டர் திரு. சி. பி. சாமி

மூர்த்தி, தலம், தீர்த்தம் என்னும் முத்திறச் சிறப்பும் பெற்று விளங்குவது நம் தென்னாடு. ஆதலால் 'மாதவம் செய்த தென்றிசை' எனவும் 'பேசில் அத்திசை ஒவ்வா பிறதிசை' எனவும் தெய்வத் திருமுறைகள் முழங்குகின்றன. அங்ஙனம் இங்கே பாருக்குள்ளே கலியுகத்திலே கண்கண்ட பரமதெய்வமாக விளங்கும் முருகப் பெருமான் எழுந்தருளியுள்ள திருத்தலங்களுக்குள்ளே முத்திறச் சிறப்பும் பெற்று விளங்குவது பழநியம்பதி. பழகு மங்கள கீதமுழவு கண்துயிலாத பழனியம்பதி, திருவாவினன்குடி என்ற மூன்றாவது படைவீட்டையும், 'குன்றுதோறாடல்' என்ற ஐந்தாவது படைவீட்டையும் தன்னகத்தே கொண்டது. பக்தர்களுக்குக் குழந்தைக் கோலத்தில் திருவாவினன்குடியிலும், மலைமீது கோவணாண்டியாய், பண்டாரமாய், தரணிக்கோர் தெய்வமாய், தண்டபாணியாய், புன்னகை தவழும் திருவாயுடனும், மதாணி விளங்கும் மார்புடனும், அரையில் இடக்கையை வைத்தும் காட்சி அளிக்கிறார் முருகப் பெருமான்.

இம்மூர்த்திக்கு அட்டபந்தன, சொர்ண பந்தன கும்பாபிஷேகம் நடைபெறும் இந்த நல்ல நாளில் இம்மூர்த்தியினால் கவரப்பட்டு 'உனக்குத் தொண்டு செய்யவே நான் பிறந்தேன்' என்ற வாக்கிற்கிணங்க, இப் பழனியம்பதியையே தன் உறைவிடமாகக்கொண்டு இத் திருக்கோயிலின் அறங்காவலர் குழுவில் 25 ஆண்டுகள் அங்கம் வகித்த முன்னாள் அறங்காவற்குழுத் தலைவர் அமரர், சைவப் பெருவள்ளல், திரு. வி. வி. சி. ஆர். முருகேச முதலியார் அவர்களின் தெய்வத் தொண்டை நினைவுபடுத்திக்கொள்ள வேண்டியது அவசியம். 'தொண்டரொடு கூட்டு கண்டாய்' என்பதற்கிணங்க முருகவேளின் தொண்டரான முதலியார் அவர்களுடன் நீண்ட நாட்கள் தொடர்புகொண்டவன் என்ற முறையில் அவ்வண்ணலின் சீரிய, நேரிய, தெய்வத் தொண்டையும், சமயத் தொண்டையும் அனைவர்க்கும் பயன்படும் முகத்தான் எடுத்து இயம்ப விழைகிறேன்.

குண நலன்கள் :

அமரர் முருகேசனாரின் கம்பீரமான தோற்றமும் நிமிர்ந்த நடையழகும், புன்முறுவல்பூத்த முகமும், இனிய சொல்லும், வெண்ணீறணிந்த நெற்றியும் யாவரையும் தன்பால் கவர்ந்து, இழுக்கும்சக்தியுடையன. பளிங்கு போன்ற குழந்தை உள்ளம் கொண்டவர், இரக்கமுள்ள ஈர நெஞ்சினர், அன்பு

உருவானவர், அடக்கமானவர், அருள் உணர்ச்சி மிக்கவர், செந்தமிழ்த் தேன் சொரியும் செவ்விய மதுரஞ்சேர்ந்த தீஞ்சொல்லே அவர் வாக்கிலிருந்து வெளிப்படும். வன்சொல்லும் புன்சொல்லும் கூறாதவர். செவ்வேள் குமரனின் திருச்சேவடியை எவ்வேளையும் மனத்தில் நிலை நிறுத்தி இருப்பவர். அம் மூர்த்தியின் அருள் தனக்குப் பல அனுபவங்களால் உணர்த்தியதை என்னிடம் அவர் பலமுறை கூறியிருக்கிறார்கள்.

**பிறப்பும் மணமும் :**

சிவனுக்கும், சக்திக்கும், உமைபாலனுக்கும் உரிய பெருமை மிக்க தலங்களுள் ஒன்றாகப் போற்றப் பெறும் பெருமை பெற்றது திருச்செங்கோடு, அம்மலை மீது கோவில் கொண்டுள்ள பெருமான் 'மாதொருபாகன்'.மேலும் அம்மலைமீது செங்கோட்டு வேலவன் குடி கொண்டிருக்கிறான். இத்தகைய புகழ் வாய்ந்த திருத்தலத்திலே செல்வமிக்க உயர்குடியில் நம் அண்ணல் தோன்றினர், முருகேசன் என்ற நாமமும் இடப்பெற்றார். இவர் பெற்றோர்கள் ஒழுக்கத்திலும் தெய்வ பக்தியிலும் அறவழியிலும் திளைத்தவர்கள். பெற்றோர்கள் வாழ்வில் ஊறிவந்த தெய்வபக்தி, சமயஉணர்ச்சி, சீரிய வாழ்வு, கொடைத்தன்மை, இவர் வாழ்வில் வெள்ளம் போல் பெருக்கெடுத்தோடியது. இவருக்கு வாய்த்த மனைவி தனலட்சுமி அம்மையார் கணவனுக்கு ஏற்ற காரிகையாக விளங்கினர். இவர் மனைத்தக்க மாண்புடையாராகிக் கணவரோடு கருத்து ஒருமித்து இல்லறம் நடத்திய தோடு கணவர் மனம் கண்டு அவர் உவந்து செய்யும் அறப்பணிகளிலும், இறைபணிகளிலும் உள்ளம் உவந்து ஈடுபட்டார். செல்விருந்து ஓம்பி வருவிருந்து பார்த்திருக்கும் தமிழ்ப் பண்பை அவ்விருவரிடமும் காணலாம். இவ்விருவருக்கும் வாய்த்த புத்திரச் செல்வங்கள் திரு. ஆர். எம். ஷண்முக வடிவேல் பி. ஏ. (திருச்செங்கோடு ஸ்ரீ அர்த்தனரீஸ்வரர் தேவஸ்தான அறங்காவலர் குழு உறுப்பினர். ஈரோடு செங்குந்தர் உயர்நிலைப் பள்ளிக் குழுவின் தலைவர்), திரு. ஆர். எம். கந்தசாமி பி. எஸ்சி., (பழனி ஸ்ரீ தண்டாயுதபாணி தேவஸ்தான அறங்காவலர் குழு உறுப்பினர்) ஆகிய இருவரும் தந்தையின் மனங்கோணுதபடி அவர் காட்டிய வழியிலேயே போந்து சிறப்பாகக் கல்வி கற்று, தந்தையின் அடிச்சுவட்டைப் பின்பற்றி, வணிகத்திலும் சிறப்பெய்தி அவர்விட்டுச் சென்ற இறை பணியில் தங்களை ஈடுபடுத்திக் கொண்டுள்ளனர்.

**பொருள் ஈட்டல் :**

பொருளீட்டும் வகையை நன்குணர்ந்த இப்பெரியார் மதுரையில் நூல் வணிகம் புரிந்து அறவழியில் நின்று பொருள் ஈட்டினர். தளரா ஊக்கத்தினுலும் தம் முயற்சி வலிமையினுலும், தமது துணைவியாரின் கைவள வலிமையினுலும் பெரும் பொருள் தேடினர். அவர் தேடிய நிதி தன் முயற்சியாலேயே, தான் சாதித்ததாக எண்ணி என்றுமே அவர் செருக்கடைந்ததில்லை. முன்னோர்கள் செய்த புண்ணியத்தின் பயனை நன் முறையில் பொருள் ஈட்டுவதற்கு இறைவன் அருள் வழி கோலிற்று என்று நினைத்து அவன் அருளையே நாள் தோறும் சிந்தித்திருப்பவர். செல்வப் பெருக்கு பெரும்பாலோரைச் செருக்கடையச் செய்யும். ஆனல் நம் முதலியார் அவர்களோ, 'ஈட்டிய பொருள் எல்லாம் இறை பணிக்கே' என்ற எண்ணமுடையவர். இறைவன்பால் அன்பைச் செலுத்தி 'செய்யும் தொழில் எல்லாம்' ஈசன் வழிபாடே என்று நினைந்து இடையரு ஊக்கங்கொண்டு உழைத்தால் பொருட் செல்வமும் அருட்செல்வமும் ஒருங்கே பெறலாம் என்பதை இவரது வாழ்க்கை எடுத்துக் காட்டுகிறது. மதுரையில் நூல் வணிக சங்கத்தின் தலைமைப் பொறுப்பு இவரை வந்து அடைந்தது. தலைமைப் பொறுப்பை ஏற்று அதனைத் திறம்பட நடத்தி ஏனைய வணிகர்களுக்கு உற்ற துணையாகவும் வழிகாட்டியாகவும் திகழ்ந்தார்.

**பழனிவந்து அடைதல் :**

'திருப்பழனி வாழ்வுக்கு உகந்து
அடியார்
ஆவிக்குள் நின்று உலவிவரு —
பெருமாளே'



சைவப் பெருவள்ளல், உயர்திரு. V. V. C. R. முருகேச முதலியார் அவர்கள்
முன்னாள் அறங்காவலர் குழுத் தலைவர்

தேவர்களின் தலைவனே! அழகிய பழனியிலே வாழ்வதற்கு விரும்பி அன்பர்களின் விருப்பத்திற்கு உயிருக்கு உயிராகி நின்று உலவுகின்ற முருக பக்தர்களுக்கு எல்லாம் அவர்கள் விரும்பும் வரத்தினைக் கொடுக்கவே இத்தலத்தில் முருகன் காத்திருக்கிறார் என்கிறார் அருணகிரிநாத சுவாமிகள்.

'ஆகமவேதப் பொது ஞான தேசிகனாகி
நிற்கும்
ஏகனைத் தென்பழனிக் குவட்டே
கண்டிறைஞ்ச வல்லார்
சாகரநீர் முழுதுண்டு விட்டானும்
தமிழ்க் கிளியும்
போக முனியும் புலிப்பாணிச் சித்தரும்
போல் பவரே'

பழனியம்பதியில் முருகனைத் தரிசிப்போர் அகத்தியர், அருணகிரி போகர், புலிப்பாணி போல் அருள் பெறுவர் என்று கூறுகிறது பழனித் திருவாயிரம்.

இவைகளை உணர்ந்து தானோ கார்த்திகை தோறும் பழனிக்கு முருகனைச் சேவிக்க வந்து போய்க்கொண்டிருந்த முருகேசனார் பழனியிலேயே தனக்கு விடுதி அமைத்துக் கொண்டு நினைத்த பொழுதெல்லாம் மலைமீது ஏறி முருகனை வழிபட இங்கேயே தங்க முற்பட்டார். நீண்ட நாள் புத்திரப் பேறு இல்லாத இவருக்கு முருகனுக்குச் சேவை செய்துகொண்டு வருங்காலை இரு புத்திரச் செல்வங்கள் முருகன் அருளால் உண்டாயினர். அவ்விருவருக்கும் முருகனுடைய திருநாமத்தைச் சூட்டி முருகன் சேவையில் மேன் மேலும் தன்னை அர்ப்பணித்துக் கொண்டார்.

**இவர்தம் அறச் செயல் :**

பழனியில் தங்கிய பெரியாருக்குக் காலஞ் சென்ற தவத்திரு சாது சுவாமிகளின் தொடர்பு ஏற்பட்டது, அந்நல்லோரின் இணக்கம் ஸ்ரீ தண்டாயுதபாணியிடம் அவருக்குள்ள பக்தியைப் பன்மடங்கு விரிவு படுத்திற்று. 'செல்வத்தின் பயன் ஈதலே' என்பதனை நன்கு உணர்ந்தார். அறவழியில் இறைபணிகள் புரிந்து கொண்டிருந்த இப்பெரியாருக்குச் சாது சுவாமிகளின் தொடர்பும் உபதேசமும் மேன்மேலும் இறைபணிகளில் ஈடுபடுத்தின. இவர் செய்த அறங்கள் பலப்பல. வலக்கை செய்வது இடக்கை அறியாது. இறை பணிக்கு வாரி வாரி வழங்கினார். திருச்செங்கோட்டு மலையில் பக்தர்கள் இடர் இன்றி ஏறிச் சுவாமியைச் சேவிக்க வழி நெடுக மின்விளக்குகளை அமைத்துக் கொடுத்தார். பழனிமலையில் பக்தர்கள் படிகளில் ஏறும் பொழுது இளைப்பாறுவதற்கு மண்டபம் கட்டினார். பழனிமலையைச் சுற்றி உள்ள கிரிவீதியில் நான்கு திசைகளிலும் துர்க்கை அம்மனுக்கு நான்கு கோவில்கள் எடுத்துக் குடமுழுக்காட்டினார். பக்தர்கள் தங்குவதற்கென்று அடிவாரத்தில் குடில் ஒன்றும் அமைத்தார்.

முருகனுக்கு இவர் அளித்த திருவாபரணங்கள் பல. முருக பக்தர்களுக்கு 'வேலும் மயிலும் துணை'. அவர்தம் வாழ்வுப் பாதையில் அவர்களுக்குத் துணையாய் இருப்பது வேலும், மயிலுமே. இதை நினைந்து தானோ நம் அண்ணல் முருகப் பிரானுக்கு வைர வேலும், கார்த்திகை தோறும் பவனி வருவதற்கென்று தங்க மயில் வாகனமும் செய்து கொடுத்தார்! மேலும் தங்கச் சப்பரமும் செய்து முருகனுக்குக் காணிக்கையாக்கினார். சிறப்பாக இன்று நாள் தோறும் குமரன் பவனி வரும் தங்கத் தேரை இவர் ஆக்கித்தந்தார். இதுவுமன்றி முருகனுடைய மாதாவான பார்வதி தேவியின் அவதாரமாக விளங்கும் மீனாட்சியம்மைக்கு மதுரையில் வெள்ளிப் பல்லக்குச் செய்து கொடுத்தார். சைவ வைணவ பேதம் இவருக்கில்லை. ஆதலால் திருவேங்கடமுடையான் பக்தர்கள் வேங்கட மலையில் தங்குவதற்கு வசதியாக விடுதி ஒன்று கட்டி வைத்தார். தமிழ் நாட்டின் எல்லையில் திருத்தணிகை மலைமேலே மண்டபம் ஒன்றும் அமைத்துக் கொடுத்தார். கல்விக்காக ஈரோடு செங்குந்தர் உயர் நிலைப்பள்ளிக்கு 50,000 வெண் பொற்காசுகள் ஈந்ததுமன்றிப் பள்ளியின் நிர்வாகக் குழுத்தலைவராகப் பொறுப்பேற்றுத் திறம்படச் செயல்பட்டு வந்தார். பெண்களின் கல்வி தழைத்தோங்க வேண்

டும் என்ற எண்ணத்துடன் மதுரையில் உள்ள டோக் பெருமாட்டி மகளிர் கல்லூரிக்கு ரூ. 6000 வழங்கினர். அத்துடன் பெருந்துறை காச நோய் விடுதிக்கு ரூ. 5000 அன்பளிப்பாகக் கொடுத்துதவியதுடன், ஈரோட்டில் தன் மனையாள் பெயர் விளங்க மகப்பேறு விடுதி ஒன்றையும் அமைத்துக் கொடுத்தார்.

**கோயிற் பணிகள் :**

திருச்செந்தூர், திருச்செங்கோடு, திருவாவினன்குடி என்ற முருகனின் திருத்தலங்களில் அறங்காவலர் குழுவில் நீண்ட நாட்கள் அங்கம் வகித்துச் சீரிய நிருவாகத்திற்கு வழிகோலிப் பல வழிகளிலும் பக்தர்களுக்குதவியதுடன் கோயிற் திருப்பணிகள் சிறந்தோங்கப் பாடுபட்டார். சிறப்பாகப் பழனியில் அறங்காவலர் குழுவின் தலைவராக இருந்த பொழுது இவ்வட்டாரத்து மக்களின் நெடுநாள் ஆசையைப் பூர்த்தி செய்விக்கும் வகையில் தேவஸ்தான நிருவாகத்தின்கீழ்க் கலைக் கல்லூரி நிறுவினர். தேவார இசைப்பள்ளி நிறுவியதுடன் தமிழ் நாட்டிற்கே உரித்தான நாதசுரக் கலைக்குப் புத்துயிர் கொடுக்கும் வகையில் நாதசுரப் பள்ளி ஒன்றையும் நிறுவினர். மலை மீது ஏறிச் சென்று முருகனைத் தரிசனம் செய்ய இயலாதவர்களின் மனக் குறையைப் போக்கி 'மின் இழுவை ரயில்' அமைத்துக் கொடுத்தார்.

சமய உணர்வைப் பரப்பும் முகத்தான் பழனியில் அக்கினி நட்சத்திர விழாவின் போது ஒவ்வொரு ஆண்டும் தன் செலவில் சைவ சித்தாந்த, திருப்புகழ், திருக்குறள் மகாநாடுகள் கூட்டிச் சிறந்த அறிஞர்களை அழைத்து வந்து பேசச் செய்து சமயப் பணியில் ஈடுபட்டார். இம்மகாநாடுகளில் கடல்கடந்த நாடுகளான இலங்கை முதலிய நாடுகளிலிருந்தும் அறிஞர்கள் வந்து கலந்து கொண்டார்கள். மகாநாட்டிற்கு வந்த விருந்தினர்களுக்கு அறுசுவை உண்டி கொடுத்து மகிழ்ந்தார். சைவ சமயத்திற்கு இவர் செய்த சேவையைப் பாராட்டி அண்ணலின் அறுபதாண்டு மணி விழா நடைபெற்ற போது இவருக்குச் 'சைவப் பெருவள்ளல்' என்ற பட்டம் கொடுக்கப்பட்டது. மேலும் திருச்செங்கோட்டில் செங்கோட்டு வேலன் பிள்ளைத் தமிழைப் பாடக்கேட்டு அந்த நூற்பாவை அச்சிட்டுத் தமிழ் உலகிற்கு அளித்தார். இப்பெரியாருக்குத் தமிழ் நாட்டின் தலையாய சித்த மருத்துவத்தின்பால் மிகுந்த நம்பிக்கையும் ஈடுபாடும் உண்டு. ஆதலால் தேவஸ்தான நிருவாகத்தின்கீழ் பழனியில் இலவச சித்த வைத்திய சாலை ஒன்றையும் நிறுவினர்.

இவர் செய்த அறங்களில் தெரிந்தவை சில, தெரியாதவை பல. இவ்வாறு இறைத் தொண்டிலும் மக்கள் தொண்டிலும் சிறந்தோங்கிய முருகேசனர் தம் மக்கள் இருவரையும் அறவழியிலேயே செல்லுமாறு பயிற்றுவித்துப் பணித்தருளினர். 'அவர்களும் மகன் தந்தைக் காற்றுமுதவி, இவன் தந்தை என்னோற்றான் கொல்' எனும் குறளுக்கு இலக்காகச் செயல்பட்டு வருகிறார்கள்.

சீர்பூத்த செழுங்கமல வேலும் வாழி!
தேவர்தொழும் பாதார விந்தம் வாழி!
தார்பூத்த தினைக்கடம்ப மாலை வாழி!
சக்ரகிரி நடனமிடும் மயிலும் வாழி!
கார்பூத்த சிவகிரி கோபுரமும் வாழி!
கனகமிகு குண்டலமும் காதும் வாழி!
பார்பூத்த தண்டலைகள் அரசனர் சேர்ந்த
பழனிமலைக் குமரேசர் பாதம் வாழி!



# விக்ரக வழிபாடும் கும்பாபிஷேகமும்



**திருப்பெருந்திரு சோமசுந்தர ஞானசம்பந்த தேசிக பரமாச்சாரிய சுவாமிகள்**

அருவமாயுள்ள சிவ பரம்பொருள் (கருணை காரணமாகப் பிறருக்குக் காட்சி கொடுப்பதற்கென, எடுத்துக்கொண்ட இருபத்தைந்து திருமேனிகளும் தோன்றுவதற்கு ஆதாரமாகவுள்ள, அருவமும் உருவமும் இல்லாத) அருவுருவ நிலையான சோதி சொரூபத்தை முதற்கண் தாங்கிக்கொள்ளத் திருவுளம் கொண்டது. அந்தச் சோதி சொரூபமே சிவலிங்க வடிவமாகும். அந்தச் சோதி சொரூபத்திலிருந்து 25 திருமேனிகளும் தோன்றி, ஒவ்வொரு காலத்தில் ஒவ்வொரு காரியத்தைத் நிகழ்த்தி துஷ்ட நிக்ரகமும், சிஷ்டபரிபாலனமும் செய்ய வேண்டியதாயிற்று. அதனுலேயே

அருவமும் உருவுமாகி அனுதியாய்ப் பலவாய் ஒன்ருய்
பிரமமாய் நின்ற சோதிப் பிழம்பு அதுஓர் மேனியாகிக்
கருணைகூர் முகங்கள் ஆறும் கரங்கள் பன்னிரண்டும் கொண்டே
ஒருதிரு முருகன் வந்து ஆங்கு உதித்தனன் உலகம் உய்ய.

என்று முருகப் பெருமானது தோற்றத்தை நமது கச்சியப்ப சிவாச்சாரியார் அருளிச் செய்திருக்கிருர். ஆகவே யாரும் அறிய முடியாத அருவமாய் இருந்த பரமசிவம், பக்குவப்பட்ட ஜீவான்மாக்களுக்குக் காட்சி கொடுக்கவும், தமது ஆட்சியின் சட்டதிட்டங்களாகிய வேதாகமங்களை அருளிச் செய்யவும் எடுத்துக்கொண்ட மூர்த்தமே சிவலிங்கவடிவமாகும்.

ஒருவருடைய கருத்து மற்றவர் அறிய முடியாத அருவ நிலையிலிருக்கிறது. இருந்த போதிலும் அக்கருத்தை அவர் வெளியிடுகின்ற சொல்லானது அறியக்கூடாத அருவ நிலையிலும் இல்லை; அறியக் கூடிய உருவ நிலையிலும் இல்லை. அருவுருவ நிலையில் உள்ளது. ஆனல் அச்சொல்லின் பொருளை உணர்ந்தவர்களுக்குமட்டுமே அப்பொருளை உணர்த்தக் கூடிய அடையாளமாக அச் சொல் உள்ளது. அதுபோலவே சிவ பரம் பொருள் கருத்தை ஒத்த அருவ நிலையிலிருந்து இறங்கி, அக் கருத்தை உணர்த்தக் கூடிய சொல்லை போன்று, தெரிந்தவர்கள் உணர்ந்து கொள்ளக்கூடிய சோதி வடிவம் தாங்கி அருவுருவ நிலை எய்துகிறது. அதைச் சதாசிவம் என்பர் அறிந்தோர். அது வேதாகமங்களாகிய சொற்பிரபஞ்சம் தோன்றுவதற்கும், ஒடுங்குவதற்குக் காரணமான மூர்த்தமாகும். இன்றைய விஞ்ஞானிகள் ஆகாயம் என்ற பூதமே சப்தங்களை வாங்கி ஒடுக்கவும், திரும்பவும் அதனை வெளியிடவும் ஆற்றல் வாய்ந்த பூதம் என்று, வானெலிக் கருவிகளைக் கொண்டு அதிசயிக்கிருர்கள். ஆகாயம் என்ற அப்பூதம் ஒன்று இருந்து நாம் போடுகின்ற கூப்பாடுகளைத்தனது சக்தியினுல் ஒடுக்கிக் கொள்ளாவிட்டால் எல்லோருடைய சப்தமும் எல்லோருக்கும் கேட்டு, ஒருவர் சொல்வதை மற்றவர் கேட்கமுடியாத அவலநிலை ஏற்பட்டுவிடும். நமது முன்னேர்கள் பல்லாயிரம் வருஷத்திற்கு முன்னதாகவே இதன் உண்மையைக்கண்டு ''வெளி

யில் ஒன்றாய் நின்றாய் போற்றி'' என்று ஆகாயத்தில் ஆண்டவன் ஒலி வடிவாய்த் திகழ்ந்து அருள் பாலிக்கிறான் என்று சொல்லியிருக்கிறார்கள்.

நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் என்னும், ஐம்பூதங்களில் எவ்வாறு ஆகாயம் என்ற பூதம் மற்ற நான்கு பூதங்களிலும் விலகி நின்று, தன்னில் யாருமில்லாத தனிப் பெரும் பூதமாக இருக்கின்றதோ, அதே போல இறைவனும் தான் எல்லாவற்றிலும் கலந்திருந்தாலும் தன்னில் யாருமில்லாத தனிப் பெருஞ்சோதியாகத் திகழ்கின்ற தன்மையை, சதாசிவம் எனப்படும் இலிங்கம் உணர்த்துவதாகும். அதன் பெருமையையும், அருமையையும் அறிந்தவர்கள் மட்டுமே உணர்ந்துகொள்ளக் கூடும். அம் மூர்த்தம் வேறு எம்மதத்திலும் காணமுடியாத உண்மைத் தத்துவங்களைக் கொண்ட அரிய திருமூர்த்தியாகும். அதுமட்டுமல்ல.

சிவ லிங்கத்தில் பிரம்ம, விஷ்ணு, சிவ பாகங்கள் ஆகிய மூன்றும் இயைந்திருக்கும் உண்மை. சிவலிங்கம் மூன்று கூறுகள் உடையது. அடிப்பாகம் நாற்கோண வடிவமாய் பூமிக்கு அதிபதியான, சிருஷ்டி கர்த்தாவான பிரம்ம பாகத்தை உணர்த்துவதாகும். மத்தியபாகம் எட்டுப் பட்டமுடைய அட்டகோண வடிவமாய் வாமை, சேஷ்டை, ரௌத்ரி, காளி, கலவிகரணி, பலவிகரணி, பலப்ரமதனி, சர்வபூததமணி என்னும் மகாவிஷ்ணுவின் எட்டு சக்திகளும், அதனோடு பொருந்த இருக்கும் ஆவுடை எனப்படும் மனோன்மணியாகிய ஒன்பதாவது சக்தியும்சேர்ந்து நவசக்திகளாகி நீருக்கு அதிபதியான காத்தல் எனப்படும் 'ஸ்திதி' கர்த்தரான விஷ்ணுபாகத்தை உணர்த்துவதாகும். அரன் என்பதன் பெண்பாலே அரி என்பதாகும். அதனாலேயே ''அரியல்லா தேவியில்லை ஐயன் ஐயாறனார்க்கே'' என்று திருநாவுக்கரசு நாயனாரும், திருமழிசை யாழ்வார் தமது இயற்பாவிலே 'மாதாய மாலவனை, மாயவனை'' என்றும் அருளிச் செய்திருக்கிறார்கள். அதனால்தான் நமது அப்பனாகிய சிவபெருமானது இடப்பாகம் நமது அம்மையாக விளங்கும் மகாவிஷ்ணுவின் பாகமாகவும், மாதொரு பாகன் உமாமகேஸ்வரன், அர்த்தநாரி, சங்கரநாராயணன் என்ற ஆணும் பெண்ணும் சேர்ந்த அபூர்வ மூர்த்தங்களாகவும் அமைந்து திகழ்கின்றது. மேலுள்ள பாகம், நெருப்பிற்கு அதிபதியும், அழித்தல் எனப்படும், சம்ஹாரம், மறைத்தல் எனப்படும் திரௌபவம், அருளல் எனப்படும் அனுக்ரஹம், ஆகிய முத்தொழில்களுக்கும் அதிபதியான சிவபாகமாகும். பூமிக்கு அதிபதியான பிரம்மபாகம், பூமிக்குள் மறைந்து ஒடுங்கிநிற்கும், நீருக்கு அதிபதியான விஷ்ணுபாகம் அபிஷேக நீரைத் தாங்கி விரிந்து நிற்கும். நெருப்பிற்கு அதிபதியான சிவபாகம் மேலோங்கி ஜோதி போன்று ஜொலித்துக் கொண்டிருக்கும். இம் மூன்றும்சேர்ந்த அருவமும், உருவமும் அற்ற ஆதியும், அந்தமும் இல்லா அரும்பெரும் ஜோதி வடிவே சிவலிங்கம் ஆகும். ஆகவே சிவலிங்கத்தை வழிபட்டால் பிரம்மாவை வழிபட்ட பலனும், மகாவிஷ்ணுவின் 10 திரு அவதாரங்களை வழி பட்ட பலனும், சிவபெருமான் 25 மூர்த்தங்களை வழிபட்ட பலனும், ஒருங்கே கிடைக்கக் கூடியதாகவும் இருக்கிறதென்பதை வேதாகமங்கள் வலியுறுத்துகின்றன. புராண இதிகாசங்களும் அனுபூதிமான்களது அனுபவங்களும் அந்த உண்மையை உறுதிப்படுத்துகின்றன.

அரசமரம் சுற்றிவரும் அன்பர்கள் சைவர்களாக இருந்தாலும், வைணவர்களாக இருந்தாலும் எல்லோரும் ஒன்றுபோல் சொல்லிவரும் ''மூலதோ பிரம்ம ரூபாய, மத்யதோ விஷ்ணு ரூபிணி, அக்ரஸ்ய சிவ ரூபாய விருக்ஷ ராஜயதே நம:' என்ற மந்திரமும் சிவலிங்கத் தத்துவத்தின் உண்மையை நன்றாக வலியுறுத்துகின்றதல்லவா? அல்லாமலும் உலகிலுள்ள எல்லா மரங்களும், அவற்றின் விதைகளும், கனிகளும், எல்லா வகையான முட்டைகளும், ஜீவராசிகளின் தலைகளும், பீடங்களும், பூமியும் சந்திரனும் சூரியனும், நக்ஷத்திரங்களும், அண்டங்கள் பலவும், ஆகாயமும் சிவலிங்க வடிவின் மேல் பாகம்போல் அமைந்திருப்பது சிந்திக்கத் தக்கது.

பலவிதமான தெய்வ வழிபாடுடைய இந்துக்களில் பலருக்கும் எந்த மூர்த்தியை வழிபட்டால் எல்லா மூர்த்திகளையும் வழி

பட்ட பலனை ஒருங்கே பெறலாம் என்பது தெரியாதிருக்கிறது. அதைப் பலரும் அறியும்படி தெரிவிக்கவே சிவன் கோவில்களில் மூலத்தானத்தில் சிவலிங்கத்தைத் தவிர வேறு பிரதிஷ்டை ஒன்றுமின்றி அமைத்துக் காட்டியிருக்கின்றனர் நமது முன்னோர்கள். சிவலிங்க வழிபாட்டினாலேயே பிரம்மஹத்தி தோஷம் நீங்குவதாகும். மேலும் பாவங்களிலெல்லாம் மிகவும் கொடியது பிரம்ம ஹத்தி தோஷம் எனப்படும் அந்தணரைக் கொன்ற பாவமாகும். அதை நீக்க வேண்டுமானால் சிவன் கோவில்களில் தனியாக எந்த மூர்த்தியையும் வழிபட்டு நீக்கிக்கொள்ள முடியாது என்பது வேதாகம விதி. அதை நீக்கவேண்டுமானால் சிவபூஜையே செய்தாக வேண்டும். அதனாலேயே திருவிளையாடற் புராணத்தில் பஞ்சமா பாதகம் செய்தவனுக்கும், மதுரை மீனாட்சி சுந்தரேஸ்வரர் அவன் செய்த பாவத்தை மன்னித்து நற்கதி கொடுத்ததாகக் காண்கிறோம். காஞ்சீபுரத்தில் காமாக்ஷி அம்மையார் சதாவும் லிங்க பூஜை செய்துகொண்டிருப்பது யாவரும் அறிந்ததே.

மகாபாரதத்தில் பஞ்சபாண்டவர்களும் சிவபூஜா துரந்தரர்களாக இருக்க அர்ச்சுனன் சிவபெருமானிடமிருந்து பாசுபதம் பெறுவதற்கு விசேஷதவம்புரிந்தது யாவரும் அறிந்ததே. இராமாயணத்தில் இராவண சம்ஹாரத்திற்குப் பிறகு ஸ்ரீ ராமபிரான் இராமேஸ்வரத்தில் இராமநாதரை சிவலிங்கத்தில் பிரதிஷ்டை செய்து வழிபாடு இயற்றியதும், அனுமார் தனியாக காசியிலிருந்து இலிங்கம் கொண்டுவந்து பிரதிஷ்டை செய்து வழிபாடு இயற்றியதும் காணலாம். கந்தபுராணத்தில் சூரசம்ஹாரத்திற்குப் பிறகு ஸ்ரீ சுப்ரமண்யப் பெருமான் திருச்செந்தூரில் சிவபூஜை செய்துகொண்டிருப்பதைக்காணலாம். கஜமுகாசுரனை சம்ஹாரம் செய்தபிறகு ஸ்ரீ விநாயகப் பெருமான் திருச்செங்காட்டங் குடியில் சிவலிங்க பூஜை செய்து கொண்டிருப்பதைக் காணலாம். மேலுலகத்தில் அதிகாரம்பெற்ற சகலருமே சிவபூஜை செய்தே அவ்வப் பதவிகளைப் பெற்றிருப்பதாக நமது நாயன்மார்களும், மாணிக்கவாசகரும். தேவாரத் திருவாசகங்களில் அருளிச்செய்திருக்கிறார்கள்.

ஆகவே இம்மண்ணுலகத்திலுள்ள நாம் மேலே சொன்ன ஏதாவது ஒரு வடிவத்தில் ஒரு சிலையைச் செய்வித்து அதற்கு வேதாகமங்களில்சொன்ன முறைப்படி ஆவாகனம், ஸ்தாபனம், சந்நிதானம், சந்நிரோதனம் முதலிய கிரியைகளைச் செய்து அதில் அந்த மூர்த்தியை எழுந்தருளும்படி இருக்கும்படி வேண்டிக்கொண்டால் முன்னே வெறும் சிலையாக இருந்த அது முருகப் பெருமான், நடராஜப் பெருமான், விநாயகப் பெருமான் என்ற அந்தந்தச் சிறப்புப் பெயர் பெற்று அந்தந்த மூர்த்தத்தில் என்னென்ன அதிகாரம் செலுத்தினார்களோ, அந்தந்த அதிகாரத்திற்குரிய அதிகார மூர்த்தியாக வேதாகம சட்டப்படி அமைந்து விடுகிறது. அவ்வித அந்த மூர்த்திகளுக்குச் செய்கின்ற சகல காரியங்களும், முழுமுதற்பரம் பொருளாகிய ஆண்டவனால் அங்கீகரிக்கப் பெற்றதாகும். அவை மக்களால் ஏற்றுக் கொள்ளப் பெற்றதாகவும் இருப்பதால் அதிலிருந்து முன் சாதாரணமாக இருந்த கற்சிலைகள் இப்பொழுது அந்தந்த மூர்த்திமான்கள் வீற்றிருக்கின்ற திருமேனிகளாக மாறி நாம் செய்யும் சிறப்பு மரியாதைகளையும், சிறப்பு உபசாரங்களையும், வணக்கங்களையும் வேண்டுகோள்களையும் ஏற்று அதற்குரிய அனுக்ரஹங்களைச் செய்யக்கூடிய மூர்த்தங்களாக அமைகின்றன. இதற்கு ஒரு மனிதனை உபமானமாக வைத்துப் பார்ப்போமானால் உயிரில்லாத வெற்றுடம்பிற்கும் உயிருள்ள ஒரு தனி நபருக்கும் உள்ள வேற்றுமை எவ்வளவோ அதைவிட பன்மடங்குள்ளதாகும், வெறும் கற்சிலைக்கும், பிரதிஷ்டை செய்த மூர்த்திக்கும் உள்ள வேற்றுமை. விக்ரஹங்கள் விண்ணுலகிலுள்ள மூர்த்திகளின் திருவுருவங்களே.

அங்கிங்கெனாதபடி உயிருக்கு உயிராய் நீக்கமற நிறைந்திருக்கிற அருவப் பொருளாகிய பரமன் ஒவ்வொரு காரணத்திற்காக எடுத்துக்கொண்ட திருமேனிகளுடன் ஒவ்வொரு புவனத்திலும் இருந்து படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் பஞ்சக்கிருத்தியங்களையும் செய்து உலகங்களையெல்லாம் ஆண்டு வருகின்றான். இந்துக்கள் அவ்வாறு ஆண்டவன் எடுத்துக் கொண்ட திருமேனிகளின் விவரங்களையெல்

லாம் விண்ணுலகிலிருந்து விளங்கி, இம் மண்ணுலகத்தில் அந்தந்த உருவங்களைச் சிற்ப சாஸ்திர முறையில் சிலைகளாகத் தயார் செய்து அவற்றில் அதற்குரிய மூர்த்திகளைப் பக்தர்களுக்காக எழுந்தருளி வீற்றிருக்கும்படி, பிரார்த்தனை செய்து விக்ரக ஆராதனை செய்து வருகிறார்கள். அதிக நாள் கெடாமல் இருப்பதற்காகவும், விஞ்ஞான ரீதியாகவும், அவற்றைக் களிமண்ணால் செய்யாமல், கருங்கல்லாலும், செம்பாலும் அமைத்தார்கள்.

**விக்ரகங்களைக் கருங்கல்லாலும் செம்பாலும் அமைத்திருப்பதன் விஞ்ஞான விளக்கம்**

விக்ரகங்களைக் கருங்கல்லாலும் செம்பாலும் செய்தால் அவை அதிக நாள் கெட்டுப் போகாமல் இருக்கலாம் என்பதில் யாருக்கும் சந்தேகம் இருக்க முடியாது. ஆனால் அவற்றை நம் முன்னோர்கள் விஞ்ஞான ரீதியாகவும், அமைத்திருப்பதாகவும் சொல்லும்பொழுது, கல்லிலும், செம்பிலும் என்ன விஞ்ஞானம் இருக்கிறது என்று பலரும் கேட்கலாம். இந்துக் கோவில்களில் ஏராளமான தங்கமும், வெள்ளியும் இருக்கும்பொழுது, அவையும், கெட்டுப் போகாத உலோகங்களாக இருக்க, அவற்றால் மூலத்தானத்திலுள்ள சிவலிங்கத்தையும், வெளியிலுள்ள உற்சவ மூர்த்திகளையும் செய்யாமல் சிவலிங்கத்தைக் கல்லாலும், உற்சவ மூர்த்திகளைச் செம்பாலும் அமைப்பதற்குப் பல காரணங்கள் உண்டு. மின்சாரசக்தியைத் தாங்கிச் செல்வதற்காக விஞ்ஞானிகள் செம்புக் கம்பிகளைப் பயன்படுத்துவதுபோல இதர உலோகங்களால் செய்யப்பெற்ற கம்பிகளைப் பயன்படுத்துவதில்லை என்பதை யாவரும் அறிவர். வானில் உண்டான சப்தத்தை இழுத்துக் கொள்வதற்காக ரேடியோக் கருவிகளுக்கு இன்றைய விஞ்ஞானிகள் செம்புக் கம்பிகளைப் பயன்படுத்துவது போல வேறு இதர உலோகங்களால் செய்யப் பெற்ற கம்பிகளைப் பயன்படுத்துவதில்லை என்பதும் யாவரும் அறிந்ததே. மேலும் பாரமுள்ள ஈயத்தைக் கவ்வி எடுக்கும் ஆற்றல் செம்புக் கம்பிகளுக்கு இருப்பது போல் வேறு எந்த உலோகத்திற்கும் இல்லை என்பதும் யாவரும் அறிந்ததே. இன்றைய விஞ்ஞானிகள் சென்ற ஒரு நூற்றாண்டுக்குள் கண்டு கையாண்டு வருகின்ற இந்த உண்மையை, நம்முடையமெய்ஞ்ஞானிகள் பல்லாயிர வருஷங்களுக்கு முன் கண்டு ஆண்டவனது திருவருள் சக்தியைத் தன்வசம் இழுத்து வாங்கிக் கொள்ளவும் தன்னிடம் நிறுத்திக் கொள்ளவும், பக்தர்களுக்கு அதன் மூலம் அருள் பாலிக்கவும், மற்ற உலோகங்களால் உற்சவமூர்த்திகளைச் செய்விக்காமல், செம்பினாலேயே செய்திருக்கிறார்கள் என்பதை அறியும்பொழுது அவர்களுடைய மெய்ஞ்ஞானம் இன்றைய விஞ்ஞானத்தை எந்த அளவில் விஞ்சியிருந்தது என்பதைக் கண்டு கொள்ளலாம். மேற்கண்டவற்றிலிருந்து உலோகங்கள் எல்லாவற்றிலும் செம்புக்கு மிகுந்த ஆற்றல் உண்டு என்பதும், அது இன்றைய விஞ்ஞானிகள் மட்டுமல்ல பண்டைக்காலந்தொட்டே நமது மெய்ஞ்ஞானிகளும் கண்ட உண்மையாகும் என்பதும் புலனாகும். கல்லினது ஆற்றல், செம்பினது ஆற்றலை விடப் பன்மடங்கு அதிகமாகும். செம்பு எப்படி மின் அலைகளைத் தன்பால் இழுக்கவும் கடத்தவும், ஆற்றலுடையதோ அதுபோலக் கல்லானது எந்தப் பொருளையும் தன்பால் இழுத்துக் கொள்ளக்கூடிய சக்தி வாய்ந்தது. உதாரணமாக மலையானது ஆகாயத்தில் சென்றுகொண்டிருக்கும் மேகத்தைத் தன்பால் இழுத்துக் குளிர்வித்து மழையாகப் பொழியும்படி செய்கிறது. அல்லாமலும், கல்லில் பஞ்ச பூதங்களின் தன்தன்மையும் விசேஷமாக அடங்கியிருந்து வெளிப்படுவதுபோல் மற்ற உலோகங்களில் இல்லை. பஞ்சபூதங்களாவன 1. ஆகாயம் 2. காற்று, 3. நெருப்பு, 4. நீர், 5. நிலம்

1. வெளியில் உள்ள சப்தத்தைத் தன்னகத்தே இழுத்து ஒடுக்கிப் பின்னர் வெளிவிடும் ஆற்றல் ஆகாயத்திற்கு உண்டு. அதே தன்மை கல்லுக்கும் உண்டு. கல் மண்டபங்களிலும், மலைப்பிரதேசங்களிலும் சப்தங்கள் எதிரொலி ஆவதுபோல வேறு எந்த இடங்களிலும் கிடையாது என்பதை உணர்ந்து கொள்ளலாம்.

2. கல்லிலே காற்று உண்டு என்பதைக் கல்லினுள் தேரைக்கும் என்ற தொடரினை ஆய்வதிலிருந்து தெரியலாம். காற்று இல்

லாத இடத்தில் எந்த ஜீவராசியும் உயிர் வாழமுடியாது. கல்லுள் தேரை வசிக்க வேண்டுமானுல் கல்லிலே காற்று இருக்க வேண்டும் அல்லவா? எனவே கல்லில் இரண்டாவது சொல்லப் பெற்ற காற்றும் உள்ளது.

3. கல்லிலே நெருப்புத் தங்கியிருப்பது போல் வேறு எந்தப் பொருளிலும் இல்லை. அதனுல்தான் பழங்காலத்தில் நெருப்பு உண்டாக்க வேண்டுமானுல் இரு கற்களை ஒன்றோடொன்றாய் உராயச் செய்து நெருப்பினை உண்டாக்கி உபயோகித்தார்கள். மரக் கட்டைகளைக் கடைந்தாலும் நெருப்புவரும். இருந்தாலும் கல்லில்தான் நெருப்பின் சக்தி மிகுதியாக இருக்கிறது. அதிலும் சிக்கிமுக்கி கற்கள் என்பவை அந்த வகையில் மிகுந்த ஆற்றல் உடையவை. அநேகமாக அவை தான் தீயினை உண்டாக்க முன்னுளில் உபயோகப் படுத்தப்பட்டன. ஆகவே கல்லில் நாம் மூன்றாவதாகச் சொல்லிய நெருப்பும் உண்டு.

4. மேற்கூறிய மூன்று ஆற்றல்களை உடையதாக இருந்தாலும், கல்லானது தனி இயல்பான குளிர்ந்த நிலையிலிருந்து மாறுமலிருக்கும். இரு கற்களை ஒன்றோடொன்று உராயச் செய்தால் நெருப்பு உண்டான போதிலும் சாதாரணமாகக் கல்லைத் தொட்டால் அது தண்ணீர் போன்று தண்ணென்று இருப்பதை எல்லோரும் அனுபவத்தில் உணரலாம்.

5. இனி ஐந்தாவதாகக் கல்லில் நிலம் என்ற கடைசி பூதம் இருக்குமா? என்பதைக் கேட்கவே வேண்டாம். கல்லே நிலத்தைச் சேர்ந்ததுதான் அல்லவா? கல்லிலே ஐம் பூதங்கள் இருப்பதற்கும் ஆண்டவனுக்கும் என்ன சம்பந்தம் இருக்கிறது என்று சிலர் கேட்கலாம். ஆண்டவனே ஐம்பூதங்களில் கலந்துதான் இருக்கிறூர் என்பதற்கு மாணிக்கவாசகனுர் திருவாசகம் சான்று தருகிறது;

பாரிடை ஐந்தாய்ப் பரந்தாய் போற்றி
நீரிடை நான்காய் நிகழ்ந்தாய் போற்றி
தீயிடை மூன்றாய்த் திகழ்ந்தாய் போற்றி
வளியிடை இரண்டாய் மகிழ்ந்தாய் போற்றி
வெளியிடை ஒன்றாய் விளைந்தாய் போற்றி

என்பது திருவாசகத்தில் போற்றித் திரு அகவலில் வரும் அவ்வழகமைந்த வசனமாகும்.

ஐம்பூத வடிவாய் விளங்கும் அவ்வாண்டவனது உருவத்தை, ஐம்பூதங்களும் அடங்கிய ஒரு பொருளில் வீற்றிருக்கும்படி வேண்டுதல் செய்து வழிபடுவது சாலச் சிறந்ததல்லவா? அதனுல்தான் நம் மூதாதையர்கள் நாம் வழிபடும் மூர்த்திகளுடைய விக்கிரகங்களைக் கல்லால் அமைத்தார்கள். மலைகளைத் தெய்வமாகக் கொண்டு வழிபடுவது இந்தத் தத்துவத்தைக் கொண்டுதான் என்று சொன்னுல் மிகையாகாது.

### கற்சிலையும், செம்பு விக்கிரகமும் பிரதிஷ்டை செய்தபின் தெய்வீக சக்தி பெறுவதன் விளக்கம்

சாதாரணமாக ஒரு கல்லாலோ, செம்பாலோ ஆக்கப்பெற்ற சிலையானது ஆலயங்களில் பிரதிஷ்டை செய்யப்பெற்றுக் கும்பாபிஷேகம் ஆனபின் தெய்வீக சக்தி பெற்று விசேஷ வழிபாடுகளுக்கும், வணக்கங்களுக்கும் உரிய தகுதி பெற்றுத் திகழ்வது எங்ஙனம்? என்றும் அதை விளக்குவதற்கு ஒரு உதாரணம் அல்லது உபமானம் சொல்லலாமோ? என்றும் கேட்டால் நன்றாகச் சொல்லலாம். அறிவுடையோர் அதிலிருந்து அநுமானித்து உணர்ந்து கொள்ளலாம். சாதாரணமாக ஒருவர் ஒரு மடாதிபதியாக விளங்கி ஆட்சி நடத்துகிறூர். மடாதிபதி யாவதற்கு முன்னிருந்த மனிதர்தானே மடாதிபதியான பின்பும் இருக்கிறூர் என்றால் ஆமாம். ஆனுல் அதற்கு முன்பாய் இருந்த பெயரும், சக்தியும் வேறு, மடாதிபதியானபின் அவருக்குரிய சிறப்புப்பட்டமும், சிறப்பு அதிகாரமும் வேறு. அப்படிப் பட்ட சிறப்புப் பட்டமும் சிறப்பு அதிகாரமும் எவ்வாறு பெறுகிறூர். அந்தந்த மடாலயத்தின் சட்டதிட்டங்களின்படியே, சில சடங்குகள் நடைபெறுகின்றன. பட்டாபிஷேகம் என்ற குடமுழுக்கு நடைபெறுகிறது புதிய சின்னங்கள் வழங்கப் பெறுகின்றன சிறப்புப் பட்டமும், சிறப்பு அதிகாரமும் வழங்கப்பெறுகின்றன. அந்தப் பட்டமும், அதிகாரமும் மடாலயத்தாராலும், பொது மக்களாலும் அங்கீகரிக்கப்பெற்று அவற்றிற் குரிய சிறப்பு மரியாதைகளுக்கும் அவரைத்

தகுதி உடையவராகச் செய்கின்றது என்பதை யாவரும் அறிவர். ஒரு சாதாரண மனிதர் ஒரு மந்திரி பதவியையோ, அரச பதவியையோ, வேறு பதவிகளையோ பெறும் பொழுது அரசாங்கத்தின் சட்டப்படி அதற் குரிய சடங்குகள் நடைபெற்று, அதற்குரிய சின்னங்கள் கொடுக்கப்பெற்று, அதற்குரிய அதிகாரம் செய்யப்பெற்று, சிறப்பு மரி யாதைகளுக்கும், சிறப்பு உபசாரங்களுக்கும் உரிய தகுதியைப் பெறுகின்றார் என்பதை யாவரும் அறிவர்.

மேலே சொன்ன சிறப்புப் பட்டமும், சிறப்பு அதிகாரமும் பெற்றிருக்கிறவர்கள் உருவத்தால் முன்னிருந்ததுபோலவே தோற்றம் அளித்தாலும் அவர்களுடைய சிறப்புப் பட்டமும் அதிகாரமும், ஆதிக்க மும், தகுதியும் முன்னிருந்த நிலைக்குமேல் அதிகமாக உள்ளன என்பதை யாவரும் ஒப்புக்கொள்வர். அவ்விதப் பதவியும், பட் டத்தையும், அதிகாரத்தையும், ஆக்கத்தை யும் பெற்ற அவரது உடல் அதற்கு முன் னிருந்த உடலாகவும், வேற்றுமை ஒன்றும் இல்லாததாகவும் இருக்கும் என்பதில் யாருக் கும் எவ்வித சந்தேகமும் இருக்க முடியாது. இந்த உதாரணங்களைக் கொண்டு ஒரு சாதா ரணக் கற்சிலை கும்பாபிஷேகத்தினால் என்ன சிறப்புப் பட்டமும் அதிகாரமும் ஆதிக்கமும் பதவியும் பெறுகின்றதென்பதை அறிவுடை யோர் உய்த்துணர்ந்து ஏற்றுக்கொள்ள முடியும். பூலோகத்திலுள்ள அரசாங்கம் நாம் இவ்வுலகத்தில் பிறந்தபின் அனுசரிக்க வேண்டிய சட்டதிட்டங்களை அமைத்து அச்சட்டதிட்டங்களை அமுல் நடத்துகின்ற அதிகாரிகளை நியமித்து அவர்கள்மூலம் ஆண்டு வருகிறது. ஆனால் நம்மை இப் பூலோகத்தில் ஆணாகவும், பெண்ணாகவும் வெவ்வேறு நிலைகளில், வெவ்வேறு இடங் களில் பிறக்கும்படியும், வெவ்வேறு இன்ப துன்பங்களையும் அனுபவிக்கும்படியும், வெவ் வேறு நிலைகளில் வாழும்படியும் வயது முடிந்தபின் ஸ்தூல சரீரமாகிய கட்டையி லிருந்து ஆவி உடலைப் பிரித்து மேலுலகங் களுக்குக் கொண்டுபோய் அவரவர் செய்த புண்ணிய பாவங்களுக்குத் தகுந்த சொர்க்க நரகமென்னும் அருட்பகுதியிலோ, இருட் பகுதியிலோ வாழும்படியும் அதற்குரிய கால எல்லையில் அந்த ஆவி உடலை அழித்து மறு பிறவியில் தள்ளவோ அல்லது மேல்நிலைக்கு எடுத்துக்கொள்ளவோ செய்கின்ற அரசாங் கம் ஒன்று விண்ணுலகத்திலிருந்து ஆட்சி புரிவதையும், அந்த ஆட்சி வேதாகமச் சட்ட திட்டங்களுக்கு உட்பட்டு ஆட்சி புரிவதை யும் அந்த ஆட்சி சட்டதிட்டங்களை நிறை வேற்றுகின்ற பலதரப்பட்ட அதிகாரிகள், பலதரப்பட்ட அதிகாரங்களோடு, பலதரப் பட்ட உருவங்களில் நம்முடைய கண்களுக் குக் காணமுடியாத சூட்சும உடலிலிருந்து அமுல் நடத்தி வருகிறார்கள் என்பதையும், ஞான நாட்டம் உடையவர்களெல்லாம் ஓரளவு அறிவார்கள்.

**பழனித் திருக்கோயிலைப் பற்றி**

தண்டாயுதபாணியைத் தெரிசிக்க வரும் பக்தர்களுக்குச் சிறந்த முறையில் ஏற்பாடுகள் செய்திருக்கும் நிர்வாகி களைப் பாராட்டுகிறேன்.

10—2—73 (ஒ-ம்) **காமராஜ்**

# தமிழகத் திருக்கோயில்கள் வரலாறு



'சோமலெ'

**முன்னுரை :**

திருக்கோயில்களால் சிறப்புற்றது தெய்வத்தமிழ்நாடு. கலை விளக்கமாகவும், தத்துவ விளக்கமாகவும், அருள் விளக்கமாகவும் நம் முன்னோர் கோயில்களை அமைத்திருக்கிறார்கள். சமயச் சார்பற்ற தமிழக அரசும் கோயிற் கோபுரத்தை அதன் சின்னமாக ஏற்றுக்கொண்டிருக்கிறது.

பழனி மலைமீது அமைந்துள்ள அருள்மிகு த்ண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில் ஆட்சியாளர்கள் சிறப்பாக வெளியிடும் குட நீராட்டு மலரில் இத்தகைய திருக்கோயில்களின் வரலாற்றை வழங்குமாறு பணித்திருக்கிறார்கள். இத்தலைப்பில் முழுமையான ஒரு நூல் வெளிவரவேண்டும். அது, மேற்கோளுடன் கூடிய ஆராய்ச்சியாக அமைந்து, படிப்பவர் கருத்தைக் கவரும். கோயில்களின் அமைப்பு முறையைக் காட்டும் வரைபடங்களும் நிழற்படங்களும் இருந்தால் அதைப் பார்ப்பவர்களின் கண்களையும் அந்நூல் கவரும். ஒரு கட்டுரையில் இதை எழுதுவது, குழம்புச் சட்டிக்குள் கோலிக்குண்டு விளையாடுவதற்கு ஒப்பாகும் !

**நடுகல் :**

வீரச் செயல்புரிந்த முன்னோர்களை நினைத்து, நடுகல் அமைத்து வழிபடும் வழக்கம் தமிழ்நாட்டில் பல நூற்றாண்டுக்கு முன் நிலவியது. இதன் பின்னர் இறை வழிபாட்டின் முதற்கட்டமாக வேல், சூலாயுதம், போன்றவற்றை நட்டு வழிபடும் மரபு பரவியது. வேல், முருகனுக்கே உரிய ஆயுதம். இதை ஏந்தும்போது வேலன், வேலாயுதம், வடிவேலன் போன்ற பெயர்கள் முருகனுக்கு வழங்குகின்றன. சூலாயுதம், சிவனுக்குரியது. இவ்வாறே திருமாலுக்குச் சக்கரமும் இந்திரனுக்குக் குலிசமும் உண்டு.

**மரம் :**

இறைவனின் ஆயுதங்களை ஊன்றி வழிபட்ட மக்கள் அவற்றுக்கு நிழல் தர, மரங்களை நட்டனர். அவ்வாறு உண்டான வையே தல விருட்சங்கள். காலப்போக்கில் உலோகங்களில் இறை உருவங்களும் அவற்றை வைக்க மரக்கோயில்களும் கட்டப்பெற்றன. இன்றும் கேரளத்தில் புகழ்பெற்ற கோயில்களின் கருவறை முதலிய பகுதிகள் மரத்தாலேயே இருக்கின்றன. கேரளம், பழந்தமிழ்நாட்டின் ஒரு பகுதி. கேரள மரபைத் தமிழ் மரபாகவே கொள்ள வேண்டும்.

இவ்வாறு கொள்வதற்கு மேலும் ஆதாரம் உண்டு. அடைமொழி இல்லாது 'கோயில்' என்னும் தனிச்சொல் சிதம்பரம் நடராசர் கோயிலேயே குறிக்கும். அங்குள்ள சபாநாதர் மண்டபம் மரத்தால் அமைக்கப் பெற்றிருப்பதை இப்போதும் காணலாம். ஊர்த்துவத் தாண்டவமூர்த்தி உட்கோயில் பிற்காலத்தில் கருங்கல்லால் கட்டப்பெற்ற தாயினும், தூண்களும் விமானமும் மரத்தி னல் அமைக்கப்பட்டது போலவே திகழ் கின்றன.

**மரம் — கல்:**

மரம், பல நூற்றாண்டுகளுக்குப் பிறகு கல்லாக மாறும். சான்று: புதுச்சேரிக்கு அருகேயுள்ள திருவக்கரை சம்பந்தர் தேவாரம் பெற்ற இத்தலத்தில் இருக்கும் பலவகைக் கற்கள், கண் பார்வைக்கு மரமாகத் தோற்றம் தருகின்றன. இவை, ஓராயிரம் ஆண்டுகளுக்கு முன் மரமாக இருந்தவை. Stone Timbers என்ற பெய ருடையன என்பர் அறிவியல் - தொல் பொருள் ஆராய்ச்சியாளர்.

கற்கோயில்கள் அமைத்த காலத்தில் தமிழர்கள், மரக் கோயில்களையே முன் மாதிரியாகக் கொண்டனர். தஞ்சை மாவட்டத்தில் ஆவுடையார் கோயில் என் னும் திருப்பெருந்துறையில் கொடுங்கை என்ற ஒட்டுப்பலகை போன்ற மென்மை யான மரத்தில் மட்டுமே செய்யக்கூடிய வேலைகள் கல்லில் செய்யப்பெற்றிருக் கின்றன.

கும்பகோணம் வட்டத்தில் திருவலஞ் சுழியில் உள்ள கல்லாலான கதவு, மரச் சட்டக் கதவு போலச் செய்யப்பெற்று, பல கண்களை உடையதாக உளது.

**செங்கற்களாலான கோயில்கள்:**

மகேந்திர பல்லவன் காலத்திற்கு முன் செங்கல், சுண்ணம்பு, மரம், உலோகம் ஆகியவற்ருலான கோயில்கள் இருந்தன. அவை அழியத்தக்க பொருள்களால் ஆயின. நாளடைவில், தரையும் சுவர்களும் செங்கற் களால் ஆயின; மேற்கூரை மரத்தால் ஆயிற்று. இணைப்புக்காக ஆணிகள் பயன் படுத்தப்பெற்றன.

**உலோகங்கள், செங்கல், கருங்கல்:**

செங்கற்களாலான கோயில்கள் உலோகத் தகடுகளைக் கொண்டு வேயப் பெற்றிருந்தன. சுற்றுச் சுவர்கள் செங்கற் களால் கட்டப்பெற்றன. பழமையான பெருங் கோயில்களில் மதிற் சுவர்கள் கற் சுவர்களாகக் காணப்படினும் அவற்றை இடித்துப் பார்த்தால் ஓர் உண்மை புலப் படும். செங்கற்களாலேயே அச்சுவர்கள் அமைந்துள்ளன. அந்தச் செங்கற் சுவர் களுக்குப் பாதுகாப்பாக இருபுறமும் கருங் கற் சுவர்கள் கட்டப்பெற்றிருக்கின்றன. கருங்கல்லைவிடச் செங்கல் உறுதியானது என்பதை இன்றைய பொறியியல் அறிஞர் களும் ஏற்றுக்கொள்கின்றனர்.

வாயில்களையும் அவற்றுக்கு மேலே உயர்ந்த கோபுரங்களையும் கொண்டு சுற்றுச் சுவர்கள் விளங்கின. துரு ஏருத வாறு வாயில்களுக்குச் செந்நிற இரும்புக் கதவுகள் போடப்பெற்றிருந்தன. (ஆதாரம்: நெடுநல்வாடை)

சிதம்பரத்தில் ஐந்தாம் நூற்றாண்டி லேயே பொன்னம்பலம் இருந்தது என்று கோயில் புராணத்திலும், திருநாவுக்கரசர் தேவாரத்திலும் உள்ள பாடல்களால் தெரிகிறது.

**மகேந்திர பல்லவன் கட்டிய கோயில்:**

புதுச்சேரிக்கு அடுத்த சின்னபாபு சமுத்திரம் இரயில் நிலையத்திற்குத் தெற்கே மூன்று கி மீ. தொலைவில் உள்ளது மண்டகப்பட்டு. 'கல், மரம், உலோகம் சுண்ணம்பு இல்லாமல் பல்லவன் கோயில் அமைத்தான்' என்பதை இங்குள்ள கல் வெட்டு உணர்த்துகிறது. எனவே, இக் கோயிலே மகேந்திரன் அமைத்த முதல் கோயிலாக இருக்கலாம் என்று பல்லவ வரலாற்றை ஆராய்ந்த டாக்டர் மா. இராச மாணிக்கனர் கருதுகிருர்.

**'ஓம்'கார அமைப்பு :**

சில இடங்களில் ஓம்கார அமைப்பில் கருவறை உள்ள வட்ட வடிவமான கோயில்கள் கட்டப்பெற்றன. சான்று: காஞ்சி ஏகாம்பரேசுவரர் கோயிலுக்கு அருகேயுள்ள ஜுரஹரேச்சுவரர் கோயில்.

**மாடக்கோயில் :**

காஞ்சிபுரத்திற்கு அருகேயுள்ள மாறல் என்னும் தலத்துச் சிவன்கோயில் தூங்கானை மாடக்கோயிலாகும். நெய்வேலிக்கு அருகேயுள்ள பெண்ணாகடத்திலும் யானை தூங்கும் நிலையில் ஒரு கோயில் இருக்கிறது. இங்கு, மூலவரை கோயிலின் உட்சுற்றில் இருந்தவாறே நான்கு திக்குகளிலும் உள்ளவர்கள் வழிபட வசதியாக, கல்லில், கண் வழிகள் செதுக்கப்பெற்றுள்ளன. இக் கோயிலைக் கோச்செங்கண் சோழன் கட்டியதாகக் கூறுவர். இவன் காலத்தில் பலவகையான மாடக்கோயில்கள் கட்டப் பெற்றதற்கு ஆதாரங்கள் உள்ளன.

மாடக்கோயில்கள் முதலில் செங்கற்களாலும் பிறகு கருங்கற்களாலும் கட்டப் பெற்றன. பெண்ணாகடம் கோயிலைப் பின்பற்றித் திருத்தணிகை வீரட்டானேசுவரம் என்னும் தூங்கானை மாடக்கோயில் கட்டப்பெற்றது.

**தேர்க்கோயில்கள் :**

தேர்போன்ற அமைப்பில் அமைந்த மாமல்லபுரத்துக் கோயில்கள் உலகப் புகழ் பெற்றவை. பழங்காலத்து மரக்கோயில்களே தேர்களாகப் பிற்காலத்தில் உருவாயின என்ற கருத்து ஏற்றுக்கொள்ளத் தக்கது.

**திராவிடர்களின் பழமையான கோயில் அமைப்பு :**

நீலகிரி மாவட்டத்தில் தோடர் என்னும் பழங்குடியினர் வாழ்கின்றனர். இவர்களுடைய கோயில்கள் வட்டமான கற்சுவரை எல்லையாகக் கொண்டன. நெல்லை மாவட்டத்திலும் இத்தகைய கோயில் அமைப்பு ஓரிரு இடங்களில் உண்டு. இதுவே திராவிடர்களின் பழமையான கட்டிட அமைப்பு என்று கூறுவர்.

**தத்துவம் :**

கருவறையில் இறைவனை ஒருருவில் இருக்கச் செய்து, கோயில் முழுவதுமே நமது உடலோடு ஒத்த முறையில் அமைக்கப்பட்டுள்ளது. உடலுக்குக் கால் எப்படியோ அப்படி கோவிற்றூண்கள் 'பாதம்' என்று குறிப்பிடப்படுகின்றன. பாதத்திற்கு 'பாதுகை' தேவை. எனவே தூணின் அடிப்பகுதி 'பாதுகை' எனப் பெயர்பெறுகிறது. தூணுக்கு மேல் சிகரத்திற்குக் கீழுள்ள பகுதி 'களம்' (கழுத்து) என்று வழங்கப்படுகிறது. அதற்கும் மேலே, வளைந்த ஒரு பகுதிக்கு 'நாசிகா' (மூக்கு) என்று பெயர். மனித உடலுக்குத் தலை போலச் சிறப்புடையது கருவறை மீதுள்ள 'சிகரம்'.

அன்னமயகோசம், பிராணமய கோசம், மனோமயகோசம், விஞ்ஞானமய கோசம்,ஆனந்த மயகோசம், ஆகியவற்றைப் போன்றவை ஐந்து பிரகாரச் சுவர்கள். அவற்றைச் சுற்றிவந்து இறுதியில் கருவறைக்குச் செல்ல வேண்டும். இதனால் ஒருவன் படிப்படியாகப் பருப் பொருளான புறப்பொருளை விட்டு, கருப் பொருளான சூக்கும நிலையில் காணப்படும் இறைவனை நெருங்குகின்றான் என்பது பொருள்.

இத் தத்துவத்தை மேலைச் சிதம்பரம் என வழங்கும் பேரூரில் கூத்தப்பெருமான் சந்நிதியிலும் பிற கோயில்கள் சிலவற்றிலும் தெளிவாக உணரலாம். பிரகாரங்களின் அழகுக்கும் நீளத்துக்கும் பெயர்பெற்றது இராமேசுவரம் இராமநாதசுவாமி கோயில்.

**வகை - 3 :**

கோயிலின் முக்கியமான பகுதிகளுள் ஒன்று கருவறை மீதுள்ள விமானம். அது சதுரமாக இருந்தால் "நாகரம்" எனப்படும். வட்டமாக இருந்தால் "வேசரம்" எனப்படும். ஆறு அல்லது எட்டுப்பட்டையாக இருந்தால் "திராவிடம்" எனப்படும்.

நெல்லைப் பகுதியில் ஒரு கோயிலில் நாகர அமைப்பையும், கங்கைகொண்ட சோழீச்சுரக் கோயிலில் வேசர அமைப்பையும், தஞ்சைப் பெரியகோயிலில் திராவிட அமைப்பையும் பார்க்கலாம்.

தமிழ் நாட்டிலிருந்து கோயில் கட்டிட அமைப்பு முறை சில நூற்றுண்டுகளுக்கு முன் கடல் கடந்து இந்தோனேசியாவிலும், கம்போடியாவிலும், தென் அமெரிக்காவில் பல நாடுகளிலும் பரவியிருப்பது நமக்குப் பெருமை தருவதாகும்.

**இயற்கையும் செயற்கையும் :**

மலை உச்சி, மலை அடிவாரம், கடற்கரை, தீவு, ஆற்றங்கரை, அருவிக்கரை ஆகிய வற்றைப் பார்த்தவுடன் அங்கே விரும்பிய பெண்ணுடன் நடனமாடவும், பொழுது போக்கவும் மேலை நாட்டார், உணவு விடுதி களைக் கட்டுகின்றனர். இத்தகைய இடங் களைக் கண்டபோது நம் முன்னோர்கள் அவற்றை இறைவனின் கலைப்படைப்பு களாகக் கருதி அங்கே அவனுக்குக் கோயில் கட்டி அவன் புகழையே பாடி வந்திருக் கின்றனர்.

**நாளும் கோளும் :**

சிற்ப வல்லுநரால் நாள் குறித்து, நாழிகை பார்த்துக் கோயில் அமைக்கும் முறை சங்க காலத்திலேயே நிலவியதாக

''ஒருதிறம் சாரா வரைநாள் அமையத்து"

முதலிய நெடுநல் வாடை (75-78) அடி களாலும்,

"அறக்களத் தந்தணர் ஆசான் பெருங்கணி''

முதலிய சிலப்பதிகார அடிகளாலும் (நடுகற்காதை, வரி 222-225) அறிகிறோம்.

**ஆகமமும் விதிவிலக்கும் :**

சில இடங்களில் சிவன் கோயில்கள் மேற்குப் பார்த்து அமைந்துள. இந்த அமைப்பு ஆகமத்துக்கு மாறுபட்டது. எனவே, சூரியனுக்குக் கோயில் எடுத்து, சிவன் கோயிலுக்கு எதிராக அதைக் கட்டுகிற பழக்கத்தைச் சோழர் உண்டாக் கியதாகத் தெரிகிறது. இத்தகைய கோயிற் களுள் ஒன்று புதுக்கோட்டையிலிருந்து 13 மைல் தொலைவிலுள்ள திருக்கற்றளை.

சோழப் பேரரசில் சிற்றரசர்களாக இருந்த இருக்குவேளிர், அஷ்டபரிவாரக் கோயில்களைக் கட்டினர். சூரியன் கோயிலைச் சிவன் கோயிலின் வடகிழக்குத் திக்கில் கட்டும் பழக்கத்தை அவர்கள் புகுத்தினர்.

ராஜராஜ சோழனும் இதைப் பின் பற்றினன். அவன் மகன் ராஜேந்திர சோழன் கட்டிய கங்கைகொண்ட சோழ புரக் கோயிலில் சூரிய பீடத்தையும் நவக் கிரகங்களையும் அமைத்தான். அவனுக்குப் பின், முதற் குலோத்துங்கன் காலத்தில் சூரியனர் கோயிலில் சூரியனுக்கு ஒரு தனிக் கோயிலும் நார்த்தாமலை - விஜயாலயச் சோழீசுவரத்தில் சூரியனுக்குச் சிறப்பிடம் தரும் உட்கோயிலும் கட்டப்பெறறன.

**கட்டிடக்கலைக் கதம்பம் :**

ஆட்சிகள் அடிக்கடி மாறியதால் அந்தந்த அரச மரபினருக்கு விருப்பமான வகையில் சில கோயில்கள் விரிவாக்கப் பட்டிருக்கின்றன. இக்கோயில்களில் கட்டிடக்கலை முரண்பட்டதாக இருக்கிறது. காஞ்சிபுரத்திற்கு அருகேயுள்ள தக்கோலத் தில் அடித்தளம் பாண அரசர்களால் அமைக்கப்பட்டது. மேல்தளத்தில் சில பகுதிகளைப் பல்லவரும் வேறுசில பகுதி களை ராஷ்டிரகூடரும், சோழரும், விஜய நகர அரசர்களும் கட்டியுள்ளனர்.

**கோபுரங்கள் :**

சோழர் காலத்தில் விமானங்களுக்கே சிறப்பிடம் இருந்தது. விசயநகர அரசர் களும் நாயக்க மன்னர்களும் கோபுரங்களை உயரமாகவும் அழகாகவும் அமைப்பதில் பேரார்வம் காட்டி, அவற்றைச் செம்மைப் படுத்தி வானோங்கக் கட்டினர். இவை எழுநிலை மாடமாகவும், ஒன்பதுநிலை மாட மாயும் அமைந்து நெடுந் தொலைவிலுள்ள வர்களையும் கோயிலுக்கு அழைக்கும் அமைப்புக்களாயும், வர இயலாதவர்கள் கோபுரத்தை வழிபடுவதற்கு வாய்ப்பு நல்கு வனவாயும் உள்ளன. பல நூறு ஆண்டு களாயினும் எத்துணையோ புயல்களுக்கு அறைகூவி நின்று அவற்றால் சிறிதும் பாதிக்கப்படாமல் இருப்பது, இவற்றின் பெருமையாகும்.

நம் தலைமுறையில் கோபுரங்களைப் புதுப்பிக்கும்போது பழைய சுதைவேலைகள் சேதம் அமைந்துள்ளன. அவற்றின் கலைச் சிறப்பை, காலம் கடந்த காரைச் சிற்பங் களின் அழகை நம்மில் சிலர் உணரவில்லை. குடநீராட்டு என்றால் ஏதோ வண்ணம்

தீட்டுவது என்றுகூடத் திருப்பணிக் குழுவினர் கருதினர். மதுரை மீனாட்சி கோயில் திருப்பணிக்குப் பிறகு, 1963-ல் இதைப் பற்றி ஒரு கிளர்ச்சி உண்டாயிற்று. "பொம்மைகளை" நிழற்படமாக எடுத்து, அந்தப் படங்களைப் பார்த்தே மீண்டும் சுதை வேலை செய்ய வேண்டும் என்ற முடிவு இப்போது ஏற்பட்டிருக்கிறது. இவ்வகையில் பெருமைக்குரிய நமது பழங்கலைகளைப் பாதுகாக்க ஐக்கிய நாடுகள் கல்வி அறிவியல் பண்பாட்டுக் கழகமும் (UNESCO) முன்வந்திருக்கிறது. சிற்ப வல்லுநர்களும், கே. சி. எஸ். பணிக்கர் போன்ற நுண்கலை அறிஞர்களும், நமது கலைச் செல்வத்தைப் போற்றும் மேலை நாட்டார் சிலரும் இம்முயற்சிக்கு ஒல்லும் வகையால் உதவியிருக்கின்றனர்.

**மண்டபங்கள் :**

கோயில்களின் மற்றொரு முக்கியமான பகுதி மண்டபங்கள். இவை 10-11-ஆவது நூற்றாண்டுகளில் பெரிய அளவில் கட்டப்பட்டன. ஒற்றைக்கால் மண்டபம், 16 கால் மண்டபம், நூற்றுக்கால் மண்டபம், ஆயிரக்கால் மண்டபம் என்று மண்டபங்கள் பல வகையின. கல்வியும் கலையும் வளர்க்க இவை கட்டப்பட்டன. பட்டிமன்றங்கள் இங்கே நடைபெற்றன. தந்தையிடமிருந்து மகனும், பாட்டனிடமிருந்து பேரனும் இந்த மண்டபங்களில் மேளம் முதலிய இசைக் கலைகளைப் பயின்று வந்தனர். திருவிழாக்களில் இறை உருவங்கள் காட்சி கொடுக்க இம்மண்டபங்கள் பயன்படுகின்றன.

ஏராளமான மண்டபங்கள் தமிழ்நாட்டிலிருப்பதால் நமக்கு அவற்றின் பெருமை தெரியவில்லை. மதுரை மதனகோபால்சாமி கோயிலில் இருந்த ஒரு 16 கால் மண்டபத்தைக் குருக்களிடம் விலைக்கு வாங்கி அமெரிக்கர் தங்கள் நாட்டுக்குக் கொண்டு போய் பிலடெல்பியா மியூசியத்தில் வைத்திருப்பதை அங்கே யான் கண்டேன். இந்த நூற்றாண்டில் அமெரிக்கருள் தலைசிறந்த அறிஞருள் ஒருவராய் விளங்கும், என் நண்பர் பேராசிரியர் டாக்டர் நார்மன் பிரௌன் இம்மண்டபத்தின் சிறப்பைப் பற்றி ஒரு நூல் எழுதியுள்ளார்.

கல்யாண மண்டபங்களும் முக மண்டபங்களும், விசயநகரப் பேரரசை வளர்த்த கலைஞர்களின் திறனைப் பறைசாற்றுகின்றன. காஞ்சிபுரம் வரதராஜ சுவாமி கோயில் வேலூர் ஜலகண்டேசுவரர் கோயில், விரிஞ்சிபுரம் கோயில் ஆகியவற்றில் நூற்றுக்கால் மண்டபங்களும் மதுரையில் ஆயிரக்கால் மண்டபமும், விசயநகர ஆட்சியில் ஓங்கியிருந்த ஹம்பி கோயில் கட்டிடக் கலையினும் மேம்பட்டவை என்று சொல்ல முடியா விட்டாலும் அவற்றுக்கு ஒப்பானவை என்பதில் தடையில்லை.

**வரலாறு :**

திருவரங்கம் அரங்கநாதர் கோயிலில் விசயநகர மன்னர்களும் மராட்டிய மன்னர்களும் தங்கள் வரலாறுகளைக் கோயிற் சுவர்களில் பொறித்திருக்கிறார்கள். இவ்வாறே சேர, சோழ, பாண்டியர் காலங்களில் கட்டப்பெற்ற கோயில்கள், அவ்வக்காலத்து வரலாற்றுக் களஞ்சியங்களாக விளங்குகின்றன.

விசயநகர், மதுரை நாயக்க மன்னர்களுக்குப் பின் தமிழகக் கோயில்களைப் பேணியும் புதுப்பித்தும் புதுக் கோயில்களைக் கட்டியும் வந்த பெருமை தமிழ்நாடெங்குமுள்ள சிற்றரசர்களையும் சேதுபதிகள் போன்ற குறுநில மன்னர்களையும் ஆதீனங்களையும் நாட்டுக் கோட்டை நகரத்தார்களையும் சேரும். நம் நாடு அரசியல் விடுதலை பெற்ற பிறகு தமிழக அரசுத் துறையான இந்து அறநிலையக் கழகம் பொது மக்களின் நன்கொடைகளைக் கொண்டு இப் பணிகளைச் சிறப்புறச் செய்து வருகிறது.

இவ்வகையில் செல்வம் கொழிக்கும் பழனி அருள்மிகு தண்டாயுதபாணி திருக் கோயில் எடுத்துக் காட்டாக விளங்குகிறது. கல்வி, கலைத்துறைகளிலும் இக் கோயிலின் வருவாய் செலவிடப் பெறுகிறது. ஏனைய கோயில்களுக்கும், பழனி, வாரி வழங்குகிறது. தமிழ் அன்பராயும், முருகன் அடியாராயும் விளங்கும் திருவாளர் மனோகரன் அவர்களுடைய சீரிய தலைமையில் அறங்காவலர்கள் பழனிக் கோயிலைப் பல வகையாகப் புதுக்கியும் பெருக்கியும் விழாக்களைச் சிறப்பாக நடத்தியும் அடியார்களுக்கு வேண்டிய வசதிகளை இக் காலத்துக்கு ஏற்ப மேன்மேலும் செய்து வருவது பாராட்டுக்குரியது.



# அருள்வாய் முருகா அருள்வாயே!



சௌந்தரா கைலாசம்

நிலையாப் பொருளை நிலையென்றே
நினைத்து நெஞ்சே தடுமாறி
அலைந்து கெடுதல் அழகாமோ?
அழிவைத் தேடி அணைப்பதுவோ?
குலைகுலை யாய்மாங் கனியிருக்கக்
கொள்ளுவ தோநீ எட்டியினை?
கலையா அழகுக் கந்தனையே
கண்டால் உண்டோ இடரதுவே?



கருணைக் கடலே குடிபுகுவாய்
கவலைக் கடலை அகற்றிடுவாய்
முருகா அழகா சிவகுமரா
முடியா முதலே அருளுருவே!
உருகிப் பருகி உளங்குளிர்ந்திவ்
வுலகில் பிறவிப் பயனடையத்
தருவாய் எனக்கோர் வரமுடனே
தனிச்செந் தமிழே சுவையமுதே!



செயலில் வெற்றி கண்டிடவும்
சிந்தையில் அன்பே கொண்டிடவும்
புயலாய்த் துன்பம் வந்தாலும்
புன்னகை யுடனே எந்நாளும்
அயரா தென்றுமி ருந்திடவும்
அருளாம் அமுதம ருந்திடவும்
வியன்தமி ழாலுனைப் பாடுவனே,
வேல்வேல் வேலென் றுடுவனே!



உடையேன் காதல் நெஞ்சினிலே
உன்றன் புகழைப் பாடிடவே!
வடிவேல் முருகா! அறியாயோ!
வந்தே அருளைப் புரியாயோ?
கடையைக் கட்டும் முன்னாலே
கன்னித் தமிழில் பாமாலை
அடியேன் சூட்டி மகிழ்ந்திடவே
அருள்வாய் முருகா! அருள்வாயே!



# அருள்மிகு காசிவிசுவநாத சுவாமி கோயில்

## தென்காசி



கீர்த்தி மிக்க தீர்த்தச் சிறப்பும், மனித இதயத்தில் ஆனந்தத்தைச் சேர்த்து வைக்கும் தலச் சிறப்பும், அண்டங்கடந்து அகண்டங்கடந்த எல்லாம் வல்ல இறைவனுடைய மூர்த்திச் சிறப்பும் ஒருங்கே அமைந்தது தான் தென் காசி **காசிவிசுவநாதர்** திருக்கோயில்.

கண்ணையும் கருத்தையும் ஒருங்கே கவர்ந்து, வண்ண வண்ணப் புதுமைகளைக் காட்டும் சிற்பங்கள் நிறைந்த கலைக்கூடந்தான் காசிவிசுவநாதர் ஆலயம்.

சரித்திரச் சான்றுகள் நிறைந்த கல்வெட்டுக்களும், தேன் சொட்டச் சொட்டத் தித்திக்கும் கவிதைகளும் நிறைந்த பெருங்கல் தூண்கள் அறிவுக்கு விருந்து தரும் இத்திருக்கோயிலில்.

சாரலும் தூரலும் மாறி மாறி வீசிக்கொண்டிருக்கும் தென்காசியிலுள்ள இத்திருக்கோயில், விண்முட்டும் மாடங்களோடும், விசாலமான மணி மண்டபங்களோடும், வளமான உள் மண்டபங்களோடும் சிற்ருற்றின் கரையில் கம்பீரமாய் நின்று நிலவுகிறது.

554 அடி நீளமும் 318 அடி அகலமும் கொண்ட இத் திருக்கோயில், மதிலும் விமானமும், உள்முற்றமும், புல் வெளியும் பெற்றுக் காசி விசுவநாதரின் கருணையை - உலகம்மன் திருவருளை அடியார்களுக்கு வாரி வாரி வழங்கிக்கொண்டிருக்கிறது.

தேரும், திருவிழாவும், இன்னிசை முழக்கமும் சொற்பொழிவுப் பெருக்கமும், ஆடலும் பாடலும் கூடிக் குலாவி அன்பர்களை இன்பப்படுத்து கிறது. வழிபாடும், பூசனையும் பரவசமூட்டுகிறது. மூர்த்தியும் தீர்த்தமும், தலமும் கீர்த்தி மிகக் கொண்டது, தென்காசிக் காசிவிசுவநாதர் திருக் கோயில்.

புகைவண்டி நிலையமும், சாலைப் போக்குவரத்து வசதியும் நிறைந்த இடத்திலமைந்துள்ளது தென்காசி.

திருக்குற்ருலம், திருவிலஞ்சி, பைம்பொழில் முதலிய திருக்கோயில் பகுதிகளை அரவணைத்துக்கொண்டு விளங்குகிறது தென்காசித் திருக் கோயில்.



நங்கக் கவசங்களுடன் ஆலய அதிகாரியும், பணியாளர்களும்



திருக்குட நன்னீராட்டு விழா - அலுவல் தனி அதிகாரிகள்

# பொருளியல் வீழ்ந்தது எங்ஙனம்?

## ஒரு வரலாற்றுக் கண்ணோட்டம்





திரு. ஔவை சு. துரைசாமி

நமது நாடு ஒரு காலத்தில் புண்ணிய நாடு என்றும் "வெள்ளி விதைப்பப் பொன்னே விளையும் வியத்தகு நாடு" என்றும் புகழப் பட்டதுண்டு. "புதிய கலைகள் மெத்த வளருது மேற்கே" என இந்நாளிற் கூறுவதுபோலச் "செல்வ வகைகள் பலவும் இந்திய தேசத்தில் விளையுது சென்றிடுவீரே" என மேனாட்டவர் தம்மிற் பாடிக்கொண்டனர். மேனாட்டில் ஒவ்வொரு இனத்தவரும் இந்தியாவுக்கு வந்து போக வழி கண்டனர். அம்முயற்சியின் விளைவு தான் அமெரிக்க நாட்டையும் இருவகை இந்தியத் தீவுகளையும் கண்டு மேனாட்டவர் குடியேறிச் செல்வரான செய்தியாகும்.

இங்ஙனம் மேனாட்டவர் பல்கி உலகமெல்லாம் பரந்து சென்று செல்வத்தாற் பண்பு மேம்பட்டமைக்கு அடிப்படை உந்துணர்வாக இருந்த இந்திய நாடு, வடக்கு தெற்கென இரண்டாய் இயன்று, பொருள் வளமும் மக்களினமும் பெருகியிருந்தது. இமயம் சார்ந்த வடபுலத்தில் சிந்து, கங்கை என்ற இரண்டு பேராறுகளின் நீர்ப்பெருக்கும், விந்தமலையடியில் நருமதை, தபதி என்ற ஆறுகளின் நீர் வளமும் மக்கள் வாழ்க்கைக்குரிய பொருட் செல்வம் மிக்குப் பொலிந்து மேம்பட உதவி புரிந்தன.

தென்னாட்டிலும், வேங்கடத்திற்கும் குமரிக்கும் இடையில் பாலாறு, பெண்ணை, காவிரி, வையை, பொருநை என்ற ஆறுகள் படர்ந்து நீர்வளம் சுரந்து நெல்லும் பொன்னும் விளைந்து மக்களை நன்னீர்மை குன்றாது வாழச் செய்தன. விளைவு மிகுதியால் தென்னாட்டவர் கடல் கடந்து சென்று வாணிகம் செய்து பொருளீட்டும் திறத்திலும் மேன்மை எய்தினர். இது தென்தமிழ் நாட்டுச் சங்க கால நிலை.

இரண்டாயிரம் ஆண்டுகட்கு முற்பட்ட சங்க காலத்தை அறிதற்குப் பத்துப்பாட்டு எட்டுத்தொகை என்ற நூல்கள் உதவுகின்றன. அவற்றால் தமிழ் வாழ்வில் விளைந்து மலிந்த விளைபொருளும் தொழிலிடைத் தோன்றிய செய்பொருளும் ஓரளவு உணரப்படுகின்றன. மக்களிடையே உண்போரும் உழைப்போரும் என இரு திறத்தினர் வாழ்ந்தனர். அவருள் உழைப்போர் உழவர் வணிகர் காவலர் என்று முத்திறத்தினராய் இருந்தனர். உழுது விளைத்த மிகுபொருளை விற்றற்கு வணிகரும், உழவர்க்கும் வணிகர்க்கும் காப்பாகக் காவலரும் தோன்றிக்,

"கொள்வதூஉம் மிகைகொளாது
கொடுப்பதூஉம் குறைகொடாது
பல்பண்டம் பகர்ந்து வீசும்"

வாணிக வாழ்வால் வளமிக்கு வாழ்ந்தனர். இவர்கட்கு வேண்டும் உடையும் கருவியும் படையும் செய்துதவும் தொழிலாளர் தொழில்வளம் மிக்குச் சிறந்து செல்வ நிலையில் திகழ்ந்தமை அறிகின்றோம். சங்க காலச் செல்வர், "முத்தினும் மணியினும் பொன்னினும் (செய்த) நேர்வரும் குரைய கலம்" எனவும், "அருவிலை நன்கலம்" எனவும், புகழப்படும் அணிகலம் செய்தணிந்து சிறப்புற வாழ்ந்தமை தெளிகின்றோம். தென்னாட்டிலிருந்து தங்கள் யவன நாடுகட்கு ஆண்டுதோறும் பல்லாயிரம் பொன் மதிப்புள்ள பண்டங்கள் வருவது கண்டு, பொருது எழுதிய உரோமானிய அறிஞர் குறிப்புக்கள் இன்று நாம் அறியக் கிடைக்கின்றன. நம் நாட்டைப் பிற நாட்டவர் சுரண்டியதுபோல நாம் பிற நாட்டைச் சுரண்டிக் கொணர்ந்த வரலாறும் உண்டு. அதனைக் கிழக்காசிய நாடுகளும் ஈழ நாடும் தமது நாட்டு வரலாறு வாயிலாக உரைக்கின்றன. "ஈழத் துணவும் காழகத் தாக்கமும்" என நம் நாட்டுத் தமிழ் இலக்கியங்களும் ஒளிக்காமல் உரைக்கின்றன.

சங்க காலத்தினின்றும் வருவேமாயின் அக்காலத் தமிழாட்சிக்குப்பின் வேற்றவரான பல்லவராட்சிதான் சுமார் 500 ஆண்டுகள் தொடர்ந்து தமிழ்நாட்டு வடபகுதியில் நிலவிற்று. அவர்களது வரலாற்றைக் கிடைத்த சான்றுகளைக் கொண்டு தெளிவாக எழுதியுதவும் அறிஞர் தோன்றாமையாலும், இருக்கும் அறிஞரை அத்துறையில் ஊக்கும் நல்லரசு இன்றுவரை உளவாகாமையாலும் நமது நாட்டவர் இனிது தெரிந்து கொள்ளுமாறு இல்லை. பல்லவராட்சியை ஓரளவு உணர்த்தும் கல்வெட்டுக்களும் செப்பேடுகளும் கிடைத்துள்ளன. அவற்றை வெளியிட்டு விரும்பிக் கற்கும் மக்கள் கைக்கு எட்டுமாறு செய்யும் எண்ணமுடைய அரசியல் தலைவர்களும் கல்வியாளர்களும் நாட்டில் இல்லை. இந்நாளில் தன்னலமற்ற பரந்த அறிவுடைய பெருமக்கள் பேரரசின் கல்வித் துறையில் இடம் பெறவில்லை.

பல்லவர் காலத்தில் உழவினும், தொழில்துறை வளம் பெற்றது என அவருடைய கல்வெட்டுக்கள் கூறுகின்றன. கற்களைக் கொண்டு அழகிய கோயில், மண்டபம், குகைகள், குளங்கள் ஆகியன வகுத்தலில் அவர்கள் மேன்மையுற்றனர்; அவர்க்கு முன் மரத்தாலும், செங்கற்களாலும் அமைந்த கோயில்கள் சில பல்லவராட்சியில் கற்கோயில்களாயின. சிற்பத் தொழில் சிறந்த ஆதரவு பெற்றது. நெசவுத் தொழிலும், பொன் செம்பு முதலியன கொண்டு செய்யும் பல்வகைத் தொழிலும் மேன்மையுற்றன. வடமொழிப் பயிற்சி பேராதரவு பெற்றது; வடமொழிக் கடிகைகளும் கல்லூரிகளும் காஞ்சிபுரம் சோளிங்கபுரம் எண்ணாயிரம் முதலிய இடங்களில் சிறந்து விளங்கின. அக்கல்வி சமய தத்துவ புராணங்களுக்கு நல்லாதரவு செய்ததுவேயன்றி, மக்களுடைய பொருளியல் வாழ்வு வளம் பெறவுதவும் வழிவகைகளைச் செய்யவில்லை. வேளாண்மைத் துறைக்கு உயர்வு தந்து ஊக்கும் நல்லுணர்வு அக்காலக் கல்வியால் நல்கப்படவில்லை. "காடு கொன்று நாடாக்குதலும் குளம் தொட்டு வளம் பெருக்குதலும்" என்ற பொருளியல் செய்தொழில் சங்க காலத்திலிருந்தே தொடர்ந்து வந்தது; ஆயினும், அது பல்லவராட்சியில் திட்டவட்டமாகச் சிறப்புற நடைபெறவில்லை. சிற்பத் தொழில் வளர்ச்சியும் சதுர்வேதி மங்கலப் பெருக்கமும் நாட்டில் வறுமையின்மையைப் புலப்படுத்தினவேயன்றிப் பொருட் செல்வ வளர்ச்சிக்கு வழி வகுத்தன வல்ல.

இனி, பல்லவர் காலம் கி. பி. ஆறும் நூற்றாண்டிலிருந்து பதினோராம் நூற்றாண்டு வரை ஒருவகையிற் சிறப்பும் சீர்த்தியும் பெற்றிருந்து மறைந்தது. அவரையடுத்துப் பாண்டியர் சிலர் தோன்றினர். அவர் நிறுத்திய குறிப்புக்கள் அவரது போர் வாழ்வையே விரியப் பேசுகின்றன. இந்தியப் பேரரசின் கல்வெட்டுத் துறையும், சென்ற 90 ஆண்டுகளாக எடுத்த படிகளில், 1903-ம் ஆண்டுக்குப்பின் எடுத்த அனைத்தையும் பொதுமக்கள் யாவரும் எளிதில் பெற்றுப் படித்தறியுமாறு வெளியிடுவதில் விருப்பமும் திறமையுமின்றி இருப்பதாலும், இந்தியப் பேரரசும் இச்செயலில் குருடு

பட்டுப் போனதாலும் நமது பொருள் வாழ்வின் வரலாறு காண்பது இடர்ப்படுகிறது.

பாண்டியர்க்குப் பின் கி. பி. 10 ஆம் நூற்றாண்டில் விசயாலயன் வழி.வந்த சோழ வேந்தராட்சி நம் தமிழ் நாட்டில் தோன்றிச் சுமார் 300 ஆண்டுகள் நடைபெற்றது. இவர்கள் காலத்தில் சேக்கிழாரது பெரிய புராணமும், கம்பரது இராமாயணமும், சயங்கொண்டார் கலிங்கத்துப் பரணியும், ஒட்டக்கூத்தரது பரணி உலா, பிள்ளைத் தமிழ்களும் பிறவும் தோன்றின. சோழராட்சியில் உண்பொருள் விளைவு வேண்டிக் காவிரிக்கு இருமருங்கும் வலிய கரைகளும், நெடிய கால்களும், வீரசோழன் போன்ற சிற்றாறுகளும் உளவாயின. கொள்ளிடத்தின் வாயிலாகக் காவிரி நீர் வீரநாராயண னேரி வழியாகப் பெருமாள் ஏரியிற் பாய்ந்து தென்னாற்காடு மாவட்டத்துத் திருத்தினை நகர், அம்மாவட்டத் தலைநகரான கடலூர் வரையிற் கொண்டு செல்லப் பட்டது. வடக்கிற் பாலாற்றின் நீர் காவிரிப் பாக்கம், கலவை, மாவண்டூர், மதுராந்தகம் முதலிய ஊர்களிடத்துப் பேரேரிகள் நீரால் நிரம்பச் செய்ததும், தென்பெண்ணை, வெண்ணெய் உருகுதற்குள் நீர் பெருகிப் பரந்து விளைபொருள் பெருகச் செய்ததும் கல்வெட்டுத் துணை கொண்டு செய்யும் ஆராய்ச்சிக்கு ஒளி தருகின்றன.

பிற்காலப் பாண்டியராட்சித் தென் பாண்டி நாட்டு ஏரி குளங்களை வெட்டுவித்து உண்பொருள் வருவாயைப் பெருக்கியது. சங்ககாலத்துக் குடபுலவியனார் என்ற சான்றோர் பாண்டி வேந்தன் முன் சென்று, நீர்நிலைகளைப் பாண்டிநாட்டில் பெருக அமைக்க வேண்டுமென்ற கருத்து வலியுற,

"உணவெனப் படுவது நிலத்தொடு
நீரே;
நீரும் நிலனும் புணரியோர் ஈண்டு
உடம்பும் உயிரும் படைத்திசி னோரே;
வித்தி வான்நோக்கும் புன்புலம்
கண்ணகன்
வைப்பிற் றாயினும் நண்ணி யாளும்
இறைவன் தாட்கு உதவாதே,
அதனால்
நிலன்நெளி மருங்கின் நீர்நிலை பெருகத்
தட்டோர் அம்ம இவண் தட்டோரே".

என்பதற்கேற்ப ஏற்ற இடங்களில் நீர்நிலையமைத்து உண்பொருள் இல்லாக் குறையுண்டாக ஆட்சி நடத்திலரில்லை. பிற நாட்டவரை இரந்து கேட்கு மெல்லைக்கு நாட்டைச் செலுத்தவில்லை.

இச்சோழ பாண்டியர் ஆட்சியில் உடைக்குரிய பஞ்சினும் பட்டினும் இயன்ற நெசவு முதலிய தொழில் பலவும் வேறு வேறு வகையில் பெருகி நடந்தன. இவற்றைத் தெரிந்தாய்ந்து கண்ட கொங்கு நாட்டு அடியார்க்கு நல்லார், நெசவிடை நிலவிய துகில் வகையைக், கோசிகம் பீதகம், சுண்ணம், வடகம், பாடகம், தேவாங்கம், கோங்கல் சுரியல் பேடகம் என மிகப்பலவாக எடுத்தோதித் தமிழ் வேந்தராட்சியில் தொழில் பெருகி யிருந்த திறத்தை விளக்கியுரைக்கின்றார். இத்தொழில்கள் பெயரும் பீடும் எய்தி மேம்பட்டது கி. பி. 12—13 ஆம் நூற்றாண்டிற்குள்ளாகும்.

இப்பாண்டியர்க்குப் பின் விசயநகர வேந்தரது ஆட்சி தமிழகத்தில் படர்ந்தது. திருமால் கோயில்கள் பேராதரவு பெற்றன. திருக்கோயில்களில் விழாக்களும் திருநாட்களும் மிகுந்தன. திருமூர்த்திகட்குப் படைக்கப்படும் தளிகை வகைகளும் அப்பமும் பணியாரமும் இட்டளியும் தோசையும் செல்வாக்குப் பெற்றன. இசைக்கருவிகள், வழிவழியாக வந்ததுடன் புது முறையிலும் உருவாயின. உழைப்பின்றி உண்பதுதான் உயர்வு; உழவு முதலியவற்றின் மெய் வருந்த உழைத்துண்பது தாழ்வு என்ற கொள்கை சிறப்பிடம் பெற்றது. இதனல் தொழில்கள் செல்வாக்கிழந்தன. தொழில் செய்வோர் கீழ்நிலை மக்களாயினர். சிற்பிகளும் கற்றச்சர் பலரும் வேறு நாட்டுக்குக் குடியேறினர். எத்துணை இழிக்கப்படினும் உழவரது உழவு உணவு தரும் ஒட்பமுடைத்தாதல் பற்றிக் கைவிடப் படாததாயிற்று, உழவுத் தொழில், பொரு

ளுடைமைக்கண் உயர் நிலை இடைநிலை எய்தினோரால் நெகிழ்க்கப்பட்டது. கல்விப் பேறும் உண்மை யறிவும் குறைவாகவுடைய தாழ்நிலை மக்களே நிலத்தை உழுது பயிர் செய்யும் தொழிலை மேற்கொண்டனர். வேத வேதாந்த ஞானிகளும் அரசவை யணி செய்யும் அறிஞர்களும், அரசியல் அலுவற் பிரதானிகளும் தங்கள் அறிவை உழவுக்கும் தொழிலுக்கும் பயன்படுத்துவது கீழ்மை யெனக் கருதலாயினர். இதனால் உழவும் தொழிலும் மெலிந்து வறுமைப் பேயைக் கைகூப்பி அழைத்துக் கொண்டிருந்தன. விசயநகர வேந்தர்க்குப் பின் கன்னடரும் முகமதியரும் இவர்களிடையே ஒட்டிரரும் எனப் பல திறத்தர் தமிழகத்திற் புகுந்து ஆட்சி புரிந்து அவலம் எய்துவித்தனர். ஆட்சிக்கும், அடிக்கடி நிகழ்ந்த வண்ணம் இருக்கும் போருக்கும் ஆட்கள் பெருகினர்; உழவுக்கும் தொழிலுக்கும் உரிய அறிவும் ஆற்றலும் உடைய நன்மக்கள் தொகை குறைவதாயிற்று.

நாளடைவில் ஐரோப்பியர் முகமதியரை வென்று தங்கள் அரசை நிறுவத் தலைப் பட்டனர். வாணிகம் குறித்து வந்த அவர் கட்கு நாடு கொண்டு அரசை நிலையிட்டு ஆட்சி செய்யும் பொறுப்பு தானாக வருவ தாயிற்று. இதுகாறும் போர்க்கும் காவற் கும் ஆள் வேண்டித் தொகுத்த ஐரோப் பியர், நாட்டாட்சிக்குத் துணை செய்யத் தக்க மக்களை மிகவும் தொகுக்கலுற்றனர். உழவு முதலிய தொழில்கள் உயர்ந்த மதிப் புடையன அல்ல என்று கருத்துடை யோருக்கு இவ்வாய்ப்பு பழம் நழுவிப் பாலில் வீழ்ந்தது போல் ஊக்குவதாயிற்று; தொழிற்குரிய அறிவும் ஆற்றலுமுடைய நன் மக்கள் ஆட்சிக்கும் காவற் பணிக்கும் உரிய பணி மக்களும் அலுவலாட்களுமாக வேலை யேற்றனர். ஐரோப்பியருள் ஆங்கிலேயர் முழு வெற்றி பெற்றுத் தலைமை எய்தியதால் நாடு முற்றும் அவரது ஆட்சிக்கு உட் பட்டது. அது மட்டுமன்றிக் கிழக்கிலுள்ள அருமணம் (பர்மா) கடாரம், மலையம், சாவகம் முதலிய நாடுகளும், தெற்கிலுள்ள ஈழமும் ஆங்கிலேயரது ஆட்சிக் குரியவை யாயின. இவ்வகையில் வெயில் பனி மழைக் கஞ்சாது புரியும் உழவு முதலிய தொழிலை விரும்பாது, மெய் வருத்தமுறாது, ஆடை அழுக்குறாது, வியர்வை சிந்துறாது செய்யும் புதுப் பணியை ஆங்கிலேயர் நல்கக் கண்ட மக்கள் அவர் தரும் புதுப் பணியை வியந்து கண்டு நயந்து போற்றி அதுவே வாழப் பிறந்தார்க்கு வாழ்வு தரும் உயர்பணி யென உள்ளி அதனைப் பெறற்கே பெரு முயற்சி செய்வாராயினர்.

அறிவும் ஆற்றலுமுடையோர் பெரிதும் திரண்டு மேற்குறித்த புதுப்பணியை மேற் கொள்ளவே, உண்பொருளையும் பிற வணிகப் பொருளையும் வித்தி விளைவிக்கும் தொழிற்கு வேண்டும் ஆட்கள் குறைந்தனர். திறமையுடன் அதனைச் செய்து விளைவிக்கும் திறலுடையோரும் அருகினர்; அவர் தொழிலைக் குறைவாக மதிக்கும் கூட்டமும் பெருகிற்று. அறிவும் ஆற்றலும் இல்லாத வரும், அவற்றுற் குறைவுடையவருமே தொழிலையும் வாணிகத்தையும் பெரிதும் போற்றினர். இதனால் நம் நாட்டில் பொருள் விளைவு சுருங்கிற்று; வாணிகம் வளமிழந் தது. ஆற்றலுடையோர் சிலர் அருமணம், கடாரம், ஈழம், முதலிய நாடுகட்குச் சென்று வாணிகம் மேற்கொண்டனர். பலர் கூலி களாகவும், கூலிப்படைகளாகவும் சென்று வயிறு வளர்ப்பதொன்றையே பொரு ளாகக் கொண்டனர்.

ஆங்கிலேயரது ஆட்சி, அருமணம், ஈழம் முதலிய நாடுகளில் பரந்து நிலை பெற்றிருந் தமையின் மிக விளைந்த அந்நாடுகளினின்று பொருளைக் கொணர்ந்து விளைவுக் குறைவை நிறைவு செய்தது. அதனால் நம்நாட்டு அறிஞர் பார்வைக்கு நாட்டின் பொருளா தாரம் சுருங்கிக் கெடுவது தோன்றவில்லை; மக்களறிவின் திறமும் விருப்பும் பிறர் கருத் தறிந்து ஏவின செய்யும் அடிமைப் பணியில் ஆழ்ந்து கிடக்கும் அவலமும் புலனாகவில்லை.

பரவிய அடிமை யிருள் புலராது ஒழி யாதன்றோ? பகலொளியை விழுங்கி இர விருளைக் கான்று நின்ற காலம், அங்ஙனமே இராது புலர்ந்த ஞாயிற்றின் தோற்றத் திற்கு இடம் தருவது போல, அரசியல்

அடிமையுணர்வு புலரத் தொடங்கிற்று; அண்ணல் காந்தியடிகள் தென்னப்பிரிக்காவிலிருந்து வந்து நம்மவர்க்கு அடிமைத் தன்மையின் புன்மையை எடுத்துக் காட்டி உரிமை வாழ்வின் உயர் மாண்பை விளக்கி வற்புறுத்தி விடுதலைப் போரை நடத்த முற்பட்டனர். அவரது தலைமையில் உரிமைப் போர் "சத்தியாக் கிரகம்" என்ற படையை ஏந்திக் கொண்டு நடப்பதாயிற்று. உரிமைப் போர் வெற்றிச் சூழ்நிலையை நெருங்கிக் கொண்டிருக்கையில், பொருளியற் குறையை மக்கள் உணருமாறு இரண்டாவது உலகப் போர் தோன்றிற்று. அதன் கண் பகலொளி மறையாத பரப்புக் கொண்ட ஆங்கிலேயரது ஆட்சிப் பண்பு வலி குன்றியது; பல்வேறு நாடுகளைக் கட்டிக் காக்கும் கடமை, அவர்கட்கே பெருஞ் சுமையாய் அவர்களையே அழிக்கும் கூற்ருக மாறிற்று. அந்நிலையில்தான் நமது நாடு மாத்திரமன்று, நமது நாட்டைப் போல் ஆங்கிலேயர் காவலில் இருந்த அருமணம், மலயம், சாவகம், ஈழம் ஆகிய நாடுகளும் விடுதலையுற்று அரசியல் உரிமை பெற்றன. திடீரென்று எய்திய அரசியல் மாற்றத்தால், உரிமைபெற்ற நாடுகள் தம்மைத் தாமே பொருளாற் செம்மை செய்துகொள்ளத் தலைப்பட்டன. நம் நாட்டுக்கு அந்நாடுகளினின்றும் வந்து கொண்டிருந்த உண்பொருளும் பிறவும் நின்று போயின. இதனல் உண்ணும் உணவுக்கே நம் நாடு பிற நாட்டைக் கையேந்தி வருந்தும் சூழ்நிலை உண்டாயிற்று.

உரிமையரசு எய்தியதும், அரசின் ஆட்சிக்குழுவில் தன்னலம் துறந்த சமுதாயப் பணிபுரிதற்கமைந்த சிறந்த அரசியல் ஞானிகளும், தனது இன நலமே பேணுது ஏனையினத்தையும் ஒப்ப எண்ணி யுறவாடும் சமுதாய ஞானிகளும், சமுதாயப் பணியே வாணிகரின் வணிகப் பணி யென எண்ணித் தொழில் புரியும் வணிகப் பெருமக்களும், தொழிலும் அத்தன்மைத்தெனக் கருதும் தொழிற்றலைவர்களும் நாட்டில் இல்லாமையால், புதிது தோன்றிய மக்களாட்சியில், தன்னலவிருளும், இனநலப் பிசாசும், பொருள் வேட்கையும், அதிகார வெறியும், வஞ்சமும், மக்களுருக் கொண்டு இடம் பெற்றன. இரக்கமற்ற அரக்கத் தன்மை வணிகத் துறையில் புகுந்து களவு செயல் மேற்கொண்டு பொதுமக்களைச் சூறையாடலுற்றது; பொருமைப் புன்மையும், பிறராக்கம் காணத் தரியாத பேதைமையும் தொழில் துறையில் புகுந்து உழைப்பவர் உள்ளத்தின் திண்மையை அலைக்கலுற்றது. உரிமை யெய்தி இருபத்தைந்து ஆண்டுகட்கு மேலாகியும் தொழிலும் வணிகமும் உழவும் உழைப்பும், நாட்டுக்குத் துணையும் வாழ்வும் வேலியுமாகும் சூழ்நிலையைப் பெறவில்லை. சமுதாயத்தைச் சூறையாடும் கள்வர் கூட்டம் எல்லாத் துறையிலும் தலைமையைக் கைப்பற்றிக் கொண்டதால் இன்றைய வாழ்வு வீழ்ச்சி நெறியில் இயங்குகிறது. தொழிலறிவு பெறுவோர் வீழ்கின்றனர்; வணிகரினம் வருந்துகிறது; உழவர் கூட்டம் உரமின்றி மெலிகின்றது; உழைப்பவர் ஆதரவின்றி அலமருகின்றனர்.

எண்ணுமின்! இப்போதாவது நாம் வீழ்ந்தது எங்ஙனம் என்று?



# அருள்மிகு கொப்புடைய நாயகியம்மன் திருக்கோயில்

## காரைக்குடி



*இக்கோயிலின் கண் அன்னை பராசக்தி ஆற்றல் அம்சத்தில் கொப்புடைய நாயகியம்மனாக வீற்றிருக்கின்றாள். இவ்வட்டாரத்தின், நடுநாயகமாக விளங்கும் இத்திருக்கோயிலில் வைகாசித் திங்களில் செவ்வாய்ப் பெருந்திருவிழாவும், தமிழ் ஆண்டுப் பிறப்பு விழாவும், பூச்சொரிதல் விழாவும் சிறப்பாக நடைபெறும். குறிப்பாகச் செவ்வாய்ப் பெருந்திருவிழாவில் கோயில் திருத்தேர் 'நாட்டான் கண்மாய்' ஊடே நீர் நிரம்ப இருப்பினும், இழுத்துச் செல்லப் பெறுவது தனித்தன்மை வாய்ந்ததாகும்.*

*இக்கோயிலின் ஆண்டு வருமானம் சராசரி ரு. 1,50,000/- ஆகும். தற்சமயம் இக்கோயிலில் திருப்பணி வேலைகள் நடந்து கொண்டிருக்கின்றன. விரைவில் திருக்குட நீராட்டு விழா நடைபெற உள்ளது.*

*அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயிலில் நடைபெறும் திருக்குட நன்னீராட்டு விழா முடிவு பெறக் கொப்புடைய நாயகியம்மன் அருள் பாலிக்க வேண்டி விழைகின்றோம்.*

**கோயில் நிருவாகிகள்**

# "சின்னக் குழந்தை சேவடி போற்றி"







திரு. எஸ். மகராஜன்

" அண்டமாய், அவனியாகி, அறியொணாப் பொருளது ஆகித்
தொண்டர்கள் குருவுமாகித் துகளறு தெய்வமாகி
எண்திசை போற்ற நின்ற என் அருள் ஈசன்ஆன
திண்திறல் சரவணத்தான் தினமும் என் சிரசைக்காக்க"

கோடானு கோடி மக்கள், மெய்தான் விதிர் விதிர்த்து, காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி, "கந்தா", "முருகா", "சண்முகா", "சரவணா", என்று கதறிக் கொண்டு, பழனிமலை மீதேறி வருவது தினமும் காணக்கூடிய காட்சி. வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத் தமிழ் கூறும் நல்லுலகத்தில், தமிழ்க்கடவுள் முருகன் கோயில் கொண்டுள்ள தலங்கள் தமிழ் மக்களால், பெரிதும் கொண்டாடப்படுவன. எங்கு நோக்கினும் வளர்ந்து வரும் ஆத்திக உணர்வு தளர்ந்து வரும் நாத்திகத்திற்குக் கட்டியம் கூறுகிறது — நிறைமதியால் குறை மதி நோக்கி விண்ணோக்கிச் சென்றவர்கள், மீண்டும் ஊரோடு, உறவினரோடு, மனைவி மக்களோடு, சேர்ந்திட, விண்ணவனை நெஞ்சாரத் துதிபாடிச் சென்றது நாடும், ஏடும், நற்றமிழ் வீடும் நன்குணர்ந்த, நாடறிந்த கதை. எலும்புக்கும், சதைக்கும் ஏனைய உறுப்புகட்கும் மருத்துவம் செய்ய வல்ல, நல்லறிஞர், தங்களது சாதனைக் கப்பால் பெரியதொரு சக்தி இருப்பதை ஒப்புக்கொள்வதை நாள் தோறும் கேள்விப் படுகிறோம். "விண்டவர்கள் கண்டதில்லை, கண்டவர்கள் விண்டதில்லை" என்ற கூற்று வியப்பாக இருப்பினும், உண்மையாக இருப்பதை மறைக்கவோ, மறுக்கவோ நம்மால் முடியவில்லை.

வேறெங்கினும் காணமுடியாத அமைதி, நிறைவு, மகிழ்வு, குன்று தோறாடும் குமரன் குடிகொண்ட ஆறுபடை வீடுகளில் காணப் படுவது, அனைவரும் ஒப்புக்கொண்டுள்ள உண்மை. கந்தவேளின் இன்னருளுக்கு நம்மை ஆற்றுப்படுத்தும் படைவீடுகள் ஆறு — அவற்றின் சிறப்பை உணர்த்தும் சிறந்த நூல் திருமுருகாற்றுப்படை. "கைபுனைந்தியற்றாக் கவின் பெறு வனப்பில்", திகழும் திருப்பரங்குன்றத்துக் குமரன், "பன்னிரு கையும் பால்பட இயற்றும்", "வேண்டுவார்க்கு வேண்டுவன தரும்", திருச்சீரலைவாய் அழகன், "பாடும் அன்பர் போற்றும் பழனிமலை வேலவன்", "விரையுறு நறுமலர் ஏந்திப் பெரிதுவந்த

ஏரகத்து'' எழிலன், ''குன்றுதோருடும் கழலினன், கச்சினன், செச்சைக் கண்ணியன், குழலன், மலைமகள் மகன், மாற்ரூர் கூற்றன், பழமுதிர் சோலை மலையான்'' ஆகிய ஆறு பதிகளின் சிறப்பை நற்றமிழ் என்றும் நற்கருப்பஞ் சாற்றினிலே, தேன் கலந்து இறையுணர்வு கலந்து நம்மை முருக விடத்து ஆற்றுப்படுத்தும் தெய்வத் திரு நூல் திருமுருகாற்றுப்படை.

நாம் அஞ்சுகின்ற முகம் காட்டினல் அவன் ஆறுதலை அளிப்பான் — வெஞ்சமரின் போது அஞ்சல் என வேல் தோன்றும் — இதயத்தில் ஒருகால் நினைப்பவர் முன் இருகாலும் தோன்றுவான் — நக்கீரர் உரைத்த திருமுருகாற்றுப்படையை பூசையாகக் கொண்டு புகல்வாருக்கு மனக்கவலை மாறும் —நினைத்தவை கைகூடும்.—திருமுருகாற்றுப் படை (நூலின்), இறுதியில், ''நக்கீரர் தாம் உரைத்த நன் முருகாற்றுப்படையைத் தற் கோலநாள்தோறும் சாற்றினல்—முற்கோல மாமுருகன் வந்து, மனக்கவலை தீர்த் தருளித் தான் நினைத்த எல்லாம் தரும்.'' என்று உறுதியாக அறுதியிட்டுக் கூறப் பட்டுள்ளது.

சிவபெருமானே, தருமிக்காகப் பாடிய

''கொங்குதேர் வாழ்க்கை அஞ்சிறைத் தும்பி
காமம் செப்பாது கண்டது மொழிமோ
பயிலியது கெழீஇய செறிஎயிற் றரிவை
கூந்தலின் நறியவும் உளவோ, நீ யறியும் பூவே.''

என்ற தமிழ்க் கவிதையில், குற்றம் கண்ட நக்கீரன், தன்குறை ஆற்றப்பாடிய செந்தமிழ்க் காவியந்தான் திருமுருகாற்றுப் படை.

''உருவாய் அருவாய் உளதாய் இலதாய்
மருவாய் மலராய் மணியாய் ஒளியாய்க்
கருவாய் உயிராய்க் கதியாய் விதியாய்க்
குருவாய் வருவாய் அருள்வாய் குகனே.''

எனத் தமிழ் மணம் சொட்டுவது கந்தர் அநுபூதியிலே. தன்பெருமை தானறியாச் செல்வன் என்று முருகனைக் கூறுவர். முருகனது பெருமைகளை, தமது சொற் றிறனல், பாமாலைகளாக்கித் தருகின்ற தமிழ்ப் புலவர்களின் பால் மாருத காதல் கொண்டவன் முருகன். தன்னைப் பாடிய ஔவைப் பிராட்டியின் தமிழைப் பாராட்டிய தமிழ்க் கடவுள் முருகன்.

''குழந்தையும், தெய்வமும் கொண்டாடுமிடத்தில்'' என்பது பழமொழி. தெய்வத்தையே குழந்தையாக்கி அதன் நடையழகு, பழகு தமிழ்ச் சொல்லழகு, சப்பாணி கொட்டும்பேரழகு, செங்கீரையாடும் தனியழகு, சிறு தேருருட்டும் சிறப்பழகு இன்னேரன்ன பிற அழகுகளைப் பாமாலையாகத் தொடுத்துக் குமரருக்குச் சூட்டியது பிள்ளைத் தமிழ் என்றும் அழகிய நூல். பிள்ளைத் தமிழ் ஒவ்வொரு ஊருக்கும் பாடப் பட்டுள்ளது. குமரகுருபரரின் மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ், வைத்தீஸ்வரன் கோயில் முத்துக்குமாரசாமி பிள்ளைத் தமிழ், பகழிக்கூத்தர் இயற்றிய திருச்செந்தூர் பிள்ளைத் தமிழ், குளத்தூர் அமுதாம்பிகை பிள்ளைத் தமிழ், திருப்போரூர் முருகன் பிள்ளைத் தமிழ், திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத் தமிழ், திருமலை முருகன் பிள்ளைத் தமிழ், மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை அவர்களின் சேக்கிழார் பிள்ளைத் தமிழ் முதலியன சிறந்த பிள்ளைத் தமிழ் நூல்களாகக் கருதப்படுகின்றன.

இவற்றேடு ஒப்பச் சிறப்பாக எண்ணப் படுவது பழனிப் பிள்ளைத் தமிழ். இதனை இயற்றியது வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள். அவர்கள் திக்கெல்லாம் போற்றும் திருநெல்வேலிச் சீமையைச் சேர்ந்தவர்கள். அவர்கள் ஒருநாள் திருமலை என்னும் மலை உச்சியிலிருந்து தன்னை மாய்த்துக்கொள்ளக் கீழே விழுந்தபோது தன்னைக் காத்துத் தந்த முருகனைப்பற்றிப் பழனிப் பிள்ளைத் தமிழில் குறிப்பிட்டுள்ளார்கள்.

''வடதிசையில் தலைவைத்து மறலி திசைக் கால்நீட்டி
உடலையந்தக் குன்றத்தின் உச்சியினின் றுருட்டி
விட்டேன்
விடலையிடுந் தேங்காய் போல் வேறுபட்டுச் சிதருமல்
மடமடெனக் கொண்டங்கோர் மண்தரையில்
விட்டதுவே''

இன்றும் பழனியாண்டவர் திருக்கோயிலில் நாள்தோறும் இரவில் பழனியாண்டவர் பள்ளியறை ஊஞ்சலில் அமருகின்ற பொழுது, தண்டபாணி சுவாமிகள்

அருளிச் செய்த ஊஞ்சல் பாட்டுப் பாடப் பட்டுவருகின்றது.

"இல்லறமும் துறவறமும் தூண்களாக
இகபர சாதனப் பொதுச்சீர் விட்டமாக
நல்லறமாகிய நான்கும் வடங்களாக
நழுவருஞ் சத்தியமதுவே பலகையாக
வல்ல சத்தி ஒராறும் போற்றி ஆட்ட
மாயன் மக்கள் இருவருடன் ஆடீரூசல்
பல்லவச் செஞ்சடைச் சிவனர் தவப்பேருன
பழனி நகர் குமரர் மகிழ்ந்தாடீர், ஊசல்"

என்ற இந்தப் பாடலில் சொற்சுவையும், பொருட்சுவையும் ஒன்றை ஒன்று விஞ்சுகின்றன.

கார்த்திகைப் பெண்கள் அறுவரும் ஊஞ்சலை ஆட்ட, சத்தியமென்னும் பலகையில் நான்கு நல்லறமாகிய வடங்களோடு பிணைக்கப்பட்டு, இல்லறம் துறவறம் என்ற தூண்களின் துணைக் கொண்டு, இகபர சாதனைகளை விட்டமாகக் கொண்டு, வள்ளி தெய்வயானை என்ற மாயன் மக்கள் இருவரோடு பழனி நகரில் ஊஞ்சலாடுகிருர் முருகப் பெருமான். எத்துணை கருத்தாழம்! எத்துணை பொருட்செறிவு! படிப்பவரைப் பரவசப்படுத்துகின்றது.

ஆறுபடை வீடுகளில் அமர்ந்து, மக்களை வா, வா, வென அழைத்து அவர்களது துயர் துடைக்கும் குமரன், வேண்டுவார்க்கு வேண்டுவன கொடுப்பான். வேண்டத்தக்கது அறிபவனும் கூட. அவனை இதய சுத்தியோடு துதிப்போருக்கு வல்விணை போம், துன்பம் போம் நெஞ்சில் பதிப்போர்க்கு செல்வம் பாலித்துக் கதித்து ஓங்கும், நிஷ்டையும் கைகூடும். என்று கந்த சஷ்டி கவசம் உறுதியோடு கூறுகின்றது,

"நேசமுடன் ஒரு நினைவது ஆகிக்
கந்தர் சஷ்டி கவசம் இதனைச்
சிந்தை கலங்காது தியானிப்பவர்கள்
ஒருநாள் முப்பத்து ஆ(று) உருக்கொண்டு
ஓதியே செபித்து, உகந்து நீறணிய
அஷ்டதிக்(கு) உள்ளோர் அடங்கலும் வசமாய்த்
திசை மன்னர் எண்மர் செய்(து) அருளுவர்
மாற்றலர் எல்லாம் வந்து வணங்குவர்
நவகோள் மகிழ்ந்து நன்மை அளித்திடும்
நவமதன் எனவும் நல் எழில் பெறுவர்."

"எந்த நாளும் ஈரெட்டாய் வாழ்வர்
கந்தர் கைவேலாம் கவசத்(து) அடியை
வழியாய்க் காண மெய்யாய் விளங்கும்
வழியால் வெருண் டோடிடும் பேய்கள்
பொல்லா தவரைப் பொடிப்பொடி யாக்கும்
நல்லோர் நினைவில் நடனம் புரியும்
சர்வ சத்துரு சங்கா ரத்(து) அடி
அறிந்(து) என(து) உள்ளம் அஷ்டலட்சுமிகளில்
வீரலட் சுமிக்கு விருந்(து) உணவாகச்
சூரபத்மாவைத் துணித்த கையதனல்
இருபத்தெ ழுவருக்(கு) உவந்(து) அமுது அளித்த
குருபரன், பழனிக்குன்றிலில் இருக்கும்
**சின்னக் குழந்தை சேவடி போற்றி"**

என்பது கவசம்.

பழனிக்குன்றில் இருக்கும் சின்னக் குழந்தையின் பெருந்திருக் கோயிலுக்குத் திருக்குட நீராட்டுப் பெருவிழா 2—9—73 ஞாயிறன்று காலை 6 மணி முதல் 6.45 க்குள் நடக்கத் திருவருள் பாலிக்கப்பட்டுள்ளது. இத்திருக்கோயில் 1899, 1909, 1933, 1940, 1960 ஆண்டுகளில் திருக்குடநீராட்டுப் பெருவிழாக்கள் நடத்தப்பட்டுள்ளன என்று தலவரலாறு கூறுகின்றது. திருக்குடநீராட்டு விழாக்களைக் காண்பது பெரும் பேறு. அதுவும் ஆறுபடை வீடுகளின் திருக்குடநீராட்டுவிழாக் காண்பது அதனினும் பெரும் பேறு. அதுவும் பழனியம்பதியில் திருக்குடநீராட்டுப் பெருவிழாக் காண்பது பெறற்கரிய பெரும் பேறு. இந்த விழாவினைக் காண்போரெல்லாம்,

"என்ன புண்ணியம் செய்தனை நெஞ்சமே
இருங்கடல் வையத்து
முன்னைநீபுரி நல்வினைப் பயனிடை முழுமணித்
தரளங்கள்
மன்னு காவிரி சூழ்திரு வலஞ்சுழி வாணனை
வாயாரப்
பன்னி ஆதரித் தேத்தியும் வழிபடுமதனலே."

என்று கழிபேருவகை எய்துவது ஒரு தலை.



# இராமநாதபுரம் மாவட்டக் கூட்டுறவு மத்திய வங்கி லிமிடெட், மதுரை-1

(41, கிருஷ்ணராயர் தெப்பக்குளத் தெரு)

தபால் பெட்டி எண். 96 — தொலைபேசி எண். 22444

கிளைகள் மொத்தம் 28

## நிரந்தர டிபாசிட்டுகளுக்கு வட்டி விகிதம்

| | | |
|---|---|---|
| 91 | நாட்கள் முதல் 6 மாதங்களுக்குக் குறைவாக ... | 5 % |
| 6 | மாதங்கள் முதல் 1 வருடத்திற்குக் குறைவாக ... | $5\frac{1}{2}$% |
| 1 | வருடம் முதல் 2 வருடங்களுக்குக் குறைவாக ... | $6\frac{1}{2}$% |
| 2 | வருடங்கள் முதல் 3 வருடங்களுக்குக் குறைவாக ... | 7 % |
| 3 | வருடங்கள் முதல் 5 வருடங்களுக்குக் குறைவாக ... | $7\frac{1}{2}$% |
| 5 | வருடங்களுக்கும் - அதற்கு மேலும் ... | $7\frac{3}{4}$% |

மொத்த டிபாசிட்டுகள் ரூ. 3.38 கோடி

மற்ற விபரங்களுக்குத் தயை செய்து விண்ணப்பிக்கவும்.

சோ. சிவராசன், பி. ஏ., எச். டி. சி.
செயலாளர்.

சுப. தங்கவேலன்
பெருந்தலைவர்.

# திருவடிகளைப் போற்றுவோம்







டாக்டர்
**திரு. அழகப்ப அழகப்பன்**

நமது சிற்ப சாஸ்திரங்கள் அனேக மாக எந்தக் கோவிலும் மானிட தேகம் போல் அமைந்துள்ளது என்றும், ராஜ கோபுரம் முக்கிய மூர்த்தியின் திருவடிகளைக் குறிப்பிடுகின்றது என்றும் கூறுகின்றன.

அப்படியானல் ஒரு விதத்தில் இந்தக் கும்பாபிஷேகம் அரும்பெரும் தெண்டாயுத பாணியின் பாதபூஜை என்றே சொல்லலாம். பழனியாண்டவரின் கோயில் கலங்கரை விளக்கம்போல் எவ்வளவோ தூரத்திற்குத் தென்பட்டாலும் யாத்ரீகர்கள் முதன் முதலாக அவரது திருவடிகளைப் போற்றி ராஜகோபுரம் வழியாகத் தங்களைப் புனிதப் படுத்திக் கொண்டு ஆண்டவனை விரும்பி வேண்டி ஆவலுடன் படிமேல் ஏறிச் செல் வார்கள். நமது பெருமானின் பாதங்களைப் பெருமைப் படுத்தும் இந்த விழாவைச் செம்மையுறச் செய்யப் பாடுபட்ட அனை வருக்கும் நாம் நன்றி செலுத்துவதில் ஆனந்தம் அடைகின்றோம்.

இந்த முக்கிய விழாவின்போது இக் கோயிலையே நம் நாட்டிற்கும் – ஏன் உலகத் திற்குமே பல நூற்றுண்டுகளுக்குமுன் பரிசாய்த்தந்து அருளிய போக ராஜ பண்டித மகரிஷியை நாம் நினைத்துப் போற்றி வணங்க வேண்டும். போகர் பெரு மான் மாபெரும் கணித நிபுணர். சிறந்த ராஜதந்திரி. பல சாஸ்திரங்களில் முக்கிய மாய் மருத்துவ சாஸ்திரத்தில் வல்லவர். பழனியாண்டவரை இந்தக் கவர்ச்சியான கோலத்தில் திருக்காட்சியாய் அமைத்தார்.

கோவில்கள் மாபெரும் க்ஷேத்திரங்களா வதற்கு அங்கு அரும்பெரும் சித்தர்களின் ஜீவ சமாதிகள் இருக்கும். திருப்பதியில் கொங்கண மகரிஷியின் சமாதி உண்டு. திருவொற்றியூரில் பட்டினத்தடிகள் சக்தி தருகிறார்கள். மதுரை, ஸ்ரீரங்கம், சிதம்பரம் இன்னும் மற்ற க்ஷேத்திரங்களில் சித்தர் களின் சமாதிகள் அடிப்படையாக உள்ளன. பழனிமலை பிரகாசிக்க போகர் பெருமான் மலைமீது வீற்றிருந்து தொண்டாற்றி வருகின் றார். தெண்டாயுதபாணியின் சந்நிதானத் திற்கு எதிராக நிற்போமானல் நம் வலப் புறத்தில் போகரின் சமாதி ஜோதியாய்ப் பிரகாசித்து வருகின்றது.

வசிஷ்ட மகரிஷி பழனியின் பெருமை களைக் கூறும்பொழுது பின்வருமாறு நாடி நூலில் சொல்லியுள்ளார் :—

"பழனிப்பதியோ தென்பொதிகை நமக்கு குரு முனிவர் தன் கருணையால் போகப் பெருமானின் நாம ரூபத்தினில்

வளர்கின்ற பழனிப்பதியோனின் நாம கருணையும் காட்சியும் அழகினை நாம் என்னவென்ச் சொல்வது நந்தி! நவ பாஷாண மூலிகையின் சக்தியினால் நின்று ஒளிரும் பழனிப்பதியோன் தன் கருணையும் அருளும் மிகப் சிறந்தது. குறைகளை அகற்றி நல்ல குணங்களைக் கொடுத்து குணரூபமான குமரப்பெருமான் கருணையின் காட்சியும் என்னவெனப் புகல்வோம்!

குருமுனிவர் "பழம்-நீ" என்று அமைந்த அந்தக் கனியின் தத்துவப் பெருமையைப்பற்றி உருகி விளக்குகிறார்:

"அந்த ஒரு மாங்கனி அல்ல அப்பா, அது மாசிலாக்கனி, அது மானிலமெல்லாம் போற்றும் கனியாக கரையாத உள்ளமும் கனிந்து கரைந்து ஒளிரும் அருள் ஞான ஒளியினைக் கொடுக்கும் மாசிலாக்கனி. மானிலமெல்லாம் போற்றிப் புகழ்ந்தும் அருந்த அருந்த கரையாத ஆதியும் அந்தமும் இல்லாத கற்பகத் தருவினைப்போல் அருள் ஞானச் செல்வங்களினை அழியாதது; அழிக்க வொண்ணாதது; இதனை எளிதினில் அறிந்து கொள்ளவும் முடியாது. அறிந்து கொள்ளும் ஆத்மீக ஞான ஒளியாளர்க்கு அறிவுக்கனி. ஆத்மஞான ஒளி வீசுங்கனி. அது எந்த நாளும் அருள் தத்துவம்தன்னைக் கொடுத்திடும், நம் பிறவி உள்ள நாளளவு மட்டும் அருந்திக் கொள்ளும், அது ஜீவக்கனி. ஜீவாத்மா, பரமாத்மா எனச் சொல்லிடும் மாறாத, தத்துவச் சுரங்கம், அவனை எடுக்க எடுக்கச் சுரக்கும். ஞான விளக்கம் தன்னை விவேகம் தன்னை இல்லற தர்ம பிறவிகட்கும் ஞான நிலையினையடைந்த உத்தம பெரியோர்க்கும் சிற்றின்பக்கனியெனவும், பேரின்ப நிலையை அடையும் மக்கட்கும் பேரின்பக்கனியெனவும் அருள் ஞானக்கனி யென ஒளிரும் ஆறுமுகச் செவ்வேள் பழனிப் பதியினில் தெண்டாயுதபாணி நாம ரூபத்துள் நவ பாஷாண சக்தியின் ரூபமாய் நின்று ஒளிர்கின்ற உத்தம ஞானச் செல்வத்தை பழனிப்பதியில் உள்ள போகப் பெரு முனிவரின் அவதார ரூபமாய் நின்று ஒளிர்கின்ற உத்தம பெருமான்"

அகஸ்திய பகவான் மேலும் பழனியாண்டவரைப்பற்றிப் பக்திவெள்ளப் பெருக்கால் கூறுவதைக் கேட்போம்.

"எனதுறும் குருநாதன் தாதை தாயவரிடத்து அன்பு ஞானச் செல்வக் கண்மணியென்னும் அருந்தவக் கோலக் காட்சியோடு நின்று ஒளிர்கின்றார் முத்திரா! ஞானங்களினை உலகிற்கு வாரி வழங்கும் ஞான வள்ளல், நாம் செய்கின்ற அழிவற்ற செயல்கள். அழிவான செயல்கள் எல்லாம் ஆண்டவன் கருணையால் செய்கின்றோம் யென அறியாது கருதிடும் மன இருளினைக் களைந்திடும் அறியாத ஞானங்கள் மாயையினில் செய்திடும் மனப்பக்குவம் இல்லாச் செயல் பலது போக்கி மாசினைக் களைந்து மாறாத அறிவு ஞானம் தனைக் கொடுத்து அஞ்ஞானங்களினைப் போக்கி அந்த ஒரு குருநாதன் பழனிப்பதியில் தாண்டவம் செய்திடும் ஆடையற்று ஏதோ கௌபீனத் துண்டோடு ஞான நிலையானக் காட்சியினை யடைந்து அருள் கொடுக்கும் உத்தமத் தோற்றம் எனினும் முத்திரா! தனை வழி படுகின்ற மக்கட்கு மாயையினில் இருளைக் களைந்து மக்கட்கு கலியுகம் தன்னில் உழைப்போ, ஊக்கமோ, அதனால் வளர்கின்ற பெரும் ஊதியமோ, நல்ல அலங்கார செல்வமோ எனக்குப் போர்வை இல்லையெனிலும் மக்கட்கு ஒவ்வொரு காலம் தனக்குரிய நல்ல ஆடை, அலங்காரம், அரசயோகச் சிறப்போடு உலக தர்மத்தில் வந்த மக்கள் எல்லாத் துறையினிலும் சிற்றின்பச் சிறப்பினில் செல்வச் சிறப்பு வளர்ந்து தம்பதிகள் சிறப்பு வளர்ந்து செல்வ மக்களின் காலச் சிறப்பு வளர்ந்து பேர் அரசயோக நிலையினையடைந்து எங்கள் கருணையால் பேரின்ப ஞான தத்துவங்களினை யடையப் பெற்று பழனிப்பதியினில் உள்ள பெருமாளின் காட்சி போகப் பெரு முனிவரின் திரு அலங்காரக் காட்சி போகத் திருமுனிவரின் தாபனம் என்னும் கருணை நிறைந்த தத்துவங்களினை யடையப் பெற்று...".

மேற் கூறியவாறெல்லாம் போற்றிப் புகழ்ந்து மகரிஷிகள் இன்றும் பழனியில்

ஆண்டவரை வணங்கி வருகிருர்கள். முருகப் பெருமான் எத்தனையோ அலங்காரங்களில், எவ்வளவோ க்ஷேத்திரங்களில் பல வகைகளில் பரிபாலனம் செய்து, பல கோலங்களில் காட்சி கொடுத்து வந்தாலும் பழனியில் உலகிற்குச் சேவை செய்வதையே முக்கியம் எனக் காட்டுகிருர். அதனுல்தான் இந்தத் தலத்தை விட்டு வர மனமில்லாது மகரிஷிகள் மயங்கி இருக்கிருர்கள்.

பழனியாண்டவரின் கோலத்தையே தங்களது பெரும் பொக்கிஷம் எனத் தன வணிக சமூகத்தினர் கொண்டாடி வந்து இந்தத் திருஉருவத்தைப் போற்றிப் பர்மா, மலேயா, இலங்கை முதலிய நாடுகளில் கோவில்கள் எழுப்பியுள்ளார்கள்.

இந்த தெண்டாயுதபாணி கோவில்கள் உதவி செய்ய நியூயார்க்கில் ஒரு கோவில் ஸ்தாபிக்க முயற்சி செய்து வருகின்ருேம். இந்த முயற்சி வெற்றிபெற முருகப் பெருமானுக்குகந்து அவருடன் தினசரி உறவு கொண்டுள்ள ஸ்ரீலஸ்ரீ பன்றிமலே சுவாமிகள் ஆசி தந்து திட்டம் வகுத்துத் தந்திருக்கிருர்கள்.

பழனியாண்டவர் ஸ்ரீலஸ்ரீ சுவாமிகளோடு எத்தனையோ அற்புதங்களை நடைமுறையில் செய்து வருவதைக் கண்டு பேரானந்தப் பட்டிருக்கின்றேன். சத்குரு ஸ்ரீலஸ்ரீ பன்றிமலே சுவாமிகள் விரும்பியபடி முயற்சிகள் நடந்து வருகின்றன. திருப்பதி வெங்கடாசலபதி கோவிலிலிருந்தும் இதர ஆந்திரக் கோவில்களிலிருந்தும் நியூயார்க் கோவிலிற்கு மகத்தான உதவி வருகின்றது. இந்தியாவிலேயே இக்கோவில் கட்டப்பட்டு தனிக் கப்பலில் வரவிருக்கின்றது. ஓங்கார கணபதியை நடு நாயகமாய்க் கொண்டு, நான்கு மூலேகளில் சிவபெருமான் பார்வதி, வள்ளி தெய்வானையுடன் முருகப்பெருமான், வெங்கடாசலபதி, மகாலெட்சுமி கொண்டு இந்தக் கோவில் நமது தெய்வங்களை அமெரிக்காவில் தோற்றுவிக்கும். ஆண்டவரது கருணையால் பிட்ஸ்பர்க்கில் டாக்டர் ராஜகோபால் தம்பதிகள் உற்சாகத்தில் வெங்கடேஸ்வரப் பெருமானை முக்கியமாய்க் கொண்டு ஒரு ஆலயம் உருவாகி வருகின்றது. இது தவிர பத்து வருஷங்களுக்குள் இன்னமும் இரண்டு அல்லது மூன்று கோவில்கள் கட்டப்படலாம்.

நியூயார்க், பிட்ஸ்பர்க் கோவில்களுக்குக் கும்பாபிஷேகம் செய்ய ஸ்ரீலஸ்ரீ பன்றிமலே சுவாமிகளை அழைத்திருக்கின்ருேம். நியூயார்க் கோவில் ஆரம்பமே திருமூலர்-அகஸ்திய மகரிஷி நாடி நூலில் வந்த உத்திரவிலிருந்துதான். குருமுனிவர் நியூயார்க் கோவில் எப்படி உருவாக வேண்டும் என்று எவ்வளவோ முறை சொல்லி இருக்கிருர். பகவானது உத்திரவுபடியே செய்து வருகின்ருேம்.

இந்த முயற்சி வெற்றியடைந்து நியூயார்க் கோவில் மாபெரும் புனித க்ஷேத்திரமாய்ப் பிரகாசிக்கத் தெண்டாயுதபாணி ஆண்டவரின் அருளை வேண்டி அவரது திருவடிகளைப் பணிவோம்.



**நியூயார்க் கோவிலிற்கு உதவப் பிரியப்படுபவர்**
**டாக்டர் அழகப்ப அழகப்பன் 84-39 Kendrick place, Jamaica Estates,**
**New York, N. Y. 11432, U. S. A. என்ற முகவரிக்கு எழுதலாம்.**

திருச்சிற்றம்பலம்

# அருள்மிகு வெள்ளிங்கிரி ஆண்டவர் தேவஸ்தானம்

## பூண்டி

செம்மேடு அஞ்சல் - கோவை மாவட்டம்

"தண்ணார் மதியும் தழுவாளரவும் சடிலத்தணியும் தலைவாசரணம்
பண்ணார் இசையும் பகைமான் குரலும் படர் செஞ்செவி நாயகனே சரணம்
பெண்ணா முமையும் நீயாணுருவும் வினையும் திருமேனியனே சரணம்
விண்ணுடரும் மண்ணவரும் பணியும் வெள்ளிங்கிரி வேதியனே சரணம்".

ஸ்ரீ வெள்ளிங்கிரியானது, இரசதகிரி, தென்கயிலை, தக்கணகயிலை, என்று திக்கெட்டும் போற்றிப்புகழ்ந்து, தேவர்களும், முனிவர்களும், நற்பயன் அடைந்த, நானிலம் வியக்கத்தக்க, புனிதமான ஓர் புண்ணிய திருத்தலமாகும்.

இக்கிரியானது, கோவை மாவட்டத்தின் மேற்குப் பகுதியில் சுமார் 8000 அடி உயரமுள்ள மலையாகும். எவ்வுயிரும், பேரின்பம் அடையும் பொருட்டு, இறைவன் சுயம்பு லிங்கமாக குகையினுள் எழுந்தருளியிருப்பது காணக் கண்கொள்ளாக் காட்சியாகும்.

வெள்ளிங்கிரி மலையின் அடிவாரம் பூண்டி என அழைக்கப்படுகிறது. இங்கு அருள்மிகு வெள்ளிங்கிரி ஆண்டவரும், சௌந்தர நாயகி அம்பாளும், விநாயகரும், எழுந்தருளியுள்ளார்கள். புதிதாக தனித்தனியே நிர்மாணிக்கப் பட்டுவரும், கர்பகிருகம், அர்த்த மண்டபமும் கூடிய ஆலயங்களின் திருப்பணி வேலை சுமார் இரண்டு லட்சம் செலவில் இனிது நடைபெற்று வருகிறது.

கோடை காலமாகிய பிப்ரவரி முதல் மே மாதம் முடிய லட்சக் கணக்கான பக்தகோடிகள் தங்கள் பிறவிப்பயன் வேண்டி, கிரிமலையில் ஏறிச்சென்று இறைவனின் திருக்கோலத்தைக் கண்டு களித்து, தரிசித்து பேரின்பம் அடைந்து வருகிறார்கள். கார்த்திகை தீபம், பங்குனி உத்திரம், தமிழ் வருடப்பிறப்பு, சித்ரா பௌர்ணமி ஆகிய திருவிழா நாட்களில் பார்த்தோர் வியந்து செல்லும் அளவுக்கு, பல லட்சம் பக்தர்கள் இங்கு வருகை தருகிறார்கள்.

இத்திருக்கோயில்களின் திருப்பணி வேலைகள் சீரோடும், சிறப் போடும், சிங்காரப் பொலிவோடும், நடைபெற, பக்தர்களும், அன்பர்களும், சிவநேசச் செல்வர்களும், தங்களால் இயன்ற பொருளுதவி அளித்து, இறைவனின் திருவருளை பெற்றுய்யுமாறு வேண்டுகிறோம்.

இங்ஙனம்,

D. V. சுப்பைய்யா

*செயல் அலுவலர்*



# நல்வாழ்வுக்கு வழி





திரு. கி. ஆ. பெ. விசுவநாதம்

இப் பரந்த உலகில் ஆராய்ந்து பார்க்கும் பொழுது சாதி இரண்டொழிய வேறில்லையென நன்கு தெரிகிறது. நீதி வழுவாத நெறிமுறையில் நின்று, பிறருக்கும் வழங்கி வாழ்பவன் மேற் குலத்தான் எனவும், அவ்வாறு வாழாதவன் கீழ்க் குலத்தான் எனவும் ஆகின்றனர். அறநூல்கள் அனைத்தும் இதையே கூறுகின்றன.

எந்த வகையில் எண்ணிப் பார்த்தாலும் இவ்வுடல் பொல்லாத புழுக்கள் நிறைந்ததாகவே தோன்றுகிறது. அறிஞர்கள் இதனை நன்கு அறிந்திருப்பர். ஆகவே, அவர்கள் தாமரை இலையிலுள்ள தண்ணீரைப்போல இவ்வுடலில் ஒட்டியும், ஒட்டாமலும் வாழ்வரே யன்றி இவ்வுடலைச் சிறப்பித்து எவரிடமும் பேசுவதில்லை.

நீர் நிரம்பி வழியும் ஆறு வற்றிப்போய் அதன் மணல் அடி சுடுகின்றபோதும் அது ஊற்றுப் பெருக்கால் உலக மக்களுக்கு நீரை வழங்கி வரும். அதுபோல உயர்ந்த மக்கள் தம் செல்வம் வற்றி, வறுமை வந்த காலத்தும் ஏற்பவர்க்கு இல்லையென்னமல் இயன்ற வரை எதுவும் வழங்கி மகிழ்வர்.

இறந்துபோன மக்களை எண்ணி ஆண்டு ஆண்டுதோறும் அழுதழுது புரண்டு வருந்தினலும் மாண்டார் ஒருபோதும் திரும்ப வருவதில்லை. நமக்கும் சில நாட்களில் அதே கதிதான் ஏற்படும். ஆகவே, இவ்வுண்மைகளை உள்ளத்தே எண்ணி நல்வழியில் நடந்து, நல்லவைகளைச் செய்து, நன்மக்களுக்கு வழங்கி, உண்டு கவலையற்று வாழ்வதே நலமாகும்.

துன்பம் மிகுந்த வயிறே! உன்னோடு வாழ இனி என்னல் முடியாது. ஒருநாள் உணவை விட்டு இரு என்றல் இருப்பதில்லை. இரண்டு நாள் உணவை ஒன்ருக ஏற்றுக்கொள் என்றல் அதையும் ஏற்றுக்கொள்வதில்லை. நான் உனக்காகப் படுகின்ற துன்பத்தையும் நீ ஒருநாளும் அறிந்து கொள்வதில்லை. உன்னோடு வாழ்வதே தொல்லையாக இருக்கிறது. நான் என்ன செய்ய?

ஆற்றங்கரையில் செழித்து வளர்ந்து நிற்கும் நீண்ட மரமும், அரசர் அறிய சிறந்து வாழ்கின்ற வாழ்வும் ஒரு காலத்தில் வீழ்ச்சியுற்று விடும். உழுது உண்டு வாழும் வாழ்வே ஒரு நாளும் வீழ்ச்சியுருத வாழ்வாகும். அதற்கு ஒப்பான பழுதற்ற தொழில் வேறு எதுவும் இல்லை.

தண்ணீரானது நில நலத்திறைற் சிறப்பை அடையும். தக்க செல்வம் படைத்தவர் ஈகைக் குணத்திறைற் சிறப்பை

அடைவர். கண்களைப் பெற்றவர்கள் கருணை காட்டுவதால் சிறப்படைவர். பெண்மக்கள் கற்பழியாத் தன்மையால் பெருஞ் சிறப்பை அடைவர்.

உற்றாரும், உறவினரும் பெற்றாரும், பிறந்தோரும் காலில் விழுந்து வணங்கி வேண்டினும் கீழ்மக்கள் தம்மிடமுள்ள செல்வத்துள் சிறிதும் வழங்க மாட்டார். கரும்பானது தன்னைக் கசக்கிப் பிழிகின்ற மக்களுக்கே சாறு வழங்குவது போலக் கீழ் மக்களும் தன்னை அடித்துத் துன்புறுத்தும் மக்களுக்கே விரைந்து வழங்குவர்.

நீரும், நிழலும், மனையும், செல்வமும், சீரும், சிறப்பும், பேரும், புகழும் பெற்று வாழ்கின்ற பெருவாழ்வு வேண்டுமானால், அதை மிக எளிதாகப் பெறலாம். அதற்கு செய்ய வேண்டியதெல்லாம் நல்லதை எண்ணுவதே. வஞ்சமற்ற நெஞ்சமே வாழ வகுக்கும் தன்மையுடையது.

வழக்கு தீர்க்கும் மன்றத்திலிருந்து கொண்டு உண்மையை மறைத்துக் கூறு வோர், ஒரு தலைச் சார்பாகச் சான்று கூறு வோர், ஒரு தலைச் சார்பாக முடிவு கூறு வோர் ஆகிய இவர்களின் இல்லங்கள் குட்டிச் சுவராகி, எருக்கஞ் செடி முளைத்து, பாம்புகளும் வந்தடைந்து பாழ்பட்டுப் போவதுடன் வாழ்வும் அழிந்துவிடும்.

ஆறில்லாத ஊரும், நீரில்லாத கிணறும், நெய்யில்லாத உணவும், உடன் பிறப்பில்லாத உடம்பும், மனைவி யில்லாத வீடும், அறி வில்லாத செயலும் அழகின்றி, சிறப்பின்றி, சுவையின்றி, பயனின்றி, ஒளியின்றி, நல மின்றிப் பாழ்பட்டு அழியும்.

ஒருவன் தனக்கு வருகின்ற வருவாயை விட அதிகமாகச் செலவுகளைச் செய்தால், அவன் செல்லுமிடமெல்லாம் பெருமை அழிந்து, அறிவுகெட்டு நல்லவர்களாலும் பொல்லாதவனாகக் கருதப்பட்டு, பின் திருட னாகவும், தீயவனாகவும் கூட காட்சியளிக்க நேரிட்டுவிடும்.

மானம், குடிப்பிறப்பு, கல்வி, அறிவு, ஈகைக்குணம், உணர்வு, நெறி, உயர்ச்சி, முயற்சி, இச்சை ஆகிய அனைத்தும் இந்தப் பாழான உடம்பில் பசி வந்தவுடன் சில மக்களிடம் பறந்தோடிப் போய்விடுகிறது.

உண்பது உழக்கு அரிசியும், உடுப்பது நான்கு முழத் துணியும்தான். ஆனாலும் மனிதன் எண்ணுவதோ எண்பது கோடி நினைவுகள். எவ்வளவுதான் விழிப்பாகப் பாதுகாத்து வந்தாலும் உடைந்து போகிற மண்கலத்தைப் போன்ற இவ்வுடம்பைப் பெற்று வாழும் வாழ்க்கை சாகும் வரை துன்பமுடையதாகவே இருக்கும்.

மரம் பழுத்து விட்டால் எவரும் அழைக்காமலேயே வௌவால்கள் மரத் தைச் சூழ்ந்து கொள்ளும். கன்றை ஈன்ற பசுவானது சிறிதும் ஒளிக்காமல் பாலைப் பொழிந்து தருவது போலத் தம்மிடத்துள்ள பொருளை ஒளிக்காது வழங்கும் வள்ளண்மை யுள்ள மக்களை உலகினர் யாவரும் உறவின ராகவே கொள்வர்.

இழுக்குள்ள பாட்டை விட இசை மட்டும் நல்லது. உயர் குலம் பேசுவதை விட ஒழுக்கமே நல்லது. குற்றமுள்ள வீரச் செயலைவிட கொடுநோய் நல்லது. பழிக்கு அஞ்சாத மனைவியோடு வாழ்வதைவிட தனித்திருந்து சாவது நல்லது.

யானையின் உடலிலே பாய்கின்ற அம்பு பஞ்சுக் குவியலிலே பாய முடியாது. அது போலக் கடுஞ்சொற்களானது இனிய சொற் களை வெல்லாது. ஆனால் இனிமையான சொற்கள் கடுமையான சொற்களை வென்று விடும். ஆம், இரும்பினாற் செய்த கடப் பாரைக்குப் பிளவுபடாத கருங்கற்பாறை பசுமரத்தின் வேருக்குப் பிளவுபட்டுவிடும்.

கல்வியறிவு இல்லாவிடினும் பொருள் மிகுந்துவிடுமானால் பலரும் அவனிடம் சேர்ந்து போற்றிப் புகழ்ந்து கொண்டி ருப்பர். ஆனால், பொருள் இழந்த ஒருவனை கட்டிய மனைவியும் விரும்பாள். பெற்ற தாயும்கூட பொருட்படுத்தமாட்டாள். அவன் வாய்ச்சொல் எவரிடமும் செல்லுபடியாவ தில்லை.

ஆல மரமும், அத்தி மரமும் பூக்காமலே காய்ப்பது போல ஏவாமலே அறிந்து செய்யும் மக்களும் சிலர் இருக்கின்றனர். நன்ருக உழுது, எருவிட்டு விதைத்தாலும் முளைக்காத சில விதைகளைப்போல இடித்திடித்துச் சொல்லி உணர்த்திறைலும் உணராத மக்களும் சிலர் இருக்கின்றனர்.

முத்துச் சிப்பி கருக்கொள்ளும்பொழுதே அழியத் தொடங்குகிறது. மூங்கில் முத்தை விளைக்கும்பொழுதே அழியத் தொடங்கி விடுகிறது. வாழை மரம் குலையை ஈனும் பொழுதே அழியத் தொடங்கி விடுகிறது. அயல்மாதர் மீது மனம் வைக்கும்பொழுதே மக்களின் கல்வி, அறிவு, பொருள், மானம், மரியாதை ஆகிய அனைத்தும் அழியத் தொடங்கி விடுகிறது.



# About Palani Hill Temple...

"After a somewhat long interval, I again had the good fortune to have Darshan of the Lord of Palani Hill today, the excuse being the tonsure ceremony of my grand-daughter. The temple has been making consistant progress in that the number of pilgrims and worshippers is steadily increasing and the facilities provided are also increasing. This temple tops all other temples in Tamil Nadu in the matter of income. Those who are associated with the management of this unique temple deserve congratulations and praise. May Lord Dandayudapaniswamy shower His Blessings on all of us and grant ever-increasing prosperity to His worshippers while He Himself remains a Prince of Sanyasis."

(Sd.) ***O. V. Alagesan***
*Member of Parliament*

2—1—1972

அருள்மிகு

# நச்சாடை தவிர்த்தருளிய சுவாமி

## திருக்கோயில்

**தேவதானம் (வழி) இராஜபாளையம்**

முகவை மாவட்டம்

## தலச் சிறப்புகள்

இறைவன் : அருள்மிகு நச்சாடை தவிர்த்தருளிய பெருமான் - சிருங் கலிங்கர், அம்மையப்பர் என்றும் அழைக்கப்பெறுகிறார்.

இறைவி : அன்னை தவம் பெற்ற நாயகி

தலம் : பாண்டியநாட்டு பஞ்சபூத தலங்களில் இது ஆகாயத் தலமாகும்

தீர்த்தம் : திருக்குளம்

தலவிருட்சம் : சரக்கொன்றை மரம்

*முக்கியச் சிறப்பு:* உமாதேவி தவக்கோலத்திலேயே இங்கு எழுந்தருளி ஈசனை வழிபாடு செய்த தலம். தேவர்கள் முனிவர்கள் சேர, சோழ, பாண்டிய மன்னர்கள் இங்குக் கோயில் கொண்டு எழுந்தருளியுள்ள ஈசனை வழிபட்ட தலமாகும். பாண்டிய மன்னனுக்கு விக்ரம சோழ அரசனால் போர்த்த இருந்த நச்சாடையை ஈசன் தவிர்த்தருளினார். பாண்டிய மன்னனைச் சோழ அரசனின் படைகளிடமிருந்து காத்து ஈசன் சேவுகம் செய்தருளினார். சோழ அரசனுக்கு ஒளி இழந்த கண்ணிற்கு அவர் தமது குற்றம் உணர்ந்து திருந்தியபின் ஒளி கொடுத்துத் திருவருள் வழங்கினார்.

*குறிப்பு :* இத் திருக்கோயில் இராஜபாளையத்திலிருந்து தென்காசி செல்லும் பெருவழிப்பாதையில் சுமார் 12 கி. மீ. தொலைவில் தெற்கே அமைந் துள்ளது. சிவகிரியிலிருந்து இராஜபாளையம் செல்லும் பாதையில் வடக்கே சுமார் 5 கி. மீ. தொலைவில் அமைந்துள்ளது. புகைவண்டி யில் வருபவர்கள் இராஜபாளையம் வந்து அங்கிருந்து தென்காசி செல்லும் உந்து வண்டியில் வரலாம். அருகில் சேத்தூரில் அமைந் திருக்கும் அருள்மிகு திருக்கண்ணீஸ்வரர் சுவாமி ஆலயமும் இத் துடன் இணைந்த கோயிலாகும்.

**கு. சிதம்பரம்,** பி. ஏ.,
நிர்வாக அலுவலர்

# The Sacred and Secular Implications of Temples in South India







**Dr. Thiru. S. R. DORAISWAMI SASTRIGAL**

Temples of South India, especially in Tamil Nadu, are the centres of worship to millions of people every day. All temples are crowded and covered by devotees in mornings and evenings and one can perceive how ardent and sincere are men in their prayer and worship of God. Literate and illiterate, rich and poor are equally presented before the Gods in temples with varied quantities of offerings for divine grace and benediction. There is a surging consciousness in the minds of people that there is something in temples which would answer their demands and depositions and it is a clear evidence to show that the Tamil Nadu is the world of Gods and not of demons. Worships in temples are carried over in accordance with custom and practices quite in preparing with the traditions with due regulations, law and order enforced by the Hindu Religious Endowment Board. Enormous amounts of money are being spent for the renovation and remodelling of temples to attract the minds and brains of the worshippers. The talk of atheism and scepticism is only superficial and suspended to attain political ends and achievements. Religion lines and enthuses millions of people to change the phase of lives to a higher and nobler ideal. In these days of advanced scientific and technological studies, when human values are tantalising between the material and spiritual, between divine grace and human endeavours, temples afford a strong base and foundation for unshaken and unshakeable faith in the presence of a supreme power which shapes and guides human destiny. The architecture and iconography of temples gives one an opportunity to be proud of our ancient culture and civilisation, and admirable skill of our artisans in raising massive structures without a flaw and fault. The idols installed in temples are inspiring and emulative and they are the expressions of the artistic skill of our architects.

## TEMPLES AND WORSHIP

**Temples:**

Temples are the abodes of Gods who are the presiding deities of all objects created and under the order of creation. God is a logical necessity to explain the phenomenal universe which is created and destroyed. Anything that is, has a precedental existence and its existence is in an

unknown and unknowable principle to human thoughts and wisdom. Science has proved that annihilation and creation are inevitable and indispensable law of existence and that annihilation is only the negation of the objective visibility of a substance. The place of existence of the annihilated visible is predicated as God, a terminology which has been accepted by all religions in the world. As pots and domestic utensils of clay premeditate the existence a sensible and conscious being, so the universe which is extensive and immeasurable anticipates an active sensible agent for its creation. World was existing before our birth, continues to exist with its values during our life and logically that which is pre-existent should continue to exist even after our disappearance. Anything that is born is prone to death because birth and death are the mutual relata. The insensible universe should have been created by an omniscient. Being, and that Being is termed as God. As the spirit and efficiency are expressed through the created objects so the omniscience and omnipotence of the creator of the universe are expressed through the created. Even though the creator is not visible it is fait accompli that the creator should exist somewhere which is beyond human comprehension. Creation and destruction are a continuous process and as such the creator is an ever existent and omnipresent principle. The order and the discipline of universe are constant and continuous and not confusive and contradictory. This universal order is known as cosmic and universe is a cosmos and not a chaos. The preserver and sustainer of this cosmic order should be one above and beyond the cosmos and so he is called ultra-cosmic beyond the circumference of the cosmic creation. The Genius of that creator is called "cosmic power and consciousness" and is known as transcendental and superpotential.

The unkown can be known only through the known and seen and this physical attempt is known as contemplation, a mental activity to distinguish between the real and the apparent, appearances and realities, the effect and the causes. Disciplined contemplation leads one to meditation which is the midway of the mind to reach the unknown through the known. The seen and the known disappear slowly and the knowable is known in alloy with the known and seen. Through constant and continuous meditation the mind gets its own light strengthened and widened and slowly as at the advent of light darkness disappears and merges into the light, so the universe merges into that principle and the seer sees all light and there is no remnants of darkness at all. The seer has merged into the supreme light as the weak light merges into the magnum light. He has seen the centre of power and he concentrates on that power. This state of experience of the oneness of the seer and seen is known as concentration, the state of total negation of the objective existence. This is known as godhood and such great men are called prophets. When there is a recedence of the mind from concentration to meditation and from meditation to contemplation and from contemplation to empirical consciousness, the prophet comes back to the floor of lower mind and cognises the external as from the internal. He gives out his sublime experience of the supreme truth to his devotees and disciples, and these transmission of ideas and experiences form the bulk of our religious and philosophical literature. They have seen God and been with God both absolute and relative and there is no reason to doubt that veracity of their statements. The disciples and devotees of such a prophet adopt the same course of physical and mental discipline and confirm and conform to the divine experience of their Master.

Forms and names are only definitions of God, which are restrictive and exclusive but containing and constituting omnipresence and omniscience. As the gold bar and piece of gold have the same mineral quality so the defined and the indefinable are the same and identical. As bodies are the physical symbols of the metaphysical Truth so every Godhead is only an expression of the Essential Truth. As the produced sound dissolves into the ether so also the known and named forms merge into supreme truth and light. Temples are constructed to instal and consecrate godheads, so that the aspirants may contemplate and meditate. Modern science has proved that matter and spirit are one, the integrated and the disintegrated, the evolved and the involved stages of one and the same thing. Idols are evolved objects from the involved spirit and as such one can see God in any form and shape, in any name or nomenclature. The idol is installed in the interior portion called the sanctum sanctorum, wherein the devotee can be away from the busy, bustling and disputations crowd and set his mind firm on the form before him. When many devotees focus their minds and thoughts on one object it assumes to sum total of the energy and vitality of all. It gets comsic life and energy and responds to the devotee.

## WORSHIP

The word worship means the attunement of the mind to an object of superior order capable of satisfying the ardent desire of the devotee. Prayer is a mental process or set up wherein the devotee narrates his faults and failures and prays for their annihilation and institution of sound health and happiness which he has not secured so far from any quarter of approach. This consists in the faith of devotee. Faith is the extension of reason on the basis of experience, personal or otherwise, because without self conviction or reliable recitation one cannot expect faith in another. A patient approaches a doctor for cure either on his own personal experience or the declarations of similar patients who have been cured of their illness. In like manner one approaches God in a temple with the faith of cure and restoration to health and happiness. Worship consists of three aspects. Physical worship is prostration of the body before God, as a symbol of total surrender at His feet. Mental worship is the implanting of the image in his mind and think of only Him and nothing else. Verbal worship consists in the recitation of the sacred texts in praise of God of his great qualities and divine powers as sung by the great Alwars and devotees. A complete worship of God constitutes all these three phases, and this completes his homage and prayer.

Selflessness, simplicity, honesty, humility and sincerity are the essential properties of worship and prayer. Prayer consists in the direct relationship between man and God and one should avoid the thought and talk of anything other than God in His presence. Love, affection, compassion for the suffering and sympathy for the down trodden are the essential characteristics of a devoted mind and the prayer is for his spiritual advancement and the rectification of the mistaken. God is present in all, at all times and at all places but this consciousness will arise in one only through worship and prayer.

Swami Vivekananda says that temples are the phone offices of the unseen Almighty. As we can call one number from all numbers of different denominations so we can call the unkown through the names of Gods which are only different phone numbers of one and the same God. As we get a reply from the other end, to the phone number wherefrom we phone so also

every devotee will get His answer for his call in that number. Temples are the posts to remind a man of his divine source and existence. When one is hurrying his way, he sees the staff of the temple and hears the ring of the bell. He stops and thinks of Him who is superior to all and supreme in everything. He feels for his littleness and prays for pardon of his negligence and forgetfulness.

Temples are the centres of preservation of spiritual culture and character and religion can live only so long as temples are preserved in tact according to conventions and accepted laws of practice. Custom and conditions of prayer have to be honoured and respected to preserve the sanctity of temples, and care should be taken with regard to the cleanliness of the temples both interior and extension. The archakas should be clean, and should perform the adoration with physical and mental purity with fear and love of God. It is through proper Puja and prayer that the spiritual power of the idol is increased and multiplied for the benefit of devotees and the universe in general. Prayers in temples are conducted for the well being of all, irrespective of caste and creed, faith or cult, because God is one and his names are different. I must congratulate the Tamilnadu Endowment Board for doing their best in repairing and renovating temples which are the imperishable archeological records of our ancient spiritual culture and civilization.

**Hara Haro Hara**



## *About Palani Hill Temple*

The trustees deserve congratulations for managing in a way which preserves old values and the deity continues to inspire. The number of welfare activities add to its importance and preserve its sanctity.

Sd. K K. SHAH
Governor of Tamilnadu

12—7—71



# முருகன் எம் அருளரசு

டாக்டர் திரு. பி. கே. சுந்தரம்

ஏழையாளும் ஈசன் முருகன், உலகம் எலாம் புரக்கும் அரசன் முருகன். பேரரசர்க்கு ஏற்பட்டிருக்கிற ஆட்சிச் சின்னங்களெல்லாம் எம்பெருமானுக்கு உண்டு. தசாங்கங்களும் அவனது மாட்சிமைக்குச் சான்று. மலையும், ஆறும், நாடும், நகரமும், குதிரையும், யானையும், வெற்றி மாலையும், கொடியும், முரசும், ஆணையும் அவனது கொற்றத்துக்கு அடையாளங்கள். 1. அவன் பேரில் அகலாத பேரன்பு கொண்டவர்களுடைய அகத்துள் பொங்கிப் பூரித்து உழுகின்ற ஆனந்த **மலை**; 2. அதன் வழிப் பிறந்து வெள்ளமெனப் பெருகி வழியும் **ஆறு**; 3. அது கொண்டு சேர்க்கும் முக்தி எனும் **திருநாடு**; 4. போக்கும் வரவும் அற்று, பிறப்பிறப்பில்லாத **வீடு** என்னும் **அணி நகரம்**; 5. ஆதி அந்தம் இல்லாத அஞ்செழுத்து மந்திரத்தை ஓதி நிலம் அதிர ஒலி செய்து நடக்கும் சிவநேசக் **குதிரைகள்**; 6. முருகனைத் துதித்து உள்ளத்து மலம் அவிந்த சிவஞான **யானைகள்**; 7. சிவபோதமும் சிவநேசமும் உள்ளார்ந்த நல்லார் புனைந்த நறுமண**மாலை**; 8. ஐந்தொழில் புரிந்து உயர்ந்து நிற்கும் **கொடி**; 9. நவநாதமாகிய **முரசு**; 10. புவனங்களையெல்லாம் ஒரு குடையின் கீழ் ஆளுகின்ற தசையில்லாத **ஆணை**. இவையெல்லாம் தவிர, வேதம் எனும் வண்ண மயில் வாகனம்; எப்படிப்பட்ட மயில்? "ஆனதனி மந்திர ரூப நிலை கொண்டதாடு மயில்'' கையில் மெய்யறிவெனும் அயில்வேல்.

இன்னும், முருகன் அழகன்; அவன் திருமுடி முதல் திருவடி வரை கவிகள் வர்ணிக்கிறார்கள். குமரகுருபர சுவாமிகள் இந்த வடிவழகில் சொக்கி அதைச் சொல்லோவியமாக்கி நமக்குத் தருகின்றார்.

பைம்பொன்னால் செய்து ரத்தினங்கள் பதித்து ஒளி சிந்தும் பணிமுடி; ஆறு இளம் பிறைகளை வரிசையாய் வைத்தது போன்ற நெற்றிப் பொட்டழகு; அலர்ந்து விரிந்த தாமரை மலர்கள் போன்ற அருள் விழிகள்; பலகோடிப் பரிதிகள் ஒருங்கே உதித்தது போன்று சுடர் விடும் செவிக் குழைகள்; தண்ணென்ற நிலவைப் போன்ற குமிண் சிரிப்பு பூத்த குமுதச் செவ்வாய்; பிறவிப் பிணி சிதறுண்டு ஓட இன்சொல் கூறும் திருமொழி.

ஆமாம், முருகனது திருமொழி. குமரகுருபரர். முருகனது கொஞ்சும் தமிழ்ச் சொல்லைக் காதால் கேட்டிருக்கிறார். முருகன் பேசியிருக்கிறான். அவனுக்கு உகப்பான பேச்சு எது என்று அருணகிரிநாதரும் சொல்லியிருக்கிறார்: "உல்லாச நிராகுல யோகவிதச் சல்லாப விநோதன்'' என்பது **கந்தரனுபூதி** யல்லவா?

முடி தொடங்கி அடிமுடியச் சொல்லியாயிற்று. இருப்பினும் குமரகுருபரருக்குப் போதவில்லை. எல்லாவற்றையும் பார்த்த பின்னரும் மறுபடி அவரது பார்வை முருகனது திருமுகங்களில் வந்து மொய்க்கிறது. தனித்தனியாக அம்முகங்களைக் கண்டு பரவசமாகிறது ஆகா! சூரனைக் கடிந்த முகம் ஒன்று; வினைகளை அழித்து வீடு தரும் முகம் ஒன்று; நிறை மொழி மறை முழுவதும்

தன்னுள் மறைவாக நிறைத்து வைத்திருக்கும் திருமுகம் ஒன்று; பாசவினை நீக்கி பசுஞ்சுடர் பரப்பும் முகம் நான்காவது; மான் மகளுக்கும், யானைதன் அணங்கிற்கும் மோகம் தரும் முகம் ஐந்தாவது; ஆதரவு தேடி ஆசையோடு வந்த அடியார்களை ஆற்றுப் படுத்தும் முகம் ஆறுவது.

ஏறு மயிலேறி விளையாடு முகம் ஒன்றும், ஈசருடன் ஞானமொழி பேசும் முகம் ஒன்றும், கூறும் அடியார்கள் வினை தீர்த்த முகம் ஒன்றும், குன்றுருவேவல் வாங்கி நின்ற முகம் ஒன்றும், மாறுபடு சூரரை வதைத்த முகம் ஒன்றும், வள்ளியை மணம் புணர வந்த முகம் ஒன்றும் ஆக ஆறு முகமான பொருளை அருணகிரியார் பாடுகிறார்.

நக்கீரர் பெருமானோ: "உலகத்தைச் சூழ்ந்த இருள் அகலப்பல் கதிர் விரித்த முகம் ஒன்றும் ஏத்தி இரந்தார்க்குக் காதலோடு கருணை பாலிக்கும் முகம் ஒன்றும், அந்தணர் ஆற்றும் வேள்வி காத்து வக்கும் ஒருமுகமும், திக்குத்திகந்தங்களையெல்லாம் விளக்கி உணர முடியாதவற்றையும் உணர்த்தி வைக்கும் ஒரு முகமும், பகையழிக்கும் முகம் ஒன்றும், வள்ளியோடு குழைந்து நிற்கும் முகம் ஒன்றுமாக ஆறு முகம் தோன்றுகிறது" என்கிறார் திருமுருகாற்றுப்படையிலே.

முருகனது முகத்தினழகைக் கண்டு மனதைப் பறிகொடுத்த குமரகுருபரரின் உள்ளம் அடுத்தாற்போல அவனது தோளழகை மொய்க்கிறது. கடம்ப மலர் மாலையும், குரவ மலர் மாலையும் அணிந்த பன்னிரண்டு தோள்கள். ஒவ்வொரு கரமாகப் பார்க்கும்பொழுது ஒவ்வொன்றும் ஒரு தனியழகுடன் பொலிகிறது. 1. தேவர்கட்கு அமுதம் தரும் ஆசைக் கரம், 2. தேவமகளிர் அணைந்த அழகுக் கரம், 3. மழை அருளும் அரும் கரம், 4. பூவணிந்த புனித கரம், 5. மார்பிலே வைத்த அபய கரம், 6. இடுப்பின் இடது பக்கத்திலே அமர்த்திய ஒயில் கரம், 7. தொடையில் வைத்த தூய கரம், 8. வீரவளை அணிந்த வெற்றிக் கரம், 9. மணி சேர்ந்த மணிக் கரம், 10. அங்குசம் தாங்கிய ஆணைக் கரம், 11. கேடயம் சுழற்றும் போர்க் கரம், 12. வாளேந்திய வலிமைக் கரம்.

இவற்றுக்கு நடுவே பளீரென பொன் மணி பூண்ட அகன்ற மார்பு; அதன் குறுக்கே பைம்பொன் புரிநூல்; உருத்திராக்க மாலை; பூம்பட்டாடை; தங்க அரை ஞாண்; கச்சை; திருவரை; வீரக் கழல்; பொற்கிண்கிணி; சிலம்பு; ஆயிரங்கோடி இளஞ்சூரியர்கள் உதித்து வந்தது போன்ற ஒளி பொருந்திய தெய்வீக வடிவம்; அன்பருடைய உள்ளத் தாமரையில் அமர்ந்திருக்கும் அருளொளி.

முருகனது உருவ அழகினை ஓர் ஓவியமாகக் கண்முன்னர் கொணர்ந்து நிறுத்தி விட்டார் குமரகுருபரர். சடேரென்று அவர் முன் காட்சி மாறுகிறது. மனித உருவிலே இருப்பது போல் குமரனைச் சொல்லி வந்தவர், இப்பொழுது பார்வையையும், நடையையும் மாற்றி விடுகிறார். இப்பொழுது அவரது அருட் கண்ணுக்கு அவன் ஒரு மாபெரும் தத்துவமாகி விடுகிறான்.

முருகன் ஓம்காரத்தின் உள்ளொளி. அதற்கு மந்திரமே ரத்தம்; முக்தியே முடி; வன்னமே தோல்; உலகமே உயிர்; தத்துவமே எழுதாதுக்கள்; கலையே உறுப்புக்கள்.

அகிலாண்ட கோடியெல்லாம் அவன் உருவமாம், சராசரங்களெல்லாம் அவன் உடற்பகுதிகளாம். இச்சை, ஞானம், கிரியை இம்மூன்றும் கருவிகளாம்; இவற்றைக் கொண்டு நல்ல உயிர்களுக்கு உணர்வூட்டுகிறானும் ஐயன்.

இன்னும், மண்ணும், நீரும், தீயும், காற்றும், வெளியும், சூரியனும், சந்திரனும், உயிரும் ஆகிய எட்டும் எட்டு வடிவமாம் எட்டியும் எட்டாதிருக்கும் இந்த எட்டுக் குடியனுக்கு. இவ்வளவு சொல்லிய பிறகும் குமரகுருபரருக்குத்திருப்திஉண்டாகவில்லை. இன்னும் சொல்லுகிறார்; ''நான்'' "எனது" என்பது அற்ற இடமே அவன் திருவடி; அறிவே உருவம், இச்சா, ஞான, கிரியா சக்திகள் மூன்றும் முக்கண்கள்; அருளே

திருக்கரம்; அண்ட சராசரங்களெல்லாம் அவன் திருக்கோயிற் சந்நிதி; அச்சந்நிதியில் எல்லோரும் சமம்; எவ்வுயிர்க்கும் பின்னமற நிற்கும் பெருமான் முருகன்!

அவனே பிரமன்; அவனே விஷ்ணு; ருத்ரன்; மகேசன்; சதாசிவன். ஐந்தொழிலும் அவன் செய்கை. லயமும், போகமும், அதிகாரமும் அவனே! இதில், பிரமன், விஷ்ணு, ருத்திரன், மகேசன் என்னும் நான்கு உருவத் திருமேனிகள் முருகனுக்கு; சிவன், சக்தி, நாதம், விந்து என்ற அருவத் திருமேனிகள் நான்கு; சதாசிவம் என்ற அருவுருவத் திருமேனி ஒன்று என்று இவ்வாறாக மொத்தம் ஒன்பது திருமேனிகள். இவற்றுள் ஏதேனும் ஒன்றை உயிர்களின் பக்குவத்திற்கு ஏற்ப எடுத்து அருள் செய்வான் இந்த அடியார்க்கு நல்லான்; வேலைக்காரன்.

இத்தகு ஆறுமாமுகன் பழனித் திருத்தலத்திலே வீற்றிருக்கும் திருக்கோலம் எப்படி?

''சேயிரவி யொளி கவற்று
மாமணிப் பொன் முடியும்,
செம்முகமும்,
கருணை பொழி நயனமும்,
செவ்வாயும்
தூய நறும் புழுகொழுகும்
செழுமணிப் பொற்குழையும்,
தொடை நிறைந்த துணைதோளும்,
சுடரில் வேற்படையும்
மாயுமறை நூன் மார்பும்,
களப நறுஞ் சாந்தும்,
மணி மணிப் பூணாரமும்
பொன்னெலிய லுடையழகும்
பாயொளிக் கிண்கிணி புனைந்த
சீரடியும்

ஆஹா! மோகன சுந்தர எழில் வண்ணம் நமக்குப்புலனாகிறது. ஆனால் இது என்ன? இப்படியும் ஏதோ வருகிறதே?

''முடிமிசை யொண் மீக்
குடுமியழகும் தண்டும்''

அடாடாடா! எப்படித் தொடங்கி எப்படி முடிந்து விட்டது! கடைசியில் கையில் தண்டு ஏந்தி நிற்கும் பண்டாரமாக அல்லவா ஆகிவிட்டான் பழநியிலே! அரசர்க்கரசனைக் குமரகுருபரரால் அறிமுகப் படுத்தப்பட்ட ஷண்முகநாதன், கடைசியில் ஆண்டிக் கோலம் கொண்டு நிற்கும் நிலை வந்துற்றது எப்படி? ஆறுமுகங்களெங்கே! பன்னிருதோளெங்கே! யானையெங்கே' மயிலெங்கே! கொடியெங்கே! முரசெங்கே! வேலெங்கே! வள்ளியெங்கே! தெய்வயானை எங்கே! கிழவர் கோலூன்றி நடப்பர், குறிஞ்சிக் கிழவா உனக்கெதற்கு ஒரு கோல்! துறவிகள் கோவண முடுப்பர். வள்ளி மணாளா! உனக்கெதற்குக் கோவணம்?

''கூறுடையாளும் குன்றுக்
குணப் பெருங்குன்று ஞானப்
பேறுடைப் பழநீ யென்ன''

பழமுதிர்ந்த அறிவுச் சோலையாகி, அதன் நிழலிலே உயிர்களைச் சேர்த்து அன்பிலே குளிப்பாட்ட நினைத்து ஆண்டியானாயோ? ''துறவுக்கு அறிவு அணியாம்'' என்ற முதுரைப்படி குன்றிலிட்ட விளக்காய், உலகெலாம் உன் வயமிருந்தும் எல்லாவற்றையும் அன்பருக் களித்துத் தனக்கென வாழாப் பிறர்க்குரியாளன் ஆனாயோ! உயிர்ப் பசுக்களை மேய்ப்பதற்காகத் தடியேந்திய சிறுவனாய் நின்றாயோ! ஆத்தாள் கடும் தவம் செய்து உன்னைப் பெற்றாள் என்பதற்காக அத்தவ நிலையைத் துய்க்க எண்ணித் தனிமைக்குத் துணிந்தாயோ! அல்லது, தந்தை மாபெரும் யோகி, காமத்தை வென்ற பேரருளாளன் என்று நினைந்து, அவன் வடக்கிருக்க நான் தெற்கிருக்கிறேன் என்று தவக்கனலாய் இந்த நீள் நிலத்தை இரண்டு முனைகளிலும் இருவரும் காக்க முனைந்தீர்களோ! கம்பேந்திய காவற்காரா? தியாகத்திலும் சிறந்ததொரு வாழ்வில்லை என்று அறிவித்து மௌனப் புன்னகை சிந்தி விளங்குகின்றாயோ! பேசா அநுபூதிச் செல்வமே! தந்தைக்கு உபதேசம் செய்த தான் அதன் பொருளை நடத்திக் காட்டவேண்டுமென்று சொல்லும் செயலும் இணைய அசைவில்லாத உறுதியோடு பற்றற்று நிற்கிறாயோ! அல்லது, தந்தைக்கே உபதேசம் செய்தது, என்ன தான் இருந்தாலும், அபசாரம் தானே என்று வருந்தி உன்னைத் தனியே வருத்திக் கொள்கிறாயோ!

எது எப்படியிருந்தாலும், உன்னை நாங்கள் என்ன சொல்லி அழைத்தாலும், பிறப்பை ஒழித்துப் பெருவாழ்வும் பேறுங் கொடுக்கவரும் பிள்ளைப் பெருமானே! முத்தமிழால் உன்னை வைதாரையும் வாழவைக்கும் வள்ளியே! எமக்குத் தாயாகவும், தந்தையாகவும், அரசனாகவும், ஆசானாகவும் இருந்து எம் பிழை பொறுத்துக் காப்பது உன் கடன்! ❁

# ஸ்ரீ பூவணநாத சுவாமி திருக்கோயில்

## கோவில்பட்டி



இத்திருக்கோயில் நகரின் மையமாக மேட்டில் அமைந்துள்ளது. பூவணநாதர், களாவன இறைவர் என்பன இறைவன் திருப்பெயர்கள். அம்பாள் வெம்பக் கோட்டை செண்பகப் பாண்டியனுல் நிலைநிறுத்தப் பெற்று செண்பகவல்லி என்ற பெயரைப் பெற்ருள். செண்பகவல்லித் தாயார் பெரிய திருவுருவும் மட்டற்ற அருள் அழகும் கொண்ட வரப்பிரசாதி ஆவாள். திருக்குளமே தீர்த்தம். அகத்தியரால் தோற்று விக்கப்பெற்ற அகத்திய அருவி, கெண்டியிலிருந்து தண்ணீர் விழுவது போல் இருப்பதால் இது கெண்டி தீர்த்தம் என்று பெயர் பெறும். பல நோயாளிகள் இதில் வந்து முழுகி முழுநலம் அடைகின்றனர். சித்திரை விஷுவில் எண்ணற்ற பேர்கள் இதில் வந்து தீர்த்தமாடு கின்றனர். ஐப்பசித் திருக்கல்யாணமும், பங்குனிப் பிரம்மோற்சவமும் பெரிய திருவிழாக்களாகும். கோயில் நிதியிலிருந்தும், பொதுமக்கள் நன்கொடை மூலமும் சிறந்த கல்யாண மண்டபம் ஒன்று கட்டி முடிக்கப்பட்டுள்ளது. ஊரில் கோபுரம் இல்லாக் குறையைத் தீர்க்க ராஜகோபுரத் திருப்பணியும், முன் மண்டபத் திருப்பணியும் சுமார் ஐந்து லட்ச ரூபாய் செலவில் நடைபெற ஏற்பாடுகள் நடந்து வருகின் றன. ஆஸ்திக அன்பர்கள் தாராளமான அளவில் பொருளுதவி செய்து செண்பகவல்லித் தாயார் திருவருளுக்குப் பாத்திரராகும்படி கேட்டுக் கொள்கிருேம்.

**செ. காசி மாரியப்பன்**
**அ. மாரியப்பன்**
அறங்காவலர்கள்

**S. காளியப்பன், B. A.**
நிர்வாக அதிகாரி

# தமிழ் வாழ் பழநி






திரு. புத்தனேரி ரா. நடராசன்

இருகனிச் சுவையுண இயற்றமிழ் இலக்கண முணர்ந்தவன்
தருகனி இலையெனத் தனியனாய்ப் பழநியி லுறைந்தவன்
ஒருகனி 'நீயென' உமையவள் அழைத்திட உவந்தவன்
வருகனி தமிழென வரமருள் குருபரன் முருகனே.

(வேறு)

கண்ணிருக்குந் திருமுகத்தான் கவினிருக்கும்
திருத்தோளான் களவுகற் பெனவிரு
பெண்ணிருக்கும் இருபுறத்தான் பிடித்திருக்கும்
திருவேலான் பெற்றிருக்கும் வரமளித்தே
பண்ணிருக்கும் பைந்தமிழைப் பயின்றிருக்கும்
திருவாயான் பரிசுப்பழம் கிடைத்திலதால்
விண்ணிருக்கும் பெற்றோரை வெறுத்துவந்து
திருப்பழநி மலையமர்ந்தான் வெற்றிவேலன்.





பொன்னங் கொடிபோல் நுடங்குமிடைப்
பொன்னு டரசி விளையாடும்
பொதினி மலைவாழ் புரவலனே!
தென்னம் பழம்வீழ் திருத்தணிகை
செல்வ நம்பித் திருமகளாள்
தினைமா மலர்த்தேன் தினமுவந்து
தின்னு மெனமா தின்றவனே
தீதில் களவும் களிகற்பும்
திகழ்முத் தமிழால் தெரிந்தவனே
தன்னந் தனியே தண்டூன்றித்
தண்ணந் தமிழைச் சுவைத்தின்னும்
தமிழ்வாழ் பழநி வளர்பவனே!





# About Palani Hill Temple...

"This shrine is easily one of the most impressive, heart-moving and winning that I have visited. It is a joy to see that such a shrine is so well maintained and our ancient traditions are kept up. The votaries here remember millions and the enclose of all Government activity must be to keep up these places which give peace and quiet and look after the other spiritual aspect for which this ancient land has been so found. I congratulate the Executive Officer, Shri G. Adimulam and all his staff for the most efficient way in which Puja and Bhoja-Raga is carried out. I am most impressed."

**(Sd.) Nagendra Singh**
*Chief Election Commissioner,*
Delhi.

17—12—72.



"Once again my wife and I have had the greatest pleasure in having Dharshan at Shrine of Lord Subramaniya.

I am particularly grateful to the Executive Officer, Mr. Athimoolam and the Peshkar, Mr. Subramaniam for all the courtesy and kindness extended to us to facilitate our worship."

**(Sd.) Ponnambalam,**
*Ceylon Minister.*

30—12—73.

# தமிழ்நாட்டில்

# படிமக்கலை



திரு. மே. சு. இராமசுவாமி

மனிதனின் ஆற்றலுக்கு அப்பால் அவன் செயலைத் தடுத்துத் திருத்தி நன்னெறிப் படுத்தும் பொருள் ஒன்று உண்டு என்று அவன் எப்போது உணரத் தலைப் பட்டானோ அப்போதே அவன் வாழ்க்கையில் சமயம் மலரத் தொடங்கிற்று. சமய நெறி முதலில் அச்சத்தாலும் பின்னர் அன்பாலும் தோன்றியிருக்க வேண்டும். "அஞ்சியாகிலும் அன்புபட்டாகிலும் நெஞ்சம் வாழி, நினை" எனக் கூறுகிறார் அப்பர் (5-23-9)

பண்டைக் காலத்தில் ஊருக்கு முன் புறத்தில் பரந்த மரங்களின் அடியில் முதியோர் கூடி அவ்வப்போது ஊருக்கு வேண்டிய பொதுக் காரியங்களைச் செய்து வந்தனர். அவர்கள் கூடும் இடம் பொதியில் எனவும் மன்றம் எனவும் அழைக்கப் பட்டது. "முன்னூர் பொதியில்" எனப் புறநானூறும் (390 : 19) "அவையிருந்த பெரும் பொதியில்" என மதுரைக் காஞ்சியும் (161) கூறும். வேம்பு (புறம் 76 : 4), பலா (புறம் 128 : 1), விளவு (புறம் 181 : 1) முதலிய மரங்களின் கீழ் மன்றங்கள் கூடின.

இவை போன்ற மரங்களின் நிழலில் வழிபாட்டுக்குரிய தூணை அமைக்கும் வழக்கம் ஏற்பட்டிருக்க வேண்டும். அறம் கூறும் இடமாக அமைந்ததோடல்லாது இறைவனை இறைஞ்சும் இடமாகவும் இம் மரத்தடி விளங்கிற்று "கந்துடைப் பொதியில்" என்பது பட்டினப்பாலை (249). கந்து என்பதைத் "தெய்வம் உறையும் தறி" என விளக்குகிறார் நச்சினார்க்கினியர். சிற்றூரில் இருந்து மக்கள் குடிபோயினர். விடியற் காலத்தே பலிகொடுப்பார் இன்றிப் பொதியில் பாழ்பட்டது; அங்கிருந்த கரிய அடி பொருந்திய தூணை ஆண்மான் உராய்ந்தது. அதனால் தூண் அசைந்தது. (அகம் 287:3-6) தெய்வம் போய் விட்ட வலிய தாளினையுடைய தூண் நின்றிருந்தது (அகம் 307 : 11 –12) ஒலி பொருந்திய தெய்வங்கள் தூணைக் கைவிட பலி மாறிற்று; பொதியில் பாழ் பட்டது (புறம் 52 : 12–13). இவை எல்லாம் தெய்வம் நின்ற தூணை மக்கள் வழிபட்டு வந்ததை நினைவூட்டுகின்றன. வட ஆர்க்காடு மாவட்டம் வந்தவாசி தாலுக்காவைச் சார்ந்த சீயமங்கலம் சிவன் கோவிலில் உறையும் இறைவன் பெயர் தூண் ஆண்டார் என்பது, திருக்கன்றுப்பூர் கோயிலில் உள்ள இறைவன் நடுதறியப்பர் எனப் படுவர்.

கோயில்கள் ஏற்படுவதற்கு முன்பு இறைவனை மரத்தடியில் வைத்து வழிபட்டு வந்தனர் என்பது தெரிகிறது. இன்றும் திருவொற்றியூரில் மகிழ மரமும், திருமயிலையில் புன்னை மரமும், காஞ்சிபுரத்

தில் மாமரமும், சிதம்பரத்தில் தில்லை மரமும், மதுரையில் கடம்பமரமும், திருநெல்வேலியில் மூங்கில் மரமும் இறைவனின் இருப்பிடங்களாக எண்ணப் படுகின்றன. 'காண்டற்கரிய பேரொளியை'ச் கரிவலம் வந்த நல்லூரில் களா மரத்தினடியிலும், 'குறும்பலவின் முளைத்தெழுந்த சிவக்கொழுந்தை' திருக்குற்றாலத்திலும் நம் முன்னோர் கண்டனர். பொதியிலில் வைத்து வழிபட்ட நெடுந்தூணே இலிங்க வழிபாட்டுக்கு வழிகோலிற்று. "தழல் தூணதன் நடுவேயொரு உரு"வான (சம்பந்தர் 1:13:9) இலிங்கோத்பவ மூர்த்தியையும் உருவாக்கிற்று எனக் கொள்வது முறையாகும்.

சுவரில் எழுதப்பட்ட உருவத்தையோ, சுதையால் அல்லது மரத்தில் செய்யப் பெற்று வண்ணம் தீட்டப்பெற்ற உருவத்தையோ பிறகு மக்கள் வணங்கி வந்தனர். "வயங்குடை நகரத்துச் செம்பியன்றன்ன செஞ்சுவர் புனைந்து" என்பது மதுரைக் காஞ்சி (484 - 485), செங்கல்லாலான நீண்ட சுவரில் உள்ள விட்ட மரம் விழ, மாடத்தில் எழுதப்பெற்ற கடவுள் புறத்தே போய் விட்டது (அகம் 167 : 13–15) அழகிய நிறம் பொருந்த முத்துவடம் முதலிய புனைந்து செய்த அழகமைந்த வலிய சுவரின் கண்ணுள்ள பாவைகளும் பலி என எதனையும் கொண்டில. (அகம் 369 : 7–8): பொலிவு அற்றிருக்கும் மன்றிடத்தே மழை பெய்தலால் இளகியும் வெயில் உறுதலால் காய்ந்து நுணுகியும் வண்ணம் முதலிய வேலைப்பாடுகள் அழிந்த பாவையைப்போல் மேனி வாடிற்று (அகம் 157 : 11–13) என்னும் செய்திகள் அகநானூற்றினின்றும் அறியக் கிடக்கின்றன. கோயிலில் கடவுள் படமாக உள்ளார் என்பதைத் திருமந்திரம் "படமாடக் கோயில் பகவற்கு" எனக்குறிக்கிறது.

"உன்னுடைய விக்கிரமம்
ஒன்று ஒழியாமல் எல்லாம்
என்னுடைய நெஞ்சகம் பால
சுவர்வழி எழுதிக் கொண்டேன்"

என்பது பெரியாழ்வார் திருமொழி (5 : 4 : 6) ஆண்டாளோ,

"சுவரில், புராண, நின்பேர் எழுதிச்
சுறவ நற்கொடிக்களும் துரங்கங்களும்
கவரிப் பிணைக்களும் கருப்பு வில்லும்
காட்டித் தந்தேன் கண்டாய் காம தேவா"

என்கிறாள் (திருமொழி 1 : 4).

எட்டாம் நூற்றாண்டில் தண்டியால் எழுதப்பெற்ற அவந்தி சுந்தரி கதா என்னும் வடமொழி நூல் இராஜஹம்சனின் அரசி குகைக்கோயிலில் தன் பெற்றோரின் அருகே விளையாடும் நிலையில் சித்திரிக்கப் பெற்ற குகனை வணங்கி அவன் அருளால் ஒரு பிள்ளையைப் பெற்றாள் எனக் கூறுகிறது. குட வரையில் பாவையின் உருவம் எழுதப் பெற்றிருந்ததை "குட வரை எழுதிய நல்லியற் பாவை" எனக் குறுந்தொகை(89) கூறுகிறது.

இன்றும் கூடத் திருவரங்கத்து அரங்க நாதரின் சிலை சுதையால் ஆக்கப் பெற்றது என்பதையும் திருக்கோயிலூர் பெருமாளின் சிலை மரத்தால் ஆனது என்பதையும் நாம் அறிவோம். மகேந்திர வர்ம பல்லவனும் அவன் மகன் நரசிம்ம வர்ம பல்லவனும் வெட்டிய குகைக் கோயில்களிலும் கூட தெய்வ உருவங்களைச் சிற்பங்களாக அமைக்காதிருந்தனர். இங்கெல்லாம் சுவரில் தீட்டப் பெற்ற உருவத்தின் வண்ணச் சின்னங்களையோ, செங்கல்லாலும், சுதையாலும் செய்யப் பெற்ற திண்ணைகளின் சிறு பாகங்களையோ செதுக்கப் பெற்ற மர உருவங்களை நிறுத்த வைத்திருந்த துளைகளையோ காணலாம்.

தெய்வங்களுக்குரிய தாமரை மலர்கள் குளங்களில் பூத்திருக்கும் எனப் பெரும் பாணாற்றுப்படை (290) கூறுவதினின்றும் குளங்கள் இருந்த ஊர்களில் கோயில்களும் இருந்தன எனக் கொள்ளலாம். உறையூரில் கரிகால் சோழன் கோயில்களுடன் பழைய குடிகளையும் பண்டுபோல நிலை நிறுத்தினான் எனப் பட்டினப்பாலை (286) கூறுகின்றது. தருமபுரிக்கு அடுத்த அதமங் கோட்டையில் ஒரு சிவன் கோயில் இருந்தமையினைப் புறநானூறு (91) குறிப்பிடுகிறது. நன்னனது நவிர மலையில் காரி

யுண்டிக் கடவுளின் கோயிலும் (மலைபடு கடாம் 82-83 : 230-232) காஞ்சிபுரத்தில் உள்ள திருவெஃகாவில் பள்ளிகொண்ட பெருமாளின் கோயிலும் (பெரும்பாணாற்றுப் படை 372-373) இருந்தன. வெஃகாவில் கிடந்த மூர்த்தியை "மெய்ம்மலர் தூய்க் கைதொழுதி"ருக்கிறார். பேயாழ்வாரும் (மூ. தி. அ. 64,76). முருகனின் கோட்டம் ஒன்றைப் புறநானூறு (299 : 6) குறிப்பிடு கின்றது. பிற தெய்வங்களுக்கும் கோயில் களில் உருவங்கள் அமைக்கப் பட்டன என்பதனைப் பட்டினப்பாலையினின்றும் அறியலாம் (159-160). மதுரையில் மேற்கு வாயிலில் கொற்றவைக்குக் கோயில் இருந் தது (சிலப். 23 : 181). பலராமனுக்கும் திரு மாலுக்கும் தனித்தனிக் கோயில்கள் இருந் தன (புறம். 56 : 3-6).

சில காலம் சென்ற பிறகு மக்கள் கல், உலோகம் முதலியவற்றால் செய்யப்பெற்ற உருவங்களை வணங்க ஆரம்பித்தனர். வேதியர்களின் இல்லங்களில் மெழுகப்பட்ட அறையில் அவர்கள் வணங்கும் தெய்வ உருவங்கள் வைக்கப் பெற்றிருந்தன. "பைஞ் சேறு மெழுகிய படிவ நன்னகர்" என இச் செய்தியைப் பெரும்பாணாற்றுப் படை (298) கூறுகிறது. படிவம் என்னும் சொல்லுக்கு "வழிபடும் தெய்வங்கள்" என நச்சினார்க் கினியர் உரை எழுதுகிறார். தொல்காப் பியம் அகத்திணை இயல் இருபத்தெட்டாம் சூத்திரம் "மேவிய சிறப்பின் ஏனோர் படி மைய" என்பதில் படிமை என்பதற்கு, 'ப்ரதிமா' என்னும் வடமொழிச் சொல்லின் திரிபு என இளம்பூரணர் உரை கூறி "அது தேவர்க்கு ஒப்புமையாக நிலத்தின் கண் செய்து அமைத்த தேவர்மேல் வந்தது. அவருடைய பொருளாவன பூசையும் விழா வும்" என விளக்கியுள்ளார். ஆகவே படி வம், படிமை என்பன பூசைக்குரிய விக்கிர கத்தைக் குறிக்கும் சொற்களுமாகும்.

அரச ஆணையைத் தவறியவர்கள் தம் நிறையுள்ள பொன்னாற் செய்யப் பெற்ற பாவையைத் தண்டனையாக இறுத்தல் வழக்கம். "பொன் செய் பாவை" என்று அகநானூறு (127:8) "அவள் நிறை பொன் செய் பாவை" எனக் குறுந்தொகையும் (292 : 3-4) குறிப்பதினின்றும் தமிழ் மக்கள் பொன்னால் உருவங்கள் செய்து வந்தனர் என்பது தெளிவாகின்றது. "ஆடகப் பொன்னினு மனவினியன்ற பாவை" எனப் பெருங்கதையும் (1,40 : 372-3) காஞ்சி வைகுந்தப் பெருமாள் கோயில் கரு வறையைச் சுற்றியுள்ள கல்லிலே "பர மேஸ்வர விண்ணகரத்தவர்க் கொராயிரம் பொன் பதித்தாலம் படிமமும் குடுத்தா னென்றறிமின்களே.... அபிமான சித்தி யாயின பல்லவன்றனே" என்னும் எட்டாம் நூற்றாண்டுக் கல் வெட்டால் (A. R. 33/1888 S. I. I. Vol. IV No. 131) அறியலாம்.

பௌத்தப் பள்ளிகளிலும் உலோகங் களில் செய்த உருவங்கள் இருந்து வந்தன என்பதை எட்டாம் நூற்றாண்டினரான திரு மங்கை ஆழ்வார் நாகப்பட்டினத்துப் பௌத்த விகாரத்தில் வைக்கப் பெற்றிருந்த புத்தரின் பொற்சிலையைக் கவர்ந்து அதைக் கொண்டு திருவரங்கத்துக் கோயில் திருப் பணிகள் செய்தார் என்னும் குரு பரம் பரைச் செய்தியால் அறிய முடிகின்றது.

செம்பினாலும் பாவைகள் செய்யப்பட்டு வந்தன என்பதனை "எரி எழுகின்ற செம்பி னாலியன்ற பாவை" எனப் பெரிய திரு மொழியும் (1 : 6 : 4) "செங்கனலேயென வெம்பிய செம்பினிற், பொங்கனற் பாவை" எனச் சூளாமணியும் (துறவு 93) "ஊதுலை யுருக வெந்த வொள்ளழற் செப்புப் பாவை" எனச் சிந்தாமணியும் கூறுவதினின்றும் உணரலாம்.

"உருக்க உபயோகப் படுத்தப்பட்ட குகை யின் உருவை செம்பு பெறுவது போன்று உட்கொள்ளும் பொருளின் உருவை உள்ளம் அடைகிறது" என உபதேச சகஸ்ரியிலும் (14 : 4) "உருக்கப்பட்ட செம்பு முதலிய உலோகங்களின் குழம்பைக் குகையி னின்றும் அச்சில் ஊற்றிச் செய்யப் பெற்ற படிமங்கள்" எனப் பிரம்ம சூத்திர பாஷியத் திலும் (1 : 1 : 12) சங்கரர் கூறுவதினின்றும் அவர் காலத்தில், அதாவது எட்டாம் நூற்றாண்டில், செம்பினால் உருவங்கள்

செய்யும் பழக்கம் எவ்வாறு பரவியிருந்தது என்பதை நன்கு தெரிந்து கொள்ளலாம்.

ஒரு நூலில் ஒரு பொருளைப் பற்றிக் கூறவில்லையெனின் அப்பொருள் அக்காலத்தில் நடை முறையில் இல்லை எனக் கருதுவது தவறு. சொல்ல வேண்டிய தேவையும் அதற்கான சூழலும் இருந்தும் ஒரு பொருளைக் குறித்துச் சொல்லாது விடப்பட்டிருந்தாலும் கூட அது மிகவும் சிந்திப்பதற்குரியதாகும். தெய்வ உருவங்களை எந்தப் பொருளில் இயற்றுகின்றனர் என்று கூற வந்த மணிமேகலை ஆசிரியர், "மண்ணினுங் கல்லினு மரத்தினுஞ் சுவரினுங், கண்ணிய தெய்வங் காட்டுநர்" (21 : 125 : 126) எனக் கூறுகிறார். இங்கு உலோகத்தைப் பற்றியோ ஓவியத்தைக் குறித்தோ ஒன்றும் சொல்லப்படவில்லை. நூலின் பிற்பகுதிகளில் செம்பு, வெண்கலக் கன்னார்களை "செம்பு செய்ஞ்ஞருங் கஞ்சகாரரும்" (28 : 35) எனவும் ஓவியங்களை "வித்தகர் இயற்றிய விளங்கிய கைவினைச் சித்திரம்" (3 : 130-131, 19 : 5-6) எனவும் கூறுவதாலும் முன்னர்த் தெய்வ உருவங்கள் இயற்றப்படும் பொருள்களைப் பற்றிக் கூறியது முழுமையாகாது எனக் கருதுவதில் தவறில்லை. சிலப்பதிகாரமும் கஞ்சகாரரையும், செம்பு செய்குனரையும் பற்றிக் குறிப்பிடுகிறது (1 : 5 : 28).

பண்டைத் தமிழ்நாட்டில் பல ஊர்களில் சிறப்பு வாய்ந்த விழாக்கள் நடைபெற்றன. விழாக்கள் மலிந்த உறையூர், "கறங்கிசை விழவின் உறந்தை" (4 : 14), திருவிழாக்களையுடைய மிக்க சிறப்பு வாய்ந்த திருவேங்கடம், "விழவுடை விழுச்சீர் வேங்கடம்" (61 : 13), இடையறுத விழாவினையுடைய முருகனது திருப்பரங்குன்றம், "ஒடியா விழவின் நெடியோன் குன்றம்" (149 : 16) முதலிய ஊர்களை அகநானூறு நமக்குக் காட்டுகிறது. காவிரிப் பூம்பட்டினக் கடைத்தெருவின் கோயிலில் உள்ள முருகவேளுக்கும் ஏனைத் தெய்வங்களுக்கும், "குழல் அகவ, யாழ் முரல, முழவு அதிர, முரசு இயம்ப" விழா நடைபெற்றது. அப்பொழுது மகளிர் மாடங்களில் சாளரங்களுக்குப் பின்னால் நின்று வளை அணிந்த முன் கைகூப்பி வணங்கினர். (பட்டினப்பாலை 150-160). திருஞான சம்பந்தர் மயிலாப்பூர் கபாலீச் சரத்தில் நடைபெற்ற திருவிழாக்களையும் (2 : 47 : 1) திருமறைக் காட்டில் நெடிய மாட வீதிகளில் தேரோடும் திருவிழாக்களையும் (3 : 76 : 3), திருநெல்வேலியில் "மறையவர் நிறைதர அரிவையர் ஆடல் பேண" நடந்த மாத, நாள் விழாக்களையும் (3 : 92 : 9) குறிப்பிடுகிறார். திருப்பாம்புரத்தில் இறைவனும் இறைவியும் நாளும் நான்மறைகள் பாடிட வந்தனர் எனத் திருஞான சம்பந்தரும் (1 : 41 : 3)) திருவெண்காட்டு நெடுந்தெருவேயும் (6 : 35 : 1) திருவலம்புர மாட வீதியிலும் (6 : 58 : 1,4) இறைவன் செல்வதை மக்கள் கண்டு மனம் பறிகொடுத்தனர் எனத் திருநாவுக்கரசரும் கூறுகிறார்கள். இவ்விழா நாட்களில் வீதி வழியே சென்ற பெருமானை வீடுகளின் கதவுகளைத் திறந்து வைத்தோ மாடங்களின்மேல் நின்றோ கண்ணுரைக் கண்டனர் மக்கள். பெருமானின் திருவுருவங்கள் கல்லுருவங்களும் ஓவியங்களும் அல்ல, பொன்னாலும் வெள்ளியாலும் செம்பாலும் செய்யப்பெற்ற திருமேனிகளே எனச் சொல்வது தவறாகாது. மலைபோன்ற மார்புடைய திருமாலின் அடிகளைத் தலையினாலே வணங்கிக் கையினால் தொட்டு ஒருவன் ஆணையிட்டதைக் கலித்தொகையில் (108 : 55-56) காண்கிறோம். ஈசன் பொன்னடிக்குப் பூமாலை கொண்டு அன்புடன் புனைந்ததாகக் காரைக்காலம்மையார் கூறுகிறார் (அ. தி. 87). "இவர் இவர் உம்பெருமான் என்று சுவர்மிசைச் சார்த்தியும் வைத்தும் தொழுவர்" என்பர் பொய்கையாழ்வார் (இயற்பா. 14). இங்குக் குறிக்கப்பெறும் உருவங்களும் மேலே கூறியவாறு உலோகத் திருமேனிகளாக இருக்கலாம் என ஊகிக்கலாமா?

திருநெல்வேலி மாவட்டம் ஆதிச்சநல்லூரில் செம்பாலான புலி, யானை, மான், எருது, ஆடு, கோழி முதலியவற்றின் வார்ப்புருவங்களும் ஒரு பெண்தெய்வத்தின் வார்ப்புருவமும் அகழ்வாய்வில் கிடைத்துள்ளன. இவற்றின் காலம் கி. மு. 700 எனப்படுகிறது. இதற்குப் பின்னர் நமக்குக் கிடைக்கும் வார்ப்புருவங்களின் காலம் சில அறிஞர்களால் எட்டாம் நூற்றாண்டு எனவும் வேறுசிலரால் ஒன்பதாம் அல்லது பத்தாம் நூற்றாண்டு எனவும் கருதப்படுகிறது. இவ்விரு கால எல்லைகளுக்கிடையில் செய்யப்பெற்றனவாகச் செப்புருவங்கள் ஒன்றும் இப்போது நமக்குக் கிடைக்கவில்லை. இக்காலத்தில் மக்களால் வளர்க்கப்பட்ட படிமக்கலையைச் சுட்டிக்காட்ட ஏற்கனவே பார்த்த இலக்கியக் குறிப்புக்களிற் சிலதாம் நமக்கு உதவுகின்றன. ⊕

# SAIVISM

## ITS THEORY AND PRACTICE

**Thiru. M. ARUNACHALAM**

Saivism in the Tamil land, is as old as its language itself. The Tamil language is older than any language in the world which is not dead. We know that Tamil literary convention classified physio-graphical regions, into the hills, the forest, the plains, the coast and the desert, and named their deities also. It did not mention Siva; Muruga, Vishnu and others are mentioned, but not Siva. This is evidently because, at that ancient period, Siva had been considered as the Supreme. He presided over all the regions, and so no particular region was said to belong to him. Saivism is the cult of Siva, and its followers are the Saivas.

In popular lore, the term Saiva denotes one who abjures meat. This at once extolls the Saiva, both in culture and in religion. Non-meat-eating is a trait, which on sublimation, pictures the follower as a lover of all creation. This is a basic tenet of Saivism, viz, that the Saiva is a lover of all God's creation; not only of all mankind, but also of the animal kingdom and the vegetable kingdom. In the land of the Tamils, such a Saiva has been held in the greatest veneration. We know St. Francis of Assissi in the west was a lover of the animals and the plants; we would call such like him, real Saivas.

This would suggest that Saivism is not a mere a religion or a metaphysical proposition, but it is really a way of life. It is a way of disciplining oneself, as a member of society, as a citizen, as a servant of God, and as one of God's creation.

The term Siva is very suggestive. It means the giver of good or bliss. It is found in the centre of the Vedas. in the phrase 'Om namas Sivaya cha Sivataraya cha.' In Tamilnad and throughout India, Siva is the Absolute and the Supreme, and the one without a second. We know, almost all the world religions have each been founded by an enlightened seer or founder, but the Saiva religion has not been founded by any human being. It is the religion that was adhered to by the people of this country, through the course of centuries. Thus it can be said to be an integration and sublimation of the way people lived.

We shall give here the chief doctrines of the Saiva religion in a succinct form. Like all religions, it also treats of the three entities, I, Mine, and God, and their mutual relationship. I is the Jeevathma—Pasu. Mine is matter which is the Subject of perception and experience by the senses of man. It is called the external nature in its relationship to the soul. The last is the God of religion, and the Absolute of metaphysics, variously called Brahman, Pati etc. In our religion, God the Indifinable and the Incomprehensible is generally spoken of as the Sat-Chit-Ananda. It simply means that

He is Truth and Knowledge and Joy. Truth means that God is eternal and knowledge signifies that He is Omniscient. God is all love and the two other categories of soul and matter are under his direction. God has no form, but human beings, in order to understand His benefaction to them, consider that He functions through His own Chit-Sakti. This is often spoken of as His Sakti. Sakti is inseperable from Siva; the two are one, but for purposes of our own understanding we employ these two terms. In other words, we may say Sakti, is His own Grace. The soul can understand God only through His Grace.

The souls also are eternal. They take the bodies and spheres of experience created for them by God. Souls may be born in any of three kingdoms–the vegetable, the animal and the human. The nature of the soul is always to identify itself with the environment. When associated with matter, it loses as it were its inherent consciousness and behaves like matter which is insentient. But when associated with the spirit i. e., God, it regains its consciousness and exercises it. An inherent pre-cosmic bond called anava—the ego or ignorance, limits the consciousness of the soul. Sakti helps the soul to assume bodies and go through the cycles of births and deaths. Association with the body results in action. Action brings in its turn fruits, good and bad, and these result in further births. Thus the endless cycle goes on. Siva's Grace helps the soul at the proper time by appearing in the form of a Guru, severs the bonds and grants to the soul final deliverance and union with Himself.

The concept of pasa, the third entity, is a significant concept in Saivism. It is of three classes called Anava, Karma and Maya. We have mentioned anava just now. It is not a nature of the soul but only an accretion or impurity. It obscures the consciousness of the soul. Karma has been mentioned earlier. When the individual performs any action without caring for the fruits thereof, effect of action on the individual is nil and karma ceases. The third bond is maya. This is totally different from the maya of the Vedanta, Where it is defined as mere illusion. But in Saivism, maya is the material cause from which all things have been created and into which all things are ultimately dissolved. Maya helps the soul by providing it with the body and the tools for experience.

Liberation occurs through God's grace when all the effect of the soul's action has been fully enjoyed by it. God, in His infinite mercy, finds the soul to be fit for liberation when action has been reduced to nought; there is no birth and there is no maya. The film of anava is removed by the Grace of God, and the soul eternally united to Siva in an inseparable union, in the eternal enjoyment of bliss.

Saivism has an essential goal of lifting up man to the region of union with God. It is founded on scientific, logically established truths. This goal has helped to save the Saiva philosophy from becoming a purely metaphysical gymnastics, and religion from degenerating into blind superstition. Here life is not considered evil or sinful. There is a supreme purpose in life and living. Life is transcient and so happiness it offers is also transcient. Man has to proceed to permanency through this transcience. For this he has to follow a moral code or a dharma even in this life. This view sets before him a definite goal to live for and to strive for. All sastras, all devotional books, and the lives of all the saints, who had lived till this date, point to only one eternal truth and that is that God is Love and Truth.

Mahatma Gandhi has often said that Love and Truth are two faces of the same coin which is God. He has always declared that Truth is God. Our saint Tirumular has sung that Love is God. A message which has been made vibrant through the whole world by Jesus Christ is "love thy neighbour." Bharati says love even your foe.

Saiva religion has always aimed, both in theory and in practice, at a synthesis of all mankind, at social unity amidst the various classes and creeds. The stories of the canonised saints will well illustrate this truth. The Saiva hymnologist embraces the entire humanity; he extends the Saiva fold in space, as well in time, crossing all caste barriers, creeds and languages. Man has considerable freedom for worship but there should be love at heart, sweetness in words, and humility and righteousness in action.

"*Any one can offer at least a bit of a leaf*
*to God in the place of a flower;*
*Any one can give a handful of grass to a cow;*
*Any one can give a handful of rice*
*To the needy, out of his own food;*
*And anyone can speak a kind word to another.*"

Said Thirumular.

Saivism does not distinguish between man and woman in the matter of spiritual aspiration. It is a universal religion, always having its eye on the soulful practice, by a large number of people, of the highest tenets of philosophy. Here there is no rift between practice and precept.

I said the Saiva religion had no founder; but the Saivas hail four illustrious saints as their spiritual preceptors. They are Gnasambandha, Appar, Sundara and Manikkavachaka; their songs have been collected as the first eight books out of the twelve books in the Saiva canon. The tenth Book is so significant in import that it is called the Tirumantram—the mystic song. The twelvth Book constitutes the metric biography of the Saiva saints. The philosophical truths contained in these books were codified into a definite system of Saiva Siddhanta philosophy a few years later by Saint Meikandar. His manual is known as Sivagnanabodham. Meikandar is is the first precept in the line of monastic heads and himself and three heads after him in succession are known as the Santhana-acharyas. From the last of these branched off many lines of spiritual headship.

An important feature of Saivism is that it embraces all that was best in the past and paves the way for development on the most perfect lines for the future. It is both a living religion and an open religion. Its doors are open to all earnest seekers of truth, those who accept the brotherhood of man and long to strive towards realisation of the kingdom of God both within himself and in the world at large. In this sense, ours is a universal religion.

The impact of saints like Sambanda in the 7th century on society has evolved the imperial Chola dynasty as a race of temple builders. They ruled the country between the 9th and 13th centuries and built up a vast overseas empire also. They carried their message of God and love and culture to many far flung areas across the seas a thousand years ago. They had dotted the Tamil country with huge and mightly stone edifices as the house of God in every village, while themselves living in brick and mortar palaces which crumbled with the passage of time: but not the House of God they built.

The temple formed the nucleus for the town planning of those days. The temple was a centre of several concentric rows of

dwelling houses. Within the temple outer compound, there were many inner corridors. The temple itself was built on the model of a human body. The Sanctum was located at the site of the human heart. The head and feet represented the western and eastern entrances.

An aspect of Saiva worship has to be understood here. Saiva philosophy conceives of God as the Absolute, the Formless, but for the purpose of worship by the masses, two other forms had been developed. One is the form of the well known Nataraja and the other similar images, which are really manifest forms of the Formless One. The form worshipped in all the Siva temple is the Sivalinga, which is a formless form, if I may say so. It consists of a cylindrical piece of rounded stone inserted into the middle of a larger circular piece having a spout at the northern side. Both together have a lotuslike base; this is the Sivalinga. Temple worship is offered to the Sivalinga. This is installed in the sanctum to aid the devotees in concentrating their attention on God. The mind of man cannot grasp a formless being and so this formless form had been evolved as a compromise, to aid him. Further many years ago, the primitive man found a piece of stone under a tree; he worshipped it as God. That primitive worship has evolved through the generations into the finished Sivalinga and the temple tree. Every temple has a sacred temple tree which is reminiscent of the ancient tree just mentioned. This may illustrate the esteem in which Saivism holds even the vegetable matter as a creation of God.

In the Siva temple, the first deity worshipped is Vinayaka. He is a manifestation of the Supreme Siva and is in no way different from Him. He is the power of Siva that removes all obstacles, confronting the worshipper in the various activities of his life. The physical form of the mightiest creature in creation, namely the elephant, is given to Ganesa, the powerful destroyer of all obstacles. His physical form is esoterically the symbolic representation of the Pranava, Om. Vinayaka is given a large belly on which a hooded serpent is girt round as a belt. The large belly represents the vast expanse of the universe which is symbolically contained there in and nourished. The serpent has an uplifted hood at the tip of which is a large brilliant jem, representing the sun which sheds lustre on the world. The entire figure is calculated to signify God's sustenance and light to all creation.

The image of Muruga has six countenances and twelve arms. The countenances are symbolic of His Grace enveloping all the quarters of the cosmos; the twelve arms are a symbol of His might and help. Surapadma, the demon king, fought with Muruga and was slain by Him. He took the form of a peacock and a cock: Muruga showed mercy on these: He adopted one as his mount and placed the other on his banner. This is again a symbol of God's desire to redeem even the worst sinner.

Lord Nataraja who is worshipped next is, in the words of Lord Rothenstein, the greatest concept of sculpture ever evolved by the human mind excelling even the best Greek sculptures. The dance of Nataraja is now well known throughout the world. The form of Nataraja is a visual portrayal of the philosophy of Saiva Siddhanta. The dance is also called in this sense the Panchakshara dance or dance symbolic of the five lettered mantra. The drum is symbolic of the removal of maya, the fire the scorching of karma, the planted right foot, the removal of anava mala, the benedictory hand showers Grace and the lifted

left foot confers under it auspices infinite and eternal bliss to the liberated soul.

Then, Sakti is worshipped as the Mother the All-Merciful. It should be understood here that this is not a separate Sakti cult, but only worship of the Supreme in its aspect of Love and Compassion. The last worship is to Chandesa, who was born as a human child on earth but was raised to the retinue of Siva's forces in the heavens through his intense devotion. His is an elevating story in the Saiva canon.

The spiritual teacher or acharya has the highest place of honour in Saivism (as in Vaishnavism also). The Sastras say that Siva Himself appears as the acharya at the proper moment and directs the bhakta. Dakshinamurti in the Siva temple is the visual representation of the Supreme Guru. Under the spreading ficus tree (kallaal) in Kailas, this murti was seated in the pose of perfect peace and bliss; His form was that of a youth of sixteen years: four aged rishis (sages) Sanaka, Sanandana, Sanatana and Sanatkumara came to Him for spiritual instruction. He did not utter a word: but his very pose gave them all the instructions they needed and they departed, all their doubts dispelled.

The pose of the right hand of Dakshinamurti is known as the Chinmudra: the mudra of supreme wisdom. The right hand rests on the right knee, palm up: the fore finger bends, to touch the base of the thumb, itself released from contact with the other three fingers, which stand out each separately, and also separated from the forefinger. The thumb is the Supreme God, the forefinger, the soul, seeking eternal rest at the feet of God. When the forefinger touches the base of the thumb, it separates itself from the three other fingers: these three fingers represent the three bonds anava, karma and maya, and signify that the soul is free from the bonds and attains final union with God.

As in all progressive religions, Saivism also attaches great importance to congregational worship. Hundreds gather for worship even in small temples. The temple worship is itself very elaborate and is a feast to all the senses, which are here sublimated to a higher purpose. Besides the daily worship, special and occasional, annual festivals call together thousands and thousands of devotees. Every one in the gathering is beside himself in a religious transporation of joy and wonder. I and Mine and caste and class are forgotten. In this sense the unifying value of congregational worship cannot be over-emphasised.

A word about idol worship. The idol in Saivism is intended to point to the Being beyond. The mind of man cannot comprehend Siva the Nirguna (without attributes). Hence he installs Siva the Saguna (with attributes and form). Through the form all his thoughts go to Siva who is beyond the symbol. I may say that the Saiva has an idol in his worship. But his worship goes beyond the idol and not to it.

The Saiva does not declare that his is the only way of reaching God. He realises that in the vast variety of human nature, different ways of approach to God is possible and necessary.

The Saiva feels that he is working always in the presence of God. Siva sees our actions and knows that is good for us. The ills that we suffer are like the surgeon's knife intended to rid us of the effects of the past karma, good and bad. We cannot escape from His presence. We should realise that prayer by even the humblest is certain to reach the Heavenly Father. In

recent history we know how the leg of General Dwight Eisenhower was saved through the prayers of his parents when he was an young boy of 12 years, when doctors had decided upon an amputation. So we may say with Shakespeare that "more things are wrought by prayer than are dreamt of in our philosophy."

Rituals are not an integral part of religion. But they are necessary like the husk for rice. In order to retain the vitality of the rice, it has to be kept with the husk coating. For a jnani, the husk may not be necessary, but for the ordinary individual it is quite necessary. The Saiva rituals had been through the centuries sentinels of Tamilian culture and art. The temples had fostered all the branches of art, music, dance, poetry, architecture, sculpture, painting and the like; even agriculture, metal works and weaving and tailoring had received fresh impetus from the rituals. It is needles to elaborate on this well known theme.

Rituals are a symbol of the religious faith of the people. The food offering is in a sense an expression of our gratitude, to mother Nature, to God. Abhisheka and dhupadeepa are measures indicative of a purification of man internally and externally. Unless bhakti is given an external outlet in these forms, there is no satisfaction for the mind. This is a psychological fact.

Again, rituals had been largely responsible for building national character. The discipline, humidity, spirit of service and sacrifice and unity brought about by rituals have bound together Saiva Society. A spirit of national patriotism has brought together all peoples and made every individual a hero; it had made heroes out of clay. Religious rituals had done the same thing when regional patriotism was narrower. Men and women had undergone the greatest of sacrifices, and rituals were the visual inducements in religon.

Rituals of course are not religious experience. Only a spiritual experience can take man nearer God and confer ultimate oneness. When all are equal in God's creation, one cannot be high and another low, merely by the accident of birth. Thus there is no untouchable nor outcaste in a Saiva Society.

Service to God is also the same as service to godly men. The Saiva attaches equal reverence to God and godly men, and his own Guru.

Summing up, Saivism is a universal religion paying homage to the Supreme as Siva, who is Love, Light and Joy. The Saiva leads a righteous life, loves and serves his fellowmen. Out of reverence to life he does not eat meat. He has implicit faith in God. He is not intolerant of others who follow a different religion. His love of God makes him a better member of the society. His whole life is one of the surrender the Supreme Will.





# குமார தந்திரம்

திரு. V. விச்வநாத சிவாச்சாரியார்

" முருகன் தனிவேல் முனி நங்குரு வென்று
அருள் கொண்டு அறியார் அறியுந்தரமோ "

மானிடப் பிறவியின் பயன் ஞானப்பிழம்பான இறையருளைப் பெற்று எங்கும் இறை நிலையை உணர்ந்து துன்பங்களிலிருந்து நீங்கி அமைதியான இன்பம் அடைவதாகும். அப்பிறவியின் பயனை இவ்வுலக மக்கள் யாவரும் அடைய வேண்டி ஈசனல் முருகப் பெருமானை வழிபட்டு உய்ய அதன் முறைகளைத் தனித்துக் குறிப்பிட்டு உபதேசித் தருளியதே குமார தந்திரமாகும். அந்த அறவழி நூலின் அரிய கருத்துக்களின் சுருக்கமே இக்கட்டுரை. குமார தந்திரமென்ருல் குமாரன் + தந்திரம் எனப் பிரித்து குமரக் கடவுளுக்குத் தனிப்பட்டு விசேஷமாக உள்ள வழிபாட்டு முறையை விளக்கும் நூலாகும். சிவாகமங்கள் 28. அவைகளில் ஒன்ருன லலிதாகமத்தின் உபாகமமாகும். விசேஷமாக இந்தக் குமார தந்திரத்தில் முருகப் பெருமானுக்குப் பூசை முறைகளில் மற்ற ஆகமங்களில் கூறப்படாத மந்திரங்கள், மண்டலம், நியாஸம் முதலியவைகள் குறிப்பிட்டுக் கூறப்பட்டுள்ளன. ஆனல் கிரியைகளின் கார்ய முறைகளில் மாறுபாடு இல்லை. இதில் பூசை முறையானது இரண்டு விதமாகக் கூறப்பட்டுள்ளது. தனக்காக ஆன்மார்த்த பூசை செய்து கொள்வது ஒன்று, உலக மக்கள் அனைவருக்காகவும் ஆலயத்தில் பூசை நடத்துவது இரண்டாவது. இது பரார்த்த பூசை என்று சொல்லப்படும்.

இவ்விரண்டு பூசை முறைகளுக்கும் வழி வகுத்துக் கேள்விப் படலம் முதலாக ஸாயரட்சை பூசை முடிய 51 படலங்களாக கொண்டு தினபூசை, தினவிழா, மாதவிழா, விசேட நக்ஷத்ர திதிகளின் விழா, பெருவிழா, யந்திர மந்திர விசேட பூசா வழிபாட்டு முறைகள், திருக்கோயில்கள் அமைப்பதின் முறைகள், பழுதடைந்த கோயிலைச் செப்பனிட்டுக் குடமுழுக்கு நடத்தவேண்டிய முறைகள், மயில், யானை, வள்ளி, தேவயானை, சுமித்ரசண்டர், பரிவார மூர்த்திகள், பெருவிழாவின் முறை, தூல லிங்கமான விமானப் பிரதிட்டை, பூசைகளின் விளக்கம், மானிடர்கள் ஸ்நான அனுஷ்டானம் குஹ தீட்சை, ஆன்மார்த்த பூசை, பஞ்சகவ்ய பஞ்சாமிர்த முறைகள், மஹாபிடேகம் செய்ய வேண்டிய முறை ஆலயங்களில் வலம் வர வேண்டிய முறை, வணங்க வேண்டிய முறை, சுப்பிரமண்ய கவசம், ஆசார்ய இலட்சணம் போன்றவைகள் எல்லாம் இதில் கூறப்பட்டுள்ளன.

முருகப் பெருமானின் திருவுருவங்கள் 16 அழகிய அருள்மிகு வடிவங்களாகக் கூறப்பட்டிருக்கின்றன. (1) ஞான சக்தி தரன் (2) கந்தசாமி (3) தேவசேனபதி (4) சுப்பிரமணியர் (5) களிற்றூர்திப் பெருமான் (6) சரவணபவன் (7) கார்த்திகேயன் (8) குமாரன் (9) ஆறுமுகவர் (10) தாரகாந்தகர் (11) சேனபதி (12) பிரமசாத்தன் (13) வள்ளி கல்யாண சுந்தரர் (14) பால சுப்பிரமணியர் (15) கிரவுஞ்சபேதனர்

(16) சிகிவாகனர், எனப் பதினாறு ஆகும். இந்தப் பதினாறு பெயர்களையும் தினந்தோறும் யார் கூறுகின்றாரோ அவர் எல்லா பாபங்களிலிருந்தும் விடுபடுகின்றார்.

இப்பதினாறு அருள் வடிவங்களிலே இப் பழனியம்பதியிலே கலியுக வரதனைக் கண் கண்ட தெய்வமாய் விளங்கும் ஈசன் (2) கந்தன், எனப்படும் வடிவமேயாகும்.

அந்த, கந்தப் பெருமானின் திருவுருவம் வணங்குபவர்கள் வேண்டும் இஷ்டத்தை அருளும் கற்பக விருட்சமாய், செந்தாமரையின் ஒளியாய், புன்னகை ததும்பும் இன் முகத்துடன் இடையிலே சேர்ந்த இடக்கையும், வலக்கையில் தண்டமும், இடுப்பில் அரை ஞாண் கோவணமும், காத்யாயனீ குமாரனைப் அருளும் வடிவமாகக் கூறப்பட்டிருக்கின்றது.

ஸ்கந்தன், என்ற சொல்லுக்குச் சத்ருக்களை அழிப்பவர் என்பது பொருளாகும். இத்துணை பெருமையோடு கூடிய ஸ்கந்தனை மலைகளிலும், வனங்களிலும், பிரதிஷ்டை செய்யவேணும் எனக் கூறப்பட்டிருக்கின்றது.

"ஸ்தாபயேத் தைவதம் ஸ்கந்தம்
பர்வதேஷு வநாதிஷுசு"

"காந்தி முகமலர் போற்றி
கற்பக தருஎன அருளும் கருணைபோற்றி
வாய்த்த துணைப்பதம் போற்றி
வாமகரம் இடைசெறிந்த
மாண்பு போற்றி"

"சேர்ந்த தண்டகரம் போற்றி
கோவண நீடுஎழில் போற்றி
சித்தாந்தத்திற்
போந்த பொருளருளுமலைக் குமர
நாயகன் திருத்தாள் போற்றி போற்றி"

ஸ்ரீ கிருஷ்ணன் பகவத் கீதையில் ஸேனைகளுக்குள் நான் கந்தனாகி இருக்கிறேன் என்கிறார்.

கந்தன் என்ற சொல்லுக்கே திரண்டவன், ஒன்று சேர்ந்தவன் என்பதுபொருள்.

"சேயவன் வடிவம் ஆறும் திரட்டிநீ
ஒன்றாய்ச் செய்தாய்
ஆயதனாலே கந்தனும் நாமம் பெற்றான்"
— கந்தபுராணம்

எல்லாம் இருக்குமிடம் கந்தஸ்வாமி, ஸ்வாமி என்றாலே வடமொழியிலே முருகனுக்குத்தான் பெயர். ஸ்வம் என்றால் தன்னைச் சேர்ந்தது, தன்னுடையது, எல்லாம், என்று பொருள். அண்டசராசரங்கள் அனைத்தும் அவனுடையதே, கந்தா என்று கூறினாலே எல்லா வினைகளையும் போக்கடித்து வாழ வைக்கும் சக்தியுடையது.

"வந்த வினையும் வருகின்ற வல்வினையும்
கந்தா என்று சொல்லக் கலங்குமே"

என்பது சான்றோர் வாக்கும், அனுபவ உண்மையுமாகும்.

ஞான தண்டாயுதபாணியாய் விளங்கும் கந்தப்பெருமான் அருள்வடிவம் அகில உலகத்திற்கும் எல்லாச் சுகங்களையும் வாரி வழங்கிப் புன்சிரிப்புடன் காட்சி அளிக்கின்றது. அருணகிரிநாதர் முருகன் அருளிலே பூர்ணமாகத் திளைத்து நிற்கும் நிலையிலேகந்த சுவாமியிடம் வரம் கேட்கின்றார். என்ன வரம் கேட்கின்றார், இறைவா, குஹா, உனது பெயர்களையே கூறி உனது திருப்பாதங்களை நினைந்து என் உள்ளம் உருகுமாறு அருள் புரிவாய் என வேண்டுகிறார்.

"முருகன் குமரன் குகன்என் றுமொழிந்
துருகுஞ் செயல்தந் துணர்வென்
றருள்வாய்"
"மலர்ப் பதத்தினில் உருகவும்
இனியருள் புரிவாயே" — என்கிறார்

ஆனந்த வடிவன் முருகன் = சிவம் + சத்து, உமை = சித்வடிவம். முருகன் = ஆனந்தம். இதுவே ஸோமாஸ்கந்த மூர்த்தம். ஆனந்த வடிவினை முருகன் நாமாக்களின் பெருமை மிக உயர்ந்தது. முருகன் என்ற சொல்லிலே, முருகு என்பது பகுதி: அன், என்பது ஆண்பால் விகுதியாகும். முருகு என்ற சொல்லிலே ம்+உ=மு, ர்+உ=ரு, க்+உ=கு என மூன்றும் உகாரம். ஆண்டவனுடைய செயல்கள் மூன்று. படைத்தல், காத்தல், அழித்தல். ஓங்காரத்தில் அகார, உகார, மகார என மூன்று எழுத்துக்கள் உள்ளன.

முத்தொழில்களின் நடுவே உள்ளது காத்தல் தொழிலாகும். முருகு என்ற சொல்லிலே மூன்றுமே உகாரமாகும். ஆண்டவனிடம் யாரும் என்னை மறுபடி படைத்தருள வேணும் என்றோ, என்னை அழித்துவிடு என்றோ வேண்டமாட்டார்கள். என்னைக் காத்தருள வேண்டும் கந்தனே என்றுதான் வேண்டுவோம். காத்தருளுகின்றகடவுளான கந்தன் தன்னைச் சரணம் அடைந்தவனைக் காத்தருளுகின்றார்.

இத்துணைப் பெருமையுடைய கந்த சுவாமிக்கு உத்தம பக்ஷ வேள்விச்சாலை குமார தந்திரத்தில் கூறியபடி அமைத்து குடநீராட்டுப் பெரும் சாந்தி நடத்துபவர்கள் பெரும் புண்ணியசாலிகளே.

திருக்கோயில் வழிபாட்டினால் மனிதர்கள் தமது பாபங்களைப் போக்கிக் கொள்கிறார்கள். அமைதியுடன் எல்லாவித இன்பங்களையும் பெற்றுச் சிந்தை செம்மை அடைந்து சமுதாயத்தோடு வெறுப்பில்லாமல் அன்போடு வாழ்கின்றார்கள். இவ்வாறு ஒவ்வொரு தனிமனிதனும் நல்ல சிந்தையுடையவனாகி மாறுபட்டு இன்பம் அடைவதால் ஜனசமுதாயமே உயர்வு பெறுகின்றது. ஜன சமுதாயத்தின் நன்மைக்காகவே திருக்கோயில்கள் ஏற்பட்டு உள்ளன.

யாவருக்கும் அருள் பாலிக்கும் இடமே திருக்கோயில்கள். ஆகாயத்தில் பறக்கின்றோம், சமுத்திரத்திலே சஞ்சரிக்கின்றோம், எல்லாம் அவனது அருட்சக்தியே ஆகும்.

நாம் மனம் மெய் வாக்குகளால் அவனை அடைய வேண்டும். திருக்கோயில்களுக்குச் சென்று ஆண்டவனை வழிபட்டு வந்தால் மன அமைதி ஏற்படும். விசேடமாக, செவ்வாய்க் கிழமை, ஷஷ்டி திதி, கார்த்திகை, விசாக நக்ஷத்ரங்கள் தனது ஜன்ம அதாவது பிறந்த நக்ஷத்ரம் முதலிய நாட்களிலாவது ஆண்டவனைத் தரிசிப்பது ஆலயத்தை வலம் வந்து வணங்குவது, விசேடமாக, பஞ்சகவ்ய, பஞ்சாமிர்த அபிடேகம் செய்வது, மஹாபிஷேகம் செய்யும் முதல்தின இரவு முழுமையும் அணையா தீபமாக நெய்தீபம் இடுவது முதலியவைகள் செய்வித்தால் மங்களகரமான சகல மேன்மைகளும் உண்டாகும். இன்னமும் குறிப்பாகக் கார்த்திகை மாதத்தில் கார்த்திகை நக்ஷத்ரமும் பூர்ணிமை திதியோடுகூடிய மாலைவேளையில் முருகன் சன்னதியில் நெய்தீபம் ஏற்றித் தரிசித்தால் ஏழு பிறவிகள் எவ்விதக் குறைவுமின்றி பூர்ணமான பலனை அடைந்து பெறு வாழ்வை அடைவான் எனக் குமார தந்திரம் கூறுகின்றது.

திருக்கோயில்களில் வலம் வருவது வணங்குவது முறைகள்பற்றி: முருகனுக்கும் மயிலுக்கும் நடுவிலே யானைக்கும் முருகனுக்கும் நடுவிலே போகக்கூடாது. விடியற்காலையில் வலம் வருவது போகத்தைக் கொடுக்கும். நடுப்பகலில் போகம் மோக்ஷம் இரண்டையும் கொடுக்கும். இரவில் மோக்ஷத்தை மட்டும் கொடுக்கும். நித்ய அனுஷ்டானங்களை முடித்துக் கொண்டு வலம்வர வேண்டும். நன்கு ஸ்னானம் முதலியவைகளைச் செய்து சுத்தமாகத் தூய்மையுடன் ஆகாரம் அருந்தாமல் ஆயிரம் வலம் வருவது யார் செய்கின்றானோ அவன் அச்வமேதயாகம் செய்த பலனை அடைவான். தானே வலம்வருவது பூர்ண பலன் ஏற்படும். பணம் கொடுத்துத் தனக்கு இயலாமையினால் பிறரை வலம்வரச் செய்வது பாதி பலனையே அளிக்கும். தனது சரீரத்தைக் கீழேதள்ளிக் கைகளைச் சேர்த்து கூப்பிக்கொண்டு வலம் வருவது அங்கப்பிரதக்ஷணம் எனப்படும். இதனால் மஹாபாதகங்கள் நீங்கும். மூன்று தடவைகள் வலம்வர வேண்டும். கைகளை ஆட்டாமல் நமக்குமுன் செல்பவர்களைத் தாண்டி வேகமாகச் செல்லாமல், பூர்ண கர்பிணிப்பெண் எண்ணை நிறைந்த குடத்தைத் தலையில் சுமந்து நடந்தால் எப்படி நடப்பாளோ அது போல மெதுவாக நடந்து வலம்வரவேணும்.

வணங்குவது ஐந்துமுறை வணங்க வேணும். மயிலுக்கும் முருகனுக்கும் முன்னிலையில் வணங்கவேணும். நமஸ்காரம் செய்ய வேணும். வணங்குவது எட்டு அங்கங்களோடு இணைந்து செய்யவேணும். மார்பு, தலை, கண்பார்வை, மனஸ், வாக், கால்கள், கைகள், முழங்கால்கள் இணைந்து வணங்க வேண்டும். இடதுபக்கம் தலையை வைத்து வலதுகை கால்களை நீட்டியும் வலதுபக்கம்

தலையை வைத்து இடதுகை கால்களைச் சரீரத்துடன் நீட்டியும், பின் இரண்டு கைகளையும் தலைக்கு முன்புறமாக மொட்டைப்போல் இணைந்து வணங்க வேண்டும். இதுபோல் எழுந்து எழுந்து வணங்கவேணும் ஐந்துமுறைகள். இதுபோல வணங்குவது வலம் வருவது முடிந்தபின்பு யானையின் வாலைப்பிடித்துக் கொண்டு தலையின் நடுவிலே பார்வையை நிறுத்தி ஆண்டவனைத் தரிசிக்க வேணும். இவ்வாறு செய்து வந்தால் எல்லாப் பாபங்களும் நீங்கி மங்களகரமாக வாழ்ந்து ஸ்கந்தலோகத்தில் பிரகாசிப்பான் எனக் கூறுகின்றது.

திருக்கோயில்களுக்குச் செல்லும்போது வஸ்திரங்கள், தனம், அணிகலன்கள், தூப திரவ்யம், தீபம், பழங்கள், புஷ்பங்கள், வில்வம் முதலியன எடுத்துச் சென்று அர்ப்பணம் செய்யவேணும், அவரவர்கள் சக்திக்குத் தகுந்தவாறு. இல்லாவிட்டால் அங்குப் புல்பூண்டு முதலியவைகளையும் நிர்மால்யங்களையும் நீக்கிச் சுத்தம்செய்து கோலங்கள்போட்டு பின் வணங்கவேணும். ஆன்மார்த்த பூசையைப்பற்றி - சிவதீக்ஷை பெற்று பின்பு குஹ தீக்ஷையை பெற வேணும். கந்த சுவாமியை படமாகவோ மண்டலத்திலோ தண்டிலமாகவோ சிலா வடிவமாகவோ கும்பத்திலோ ஹ்ருதயத்திலோ தினமும் பூசிக்கவேணும். ஓர் அங்குலம் முதல் ஐந்து அங்குலம்வரை உயரம் இருக்கலாம். மாத்ராங்குல அளவில் சுபமாக அமைத்துக் கொள்ளவேணும். தங்கமாக மூர்த்திகள் இருப்பது உத்தமம், வெள்ளி மத்திமம் சிலையோ, தாமிரமோ அதமம் என்றும், மரத்தினுலும் மண்ணினுலும் செய்த உருவங்கள் வீட்டில் பூசிக்கக் கூடாது என்றும் கூறியிருக்கின்றது.

சமமான பார்வையை உடையதாக இருக்கவேணும், மேல்நோக்கி இருந்தால் பிரஜைகள் நாசமடையும். கீழ் நோக்கி பார்வை பணம் குறையும், வக்ரமான பார்வை புகழ் மறையும். ஆதலால் லக்ஷணத்துடன்கூடிய மூர்த்தியைப் பிரதிஷ்டை செய்ய வேண்டிய முறைகளைக் கூறியபடி செய்து பூசித்து வந்தால் நவக்ரஹபீடைகள் யாவும் நீங்கி புத்ரபாக்யம், வெற்றி, வீரம், பாதுகாப்பு, நீண்ட வாழ்வு, பணம், புகழ் இவையனைத்தும் முருகன் நமக்கு அருளுவான் எனக் கூறுகின்றது.

இவ்வாறு தினந்தோறும் ஆன்மார்த்த பூசையானது தீக்ஷைபெற்றுப் பின்பு செய்ய வேண்டும். ஆன்மார்த்த பூசையை முடித்துக் கோயிலில் சென்று வழிபட வேண்டும். நமது மனம் ஆண்டவனிடத்தில் நிலைக்க வேணும். கண்ணைப் பார்க்காமல் இருக்கச் செய்யலாம், முகராமல் வேறு இடம் சென்று விடலாம். கெட்ட விஷயத்தைக் கேட்காமல் இருக்கலாம்—ஆனுல் மனதை வேறு விஷயங்களிலிருந்து திருப்பி ஆண்டவனை நினைவில் கொண்டு நிலைக்கச் செய்வது மிக மிக சிரமமாகும். மனதை மிகத் தூய்மையாக வைத்துக்கொள்ள வேண்டும். மனதிற்குச் சலனமில்லாமல் ஆண்டவனிடம் நிலைத்து நிற்கப் பழகவேணும், கண்ணுடியும் தூய்மையாக இருக்கவேணும். ஆடாமலும் இருந்தால்தான் பிரதிபிம்பம் நன்கு நிலைத்துத் தெரியும். அதேபோல நமது மனமும் தூய்மையுடனும் சலனமில்லாமலும் இருக்குமானுல் ஆண்டவன் நமது மனதிலே விளங்கி அருளுவான். தினமும் திருக்கோயிலுக்குச் சென்று முறையோடு வணங்கி வலம் வந்தால் அகத்தூய்மை ஏற்படும்.

ஆன்மார்த்த பூசைகள் செய்யவும் கோயில்களுக்குச்சென்றுவணங்கவும் நமக்கு வயதாகவில்லை, பெரியோர்கள் செய்ய வேண்டியவை என்று இராமல் பதினைந்து ஆண்டுகளுக்குமுன் இருந்தது போலவே இருக்கின்றதைச் சிந்தித்து ஸ்ரீ கந்தசாமியை நோக்கி ஜெபம் தியானம் பாராயணம் தர்சனம் செய்ய ஆரம்பிக்க வேண்டும். சிவ ஞானிகளும், சித்தர்களும் தவசீலர்களும் தெய்வத்தொண்டே வாழ்வின் குறிக்கோளாகக் கொண்டு புகழோடு வாழ்ந்த குடும்பத்திலே பரம்பரையிலே இப்பாரத தேசத்திலே பிறந்ததை நினைவில் கொண்டு வீணுக்க் கழிந்த நாட்களை நினைத்து வருந்தாமல் மாறிச்செயல்பட வேண்டும்.

குமர குருபரனுகிய கந்த சுவாமியைக் குருவாகக் கொண்டாலன்றி நமது செயல் மாறுபடாது. தகுதி உடையவன் நமது வீட்டிற்கு வரவேண்டுமாயின் வருந்தி அன்புடன் அழைத்தாலன்றி வரமாட்டார் அல்லவா? அதுபோல "ஏ கந்தா ஞான சிகாமணியே தண்டாயுதப் பெருமானே முருகா, என் அப்பனே" என்று மனமுருகி வேண்டிஞல் முருகன் குருவாக வந்து அருளுவான். அவனது அருளுடன் குஹ தீட்சை பெற்று ஆன்மார்த்த பூஜை செய்து கொண்டு திருக்கோயில் தரிசனம் முதலியவைகள் முறையோடு செய்து இம்மையிலும் மறுமையிலும் நீங்காத செல்வம் பெற்றுப் பெருவாழ்வு வாழ குமாரதந்திரம் என்ற ஆகமத்தை உபதேசித்து அருளியிருக்கிருர் பரமேச்வரன். முருகன் அருளை அடைய வேண்டிக் குமார சுவாமியைப்பற்றிக் குறிப்பிட்டுத் தனித்துக் கூறியுள்ள குமார தந்திர வழியைப் பின்பற்றுவோமாக.

உருவாய் அருவாய் உளதாய் இலதாய்
மருவாய் மலராய் மணியாய் ஒளியாய்
கருவாய் உயிராய்க் கதியாய் விதியாய்க்
குருவாய் வருவாய் அருள்வாய் குகனே



## About Palani Hill Temple

"It is a pleasure to have the darshan of the Lord Murugha at Palani. The Chairman and other members of the Temple Trust Board are making nice arrangements for all the devotees who come to this Temple."

Sd. B. D. JATTI
Lieut Governor, Pondicherry

19—1—71

# திருக்கோயில் நிறுவனங்கள்

1. அருள்மிகு பழனியாண்டவர் இந்தியப் பண்பாட்டுக் கல்லூரி

தோற்றம் : 23—7—1960

கற்பிக்கும் பாடங்கள் :

1) பட்டப் படிப்பு (பி. ஏ.) இந்தியப் பண்பாடு (பிரிவு 13)

2) மேற்பட்டப்படிப்பு (எம். ஏ.)—இந்தியப் பண்பாடு (பிரிவு 11)

| | | |
|---|---|---|
| மாணவர் எண்ணிக்கை | : | 132 |
| ஆசிரியர்கள் | : | 15 |
| பிற பணியாளர் | : | 12 |
| மாணவர் விடுதிகள் | : | 2 |
| விடுதி மாணவர்கள் | : | 78 |
| விடுதிப் பணியாளர் | : | 9 |
| நூலகத்திலுள்ள நூற்கள் | : | 8000 |
| சஞ்சிகைகள் | : | 42 |

2. அருள்மிகு பழனியாண்டவர் கலைக் கல்லூரி

தோற்றம் : 24—6—1963

கற்பிக்கும் பாடங்கள் :

1) புகுமுக வகுப்பு :

1) கணிதவியல், பூதவியல், வேதியியல் (ஆங்கில வழி).
2) பூதவியல், வேதியியல், உயிரியல் (ஆங்கில வழி, தமிழ் வழி)
3) பொருளியல், வணிகவியல், சிறப்புத் தமிழ் (தமிழ் வழி)
4) கணிதவியல், பொருளியல், வணிகவியல் (ஆங்கில வழி)

2) பட்டப் படிப்பு :

1) தமிழ் [பிரிவு — 12]
2) ஆங்கிலம் [பிரிவு — 12]
3) பொருளியல் [பிரிவு — 4]
4) வணிகவியல்
5) கணிதவியல் [பிரிவு — 1]
6) பூதவியல் [ ,, — 3]
7) வேதியியல் [ ,, — 4]
8) தாவரவியல் [ ,, — 5]
9) விலங்கியல் [ ,, — 6]

3) மேற்பட்டப்படிப்பு :

1) விலங்கியல் [எம். எஸ்சி.] [பிரிவு — 6]
2) விலங்கியல் துறை ஆராய்ச்சி [பி. எச்டி.]

| | | |
|---|---|---|
| மாணவர் எண்ணிக்கை | : | 1150 |
| ஆசிரியர்கள் | : | 90 |
| பிற பணியாளர் | : | 55 |
| மாணவர் விடுதிகள் | : | 2 |
| விடுதி மாணவர்கள் | : | 300 |
| விடுதிப் பணியாளர் | : | 15 |
| நூலகத்திலுள்ள நூற்கள் | : | 20000 |
| சஞ்சிகைகள் | : | 106 |

3. அருள்மிகு பழனியாண்டவர் மகளிர் கலைக் கல்லூரி

தோற்றம் : 1—7—1970

கற்பிக்கும் பாடங்கள் :

1) புகுமுக வகுப்பு :

1) கணிதவியல், பூதவியல், வேதியியல் (ஆங்கில வழி)

2) பூதவியல், வேதியியல்,
உயிரியல் (ஆங்கில வழி)

3) பொருளியல், வரலாறு,
சிறப்புத் தமிழ் (தமிழ் வழி)

2) பட்டப் படிப்பு :

1) தமிழ் [பிரிவு – 12]
2) வரலாறு [பிரிவு – ]
3) தாவரவியல் [பிரிவு – 5]

| | | |
|---|---|---|
| மாணவியர் | : | 296 |
| ஆசிரியர் | : | 26 |
| பிற பணியாளர் | : | 17 |
| விடுதி மாணவியர் | : | 202 |
| விடுதிப் பணியாட்கள் | : | 4 |
| நூலகத்திலுள்ள நூற்கள்: | | 5000 |
| சஞ்சிகைகள் | : | 20 |

4. அருள்மிகு பழனியாண்டவர் மகளிர் செந்தமிழ்க் கல்லூரி

தோற்றம் : 1—7—1970

கற்பிக்கும் பாடங்கள் : தமிழ்ப் புலவர்
(நான்கு ஆண்டு படிப்பு)

| | | |
|---|---|---|
| மாணவியர் | : | 146 |
| ஆசிரியர் | : | 7 |
| பிற பணியாளர் | : | 6 |
| விடுதி மாணவிகள் | : | 89 |
| நூலகத்திலுள்ள நூற்கள்: | | 2112 |
| சஞ்சிகைகள் | : | 12 |

5. அருள்மிகு தண்டாயுதபாணிசுவாமி திருக்கோயில்

வேதசிவாகமப் பாடசாலை

தோற்றம் : 1—6—1959

கற்பிக்கும் பாடம் :

ஆகமமுறைகள், பூசை முறைகள் பயிற்சி

1) இரண்டாண்டு காலப் படிப்பு

2) ஐந்தாண்டு காலப் படிப்பு

| | | |
|---|---|---|
| மாணவர் | : | 23 |
| ஆசிரியர் | : | 2 |
| பிற பணியாளர் : | | 1 |
| நூலக நூற்கள் : | | 101 |

6. கார்த்திக் பள்ளி

தோற்றம் : 19—1—1972

கற்பிக்கும் பாடம் :

எல். கே. ஜி. [கிண்டர் கார்டன்]
யூ. கே. ஜி. ,, ,,
முதல் வகுப்பு
இரண்டாம் வகுப்பு
மூன்றும் வகுப்பு [ஆங்கில வழி]

| | | |
|---|---|---|
| மாணவ மாணவியர் | : | 130 |
| ஆசிரியர் | : | 5 |
| பிற பணியாளர் | : | 1 |
| நூலகத்திலுள்ள நூற்கள்: | | 500 |

7. செவிடர் பள்ளி

தோற்றம் : 14—2—1972

கற்பிக்கும் பாடம் : கணிதம், தமிழ், விளையாட்டு

| | | |
|---|---|---|
| மாணவ மாணவியர் | ; | 26 |
| ஆசிரியர் | : | 2 |
| பிற பணியாளர் | : | 2 |

8. ஆண்டவர் நூலகம்

| | | |
|---|---|---|
| தோற்றம் | : | 1945 |
| நூற்கள் | : | 4100 |
| சஞ்சிகைகள் | ; | 15 |
| நூலகர் | ; | 1 |

9. சித்த மருத்துவ மனை

தோற்றம் : 1964

மருத்துவர் : 1

சித்த மருத்துவ உதவி பெறுவோர்: 50
(நாள் ஒன்றுக்கு)

சிறந்த முறையில் அனைத்து நோய் கட்டும் சித்த மருத்துவ உதவி அளிக்கப் படுகிறது.

10. குழந்தைகள் காப்பகம்

தோற்றம் : 14—9—1972

குழந்தைகள் : 73

பணிபுரிவோர் : 5

காலை 9 மணி முதல் மாலை 4-30 மணி வரையில் வெளியில் சென்று பணிபுரியும் தாய்மார்களின் குழந்தைகள் செவ்வனே பராமரிக்கப்படுகின்றன.

11. அன்பு இல்லம்

தோற்றம் ; 1—5—1952

குழந்தைகள் : 96

பணிபுரிவோர் : 5

12. முதியோர் காப்பகம்

தோற்றம் : 15—2—1973

உறைபவர் : 10

பணிபுரிவோர் : 2

13. திருக்கோயில் மருத்துவமனை

தோற்றம் : 14—2—1972

மருத்துவ உதவி

பெறுவோர் : 200 (நாள் 1-க்கு)

படுக்கைகள் : 22

டாக்டர்கள் : 2

பிற பணியாளர் : 13



## ◀ About Palani Hill Temple ▶

"To me, a devotee of Muruga, it is an ever-thrilling experience to visit a Muruga Shrine. And a visit to such a Muruga Shrine as Palani is an ever-repeated ecstasy. Each time I see the deity here I perceive a new aspect, a new beauty and a new assurance of peace and solace in the countenance of the deity. I, like countless millions of others, am much beholden Shri Balasubramanian, Temple Superintendent and his colleagues and helpers for the care and devotion with which they work for the maintenance of the shrine in a state from which devotees derive pleasure and comfort".

*Sd. T. SWAMINATHAN*
*Chief Election Commissioner of India,*
*NEW DELHI.*

18—5—73



"This is an enchanting place which inspires devotion to Almighty and everything that a man desires for attainment of salvation".

*Sd.* .... .... .... ....
*Minister for PWD & Electricity*
*Govt. of Mysore*

4—7—73

மலைக்கோயில் ஆண்டவருக்கு நடைபெறும்

# நாள் வழிபாட்டு நிரல்

1. **விசுவரூப தரிசனம்:** *காலை 6 மணி*

துவார விநாயகர் தீபாராதனையும், பள்ளியறை தீபாராதனையும் முடிந்த பின்னர், உள்ளிருக்கும் ஆண்டவருக்குத் தீபாராதனை செய்யப்படும். பின்னர் ஆண்டவர்தம் நவபாடாணத் திருமேனியில் சாத்தப்பட்ட (இராக்கால) சந்தனமும், கோவண தீர்த்தமும் அன்பர்கட்குப் பிரசாதமாக வழங்கப்படும். இப்பிரசாதங்கள் அன்பர்களின் உளப் பிணியையேயன்றி உடற்பிணியையும் தீர்க்கும் மாட்சியுடையதாகக் கருதப்படுகின்றன.

2. **விழா பூசை:** *காலை 7-15 மணி*

ஆத்மார்த்த மூர்த்திகளை ஆண்டவர் திருமுன்பு வைத்து புண்ணியாகவாசனம் செய்து, நான்கு திக்கிலும் புனித நீர் தெளித்துப்பின், அர்த்த மண்டபத்திலுள்ள சொக்கவிநாயகருக்கு அபிடேக அலங்காரம் செய்தபின், ஆண்டவருக்கும் ஆத்மார்த்த மூர்த்திக்கும் பூசனை செய்யப்படும்.

ஆண்டவர் கோயில் கொண்டு விளங்கும் கருவறையில், ஆண்டவருக்கு இடது பக்கத்தில், படிகலிங்க வடிவில் ஈசுவரனும், அம்பிகையும், சாளக்கிராமமும் ஒரு பேழையில் வைக்கப்பட்டுள்ளன. விழா பூசையின்போது, ஆண்டவர் முதலில் தாமே தம் ஆத்மார்த்த மூர்த்தியாகிய ஈசுவரனைப் பூசித்து வழிபடுவதாகக் கொள்வது ஐதீகம். அதனால் இக்காலத்தில் செய்யப்படும் அபிடேகங்கள் முதலில் ஆத்மார்த்த மூர்த்திக்கும் அடுத்து ஆண்டவருக்கும் செய்யப்படும். ஏனைய காலங்களில் ஆத்மார்த்த மூர்த்திக்குத் தனி அபிடேகம் இல்லை.

அபிடேகம், அலங்காரம், அர்ச்சனை ஆனபின், ஆத்மார்த்த மூர்த்திக்குத் தூப தீப நைவேத்தியமும், ஏகதீபாராதனையும் செய்யப்பட்டு அன்பர்கட்குப் பிரசாதம் வழங்கப்படும். இக்காலத்தில், ஆண்டவருக்குக் காவியுடையொடு வைதிக கோலத்தில் அலங்காரம் செய்யப்படும்.

3, **சிறுகால சந்தி:** *காலை 8 மணி*

ஆண்டவருக்கு, அபிடேகம், அலங்காரம் அருச்சனைக்குப்பின் நைவேத்தியம், ஏக தீபாராதனை காட்டி அன்பர்களுக்குப் பிரசாதம் வழங்கப்படும். இக்காலத்தில் ஆண்டவருக்குக் குழந்தை வடிவில் திருக்கோலம் செய்யப்படும்.

4. **கால சந்தி.** *காலை 9 மணி*

சிறுகால சந்தியினைப் போலவே வழிபாடு நிகழும்.

5. உச்சிக்காலம்: பகல் 12 மணி

ஆண்டவருக்கு அபிடேக அலங்கார அர்ச்சனைக்குப் பின் தளிகை நைவேத்தியம் செய்து, சோடச தீபாராதனையும் உபசாரங்களும் செய்யப்பட்டுப் பக்தர்களுக்குப் பிரசாதம் வழங்கப்படும்.

இக்காலத்தில் ஆண்டவருக்குக் கிரீடத்தொடுகூடிய வைதிக அலங்காரம் செய்யப்படும். தீபாராதனைக்குப் பின்னர் தேவாரம் இசைத்தலும், கட்டியங்கூறலும் நடைபெறும். சிறப்பு நாட்களில் இவற்றோடு கந்தபுராணம் சொல்லலும், வேதம் ஓதுதலும் நிகழும்.

சோடச தீபங்கள் வருமாறு:- அலங்கார தீபம், நட்சத்திர தீபம், பஞ்சமுக தீபம், கைலாச தீபம், சர்ப்ப தீபம், மயூர தீபம், குக்குட தீபம், கஜ தீபம், அஜதீபம், புருஷா மிருக தீபம், பூரணகும்ப தீபம், பஞ்சஸ்தம்ப தீபம், சதுர் ஸ்தம்ப தீபம், காயத்திரி தீபம், வாம தேவ தீபம், ஈசான தீபம் பின்னர் கற்பூர தீபம்.

உபசாரங்கள்:- குடை, சாமரம், தர்ப்பணம், துவஜம், விசிறி, அந்தோளிகா.

6. சாயரட்சை. மாலை 5-30 மணி

ஆண்டவருக்கு அபிடேக அலங்கார அர்ச்சனைக்குப்பின், தளிகை நைவேத்தியம் செய்யப்படும். சோடச தீபாராதனையும் உபசாரங்களும் நடைபெற்ற பின் அன்பர்களுக்குப் பிரசாதம் வழங்கப்படும்.

இக்காலத்தில் ஆண்டவருக்கு அரச கோலத்தில் அலங்காரம் செய்யப்படும்.

7. இராக்காலம்: இரவு 8 மணி

ஆண்டவருக்கு அபிடேக, அலங்கார அர்ச்சனைக்குப் பின் நைவேத்தியம் செய்து ஏக தீபாராதனை முடிந்தபின் அன்பர்கட்குத் தினைமா முதலிய பிரசாதங்கள் வழங்கப்படும். இக்காலத்தில் ஆண்டவரை விருத்த வடிவில் அலங்காரம் செய்வார்கள். இராக்காலத்தில் தூய சந்தனம் ஆண்டவர் திருமேனியில் அணிவிக்கப்படும். இதுவே காலையில் விசுபரூப தரிசனத்தின்போது அன்பர்கட்குப் பிரசாதமாக வழங்கப்படும் அருமருந்தாகும் இக்காலங்களிலெல்லாம், மலைக்கோயிலிலுள்ள சண்முகர், சின்னக்குமரர் ஆகிய மூர்த்திகளுக்குத் தளிகை நைவேத்தியத் தீபாராதனை உண்டு.

8. பள்ளியறை

தீபாராதனைக்குப்பின் சுவாமியைப் பள்ளியறைக்கு எழுந்தருளச் செய்வார்கள் திங்கள், வெள்ளி ஆகிய நாட்களில் உட்பிரகாரத்தில் தங்கப் பல்லக்கிலும், ஏனைய நாட்களில் நீராழிப் பத்தியில் வெள்ளிப் பல்லக்கிலும் ஆண்டவர் எழுந்தருளுவார்.

ஆண்டவர் பள்ளியறை புகுமுன் திருக்கோயிலின் அன்றாட வரவு செலவு படிக்கப்படும்.

கார்த்திகை முதலிய சிறப்பு நாட்களில் கால பூசைகள் தொடங்கும் நேரம் மாறுபடும். இக்காலங்களுக்கான பூசைப் பொருட்கள் திருக்கோயிலிலிருந்தும், பக்தர்கள் ஏற்படுத்தியுள்ள அறக்கட்டளைகளிலிருந்தும் கிடைக்கின்றன.

காலையில் திறக்கப்படும் திருக்கோயிலின் திருவாயில் இரவு பள்ளியறைக்கு முன் மூடப்படுவதில்லை. பகல் முழுதும் இடைவிடாது பக்தர்கள் ஆண்டவனைக்கண்டு மகிழலாம். ஆண்டவரை அருகில் அமர்ந்து வழிபடுவதற்குத் தனிக் கட்டணம் உண்டு. மேற்குறித்த காலங்கள் தவிர்ந்த ஏனைய நேரங்களில் உரிய கட்டணம் செலுத்தி, அபிடேக ஆராதனைகள் புரிந்து ஆண்டவரைக் கண்டு மகிழலாம். அரசன், வேடன் முதலிய வேடங்களிலும், தங்கக் கவசமிட்டும் ஆண்டவரை வழிபட விரும்புபவர்கள் உரிய கட்டணங்கள் செலுத்தி வழிபட்டு இன்புறலாம்.

# பத்தியின் மாண்பு





திரு. கு. அருணாசலம்

உலகமெங்கும் நீக்கமறப் பரவியிருப்பது அன்பு ஒன்றே. அதைப் பல தோற்றங்களிலே காண்கிறோம். சமுதாயத்தில் பல நலன் தருபவைகளும், பல பெருமை படைத்தவைகளும், பல போற்றுதற்குரிய பண்பு நிறைந்தவைகளும் இருக்கின்றன. அன்பினால் தூண்டப்பெற்றே இவை வெவ்வேறு உருவில் உள்ளன. சமுதாயத்தில் இவைகட்கு மாறான பல கேடு தருபவைகளும், சிறுமை படைத்தவைகளும், பலரும் தூற்றக்கூடிய தன்மை நிறைந்தவைகளும் இருக்கின்றன. இவைகளும் அன்பினால் தூண்டப்பெற்றே இத்தோற்றங்களில் உள்ளன.

அன்பைச் சரியான முறையில் கையாண்டால் மேன்மை தருபவைகளும், தவறான முறையில் கையாண்டால் சிறுமை தருபவைகளும் விளையும். சமுதாயத்தில் அன்பின் சிரிய தோற்றத்தைப் பல வடிவங்களில் காணலாம். கணவனும் மனைவியும் ஒருவருக்கொருவர் உள்ளன்புடன் நேசித்துக்கொள்கின்றனர். அவர்களுக்கிடையில் நிலவுவது அன்பின் பண்பட்ட நிலை. ஆடவர், மகளிர் இரு பாலாரிலும் தூர்த்தர்களும் உள்ளனர். அவர்களிடம் நிலவும் காமவெறி, விலங்குகளிடம் காணப்படும் உடல் வெறிக்கு ஒப்பானது. ஆக உலகில் மேற்கூறிய இரண்டு விதமான உணர்வுகள் தென்படினும் அன்பு என்னும் ஒரே உணர்வுதான் உலகில் இருக்கிறதென்றும், அது வெவ்வேறு இடங்களில் வெவ்வேறு தோற்றங்களை எடுத்துக்கொள்கிறது என்றும் நாம் தெரிந்துகொள்ள வேண்டும்.

ஒரு மனிதன் தான் பிறருக்கு நல்லதையே செய்ய வேண்டும் என்றும், தன்னிடமுள்ள பொருள்களை ஏழை எளியவர்களுக்கு வழங்க வேண்டுமென்றும் எண்ணுகிறான். தன் செய்கையில் இன்பம் காண்கிறான். மாறாக வேறொருவன் பிறருக்குக் கெடுதலே செய்ய வேண்டுமென்றும், பிறரிடமுள்ள பொருள்களைத் தன்வசமாக்க வேண்டுமென்றும் எண்ணுகிறான். இதற்காக அவன் கொலை செய்யவும் தயங்குவதில்லை. இவ்விருவர் உள்ளத்திலும் இருப்பது அன்பே. முன்னவன் அன்பை முறையாகக் கையாண்டவன் ஆகிறான். பின்னவன் அதனை முறை தவறிக் கையாண்டவன் ஆகிறான். நல்லவன் மன்னுயிர்களை நேசிக்கிறான். மற்றவன் தன்னையே நேசிக்கிறான்.

நெருப்பை எடுத்துக்கொள்வோம். அது சுடும் தன்மை உடையது. அதைக்கொண்டு நாம் விளக்கையும் ஏற்றலாம் வீட்டையும் கொளுத்தலாம். வீட்டைக் கொளுத்துவதால்

நெருப்பு கெடுதல் என்று ஆகுமா? அதை நாம் பயன்படுத்தும் முறையில்தான் நன்மை தீமை என்னும் வேறுபாடு இருக்கிறது. இது போலவே அன்பைச் செலுத்தும் முறையிலும் நன்மை தீமைகள் அமையும்.

இனி அன்பின் செயல் யாது எனச் சிறிது ஆராய்வோம். உயிர்கள் ஒன்றை யொன்று இணங்கிச் செயல்படுவதில் பேரார்வம் கொண்டிருப்பது அன்பு. பிரிந்தவை ஒன்றுபடும்போது மிக வெளிப்படுவது அன்பு. உலகில் உள்ள உயிர்கள் யாவும் ஒன்றுபட்டு வாழ முற்படுவது அன்பின் முதிர்ச்சியால்தான். இம்முயற்சி தூயவைகளும் மேலானவைகளுமான துறைகளில் திகழ்கிறது. அதே முயற்சி கெட்டவைகளிலும், கீழ்த் தரமானவைகளிலும் திகழ்கிறது. எனினும் அன்பு என்னும் ஒரே சக்தி வெவ்வேறு தோற்றங்களில் செயல் ஆற்றுகிறது. அன்பை மேலான முறையில் செலுத்துவதற்கு உதவுவது பக்தி நெறியாகும். அது அன்பைக் கீழ்த்தரமான வழியில் செலுத்தாது தடுக்கவும் உதவுகிறது. அன்பை எப்படிக் கையாள வேண்டும் என்றும், எவ்வாறு பயன்படுத்த வேண்டும் என்றும் அது எடுத்துரைக்கிறது. தூயதும் மேலானதுமான வடிவத்தை அன்புக்கு எவ்வாறு கொடுப்பது என்பதைப் பக்தி யோகம் நவில்கிறது. அன்பை நல்ல முறையில் செயல்படுத்தினால் தெய்வத் தன்மை எவ்வளவு எளிதில் கிட்டும் என்பதை அது இயம்புகிறது. 'நேசித்துப் பழகு', எல்லாவற்றிலும் உயர்ந்ததை நேசித்துப் பழகு என்று அது உபதேசிக்கிறது. எல்லாவற்றிலும் உயர்ந்ததை ஒருவன் நேசிக்கும் பொழுது அவனுடைய உள்ளத்திலுள்ள கீழ்மைகளெல்லாம் ஒவ்வொன்றாக உதிர்ந்து புனிதமடைகிறான். மனிதப் பண்பில் எல்லாவற்றிற்கும் மேலானதை நேசிப்பது தான் மிகச் சிறந்தது. எல்லாவற்றிற்கும் மேலாயிருப்பவர் பரம்பொருள். அவரிடத்து அன்பு செலுத்தும்போது கீழ்மையுணர்வுகள் தாமே மறைகின்றன.

இறைவன் அன்பு உருவம். அழகு வடிவம். அவ்வுருவை வர்ணிப்பதை விட இறைவனை அன்பு, அழகு என்றே கூறலாம். அன்பே தெய்வம் என்பது ஆன்றோர் வாக்கு. உலகில் அழகு நிறைந்தவையெல்லாம் இறைவனுடைய அழகையே கொண்டுள்ளன. அழியும் தன்மைத்தான உலகியற் பொருள்களில் காணும் அழகைக் கண்டு அதில் வயப்பட்டு விட்டிற் பூச்சியென வாழும் நாம் நிலைத்து நிற்கும் அழகுக்கு உறைவிடமாகிய இறைவனிடத்து அன்பு செலுத்த முயல வேண்டும். ஏனெனில் இவ் அண்டத்தில் இறைவன் ஒருவன்தான் அழியா அழகன் அவனுடைய பேரழகு பல வடிவங்களில், பல வண்ணங்களில் திகழ்கிறது. இதை உணர வைப்பது பக்தியோகம். அழகை நாடி அலைவதைத் தவிர்த்து அழகுக்கு உறைவிடமாம் இறைவனை நாட வைப்பது பக்தி யோகமாகும்.

மனிதனுக்கு உலகப் பொருள்களிடத்துப் பற்றுதல் இயல்பாக வந்துவிடுகிறது. இப் பற்றுதல் சுயநலத்தை அடிப்படையாகக் கொண்டது. இறைவனைப் பற்றிப் பிடிக்குங்கால் இச்சிறிய பற்றுதல்கள் அகலுகின்றன. மற்ற உயிர்களிடம் சிறப்பாக மற்ற மனிதர்களிடம் காட்டும் பற்றுதல் வாழ்க்கையின் குறிக்கோளாக இருத்தல் கூடாது. இயற்கையின் நிகழ்ச்சிகளிலிருந்து எவன் மெய்ம்மையை உணரும் தன்மையடைகின்றானோ அவன் உண்மையான பக்தன் ஆகிறான். ஒருவன் மற்றவன் மீது வைக்கும் பற்று மனிதனுக்கு இயல்பானது. அப்பற்றுதலினின்றும் விலகியிருந்து பழகினால் இவ்வுலகைப் பற்றிய பேருண்மை ஒன்று விளங்கும். அதுதான் உலகை இயக்கி வரும் அன்பு. அன்பினாலன்றி வேறு எந்தச் சக்தியும் உலகை இயக்க வல்லது அன்று.

நடைமுறையில் சில வேளைகளில் தடைகளோ, தடுமாற்றமோ ஏற்பட்டாலும் அன்பின் வழியில் முன்னேற்றம் அடைந்து கொண்டிருப்பவனுக்கு அவை தீங்கு விளைவிப்பதில்லை. பக்திமானுக்கு இவைகள் சிந்திக்கத் தகுதியற்ற சிறு செயல்களாகும். வாழ்க்கையில் பற்றுள்ளவனுக்கு இவை மிகப் பெரியதாகத் தோன்றும். மனம் சஞ்சலம் அடையும். சிறு துன்பங்களைப் பக்தன் ஒரு பொருட்டாகக் கருத மாட்டான். மாறாக

அத் துன்பங்களினின்றும் நல்ல பாடங்களைக் கற்கும் மாணவனாக இருப்பான். இத்தகைய மனப் பக்குவத்தைப் பெற்றவன் இறைவனுடைய திருவிளையாடல்களை ரசிக்கும் பேறு பெற்றவனாகிறான்.

உலகில் சுகங்கள் சில உண்டு. இந்திரியங்களினால் ஏற்படும் சுகம் நிலையற்றவையாதலால் அதைச் சிற்றின்பம் என்கிறோம். இதிலும் சில கீழ்த்தரமானவைகள் உண்டு. இவை பேரானந்த சொரூபியான இறைவனின் ஒரு வகைத் தோற்றமேயாகும். உயிர்கள் ஒன்றினிடத்து ஒன்று கவரப்பெறுகிறது. உலகிலுள்ள எல்லாப் பொருள்களையும் தன்பால் ஈர்ப்பவன் இறைவன். இதனால் இறைவனை அரியெனவும் அழைப்பர். உயிர்கள் அனைத்துக்கும் காந்தமாக இருப்பவன் அவனே. மனித உள்ளத்தைக் கவரும் சக்தி அவன் ஒருவனுக்கேயுண்டு. எதற்கும் வயப்படாத உள்ளத்தை அவன் ஒருவனே கவர வல்லவனாயிருக்கின்றான். அதனால் அவனை உள்ளங் கவர் கள்வன் என்பர். ஒரு மனிதன் அழகு நிறைந்த முகத்திற்கு ஆட்பட்டால், அம் முகமாக அமைந்த தோலும், சதையும் இரத்தமும் அவனுடைய உள்ளத்தைக் கவர்ந்தவை ஆகா. அவை அழிந்து பட்டுப்போகும். ஐம்பூதங்களால் ஆகிய இப்பொருள்களினுள் ஊடுருவிப் பாய்ந்து தெய்வீக அன்பு ஒன்று இலங்குகிறது. அந்த அன்பின் விளையாட்டுத்தான் அழகு முகம். ஆக உள்ளத்தைக் கவர்ந்தது இப்பேரன்பாகும். அறிவிலி இப்பேருண்மையை உணர்வதில்லை. பக்தனுக்கு மிக எளிதில் இது விளங்குகிறது.

அன்பே வடிவமான மனைவி கணவனுடைய வெறும் உடலமைப்புக்காக அவனை நேசிப்பதில்லை. அதுபோல நல்ல பண்புள்ள கணவன் மனைவியின் உடலழகின் பொருட்டு அவளை நேசிப்பதில்லை. ஒருவர் மற்றொருவரை நேசிப்பது அவ்வடிவத்தில் இலங்கும் ஆத்மாவை. இறைவன் ஒரு மாபெரும் காந்தக்கல் மலைபோலவும் உலகில் இயங்கும் ஆன்மாக்கள் இரும்புத்தூள்களைப்போலவும் இருக்கின்றன.

அவர் நம்மைக் கவர்ந்து இழுத்துக் கொண்டிருக்கிறார். சிலர் நல்ல பக்தி மார்க்கத்தில் ஈடுபடுபவர்கள் எளிதில் இறைவனையடைகின்றனர். மற்றவர்கள் மேன்மேலும் பல பிறவிகள் எடுத்துப் பக்தி மார்க்கத்தில் ஈடுபட்டுப் பிறகு இறைவனையடைகின்றனர். ஆக இறைவனைச் சென்றடைவதுதான் உயிர்களின் குறிக்கோள். அதை அடைய வாழ்க்கைப் போராட்டம் நிகழ்கிறது. அறிவிலிகள் வாழ்க்கைப் போராட்டத்திற்கு அஞ்சி, தீமை செய்யத் தயங்காது மேலும் மேலும் பாவத்தைச் செய்து இறைவனிடம் செல்ல முடியாத நிலையையடைகின்றனர். பக்திமானோ வாழ்க்கைப் போராட்டங்களை நன்கு புரிந்து கொண்டு ஈடு கொடுத்து வாழ்ந்து பல தியாகங்களைச் செய்து தன்னைப் புடம் போட்ட தங்கம் போலாக்கிக் கொள்ளுகிறான்.

எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன், எம்பெருமான் மெய்யே உன் பொன்னடிகள் கண்டின்று வீடுற்றேன் என்னுமாறு வீடு பேறு அடைய விரும்புகிறான். பற்றுக்களிலிருந்து விடுபட்டவனுக்குத்தான் இப்பரிபக்குவநிலை வருகிறது. பந்த பாசங்களை அறுத்தெறிந்து, பொய்த் தோற்றங்களைப் புறக்கணித்து, மெய்ஞ்ஞானம் பெற்று இறைவனருகில் சென்றடைகிறான். இறைவனிடம் பற்றுதல் வைக்கும்போது மற்ற உலகியல் பற்றுக்கள் தாமே உதிர்ந்து விடுகின்றன. அன்புமயமாக மாறிவிடுகிறான். இறைவன் வேறு தான்வேறு என்றில்லாமல் இறைவனோடு இரண்டறக் கலந்து விடுகிறான். பிறகு இவனுக்கு விக்கிரகங்கள் தேவையில்லை. பூசை, வழிபாடுகள் வேண்டியதில்லை. இவைகளையெல்லாம் புறக்கணிப்பதற்குப் பக்தன் ஒருவனுக்குத்தான் உரிமையுண்டு. மற்றையோர் பேசினால் வீண் பிதற்றல்களே. பக்தன் ஒருவனே எல்லா உயிர்களிடத்தும் அன்பு செலுத்தும் பண்பு பெற்றவன். மற்றையோர் அன்புபற்றிச் சொற்பொழிவாற்றும் மேடைப் பேச்சாளர்களே. உலகை இன்ப மயமாக, உலகிலுள்ள பொருள்களை அழகு வடிவமாக, உயிர்களனைத்தையும் அன்பின் சின்னமாகக் காண்பவன் பக்தன். அவன் தான் பற்றற்றவன் பற்றற்றானைப் பற்றியவன்.

"பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு"

அருள்மிகு பழனியாண்டவர் இந்தியப் பண்பாட்டுக் கல்லூரி



அருள்மிகு பழனியாண்டவர் ஆண்கள் கலைக் கல்லூரி



அருள்மிகு பழனியாண்டவர் மகளிர் கலைக்கல்லூரி - ஒரு தோற்றம்



அருள்மிகு பழனியாண்டவர் மகளிர் செந்தமிழ்க் கல்லூரி - மகளிர் விடுதி

# இணையில்லா இந்து தத்துவம்





திரு. டி. எஸ். ஆர். இராம்தாஸ்

**தத்துவம் என்றால் என்ன ?**

'அரிது அரிது மானிடராய்ப் பிறத்தல் அரிது' என்று நமது ஔவை மூதாட்டி கூறிப்போந்தார். ஏனெனில், மனித இனத்திற்கு மட்டுமே பகுத்தறியும் ஆற்றல் உண்டு. சிந்தனையும், பகுத்தறிவும், மனித இனத்திற்கே உரிய தனிச் சொத்து. விலங்கொடு விலங்காக மனிதன் பன்னெடுங்காலமாக இருளிலே அலைந்து திரிந்துகொண்டிருந்தான். அவனிடத்தில் விழிப்புணர்ச்சி தோன்றியவுடன் அவன் சிந்திக்கத் தலைப்பட்டான்; பகுத்தறிவின் வழி நடந்தான். தன்னை, தான் வாழுகின்ற உலகைப் பற்றி ஆராய முற்பட்டான். இவ்வாராய்ச்சியே நாளடைவில் தத்துவமாக வளர ஆரம்பித்தது. மனித உள்ளத்தில் என்று சிந்தனை தொடங்கியதோ அன்றே தத்துவமும் தொடங்கியது.

தத்துவம் என்பதைத் தமிழிலே 'மெய்யறிவு', 'மெய்யுணர்வு', 'மெய்ப்பொருள் விளக்கம்', 'மெய்யியல்' எனப் பலவாறு குறிப்பிடுவதால்; படித்தோரும் பாமரரும் அறிந்துள்ள "தத்துவம்" என்ற சொல்லே சாலச்சிறந்ததெனக் கருதி, இங்கு கையாளப்பட்டுள்ளது.

பாரசீகக் கவிஞனொருவன் இப்பிரபஞ்சத்தை ஒரு கையெழுத்துப்படிக்கு ஒப்பிடுகிறான். அப்படியின், முதல் பக்கமும் கடைசிப் பக்கமும் தவறிப்போயின. இந்நிலையில் அந்நூலின் தொடக்கம் என்ன? முடிவு என்ன? என்பவற்றை நம்மால் அறிய இயலவில்லை. மனித இனம் விழிப்புணர்ச்சி தோன்றிய நாளிலிருந்து இழந்துபோன இப்பக்கங்களைத் தேட முயன்றுகொண்டிருக்கிறது. அஃதாவது பிரபஞ்சத்தின் தோற்றத்தையும் முடிவையும் அறியப் பெருமுயற்சி எடுத்துக்கொண்டிருக்கிறது. இம்முயற்சியும் இதனால் விளையும் பயனும் தத்துவம் எனப்படும்.

நடக்கக் கற்றுக்கொண்ட குழந்தை முதன் முறையாகத் தனது வீட்டின் சாளரத்தின் வழியாக இரவில், நிலவொளியில், விண்ணிலே இருக்கின்ற விண்மீன்களையும், நிலவையும் காணுகின்றது. உடனே அது தனது அன்னையை அழைத்து "இவை எங்கிருந்து வந்தன? எப்படி வந்தன? ஏன் வந்தன?" என்ற வினாக்களை எழுப்புகின்றது. ஏனெனில், விண்மீன்களும், நிலவும் அதற்கு விந்தையாக இருக்கின்றன. இவ்வாறு "விந்தையில் தோன்றுவதே தத்துவம்" என மேனாட்டுத் தத்துவ ஞானி பிளேட்டோ கூறுகிறார்.

பாரதிதாசன் தனது 'குடும்ப விளக்கு' என்ற கவிதைத் தொகுப்பில் முதல் தொகுதியின் தொடக்கத்தில்,

" இளங்கதிர் கிழக்கில் இன்னம்
எழவில்லை
இரவு போர்த்த இருள் நீங்கவில்லை,
ஆயினும்
கேள்வியால் அகலும் மடமைபோல்
நள்ளிரவு மெதுவாய் நடந்து
கொண்டிருந்தது"

எனக் காலைப் பொழுது தோன்றுவதைக் குறிப்பிடுகையில் "கேள்வியால் மடமை" என்னும் இருள் நீங்கி அறிவு என்னும் ஒளி தோன்றுகிறது" என்று கூறுவதைப் பிளேட்டோவின் கருத்துடன் ஒப்பு நோக்கலாம்.

ஆங்கிலச் சொல்லிலக்கணப்படி 'தத்துவம்' என்றால் "அறிவின்பால் நாட்டம்" எனப் பொருள்படும். அறிவை நாடியறியும் இயல்பு மனிதனிடம் இயல்பாகவே இருப்பதை மேலே கூறிய இலக்கணம் விளக்குகிறது. மனிதன் தன்னையும் தான் வாழுகின்ற உலகையும் பற்றிய உண்மைகளைக் கண்டறிய விழைவது இயல்பே. மேனாட்டுத் தத்துவம் "உண்மையைத் தேடி அலைதல்" என்ற பொருளிலேயே தத்துவம் என்ற சொல்லை, அன்றிலிருந்து இன்று வரை முழுக்க முழுக்கக் கையாண்டு வருகிறது. கீழைநாட்டிலும் 'தத்துவம்' என்ற சொல்லுக்கு 'உண்மை' என்பது பொருள். 'தத்துவஞானம்' என்றால் 'உண்மையைக் கண்டறிவது' எனப் பொருள்படுகிறது. 'உண்மை' என்றால் 'என்றும் நிலையாக உள்ளது' எனப்பொருள்படும். நமது ஐம்பொறிகளும், உள்ளமும், காணும் பொருட்களும் அனைத்தும் என்றும் நிலையாக இருப்பவை அல்ல. அங்ஙனமாயின், என்றுமுள்ள பொருட்கள் எவையேனும் உண்டா? அவை எவை? அவற்றின் இயல்பு யாது? என்பனவற்றை ஆராய்ந்தறிவதே தத்துவத்தின் குறிக்கோள்.

இந்தியாவில் 'தரிசனம்' (Darshana) என்ற சொல்லைத் தத்துவத்திற்குப் பயன்படுத்துவதிலிருந்து அதன் பொருள் தெளிவாக விளங்கும். 'தரிசனம்' என்றால் காட்சி என்றும், 'காணப் பயன்படுகின்ற கருவி' என்றும் பொருள்படும். 'தரிசனம்' என்பது நேரடியாக, உடனடியாக, உள்ளொளி வாயிலாகக் கண்ட பேருண்மைகளை எடுத்துக்காட்டுபவை எனப் பொருள்படும். நியாயம், வைசேடிகம், சாங்கியம், யோகம், மீமாம்சம், வேதாந்தம் என்ற ஆறு இந்து சிந்தனை நெறிகளை 'ஷட்தரிசனம்' (Sad-darshanas—Six systems of Philosophy) என அழைப்பர்.

"வாழ்வை நோக்குகின்ற முறையும், வாழும் முறையும்" தத்துவம் எனப்படுகிறது (Philosophy is a way of life and a view of life). கீழை நாட்டவராகிய நமக்குத் தத்துவஞானம் நமது பரம்பரைச் சொத்து, நம்முன்னோர் தேடிவைத்த பெருஞ் செல்வம்.

ஆன்மீகத்தை மையமாகக் கொண்டு இயங்குவது இந்தியத் தத்துவம். ஆகவே. 'தத்துவம்' என்ற சொல் 'தத்துவமஸி' (Tat + Tvam + Asi = தத் + துவம் + அஸி) என்ற சொல்லிலிருந்து பெறப்பெற்றது எனவும் ஒரு சாரார் கருதுவர். "நீ அதுவாக இருக்கிறாய்" அதாவது "நீயே பிரம்மம்" என்பதை உணரும் நிலையை "தத்துவமஸி" என்ற சொற்றொடர் உணர்த்துகிறது. "உன்னையே நீ அறிவாய்" என்ற சாக்ரட்டீஸின் கூற்றும் இங்கு ஒப்புநோக்கற்பாலது. இந்து தத்துவம், கொள்கையளவிலோ அல்லது ஏட்டளவிலோ பேருண்மையைப் பற்றித் தரப்படுகின்ற விளக்கமன்று. அது, மனிதனிடம் காணப்படுகின்ற அழியாத, நிலையான ஆன்மீக வேட்கையை எடுத்து இயம்புகின்ற பணியாகும்.

தத்துவத்தில் (1) மனிதனின் 'இயல்பு என்ன?' (2) வாழ்வின் குறிக்கோள் யாது? (3) நாம் வாழும் இவ்வுலகு எத்தகையது? (4) இவ்வுலகைப் படைத்தவர் எவரேனும் உண்டா? (5) நிலையானது எது? (6) உயிரின் தன்மை யாது? என்பனவற்றை அறிவின் துணைகொண்டு மனிதன் ஆராய்ந்து தன்னை, உலகோடும் இறைவனோடும் இணைத்து வாழும் வழிகளைக் கண்டறிய

முயலுகின்ருன். இவைகளே தத்துவம் எழுப்புகின்ற தலையாய விஞக்கள்.

### இந்து தத்துவத்தின் சிறப்பியல்புகள்

1. நமது இந்து தத்துவத்திற்கு வரலாறு இல்லை. அது வரலாற்றுக் காலத்திற்கும் முற்பட்டது. அது எக்காலத்தில் எவரால் தோற்றுவிக்கப்பெற்றது என்று சொல்ல முடியாத அளவிற்குத் தொன்மை வாய்ந்தது. ஆனல் மேலை நாட்டில் தத்துவ ஆராய்ச்சி எப்பொழுது, எவரால் தோற்றுவிக்கப்பெற்றது என்பதை மேலைநாட்டுத் தத்துவ நூல்கள் வாயிலாக அறிந்து கொள்ளலாம்.

2. மேலை நாட்டில், தத்துவ ஆராய்ச்சி அன்று முதல் இன்று வரை நடைபெற்றுக் கொண்டே இருக்கிறது. ஒரு தத்துவ ஞானி கண்ட கருத்துக்களை அவருக்குப் பின்னல் வருவோர் மறுப்பதும்; அல்லது அத்தத்துவக்கோட்பாடுகளைத் தழுவி மேலும் சில கருத்துக்களை விட்டுச் செல்லுவதும் மரபாக இருக்கிறது. தத்துவத்தின் முக்கியப் பிரச்சனைகட்கு அவர்கள் முடிந்த முடிவினை இது வரை கண்டறியவில்லை. ஆனல், இந்து தத்துவம், தத்துவக்கோட்பாடுகள் அனைத்திற்கும் முடிந்த முடிவுகளைக்கண்டு அவற்றை உலகிற்கு அறிவித்து விட்டது. நம் நாட்டில், இடைக் காலத்திலும் இக்காலத்திலும் தோன்றிய தத்துவ ஞானிகள் பண்டையோர் கண்டறிந்த உண்மைகளுக்குச் சில விளக்கங்களை மட்டுமே கொடுத்துள்ளனர். இவ்விளக்கங்கள் முன்னே கொடுக்கப்பட்ட தத்துவக் கோட்பாடுகளை அறிந்துகொள்ளப் பயன் படுகின்றன.

3. மேலைநாட்டுத் தத்துவ ஞானிகள் புறவுலக ஆராய்ச்சியிலேயே தங்கள் வாழ் நாளின் பெரும் பகுதியைச் செலவழித்தனர். ஆனல், இந்துத் தத்துவ ஞானிகள் முதலில் அக உலகமாகிய ஆன்மாவினை ஆராயத் தொடங்கி, அந்த ஆன்மாவினைத் தாங்கி நிற்கும் உடல், உடலிலே உள்ள உள்ளம், உள்ளத்திற்கு உறுதுணையாக உள்ள ஐம் புலன்கள், அவைகள் காணுகின்ற புறவுலகம் என்ற முறையிலே அவர்கள் புறவுலகை ஆராயத் தலைப்பட்டனர். ஆகவே, நமது தத்துவத்திற்கு மையப்புள்ளி உயிர் (ஆன்மா).

4. மேலைநாட்டில், தத்துவ ஆராய்ச்சி ஒரு பொழுதுபோக்காகவும், விளையாட்டாகவும் இருந்து வந்தது. அவர்கள் ஆழ்ந்த, தீவிரமான நோக்கோடு புறவுலகத் தத்துவ ஆராய்ச்சியில் ஈடுபடவில்லை. ஆனல் நமது தத்துவ ஞானிகள், மனித இனம் படுகின்ற அல்லல்களைக் கண்ணுற்றனர். மனித இனத்துள் இருக்கின்ற ஏற்றத்தாழ்வுகளை ஆராய்ந்தனர். உலகிலே காணுகின்ற நீங்காத தொல்லைகட்கு ஒரு நிரந்தர மருந்தினைக் காணும் நன்முயற்சியே இவர்களது தத்துவ ஆராய்ச்சியாகும். ஆன்ம வேதனையை நீக்குதற்குரிய வழிமுறைகளைக் கண்டறிய நமது தத்துவம் தோன்றியது. நாம் உணவையும், உடையையும் தேடுவதை நமது அடிப்படையான செயல்களாகக் கொள்ளவில்லை.

5. மேலைநாட்டுத் தத்துவக்கோட்பாடுகளுக்கும், வாழ்வுக்கும் மிகுந்த தொடர்பு கிடையாது. அங்கு தத்துவக் கல்வியின் ஆராய்ச்சியும், சிந்தனையும் ஏட்டளவிலே, அல்லது கொள்கையளவிலே அல்லது சிந்தனையளவிலே நின்றுவிடுகின்றது. நம் நாட்டில் தத்துவஞானம் வாழ்க்கையோடு பின்னிப் பிணைந்து கிடப்பதைக் காணலாம். "இந்துத் தத்துவஞானம் சரியாகச் சிந்திப்பதற்கு மட்டுமன்றி முறையாக வாழ்வதற்கும் வழிகாட்டுகிறது" எனப் பேராசிரியர் "ஹிரியண்ணு" கூறுகிருர். இந்துத் தத்துவம் வாழ்க்கையோடு ஒன்றியிருத்தலே அதன் சிறப்பியல்பாகும். இன்றும் பல்லாயிரக் கணக்கானேர் பல்வேறு இந்து தத்துவ நெறிகளை வாழ்க்கையிலே கடைப்பிடித் தொழுகுவதைக் காணலாம். நமது தத்துவம் இன்று வாழ்ந்து கொண்டிருக்கிறது. என்றும் வாழ்ந்து கொண்டிருக்கும்.

6. இந்து தத்துவ ஆராய்ச்சியில் நாம் அறிவைப்பெறும் வழிகள் ஆராயப்படுகின்றன. இவைகளைப் "பிரமாணங்கள்" அல்லது "அளவைகள்" எனக் குறிப்பிடுகிருேம். பொறிகள், நூற்கள், கருதல் (அனுமானம்) இவை வாயிலாகப்பெறும்

தத்துவ அறிவு சரியானதா? இல்லையா? என்ற ஆராய்ச்சி இங்கே நடைபெற்று வரு கிறது. இப்பிரமாண ஆராய்ச்சியில் நம் நாட்டுத் தத்துவ ஞானிகள் ஈடுபட்ட அள விற்கு மேலைநாட்டுத் தத்துவஞானிகள் ஈடு படவில்லை. இது மற்றொரு சிறப்புக்கூறாகும்.

7. வீடு பேறடைவதை வாழ்வின் குறிக்கோளாகக் கொண்டு இயங்குபவை நமது இந்து தத்துவ நெறிகள். உடலின் வேட்கை, உள்ளத்தின் வேட்கை, உயிரின் வேட்கை என வேட்கைகள் மூவகையாகப் பிரிக்கப்படுகின்றன. உடலும் உள்ளமும் அழிந்துபோகக் கூடியவை. ஆகவே அழியாத உயிரின் வேட்கையாகிய ஆன்ம விடுதலையைப் பெரிதும் வலியுறுத்திப் பேசு வது நமது தத்துவம்.

8. நமது தத்துவத்தின் மற்றொரு சிறப் பியல்பு, வீடுபேறு அடைவதற்கு வகுத்துக் காட்டப்பட்டுள்ள பல்வேறு நெறிமுறைகள் ஆகும். அன்புநெறி, அறிவு நெறி, கர்மநெறி எனப் பல்வேறு நெறிகள் அவரவர் உளப் பக்குவத்திற்கும் அறிவின் முதிர்ச்சிக்கும் ஏற்பக் கூறப்பட்டுள்ளன.

9. இந்து தத்துவ ஞானம் மனித உள்ளத்தை மிக நுணுக்கமாகப் பன்னெடுங் காலத்திற்கும் முன்பே படம்பிடித்துக் காட்டி யுள்ளது. வேதாந்தமும் யோகமும் மனித உள்ளத்தை ஆராய்ந்துள்ள அளவுக்கு மேலை நாட்டு உளவியல் ஆராய்ச்சியாளர்கள் ஆராய்ந்துள்ளனர் எனக் கூறமுடியாது.

10. நமது தத்துவமும் சமயமும் ஒன் றோடொன்று இணைந்தும் பிணைந்தும் செல் வதைக் காணலாம். மேலைநாட்டில் சமயத் திற்கும், தத்துவத்திற்கும் நெருங்கிய தொடர்பில்லை.

11. மேலைநாட்டார் நமது தத்துவம் "துன்பியல் நோக்கு" (Pessimistic) உடை யது எனக் கடிந்துரைப்பர். ஆனால், உண்மை அதுவன்று. நம்முடைய தத்துவம் தொடக் கத்தில் வாழ்விலே காணும் இருண்ட பகுதி களையும், தொல்லைகளையும், அல்லல்களையும் படம்பிடித்துக் காட்டினாலும், இவற்றினின்று விடுதலை பெறுகின்ற மிகச் சிறந்த நெறிகளை எடுத்தியம்புகின்றது.

நமது இந்து தத்துவத்தின் சிறப்பியல் புகளை எடுத்தியம்ப ஏடு கொள்ளாது. இவ்வரிய கருவூலத்தைப் பெற்றுள்ள நாம் அதைச் செவ்வனே பேணிக்காத்து அதி லுள்ள சீரிய கோட்பாடுகளை அறிந்து அவ் வழியில் நின்று உய்வு பெறவேண்டியது நமது தலையாய கடமையாகிறது.

## About Palani Hill Temple

Indeed it is a great pleasure to have darshen of Lord Subramanieshvera which is a historically famous shrine; in Tamilnadu, this Temple possessing a separate and highest place. Today I had an opportunity to have darshan with family. This temple is a sacred one and attracting so many pilgrims. I am very glad to learn that the renovation work worth Rs. 40,00,000/- is being undertaken by the Committee. Management of this temple is excellently well under the supervision of the E. O. and trustees.

Sd. R. RAMALINGA RAJU
Minister, Endowments,
Govt. of Andhra Pradesh.

30—12—70

# "ஆலயங்களின் உட்பொருள்"





திருமதி. ந. சரோஜினி தேவி

"ஆலயம் தொழுவது சாலவும் நன்று" என்பது நம் பழம்பெரும் தமிழ் மூதாட்டியான ஔவையின் வாக்கு. நமது இந்து சமயத்திற்கு அடிப்படையானது அதன் ஆலய ஏற்பாடாகும். அடிப் படைக்குச் சேதம் ஏற்படும்போது மேற் கட்டிடங்கள் சீரழிந்து போகும். நம் சம யத்தின் சிகரங்களாகிய வேதாந்த சித்தாந் தங்களை நன்ருக அறிபவர் நம்மில் சிலரே யாவர். ஆனுல் அவற்றின் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு யாவரும் பின் பற்றும்படியான எளிய முறையில் அமைக்கப்பட்டுள்ளன திருக்கோயில்கள்.

ஆலயம் தொழுவதின் உண்மையை அறிய விரும்புவோர் அறிகுறி, அருள்நெறி, அனுபவம் என்ற மூன்று வகைகளாக அதன் பொருளை ஆராய வேண்டும். சுமார் இரண்டாயிரம் ஆண்டுகளுக்குமுன் திருமூல மாமுனிவர்,

> "மரத்தை மறைத்தது மாமத யானை
> மரத்தில் மறைந்தது மாமத யானை
> பரத்தை மறைத்தது பார்முதற் பூதம்
> பரத்தில் மறைந்தது பார்முதற் பூதம்"

என்று திருமந்திரத்தில் கூறியுள்ளார். அதாவது மரத்தினுல் ஒரு அழகிய யானை உருவாக்கப்பட்டுள்ளது. யானை மரத்தை அன்றி வேருேர் இடத்திலிருந்து வந்து புகுந்ததல்ல. மரந்தான் யானையாகக் காணப்படுகிறது. யானையின் அங்கங்களின் அமைப்பை நோக்குங்கால் மரம் பாவனை அற்றது. என்ன மரத்தால் இது செய்யப் பட்டுள்ளது என்று நோக்கும்போது யானையின் பாவனை மறைந்து போகின்றது. அதுபோல, எல்லாம் சிவமயமாய் விளங்கும் போது, உலகத்தோற்றம் உண்டாவதில்லை. இந்தப் பிரபஞ்சம் தோன்றும்போது, இறைவன் வடிவு விளங்குவதில்லை என் பதை அத்திருமந்திரம் விளக்குகிறது. இதை அடிப்படையாகக் கொண்டே

> "கல்லைக்கண்டால் நாயைக் காணேம்
> நாயைக்கண்டால் கல்லைக் காணேம்"

என்ற பழமொழி எழுந்தது. இக் கருத்துக் களை எல்லாம் அடிப்படையாகக் கொண் டதே ஆலய உருவ வழிபாடு.

## வழிபாடு :

குருநாதர்கள், அரசியல் தலைவர்கள் ஆகியோரின் படங்களை வைத்து நாம் போற்றுகிறேம். அவைகளுக்கு மாலை சூடிக் கொண்டாடுகிறேம். அப்போது அவை வெறும் துண்டுக் காகிதங்கள் என்ற எண்ணம் நம்முள் எழுவதில்லை. ஆனுல் உண்மையில், அவை பொடி மடிக்கக் கூட

உதவாத காகிதத் துண்டுகளே. ஆனால் நாம் அப்படி நினைக்காமல் எவ்வளவு மரியாதைச் செலுத்துகிறோம். அது போலவே ஆலயங்களில் அடியார்கள் வணங்குவது வெறும் கல்லை அல்ல. அத்திரு உருவங்களில் மறைந்து நின்று ஒளி வீசித் திகழும் இறைவனது உண்மை நிலைபேற்றையே ஆகும்.

**திருமஞ்சனமும் ஆராதனையும்:**

ஆண்டவனுக்குத் திருமஞ்சனம் எதற்கு? குடமுழுக்கும், ஆராதனையும் வேண்டுமா? என்ற ஐயம் சிலர் உள்ளத்தில் எழுகின்றது. இறைவனுக்கு அவைகளெல்லாம் தேவையற்றவை. ஆனால் நமக்கு அவனுடைய அருட்பொழிவு வேண்டுமென்ற காரணத்தால்தான் குடமுழுக்குச் செய்கிறோம். அபிஷேகமும் ஆராதனையும் நிகழ்த்துகிறோம்.

இயந்திரம் இல்லாத மோட்டார் முதலியன பயன்படாது. அதுபோலவே, இயந்திரம் இல்லாத உருவங்கள் அருட்பொழிவைக் கொடுக்கமாட்டா. இயந்திரங்களுக்கு எண்ணை, நிலக்கரி முதலியன உணவாவது போல ஆலய இயந்திரங்களுக்கு, அபிஷேகங்கள், மந்திரங்கள், முத்திரைகள் முதலியன உணவாகும். ஆலயங்களில் பெறப்படும் இந்த அருட்பலனைக் கொடுப்பனவே நித்திய, நைமித்திய பூசைகளாகும். எனவேதான் நம் ஆலயங்களில் நாள்தோறும் நடக்கும் பூசை (நித்தியம்) திருவிழாக்கள் (நைமித்தியம்) என வழிபாடுகள் நடைபெறுகின்றன. அவற்றுள் நித்தியம் பக்தி, ஞான வகையைச் சேர்ந்ததாகும். குண்டலினியைக் கிளப்பி கொடி ஏற்றி நடைபெறும் நைமித்திகங்களாகிய திருவிழாக்கள் யாவும் கர்மயோக நெறிகளாகும். சாதாரண நாட்களில் அடியார்கள், நாள்தோறும் ஆலயம் சென்று இறைவனை வழிபட்டு வருவார்கள். ஆனால் நம்மில் பலர் கோயிலுக்குச் செல்வதில்லை. ஆலயம் செல்லாதவர்களுக்காகக் கர்ம நெறிகாட்டும் உற்சவ மூர்த்தி திருவிழாக் காலங்களில் காலை, மாலை தவறாமல் தெருத்தெருவாய் நம் வீடுதேடி வந்து அருள் புரிவது கவனிக்கத்தக்கது. நாம் அடியாராயினும், அல்லாராயினும், கற்றாராயினும், மற்றாராயினும் பக்தராயினும், பாவிகளாயினும் பொருட்படுத்தாமல் அனைவர் வீட்டு வாயிலிலும் வந்து நின்று மேளத்தை ஒலித்துக் காட்சி கொடுக்கக் காத்து நிற்பது கர்ம நெறியின் மிக முக்கியமான முறையாகும். அவ்வாறு விருப்பு வெறுப்பின்றி உயிரினங்கள் யாவற்றிற்குமே அன்புத் தொண்டு செய்து நிற்பதே கர்ம நெறியின் உயிர் நாடியாகும். திருவிழாக்களின் முக்கியத்துவமும் இதுவே. ஆலயங்களில் பெறப்படும் இந்த அருட்பலனைக் கொடுப்பதே நித்திய பூஜை என்ற ஆராதனையாகும். இந்த ஆராதனை விதிகளே அருள் உற்பத்தியாகும் வழி எனப்படுவது. இங்ஙனம் ஆக்கப்படும் அருளானது ஆலயத்தைச் சுற்றி நாற்புறமும் பரவி, நாட்டிற்குப் பல நன்மைகளைப் பயக்கும். இக்கருத்தைக் கொண்டுதான் ஊருக்கு நடுவே ஆலயத்தைக் கட்டி வைத்தனர் நம் முன்னோர்கள்.

மேலுலகங்களில் உள்ள அருள் சக்திகளைப் பூலோகத்திற்கு இறக்கி அங்குள்ள உயிர்களிடம் அவை எளிதில் சாரக்கூடிய முறையில், அவற்றைப் பக்குவப் படுத்தி உலகில் பரப்புகின்றது. கோயில்கள் அமைதியான (சாந்தம்) அலைகளை எங்கும் பரப்பி அனுகூலம் செய்கின்றன. ஆறுகால பூஜையின் முக்கிய நோக்கமும் அதுவேயாகும்.

"ஆற்றரும் நோய்மிகும்; அவனி மழை குன்றிப்
போற்றரும் மன்னரும் போர்வலி குன்றுவர்
கூற்றுதைத்தான் திருக்கோயில்கள் ஆனவை
சாற்றிய பூசைகள் தப்பிடில் தானே''

"முன்னவனார் கோவில் பூசைகள் முட்டிடின்
மன்னர்க்குத்தீங்குள; வாரிவளங் குன்றும்
கள்ளம் களவு மிகுந்திடும் காசினிக்கு
என்னருள் நந்தி எடுத்துரைத்தானே"

என்பது திருமூலர் வாக்கு.

பூலோக சக்திகள் மனிதனுடைய பரு உடம்பில் வேலை செய்வதுபோல மேல் உலக சக்திகள் மனித மனத்திலும், உணர்ச்சியிலும் வேலை செய்வன. மனிதனுடைய எண்ணங்களும் ஆசைகளும் சுய நலம் கொண்டவையாய் இருக்கும்போது அவை கொக்கி போன்ற உருவெடுத்து எங்கெங்கு சுற்றித் திரிந்த போதிலும் அவனையே வந்து சாரும். ஆனால் சிறிதும் தன்னலப்பற்றின்றி எண்ணங்கள் இருக்குமாயின் அவற்றால் ஆகும் சக்திகள் அவனை நோக்கித் திரும்பாமல் இறைவன் திருவடி நோக்கி மேல் உலகங்களில் ஏறிச் செல்லும். அதனால் மேல் உலக அலைகட்குப் பொருத்தமாகப் பூலோகத்தினின்று மேலுலகத்தை இணைத்து ஒரு குழாய் ஏற்பட, அதன் மூலம் அங்குள்ள அருள் தடையின்றி உலகிற்கு இறங்கி உதவிகள் செய்யும். இந்நிகழ்ச்சி, உயரத்திலிருக்கும் நீர்த் தொட்டியிலிருந்து குழாய் வழியாகத் தண்ணீர் தரையில் இறங்குவது போலாகும். குழாயைத் திறக்கும்போது மேலிருக்கும் தொட்டிநீர் கீழ்நோக்கி இறங்கக் காத்திருப்பது போலவே அருட்சக்திகளும் வழிவாய்க்கால் அமையும்போது எளிதில் கீழ் உலகிற்கு இறங்கி அங்குள்ள உயிர்கள் மீது சாருகின்றன. அதனால் அவ்வருள் இரக்கத்திற்குக் கருவியாய் இருப்பவனும் ஆன்ம லாபம் அடைவதோடு தன்னைச் சுற்றியுள்ளோருக்கும் சுற்றுப் புறங்களுக்கும் ஒரு அனுக்கிரக இயந்திரமாக இருப்பான். இக் கருவிகள் உண்மை ஞானிகளும், முனிவர்களும், முக்தர்களும், நல்ல பக்தர்களுமாக இருப்பார்களானால் அவர்கள் காரணமாக இறங்கும் அருளும் அதிகமாகவே இருக்கும்.

பிண்டத்திலுள்ள அண்டத்தில், பூலோக சக்திகளைப் போன்றே மேலுலக சக்திகளும் இயற்கை விதிகளை ஒட்டியே நடப்பனவாகும். நிறை (Volts) அதிகமாக சக்தி அதிகமாகும். ஆலயத்தில் மலர் தூவி உண்மையான பக்தி செலுத்தும்போது அங்கு ஏற்படும் குழாய் இணைப்பும் மிகுந்த பரப்புடையதாகவும் அருள் இறக்கம் கூடுதலாகவும் இருக்கும்.

கதவு திறக்காத வீட்டில் கதிரவன் ஒளி புகாததுபோல் மனக்கதவு திறக்காத மக்கள் கோவிலுக்குச் செல்லும்போது அருட்சக்திகள் நன்குப் பாயாமல் போகின்றன. அதனால் இன்றும் தேவர்கள் நம்மைச் சுற்றி இருந்து பணியாற்றிவரினும் அவர்கள் உதவி இக்காலத்தில் அவநம்பிக்கை காரணமாக அதிகம் நம்மிடம் பயன்தராமல் போகிறது.

ஆலயம் பல உண்டான நோக்கம் ஸ்தூல உலகில் வாழும் மனிதனைச் சூட்சும உலக அருட்சக்திகளோடு இணைப்பதாகும்.

இந்து மதத்தில் சமய சாத்திரங்கட்கும், விஞ்ஞான சாத்திரங்கட்கும் இடையே என்றுமே பிணக்குகள் இருந்ததில்லை. தோன்றாப் பொருளாகிய இறைவனை அடைய தோற்றப் பொருளான விஞ்ஞானம் அவசியமென்று நம் சமய நூல்கள் கூறுகின்றன. தோற்றங்களைப் பற்றிய அறிவு அங்குப் பாச ஞானம் எனப்படும். அப்பாசங்களைப்பற்றி அறியாதபோது வெல்லுதல் இயலாத காரியம்.

ஆலயங்கள் அருள்சுரக்கும் ஊற்றுக்கள் என்ற உண்மையைக் காணுதல் வேண்டும். பூலோக இரசாயன முறைகளை எவ்வளவு கவனத்தோடு கையாளுகிறோமோ அவ்வாறு ஆகம முறைப்படி (According to occult Science) அங்குள்ள பூசைகளை ஒழுங்கு படுத்துவதே அதிகாரிகளின் முதல் கடமையாகும். அதற்கான செலவுகளில் சிக்கனம் செய்வது ஈசுவர அபராதமாகும். ஆலயம் தொழ அடியார்கள் இருப்பினும், இல்லாதுபோயினும் அருட் பொழிவைச் சுற்றியுள்ள நாட்டில் பரப்பிக்கொண்டே இருக்குமென்பதும், அதனால் அங்குள்ள உயிரினங்கள் யாவும் சிறந்த நலனையும் ஆன்ம முன்னேற்றத்தையும் அடையும் என்பதும் உறுதி.

சைவ சந்தானச்சாரியருள் ஒருவராகிய உமாபதி சிவாச்சாரியார் இன்றைக்குச் சுமார் அறுநூறு (600) ஆண்டுகட்கு முற்பட்டவர். அவர் தில்லை வாழ் அந்தணருள்

ஒருவர். நடராசருக்குரிய அர்ச்சகர். அவர்தம் குருநாதருடைய கையினின்றெழு கிய சாலியர் கூழை உண்ட குற்றத்திற் காகக் கோவில் பூசைக்கு உரியவரல்லர் என்று விலக்கப்பட்டார். அவரது பூசை முறை நாளன்று வேறு அந்தணர்கள் பூசை செய்தபோது அங்கே மூர்த்தி (பிரசன்னம்) தோற்றமாகவில்லை. அது கண்ட அந்தணரும் அரசரும் உமாபதி சிவத்திடம் வந்து வணங்கி மன்னிப்புப் பெற்று அவரைக்கொண்டு திரும்பவும் பூசை செய் வித்தனர் என்பது வரலாறு. இறையருட் டன்மை (பிரசன்னம்) ஆவதும், ஆகாததும் யோகக் காட்சியினருக்கே புலப்படும், ஓர் உண்மை. எனவே ஆலயங்கள் யாவும் அருள்பொழிய ஏற்பட்ட அமுதசுரபி. கோவில்களில் சென்று வழிபடுவது ஆன் மாக்கள் இறையருளில் தோய்ந்து சூட்சும உடம்புகளில் சிறிது சிறிதாகப் பண்பட்டுப் படிப்படியாக முன்னேறித் தம் சீவநிலை நீங்கிச் சிவப்பேறு பெற்றுப் பேரின்பம் அடைதற்பொருட்டேயாம். மணிவாசகப் பெருந்தகை அதனை

"சித்தமலம் அறுவித்துச் சிவமாக்கி"

என்பர்.

எனவே நாம் அவல வயிற்றை வளர்த்து உண்பதுவும் உறங்குவதுமாகக் காலத்தை வீணைக் கழிக்காமல் பழனித் திருப்பெயரை வாயாரச் சொல்லிப் படி ஏறி நம் பாவத்தைப் போக்கித் தண்டாயுத பாணியின் திருவருளைப் பெறுவோமாக.



## பழனித் திருக்கோயிலைப் பற்றி...............

''பழந்தமிழ் பண் முழங்கும் பழனி முருகன் ஆலய அறங்காவலர் குழு ஆற்றி வரும் திட்டமிட்ட நற்பணி நாளும் வளர்ந்து, தமிழ்க்கோவில் — தமிழர் கலையும் பண்பாடும் பழம் பெருமை மிகு வரலாறும் ஓங்கும் வகை காணும் உயர்பணியும் நிறைவேற்ற விரும்புகிறேன்.''

(ஒ-ம்) க. அன்பழகன்
தமிழ்நாடு நலத்துறை அமைச்சர்

8—6—73

# குயிற் பத்து







செல்வி பெரு. சேதுபதி

பூங்குயிலே! கூவாய்நீ!
கூவாய்நீ! பூங்குயிலே!

1. பழுமரச் சோலையில் பார்ப்புச் சிறுகுயிலே!
பொழுது புலர்ந்ததென்று போது மலர்ந்ததென்று
முருகு விரிந்ததென்று மூலம் சிறந்ததென்று
கருணை பிறந்ததென்று கந்தம் கமழ்ந்ததென்று
'முருகா நம'வென்று 'முத்தமிழ் வாழ்க'வென்று — கூவாய்நீ

2. பூமலர்ச் சோலையில் பூங்குயிலே! கேளாய்நீ!
குமரக் கடவுளை குவலயத்து நல்லொளியை
அமரர்க்கு வாழ்வுதந்த ஆறுமுகத் தேவை
'ஓமெ'ன்று வாழ்த்தி உவப்போடு நீதினமும்
'குமராநம' வென்று குலவுதமிழ்ப் பாப்பாடி — கூவாய்நீ

3. பழமுதிர் சோலைவாழ் பைங்குயிலே! கேளாய்நீ!
பழனித் திருத்தலத்தில் பாலகனாய் வந்துநின்ற
பாலதண்ட பாணிதனைப் பைந்தமிழை நந்தேவை
களவிற் குறைகண்ட கன்னித் தமிழ்மொழியை
'குகா நம'வென்று 'குக்குக்கூ நம'வென்று — கூவாய்நீ

4. கானக் கருங்குயிலே! கற்பகத்தின் பூக்கோதி,
ஏனற்புனங் காத்துநின்ற எழில்குறத்தி வள்ளிதனை
வேடனாய் மாறிவந்து வேட்டுநின்ற வேலவனை
பாடற் பொருளான பைந்தமிழ் நாயகனை
தேடற் கரியவனை 'தேவாநம' வென்று — கூவாய்நீ





5. மாவின் தளிர்கோதும் மாங்குயிலே! கேளாய்நீ!
ஆவிநன் குடியில் அமர்ந்த பெருமானை
அப்பனுக்கு நல்லுரையைச் செப்பிய செந்தமிழை
எப்பாரும் ஏத்துகின்ற இயற்கை இறையவனை
'சுப்ரமண்யா நம'வென்று 'சுவாமி நம'வென்று — கூவாய்நீ

6. மாமலர்ச் சோலையில் மாங்குயிலே! கேளாய்நீ!
மாமயில் வாகனனை மதுரமொழி வாசகனை
கச்சியப்பர் பாடலிலே இச்சைகொண்ட தேசிகனை
எச்சமயத் தாரும் ஏத்தும் இறையவனை
ஆச்சிக்குத் தமிழுரைத்த 'ஆறுமுகா நம'வென்று — கூவாய்நீ

7. சிரிக்கும் மலர்ச்சோலை சேரும் வரிக்குயிலே!
விரிந்த கடலெறிந்த வெற்றிமிகு வேலவனை
ஆறுபடை வீடுகொண்ட ஆதித் தனிமுதலை
அருணகிரி அன்பனுக்கு ஆதரவு தந்தவனை
ஒருமை மனத்தோடு 'ஓம்சிவாய' வென்று — கூவாய்நீ

8. செங்கட் கருங்குயிலே! செப்புவதைக் கேளாய்நீ
செங்கடப்பந் தாரணிந்த செந்தில் பதியானை
பத்துப்பாக் கொண்டவனைப் பண்புடைய சேரலனை
வித்தை தருந்தேவை வேலைப்படை கொண்டவனை
சத்திவேல் கொண்டவனைச் 'சரவண பவ'வென்று — கூவாய்நீ

9. சோலையில் குயிலே! சுந்தர வான்குயிலே!
ஆலவா யண்ணல் அருமைப் புதல்வனை
மூன்றுலாக் கொண்டவனை முட்டா வளவன்தனை
குன்ற மெறிந்தவனைக் குடைக்கூத் துகந்தவனை
ஒன்றி யுளங்கனிந்து 'ஓமெ'ன்று வாழ்த்தி — கூவாய்நீ

10. நீலக் கருங்குயிலே! நீயொன்று கேட்டியேல்!
நீலக் கடல்தனிலே நின்றமா கொன்றவனை
அங்கமிரு கூருய் அரக்கனை வென்றவனை
சங்கத் தமிழ்வளர்த்த சால்புமிகு பாண்டியனை
ஓங்காரத் துள்ளொளியை 'ஓம்குமராய' வென்று — கூவாய்நீ



# போக சித்தர்





திரு. அ. மா. பரிமணம்

நீரற வறியாக் கரகத்துத் தாழ்சடைப் பொலிந்த சிவபெருமான் திருமுடியில் விளங்கும் பிறையினைக் கூறும்போது, "அப்பிறை பதினெண் கணனும் ஏத்தவும் படுமே" என்று புறநானூறு கூறுகின்றது. ஆவினன் குடியிலே முருகப்பெருமானைக் காணவந்த தேவர்கள் அடியார்கள் திருக்கூட்டங்களைக் கூறுமிடத்து நக்கீரர் தம் திருமுருகாற்றுப் படையில் "ஒன்பதிற்றிரட்டி உயர்நிலை பெறீஇயர்" என்று கூறியுள்ளார். இவ்விடங்களிலும் இரண்டும் வரும் பதினெட்டு என்னும் தொகையை விளக்குமிடத்தில் உரையாசிரியர் பலரும், பதினெண் வகையினரில் சித்தர் என்று ஒரு வகையினரைக் குறிப்பிடுகின்றனர். சித்தர்கள் எனப் படுவார் மக்களினத்தில் தோன்றியவர்களேனும், தம் தவயோக ஆற்றலால், அணிமா (அணுபோலச் சிறிதாதல்), மகிமா (மேரு போலப் பெரிதாதல்) இலகுமா (காற்றுப் போல இலேசாதல்) கரிமா (பொன்போல் பளுவாதல்), பிராப்தி (எல்லாவற்றையும் ஆளல்), வசித்துவம் (அனைவரையும் வசப் படுத்தல்), பிராகாமியம் (கூடுவிட்டுக் கூடு பாய்தல்), ஈசத்துவம் (விரும்பியன செய்து முடித்து அனுபவித்தல்) ஆகிய எண் வகைப் பேராற்றலும் (அட்டமா சித்தி) கைவரப் பெற்று விளங்கும் இயல்புடையராவர்.

அட்டமாசித்தி கைவரப்பெற்ற பேராற்றலாலும், மனித குலத்துக்குப் பயன்மிக விளைக்க வல்ல அவர்தம் தொண்டாலும் பொதுமக்களிடையே சித்தர்கள் பெருமதிப்பும் செல்வாக்கும் பெற்று விளங்கினர். இறைவனே எல்லாம் வல்ல சித்தராகி, கல்யானைக்குக் கரும்பருத்தல் போலும் சித்துக்களைச் செய்ததாகவும், அட்டமா சித்திகளை அருளியதாகவும் திருவிளையாடற்புராணம் பேசுகின்றது. முருகப்பெருமானுக்குச் சித்தன் என்ற பெயரும் உண்டு. அதனால் அவன் கோயில் கொண்டுள்ள படைவீடுகளில் ஒன்றாகிய திருவாவினன்குடிக்குச் 'சித்தன் வாழ்வு' என்ற பெயரும் காணப்படுகிறது.

பொதுவாக இந்தியாவிலும், குறிப்பாகத் தமிழ்நாட்டிலும் சித்தர்கள் பலர் பல காலங்களிலும் விளங்கியதாக அறிகிறோம். யோக சாதனையாற்பெற்ற சித்த ஆற்றலால் அவர்கள் பன்னூறாண்டுகள் நிலவுலகில் வாழ்ந்ததாகக் கேட்கப்படுகிறது. பேராற்றல் பெற்று விளங்கிய இவர்களைப் பற்றிச் சங்க காலத்தவரும் அறிந்திருந்ததாகத் தெரிகிறது. "நிலந்தொட்டுப் புகார், வானம் ஏறார், விலங்கிரு முன்னீர்க் காலிற் கொள்ளார்" என்னும் குறுந்தொகைச் செய்யுளடிகள் சித்தர்கள் எனக் கருதப்படும்

பெரியோர்களின் ஆற்றல்களிற் சிலவற்றைக் குறிப்பாக உணர்த்துகின்றன. சமணம், புத்தம் முதலிய சமயங்களும் தத்தம் சமயத்தில் நின்று அரிய சித்திகள் பெற்றோரைப் போற்றக் காண்கிறோம்.

"நிலத்திற் குளித்து நெடுவிசும்பேறிச்
சலத்தில் திரியுமோர் சாரணன்"

என்று மணிமேகலையும்,

"நீரினில் பூவினில் வானில் நினைத்துழி
ஒதுங்குகின்ற
காரணர் எண்மராவார் சமணரில்
இருத்தி பெற்றோர்"

எனச் சூடாமணியும் அவர்களைச் சுட்டுகின்றன. "திண்டிறல் சித்தர்களே கடைக்கூழைச் சென்மின்காள்" என்கிறார் மணிவாசகப் பெருமான். தாயுமானவ அடிகளும் சித்தர் கணத்தைப் போற்றிப் பாடியுள்ளார். குற்றால வளத்தைக் கூறும் போது, 'கவனசித்தர் வந்து வந்து காய சித்தி விளைப்பர்' எனச் சித்தால் பெறும் சிறப்பினைத் திரிகூடராசப்பக் கவிராயர் தம் குறவஞ்சியில் காட்டியுள்ளார்.

சித்தர்கள் எண்ணிலர் விளங்கிய போதும், கோரக்கர் உள்ளிட்ட நவநாத சித்தர்களும், கொங்கணர் உள்ளிட்ட பதினெண் சித்தர்களும் சிறந்தோராகக் கருதப்பட்டனர். இவர்கள் இறையனுபூதி பெற்று, ஆற்றல்மிக்கு, மக்கள் தொடர்பு தேவையில்லாதவர்களாயிருந்தாலும் மனித குலத்தின் நன்மைக்காக, மருத்துவம், மந்திரம், சோதிடம் முதலான துறைகளில் தாங்கள் பெற்றுள்ள திறமைகளைப் பயன்படுத்துவாராயினர். இவர்களில் சிலர் மருத்துவம், மந்திரம், சோதிடம் மெய்யுணர்வு முதலான துறைகளில் தாங்கள் அடைந்துள்ள புலமையைக் கவிதைகளில் வடித்தும் தந்துள்ளனர். தமிழகச் சித்தர்கள் தந்த அறிவுச்செல்வங்கள் பதினெண் சித்தர் ஞானக் கோவைகளாக, அகத்தியர் ஞானமாக, பிற நூல்களாகத் திகழக் காண்கிறோம். ஏடுகளில் தங்கள் புலமையைத் தேக்கி வைத்துச் செல்லாத சித்தர்கள் எண்ணிலராவர். நூல்களாலும் பிறவற்றாலும் அறியப்பெற்ற சித்தர்களின் வரலாற்றினை அறிவது மிகவும் கடினமாக இருக்கின்றது.

பதினெண் சித்தர்களில் ஒருவரும், பழனி மலைக்கோயில் வரலாற்றோடு பெரிதும் தொடர்புடையவருமான போகருடைய வரலாறும் விளக்கமாக அறியமுடியாததாகவே உள்ளது. ஒன்பதாம் திருமுறையைச் சேர்ந்த திருமாளிகைத் தேவர், கருவூர்த்தேவர் ஆகியோருடன் போகருக்குத் தொடர்பு கூறப்படுகிறது. திருவாவடுதுறையில் ஓரரசமரத்தின் கீழ், நவகோடி சித்தர்கள் சீடர்களாக விளங்க, போகர் வீற்றிருந்ததாகவும், அவர் தம் சீடர்களில் சிவனை வழிபடும் சிவசமயிகளும் அம்பிகையை வழிபடும் வாமிகளும் இருந்ததாகவும், அவர்களுடைய மன பரிபாகத்திற் கேற்பப் போக சித்தர் தீட்சை அளித்ததாகவும் கூறப்படுகிறது. போக சித்தரின் சீடர்களில் சைவநெறி நிற்போருள் திருமாளிகைத் தேவரும், வாமநெறி நிற்போரில் கருவூர்த் தேவரும் சிறந்து விளங்கினார்கள் என்றும், அவர்கட்குச் சைவசமயமே சிறந்ததென்றும், சிவ வழிபாடே சிறப்பானதென்றும் போகர் தெளிவுபடுத்தியதாகவும் கூறப்படுகிறது.

திருநந்தி தேவரே, பல்வகைப் பிறப்புற்றுப் பின் போகராகப் பூமியில் தோன்றினார் என்றும் போகர் செனனசாகரம் என்னும் நூற்பாடல் உணர்த்துகின்றது. போகர் தன் வரலாறு கூறுவது போலமைந்த அப்பாடல் வருமாறு:—

"ஆதியிலே நந்தியானேன் அப்பனே
தவஞ்செய்து,
சித்தன் அயன் மாலு மானேன்
வேனென்ற சுப்பிரமணிய ரூபமானேன்
விண்ணவர் சேனாபதி இந்திரனு
மானேன்
நானென்ற கிருஷ்ண வடிவாகி நின்றேன்
நபிபமாய் உலகமெங்கு மானேன்
மானென்ற பராபரமாய் நின்று
கொண்டேன்
மாநிலத்தில் போகரென்றுபெயர்
வழங்கிற்றேனே".

போகருடைய மரபு கூறும்போது மூலர், காலாங்கி, போகர், கொங்கணர் என்று வரிசைப்படுத்தி,

"கேளப்பா மூலர்க்குக் காலாங்கி பிள்ளை
கெட்டியான காலாங்கி மைந்தர்
போகர்

நீளப்பா போகர் பிள்ளை
கொங்கணர் தான்" (சட்டைமுனி)
என்று சித்தர் பாடல் கூறுகின்றது.

போகர் ஏழாயிரம் போகர் எழுநூறு முதலிய மருத்துவ நூல்களும், ஜால நூல்களும் போகரால் செய்யப்பட்டனவாக அறியப்படுகிறது. போக முனிவரின் சீடராகப் புலிப்பாணி முனிவர் என்பவர் கூறப்படுகின்றார். அவரும் மருத்துவம் முதலிய துறைகளில் சிறந்தவராகவும், நூல் இயற்றியவராகவும் கூறப்படுகிறது. தொடக்கத்தில் போகர் புத்தமதத்தினரென்றும், தம் சொந்த நாடான சீனத்திலிருந்து வந்து பின்னர் சீனம் திரும்பியவர் என்றும், புலிப்பாணி இவருடன் இங்கு வந்து இங்கேயே தங்கி விட்டவர் என்றும் சிலர் கருத்துரைக்கின்றனர். ஆனல் போகர் தமிழகத்தையே தம் தாயகமாகக் கொண்டவரென்றும், தம் சித்தாற்றலால் சீனம், உரோமாபுரி, மக்கா, மதினா முதலிய பிற நாட்டுப் பகுதிகளுக்கெல்லாம் சென்று கண்டு வந்தவர் என்றும் சிலர் கருதுகின்றனர். போகரும், மருத்துவக் கலையில் சிறந்த அவர்தம் மாணவர் புலிப்பாணியும் தங்கள் இறுதிக்காலத்தில் பழனியில் தங்கியிருந்ததாகத் தெரிகிறது. இச்செய்தி, கொங்கு நாட்டு வரலாற்றுச் செய்திகளைத் தொகுத் துறைக்கும் கொங்கு மண்டலச் சதகத்தில் வரும்,

"யோக வைத்தியம்சொல் ரசவாத
மெலாக் கலையும்
தேக நிலை பெருங்காய கற்பங்க
ளெண்சித்தியும் சொல்
போகருடன் புலிப்பாணி முதலிய
புண்ணியரெலா
மாகமுற வமர்வைகா நகர் கொங்கு
மண்டலமே"

என்னும் பாடலில் குறிக்கப்பட்டுள்ளது. தமிழகத்தின் பலவிடங்களில் போகர் இருந்ததாகக் கூறப்படினும் பழனியைத் தவிர பிறவிடங்களில் அவர் இறுதிநிலை — சமாதி அடைந்ததாகக் கூறப்படாமையாலும், பழனிக் குன்றின் மேலுள்ள ஆண்டவர் உட்பிரகாரத்தின் தென்மேற்கு மூலையில் போகர் சமாதி என்னுமொரு கோயிலமைப்பு அமைந்திருப்பதாலும் அவர் இத்தலத்தில் நிருவிகற்ப சமாதி எய்தியவர் என்னும் செய்தி உறுதிப்படுகிறது.

முருகப் பெருமான், பழனிக்குன்றிலே கோயில் கொண்ட புராண வரலாறு அறிஞர்கள் பலரும் அறிந்ததாகும். மலை மீதிலங்கும் முருகப் பெருமானைக் கிரேதா யுகத்தில் நான்முகனும், திரேதா யுகத்தில் இந்திரனும், துவாபர யுகத்தில் போக நாதரும் வழிபட்டுத் தங்கள் சாபந் தீரப் பெற்றனர் என்பது புராணக் கூற்ருகும். கலியுகம் தொடங்கி 224 ஆண்டுகள் போகர் வழிபட்டதாகவும் அப்பழ மரபு கூறுகிறது. போக சித்தரே தம் பேராற்றலால் நவ பாடாணக் கலவை கொண்டு இப்போதும் நாம் கண்டு வழிபடும் அருள்மிகு ஞான தண்டாயுதபாணிசுவாமித் திருமேனியை உருவாக்கியதாகக் கூறப்படுகிறது. நவ பாடாணச் சேர்க்கையாலான திருமேனியாக உள்ளமையால், ஆண்டவர் திருமேனி பட்டு வரும் பொருட்கள் அனைத்தும் அருள் பெருக்கும் திருமருந்தாய் — பிணி தீர்க்கும் பெருமருந்தாய் விளங்குகின்றன.

போக சித்தர் உருவாக்கிய ஆண்டவர் திருமேனி தண்டேந்தி இளமைக் கோலத்தில் நின்றருளுகின்றது. இத்திருமேனியின் அழகில் ஈடுபட்டுக் காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி வழிபடுவதோடு, அத்திருமேனியின் வடிவமைப்பினைச் சிந்திக்கும் போது அரியதொரு சமய வரலாற்றுண்மை புலனகின்றது. அத்திருக்கோலம், பலர் கருதுமாறு, முதுமைக்கோலம் அன்று என்றும், கரத்திலங்கும் தண்டும் முதுமைக்கான ஊன்றுகோல் அன்று என்றும், ஆண்டவன் இளமைமிக்குக் கையில் தண்டினை ஆயுதமாகக் கொண்டு நிற்கின்ருன் என்றும் அறிதல் வேண்டும். மக்கட்கு வேல் ஆயுதமாக விளங்கியதற்கு முன்னர், தண்டு ஆயுதமாக விளங்கிய உண்மை வரலாற்றில் அறியப்படுகின்றது. "சேயோன் மேய மைவரை உலகமும்" எனத் தொல்காப்பியம் சுட்டிக் காட்டும் மிகப் பழங்காலத்தில், முருகப் பெருமானுக்குரிய படையாக வேலாயுதத்தை அமைத்து வழிபட்டு வருவதற்கு முன்னல் தண்டினை ஆயுதமாக அமைத்து

வழிபட்ட நிலை தமிழரிடையே இருந்துள்ளது. தமிழக முருக வழிபாட்டிலமைந்த அத் தொன்மையான வடிவமைப்பினையே இன்று நாம் காணும் தண்டாயுதபாணி வடிவமைப்பில் காண்கிறோம். இவ்வுண்மையை நாம் ஊகித்துணருமாறு செய்துள்ள பெருமை போகநாதரைச் சார்ந்ததாகும்.

முருகப்பெருமான் திருக்கரத்தில் வேல் ஆயுதமாக அமைந்த பின்னர், அதனை வெற்றியின் அடிப்படையாகவும், ஞானத்தின் சின்னமாகவும் கொண்டு அன்பர்கள் வழிபடலாயினர். அவ்வாறே தண்டாயுதமும் ஞானத்தின் சின்னமாகக் கொண்டு, அதனை ஏந்தி நிற்கும் பெருமானை 'ஞான தண்டாயுதபாணி' (ஞானமாகிய தண்டாயுதத்தைக் கரத்தில் தாங்கியவர்) என்ற பெயரில் வழிபடலாயினர். 'தண்டபாணி' என்னும் பெயருக்கு வேறு வகையானதொரு விளக்கம் செவிவழிச் செய்தியாகக் கேட்கப்படுகிறது. போகநாதர் இப்போது நாம் காணும் திருமேனியை அமைப்பதற்கு முன்னர்த் தனது யோக தண்டினையும் கமண்டலத்தையுமே வைத்து முருகனை வழிபட்டதாகவும், மக்களின் நன்மை கருதி உருவத் திருமேனியை அமைத்த பின்னர் அத்திருமேனிக்கு முன்வழிபட்ட நிலையைக் குறிக்குமாறு 'தண்டபாணி' (தண்டம் – யோக தண்டம்; பாணி - நீர்க்கரகம், கமண்டலம்) எனப் பெயர் சூட்டினர் என்றும் கூறப்படும் இவ்விளக்கம் பழனி போக மகரிஷி ஆதீனப் பரம்பரை புலிப்பாணி ஆசிரமம் உடையார் வாயிலாகக் கேட்கப்பட்டதாகும்.

போகருக்குப்பின் அவருடைய மாணவர் புலிப்பாணியும் அவருக்குப்பின் அவர் மரபு வழிவந்தவர்களும் ஆண்டவருக்கு வழிபாடு செய்து வரலாயினர். மதுரைத் திருமலை நாயக்க மன்னர் காலத்தில் தளவாயாக விளங்கிய இராமப்பையர் பழனிமலைக்கு வந்தபோது, பிராமணரல்லாத அர்ச்சகரிடம் தீர்த்தப் பிரசாதம் வாங்க விரும்பாமையால், அவர் ஏற்பாட்டால், அன்று முதல் ஆதிசைவ மறையவர்கள் ஆண்டவருக்கு அர்ச்சனை செய்யும் முறை உண்டாயிற்று. புலிப்பாணி மரபில் தோன்றிப் பூசனை செய்து வந்தவர்கள் தொடர்ந்து போகர் சமாதிக்குப் பூசனை செய்து வரவும், ஆலயத்தில் சில உரிமைகள் பெறவும் வகை செய்யப்பட்டது. இச்செய்திகள் அடங்கிய செப்பேட்டின் முழுவாசகத்தைப் பழனித் திருக்கோயில் வெளியிடான 'பழனித்தல வரலாறு' நூலிலும் இம்மலரில் பிறிதோரிடத்திலும் காணலாம்.

போகர் சாபம் பற்றிய விந்தையான செய்திகள் புலிப்பாணி வைத்தியம் 500 என்னும் ஏட்டில் காணப்படுகின்றன. அவை எவ்வாறாயினும் போகர் யோக ஆற்றல் மிக்க சித்தர்களில் ஒருவர் என்பதும், மருத்துவம் முதலிய துறைகளில் வல்லவர் என்பதும், திருமாளிகைத் தேவர் கருவூரார், புலிப்பாணி போன்றோர் அவருக்கு மாணவராக விளங்கினர் என்பதும், அவர்கள் போக ஆற்றலால் நீண்ட நெடுங்காலம் வாழ்ந்திருந்தனர் என்பதும், பழனியில் அவர் இருந்தபோது, காரசார பாடாண உபரச சாதனங்களைக் கட்டி தண்டபாணித் திருமேனியை அமைத்துத் தந்தார் என்பதும், இறுதியில் அவர் தான் அமைத்த திருமேனிக்கு அருகிலேயே (இப்போதுள்ள ஆலய உட்பிரகாரத்தின் தென்மேற்கு மூலையில்) சமாதி அடைந்தார் என்பதும் யாவரும் அறிந்துணர்ந்த உண்மைகளாகும். இப்போதுள்ள அவர்தம் சமாதிக்கும், ஆண்டவர் கருவறைக்கும், சுருங்கை வழி இருப்பதாகவும், அது இப்போது மூடப்பட்டுள்ளதாகவும் கூறப்படுகிறது. போகர் 7000 என்னும் மருத்துவ நூலும் சில நூல்களும் போகர் எழுதியதாக அறிகின்றோம். பழனித் திருமலையில் போகநாதரின் திருத்தொண்டு, மருத்துவமும் சமயமும் இணைக்கப்பட்ட நிலையில், மக்களினம் உடற்பிணியும், உளப்பிணியும் ஒருங்கே நீங்கப்பெற்று, ஆன்மநலம் சிறந்து பிறவிப் பயன் எய்துதற்காம் சீரிய சாதனமாக அமைந்து விளங்குகின்றது. 'அதிசயங்கள் அனேகமுற்ற பழனிமலை' என்பது அருணகிரி வாக்காகும். போக சித்தரின் ஆற்றலால் உருவாக்கப் பெற்று நின்றருளும் ஆண்டவர் தம் அழகு நலஞ்சான்ற திருமேனியும் அவ்வதிசயங்களில் ஒன்றாக விளங்கும் உண்மை அறிந்தின்புறத் தக்கதாகும்.

# திருமலை நாயக்கரின்
# தளவாய் இராமப்ப அய்யன் கொடுத்த பட்டயம்



[போக முனிவரால் நிறுவப் பெற்ற பழனி ஆண்டவரைப் புலிப்பாணி பாத்திர உடையாரும் அவர் வழி வந்தவர்களும் பூசை செய்து வந்தனர். கி. பி. 1623-59ல் மதுரையிலிருந்து ஆட்சி புரிந்த திருமலை நாயக்கரின் தளவாய் இராமப்ப ஐயன் மலைமீதுள்ள ஆண்டவரை வழிபட வந்தபோது, பிராமணரல்லாத பூசகரிடம் தீர்த்தப் பிரசாதம் பெறவிரும்பாமல், ஆதிசைவ மறையவர்களைக் கொணர்ந்து வழிபாடு செய்யச் செய்து, நிரந்தரமாக அவர்களே பூசை செய்து வரவும், முன்பு பூசை செய்தவர்கள் சில உரிமைகள் பெற்றுப் போகர் சமாதிப் பூசை புரிந்து வரவும், தசராக் காலத்தில் அம்புபோடும் உரிமை முதலியன அளித்தும் உறுதி செய்து சாசனம் செய்து கொடுத்துச் சென்ருர். அவர்களுக்குத் துணையாக விளங்கிய பண்டாரங்கள் ஆண்டவருக்கு, மாமூல் வழக்கப்படி, திருமஞ்சனம், மாலை, சந்தனம், வில்வம் வகையரு, பள்ளியறைக் கட்டியம் முதலான சேவை செய்து வரவும், ஏற்பாடு செய்துள்ளார். அவர்கள் பரம்பரையினர் இன்றும் மிராசு பண்டாரம் என்ற பெயரில், ஆண்டவருக்குத் தினசரி நடக்கும் கால பூசைகட்கு, திருமஞ்சனம் வழங்குதல், விசேட நாட்களாகிய சித்திரை வைகாசி அக்னி நட்சத்திரத்தின்போது திருமஞ்சனம் வழங்குதல், ஆனித் திங்கள் கேட்டை நாளில் அன்னபிடேகத்திற்குத் திருமஞ்சனம் முதலியன வழங்குதல், கந்த சஷ்டியின்போது ஆண்டவருக்குத் தொண்டு செய்தல் முதலான கடமைகளைச் செய்துவர, அதற்கான உரிமைகளைப் பெற்றுப் பணி புரிந்து வருகிருர்கள். இவற்றைச் சுட்டும் வரலாற்று ஏடாக விளங்குகிறது இராமப்பையன் அளித்த பட்டயம்.]

### (செப்பேட்டு நகல்)

*"சொச்ச ஸ்ரீ ராஜாதி ராஜன், ராஜப்பரமேஸ்வரன், ராஜமார்த்தாண்டன், ராஜகாண்டீபன், ராஜகேசரி, ராஜராமகேசரி மன்னர் மண்டலேஸ்வரன், துஷ்ட நிக்கிரக சிஷ்ட பரிபாலனம் செய்யும், மகுடமன்மத சுகுடசுத்த விருதுஷ்ட்ட நிஷ்டுர கோஷ்டகோலாகலன், விகுடமிடு மருவலர்கள், மகுடமுடி திருகி விழ விருது கங்கணங்கட்டும் விரப்ரதாபன், மும்முரசறையும் முத்தமிழ் விநோதன், தவனெறியுள்ளவன், சத்திய வாசகன், சிவநெறி தழைக்க திருநீறு மிட்டவன், சொக்கநாதருக்கு முக்கிய குணவான், கச்சியிலதிபதிபன், உச்சிதபோஜன், அச்சுத அரியின் மெச்சிய பாலன், வங்கி நாராயணன், மருவலர்கள் கண்டன். ஸ்ரீமது கச்சித் திருமலை நாயக்கர் அவர்கள் தளவாயாகிய மகா-௱-௱-ஸ்ரீ ரூமப்பய்யர் அவர்கள் சாலிய வாகன சகாப்தம் 1366 கலியுக சகாப்தம் 4578-க்கு மேல் செல்லா நின்ற ஸ்ரீமுகா ௵ தை மீ 16௳ பூர்வ பக்ஷம் சப்தமியும், ரோகணி நக்ஷத்திரமும், சோமவாரமும், சுபநாமயோகமும், பத்திரவாகரணமும், பெற்ற சுபதினத்தில் தாம்பூரசாசனப் பட்டயம் பிரப்பிவைத்தபடி, தாம்பூரசாசனமாவது: ஸ்ரீ தெண்டாயுதக் கடவுளாருக்கு அஷ்டபந்தனஞ் செய்து வைக்கும் முன்னிலைக்கி இந்த ஸ்தலம் போகர் வாடையாய் புலிப்பாணிபாத்திர சுவாமியார் பூசை செய்து வந்தபடியினலே இப்போது ரூமப்ப அய்யர் அவர்கள் அவர் கையினலே தீர்த்தப்பிரசாதம் வாங்கக்கூடாதென்று நினைத்து பாளையகாரரும் ரூமப்ப அய்யர் அவர்களும் புலிப்பாணிபாத்திரசுவாமிகள் மனது சம்மதப்படுத்தி அவருடைய பூசைமுராசுக்கு குமாஸ்தாவாக பூசை பரிசாரகத்துக்கும் கொங்குதேசத்திலிருந்து கொடுமுடி சரஸ்வதி அய்யன் 1. மருதூர் தம்பாவைய்யன் 2. நாட்டார அய்யன், கோவில் சுப்பய்யன் 3. கரூர் முத்தய்யன்*

4. கடம்பர்கோவில் அகிலாண்டய்யன் 5. இவர்களை பாளையக்காரரவர்கள் வரவழைத்துக் கொடுமுடி சரஸ்வதி அய்யனை குருக்களாகவுமமைத்த நால் வரைப் பூசைப்பரிசாரகம் நம்பிமார்களாகவும் நியமித்து பூர்வா பூர்வமாய் தெண்டாயுதக் கடவுளாருக்கு பூசைகள் செய்துகொண்டுவந்த புலிப் பாணி பாத்திர உடையாருக்கு தெண்டாயுதபாணிக் கடவுளாருக்கு அபிஷேகமாகி நம்பிமார்களுக்கு வரப்பட்ட நிர்மால்யம் சொர்ண புஷ்பங்களில் கால்ப்பங்கு கொடுத்துவரும்படியாயும் மூலஸ்தானமாகிய துர்க்கையம்மன், மரகதலிங்கம், வலம்புரிச்சங்கு முதலாகிய வாலை, புவனை, திரிபுரைக்கும் பூசனை செய்து கொண்டு நவராத்திரி பூசையும் செய்து பிரதமை முதல் தசமி வரையில் மூனு பட்டுப்பரிவட்டமும் கட்டிக்கொண்டு, தேவதாமரியாதைகளுடன் அம்பு போட்டுக்கொண்டு வருகிறதும், பண்டாரங்கள் இருபத்தினாலு பேரும் மாமூல் வழக்கப்படிக்கு திருமஞ்சனம், மாலை, சந்தனம், வில்வம், வகையரு, பள்ளியறை கட்டியம், ஓதுவார் கந்தப்புராணம், திருப்புகழ், திருவலகு, சட்டக்கால், தூபக் கால், பரிவட்டம் துவைக்கிறது, கொல்லச் சேவகம், உபயத்திருமஞ்சனம் வகை யரு கட்டளை இது முதலானதெல்லாம் எண்ணெணைக்கும் மாமூலாய் பண்டாரங் களைப் பணிவிடை செய்துகொண்டு வரும்படியாய்க் கட்டளை யிட்டிருக்கிறோம். பூர்வா பூர்வமாய் இந்த ஸ்தலம் புலிப்பாணி பாத்திர உடையாரைச் சார்ந்தது. சிவப்பிராமணாள் அஞ்சு பேருக்கும் இது காரணஸ்தலமானபடியால் விருமநம்பி, விஜயநம்பி, வாலநம்பி, கோசல நம்பியென்றும் நாமகரணமிட்டு, கொடுமுடி சரஸ்வதி அய்யனை கலச்தாபிதம் ஸ்தவராச பண்டிதர் என்றும் காரணப் பெயரிட்டு காயாசம் பஞ்சகொத்து தாவடமும் கொடுத்து நன்மை தின்மை களில் புலிப்பாணி பாத்திர உடையார் ஆதினத்துக்கு நடக்கிற ஆறுகால் பீடம் அபிஷேக மரியாதைகளில் சிலமரியாதையும் கொடுமுடி குருக்களுக்குக் கொடுத்து, சுவாமி காரியங்களில் யாதொரு விச்சின்னம் வராதபடிக்கு புலிப் பாணி பாத்திர உடையாருக்கு முன்பாக பண்டாரங்களையும், நம்பிமார்களையும் வரவழைத்து நம்பிக்கை வாங்கிக்கொடுத்து இவர்களுக்கும் கோவில் வேலைக் காரர்களுக்கும், புலிப்பாணி பாத்திர உடையாரை மேல் விசாரணை செய்து வரும்படிக்கும், சுவாமி நெவேதனம், புண்யாசனம் பிருமணாளைக் கொண்டு செய்துவரும்படியாயும், நவருத்திரி பூசைக்காக புலிப்பாணி பாத்திர உடை யாருக்கு இருபத்திநாலு பொன்னும் பனிரண்டு சலகை நெல்லும் அதற்கு வேண்டிய ஜாமான்களும் கோவிலில் இருந்து கொடுத்துவரும்படியாயும் திட்டம் செய்திருக்கிறோம். மலைக்கோவிலில் அம்மனுக்குச் சாத்துபடிக்கு பரிவட்டமும், ஊர்க்கோவிலில் அம்மனுக்குச் சாத்துபடிக்கு பாவாடை பட்டுகள், அஸ்மானகிரி, குத்துவிளக்கு, சரவிளக்கு, மணி, தட்டம், தீப முஸ்திதிகள் கொடுத்து அம்பு போட்டபிறகு வாங்கிக்கொள்ளுகிறது. இந்தப்பிரகாரம் எண்ணென்னைக்கும் சந்திராள், சூரியாள், கல்லுங் காவேரி, புல்லும் பூமியும் உள்ள வரைக்கும் நடந்துவரும்படியாய் கட்டளையிட்டிருக்கிறோம். இந்த தர்மத்துக்கு யாதா மொருவர் வாக்குச் சகாயம், மனச்சகாயம், சரீர சகாயம், அர்த்த சகாயம் பண்ணின பேர்களுக்கு காசியில் கெங்கைக் கரையிலே கோடி சிவலிங்க பிரதிஷ்டை பண்ணின பூசாபலத்தைப் பெறுவார்களாகவும். இதற்கு விகாதம் பண்ணினபேர்கள் கெங்கைக் கரையிலே காராம் பசுவைக்கொன்ற தோஷத் தில் போவார்களாகவும், இந்தப் படிக்கி எழுதின நண்மை பழனியில் கந்தசாமி ஆசாரி".

இந்தப்படிக்கு மகா-ா-ா-ஸ்ரீ ரூமப்ப அய்யர் அவர்கள், மோகர் போடப் பட்டிருக்கிறது.



# தமிழ் இலக்கிய வரலாற்றில் முதல் திருப்பு முனை







திரு. சு. மு. ஆறுமுகம்

சங்க காலத்தைத் தமிழ் இலக்கியத்தின் பொற் காலம் என்பர். விழுமிய கருத்துக்களைச் செவ்விய மொழியில் திறம் பட அமைத்துக் கவினுறக் கூறுவது இலக்கியம். இம்முறையில் சங்க காலச் சூழல் நல்ல பல இலக்கியங்கள் தோன்றுவதற் கேற்ற வாய்ப்பையும் வளனையும் நல்கிப் பீடும் பெருமையும் பெற்றுத் திகழ்ந்தது.

சங்க காலத் தமிழகம், மக்கள் நல் வாழ்விற்குகந்த பண்பட்ட சமுதாய மரபுகளைப் பெற்றிருந்தது. நாடாண்ட மன்னர்கள் குடி உயரக் கோள் உயர்வான் என்ற கோட்பாட்டை அரசியற் செந்நெறியாகக் கொண்டு மக்களைப் புரந்தனர். மக்களும், "ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்படும்'' என்னும் குறள் வகுத்த வழியில் நின்று வாழ்வைச் செம்மைப் படுத்தினர். வேறுபட்ட பற்பல சமயங்களைச் சங்க காலத் தமிழகம் ஏற்றுக் கொண்ட போதிலும் சமயப் பொறை (Religious Tolerence) ஓர் இன்றியமையா இயல்பாக அக்காலத்திற் கருதப்பட்டது. வென்றிச் சிறப்பும் கொடைச் சிறப்பும் சிறந்த தகுதிகளாகப் பேசப்பட்டன.

சமுதாய நல்வாழ்வே தலையாயது; அதனைக் காப்பதற்கு எடுத்துக் கொள்ளும் முயற்சியே தலையாய முயற்சி; அம்முயற்சி உடையோரே உயர்ந்தோர் என்ற உயரிய எண்ணத்தின் அடிப்படையில் சமுதாயம் இயங்கியது. கீழ் வரும் பாடல் இதனைத் தெளிவு படுத்துகின்றது:

"உண்டா லம்மஇவ் வுலகம் இந்திரர்
அமிழ்தம் இயைவ தாயினும்
இனிதெனத்
தமியர் உண்டலும் இலரே முனிவிலர்
துஞ்சலும் இலர்பிறர் அஞ்சுவ தஞ்சிப்
புகழ்எனின் உயிருங் கொடுக்குவர்
பழியெனின்
உலகுடன் பெறினுங் கொள்ளலர்
அயர்விலர்
அன்னமாட்சி அனைய ராகித்
தமக்கென முயலா நோன்றாட்
பிறர்க்கென முயலுநர் உண்மை
யானே.''

போரிடுவது வாழ்க்கை முறையாக அமைந்து விட்ட அக்காலத்தில் தமிழ் மக்கள் வீரத்தின் விளைநிலமாகவும், உழைப்பின் உறைவிடமாகவும் விளங்கினர். உழவுத் தொழில், நெசவுத் தொழில் ஆகிய தொழில் களில் தமிழ் மக்கள் ஏற்றம் பெற்று விளங்கியதை உலகம் கண்டு வியந்தது. அவர்கள் கை பட்டன வெல்லாம் பொலிவு பெற்று

விளங்கின. ஓவியம், சிற்பம், இசை முதலிய கலைத்துறைகளில் எல்லாம் வல்லவர்களாக விளங்கினர்கள். உள்நாட்டு, வெளிநாட்டு வாணிகச் சிறப்பால் தமிழ் மண்ணில் பொன்னும், பொருளும் மண்டிக் கிடந்தன.

இவ்வண்ணம் சங்க காலம் நாகரிக மேம்பாட்டினையும் பண்பாட்டின் உயர்ச்சியினையும் பெற்று மேதினியில் புகழ் மணம் கமழக் காட்சி அளித்தது.

இத்தகைய அரசியல், கலை, நாகரிக, பொருளாதார மேம்பாட்டினைக் கொண்ட சமுதாய அமைப்பு முறையைப் பின்புலமாகக் கொண்டு புலவர் பெருமக்களின் புலமைத் திறத்தாலும் கற்பனை வளத்தாலும் தோற்றம் பெற்றவைதாம் சங்கச் செய்யுட்கள்.

வாழ்க்கையின் பிரதிபலிப்பாகிய இலக்கியம் வாழ்வியலை விதந்து கூறுவதாக விளங்கியது.

"அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு"

எனப்பாடி இறையுணர்வைத் தூண்டுகின்ற பொழுதும்,

"செல்வத்துப் பயனே ஈதல்" என்றும்
"நல்லது செய்தல் ஆற்றீ ராயினும்
அல்லது செய்தல் ஓம்புமின்" என்றும்

அறநெறி பற்றிய நல்லுரைகளை எடுத்துக் கூறுகின்ற பொழுதும்,

"கடுஞ்சினத்த கொல்களிறுங் கதழ்பரிய
கலிமாவும்"
நெடுங்கொடிய நிமிர்தேரும்
நெஞ்சுடைய புகன்மறவரும் என
நான்குடன் மாண்டதாயினும் மாண்ட
அறநெறி முதற்றே அரசின் கொற்றம்"

எனப் பொருளியல் உண்மையை அறிவுறுத்துகின்ற பொழுதும்,

"செம்புலப் பெயல்நீர் போல
அன்புடை நெஞ்சம் தாம்கலந்தனவே"

என்று காதலின் சிறப்பைப் புலப்படுத்துகின்ற பொழுதும் எவ்வுலகிற்கும் பொருந்துகின்ற பொதுநோக்கில் வைத்தே சங்கச் செய்யுட்கள் உறுதிப் பொருள்களை ஆய்ந்தன. சாதி, சமய எல்லையைக் கடந்து மக்கள் யாவரையும் ஓரினம் எனக் கருதும் விரிந்த நோக்கம் சங்க காலத்துச் சிறப்பியல்பாகும். இச்சிறப்பியல்பு சங்கப் பாக்களில் ஊடுருவி நிற்பது தெற்றென விளங்கும்.

இக்காலத்தில்தான் இயல், இசை, கூத்து ஆகிய முத்துறையிலும் தமிழ்மொழி ஆதிக்கம் பெற்று முழுத் தன்மை பெற்றது. இலக்கண அமைதியிலும் இலக்கியச் செறிவிலும் தமிழ் மொழி ஒப்பற்றதாகத் திகழ்ந்தது. ஒல்காப் புகழ் வாய்ந்த இலக்கணப் பெருநூலாகிய தொல்காப்பியம் சங்கத் தமிழின் மணிமகுடமாகத் திகழ்ந்தது. பொற்காலமாகிய இச் சங்க காலத்தில்தான் பொது மறையாம் திருக்குறளை உலகிற்கு ஈந்து தமிழகம் வான் புகழ் கொண்டது.

இவ்வாறு ஓர் உயர்ந்த இலக்கிய பாரம்பரியத்தைச் சங்க காலம் விட்டுச் சென்றிருந்தும் பிற்காலத்தில் பிறந்த தமிழ் இலக்கியங்கள் சங்க இலக்கியப் போக்கில் அமையாது மாறுபட்டுத் தோன்றின. பொருட் செறிவும், இயற்கை நவிற்சியும் கொண்டதாய், பெருமிதம் நுண்மை அழகு ஆகிய நயங்களைப் பெற்று உலகியலை மையமாகக் கொண்டு சங்க இலக்கியம் சுழன்றது. ஆனல் பிற்கால இலக்கியம் வெறும் சொல்லணிகளும் உயர்வு நவிற்சியும் பெற்று இதிகாச புராணக் கருத்துக்களை விரித்துக் கூறும் புனைந்துரைகளாக அமைந்தது. தமிழ் இலக்கிய உலகில் இம்மாற்றம் எவ்வாறு இடம்பெற்றது?

சங்க காலத்தை அடுத்த பிற்காலத்தில் தமிழகத்தில் அரசியல், சமூகவியல், சமயவியல் ஆகிய முத்துறையிலும் ஏற்பட்ட மாற்றங்களால் இலக்கியப் பாங்கும் பாதிக்கப் பட்டு வளர்ச்சி குன்றித் தளர்ச்சியுற்றுத் தாழ்ந்தது.

முரசு முழங்குதானை மூவேந்தரும் குறுநில மன்னரும் தண்ணளி செய்த தமிழகம் சங்க காலத்திற்குப்பின் களப்பிரர் எனப் பட்ட ஒரு முரட்டுக் கூட்டத்தினரின் படை

யெடுப்புக்கு ஆளாகி, அவர்களுடைய கோரப்பிடியில் சிக்குண்டது. தமிழகத்தில் முறையான அரசும், அரசியல் நெறிமுறைகளும் சீர்குலைந்தன. நாட்டில் எங்கும் எதிலும் குழப்ப நிலையே காணப்பட்டது. மக்களின் செயலிலும் சிந்தனையிலும் தேக்க நிலை ஏற்பட்டது. இத்தேக்க நிலை தொடர்ந்து ஓரிரு நூற்றுண்டுகள் நிலவியதன் விளைவாகப் பண்டைய சமுதாய மரபுகளும் சமய நோக்கும் திருப்பம் பெற்றுத் திசை மாறின. மக்கள் வாழ்க்கையுடன் இணைந்தே செல்லும் இலக்கிய உலகமும் புதிய பாதையில் நடைபோட்டது.

களப்பிரர் இடையீடு காரணமாகத் தமிழகத்தில் எங்கும் இருள் பரவியதால் சமுதாய வாழ்க்கையில் நிலவிய மந்தநிலை சமயங்களின் புத்தெழுச்சிக்குக் காரணமாக இருந்தது எனக் கூறலாம். இச்சமயப் புத்தெழுச்சியே களப்பிரர் காலத்தை அடுத்து வந்த பல்லவர் காலத்தில் சமயக் கிளர்ச்சியாக மலர்ந்தது. தனி மனிதனின் எண்ணத்தில் இறையுணர்வை ஏற்படுத்தி உள்ளத்தைப் பண்படுத்தி வந்த சமயங்கள் பொது வாழ்வில் தலையிட்டு அரசியல் செல்வாக்குத் தேட ஆரம்பித்தன. அமைதியும் ஆன்மிக உணர்வும் அணிசெய்த சமய வாழ்வில் போட்டியும் பூசலும் இடம் பெற்றன.

மக்களைத் தம்பால் ஈர்ப்பதற்கான வழி, துறைகளில் சமயங்கள் முனைந்து நின்றன. மக்களின் உள்ளத்து உணர்வுகளைத் தொட்டி முக்கும் ஆற்றல் வாய்ந்த கருவி இலக்கியம் என்பதை அறிந்து சமயங்கள் இலக்கியத் துறையில் இறங்கின.

வடமொழி, நாகரிகம் தமிழகத்தில் தடையின்றிப் பரவியதும் இக்காலத்தில் தான். வடமொழி நாகரிகக் கலப்பால் வடமொழி வழக்குக்களும் கருத்துக்களும் தமிழில் இடம் பெறலாயின. அதற்கேற்பத் தமிழ் இலக்கியத்தின் வடிவமும் எடுத்தாளப்பட்ட பொருளும் (Form and Matter) பெருத்த மாற்றங்கள் உற்றன. நிகழ்ச்சிகளையோ, காட்சிகளையோ அல்லது கருத்துக்களையோ தனித்தனியே தனித்தனிப் பாடல்களில் அமைத்துப் பாடும் முறை மாறி நெடுங்கதைகளையும் நிகழ்ச்சிகளையும் தொடர்நிலைச் செய்யுளில் எடுத்துக் கூறும் முறை பெரு வழக்குப் பெற்றது. இவ்வாறு இலக்கியத் துறையில் காப்பியங்கள் முதலிடம் பெற்றன.

சமயக் கோட்பாடுகளை உள்ளீடாகக் கொண்டு காப்பிய நடையாகிய முற்றிலும் புதிய பாணியில் இலக்கியங்கள் தோன்ற ஆரம்பித்தன. சமயத்தின் பெருமையே இலக்கியத்தின் பெருமை; இலக்கியத்தின் சிறப்பே சமயத்தின் சிறப்பு எனக் கூறு மளவிற்குச் சமயமும் இலக்கியமும் ஒன்றிப் போய்விட்டன. இவ்வகையில் சமயங்களின் வளர்ச்சியும் எழுச்சியும் பிற்காலத் தமிழ் இலக்கிய ஆக்கப்பணிக்குப் பெரிதும் உதவியுள்ளன.

நற்றமிழ்க் காப்பியங்களும் தீந்தமிழ்ப் பாசுரங்களும் சமயச் சாயல் பெற்றுத் தோற்றமளித்தன. உலகியலின் பொதுத் தன்மையை உணர்ச்சிபூர்வமாகவும், செயல் களடிப்படையிலும், ஆரவாரம் எதுவும் இன்றி இயற்கை நவிற்சி நுண்மை, ஒண்மை ஆகியவற்றை ஒருங்கே அமைத்துச் சிறப்பித்துக் கூறிய சங்கப் பாக்களின் மரபுகள் கைவிடப்பட்டன. புதிய இலக்கியங்கள் சமய நெறிகளைச் சிறப்பித்துக் கூறுகின்ற சமய இலக்கியங்களாகவே திகழ்ந்தன.

இவ்விதம் சங்க இலக்கியப் போக்கு திருப்பம் பெற்றது. களப்பிரர் படையெடுப்பு, அதனையொட்டித் தோன்றிய சமய, சமுதாய நிலைமாற்றங்கள், வடமொழி நாகரிகக் கலப்பு ஆகிய நிகழ்ச்சிகளின் கூட்டு விளைவே இத்திருப்பத்திற்கு அடிப்படை.



# அருள்மிகு வெட்டுடையார் காளியம்மன் திருக்கோவில்

## அரியாக்குறிச்சி

சிவகெங்கை வட்டம்

இராமநாதபுரம் மாவட்டம்





பழனி அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமி
ஆலயத்தைச் சேர்ந்த மலைக் கோயில்
குடநீராட்டு விழா வெற்றிகரமாக
நடக்க எங்களது வாழ்த்துக்கள்....



**செ. அக்கினிச்சாமி**
அறங்காவலர் குழுத்தலைவர்

**P. அர்ஜுனன்**
**வயி கணபதி வேளார்**
அறங்காவலர்கள்

**P. ஸ்ரீனிவாசன்**
நிர்வாக அதிகாரி
23—8—1973

# THE TEMPLES OF LEARNING AT PALNI







Thiru. K. S. RAMAMURTI

The temples of South India have a place in the history of her social development and cultural evolution. They have, while remaining places of worship and spiritual comfort through the ages, played a part in the social and cultural life of the people by virtue of their having been great focal centres of learning and of all the popular arts. Evidence is not wanting in our ancient literatures to show that temples have functioned as asylums during times of war, famine and epidemic and also as seats of administrative and judicial business. They are also known to have housed within their walls schools and centres of higher learning and promoted every branch of learning including the great arts of sculpture, painting, music and dancing. They seem to have been too the venues for discourses and scholarly exchanges of various kinds and sometimes even arenas for literary warfares. The very layout and construction of all the big temples of the South show that they had been designed to meet all these needs of the community. In later years, however, there was a break in these traditions and temples came to stay merely as places of worship.

It is only in the recent years that there has been a revival of those traditions which made for service to the community in terms of educational upliftment and cultural advancement. This revival has received its chief impetus in the South from the efforts of the Hindu Religious and Charitable Endowments (H. R. & C. E.) Departments and Ministries which have been evincing very keen interest in the matter of utilizing temple funds for social services of lasting value, even while taking steps to regularize the administration of temples. The appearance of a number of colleges and other educational institutions in Tirupathi, Palni Guruvayur, Kalady, Udipi, Courtalam, Kuzhithurai, Rameswaram and a few other places is nothing but a reflection of this new trend which makes for progressivism in all temple and mutt administrations. Tirupathi stands foremost in this regard and Palni Devasthanam is, without doubt, its closest rival.

| Name | Designation | Period |
|---|---|---|
| 1. A. Sethurama Mudaliar | Committee | 11—2—1903 |
| 2. Kuppuswami Maniagar | | |
| 3. V. A. Venkatachalam Chettiar | | |
| K. Venkatakrishna Ayyar of Kolumam in place of Venkatachalam Chettiar | | 27—11—1911 |
| Ayyakudi Subbian Chettiar in place of Kuppuswami Maniagar | | 23—4—1914 |
| Sabapati Mudaliar | Manager | 1923 |
| **Under Madras Act II of 1927** | | |
| Arumugam Pillai, B.A., B.L. | Interim Trustee | |
| M. P. Mangala Goundar | Trustee | 22-1-1926 to 7-2-28 |
| S. Chockalingam Chettiar | ,, | 8-2-1928 to 7-12-32 resigned |
| 1. M. P. Mangala Goundar | | 14-11-28 for 5 years |
| 2. M. Sambandam Mudaliar, B.A., B.L. | Receiver | 24-7-29 to 15-5-30 resigned |
| ,, ,, | | |
| S. Ramasami Ayyar, B. A., | as Treasurer | 30-11-1926 |
| ,, | as Receiver | 12-7-1930 to 23-2-31 died |
| K. Santanam Ayyangar, B.A., B.L. | | 23-2-1931 to 3-4-31 |
| 1. M. P. Mangala Goundar | Hon. Trustee | |
| 2. V. C. Vellingiri Goundar | | 22-10-30 to 3-12-35 |
| 3. A. Sivasubrahmanya Mudaliar | as Treasurer | 3-4-31 |
| a) ,, ,, | as Manager | 26-6-31 |
| ,, ,, | as Managing Trustee | 17-12-32 to 23-2-35 |
| b) R. M. K. Velusami Pillai | Hony. Trustee | 23-5-34 to 9-1-1939 |
| c) V. Balasubramanya Mudaliar | Mg. Trustee | 23-2-35 to 17-4-1935 |
| 1. R. M. K. Velusami Pillai | Hony. Trustees | |
| 2. S. Muthusami Mudaliar B. A. | | 3-12-35 to 9-1-1939 |
| M. Sambandam Mudaliar, B. A. | Mg. Trustee | 1-6-36 to 5-3-37 |
| N. Srinivasan Pillai, B.A., B.L. | Manager | 4-3-1937 |
| 3. T. P. Venkatarangam Pillai, B. A. | Mg. Trustee | 5-3-37 to 16-9-1938 |
| L. S. Swaminatha Ayyar, B.A., B.L. | Mg. Trustee | 8-7-38 to 9-1-1939 |

Under G. O. No. 4534 P dated 19-12-1938 and B. O. No. 1268, dated 6-3-1939 the Sri Dhandayuthapaniswami Temples, Palni and the endowments attached thereto, declared, a notified Temple, subject to the provisions of Chapter VI of Madras Act II of 1927.

# SRI DHANDAYUTHAPANISWAMI DEVASTHANAM, PALNI.

**Particulars of the Board of Trustees (Past and Present)**

| | | | |
|---|---|---|---|
| 1. | Sri I. T. Obalokondama Naicken Iyen, Chairman, Board of Trustees | | 16—6—1952 ... 5 years |
| 2. | Sri V. V. C. R. Murugesa Mudaliar, | Trustee | |
| 3. | Sri S. C. Balakrishnan, M. P., | ,, | |
| 4. | Sri M. P. Mangala Gounder, M. L. A., | ,, | |
| 5. | Sri G. R. Govindarajulu Naidu, | ,, | |
| 6. | Sri V. V. C. R. Murugesa Mudaliar, | Trustee | |
| 7. | Sri A. Arunachalam Pillai, | Trustee | 19—6—1957 |
| 8. | Sri S. R. Arumugam, M. P., | | |
| 9. | Sri P. S. K. Lakshmipathi Raju, M. L. A., Chairman, Board of Trustees | | 27—6—1957 |
| 10. | Sri P. S. Srinivasan Chettiar, | Trustee | 26—6—1959 |
| 11. | Sri A. S. Manickam Pillai, | Trustee | 26—3—1959 for 5 years |
| 12. | Sri P. S. K. Lakshmipathi Raju, | Trustee | |
| 13. | Sri V. V. C. R. Murugesa Mudaliar, Chairman, Board of Trustees | | 12—7—1962 |
| 14. | Sri S. R. Arumugam, | Trustee | |
| 15. | Sri P. Mounagurusamy, | Trustee | |
| 16. | Sri C. Kulandaiammal, | Trustee | 7—3—1964 |
| 17. | Sri G. Chinnadurai, Chairman, Board of Trustees | | 22—6—1967 |
| 18. | Sri R. Kothandapani Durairaja Nadalwar, Trustee | | |
| 19. | Sri C. T. Dhandapani, M. P. | Trustee | |
| 20. | Sri Pu. Manoharan, | Trustee | 18—10—1968 |
| 21. | Srimathi Dr. Suseela Narayanasamy, | Trustee | |

# SRI DHANDAYUTHAPANISWAMI DEVASTHANAM, PALNI.

(List of Executive Officers and their periods)

| | | |
|---|---|---|
| 1. | Sri L. S. Swaminatha Iyer, B.A., B.L., | 9—1—1939 to 10—5—1940 |
| 2. | Sri J. M. Somasundaram Pillai, B.A., B.L., | 11—5—1940 to 3—11—1944 |
| 3. | Sri G. K. Bhagavathi Gounder, B.A., B.L., | 20—11—1944 to 3—5—1946 |
| 4. | Sri K. Chidambaram Pillai, B.A., B.L., | 13—6—1946 to 27—1—1950 |
| 5. | Sri M. C. Kalyanasundaram Pillai, B.A., B.L., | 28—1—1950 to 28—9—1952 |
| 6. | Sri T. H. Vivekanandam Pillai, B.A. L.T., | 29—9—1952 to 13—9—1954 |
| 7. | Sri K. V. Subbiah Pillai, B. A. | 29—9—1954 to 21—1—1958 |
| 8. | Sri R. Krishnaswami Pillai, B.A., B.L., | 21—1—1958 to 30—6—1958 |
| 9. | Sri M. Veerabahu, B.A., B.L., | 1—7—1958 to 14—11—1959 |
| 10. | Sri G. Athimoolam, B.A., B.L., | 14—11—1959 to 14—4—1960 |
| 11. | Sri C. S. Deenadayalu, B.SC., B L., | 14—4—1960 to 23—12—1961 |
| 12. | Sri R. Ramaiah Naidu, B. A. | 20—1—1962 to 19—6—1965 |
| 13. | Sri N. Sivanesan, B. A. | 19—6—1965 to 8—7—1965 |
| 14. | Sri K. K. Menon, B.A., B.L., | 8—7—1965 to 19—11—1967 |
| 15. | Sri C. S. Deenadayalu, B.SC., B L., | 19—11—1967 to 15—9—1969 |
| 16. | Sri S. Rathinam, B.A., B.T., | 19—9—1969 to 8—10—1971 |
| 17. | Sri G. Athimoolam, B.A., B.L., | 9—10—1971 to 23—9—1972 |
| 18. | Sri M. A. Murugesan, B.A., B.L., (Additional Charge) | 24—9—1972 to 15—11—1972 F. N. |
| 19. | Sri G. Athimoolam, B.A., B.L., | 15—11—1972 to 30—4—1973 |
| 20. | Sri M. A. Murugesan, B.A., B.L., (Additional Charge) | 1—5—1973 to 15—6—1973 |
| 21. | Sri V. S. Kothandapani, B.SC., B.L., | 15—6—1973 (Present Executive Officer) |

# அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில், பழனி.

## வருமானங்கள்

| பசலி. | | | ரூ. | பை. |
|---|---|---|---|---|
| 1371 | 1960—1961 | ... | 9,74,876 | 00 |
| 1372 | 1961—1962 | ... | 11,68,430 | 00 |
| 1373 | 1962—1963 | ... | 13,57,173 | 00 |
| 1374 | 1963—1964 | ... | 16,04,082 | 00 |
| 1375 | 1964—1965 | ... | 26,87,556 | 00 |
| 1376 | 1965—1966 | ... | 30,92,782 | 00 |
| 1377 | 1966—1967 | ... | 33,71,506 | 00 |
| 1378 | 1967—1968 | ... | 34,90,597 | 00 |
| 1379 | 1968—1969 | ... | 36,14,780 | 00 |
| 1380 | 1969—1970 | ... | 38,00,277 | 00 |
| 1381 | 1970—1971 | ... | 52,46,034 | 00 |
| 1382 | 1971—1972 | ... | 58,66,178 | 00 |

# பழனியாண்டவர் தரிசனம்

கலியுக வரதனைக் கண்கண்ட தெய்வமாக ஞானதண்டம் ஏந்திய அருண்மிகு தண்டாயுதபாணி சுவாமியாக முருகப்பெருமான் கோயில் கொண்டிலங்கும் பழனிமலைத் திருக்கோயில் ஏறத்தாழ 450 அடி உயரமும், 691 படிகளும் கொண்டு விளங்கும் கோலம் மிக்கதொரு குன்றின் மேலே அமைந்துள்ளது. இக்குன்றமும், கோயிலும் புலவர் பாடும் புகழ் மிக்கனவாகும். நீலமலைப் பின்னணியில் கோலமயில் வாகனன், ஞான தண்டாயுதபாணியாக நின்றருளித் தன்னை வழிபடுவோர்க்கு வரமளித்து வாழ் வருளும் வள்ளலாகத் திகழ்கின்றார். நாளும் வந்து வழிபட்டு நற்பேறடையும் பல்லாயி ரக்கணக்கான பக்தர்களில் நாமும் ஒருவராகச் சென்று அவனைக் காண்போமாக.

சண்முக நதியிலோ, சரவணப் பொய்கையிலோ புனித நீராடித் தங்கள் புறத் தையும் அகத்தையும் தூய்மை செய்துகொண்ட பக்தர்கள் ஆண்டவனைக் காணும் அவாவில், அரகரா என்னும் முழக்கம் எதிரொலிக்க மலையை நோக்கிச் செல்கின்றனர். முதலில் பாதவிநாயகரை வழிபாடு செய்துகொண்டு, மங்கம்மாள் மண்டபத்தின் வழியாகப் படியேறிச் செல்கின்றனர். பதினெட்டாம் படிக்கு மேலே சேர விநாயகரை வழிபடுகிறார்கள். இச்சேர விநாயகர்கோயில் பழமைமிக்க கோயிலாகும்.

திருக்காளத்தி மலையில் கண்ணப்பர் படிகள் ஏறிச்சென்றதை ''பேணு தத்துவங்கள் என்னும் பெருகு சோபானம்'' ஏறிச்சென்றதாகச் சேக்கிழார் சுவாமிகள் குறிப்பிடுவார். அவ்வாறே இங்கும் பெருகு தத்துவம், எனத்தக்க படிகளை, ஆண்டவன் திருநாமங்களைக் கூறிக் கடந்து செல்பவர்கள் தங்கள் உடற்சுமையும் - உளச்சுமையும் ஒருங்கே குறைய இன்பமெய்திச் செல்லக்காணலாம். அங்ஙனம் செல்பவர்கள் இடையில் குராவடி வேலரையும், இடும்பனையும் வழிபட்டுச் செல்வார்கள். தான் பெற்ற வரச் சிறப்பால், ஆண்டவருக்கு முன்னால் தனக்குப் பூசை வழிபாடு செய்யப்படும் சிறப்பினை இடும்பன் பெற்றுள்ளது குறிப்பிடத் தக்கதாகும்.

மேலும் படிகளைக் கடந்தேறிச் செல்லும்போது, யானைப்பாதை வந்து அடையு மிடத்திற்கு அருகே அரசமரத்தடியில் '' செல்வ விநாயகர் '' வீற்றிருக்கக் காணலாம். யாக குண்டம் அமைக்கப்படுங்கால் அதற்குரியமண் இவ்விநாயகர் அருகே எடுக்கப்படுவது மரபாகும். இன்னும் சில படிகளைக் கடந்தவுடன் மலை உச்சியை அடையலாம். அங்கு எத்திசை நோக்கினாலும் எழில் மிக்க இயற்கைக் காட்சிகள் கண்ணையும் கருத்தையும் கவர்வனவாயுள்ளன. இதமாக வீசுகின்ற தூய நற்காற்று நமது உடலுக்குப் புத்து ணர்ச்சி ஊட்டுகின்றது. அன்பர்கள் எழுப்பும் ஆண்டவன் திருநாமப் பேரொலி நம் உள்ளத்திற்குப் புத்துணர்ச்சி ஊட்டுகின்றது. வெளிப் பிரகாரத்தில் வலம் வரும் அடியார்கள், கிழக்குத் திசையில் விளங்கும் இடும்பன் மலையும் குளமும், பசுமை உமிழும்

எழில்மிக்க பழனங்கள் சூழ்ந்த சூழலில் இலங்கக் காணலாம். தென்புறத்தில். கோல மிக்க குறிஞ்சியாண்டவரைக்கொண்டிலங்கும், நீலமலைத்தொடரைக்காணலாம். மேற்குப் பக்கத்தில் அணி பெற்றுத்திகழும் குன்றங்களும், பழனங்களும், வையாபுரி வாவியுடன் காணப்படுகின்றன. குறிஞ்சியும் மருதமும் கூடிக்குலவிக் களிநடம் புரியும் அக்காட்சியை மாலையில் கதிரவன் மறைகின்ற வேளையில் காண்பது கண்கொள்ளாக் காட்சியாக விளங்கும். வடபால், ஆவிநன்குடியும் ஆவுடையார் கோயிலும் பிறவும் விளங்கும் பழனி நகரக் காட்சியும், முல்லை நில மாட்சியும் விளங்கக் காணலாம்.

கொடிமரத்தின் அருகு நின்று கும்பிட்டு, கோயிலுக்குள் செல்லும் அன்பர்கள் நாயக்கர் மண்டபத்தில் வீற்றிருக்கும் பாலசுப்பிரமணிய விநாயகரை (இது தல விநாயக ராகக் கருதப்படுகிறது) தரிசனம் செய்துகொண்டு, உட்பிரகாரத்தை அடைந்து வலம் வரும்போது, வடக்குப் பக்கத்தில், கோயில் கொண்டுள்ள மலைக்கொழுந்து சிவனையும், மலைக்கொழுந்து அம்மனையும் வழிபாடு செய்வர். ஆண்டவனும் அம்பிகையும் வீற்றி ருக்கும் இந்த இடமே பழனிக்குன்றின் மிகவும் உயர்ந்த இடமாகும். அப்பிரகாரத்தில் வலம் வருவோர். தெற்குப் பகுதியில் உள்ள கயிலாசநாதரையும் சண்டீசரையும் கண் டின்புறலாம். தென்மேற்கு மூலையில், பழனியாண்டவரை நிறுவி வழிபட்ட பெருஞ் சித்தர் போகருடைய சமாதி இலங்கக் காணலாம். அங்கு அவர் வழிபட்டதாகக் கருதப்படும் அன்னை புவனேசுவரித் திருவுருவமும், மந்திரச் சக்கரங்களும் மரகத லிங்க மும் வைக்கப்பெற்று வழிபாடு செய்யப்பட்டு வருவதைக் காணலாம். பின்னர் மகா மண்டபத்தின் உள்ளே செல்லும் அடியார்கள் அதன் இடப்பக்கத்தில் சிவலிங்கமும், நடராசப் பெருமானும், ஆண்டவர் பள்ளியறையும். சண்முகரும், உற்சவ மூர்த்தியாகிய சின்னக்குமரரும் இலங்கக் காணலாம். அடுத்து, மலை மருந்தாய் விளங்கும், ஞான தண்டபாணியின் திருக்கோலம் கண்டு தொழுது பிறவிப்பயனை அடையலாம். அரசனாக, ஆண்டியாக, வேலனாக, வேடனாக, விருத்தனாக, குமரனாகக் காணும் எந்தக் கோலத் திலும் தம்மை வழிபட வந்திருக்கும் அடியார்களை, 'என்று வந்தாய்' என்றும் திருக் குறிப்பில் புன்னகையோடு நின்றருளும் காட்சி, மண்ணிற் பிறந்தார் காணவேண்டிய தொரு அருட்காட்சியாகும்.

ஆயிரங்கோடி காமர் அழகெல்லாம் திரண்டொன்றாகி இலங்கும் அவ்வருட் காட்சியினை, ஐந்து பேரறிவும் கண்களே கொள்ள, அளப்பரும் கரணங்கள் நான்கும் சிந்தையேயாக, குணமொரு மூன்றும் திருந்து சாத்துவிகமேயாகக் காணும் அடியார்கள் அடையும் ஆனந்தத்திற்கு அளவேயில்லை. அவர்கள் மனச்சுமை மறைகிறது. புத் துணர்ச்சியும், புதுப்பொலிவும் அடையப் பெறுகிறார்கள். பேரின்பக் காட்சியிலே திளைக் கும் அடியார்கள் புதிய நம்பிக்கையோடும், தெளிவோடும், ஆண்டவன் திருநாமப் பேரொலியில் மெய்ம்மறந்து திரும்புகின்றனர்.

மாலையில் தங்க ரதத்தில் ஆண்டவரைக் காண்பது மற்றுமொரு பெறலரும் பேறாகும். தங்க மயில் ஏறி உள் பிரகாரத்தில் வலம் வந்து ஆண்டவர் சின்னக்குமரர் தங்கத்தேர் ஏறி வெளிப்பிரகாரத்தில் வலம் வரும் திருக்காட்சி கண்பெற்றோர் காண வேண்டிய அருட்காட்சியாகும். வண்ண விளக்குகள் ஒளி வீச, நம் எண்ண அலைகள் செருக்கடங்க, தெய்வத் தமிழ் இசை முழங்க ஐயன் வரும் அழகுக் காட்சியில், நெஞ்சக் கனகல்லும் நெகிழ்ந்துருகக் காணலாம்!

'உருவாய் அருவாய் உளதாய் இலதாய்
மருவாய் மலராய் மணியாய் ஒளியாய்க்
கருவாய் உயிராய்க் கதியாய் விதியாய்
குருவாய் வருவாய் அருள்வாய் குகனே.'

# அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில், பழனி.

## கடந்த பன்னிரண்டு ஆண்டுகளில் இத்திருக்கோயிலில் நடைபெற்ற

# திருப்பணிகள்



அருள்மிகு தண்டாயுதபாணிசுவாமி திருக்கோயில், எல்லையில்லாப் பரம்பொருளின் எல்லையற்ற கருணைத் திறத்தால், பல்லாற்றானும் சிறந்து விளங்குவது தமிழ் கூறும் நல்லுலகம் கண்டறிந்த உண்மை. ஒரு திருக்கோயில் வெறும் சமயச் சடங்குகளின் கூடமாக மாத்திரம் அமைவது பெருஞ்சிறப்பன்று. இத்திருக்கோயில் நாளும் நற்றமிழ் பரப்பும் தமிழ்க்கல்லூரி, கலைக்கல்லூரி, தன்னுடம்பில் பாதியைப் பெண்ணுக்களித்த பரமன் கருணைக்கிணங்க பெண்கள் கல்லூரி, 'ஏழிசையாய் இசைப் பயனாய்'' இறைவன் இயங்குவதன் பெருமையை உணர்த்த, நாதஸ்வரக் கல்லூரி, முழுவாழ்விழந்த ஊமையர், செவிடர் ஆகியோருக்குப் பள்ளி, முதியோர் இல்லம் இன்னோரன்ன முயற்சிகளால் விரைவில் 'பழனிப் பல்கலைக் கழகம்' உருவாக்கும் எல்லையை நோக்கிக் களிறு போல் பிடுநடையிட்டுத் திகழ்கிறது. பழனியம்பகுதியில் குன்றின் மேலிட்ட தீபமாகத் திகழும் குன்றுதோறாடும் குமரன் திருக்கோயிலில் 1960-ல் ஒரு திருக்குடமுழுக்கு விழா நடந்தது. இப்பொழுது 12 ஆண்டுகளுக்குப் பின்னர் 1973-ல் ஒரு திருக்குடமுழுக்கு விழா நடைபெற உள்ளது.

இந்தப் பன்னிரண்டு ஆண்டுகளில் இத்திருக்கோயில் ஆற்றிய நற்பணிகள், சமயப் பணிகள் ஏராளம். அத்துடன் பல துறைகளில் நிறைவேற்றப்பட்ட திருப்பணிகள், அபிவிருத்தி வேலைகள் ஆகியவற்றின் பட்டியல் இங்கே தரப்பட்டுள்ளது.

தங்களது சொல்லாலும், செயலாலும், நினைவாலும், பழனிப் பெருமானை நினைப்பவர்கள், அவனது திருக்கோயில் உண்டியலில் தங்களது நிதியினைச் சேர்த்தவர்கள் ஆகியோர் அந்தப்பணம் செலவழிந்த நல்லவழி வகைகளை அறிய வேண்டும் என்ற ஆசையில் இத்திருக்கோயில் வெளியிடும் திருக்குட நன்னீராட்டு விழா மலரில் இத்திருக்கோயில் ஆற்றிய பணிகளின் பட்டியலைத் தருகின்றோம்.

அனைவரும் படித்து மகிழ்வதுடன் ''வாழ்வு சிறிது, வளர்கலை பெரிது'' என்ற ஆன்றோர் உரைக்கிணங்க, 'நாம் சென்று விடுவோம், ஆனால் நாம் செய்த நற்பணிகள் நிற்கும்' என்ற ஆவலோடு செயல்படும் எங்களுக்கு இன்னும் பல மேலான அறிவுரைகளை அனுப்பிப் பழனிப்பதி சிறக்கவும் உதவ வேண்டுகிறேன்.

**வி. சௌ. கோதண்டபாணி**
துணை ஆணையர் / நிர்வாக அதிகாரி

# அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில், பழனி.

## 1368-ம் பசலியில் (1957–1958) நடைபெற்ற திருப்பணிகள் விவரம்

1. தேவஸ்தான ஏழைகள் விடுதியில் உணவுக்கூடம் கட்டப்பட்டது
2. மலைக்கோவிலில் புதிதாக அலுவலக அறைக் கட்டிடம்
3. ஏழைகள் விடுதியில் கட்டிடங்கள் அபிவிருத்தி வேலை
4. சரவணப்பொய்கை குளிக்குமிடம் அபிவிருத்தி வேலை
5. மலைக்கோயில் வெளிப்பிரகாரத்தில் வடபுறம் புதிய மண்டபம் கட்டும் வேலை
6. மலைக்கோவில் யானைப் பாதையில், பக்த ஜனங்கள் தங்குவதற்குப் புதிதாக மண்டபம் கட்டியது
7. இராமகிருஷ்ண ஹாஸ்டல் கட்டிடம் அபிவிருத்தி
8. மலைக்கோயில் தெற்கு வெளிப்பிரகாரத்தில் புதிதாக மண்டபம் கட்டியது
9. அடிவாரத்தில் உள்ள மீனாட்சியம்மனுக்கும், சுவாமிக்கும் புதிதாக விமானம் கட்டப்பட்டது
10. மலைக்கோயில் தெற்கு வெளிப்பிரகாரத்தில் கைப்பிடிச் சுவர் உயர்த்திக் கட்டியது
11. வடக்கு கிரிவீதியில் உள்ள துர்க்கையம்மன் கோயிலின் முன் மண்டபம் கட்டப்பட்டது
12. மலையடிவாரத்தில் புதிதாக மூன்று கடைகள் கட்டப்பட்டது
13. மலைக்கோயில் மகா மண்டபத்தில் புதிய கல் தளவரிசை போடப்பட்டது
14. மலைக்கோயில் கர்ப்பக்கிரஹ கோபுரம், விமானம் புதுப்பித்தல்
15. யானைப் பாதையில் இடும்பர் கோவிலுக்கு மேல் புதியதாக மண்டபம் கட்டப்பட்டது
16. பக்த ஜனங்களின் சௌகரியத்திற்காக யானைப் பாதையில் கைப்பிடிச்சுவர் கட்டப்பட்டது
17. அபரஞ்சி விநாயகர் கோயிலில் புதிதாகக் கர்ப்பக்கிரஹ விமானம் புதுப்பித்தல்
18. மலைக்கோயிலில் உள்ள போகர் சந்நிதி அபிவிருத்தி வேலைகள்
19. ஸ்ரீ பெரியநாயகியம்மன் கோயிலில் வாகன மண்டபம் கட்டும் வேலை
20. ஸ்ரீ பெரியநாயகியம்மன் கோயிலில் தானியக் களஞ்சியம் கட்டும் வேலை
21. மலைக்கோயிலில் ஷண்முகர், பள்ளியறை உற்சவர் சந்நிதிகளின் மேல் புதிய விமானம் கட்டும் வேலை

## 1939-ம் பசலியில் (1958–1959) நடைபெற்ற திருப்பணிகள் விவரம்

1. மலைக்கோயில் ராஜகோபுரம் புதுப்பித்தது
2. மலைக்கோயில் சர்ப்ப விநாயகர் கோயில் ஒரு நிலை விமானம் கட்டியது
3. மலைக்கோயில் மங்கம்மாள் மண்டபம் அருகிலுள்ள மயில் மண்டபம் ஒரு நிலை விமானம் கட்டியது
4. வையாபுரித்துறை கோயில் ஒரு நிலை விமானம் கட்டியது

5. மலைக்கோயில் கும்பினி வேலாயுதர் கோயில் ஒரு நிலை விமானம் கட்டியது
6. மலைக்கோயில் குராவடி வேலவர் கோயில் ஒரு நிலை விமானம் கட்டியது
7. மலைக்கோயில் வடக்கு வெளிப்பிரகாரம் மயில் மண்டபம் ஒரு நிலை விமானம் கட்டியது
8. மலைக்கோயிலில் சுவாமி சந்நிதி மயில் மண்டபம் ஒருநிலை விமானம் கட்டியது
9. கிழக்கு வெளிப் பிரகாரம் மயில் மண்டபம் ஒருநிலை விமானம் கட்டியது
10. இடும்பன் கோயில் இரண்டுநிலை விமானம் கட்டியது
11. சுப்பிரமணிய விநாயகர் கோயில் விமானம் புதுப்பித்தது
12. அடிவாரம் மீனாட்சியம்மன் கோயில் மண்டபத்தின்மேல் மீனாட்சி கல்யாணம் சுதை வேலைகளும், கல்யாண திருவாச்சி மாடமும் கட்டியது
13. மலைக்கோயில் நடராஜர் மண்டபம் கட்டியது
14. மலைக்கோயில் யானைப்பாதை கீழ்ப் பாகத்தில் கைப்பிடிச்சுவர் கட்டியது
15. மலைக்கோயில் யானைப்பாதை மேல்பாகத்தில் கைப்பிடிச்சுவர் கட்டியது
16. கீழ்த்திசைக் கல்லூரி கட்டிடத்தில் ஒரு ஹால் கட்டியது
17. மலைக்கோயில் மகாமண்டபத்திலிருக்கும் நடராஜ விக்கிரகத்துடன் மாணிக்க வாசகர், ஷை நடராஜருக்கு பிரபாவளி, திருவாவினன்குடிக் கோயிலில் இருக்கும் சிவலிங்கத்திற்கு போகசக்தி விக்கிரகம், ஊர்க்கோயிலுக்குச் சோமாஸ்கந்தர் விக்ரகம், அம்பாள், ஸ்கந்தர், சுவாமி பிரபாவளி உள்பட தாமிரத்தால் செய்யும் வேலை.
18. தேவஸ்தான சத்திரத்திலிருக்கும் பொது விடுதிக்குப் போகும் பாதையில் காம்பவுண்டு சுவர் கட்டுவதும், இதர வேலைகளும்
19. பழனி ஸ்ரீ லெட்சுமிநாராயணப் பெருமாள் கோயில் சொர்க்கவாசல் கதவு செய்தது
20. தேவஸ்தான ஏழை விடுதியில் காம்பவுண்டு சுவரும், மேடையும் கட்டியது
21. கிரி வீதியிலிருக்கும் அழகநாச்சியம்மன் கோயிலில் குளிக்கும் அறையும் நீர்த்தேக்கத் தொட்டியும் கட்டியது
22. கிரிவீதியிலிருக்கும் நாகல் நாயக்கன் தெப்பக்குளத்தில் குளிக்கும் அறையும் நீர்த்தேக்கத் தொட்டியும் கட்டியது
23. மேற்கு கிரிவீதியிலிருக்கும் கம்பிளியான் செட்டி தோட்டத்தில் குளிக்கும் அறையும் நீர்த்தேக்கத் தொட்டியும் கட்டியது

## 1370-ம் பசலியில் (1959–60) நடைபெற்ற திருப்பணிகள் விவரம்

1. பெரியாவுடையார் கோவில் அபிவிருத்தி செய்தது
2. கீழ்திசைக் கலைக்கல்லூரிக்காக நீர்த்தேக்கத் தொட்டி கட்டியது
3. .. கலைக்கல்லூரியில் கக்கூஸ், குளிக்கும் அறை கட்டியது
4. வடக்கு கிரிவீதியில் யாத்திரீகர் விடுதி ஒன்று கட்டியது
5. மேற்கு கிரிவீதியில் யாத்திரீகர் விடுதி ஒன்று கட்டியது
6. வடக்கு கிரிவீதியில் தேவார பாடசாலைக்கு ஒரு கட்டிடம் கட்டியது

7. மலைக்கோயில் நடராஜர் கோயிலுக்குச் சபை விமானம் கட்டியது
8. ,, கிழக்கு வெளிப்பிரகாரத்தில் தளம் போட்டது
9. வடக்கு கிரிவீதி யாத்திரீகர் விடுதிக்கு அருகடைச்சுவர் கட்டியது
10. மலைக்கோயில் சோடா ஷாப் கட்டியது
11. வடக்கு கிரிவீதியில் யாத்திரீகர் விடுதிக்குச் குறுக்குச் சுவர் கட்டியது
12. தேவாரப் பாடசாலைக்கு சாப்பாட்டு அறை (kitchen) கட்டியது
13. அடிவாரம் பாதவிநாயகர் கோயில் அருகில் ஒருகல் தளவரிசை போட்டது
14. மேற்கு கிரிவீதி துர்க்கையம்மன் கோயிலுக்கு சிமெண்ட்ஷீட் கொட்டகை போட்டது

## 1371-ம் பசலியில் (1960–61) நடைபெற்ற திருப்பணிகள் விவரம்

1. பள்ளியறைத் தோட்டம் – தண்டபாணி நிலையத்தில் முதல் வகுப்பு அறைகள் கட்டியது
2. தேவஸ்தான அலுவலகக் கட்டிடத்திற்குப் பின்புறம் சுற்றுச்சுவர் கட்டியது
3. பழனியாண்டவர் கீழ்த்திசைப் பண்பாட்டுக் கல்லூரி ஹாஸ்டல் கட்டியது
4. ஷை குளிக்கும் அறை வகையறு கட்டியது
5. ஏழை விடுதி ஸ்டோர் ரூம் கட்டியது
6. மலைக்கோயில் அபிஷேகக்காரர்கள் செல்லும் ஒருவழிப்பாதை அமைத்தது
7. ,, யானைப் பாதையில் புராணச் சிற்பங்கள் செய்தது
8. ,, வடக்கு வாசல் அமைத்தது
9. ,, மணி மண்டபம் கட்டியது
10. பாலசமுத்திரம் பெருமாள் கோயில் தளவரிசை அமைத்தது
11. தெற்குக் கிரிவீதியிலுள்ள துர்க்கையம்மன் கோயில் மடப்பள்ளி கட்டியது

## 1372-ம் பசலியில் (1961–62) நடைபெற்ற திருப்பணிகள் விவரம்

1. ஸ்ரீ பழனியாண்டவர் கீழ்த்திசைப் பண்பாட்டுக் கல்லூரி ஹாஸ்டல் கட்டியது
2. மலைக்கோயில் யானைப் பாதையில் புராண சிற்பங்கள் செய்தது
3. ஏழை விடுதி சாலை அமைத்தது
4. பழனி டவுன் ஸ்ரீ லட்சுமிநாராயணப் பெருமாள் கோயில் பிரகாரம் கல் தளவரிசை அமைத்தது
5. பாலசமுத்திரம் பெருமாள் கோயில் பிரகாரம் கல் தளவரிசை அமைத்தது
6. மலை அடிவாரம் – கிரிவீதி – கல்பரத்தி சாலை அமைத்தது
7. தேவஸ்தான அலுவலகத்திற்குப் பின்புறம் கிட்டங்கி கட்டியது
8. கம்பளியான் செட்டி தோட்டத்தில் மாட்டுப்பெட்டி கட்டியது

## 1373-ம் பசலியில் (1962–63) நடைபெற்ற திருப்பணிகள் விவரம்

1. சிவகிரிப்பட்டியில் புகுமுக வகுப்புக் கட்டிடம் கட்டியது
2. தண்டபாணி நிலையத்தில் மூன்றும் வகுப்பறைகள் கட்டியது
3. ,, ,, இரண்டாம் வகுப்பறைகள் கட்டியது
4. ,, ,, நூல் நிலையம் கட்டியது

5. இந்தியப் பண்பாட்டுக் கல்லூரியில் சமையல் அறை, சாப்பாட்டு விடுதி கட்டியது
6. டவுன் ஸ்ரீ லக்ஷ்மிநாராயணப் பெருமாள் கோயில் பழுதடைந்த மேல் தளவரிசை புதுப்பித்தது
7. டவுன் ஸ்ரீ லக்ஷ்மிநாராயணப் பெருமாள் கோயில் மூன்றுநிலை விமானம் புதுப்பித்தது
8. தேவஸ்தானச் சிப்பந்திகளுக்குக் குடியிருப்பு மனை கட்டியது
9. திருவாவினன்குடித் திருப்பணி செய்தது
10. ஸ்ரீ பெரியாவுடையார் கோயிலில் கல்யாண மண்டபம் கட்டியது
11. டவுன் ஸ்ரீ மாரியம்மன் கோயிலுக்குக் கல் தளவரிசை அமைத்தது

## 1374-ம் பசலியில் (1963–64) நடைபெற்ற திருப்பணிகள் விவரம்

1. திருவாவினன்குடித் திருப்பணி
2. மலைக்கோயிலுக்கு மின்சார ரயில் அமைத்தது
3. ஸ்ரீ பெரியாவுடையார் கோயில் செல்லும் சாலை
4. ஸ்ரீ பெரியாவுடையார் கோயிலில் கல்யாண மண்டபம்
5. மலைக்கோயில் யானைப்பாதை செங்கல் பரத்தியது
6. ஷை யானைப்பாதை அருகடைச்சுவர் கட்டியது
7. ஷை யானைப்பாதையில் மண்டபம் கட்டியது
8. மலை வெளிப்பிரகாரம் உண்டியல், மண்டபம், விமானம்
9. கீரனூர் வாகீஸ்வரர் கோயில் சுற்றுச்சுவர்
10. சிவகிரிப்பட்டியில் ஸ்ரீ பழனியாண்டவர் கலைக்கல்லூரி
11. ஷை ஹாஸ்டல் கட்டிடம்
12. ஷை கிச்சன், டைனிங் ஹால் கட்டிடம்
13. கல்லூரியைச் சுற்றிக் கல்தூண்நட்டு முள்கம்பி வேலிபோட
14. தண்டபாணி நிலையம், கேண்டீன் கட்டிடம்
15. தண்டபாணி நிலையம் கார்ஷெட்
16. தேவஸ்தான சிப்பந்திகள் குடியிருப்பு மனை
17. அடிவாரத்தில் சிறுகுடில் திட்ட கட்டிடங்கள் (உபயம்)

## 1375-ம் பசலியில் (1964–1965) நடைபெற்ற திருப்பணி வேலைகள் விவரம்

1. திருவாவினன்குடிக் கோயில் திருப்பணி
2. மலைக்கோயில் மின் இழுவை ரயில்
3. ஷை தெற்கு வெளிப்பிரகாரத்தில் மண்டபம் (உபயம்)
4. ஸ்ரீ பழனியாண்டவர் கலைக்கல்லூரி இடத்தில் மாணவர்கள் தங்கும் விடுதி
5. ,, சாலை அமைக்க
6. ,, கட்டிடத்தைச் சுற்றி சிமெண்ட் காங்கிரீட் தளவரிசை முதலியவைகள்
7. ,, கிணறு ஆழப்படுத்தியது

8. கல்லூரி காம்பவுண்டிற்குள் மாணவர் துப்பாக்கி சுடும் பயிற்சி மைதானம் அமைத்தது
9. கல்லூரிகளைச் சுற்றிக் கல்தூண் கம்பி வேலி
10. தேவஸ்தான சிப்பந்திகள் குடியிருப்பு வீடுகள்
11. துர்க்கையம்மன் நந்தவனத்தில் மாட்டுப்பட்டி
12. அடிவாரம் குறவன் தெப்பம் அபிவிருத்தி
13. வடக்குகிரி-சிறுகுடில் திட்டத்தில் இரு கட்டிடங்கள் கட்டியது

## 1376-ம் பசலியில் (1965–1966) நடைபெற்ற திருப்பணிகள் விவரம்

1. ஸ்ரீ பழனியாண்டவர் கலைக்கல்லூரிக்கு ஹாஸ்டல் கட்டியது
2. ,, ,, கிணறு ஆழப்படுத்தியது
3. ,, ,, அதிகப்படியான வகுப்பறைகள் கட்டியது
4. ,, இந்தியப் பண்பாட்டுக் கல்லூரி விடுதி கட்டுதல்
5. திருவாவினன்குடிக் கோயில் திருப்பணி
6. வடக்கு கிரி சிறுகுடில் திட்டத்தில் எட்டு கட்டிடங்கள் கட்டியது
7. ,, கட்டிடங்கள் வடபுறம் சுற்றுச்சுவர் கட்டியது
8. ,, கினிசெயின் லிங்க் அமைத்தது
9. மலையில் ஸ்ரீ கந்தலீலா புராண வரைபடம் தீட்டியது
10. மலையில் வின்ஞ்ச் நிலையத்தில் சுதை வேலை செய்தது
11. மலையில் திருமால் பத்திக்கு இரும்புக்கம்பி கிராதி போட்டது
12. கிரிவீதி ரோட்டிலிருந்து அன்பு இல்லத்திற்கு சாலை அமைத்தது
13. திருவாவினன்குடியில் எட்டுப்பட்டை தூண்கள் அமைத்தது
14. அடிவாரம் குறவன் தெப்பக்குளத்திற்கு அருகில் முடிக்காணிக்கை ஷெட் கட்டியது

## 1377-ம் பசலியில் (1966-67) நடைபெற்ற திருப்பணிகள் விவரம்

1. ஸ்ரீ பழனியாண்டவர் கலைக்கல்லூரிக்குத் தங்கும் விடுதி கட்டியது
2 ,, ,, அதிகப்படியான வகுப்பு அறைகள் கட்டியது
3. ,, இந்தியப் பண்பாட்டுக் கல்லூரிக்கு விடுதி கட்டியது
4. வடக்குக்கிரி-சிறுகுடில் கட்டிடங்களின் வடபுறம் சுற்றுச்சுவர் கட்டியது
5. ,, ,, ,, 4 கட்டிடங்கள் கட்டியது
6. கிரிவீதி சிமெண்ட் கான்கிரீட் சாலை அமைத்தது
7. திருவாவினன் குடியில் அருணகிரிநாதர், நக்கீரர் கோயில்கள் அமைத்தது
8. தண்டபாணி நிலையத்தில் சுவாமி காட்டேஜ் கட்டியது

## 1378-ம் பசலியில் (1967-68) நடைபெற்ற திருப்பணிகள் விவரம்

1. ஸ்ரீ பழனியாண்டவர் கலைக்கல்லூரிக்கு அதிகப்படியான வகுப்பு அறைகள் கட்டியது
2. கிரிவீதியில் சிமெண்ட் கான்கிரீட் சாலை அமைத்தது

3. சிப்பந்திகள் குடியிருப்பு கட்டிடம் கட்டியது

4. மலைக்கோயில் வடக்கு வெளிப்பிரகாரத்தில் மண்டபம் கட்டியது

5. சிறுகுடில் திட்டத்தின் கீழ்க் கட்டிடம் ஒன்று கட்டியது

6. மேற்குகிரிவீதி யாத்திரீகர் கொட்டகையை முடி தரவாரியாகப் பிரித்து பதப் படுத்தும் வேலை செய்ய அடைப்பு அடைத்தல்

7. முடிக்காணிக்கை கொட்டகைக்குக் குளிக்குமிடமும், கக்கூஸும் கட்டியது

## 1379-ம் பசலியில் [1968—69] நடைபெற்ற திருப்பணிகள் விவரம்

1. கிரிவீதியில் சிமெண்ட் கான்கிரீட் போட்டது
2. மலைக்கோயில் படியில் கல்கி மண்டபத்திலிருந்து ஆரியர் மண்டபம் வரை விரிவு படுத்திப் புதிதாக பாதை அமைத்தது
3. கிரிவீதியில் தாழ்வான இடங்களில் அருகடை சுவர்கட்டி மண் நிரப்பியது
4. வடக்கு கிரிவீதி யாத்ரீகர் விடுதியில் தென்புறம் படிகள் கட்டி புல் வெளிகளால் தளம் அமைத்தது
5. அடிவாரம் மங்கம்மாள் மண்டபத்துக்கும் ஆரியர் மண்டபத்திற்கும் இடையில் கியூ அமைக்கும் வேலை
6. ஸ்ரீ பழனியாண்டவர் பண்பாட்டுக் கல்லூரி தங்கும் விடுதிக்குச் சாலை அமைத்தது
7. ஸ்ரீ பெரியாவுடையார் கோயிலில் கடை கட்டியது
8. ஸ்ரீ பெரியாவுடையார் கோயிலில் கக்கூஸ் கட்டியது

## 1380-ம் பசலியில் [1969—1970] நடைபெற்ற திருப்பணிகள் விவரம்

1. மலைக்கோயில் படியில் கல்கி மண்டபத்திலிருந்து ஆரியர் மண்டபம் வரை புதிதாகப் பாதை அமைக்கும் வேலை
2. நாதசுரக் கல்லூரிக்கு செயின் லிங் வேலி அமைத்தது
3. கல்லூரிகளுக்கு குடிநீர் சப்ளை செய்ய நகராட்சி நீர்த்தேக்கத் தொட்டியிலிருந்து குழாய் அமைக்கும் வேலை
4. மலைக்கோயில் தெற்கு வெளிப்பிரகாரத்தில் மண்டபம் கட்டியது (உபயம்)
5. மேற்கு கிரி வீதியிலிருக்கும் மகளிர் கல்லூரிக்குச் சுற்றுச்சுவர் கட்டியது
6. கிரிவீதி மூலவாய்க்கால் முதல் பவர் ஹவுஸ் வரை செயின் லிங்க் வேலி அமைத்தது
7. ஸ்ரீ பழனியாண்டவர் கலைக்கல்லூரிக்கு விளையாட்டு மைதானம் அமைத்தது
8. கல்லூரிகளின் உபயோகத்திற்கு நகராட்சியிலிருந்து சப்ளை செய்யப்படும் குடிநீர் நிறுத்தி வைக்க நீர்த்தேக்கத் தொட்டி கட்டும் வேலை
9. ஸ்ரீ பெரியநாயகி அம்மன் கோவில் ஸ்ரீ நடராஜர் கோவில் விமானம் புதுப்பித்தது
10. ,, ஸ்ரீ சோமாஸ்கந்தர் விமானம் புதுப்பித்தது
11. ,, நவரங்க மண்டபம் சைடுமுன்பத்தி சுதைவேலை செய்தது
12. ,, மூன்று நிலை விமானம் புதுப்பிக்கும் வேலை
13. ,, ஸ்ரீ கைலாசநாதர் விமானம் புதுப்பித்தது

14. ஸ்ரீ பெரியநாயகி அம்மன் யாகசாலை விமானம் புதுப்பித்தது

15. ,, நவரங்க மண்டபத்தில் சாலாஹாரம் அமைத்தது

16. ,, ஸ்ரீ முத்துக்குமாரசாமி முன் சாலாஹாரம் அமைத்தது

17. ,, ஸ்ரீ கைலாசநாதர் கோவில் முகப்பில் சாலாஹாரம் அமைத்தது

18. ,, ஸ்ரீ சூரியன் கோவிலுக்குப் புதிதாக விமானம் கட்டியது

19. ,, ஸ்ரீ சண்டிகேஸ்வரர் கோவிலுக்கு விமானம் கட்டியது

20. ,, ஸ்ரீ சோமாஸ்கந்தர் முகப்பில் பிரபாவளி அமைத்தது

21. ,, ஸ்ரீ அம்பாள் சன்னதி சாலாஹாரம் அமைத்தது

22. மகளிர் செந்தமிழ்க் கல்லூரி நூல் நிலையத்தின் உபயோகத்திற்கு இரும்பு பீரோ சப்ளை செய்தது

23. மகளிர் கலைக்கல்லூரி நூல் நிலையம் உபயோகத்திற்கு இரும்பு பீரோ வாங்கியது.

## 1381-ம் பசலியில் [1790—1971] நடைபெற்ற திருப்பணிகள் விவரம்

1. கிழக்கு பிரகாரம் விரிவு படுத்தியது
2. மேநிலை நீர்த் தேக்கத் தொட்டி கட்டியது
3. விருந்தினர் மாளிகை & தங்க ரதம் நிற்க கட்டிடம் கட்டியது
4. தெற்கு வெளிப் பிரகாரம் விரிவு படுத்தியது
5. பூந்தோட்டங்கள் அழகுபட அமைத்தது
6. யானைப் பாதையில் கல் தளவரிசை அமைத்தது

## 1382-ம் பசலியில் (1971-1972) நடைபெற்ற திருப்பணிகள் விவரம்

மலைக்கோயில் திருப்பணி வேலைகள் :—

1. கிழக்குப் பிரகாரம் விரிவு படுத்தியது
2. மேல்நிலை நீர்த்தேக்கத் தொட்டி கட்டியது
3. விருந்தினர் மாளிகை & தங்க ரதம் நிற்க கட்டிடம் கட்டியது
4. தெற்கு வெளிப்பிரகாரம் விரிவு படுத்தியது
5. பூந்தோட்டங்கள் அழகுபட அமைத்தது
6. யானைப் பாதையில் கல் தளவரிசை போட்டது
7. புதிய பழைய யானைப்பாதை சந்திப்பிற்கருகில் படிகள் கட்டி தடுப்புச் சுவர் அமைத்தது

   ஏ) மலைக்கோயில் யானைப்பாதையில் உபயமாக மண்டபங்கள் கட்டியது





# வாரியார் விருந்து

"திருவடியும் தண்டையும் சிலம்பும் சிலம்பூடுருவப்
பொருவடிவேலும் கடம்பும் தடம்புயம் ஆறிரண்டும்
மருவடிவான வதனங்களாறும் மலர்க் கண்களும்
குருவடிவாய் வந்துஎன் உள்ளம்குளிரக் குதிகொண்டதே"

எல்லாம் வல்ல ஞானதண்டாயுதபாணியினுடைய மகா கும்பாபிஷேக விழா இங்கே நிகழ்ந்து கொண்டிருக்கிறது. அதிலே இந்தக் கலைஞர்களைப் பாராட்ட வேண்டுமென்ற ஒரு எண்ணம் எழுந்தது. இப்படிப் பாரம்பரியமாகப் பாராட்டுகிற வழக்கம் இந்த நாட்டிலே உண்டு. தமிழுக்கே தன்னை அர்ப்பணம் செய்து கொண்டார் ஞான சம்பந்தப் பெருமானார். அவருக்குச் சிவ பெருமான் விருது கொடுத்தாராம். "உபய குல தீப துங்க விருது கவிராஜ சிங்க உரை புகலி ஊரில் அன்று வருவோனே" என்பது பழனி மலைத்திருப்புகழ். "கருவிலுருவாகி" என்று அந்தப் பாட்டு ஆரம்பம். உபய குலம் என்றால் இரண்டு குலம். தாய்க்குலம் ஒன்று, தந்தைக் குலம் ஒன்று. உபயகுல தீப துங்க விருது கவிராஜ சிங்கம். அவர் அவதாரம் பண்ணினது சீர்காழி, உரைபுகலி ஊரில் அன்று வருவோனே. இப்படி சிவ பெருமானே விருது கொடுத்தாராம் ஞான சம்பந்தருக்கு. அப்பா செய்த வேலையைப் பிள்ளையும் செய்ய வேண்டியதுதானே.

பழனியாண்டவன் இந்த விழாவிலே எல்லோருடைய மனதையும் இழுக்கின்றான். அதனாலே அவனுக்கு மனோகரன் என்று பெயர். முருகப் பெருமானுக்கு மனோகரன் என்று ஒரு பெயர் உண்டு. என்ன புதிதாகச் சொல்கிறீர்களே என்று யாரும் கேட்காதீர்கள். அந்தப் பாடலைச் சொன்னால் நீங்கள் ஒப்புக்கொள்வீர்கள். பழனி மலைத் திருப்புகழ். "இன்சொல் விசாகா கிருபாகர, இன்சொல் விசாகா கிருபாகர செந்திலில் வாழ்வாசியே அடியேன்தனை ஈடேற வாழ்வருள் பெருமானே" என்று ஒரு திருப்புகழ். அதிலே சொல்லுகின்றார் "பம்பரணி போல ஆடிய சங்கரி வேதாள நாயகி பண்டு சுராபான

சூரனோடு எதிர்போர் கண்டு எம் புதல்வா வாழி வாழி எனும்படி வீறான வேல்தர என்றும் உளானே மனோகர!'' திருப்புகழிலே வருகிறது. அந்த அறங்காவலர் குழுத் தலைவர் அவர்களும் மற்ற அறங்காவலர்களும், இங்கே முருகப்பெருமான் கோதண்டத்தைப் பாணியிலே வைத்துக் கொண்டிருக்கிறாராம். முருகனுக்கு கோதண்டபாணி என்று ஒரு பெயர். நான் சொன்னால் எதிர் நீச்சல் போடுகிறமாதிரி இருக்கும். கோதண்டபாணி என்றால் ராமர் தானே ஐயா. முருகனுக்கும் கோதண்டம் உண்டு. பாட்டு சொல்லுகின்றேன். "சூலம் வாள் தண்டு செஞ்சேவல் கோதண்டமும் சூடு தோளும் தடம் திருமார்பும் காலனார்'' என்ற திருப்புகழில் இந்தப் பாட்டு இருக்கிறது, எடுத்துப் பார்த்துக் கொள்ளுங்கள். சூலம், வாள், தண்டு, செஞ்சேவல் (சேவல்) கோதண்டமும் சூடு தோளும் தடம் திருமார்பும் என்பது அருணகிரியார் வாக்கு. ராமச்சந்திரமூர்த்தி தான் கோதண்டம் வைத்துக் கொண்டு இருக்கிறார் என்று நினைக்காதீர்கள். சுப்ரமண்ய சுவாமி கோதண்டம் வைத்துக் கொண்டு இருக்கிறார். சிறந்த அன்பர்கள் எல்லோரும் நீண்டகாலமாக இந்த நாட்டுக்குச் சேவை செய்கின்ற சிலரைப் பாராட்ட வேண்டுமென்று எண்ணினார்கள். அதனாலே மற்றவர்களுக்கும், நாமும் தொண்டு செய்தால் நம்மையும் பாராட்டுவார்கள் போல இருக்கிறதே என்ற ஒரு உணர்ச்சி உண்டாகும். அப்பொழுது அடுத்த விழாவிலே நமக்கும் பாராட்டு கிடைக்கலாம். உண்மையாகத் தொண்டு செய்யவேண்டும். போலித்தனமாய் இருக்கக்கூடாது என்ற எண்ணம் எழும் இதனாலே. ஆகவே இந்த நல்ல முயற்சி உணர்ச்சி உடையது. அவர்களா எண்ணினார்கள்? அவர்களுடைய இதயத்திலே கோயில் கொண்டு இருக்கிற எம்பெருமான் எண்ணினான். ஒவ்வொருவரும் எண்ணும் எண்ணங்கள் எல்லாம் ஆண்டவனுடைய எண்ணம் தானே. அதை அப்பர் பெருமான் சொன்னார். "வாயானை மனத்தானை மனத்துள் நின்ற கருத்தானை கருத்தறிந்து முடிப்பான் தன்னை, மனத்தகத்தான் தலை மேலான் வாக்கில் உள்ளான்." அற்புதமான வாக்கு அப்பர் வாக்கு. நாம் எண்ணுகிற எண்ணங்கள் எல்லாம் எம்பெருமானுடைய எண்ணங்கள். நாமெல்லாம் கருவிகள் தானே. நம்மை கருவியாகக் கொண்டு ஆண்டவன் நடத்துகிறான்.

நான் நூற்றுக்கணக்கான கும்பாபிஷேகங்கள் பார்த்தவன். இந்த கும்பாபிஷேகம் எங்கும் இல்லாத அளவுக்குச் சிறப்பு. சுவாமிக்கு ஸ்வர்ணபந்தனம் போட்டு முப்பத்து மூன்று குண்டங்கள் அமைத்து, ஒரு பெரிய சிவகணங்களே பட்டாளமாக வந்த மாதிரி, நூற்றுக்கணக்கான சிவாச்சாரியர்கள், நூற்றுக்கணக்காண ஓதுவார் மூர்த்திகள், இத்தனையும் ஒன்றாக சேர்த்து பழனியாண்டவன் சன்னிதானத்திலே மகத்தான கும்பாபிஷேகம் செய்ய வேண்டுமென்று இந்தக் கோயில் நிர்வாக அதிகாரிகளும் அறங்காவலர்களும் நம்முடைய ஆணையர் அவர்களும் எண்ணினார்கள். இதனாலே ஆண்டவனுக்கு மூர்த்திகரம் வருமென்று எண்ணிவிடாதீர்கள். நாம் மந்திரம் சொல்லியா அவனுக்கு மூர்த்திகரம் வரப்போகிறது? நமக்கு மூர்த்திகரம் உண்டாகும். ஆண்டவனுக்குச் செய்வதெல்லாம் நமக்கு நாம் செய்துகொண்டதாகும். எம்பெருமான் என்றைக்கும் மூர்த்திகரம் உடையவன். அவனைப்பற்றி வேதம் சொல்கிறது.

"சத்யஜ்ஞானம் அனந்தம் ப்ருஹ்ம யோவேதி விஉரிதம் குஹாயாம்'' என்பது வேதவாக்கு. சத்ய வடிவானவன் முருகன், அனந்தம், முடிவில்லாதவன். ஞானம், அறிவு மயமானவன். "சத்யஜ்ஞானம் அனந்தம் பிருஹ்ம'' பிரும்மம் என்பது, பெரிய பொருள். அதற்கு மேலே ஒரு பெரிய பொருள் கிடையாது. நம் உடம்பிலே மேலானது எது? சிரசு. சிரசுக்கு மேலே ஒன்று இருக்கிறது என்று தெரியுமா? சிகை. அந்தச் சிகைக்கு மேலே என்ன இருக்கும்? மணி. முருகனுக்குத் தெய்வசிகாமணி என்று பெயர். வேறு ஒரு தெய்வத்துக்கும் தெய்வசிகாமணி என்ற பெயர் கிடையாது, கிடையாது, கிடையாது. சுக்குக்கு மிஞ்சின

வைத்தியமில்லை; சுப்ரமணியசுவாமிக்கு மிஞ்சின தெய்வம் இல்லை என்று தாய்க்குலம் சொல்லும். சிவபெருமானே சொல்லியிருக்கின்றார். "தேவி நான் பிரும்மண்யன்; என்னைவிடச் சிறந்தவன் முருகன், அதனாலே சுப்ரமண்யன்'' என்பது வடமொழி ஸ்காந்தத்திலே சிவபெருமான் திருவாக்கு. சம்பவ காண்டம் எடுத்துப் படித்தவர்களுக்கு இது புரியும். "நான் பிரஹ்மண்யன்; குழந்தையாக வந்திருக்கிற முருகன் சுப்ரமணியன்'' சு-ப்ரஹ்ம-ணியன். 'சு' என்றால் மேலான; 'ப்ரம்மம்' என்றால் பெரிய பொருள்; 'ண்யன்' என்றால் அதனின்றும் தோன்றி பிரகாசிப்பது. இதுதான் சுப்ரமண்ய சப்தத்துக்கு அர்த்தம். சிவனே முருகன்; முருகனே சிவன். ஆனால் சிவனை விட முருகன் சிறந்தவன். சிவனே முருகன்; முருகனே சிவன். சிவனைவிட முருகன் சிறந்தவன். எப்படி ஒத்துக்கொள்வது? தங்கமே அணிகலம்; அணிகலமே தங்கம். அணிகலம் எவ்வளவும் வைத்துக் கொள்ளலாம். தங்கம் வைத்துக்கொள்ளக் கூடாது. உயர்ந்தால் பத்து பவுன் வைத்துக்கொள்ளலாம். தங்கக்குடம் இருநூறு பவுனில் பண்ணி வைத்துக் கொள்ளலாம் – தங்க அண்டா, தங்கப் பவுன் பத்திற்கு மேலே வைத்துக் கொள்ளக் கூடாது–கட்டுப்பாடு. சிவபெருமானுக்குக் கட்டுப்பாடு உண்டு' முருகனுக்குக் கட்டுப்பாடு கிடையாது. ஏன்? நான் கட்டுப்பாடாக நடக்கலாம். என் குழந்தை நடக்க வேண்டாம்? – மூன்று வயது குழந்தை, அது குளிக்காமலே பூஜை ரூமுக்கு ஓடும். நான் போகலாமா? குளித்துவிட்டுத்தான் போக வேண்டும். கட்டுப்பாடு பெரியவர்களுக்கு உண்டு. குழந்தைகளுக்குக் கிடையாது. நான் பெரியவர்களை அணுகுகிறபொழுது பயபக்தியோடு அணுகுவேன். மூன்று வயது குழந்தை மடியிலே உட்கார்ந்து மூக்கைப் பிடித்து ஆட்டும்; குழந்தையல்லவா? இருவினையொப்பு மலபரிபாகம், சத்தினிபாதம் எய்தியவர்களுக்குத்தான் சிவபெருமான் அனுக்கிரஹம் பண்ணுவார். ஒரே தத்தம். மாணிக்கவாசகருக்கே அந்தப் பரிபக்குவம் வாராமையினாலே அந்தணனாக வந்து ஆட்கொண்டாராம் திருப்பெருந்துறையில். அந்தப் பக்குவம் வந்த பிற்பாடு நேராக வந்து காட்சி கொடுத்தாராம் திருக்கழுக்குன்றத்திலே. முருகா என்றால் ஓடி வந்து விடுவான். சான்று உண்டா? வைத்திருக்கின்றேன்.

''புலிக்குன் பாதமதை நினைப்பவர்க்கும்
காலதரிசனை புலக்கண் கூடும்"

நினைப்பவர்க்கும் அந்தக் காலத்திலே வருகிற தரிசனம் முருகன் கொடுத்து விடுவான். சட்டத்தோடு தான் சிவபெருமான் அனுக்ரஹம் பண்ணுவார். சட்டத்தை மீறி முருகன் அனுக்ரஹம் பண்ணுவார்-குழந்தை. அவரே குழந்தையாக வந்துவிட்டார். அப்பாவே குழந்தையாக வந்துவிட்டார். ''ஈசனே அவன் ஆதலால் மதலை ஆயினன் காண்.'' ஆகவே சுப்ரமண்ய மூர்த்தியை எல்லோராலும் கண்டுகொள்ள முடியாது. அவனைக் கண்டுகொள்வது ரொம்ப சிறப்பு. சர்வ உலகங்களுக்கும், சர்வ அண்டங்களுக்கும் அவன் தான் தலைவன்.

''ஸர்வாண்டாதி பதம் தஸ்மின் குஹே பரம பாவனே'' என்று வேதம் சொல்லுகின்றது. அவன் அணுவுக்கு அணுவாக இருக்கிறான். மகத்துக்கு மகத்தாக இருக்கின்றான்.

"அணோ ரனியான் மமஹதோ மஹீயா நாத்மா குஹாயான்'' என்று இன்னொரு வேதம் சொல்கிறது. நான் சொல்வதெல்லாம் வேத வாக்குகள். அப்படி ஆயிரம் வேதங்களினாலும் பேசப்படுகிற தெய்வம் முருகன்.

"மறையாயிரங்களும் குமர குருவென
அரியசேடன் அஞ்ச வந்திடுவேனே''.

அத்தகைய பரம கருணாநிதி அந்தயிம ஞான தயாபரன், இந்தப் பழனி மலையிலே ஞான தண்டாயுதபாணியாக வீற்றிருந்து எல்லோருக்கும் வேண்டிய வரங்களையெல்லாம் வழங்கிக்கொண்டிருக்கின்றான். அந்தப் பெருமானுக்கு மகர கும்பாபிஷேகம் செய்ததினாலே நாடெல்லாம் தழைக்கும்;

உங்கள் வீடெல்லாம் தழைக்கும். நாம் தழைப்பதற்காக, இந்த மகத்தான விழாவை விடா முயற்சியோடு மனேகரன் அவர்கள் நல்ல உள்ளத்தோடு அல்லும் பகலுமாக உழைத்து செய்தார்கள். உழைப்பு அவர்கள் முகமே சொல்லுகிறது. சௌக்கிய மாக கடையிலே உட்கார்ந்து கொண்டு இருக்கிறவர். கண் விழிக்கத் தெரியாது என் மாதிரி. நான் தூங்கி எத்தனையோ நாளாயிற்று. முந்தாநாள் பம்பாயில், நேற்று சென்னை, அப்புறம் கோயம்புத்தூர், இங்கே வந்து, இன்று உடனே திருச்சிக்குப் போக வேண்டும். சுகம் என்ருல் என்ன வென்றே தெரியாது எனக்கு. என்னை சுகப்பட வைத்தால் மற்றவர்களுக்கு இந்த உத்தமமான கருத்துக்கள் தோன்ற மாட்டா. அதற்காக பகவான் அடியேன் என்னை உழைக்க வைக்கிருர்.

அவர்கள் சுகமே தன்னுடைய லட்சிய மாக இருந்தவர்கள். அந்த சுகத்தை எல்லாம் ஒதுக்கிவிட்டு ஆண்டவனுக்காக பஞ்சுபடாத பாடுபட்டு உழைத்தார்கள். கும்பாபிஷேகம் சிறப்பாக நடந்தது. அந்த காலையிலே ஜலம் ஊற்றுகிற போது தெய்வ மணம் கமழ்ந்தது. மக்களுக்கெல்லாம் ஒரே மகிழ்ச்சி. நான் கதிர்காமம் என்ற ஓர் ஊர் கும்பாபிஷேகத்துக்குப் போனேன். அடியேன் பேச்சு. கும்பாபிஷேகம் முடிந்து அடுத்த விநாடியிலே ஒன்பது பேர் இறந்து விட்டார்கள், சாரம் ஒடிந்து. நான் வீட் டிற்கு வந்தேன்; ஒன்பது பிணம் வெளியே போகிறது, கோயிலை விட்டு. சுவாமிமலை கும்பாபிஷேகத்திலே நெரிசலாகி ஒரு இருபது, முப்பது பேருக்கு ஆபத்து வந் தது. நான்கு பேர் இறந்துவிட்டார்கள். அப்படியெல்லாம் ஒன்றும் இல்லாமல், இப்பொழுது அந்த சாரம் போட்டதைப் பார்த்தால், மாடிப்படியேறுகிற மாதிரி இருக்கிறது. சில பேர் சாரம் போட்டால் அதில் சாரமே இருக்காது. அந்தச் சாரத்துக்கும் ஒரு சாரம் வைத்து நாம் ஏறுகிறபொழுது நாம் என்ன சாரத்து மேலே ஏறுகிருேமா, ஏதாவது அசம்பளி படிக்கட்டு ஏறுகிருேமா என்று யோசித்தேன். அவ்வளவு சிறப்பாக, குறிப் பிட்டவர்கள், அவர் அவர்கள் இடத்திலே உட்காருமாறு செய்து ஒருவகையான தீங்கு இன்றி நன்ருக நடந்தது.

திமிறி என்ற ஒரு ஊர் கும்பாபிஷேகத் திற்கு போனேன். முப்பது, நாற்பது பேருக்கு மணிப்பர்ஸ் போச்சு. திருவா னைக்கா கோவில் கும்பாபிஷேகத்தில் எவ்வளவு திருட்டு போயிற்று! நெரிசல் களினாலே வருவது. அப்படியெல்லாம் பழனியாண்டவன்கிட்டே இல்லாமல் தாய் மார்கள் எல்லாம் சவுக்கியமாக வந்து இருந்து, சுருக்கமாகச் சொன்னால் மங்கள மாக நடந்தது. அவர்களைக் கருவியாகக் கொண்டு ஆண்டவன் நடத்திக்கொண்டான். அதெல்லாம் நாம் பாராட்ட வேண்டு மென்று, பல கும்பாபிஷேகங்களுக்கும் சென்றவன், பல கும்பாபிஷேகங்களைத் தரிசித்தவன், அந்த முறையிலே இது முடி மணிபோல் இருந்தது என்பதை ஞாபகப் படுத்திக் கொண்டு பழனியாண்டவனுக்குச் செய்தால் அகில உலகங்களுக்கும், அகில மூர்த்திகளுக்கும் செய்த மாதிரி. ஞானம் அல்லவா ஆண்டவன்! ஞானமே வடிவான வன் முருகன். ''ஞானம் தான் உருவாகிய நாயகன்'' என்பது கந்தபுராண வாக்கு. ஞானம் எங்கேயாவது கடையிலே விற்கிறதா? தங்கம் விலைக்கு வாங்கலாம்; வைரம் விலைக்கு வாங்கலாம்; கார் வாங்க லாம்; நிலம் வாங்கலாம்; வீடு வாங்கலாம்; பதவியும் விலைக்கு வாங்கலாம் — துணி விலைக்கு வாங்கலாம்; புகழ் விலைக்கு வாங்க லாம்; எல்லாம் விலைக்கு வாங்கலாம். ஞானத்தை விலைக்கு வாங்க முடியாது. ஞானம் ஷாப் – கிலோ ரூ. 8000 இருந்தால், பணக்காரன் 4 கிலோ வாங்கி மகன் கிட்டே கொடுப்பானே! அந்த ஞானம் கிடைக்க வேண்டுமானல் பழனி ஆண்ட வனைத் தவிர வேறு இல்லை! இல்லை! இல்லை. உங்களுக்கு ஞானம் வேண்டுமானல் மாதத் துக்கு ஒரு முறை பழனிக்கு வரவேண்டும். அவனைக் கண்ணாரக் கண்டு அவன் புகழைக் காதாரக் கேட்டு அவனை நெஞ்சார நினைத் தால் அஞ்ஞானிகளாக வந்தவர்களெல் லாம் மெய்ஞ்ஞானிகளாகப் போவார் கள். ஆகவே ஞானமே வடிவான தெய்வம்

ஞான பண்டிதன். ஞானிகளுக்கு என்ன தோன்றும்? ஆடம்பரம் தோன்றுது. பரம ஞானிகளைப் பாருங்கள், தெரியவில்லை? சுவாமி அப்படித்தான், துணி கூட இல்லாமல், ஒரே ஒரு கோவணம், அதை மறைக்க வேண்டுமே என்று. மற்ற மூர்த்திகளுக்கெல்லாம் என்ன என்ன ஆடம்பரம். அவன் பரமஞானி. எனக்கு ஒன்றும் வேண்டாமப்பா என்றான். ஒரு கௌபீன தாரியாக துறவுக் கோலத்தைக் காட்டிக் கொண்டு இருக்கிறான். — கிருபாநிதியாக இருக்கிறான் எம்பெருமான்!

எந்தக் கோவிலும் மேற்குப் பார்த்தால் அதற்குத் தனிப்பெருமை. மேற்கே பார்த்த சன்னிதானங்கள் கொஞ்சம். அதிலே திருக்கடவூர் மேற்கே பார்த்த சன்னிதானம், தாயுமானவர் மேற்கே பார்த்தவர். ஆகவே அது மேல்திசையை நோக்கியது. அதனுடைய தத்துவம் உங்களுக்கெல்லாம் தெரியாது. இந்த இடம்தான் நமக்கு நினைவு ஆற்றலை உண்டாக்குகிற சத்யோ ஜாத முகம். இது ஈசானம் இங்கே இருக்கிறது கிழக்கே நோக்கும் தத்புருஷம். இது அகோரம். இது வாம தேவம். பிராதக் காலத்திலே யார் ஒருவர் தியானம் பண்ணுகிறார்களோ, அவர்களுக்கு இந்த இடத்திலே ஒரு தினவு வரும். அதற்காகத் தான் பழைய காலத்திலே குடுமி இங்கே வைத்தார்கள் — இந்த இடம் பாதுகாக்கப்படும். நான் சத்தியமாகச் சொல்லுகிறேன், அனுபவத்தைச் சொல்லுகிறேன். விளையாட்டாக எண்ணிவிடாதீர்கள். இந்த இடம் ஒரு மூளை இருக்கிறது. சொல்லுவதை எல்லாம் வாங்கிக் கொள்ளுவதும் அதுதான்; நினைவைக் கொடுப்பதும் அது தான். இங்கே பிடரியிலே உள்ள மூளை. இந்த இடம்தான் பழனி ஆண்டவன் பார்க்கிற இடம். ஞானத்தைக் கொடுக்கின்ற இடம். ஆகையினாலே பழனியாண்டவனை வணங்கினால் ஞானம் உண்டாகும். நீங்கள் எல்லாம் சிவஞானிகளாக விளங்குவீர்கள். மேலும் மேலும் இந்தச் சன்னிதானத்திலே வந்து வழிபட வேண்டும். இந்தக் கோயிலுக்குத் தொண்டு செய்கிறவர்களெல்லாம் வளர வேண்டும் என்று நல்ல நேரத்திலே நான் எம்பெருமானை பிரார்த்திக்கின்றேன்.

இப்பொழுது இரண்டு எழுத்து வந்து இங்கே குறுக்கிடுகின்றது. இரண்டு எழுத்து எது, பசி. கடவுளுக்கு எத்தனை எத்தனையோ வண்ணமாக நாம் நன்றி செலுத்த வேண்டும். அவன் செய்த உபகாரங்கள் எண்ணில் அடங்காதவை. என்ன, என்ன? கண்ணைக் கொடுத்தான், கண்ணுக்கு ரப்பை என்ற கதவையும் கொடுத்தான். இந்த ரப்பை என்ற கதவு இல்லா விட்டால் தூசெல்லாம் பற்றி ஒரு நாளைக்கு கண் உங்களுக்கும், எனக்கும் இருக்குமா? நன்றாகச் சிந்தித்துப் பாருங்கள். கண்ணைக் கொடுத்தான்; கதவு கொடுத்தான், அப்படியும் தூசு நுழையுமோ என்று அங்கே ஒரு பிரஷ் வைத்திருக்கிறான். நம் அம்மா, அப்பாவா, வைத்தார்கள். ஆண்டவனல்லவா வைத்தான். அதனாலே தான் ஆதிசங்கரர்:-

"த்ருஷ்டி ஸ்க்ந்த மூர்த்தி"
"த்ருஷ்டி"
— என் கண்கள் ஸ்கந்தனைப் பார்க்கும்.
"கங்குல் பகல் என் கண்கள்
மற்றொன்றும் காணற்க"

அப்படி நுழைகிற பொழுதே ஃபளவர் மில் மாதிரி பல்லை இங்கே வைத்தார். முறுக்கைப் போட்டால் நொறுக்கு விட்டு உள்ளே அனுப்பும். அதைத் தள்ளுகிறதற்கு ஒரு மிஷின் நாக்கு. அங்கே தண்ணீர் வேறே ஊறும். இதெல்லாம் யார் வைத்தது. அப்பா வைத்தது. இத்தனையும் அமைத்த ஆண்டவன் நம்மேலேயுள்ள எண்ணில்லாத கருணையோடு இந்த வயிற்றை ஒரு சாணாக வைத்தான். இன்னும் ஒன்றரை சாணாக வைத்திருந்தால், எங்கே போகிறது? இப்பொழுது இங்கே சாப்பாட்டிற்கு எங்கே போகிறது என்று யோசித்துக் கொண்டிருக்கிறீர்கள். இந்த ஒரு சாணோடு நிறுத்தினானே, அவனுக்கு நாம் எவ்வளவு நன்றி செலுத்தவேண்டும். இல்லை, இரண்டு சாணாக வைத்திருந்தால் நீங்கள் என்ன விசாரணைக் கமிஷனா வைக்கப்போகிறீர்கள். இல்லை, கோர்ட்டிலே சூட் ஃபைல் பண்ணு

விர்களா? ஆண்டவனைப் போய் எவன் கேட்கிறது. "ஏன் செய்தாய் என வினவியே நிறுவுவார் எவரே" அப்படி ஆண்டவன் அப்ராகிருதமானவன். அந்தப் பசி வந்து இப்பொழுதே குறுக்கிட்டிருக்கிறது. நான் அதிக நேரம் பேசக் கூடாது. பசி! உங்களுக்கு எத்தனையோ பிசி (Busy). ஆகையினாலே சுருக்கமாய்ச் சொல்லி விட்டேன். இதற்கு மேலே நான் சொன்னதிலிருந்து நீங்கள் என்ன தெரிந்து கொண்டீர்கள்? முருகனுக்கு மேலே தெய்வம் இல்லை. வேதம் சொல்லிற்று, அதற்காகத் தான் நான் இன்றைக்கு வேதங்களைச் சொன்னேன்.

சத்ய ஞானம்.........

வேதி என்ற வார்த்தைக்கு அறிவது என்பது பொருள். அறிந்ததினாலே தான் வேதம் என்று பெயர். வேத வசனம் சொன்னால் தான் பிரபலமானது. ஆகையினாலே முருகனுக்கு மேலே ஒரு தெய்வம் இல்லை. அவன் ஸ்கந்த மூர்த்தியாக விளங்குகின்றான். ஞானப்பண்டிதனாக இருக்கின்றான். ஞானத்தை விலைக்கு வாங்க முடியாது. பழனிக்கு வந்தால் ஞானம் கிடைக்கும். அந்த ஆண்டவனுடைய கைங்காரியத்திலே ஈடுபட்ட மனோகரன் முதலான அன்பர்கள், கந்தசாமி, மற்ற அன்பர்கள் அரும்பாடுபட்டு இந்த மகா கும்பாபிஷேகத்தை, நாடு தழைக்க வேண்டுமென்ற ஒரே கருத்தோடு செய்தார்கள். அது பரம மங்களமாக முடிந்தது.

கலைக்காக உழைத்தவர்களைப் பாராட்ட வேண்டுமென்ற ஒரு எண்ணம், பழனியாண்டவன் அவர்களுக்குத் தந்தான். அந்த முறையிலே ஒவ்வொரு கலையிலே நீண்ட காலம் உழைத்தவர்களை வாழ்த்தி, வாழ்த்தி அவர்கள் இந்த விருதுகளை வழங்கினார்கள், சிவபெருமான் ஞானசம்பந்தருக்கு விருது கொடுத்தான் பழனியாண்டவன் இந்தக் கலை வல்லவருக்கு இப்பொழுது விருது கொடுத்தான். அது கலைக்குப் பெருமை. அந்த கலைஞர்களை ஆதரிப்பதாக உலகம் எண்ணும். மற்றவர்களும் கலைக்கு உழைப்பார்கள், என்று சொல்லி இப்படி விருதுகளெல்லாம் தந்த இந்த கோயில் அறங்காவலர் குழுவினர்களுக்கும், நிருவாக அதிகாரிக்கும், இந்த விழாவிலே கலந்து கொண்ட பெரியோர்களுக்கும், தாய்மார்களுக்கும், என்னுடைய வணக்கத்தையும், நன்றியையும் பலகாலம் தெரிவித்துக் கொண்டு, பழனியாண்டவனுக்கு வணக்கத்தைத் தெரிவித்து, என்னுடைய நன்றிக் கடனை இந்த அளவிலே முடித்துக் கொள்ளுகின்றேன். எல்லோருக்கும் எம்பெருமானுடைய கருணை துணை புரிய வேண்டும்.

— வாழ்க; திருவருள் வெல்க! என்று சொல்லி பூர்த்தி பண்ணிக் கொள்கிறேன்,

வணக்கம்.

(பழனி அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயிலில் 2—9—1973 அன்று நடைபெற்ற திருக்குட நன்னீராட்டு பெருவிழாவில் திருமுருக கிருபானந்த வாரியார் அவர்கள் நிகழ்த்திய சொற்பொழிவின் சுருக்கம்.)






துர்க்கை பெரியநாயகி அம்மன் கோவில்



நவரங்க மண்டபம் - பெரியநாயகி அம்மன் கோவில்

# பழநி



திருமுருக கிருபானந்தவாரியார்

பழநியைப் பலகாலும் சிந்திக்க வேண்டும்; வந்திக்க வேண்டும்; பழநி, பழநி என்று வாய் குளிரச் சொல்லி வாழ்த்த வேண்டும், "படிக்கின்றிலை பழநித் திருநாமம் படிப்பவர்தாள் முடிக்கின்றிலை" என்கின்றார் அருணகிரிநாதர்.

இந்த வாக்கு உயிருள்ள வாக்கு; நமக்கு உயிர் தருகின்ற வாக்கு; உயிரினும் உயர்ந்த உத்தம வாக்கு. சொன்னவர் வாக்கிற் பெரியவர்.

அரும்பு மலராகின்றது; மலர் காயாகின்றது; காய் கனியாகின்றது. அரும்பு — சரியை, மலர் — கிரியை, காய் — யோகம், பழம்—ஞானம்.

"விரும்புஞ் சரியைமுதல்
மெய்ஞ்ஞானம் நான்கும்
அரும்புமலர் காய்கனிபோல் அன்றே
பராபரமே".

என்பது தாயுமானப் பெருந்தகையாருடைய அமுத வசனம்.

காய் துவர்க்கும், புளிக்கும்; பழம் தித்திக்கும். வாழைக்காய் துவர்க்கின்றது; மாங்காய் புளிக்கின்றது. வாழைப்பழமும், மாம்பழமும் இனிக்கின்றன.

நமது மனம் காயாக இருக்கக் கூடாது; அது அன்பாலும் அருளாலும் முதிர்ந்து பழுக்கவேண்டும், மனம் பழுத்தவர்கள் தான் ஞானிகள். மனம் பழுத்த அடியார்களிடம் ஆசையாகிய துவர்ப்பும், கோபமாகிய புளிப்பும் இருக்கமாட்டா. காமக்ரோத லோப மதமாச்சர்யம் உள்ளது அழுக்கு மனம். இவையில்லாத தூயது பழுத்த மனம்.

"செழுக்கமலத் திரளனநின்
சேவடிசேர்ந் தமைந்த
பழுத்தமனத் தடியருடன்
போயினர்யான் பாவியேன்
புழுக்கணுடைப் புன்குரம்பைப்
பொல்லாக் கல்வி ஞானமிலா
அழுக்குமனத் தடியேன் உடையாய்
உன் அடைக்கலமே",

என்கின்றார் மாணிக்கவாசக சுவாமிகள்.

"கடைச் சிறியேன் உளம்பூத்துக்
காய்த்ததொரு காய்தான்
விளக்கமுறப் பழுத்திடுமோ?"

என்று ஏங்குகின்றார் இராமலிங்க அடிகள்.

அந்த ஏக்கமே இன்னும் நம்மில் பலருக்கு வரவில்லை. ஏக்கம் எய்தாதவர் எங்ஙனம் ஆக்கம் பெறுவர்?

ஆசையை விட்ட மனந்தான் பழுக்கும். மனிதர்கட்கு உணவிலேதான் எத்தனை

ஆசை, அந்தோ! சோற்றுசை விடாத ஒருவன் வேற்றுசையை எங்ஙனம் விடுவான்?

உணவிலே உள்ளஞ் சென்றால் உணர்வு சுருங்கும்; அதனால் தவஞ் சுருங்கும். அல்லும் பகலும் உணவு நசையால் உழன்று மாந்தர் மதிமயங்கித் திரிகின்றனர்.

"அற்றைக் கிரைதேடி அத்தத்
திலுமாசைப்
பற்றித் தவியாத பற்றைப்
பேறுவேனே
வெற்றிக் கதிர்வேலா வெற்பைத்
தொளைசீலா
கற்றுற் றுணர்போதா கச்சிப்
பெருமாளே"

என்கின்றார் அருணகிரிநாதர்.

விலங்குகளின் உணவு இரை; மனிதனும் விலங்குபோல் அலைந்து உணவு தேடுவதனால் இரைதேடி, என்று இடித்துரைக்கின்றார்.

"சோற்றிலே விருப்பஞ் சூழ்ந்திடில்
ஒருவன்
துன்னுநல் தவமெல்லாம் சுருங்கி
ஆற்றிலே கரைத்த புளியெனப்
போம்என்
றறிஞர்கள் உரைத்திடல் சிறிதும்
போற்றிலேன் உன்னைப்
போற்றிலேன் சுவையில்
பொருந்திய காரசா ரஞ்சேர்
சாற்றிலே கலந்த சோற்றிலே ஆசை
தங்கினேன் என்செய்வேன்?
எந்தாய்?"

என்று உலகினர் தன்மையைத் தன்மேல் வைத்துக் கூறி முறையிடுகின்றார் வள்ளலார். எனவே ஆசாபாசங்களை அறவே விட்டார்க்கு உள்ளம் பழுக்கும். அங்ஙனம் ஆசையகன்று உள்ளம் பழுத்த ஞானிகள் பேரின்பப் பெருவாழ்வைப் பெறுகின்றார்கள்.

இந்நிலையை ஆன்ம கோடிகட்கு எளிதில் தரவல்லது பழநியம்பதி. காயைக் கனிய வைக்கும் அப்பழநியம்பதியில் எம்பெருமான் ஞானப் பழமாக வீற்றிருக்கின்றான். தன்னையடைந்தவர்கள் உள்ளங்களையெல்லாம் பழுக்க வைக்கின்றான்.

பிறக்க முத்திதரும் திருவாரூர்; தெரிசிக்க முத்திதரும் தில்லை; இறக்க முத்தி காசியிலே.

காசியிலே இறந்தால் முத்தி; சிந்தியுங்கள். பல கொலைகளும் எண்ணற்ற களவுகளும் புரிந்த ஒருவன் காசியிலே சென்று ஒரு மரத்தில் கயிறு மாட்டிக் கொண்டு தற்கொலை புரிந்துகொண்டால் முத்தி வருமா? ஒருபோதும் வராது. இதன் உட்பொருள் யாது?

திருவாரூர் — மூலாதாரம், திருவானைக்கா — சுவாதிஷ்டானம், திருவருணை — மணிபூரகம், திருத்தில்லை — அநாகதம், காளத்தி — விசுத்தி, காசி — ஆக்ஞை.

ஆக்ஞை என்பது புருவ நடு; புருவ நடுவில் நாட்டத்தை வைத்து எல்லா எண்ணங்களையும் மறக்கின்றவனே காசியில் இறந்தவனாகின்றான்.

திருவளர் ஆரூர் மூலம் திருவானைக்
காவே நாபி
மருவளர் பொழில்சூழ் அண்ணா
மலைமணி பூரம் நீவிர்
இருவருங் கண்ட மன்றம் இதயமாம்
திருக்காளத்தி
பொருவருங் கண்டமாகும் புருவ
மத்தியமே காசி

— திருவிளையாடற்புராணம்

"கருவிகள்நா லொன்பதும் வேறதாகக்
கண்டகன்ற அதீதநிலை காசியாகும்"

— சிவஞானதீபம்

ஆன்மதத்துவம் 24, வித்தியாதத்துவம் 7, சிவதத்துவம் 5, ஆக 36 தத்துவங்களினின்றும் கழன்று, ஆன்மா தத்துவாதீதத்தில் நின்ற அருள் நிலை காசியாகும்.

புருவ நடு, நடு மூக்கு எனப்படும்: அங்கே நாட்டம் வைத்தவன் நானற்றுத் தானுந்தன்மை பெறுபவன்.

நாட்டம் இரண்டும் நடுமூக்கில்
வைத்திடில்
வாட்டமும் இல்லை மனைக்கும்
அழிவில்லை

ஒட்டமும் இல்லை உணர்வில்லை
தானில்லை
தேட்டமும் இல்லை சிவன் அவன் ஆமே.

— திருமந்திரம்

காசியில் உள்ள பெருமான் எல்லாந் தானென தற்பரன்; விசுவநாதர். விசுவம்—எல்லாம். அந்த விசுவேசப் பெருமானாகிய சிவபெருமான் முருகனைப் பார்த்து பழம் நீ—பழநி என்று சுட்டிக் காட்டினார். இந்த நுணுக்கமான தத்துவத்தையுணர்ந்த அருணகிரிநாத சுவாமிகள், "காசியின் மீறிய பழனபுரி'' என்கின்றார்.

காசியினும் உயர்ந்தது பழநிமலை என்ற அருமையை உன்னுந்தொறும் உன்னுந் தொறும் உள்ளம் உருகுகின்றது. ஆ! ஆ! என்ன அதிசயம்?

"அதிசயம் அநேகமுற்ற பழநிமலை மீதுதித்த அழகே!'' என்ற திருப்புகழடியையும் ஈண்டு சிந்தியுங்கள்.

பழநியப்பனை வணங்கினால்தான் மனம் பழுக்கும் என்ற நியதி இல்லை. பழநி என்ற ஊரை வணங்கினாலேயே மனம் பழுத்து விடுமாம். அத்துணை மகிமையுடைய திருத் தலம் பழநி.

"உனது பழநிமலையெனும் ஊரைச் சேவித்தறியேன்" என்று கூறி நமக்கு உபதேசிக்கின்றார் எம் அருணகிரிநாதர்.

அஞ்ஞான இருளகற்றும் மெய்ஞ்ஞான பண்டிதன், அருட் செங்கோலை ஊன்றி அரசு புரியுந் திருத்தலம் பழநி. பவநோய் களைந்து, முத்தி நலம் புரியும் பெரிய வைத்தியநாதனைக் கந்தநாதன் சந்ததமும் திருவருள் பாலிக்கும் பரமபதம் பழநி. பாடாத ஊமரும் ஆடாத முடவரும் பாடி ஆடும் பழம்பதி பழநி. பழநி மலையைக் கண்டவரைக் கண்டாலும் கலிதீர்க்கும் கருணைக் குன்றம் பழநி. இருமலையும், வினை பெருகித் துன்பந் தரு மலையும்; கரு மலையும், திரண்டு வந்த பாவப் பெருமலையும் துகளாகச் செய்யும் ஞானத்திருமலை எனத் திகழும் ஒரு மலை பழநி. சிவமலையாந் தவமலையென்று நவநாதரும் புகழும் நவமலை பழநி.

இகபர நலன்களை எளிதில் தரவல்ல பழனபுரியைப் பண்புடன் பணிந்து, பவப் பிணி தணிந்து, பழநிமலையைப் பணிந்தோரது பதமலரையணிந்து பரம சுகத்தை அன்பர்கள் பெறுக.

வரதா மணிநீ எனவோரில்
வருகா தெதுதான் அதில்வாரா
திரதாதிகளால் நவலோகம்
இடவே கரியாம் இதிலேது?
சரதா மறையோ தயன்மாலும்
சகலா கமநூல் அறியாத
பரதே வதையாள் தருசேயே
பழனு புரிவாழ் பெருமாளே.

வாழ்க பழநி! வளர்க பண்பு!



# அருள்மிகு சுப்பிரமணியசுவாமி திருக்கோயில்

## திருத்தணிகை - செங்கை மாவட்டம்

*திருமுருகன் உறையுஞ் சிறப்புத் தலங்கள் ஆறுபடை வீடுகளாகும். அவ்வாறு படைவீடுகளில் ஐந்தாவது படைவீடாகும், திருத்தணிகை. இத்தலம் நக்கீரர், அருட்பிரகாச இராமலிங்க அடிகளார், வாக்கில் சிறந்த அருணகிரிநாதர், முத்துசாமி தீட்சிதர் போன்ற பெருமக்களால் பாடப் பெற்றதாகும்.*

*இத்தகு சிறப்புவாய்ந்த இத்தணிகை, செங்கை மாவட்டத்தில் சென்னை - பம்பாய் இருப்புப் பாதையில் அரக்கோணம் சந்திப்பிலிருந்து வடக்கே 14 கிலோ மீட்டர் தொலைவிலும், சென்னையிலிருந்து 84 கிலோ மீட்டர் தொலைவிலும் அமைந்துள்ளதாகும்.*

*இத்தலத்தில் நடைபெறுகின்ற ஆடிக்கிருத்திகைப் பெருவிழாவில் லட்சோப லட்சம் காவடிகள் செலுத்துவதும், ஆயிரமாயிரம் அன்பர்கள் பிரார்த்தனைகள் முடிப்புகள் செலுத்துவதும், பல்லாயிரக் கணக்கான பக்தர்கள் தலைமுடி காணிக்கை செலுத்துவதும் தெப்போற்சவம் மூன்று தினங்களிலும் இலட்சக்கணக்கான பக்தர்கள் கலந்து கொள்வதும் கண்கொள்ளாக் காட்சியாகும். ஒவ்வொரு ஆண்டும் டிசம்பர் 31-ஆம் நாள், ஜனவரி 1-ஆம் நாள் திருப்புகழ் திருப்படித் திருவிழாவில், திருப்படிகள்தோறும் திருப்புகழ் பாடிச் செல்வது கண்கொள்ளாக் காட்சியாகும்.*

*நாள்தோறும் இத்தலத்தை நாடி ஆயிரமாயிரம் அன்பர்கள் வருகின்றனர். வருகின்ற அன்பர்கள் தங்குவதற்குக் குடில்கள், குடியிருப்பு அறைகள், தங்கும் விடுதிகள், யாத்ரீகர்கள் வசதிக்கு சிற்றுண்டிசாலை, மலைக்குச் செல்வதற்கு மலைப்பாதையும், வாகன வசதியும் முதலான வசதிகள் அமைக்கப்பட்டிருக்கின்றன.*

*பக்தர்கள் திருமுருகன் அருள்பெற்றுய்யத் திருத்தணிகைக்கு வாரீர்.*

**திரு. கே. சிதம்பரம், பி. ஏ.**
*நிருவாக அதிகாரி*

**திரு. புலவர் மி. ச. நடேசன்**
*தலைவர்*

**திரு. கே. கன்னைய நாயுடு**
*தர்மகர்த்தா*

**திரு. வி. எம். துரைசாமி ரெட்டி**
*தர்மகர்த்தா*

**தொலைபேசி எண்கள் :**

| | | |
|---|---|---|
| 1. | திருக்கோயில் அலுவலகம் | 25 |
| 2. | திருக்கோயில் (மலை) | 43 |
| 3. | நிருவாக அதிகாரி குடியிருப்பு | 47 |
| 4. | யாத்ரீகர்கள் குடியிருப்பு இல்லம் | 87 |
| 5. | மலைப்பாதை | 96 |

# "குஹ தத்துவம்"





ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர்

சிவன் கோயிலில் சிவனார் சந்நிதியைப் பக்தர்கள் அணுகும் பொழுது சிவனுக்கு வலப்பக்கத்தில் கணபதியும், இடப்பக்கத்தில் முருகனும் பிரதிஷ்டை செய்யப் பெற்றிருப்பதைக் காண்பார்கள். இதே அமைப்பு அம்பிகையினுடைய சந்நிதியிலும் இருக்கிறது. இதில் பெரிய கோட்பாடு ஒன்று அமைந்திருக்கிறது. சிவகுமாரன் என்னும் சொல் கணபதிக்கும் பொருந்தும், சுப்பிரமணியத்துக்கும் பொருந்தும். அதே பாங்கில் உமையாள் மைந்தன் என்கிற சொல்லும் இரு சகோதரர்களுக்கும் பொதுவானது. இருவரும் அம்மைக்கும், அப்பனுக்கும் புதல்வர்கள்.

இனி, அகிலாண்டங்களிலுள்ள ஜீவ கோடிகள் அனைத்தும் அம்மைக்கும் அப்பனுக்கும் செல்வர்கள், செல்விகள் ஆகிறார்கள். உண்மை அங்ஙனம் இருக்க, இவர்கள் இருவர் மட்டும் ஏன் அம்மை அப்பனுக்குரிய செல்வர்கள் என்று பிரித்தெடுத்து பகரப்பெறுகிறார்கள்? அதில் கருத்து ஒன்று உண்டு. மற்ற செல்வர்களுக்கும், செல்விகளுக்கும் இவர்கள் இருவரும் முன் மாதிரி ஆகிறார்கள். அம்மை அப்பனைச் சென்றடைய விரும்புகிற ஜீவர்கள் அனைவரும் கணபதியைப் போன்றும், கார்த்திகேயனைப் போன்றும் பரிபாகம் அடைய வேண்டும். பரிணாமத்தில் இன்னும் கீழ் நிலையில் இருக்கிற ஜீவர்கள் தங்களுக்கு ஆதிமூலமாகிய சிவசக்திக்கு மிகத்தொலைவில் இருக்கிறார்கள். மேல்நிலைக்குப் பரிணமித்துப் பக்குவம் அடைதற்கு ஏற்ப அவர்கள் அம்மை அப்பனுக்குப் பக்கத்தில் வருகிறார்கள். மானுட நிலைக்குப் பக்குவமாய் இருக்கிற ஜீவர்கள் தெய்வத்துக்கு மிக அண்மையில் வந்திருக்கிறார்கள். அவர்கள் சிவசக்தியை நோக்கிப் போகிற பயணத்தில் பெரும்பகுதி பூர்த்தியாய் இருக்கிறது. கடைசிப் பகுதியை அவர்கள் மங்களகரமாக முடிவுக்குக் கொண்டுவர வேண்டும். அதற்கேற்றபடித் தங்களைப் பக்குவப் படுத்துவதும் அவர்களுடைய கடமையாகிறது. கணபதியைப் போன்றும், குமரனைப் போன்றும் தங்களை அமைத்துக்கொண்டாலொழிய அவர்கள் சிவசக்தியை அடைய மாட்டார்கள்.

கணேசன் அறிவு சொரூபம். கார்த்திகேயன் ஆற்றல் சொரூபம். கடவுளை அடைய விரும்புகிறவர்கள் அறிவில் மேலோங்கி வர வேண்டும். ஆற்றல் மிகப் படைத்தவர்களாக வேண்டும். பெற்றுள்ள அறிவைச் செயலுக்குக் கொண்டுவராவிட்டால் அவ் அறிவினால் அடையும் பயன் ஒன்றுமில்லை. பூமியைச் சாகுபடி பண்ணினால் உணவுப்

பொருள் வகைகளை உற்பத்தி பண்ணலாம் என்னும் அறிவு மனிதனுக்கு வந்திருக்கிறது என்று வைத்துக் கொள்ளுவோம். வெறும் இவ்வறிவினால் மனிதன் அடையும் நலன் ஒன்றுமில்லை. இந்த நல்லறிவு செயலாக வடிவெடுக்க வேண்டும். அப்பொழுதுதான் அறிவு பூர்த்தியாகிறது. சாகுபடியைச் செம்மையாகச் செய்வதே அதைப் பற்றிய ஞானத்தைப் பெற்றதின் அறிகுறியாம். சாகுபடியைச் செம்மையாகச் செய்து தானியங்களை விளைவிக்க வேண்டும். அவைகளை முறையாக அறுவடை செய்ய வேண்டும். உணவு சமைத்தல் வேண்டும். அதை மக்களுக்கிடையில் வழங்குதல் வேண்டும். மக்கள் அதை உண்டு பசியைத் துடைத்தல் வேண்டும். உடலை உறுதிப் படுத்துதல் வேண்டும். இத்தனை செயல்களும் நடைபெறுகிற பொழுதே சாகுபடியைப் பற்றிய நல்லறிவு பலன் கொடுத்ததாகும்.

அறிவுக்கும் ஆற்றலுக்கும் உள்ள தாரதம்மியத்தைப் பற்றிய புராண வரலாறு ஒன்றுள்ளது. அதாவது, கைலையங்கிரியிலே அம்மையும் அப்பனும் இனிது வீற்றிருக்கின்றனர். கணேசன், கார்த்திகேயன் ஆகிய மைந்தர் இருவரும் இனிது விளையாடிக் கொண்டிருக்கின்றனர். நாரத மகரிஷி கனி ஒன்றைக் கொண்டுவந்து பார்வதி பரமேஸ்வரன் முன்னிலையில் படைத்து வீழ்ந்து வணங்குகிறார். சிறுவர் இருவரும் அக்கனியைப் பெறுதற்கு ஓடிவருகின்றனர். இருவருள் இக்கனியை யாருக்குக்கொடுக்கலாம்? என்னும் கேள்வியை நாரதர் கிளப்புகிறார். இருவருக்கும் இடையில் பந்தயம் விடலாம் என்று அவர் பகர்கிறார் அகிலாண்டங்களையும் அளந்து பார்த்துவிட்டு முதலில் வருகிறவனுக்கு இக்கனியைக் கொடுக்கலாமென்று மகரிஷி முடிவு கட்டுகிறார். பந்தயமும் விடுகிறார். முருகன் ஏறுமயில் ஏறி அண்டங்களை அளக்க அதிவேகமாகப் போய் மறைகிறான். மூத்தவனுக்கோ அத்தகைய ஆற்றல் இல்லை. வெறும் அறிவு சொரூபம். எண்ணிப் பார்க்கிறான். எலி வாகனனை அம்மை அப்பனை வலம் வருகிறான். கை நீட்டிக் கனியைக் கேட்கிறான். அகிலாண்டங்களையும் அளந்தாய் விட்டதா? என்னும் கேள்வி பிறக்கிறது. சிவசக்திக்குப் புறம்பாக அண்டங்கள் எங்கே இருக்கின்றன? என்னும் ஆக்ஷேபம் ஆனைமுகத்தவனிடமிருந்து வருகிறது. அறிவுத் தெய்வமாகிய அவன் கூற்றில் அர்த்தம் உளது. கனியை அவனுக்குக் கொடுக்க அம்மையப்பர் முன் வருகின்றனர். அதற்குள்ளாக இளையவன் அண்டங்கள் அனைத்தையும் அளந்தெடுத்து அவைகளின் உட்பொருளை அறிந்து கொண்டவனாக விரைந்து வருகிறான். மூத்தவனுடைய அறிவு பெரியதென்றால் இளையவனுடைய ஆற்றல் சாமான்யமானதன்று. அறிவுக்கு நிகராகவே அது இருக்கிறது. கனியை யாருக்கு வழங்குவது என்னும் வினவுக்கு விடை கண்டுபிடிப்பது மிகவும் கஷ்டம். அறிவுக்கு நிகரானது ஆற்றல். அறிவையும் ஆற்றலையும் நன்கு பயன்படுத்துகிறவர்களே அம்மை அப்பனை அடைய வல்லவர்களாகின்றனர். இக்கோட்பாட்டை மக்களுக்குப் புகட்டுதற்காகவே கணபதியும் கார்த்திகேயனும் அம்மை அப்பனுக்கு இருமருங்கிலும் எழுந்தருளியிருக்கின்றனர்.

இளையவன் ஆற்றல் தெய்வம் மட்டும் அல்லன். அவன் ஞான பண்டிதன். ஆதலால் அவன் தூக்கி வினை செய்கிறான். பரத்தை அடைய விரும்புகிற ஞான சாதகர்கள் எல்லார்க்கும் அவன் முன்மாதிரி. ஆதலால் கலியுகவரதன் என்னும் பெயர் பெற்றவனாக அவன் இலங்குகிறான். ஜீவாத்மாக்களிடம் இருக்கும் கூறுகளெல்லாம் அவனுடைய சொரூபமாக வடிவெடுக்கின்றன. அது எப்படி என்று பார்ப்போம். அறுமுகக் கடவுளாக அவன் இலங்குகிறான். உடல் எடுத்துள்ள உயிர் ஒன்றுக்கு ஆறுமுகம் தேவையில்லை. அப்படியிருக்க அவனுக்கு மட்டும் ஆறுமுகம் இருப்பானேன்? பண்பட்டுள்ள ஜீவன் ஒருவன் தன்னுடைய ஐந்து இந்திரியங்களையும், ஆறாவது இந்திரியமாகிய அகக்கண்ணையும் உச்ச நிலைக்குக் கொண்டு வந்திருக்கிறான். ஒவ்வொரு இந்திரியமும் தன்னளவில் பரிபூரண நிலையை எட்டியதாகும். ஓர் இந்திரியமே எல்லா இந்திரியங்களின் செயல்களைப் புரியவல்லதாகிறது. அந்த அளவில் ஒவ்வொரு இந்திரியமும் ஒரு தலைக்கு நிகராகிறது. அப்படி

ஆறு தலை படைத்திருக்கிறபொழுது அறிவுத் திறன் அகண்டாகாரமாக விரிவடைகிறது. அவனால் அறியப்பட்டது எது? அறியப் படாதது எது? என்னும் கேள்வி எழ இட மில்லை. முற்றும் உணர்ந்த முழுமுதற் பொருளாக அவன் இருக்கிறான். அதைச் சொல்லால் விளக்க முடியாது. ஆறுமுகம் என்னும் வடிவமே அதை நன்கு விளக்கு கிறது. இனி, மானுட சரீரத்தில் ஷட்சக்க ரம் என்று சொல்லப்படும் ஆறு ஆதாரங்கள் இருக்கின்றன. அவைகள் முறையே மூலா தாரம், சுவாதிஷ்டானம், மணிபூரம், அனு கதம், விசுத்தம், ஆக்ஞை எனப் பெயர் பெறுகின்றன. இந்த ஆறு ஆதாரங்களுக் கும் அதிஷ்டான தெய்வமாக இருப்பவன் கந்தன். அந்த யோக தத்துவத்தை விளக்கு தற்கு அவன் ஆறுமுகக் கடவுளாகிறான். புறவுலகில் அவனுடைய இருப்பிடம் ஆறு படை வீடுகளாக வடிவெடுக்கிறது. ஆக, ஒவ்வொரு முகமும் ஒரு ஞான பூமிக்கு எடுத்துக்காட்டாக அமைந்து இருக்கிறது. இறைவன் ஷட்குண சம்பன்னன் எனப் போற்றப்படுகிறான். ஆறுவித தெய்வீக சம்பத்து என அவைகள் பொருள்படுகின் றன. ஞானம், வைராக்கியம், வீரியம், ஐஸ்வர்யம், ஸ்ரீ, கீர்த்தி ஆகிய இவை ஆறும் பரமனிடத்தே பரிபூரண நிலையை எட்டி யிருக்கின்றன. முருகனிடம் இவை ஆறும் நிறைந்திருப்பதால் அவன் சண்முகக் கடவுளாகிறான்.

அன்னை பராசக்தி, இச்சா சக்தி, ஞான சக்தி, கிரியா சக்தி, ஸ்வரூபிணி என்று போற்றப் பெறுகிறாள். அத்தகைய பார்வதி தேவியின் புதல்வனாகிய முருகக் கடவுள் இச்சா சக்தியை வள்ளியின் வடிவத்தில் தம் பால் வைத்திருக்கிறான். ஞான சக்தியை கதிர்வேல் வடிவத்தில் கையில் ஏந்தியிருக் கிறான். கிரியா சக்தியை தேவ குஞ்சரி யாகத் தம்பால் வைத்திருக்கிறான். ஆக, அன்னையிடம் உள்ள மூவிதச் சக்திகளும் மைந்தனிடத்திலும் நிறைநிலையில் அமைந்து இருக்கின்றன.

இரண்டு கரங்களைக் கொண்டு சாதாரண மனிதன் செயற்கரிய காரியங் களைச் செய்கிறான். ஆறுமுகக் கடவுளோ தன்னுடைய முகங்களுக்கொப்பப் பன்னிரு கரங்களை உடையவனாக இருக்கிறான். ஒவ் வொரு கரத்திலும் ஒவ்வொரு தெய்வீக ஆயுதம் அமைந்திருக்கிறது. ஆதலால் அவ னால் ஆற்ற முடியாத செயல் ஏதுமில்லை. பிரபஞ்சமெங்கும் நிகழ்ந்து வருகிற தெய் வீகச் செயல்கள் அனைத்தும் அவனுடைய செயல்களாம். ஒவ்வொரு ஜீவனும் படைத் துள்ள ஆற்றலைப் பரமனுடைய வழிபாட்டுக் கென்றே பயன்படுத்தும் பொழுது அது கந்த வேளுக்குரிய சிறந்த வழிபாடாகிறது.

சேனாபதி என்னும் பெயர் படைத்த வனாகச் சக்தியின் செல்வன் இருக்கிறான். சேனாதிபதியின் திறமைக்கேற்பச் சேனை போரில் வெற்றி பெறுகிறது. பக்தர்கள் எல்லோரும் அக்ஞானத்தோடு போராடி அதைத் தகர்த்துவிட்டு, ஆண்டவனை அடைய முயலுகிறார்கள். அந்த அக்ஞான சொரூபமாக இருப்பவன் சூரபத்மன். ஆற்றல் மிகப் படைத்துள்ள அந்த அரக் கனைத் தகர்த்துத் தள்ளக் கந்தனுக்கே சாத் தியமாகிறது. ஆதலால் அவன் யாண்டும் தலைசிறந்த சேனாபதியாகத் திகழ்கிறான்.

இவை யாவுக்கும் மேலாகக் குமரக் கடவுள் குகன் என்று போற்றப்பெறுகிறான். குகையில் வசிப்பவன் குகன். குகைகள் அனைத்திலும் தலைசிறந்ததாய் இருப்பது ஜீவாத்மாவின் உள்ளம் என்னும் குகை. அனந்தங்கோடி ஜீவாத்மாக்களின் உள்ளங் களிலே இலங்குவதால் அவன் குகன் என் னும் நாமம் படைத்துள்ளான். அந்தந்த ஜீவன் உள்ளத்தில் வீற்றிருந்து கொண்டு அவர்கள் எல்லோரையும் அவன் பண் படுத்தி வருகிறான். அவனுடைய மகிமையை அறிந்து கொள்ளுதற்கு ஏற்ப அவன்பால் பக்தி பெருகுகிறது. பக்தி ஓங்குதற்கேற்பப் பக்தன் பரமனுக்கே உரியவனாகிறான். இத் தகைய அரிய பெரிய செயலை ஆறுமுகக் கடவுள் யாண்டும் இயற்றிவருவதால் மக்கள் அவன்பால் கவர்ந்தெடுக்கப் படுகின்றனர். ஊசி காந்தத்தின்பால் கவர்ந்திழுக்கப்படு வதுபோன்று ஜீவாத்மாக்கள் கதிர்வேல வன்பால் கவர்ந்தெடுக்கப் படுகின்றனர்.

வாழ்க கதிர்வேலன்! வாழ்க குகன்!!
வாழ்க குகன் அடியார்கள்!

உ
சிவமயம்

# அருள்மிகு அண்ணமலையார் திருக்கோயில்

## திருவண்ணமலை (வ. ஆ.)

அண்ணு மலைஎம் அண்ணு போற்றி!
கண்ணுர் அமுதக் கடலே போற்றி!

ஆதி அந்தம் இலாத அரும்பெரும் சோதியாய் விளங்கும் பரம் பொருள், ''அருவன் ஆயினும் அன்பர்க்கு உருவனுய் வருவன்'' என்ற மாமறைக்கிணங்க, அருவுருவத் திருமேனியான 'இலிங்க' வடிவில் தன்னை வெளிப்படுத்திக் கொண்ட சிறப்புப் பெற்றது இத்திருத்தலம்.

''நினைக்க முத்தி தரும் தலம்''
பஞ்ச பூதத்தலங்களுள் நடுநாயகமான ''அக்னித்தலம்''

''ஞானத் தபோதனரை வா'' என்று அழைத்து ஜோதியில் இணைத்துக் கொண்ட ''சிவ ஞானத்தலம்''

''சைவமும், தமிழும் தழைத்து ஓங்க'' தேவார திருப்பதிகங்களால் சிறப்புற்ற தலம்.

கருணைக் கடலான கந்தன் அருள் பெற்றுத் திருப்புகழ்தனை அளித்த அருணகிரியார் அவதரித்த தலம்.

எல்லாவற்றிற்கும் மேலாகத் திருக்கார்த்திகை நாளன்று இறைவன் ஜோதி சொரூபமாகக் காட்சியளித்ததை நினைவு கூரும் வகையில் இத்தலத்தில் திருக்கார்த்திகைப் பெருவிழா ஆண்டுதோறும் நடைபெறுதல் உலகிலே சிறப்புடைய ஒன்ரும்.

இவ்வளவு பெருமையும், அருமையும் கொண்ட இத் திருக்கோவில் பழமையான வரலாற்றையும், பல்வகையான அரிய கலைச் சிற்பங்களுடன், வானுயர் 9 கோபுரங்கள் உட்பட சுமார் 25 ஏக்கர் நிலப்பரப்புள்ள மிகப் பெரிய ஆலயத்தையும் கொண்டது. 217 அடி உயரமுள்ள இந்த ஆலய இராஜ கோபுரம் தான் தமிழகத்திலேயே உயரமான கோபுரமாகும்.

இவ்வாலயம் காலப் போக்கில் பழுதடைந்த நிலையில் இருப்பதால், கலையழகு மிக்க சிற்பங்களைச் சிதையாமல் காக்க, அதன் பழைய எழில்தனைப் புதுப்பித்துத் திருப்பணிகள் செய்து குடமுழுக்கு விழா செய்யவேண்டியது மிகமிக இன்றியமையாத ஒன்ருகும்.

ஆகவே சிவநேயச் செல்வர்கள் அனைவரும் தாராள மனமுடன் திருப்பணிக்காக வாரி வழங்குமாறும், அருள்மிகு உண்ணமுலை உடனுறை அண்ணமலையார் திருவருளைப் பெற்றுய்யுமாறும் வேண்டுகிருேம்.

திரு. பொ. பழனி முதலியார்
*அறங்காவலர் குழுத் தலைவர்*

திரு. பொ. கந்தசாமி, பி. எஸ்ஸி.,
*நிருவாக அலுவலர்*

திரு. பி. எஸ். மாணிக்கவேலு
,, ஆ. அண்ணமலை நயினர்
,, பி. எஸ். சந்தானம்
*அறங்காவலர்கள்*

# முருக ஜபம்



அன்பு முருகா! அருண கிரிக்குதவும்
இன்ப முருகா! இளமுருகா — துன்பம்
துடைக்கும் இனிய துரையேயென் அன்பின்
அடைக்கலத்தை நீயேற் றருள்



கவியோகி மகரிஷி
**சுத்தானந்த பாரதியார்**

"முருகா" என்பது சிவக்கனல். அது ஆணவச் சூரனை அழிக்கும்; அருளன்பரைக் காக்கும். ஆசைத்தலையை அறுக்கும்; ஆன்ம ஒளியைப் பெருக்கும். முருகன் உயர்ந்த அறிவுக்குன்றில் மாசற்ற இயற்கைச்சூழலில் விளங்குகிறன். முருகன் கோயில்கள் உருகும் அருட்காட்சியாகும். திருச்செந்தூரில் அலைகள் "முருகா" என்றுஆர்க்கின்றன; திருப்பரங்குன்றில் பரநாதப் பண் "கந்தா" என மிழற்றுகிறது; சாமிமலையருகே "ஞான பண்டிதா" என்று காவிரிப்புனல் அலைவீசியாடுகிறது; பழமுதிர்சோலையில் தவசக்தி "சிவசண்முகா" எனக் கனலுகிறது; பழநிமலையில் "அழகாகுழகா, அமுதா" என்று அன்பருள்ளம் ஆர்வக்கூத்தாடுகிறது. பழநி முருகனைப் பார்க்கப் பார்க்கப் பேரின்பம் சிலிர்க்கிறது. பழநிக் கோயில் குடநீராட்டு விழா காணக் கிடைக்குமா? கண்டால், அந்த அருளமுதைஉண்டால் ஆன்மாவுக்கு வேறென்ன குறை ... பாடுவோம் ... ஓம்

பழனி பழனி என்றதுமே
 பழைய வினைகள் பறந்தோடும்
பழனிவேலன் பதம் பிடித்தால்
 பாழுங் கவலைத் துயர்மாறும்
பழனியப்பன் புகழ் பாடின்,
 பந்த பாசப் பகைவிலகும்
பழனி முருகன் அருகிருந்தால் —
 பரமானந்தம் பெற லாமே.

••••

மருளார் பிறவித் துயர்மாற
 மருந்தொன் றுண்டு மாநிலத்தில்
இருளார் வினைகள் இயலாமே
 இதயத் தெளிவு தருமருந்து
பொருளார் பரமன் அருட்கனலிற்
 பூத்த மருந்து பழநிமலை
முருகா குமரா எனும்மருந்து
 முத்திக் கேற்ற முழுமருந்து.

அடியார் கூடி யன்பாலே
 அருளா ரின்பம் பெறுமருந்து
குடநீ ராட்டிக் கொண்டாடிக்
 குமரா அமரா என்ருடி
மடமை நீங்கிச் சிவஞான
 வரமே புல்கும் மலைமருந்து
சட வாழ்வினிலே சிற்சக்தித்
 தணலை மூட்டும் தவமருந்து

••••

அன்பே யான சிவபெருமான்
 அருளார் நெற்றிக் கனலானன்
துன்பே யின்றித் துயரின்றித்
 தொண்டர் துணையாய் வருமப்பன்
புன்பே யச்சப் பொய்யிருளைப்
 போக்கும் புலவன் பொற்கோயில்
தென்பேர் பழநிச் செவ்வேளின்
 திருக்கோயில் ஓம் குகக்கோயில்!

பித்தா என்ற சுந்தரர்க்கும்
பெருமை தந்த பரமசிவன்
முத்தார் மைந்தன் ஓங்கார
மூலப் பொருளை முறைவகுத்த
சித்தார் பழனி மலையாண்டி
செந்தில் வேலன் காங்கேயன்
வித்தார் வேதப் பொருளானன்
வேந்தன் அருளை வேண்டுதுமே.

••••

பத்தர் கவலைப் படர்தீரப்
பாரில் சைவத் திருஓங்க
அத்தன் எம்மான் ஆறுமுகன்
அயில்வே லப்பன் அருள்புரிவான்
சித்தங் குவிந்தே சிவமுருகன்
ஜெபமே செய்வோம் உடனுய்வோம்!
சுத்த சக்திச் சுடர்வேலா
சுப்ரம் மண்யர் சரண்என்போம்.

••••

கல்லும் தெப்பம் எனமிதக்கும்
காட்டு யானை முன்பணியும்
கொல்லும் விடமும் அமுதாகும்
கூற்றும் குமையும் ஆற்றலுறும்;
சொல்லா ஊமை கவிபாடும்
சொல்லுக் காற்றல் வளமோங்கும்
அல்லும் பகலும் "முருகாஓம்
அருளாய்" என்னும் அடியார்க்கே.

••••

பெருகா தலுடன் பேசுங்கள்
பெருமான் புகழைப் பாடுங்கள்;
கருதிக் கருதி யுருகுங்கள்;
கண்கள் குளிரக் காணுங்கள்;
குருவே குகனே குமராஓம்
குன்றின் மணியே அறிவொளியே
முருகா பழனி முதல்வாஷண்
முகனே என்றே முறையிடுவோம்!



# நாட்டியத்தின் ஆன்மிக அடிப்படை



உலகெலாம் உணர்ந் தோதற் கரியவன்
நிலவுலாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத்து ஆடுவன்
மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம்.



ஸ்ரீமதி ருக்மிணி தேவி

நம் பாரத நாட்டில் மிகவும் புராதன மானதும், சிறப்பு மிக்கதும் நாட்டியக் கலை யாகும். எனக்குத் தெரிந்த வரையில் பாரதம்தான் இக்கலைக்குத் தேசீய வாழ் விலும், தெய்வீக வாழ்விலும் உன்னத இடத்தை அளித்திருக்கின்றது. இந்தப் புனிதக் கலையின் முன் ஏற்றத்தாழ்வு கிடை யாது. இந்தக் கலை எல்லாருக்கும் பொது வானதாகும். நாட்டிய அரங்கிற்குப் "பொது" என்ற பெயரும் உண்டு. இந்தக் கலைக்கு உணர்ச்சியும், உற்சாகமும், எடுத்துக் காட்டும் ஒப்பற்ற இறைவனிட மிருந்தே தோன்றுவனவாகும். கடவுளின் அம்சமாகிய ஒவ்வொருவரும் இந்த நாட்டியக் கலையில் ஈடுபடவேண்டும். இந்தக் கலை ஒரு நாட்டுக்கு மட்டும் உரியதன்று. உலகம் முழுவதுக்குமே சிறப்பாக அமைந் துள்ளது. இந்தக் கலை உண்மையில் நிரந் தரமானது. அழிவற்றது. கடல் நீரில் பல வித வண்ணங்களுடன் ஒளிவிடும் சூரிய கிரணம் போன்றது இந்தக் கலை. வாழ் வின் தனித் தன்மையிலிருந்து மனிதன் படைக்குந் திறனைப் பெற்றான். கலை வெளிப் படையாக இருக்கின்றது. கலையின் உண்மை உருவத்திற்குச் சூழ்நிலை மிகவும் முக்கியம். அந்தச் சூழ்நிலையையே தேசீய வாழ்க்கை என்கின்றோம். நம் இந்தியாவில் நாட்டியமும் பிற கலைகளும் தெய்வீகத் தத்துவமாக அமைந்துள்ளன. இந்திய நாகரிகத்தில் இது ஒரு ஒப்பற்ற தனிச் சிறப்பாகும். நம்மால் மிகவும் உயர்ந்தவற்றை அறிய முடியுமானால் மிகவும் தாழ்ந்தவற்றையும் அறியமுடியும். ஏனெனில் இரண்டும் ஒன்றாகும்.

இந்த நோக்கத்தின் அடிப்படையில் தான் நாட்டியக் கலையின் பாரம்பர்யம் நம் நாட்டில் நிலவி வருகின்றது. நாட்டியம் மட்டுமே தனிக்கலை ஆகாது. உடலின் மூல மாக எல்லாக் கலைகளையும் இணைப்பது நாட்டியம் ஆகும். உண்மையில் உடலின் தன்மை கலைக்கு உடன்பட்டாலும் அது தாமச இயல்பை உடையது. அதன் உள் ளுணர்வை வெளிப்படுத்தும் தன்மையையே நாம் நாட்டியம் என்கின்றோம். எனவே உட லும், உணர்ச்சியும் நாட்டியத்தைத் தோற்று விக்கின்றன.

உணர்ச்சி எவ்விதம் தோன்றுகின்றது. நாட்டியம் விரைவில் வளைந்து கொடுக்கும் தன்மையால் பாதிக்கப்படுகின்றது. இதைத் தூண்டுவது ஒலியாகும். சங்கீதத்தில் ஒலி அசைவு மூலம் தன் இயல்பை விளக்கு கின்றது. யோகியர்க்கும் பரம யோகியான நடராஜ மூர்த்தத்திலிருந்து இவை அற்புத மாக மக்களுக்கு உணர்த்தப் படுகின்றன.

அவனிடம் எத்தகைய ஞானமும், கலைகளும் ஒன்று சேர்ந்து குடிகொண்டிருக்கின்றன.

நாட்டிய உணர்வு நாகரிக மக்களிடமும் அநாகரிக மக்களிடமும் இருப்பதைக் காண்கிறோம். நாட்டியம் எல்லாருக்கும் இன்பமளிக்கும் கலையாக மாறும்போது அதனிடம் தெய்வத் தன்மை ஏற்படுகின்றது. எல்லாச் சுவையினருக்கும் இந்தக் கலை இன்பமளிக்கின்றது. நாட்டியத்தில் சங்கீத வித்வான் அனுபவிக்கும் இசை உண்டு. நாட்டியமே உடலுக்குச் சங்கீதமாக அமைகின்றது. சங்கீதமும். சாகித்தியமும், இசையும், பிறவாத்தியங்களின் உதவியோடு சேர்ந்தால் அது முழுமையான சங்கீதம் என்று கூறப்படுகிறது. சங்கீதத்தில் நாட்டியம் உள்ளது போல நாட்டியத்தில் சங்கிதம் இருக்கின்றது. சங்கீத உணர்ச்சியின்றி நாட்டியமும் இயங்க முடியாது. ஏனெனில் சங்கீதமே உயர்ந்த உணர்ச்சி பாவங்களுக்கு இயல்பாகவும், அசைவுகளாலும், அபிநயத்தாலும் அதன் இருப்பிடமாகின்றது. சங்கீதத்தைக் கை முதலிய அபிநயத்தாலும் முகபாவத்தாலும் மற்ற அங்க அசைவினுலும் தெரியப்படுத்துவதன் மூலம் நாட்டியம் ஆடுபவர் மற்ரெரு கலையை வெளிப்படுத்துகின்ருர். அதுவே நாட்டியம் அல்லது நாடகக்கலையாகும். பின்னர் நாட்டியமாடுபவர் கதை சொல்பவராகவும் நடிப்பவராகவும் மாறுகின்ருர். கதையைச் சொல்வதற்கும் நாடகத்திலுள்ள ஒரு பாத்திரத்தை விளக்குவதற்கும் ஆடை முதலிய வேடங்களே ஒரு அபிநயமாகும். இது நான்கு முக்கிய பிரிவுள்ள நாட்டியத்திற்கு ஓர் அம்சமாகும்.

தனியாக ஆடும் பரத நாட்டியத்தில் நிருத்யம் ஆடுபவனும் கதை சொல்வான். தவிர நாட்டியத்திற்கேற்றவாறு ஆடைகளும் அணிகலன்களும் அணிந்துகொள்வான். பகட்டின்றிச் சாதாரண ஆடைகளையே அணிவான். ஆனல் நாட்டியம் ஆடுபவன் அழகாக இருப்பதன்றித் தான் கூறும் கதை பிறரை வசீகரிக்கச் செய்யும் விதத்தில் நடந்து கொள்ள வேண்டும். அவனுடைய கலை நாட்டிய உருவத்தில் உள்ள சங்கீதமே ஆகும். அவனிடத்தில் ஒவ்வோர் உணர்ச்சியும் ஒவ்வோர் பாத்திரமும் அடங்கியுள்ளன. நாட்டிய நாடகத்தில் நடனமாடுபவர் ஒரு தனியான பாத்திரமாக இருந்தால் ஆடையின் தன்மை ஒரு ரசத்தை அல்லது அடிப்படையான ஒரு பாவத்தை விவரிக்கும். உண்மையாக விளக்குவதற்குத் தன்னுடைய அனுபவமே சாதனமாக உள்ளது. இது தெய்வீக வாழ்க்கையின் முன்னேற்றத்தைத் தெளிவாக விளக்கும்.

ஆகவே நாட்டியம் மற்றைய கலைகளை ஒருங்கிணைக்கும் பாலமாகும். சித்திரத்திற்கு வண்ணம் பூசுபவர் வண்ணத்தையும் அழகையுமே நோக்கிக் கொண்டிருப்பார். சிற்பக்கலை நிபுணர் அழகான வடிவம் உருவாக்குவதையே இலட்சியமாகக் கொண்டிருப்பார். நடிகர் வாழ்க்கையின் பிரதிபலிப்பைத் தோற்றுவிப்பார். இசைவாணர்களும் கவிஞர்களும் பாடலின் தன்மையைக் கவனிப்பார்கள். உடலையும் ஆன்மாவையும் அர்ப்பணம் செய்து மேற்குறிப்பிட்ட தகுதிகள் ஒரு நாட்டியக்காரனுக்கு இருக்குமாகில் அவனே நடராஜ தத்துவத்தின் உணர்வு ஆகி விடுவான். அவனுடைய அங்கங்களாக, அங்கங்களின் அசைவுகளாக, உலகம் இயங்குவதாக விவரிக்கின்றனர். அவன் ஆடை அணிகலன்கள் (அஹர்யம்) நிலாவும் நட்சத்திரங்களுமாகும். சிவமே சாத்வீகத்தின் உண்மை உணர்வின் ரசமாகி விடுகின்றது. அவனிடம் எல்லாம் ஒன்ருக இருக்கின்றன. அவனிடமிருந்தே எல்லாம் தெய்வீக உணர்வுடன் தோன்றுகின்றன. இதுவே நாட்டியம் எனப்படும். இதுவே நம்முடைய பாரம்பரியமாகும்.

இந்தக் கண்ணேட்டத்தில் நாம் இன்னும் இந்தியாவில் உண்மையான நாட்டியத்தைக் காணலாம். பரத நாட்டியமே இந்தியாவிலுள்ள எல்லா நடனத்துக்கும் வேரும், மூலமும் ஆகும். இந்தியாவில் எல்லா நாட்டியமும் பரத நாட்டியத்தின் சாரமே ஆகும். ஆனல் ஒரு சாரார் மட்டும் அந்தக் கலைக்குப் பரத நாட்டியமென்று பேர் வைத்துள்ளனர். பரத முனிவருடைய நாட்டிய சாஸ்திரமே

மிகவும் பழமையான ஆதார நூலாகும். தென்னிந்தியாவில் தஞ்சாவூர் பரத நாட்டியக் கலையின் பள்ளியென்று அறியப் பட்டாலும் காஞ்சீபுரமும், பிற இடங்களும் இந்தக் கலையை அதற்குச் சமமாகப் பயிற்சி பெறப் பெருமை பெற்றவையாகும். ஒவ்வொரு கோவிலிலும் எல்லாச் சிறப்பு நிகழ்ச்சிகளிலும் நாட்டியம் இடம் பெற்றிருந்தது. இந்தக்கலை உடற்கவர்ச்சியை மட்டும் கருதித் தெய்வீக நிலையை மறந்து விட்டதால் அழியக்கூடிய நிலையில் இருந்தது. ஆனல், உலகம் யாரைப் புறக் கணித்ததோ அவர்களின் பக்தியினலும், நாட்டியத்தின்பால் உள்ள உண்மைத் தன்மையாலும் இந்தக் கலை அழியாமற் பாதுகாக்கப் பெற்றது.

இந்தியர்கள் மனேபாவத்தில் பாத்திர இயல்பும், நாட்டியமும் இணைந்தே செல்கின்றன. உண்மையில் அவை இரண்டும் ஒன்றே. ஒன்றின்றி ஒன்று உட்படாமல் இயங்க இயலாது. இறைவன் இறைவியின் வேடங்கள் புனைவதே ஒருவனைத் தெய்வீக முள்ளவனக்குகின்றது. இந்திய நாட்டியம் தெய்வீகம் பொருந்தியுள்ளதால் அது ஆன்மிக வளர்ச்சிக்குப் பொருத்தமாக உள்ளது. பாவங்களின் மூலம் ஒருவன் கதைகளில் காணும் கடவுளின் தன்மையைச் சித்திரித்துக் காட்டுகின்ருன். இந்திய மேதைகள் மனிதப் பண்பே தெய்வம் என்றும் தெய்வீகத் தன்மையே மனித இயல் என்றும் காட்டியுள்ளனர். எனவே இறைவனும், இறைவியும் புராணங்களில் மனிதனைப் போல வாழ்ந்து பேசுகின்றனர். இவ்வாறு இந்தியா முழுதும் நாட்டியம் இருந்து வருகின்றது. தஞ்சாவூரில் பாகவதர்களின் (ஆண் நடிகர்கள்) நாட்டிய நாடகமும், ஆந்திர நாட்டில் குச்சிப்புடியும், மலையாளத்தில் சாக்கியார் கூத்தும் இன்னும் நிலவி வருக்கின்றன. இவற்றின் மூலமாகவும், இன்னும் கேரளத்தில் நிலவி வரும் கதகளி மூலமாகவும் சமயமும், தத்துவமும், கலையும் வாழ்ந்து வருகின்றன.

நாம் நம்முடைய பரம்பரைச் செல்வத்தை மறந்து விட்டபடியால் கலைச் செல்வம் ஏறக்குறைய மறையும் நிலைக்கு வந்து விட்டது. இன்று அந்தக் கலையின் சிறப்புக்குத் திடீர் என விழிப்புணர்ச்சி ஏற்பட்டு, மக்கள் எங்குப் பார்த்தாலும் நாட்டியக் கலை பற்றியே சிந்திக்கவும், பேசவும் ஆரம்பித்துள்ளனர். நாட்டியம் நம் வாழ்வின் முன்னேற்ற சாதனமாக இருப்பதால் ஒரு தெளிவான மாறுதல் இந்த நாட்டியக் கலையில் ஏற்பட வேண்டும். இந்தியக் கலைகள் பொதுவாகக் கீழ்நிலையுற்று வருகின்றன. அநாகரிகமான பண்பாடற்ற அம்சங்களை இந்தக் கலைகளில் புகுத்தி வருகின்றனர். சாதாரணமாக இராமாயண மகாபாரதக் கலைகளைக் கொண்ட நாட்டியங்களே அநாகரிகமாக நடிக்கப் பெற்று வருகின்றன. சில சமயங்களில் மிகவும் ஆபாசமாகவும் நடிக்கப் பெறுகின்றன. கடினமாக உழைத்து நல்ல யோசனை செய்து பக்தியுடன் நாட்டியங்களை உருவாக்க வேண்டும். பக்தி இன்மையால் ஒழுங்கு இல்லை. அதனல் இந்தக் கலையின் சிறப்பு அம்சங்கள் கைவிடப் படுகின்றன. இதனல் உணர்ச்சி பாவமே இல்லை என்னும் முடிவு ஏற்படுகின்றது. உள்ளிருந்து பொங்கிவரும் உணர்ச்சிகளுக்குப் பதிலாக வெளியே இருந்து பெறும் உற்சாகத்தை எதிர்பார்க்க வேண்டியுள்ளது. இதனல் விமரிசனத்தின் தரமே குறைந்து போகின்றது. இன்றைய கலை அன்னியர்களைப் பார்த்துக் காப்பி அடிக்க நேரிடுகின்றது. உண்மையான கலை பிறரிடம் இருந்து தோன்ருது. தன்னுள் இயல்பாகவே தோன்ற வேண்டும். ஆழமான கிணற்றிலிருந்து புதிய நீர் ஊற்றுக்கள் எப்படித் தோன்றுமோ அதேபோலப் புதிய புதிய இலட்சியங்களும், எண்ணங்களும், நோக்கங்களும் தனக்குள்ளே தோன்ற வேண்டும். நமது பாரத தேசம் நடனத்தை ஆனந்த வடிவாகக் கருதுகின்றது. அதனல்தான் நடராஜப் பெருமானின் நடனத்தை ஆனந்தத் தாண்டவம் என்கின்ருேம். இதுவே யோகிகளின் ஆனந்தம். யோகிகளின் தன்மை எவ்வாறு உள்ளது? தன் உடலை மறந்த ஒருவரே யோகியாவார் அந்தத் 'தன்னை மறக்கும் நிலை' வெறுப்பினல் ஏற்படவில்லை. தன்னையே தன் வயப்படுத்தும் சக்தினல் ஏற்பட்டதாகும். உடலுக்கு நன்கு பயிற்சி

யளிப்பதன் மூலம் பக்குவப்படுத்திய பிறகே ஒருவன் அதை மறக்கின்ருன். ஒரு கலை மற்ருெரு கலையை மறைப்பதன் தத்துவமே இது தான். எனவே நடனமும் தன்னை மறக்கச் செய்வதால் ஒரு யோகம் என்று கூறப்படுகிறது. நாடோடிக் கலைகளிற்கூட ஆனந்தம் வெளிப்படுத்தப்படுகிறது. இந்தியாவின் எல்லாப் பாகங்களிலும் நாடோடிக் கலைகள் இருக்கின்றன. தனியாக ஆடும் கலையாகவும், கூட்டாக ஆடும் கலையாகவும், நாட்டியநாடகமாகவும் அவை இருக்கின்றன. அவை ஒவ்வொன்றும் வாழ்க்கையின் தனித் தன்மையைச் சுற்றியுள்ள சூழ் நிலையைப் பற்றிய நினைப்புக்களை ஒவ்வொரு வகையில் பிரதிபலிக்கின்றன. ஒவ்வொன்றும் ஒவ்வொன்றிலிருந்து மாறு பட்டுள்ளன. குஜராத்தில் கர்ப, ராசலீலை, கேரளத்தில் கைகொட்டிக் களி, தமிழ்நாட்டில் கும்மியும், கோலாட்டமும். அஸ்ஸாம் ஒரிசாவில் கிராமிய நடனங்கள். ஒவ்வொருவனின் சிந்தனை நிலைக்கும் ஏற்ற வண்ணம் நாட்டியம் தாழ்ந்த நிலையிலிருப்பவரிலிருந்து உயர்ந்த நிலையில் இருப்பவர்களுக்கும், குழந்தைப் பருவத்திலிருந்து வயது வந்த பருவத்தினருக்கும் சங்கீத இயக்க மூலம் இந்தக் கலை நாட்டில் நிரப்பப்படுகின்றது. இந்தியர்கள் இந்தியர்களின் சாரம் எது என்பதை எப்போது உணர்கின்ருர்களோ அப்போது தான் கலை புத்துயிர் பெற்றுப் பழைய உயர்ந்த நிலை எய்தும். நாட்டியம் பரிசுத்தமான நிலையில் மக்களுக்கு மீண்டும் கிடைக்கும். நாட்டியம் புத்துயிர் பெற முயற்சி செய்யப் படுகின்றது. இந்த முயற்சி வெற்றிகரமாகத் தொடர நாம் இந்தக் கலையின் ஆன்மிகச் செய்தியை உணர்ந்து கலையை நாம் வாழ்வின் ஒரு பகுதியாக்க வேண்டும். அப்போதுதான் நம்முடைய உண்மையான வாழ்க்கை கலைக்குத் தொண்டாற்றத் தொடங்கும். இந்தியா எழில் மிக்க நாடாக விளங்கும். இந்தக் கலையே முனிவர்கள், மனிதத் தன்மையின் பாதுகாவலர்கள் அளிக்கும் செய்தியைச் சுமக்கும் சரியான சாதனமாகும்.





தசாவதாரம் - அகோபில வரதராசப் பெருமாள் கோவில், பாலசமுத்திரம்

# சேக்கிழார் கண்ட சீர்திருத்தம்



திரு. பூ. அமிர்தலிங்கன், எம். ஏ.

கருவியும் காலமும் செய்கையும் செய்யும்
அருவினையும் மாண்டது அமைச்சு.

என்பது அமைச்சர்க்குரிய மாட்சிகளாக வள்ளுவர் கண்ட வரம்புகளாம். தமிழ் நாட்டில் சோழப் பேரரசு, புகழொடு விளங்கிய கி. பி. பன்னிரண்டாம் நூற்றாண்டின் முற்பகுதியில் இரண்டாம் குலோத்துங்கனது அரசவையில் முதலமைச்சராக விளங்கியவர் சேக்கிழார் என்பது யாவரும் அறிந்தது. அரசராலே "உத்தம சோழப் பல்லவன்" என்ற பட்டம் பெறத்தக்க வகையில் புகழுடன் விளங்கியவர் சேக்கிழார் என்பதும் வரலாறு காட்டும் உண்மை. நாட்டின் நிலையறிந்து, சீர்திருத்தம் செய்ய வேண்டியவற்றை அரசர்க்குணர்த்தி, அல்லன நீக்கி நல்லன செய்தல் அமைச்சரின் கடமை.

சோழப் பெருநாடு, "நாடென்ப நாடா வளத்தன" என்பதற்கு எடுத்துக்காட்டாக விளங்கிவந்த செழுமையான காலம் சேக்கிழார் காலம்.

முதற் குலோத்துங்கன் மீது பாடப் பெற்ற போர்ப் பாடலாகிய கலிங்கத்துப் பரணி முதலாக, அவன் மகன் விக்ரம சோழன் மீது பாடப்பெற்ற உலா, அவன் மகனும் தனக்கரசனுமாகிய இரண்டாம் குலோத்துங்கன் பேரில் இயற்றப் பெற்ற உலா, பிள்ளைத் தமிழ் ஆகியவற்றால் எல்லாம், மக்கள் நெஞ்சில் மன்னவன் புகழே நிறைந்திருந்ததன்றி இறைவனைப் போற்றும் பண்பு குறைந்து வந்துள்ள நிலைமையைச் சேக்கிழார் எண்ணிப் பார்க்கிறார், வளமான வாழ்வும், போர் வெற்றியும்; அரசனையே தெய்வமென மதித்துப் பாடப் பெற்ற சிறப்புடைய ஒரு நூற்றாண்டுக் கால இலக்கியப் போக்கையும் எண்ண எண்ணச், சேக்கிழாருக்கு மக்கள் மன ஓட்டத்திலே ஒரு மாற்றம் — சீர்திருத்தம் இன்றியமையாதது என்ற முடிவிற்கு வருகிறார்.

புத்தத்திற்கு மணிமேகலையும், சமணத்திற்குச் சிந்தாமணியும் இலக்கிய உலகில் காப்பியங்களாகத் திகழ்வதை மனங்கொண்ட சேக்கிழார், சைவ சமயத்திற்கும் ஒரு காப்பியம் செய்தால், மக்கள் மனநிலையிலும், மன்னன் போக்கிலும் ஒரு நன் மாறுதல் ஏற்படுதல் கூடும் என்று சிந்திக்கின்றார். அச்சீர்திருத்தச் சிந்தனையின் விளைவே பெரிய புராணமாக மலர்கிறது.

புத்தமும், சமணமும் பிறநாட்டுச் சமயங்கள், வடநாட்டுச் சமயங்கள். அச் சமயங்களின் கோட்பாட்டால் சங்கப் பிற

காலத் தமிழர்தம் வாழ்வில் ஏற்பட்ட மாற்றங்கள் பல. அகத்திலும், புறத்திலும் போலிக் கோட்பாடுகள் தலைதூக்கி நிற்க, நிலையாமை, துறவு தன்னொறுப்பு என்ற எண்ணங்கள் மீக்கூர்ந்து பிணிக்க அதனால் தலை தடுமாறிய தமிழர் சமுதாயத்தை, நன்னெறிப் படுத்திப் பக்தியை ஊட்டி வாழ்விக்க அவதரித்தவர்களே நாயன்மார்களும் ஆழ்வார்களும் ஆவர். அவர்கள் பாடிய தெய்வச் செந்தமிழ்ப் பாக்களின் அடிச்சுவட்டிலேயே, தமிழர்தம் தொன்மைச் சமயமான சைவம்பற்றிக் காப்பியம் செய்ய எண்ணும் சேக்கிழார், மொழிப்பற்றாலும், நாட்டுப் பற்றாலும் அதனை மேற்கொண்டார் என்று நினைப்பதில் குற்றமொன்றுமில்லை.

" திசையனைத்தின் பெருமையெலாம்
தென்றிசையே வென்றேற
..........................
அசைவில்செழுந் தமிழ்வழக்கே
அயல்வழக்கின் துறைவெல்ல "

என்பது சேக்கிழார் வாக்கு. எனவே தமிழ்நாட்டுச் சமயத்தைத் — தமிழோடு கலந்த சமயத்தைத் — தேவார திருவாசகங்களை உரிமையாகவுடைய சமயத்தைக் — காப்பிய வாயிலாகவும் முதன் முதலாக வளர்க்க எண்ணியதும் சேக்கிழாரின் முற்போக்குச் சீர்திருத்தச் சிந்தனையேயாகும்.

காப்பிய அமைப்பிலே சேக்கிழார் காட்டும் சீர்திருத்தம், புதுமை நிறைந்ததும் — புரட்சித் தன்மை பெற்றதும் — தனித்தன்மை வாய்ந்ததுமாகும். ஆலால சுந்தரரைக் காப்பியத் தலைவராக வைத்து, நாட்டுச் சிறப்பில் சுந்தரர் வாழ்ந்த சோழ நாட்டையும், நகரச் சிறப்பில் அவர் பிறந்த திருவாரூரையும் பாடுகின்றார். இடை இடையே நாயன்மார் வரலாற்றைத் தொகுத்துப் புதுப்புனைவு — புதுப்புணர்ப்பு — புது உத்தியாலான புத்திலக்கியம் செய்கிறார். திருக்கயிலைத் திருமலையிலே தொடங்கித் திருக்கயிலையிலே காப்பியத்தை முடிக்கின்றார். 'உலகெலாம்' என்ற அருமைத் தொடரைக் காப்பியத்தின் முதல், இடை, கடையிலே வைத்துத் தொடுக்கின்றார். ஒவ்வொரு நாயனார் புராணமும் ஒரு தனிக்காப்பியம் போல, நாட்டு வருணனை, நகர வருணனை முதலியவற்றோடு தொடங்கி அந்நாயனாரின் முத்திப் பேறு வரை சென்று முடிகின்ற தன்மையை நாம் காண்கிறோம். ஆனால் அவை ஒன்று கூடி நின்று தனி மலர்கள் பல கூடித் தொடுக்கப் பெற்ற பூமாலை போல ஒரு பேரிலக்கியமாகத் திகழும்படியாகவும் தம் நூலை அமைத்த திறம் வியப்பிற்குரியது. இதனை இலக்கிய நெறிச் சீர்திருத்தம் எனல் தகும்.

பெரிய புராணத்துள் சிவபெருமானையன்றி, பிற தெய்வ வழிபாட்டிற்குப் பெரிதும் இடமில்லை. அதுபோலப் பிற சுவைகட்குப் பேரிடமின்றிப் புதுவதான பக்திச் சுவையே நனி சொட்டச் சொட்டப் பாடிப் புதுமை செய்கிறார். நூலின் தொடக்கத்தே பாயிரத்தில்,

" எடுக்கும் மாக்கதை.........
கடக்களிற்றைக் கருத்துள்
இருத்துவாம் ''

என்று விநாயக வணக்கம் செய்கிறார். ஏன்? என்று சற்றுச் சிந்தித்தால் உண்மை புலனாகிறது. பொல்லாப் பிள்ளையார் அருளின்றேல் சேக்கிழாருக்கு—நம்பியாண்டார் நம்பிக்கு—திருத்தொண்டத் தொகை கிடைக்குமாறு யாங்கனம்? எனவே அதனை நினைந்து மீண்டும் அவர் அருள் வேண்டுகிறார் போலும். அமைச்சராக வாழ்ந்த சேக்கிழார் தில்லையிலே. என்று திருத்தொண்டர் புராணத்தை அரங்கேற்றினாரோ அன்று முதல் தொண்டர் சீர் பரவுவாராகித் துறவியாகவே வாழ்ந்து முக்தியடைகிறார். இதனினும் சிறந்த வாழ்க்கைச் சீர்திருத்தம் என்பதும் ஒன்றுண்டா?

II

இனி, தம் காப்பிய நாயகரான சுந்தரரின் வாழ்வியலில் சேக்கிழார் காட்டும் சீர்திருத்தக் கருத்துக்களைச் சிறிது காண்போம். சுந்தரரின் வாழ்வே ஒரு சீர்திருத்த வாழ்வென்பது சேக்கிழாரின் உட்கிடை. எனவேதான் "ஈசன் அடியார் பெருமையினை எல்லா உலகும் தொழவெடுத்துத், தேசமுய்யத் திருத்தொண்டத் தொகைமுன் பணித்த திருவாளன், வாசமலர் மென்கழல்

வணங்க வந்த பிறப்பை வணங்குவாம்" எனப் போற்றுகின்றார். இறைவன் "மலர் சிலம்படி வாழ்த்தி வணங்குவாம்'' என்று பாடிய சேக்கிழார், சுந்தரரின் கழல் வணங்க வந்த பிறப்பை வணங்குவாம் என்று பாடுகின்றார் என்றால், அடியார் பெருமையைப் பாடிய ஆரூரரிடத்திலே சேக்கிழாருக்கிருந்த ஈடுபாடு எவ்வளவினது என்பது ஒருவாறு புலனாகும்.

ஆதி சைவ மரபிலே பிறந்த ஆரூரரை நரசிங்க முனையரையர் தம் காதன்மையால் கொண்டு சென்று, அரண்மனையில் வளர்ப்பதாகச் சேக்கிழார் காட்டுகிறார். அரசச் செல்வாக்கையும் வளத்தையும் கதைத் தலைவர் உணர்ந்து வளர்ந்தமையே, பின்னர் சேர அரசருடன் நட்புக் கொள்வதற்கு ஏற்ற மனநிலையைத் தோற்றுவித்தது எனக் கொள்ளல் தவறாகாது. இவ்வாறு தம் காப்பிய நாயகனை வளர்ப்பால் அரசத் தகுதி பெறுமாறு சேக்கிழார் அமைக்கின்றார்.

தடுத்தாட் கொண்ட புராணத்திலே, ''ஆசில் அந்தணர்கள் வேறோர் அந்தணர்க் கடிமையாதல் பேச இன்றுன்னைக் கேட்டோம் பித்தனோ'' என்று 'சாதி நெறி' பேசிய சுந்தரர், பின்னர் உருத்திர கணிகையர் குலத்துப் பிறந்த பரவையாரைத் திருமணம் செய்து கொள்வதில் உள்ள சீர்திருத்தப் பாங்கு சிந்தனைக்கு உரியதாகும்.

அடுத்து வேளாளர் குலத்திலே ஞாயிறு கிழார் மகளான சங்கிலியாரைத் திருமணம் செய்து கொள்வதிலும் முற்கூறிய சாதியுடைப்பையும், கலப்புத் திருமணத்தையும் நாம் காண்கிறோம்.

சேரமான் பெருமாள் நாயனாரைச் சுந்தரர் தம்மோடு ஒன்றாக உடனிருத்திப் பரவையாரின் இல்லத்தில் அமுதுண்ணச் செய்த செய்தியால் 'சமபந்தி போசனம்' என்று சொல்லப் பெறும் உடனிருந்துண்ணும் சீர்திருத்தத்தைக் காண்கிறோம்.

இனி, கோட்புலியார் மகளிராய சிங்கடி, வனப்பகை என்பவர்களைத் திருமணம் செய்துகொள்ளச் சுந்தரர் மறுப்பதின் வாயிலாகக் ''காதல் இன்றிக் கடிமணம் இல்லை'' என்ற அவர்தம் கோட்பாட்டை நாமறியலாம்.

சமண, பவுத்த மதக் கோட்பாடுகட்கு மாறாகச் சைவ சமயத்தார், இல்லறத்தாராயிருந்தே வீடு பேறடையலாம் என்பதைப் பல நாயன்மார் வரலாற்றுள் நாம் கண்டாலும், காப்பிய நாயகரின் வாழ்விலேயே அதனை அமைத்துக் காட்டியது நமது கவனத்திற்குரியது. தேவார மூவரில், ஞான சம்பந்தர் திருமண நாளிலே நல்லூர்ப் பெருமணத்தில் இறை ஒளியோடு ஒன்றி விடுகின்றார். நாவரசரோ நடையாறப் பெருந் துறவியாகவே வாழ்ந்து வீடுற்றவர். எனவே இவர் இருவருக்கும் இல்லற வாழ்வு வாய்க்கவில்லை. இதற்கு மாறாக, சுந்தரர் இருவரைத் திருமணம் செய்து இல்லறத்தாராகவே வாழ்ந்தும், இறையன்பில் தோய்ந்து வீடுபேறுற்றவர் என்பதைச் சேக்கிழார் காட்ட நாம் காண்கிறோம்.

### III

இனி, பிற நாயனார் வரலாறுகளிலே காணப்பெறும் சீர்திருத்தக் கருத்துக்கள் பலப்பல. அவற்றுள் ஒரு சிலவற்றைப் பார்ப்போம்.

நாவுக்கரசர் உழவாரப் பணிசெய்து வாழ்ந்தார் என்பதை, 'உழவாரப் படையாளி' எனச் சேக்கிழார் பாராட்டுகிறார். கைத் தொண்டு செய்யும் மாண்பை நிலைநாட்ட நாவரசர் தில்லைத் திருவீதியைச் சுத்தம் செய்தார் என்றும் சேக்கிழார் குறிக்கின்றார். இன்றைய (Social Service League) சமுதாயப் பணிக் குழுக்கள் என்பதோடு ஒத்து, இந்தக் கருத்துக்களை எண்ணிச் சீர்தூக்கிப் பார்க்க வேண்டும். "மெய்த்தொண்டு" என்பதன் மேன்மையைச் சேக்கிழார் உணர்த்தும் பாங்கு சிறப்புடையது.

அப்பூதியடிகள் புராணத்திலே - வேளாளராய திருநாவுக்கரசரும் அந்தணராகிய அப்பூதியடிகளும் அவர்தம் மைந்தரும் உடனிருந்து உண்ண, அப்பூதியடிகளின் மனைவியார் உணவு பரிமாறினார் என்ற செய்தியை,

மைந்தரும் மறையோர் தாமும்
மருங்கிருந் தமுது செய்யச்
சிந்தைமிக் கில்ல மாதர்
திருவமு தெடுத்து நல்க
அந்தமில் ஆளியார் அங்கு
அமுதுசெய் தருளி னரே

என்று சேக்கிழார் பாடுகின்றமை ''சமபந்தி போசனத்தைத்'' தெளிவாகக் காட்டும் சான்ருகும்.

பிறப்பால் அந்தணராகிய ஞான சம்பந்தரை 'ஐயர்' என்ற சொல்லால் சேக்கிழார் சுட்டாமை வியப்பூட்டும் சுவை யான செய்தியாகும். இதற்கு மாருகப் பிறப்பால் தீண்டாதார் வகுப்பிற் பிறந்த திருநீலகண்டயாழ்ப்பாணரை 'ஐயர்' என்று சேக்கிழார் சுட்டுகின்ருர். அதன்மேலும் ஞானசம்பந்தரே, பாணரை, 'ஐயரே' என்று அழைப்பதாகக் காட்டுவது சால அழகிது.

"ஐயர்நீர் உளமகிழ இங்கணைந்த உறுதி''
"ஐயர்நீர் அவதரித்திட இப்பதி அளவில்
மாதவம் முன்பு செய்தவாறு''
"ஐயர்! நீர் யாழிதனை முரிக்கும தென்"

இவையெல்லாம் ஞானசம்பந்தர் வாக்குகள். மேலும் பிள்ளையார் தில்லைத் திருக் திருக்கோயிலுக்குப் பாணரை அழைத்துச் செல்கிருர்.

அதன்மேலும் திருநீலநக்கர் என்ற அந்தணர் திருவீட்டினுள்ளே யாழ்ப் பாணரும் அவர் மனைவியாரும் தங்க இடந் தருமாறு பணிக்கின்ருர். திருநீலநக்க நாயனரும் "நன்றும் இன்புற்று நடுமனை வேதியின் பங்கர் சென்று மற்றவர்க்கிடம் கொடுத்தனர் திருமறையோர்'' இவை யெல்லாம் சாதிப்பற்றியும், தீண்டாமை பற்றியும் சேக்கிழார் காட்டும் சீர்திருத்தங் களாம்.

இதற்கெல்லாம் முடிமணியாகத் திருநாளைப் போவார் என்ற நந்தனுரைத்— தில்லை வாழ் அந்தணர்கள் 'ஐயரே' என்று அழைப்பதாகப் பாடுகின்ற சேக்கிழார் தம் சிந்தை எண்ணி எண்ணிப் பாராட்டற் குரியதாகும்.

இனி அக்காலத்திலேயே அறத்தை நிலைநாட்ட 'உண்ணுநோன்பு' மேற்கொண்டிருந்த நிலைமையை, பழையாறை வடதளிக் கோயிலின்முன் அப்பரடிகள் "சிவ பெருமான் வண்ணங்கண்டு வணங்கி யல்லால் புறம்போகேன்'' என்று உண்ணு விரதம் இருந்த செய்தியால் நாமறிகிருேம்.

சிறுத்தொண்டர் வரலாற்ருல்-நாட்டின் போர்த்தளபதியாய் வாழ்ந்த ஒருவர், பின்னர்ச் சிவனடியாராக வாழ்ந்து மேம் பட்ட செய்தியை அறிகிருேம்.

ஏயர்கோன் கலிக்காம நாயனர் வரலாற்றில் சுந்தரரை வரவேற்று உபசரிக்கும் கலிக்காமரின் மனைவியார் காட்டும் நாகரிகத்தினும், சிறந்த நனிநாகரிகம் வேறென்றில்லை என்பதை எண்ணிப் பார்த்தால் வியப்பு மேலிடுகிறது.

இவ்வாறு திருத் தொண்டர் புராண வாயிலாக நாம் அறியக் கிடக்கும் நலங்கள் பலவாகும்.





மின்துறை பணியாளர்கள்



ஊர்க்கோயில் பணியாளர்கள்



# பழனியாண்டவர் சந்நிதி விண்ணப்பம்







திரு. இளங்கம்பன்

வண்டே விழிஎன்னும் வள்ளிக் குரியோனே
தண்டேந்தி ஆளும் தமிழ்வடிவே - வண்டார்
பழனங்கள் சூழ்ந்த பழனித்தே வேஎன்
பழவினைகள் நீங்கக்கண் பார்.





தாகம் தணிப்பவன்நீ தண்ணமுத மானவன்நீ
வேகம் கெடுக்கின்ற வேந்தன்நீ - ஆகமங்கள்
போற்றும் தலைவன்நீ பொன்மயில்மேல் ஏறும்வெண்
நீற்றழகன் ஆனவனும் நீ.

கோழிக் கொடியோய் குமரா உனையானும்
வாழியென வாழ்த்தும் வளமறியேன் - பாழில்நான்
உண்டே மகிழ்ந்தே உலவுகிறேன் உன்றனையான்
கண்டே களிப்பதென்று காண்.





முற்றும் துறந்த முழுமை நலங்காட்டி
வெற்றுக்கு வாழ்வோர் விழிதிறக்க - வெற்றிவேல்
தாங்கிப் புவிபுரக்கும் தண்ணமுதே நீவெறுத்தால்
ஏங்குமெனக் குத்துணையும் ஏது?

குன்றத் தமர்ந்தே குறைகளைவோய் ஓங்கும்மாக்
குன்றத் தனைய கொடுவினையேன் - என்செய்வேன்
மண்டுயர் தாளா மனத்துடனே வந்துள்ளேன்
தண்டமிழோய் உன்னருளைத் தா.



வினைக்கஞ்சி யானும் விழிநீர்ப் பெருக்கி
மனக்குன்றை மாய்த்தே மகிழேன்-உனக்கென்றே
உள்ளத்தைத் தந்தறியேன் ஓடுகிறேன் ஆடுகிறேன்
கள்ளமழித் தென்றனையும் கா.



காசு பணமதையே கண்கண்ட தெய்வமெனப்
பூசை புரிந்ததெலாம் பொய்யென்றே - தேசிகனே
இன்றுன்றன் சந்நிதியில் ஈனன்யான் நிற்கின்றேன்
அன்றையநாள் தீமைபொறுத் தாள்.



நீலமயிலழகை நின்னுடைய வேலழகைக்
கோலமுகத்தழகைக் கொள்ளைகொளும் - மேலழகை
காலழகைக் கையழகை கண்எதிரே காணுமல்
ஞாலமிசை மாய்வேனே? நான்.



கந்தா கனகமயில் மீதேறி என்முன்னே
வந்தால் வருத்தமெலாம் நீங்காதோ? - அந்தமார்
செல்வா உனையன்றிச் சேரும் கதியுண்டோ?
அல்லல்கள் நீக்கி அருள்.



பாலெடுத்தும் நல்ல பழமெடுத் தும்உன்றன்
பாலடுத்த யார்க்கும் பவமுண்டோ? - வேலெடுத்தோய்
சேலெடுத்து வைத்தவிழி சேயிழைவள் ளிக்குரியோய்
காலெடுத்து வந்தென்னைக் கா.





# "செந்தில் குமரன் பெருமை"

திரு வி. கே. வேலுசாமி,
பி. ஏ.





"வந்த வினையும் வருகின்ற வல்வினையும்
கந்தனென்று சொல்லக் கலங்குமே —
செந்தினகர்ச்
சேவகா வென்று திருநீ றணிவார்க்கு
மேவவா ராதே வினை."

திருமுருகன் தலங்களில் தனிச் சிறப்புடையதும் அடியார்களான நக்கீரர் பெருமான், அருணகிரிநாதர், சுவாமிநாத தேசிகர், குமரகுருபரர், பகழிக்கூத்தர், சிவப்பிரகாசர், திருச்சிற்றம்பல நாடிகள், வென்றிமாலைக் கவிராயர், ஆதிசங்கரர் முதலிய தவநிலைச் சான்றோர்களால் பாடப் பெற்றுப் பேறு பெற்றதுமான தலம் திருச்செந்தூர். ஆறுபடை வீடுகளில் இத்தலம் இரண்டாவது படைவீடாக வகுக்கப்பட்டுச் சிறப்புற்றது. இத்தலத்தில் வீற்றிருக்கும் பாலசுப்ரமண்யர், சூரபத்மனை வதம் செய்து ஆட்கொண்டு சிவபெருமானை நோக்கிப் பூஜிக்கும் கோலத்தில் வீற்றிருக்கிறார். சிவ பெருமானை வழிபடும் மூர்த்தமாக அமைந்துள்ள தலங்கள் தமிழ்நாட்டில் மிகக் குறைவு. அப்படி அமையப்பெற்ற தலங்கள் மிகவும் பெருமைக்குரியவையாக கருதப்படுகின்றன. ஸ்ரீ பாலசுப்ரமண்யர் அமைந்துள்ள விக்ரக மூர்த்தமே அவ்விதம் அமைந்திருக்கிறது என்பதைத் தியான சுலோகத்திலிருந்தும் காணலாம்.

ஆறுமுகப் பெருமான் தெற்கு நோக்கி ஆறுமுகத்தோடும், பன்னிரு கரத்தோடும் வள்ளி தேவசேனா சகிதம் வீற்றிருக்கிறார். சிவத்துக்குரிய ஐந்து முகத்தினையும் சக்திக்குரிய ஒரு முகத்தினையும் கொண்டு ஆறு முகனாயினன் எனக் கூறுவர். சிவனது ஞான நெற்றிக் கண்ணிலிருந்து தோன்றிய பொறிகளே ஆறுமுகம் எனக் கந்தபுராணம் கூறுகிறது. அசுரர்களது கொடுமைகளை அகற்ற அவதரித்தவன் ஆறுமுகப் பெருமான் என்பது திருமூலர் வாக்கு.

இத்தலத்தில் தினம் மூலவரான பால சுப்பிரமணியருக்கும், ஆறுமுகப் பெருமானுக்கும் ஒன்பது கால பூஜை நடைபெற்று வருகிறது. தமிழ்நாட்டில் ஒன்பது கால பூஜை நடைபெறும் திருக்கோயில்கள் வெகு சிலவே. இங்கு ஆறுமுகப் பெருமானுக்கு ஷண்முக அர்ச்சனை வழிபாடு நடத்துவது மிகவும் முக்கியத்துவமாக விளங்குகின்றது. ஆறுமுகத்திற்கும் ஆறு வாத்தியாரும், ஆறு பட்டரும் நின்று சகஸ்ரநாம

அர்ச்சனை செய்து ஆறு நிவேத்தியம் போட்டு ஆறு கற்பூர ஆரத்தி எடுத்து வழி பாடு செய்வதே கண்கொள்ளாக் காட்சி யாக இருக்கும்.

இதே மாதிரி மூலவருக்குத் தாரா அபி ஷேகம் செய்வதும், லக்ஷார்ச்சனை செய் வதும் முக்கியத்துவம் வாய்ந்தது. இத் தலத்தில் பக்தர்களுக்குப் பன்னீர் இலையில் விபூதி பிரசாதம் வழங்குவது சீரும் சிறப்பு மாக அமைந்துள்ளது. ஆதிசங்கரர் வயிற்றுவலியால் இடர்ப்படும்கால் இத் தலத்தில் வந்து பன்னீர் இலைப் பிரசாதம் அருந்தி வயிற்று நோயைக் குணப்படுத்திப் புஜங்கம் எனும் நூல் இயற்றியுள்ளார். அந்நூலில் இலை விபூதி மகிமையை வெகு வாகப் பாராட்டியருளியுள்ளார்.

ஐந்து வயதுவரை வாய்பேசா ஊமை யாய் இருந்த குமரகுருபர சுவாமிகள் திருச் செந்தூர் வந்து 41 நாள் எம்பெருமானைத் தரிசித்துப் பெருமான் அர்ச்சகர் வடிவில் தோன்றிப் பூவைக் கொடுத்துப் பாடு என அருளியதும் "பூமேவு செங்கமல" என அடியெடுத்துக் கந்தர் கலிவெண்பாப் பாடி யருளியுள்ளார்.

இராமனதபுரத்தைச் சேர்ந்த செட்டி நாட்டிலுள்ள சன்னசி கிராமத்தில் வைஷ் ணவராய் அவதரித்த பகழிக்கூத்தர் கொடிய வயிற்று நோயால் அவதியுற்றார். இச்செந்திலம்பதி வந்து "பிள்ளைத் தமிழ்" பிரபந்தம் பாடி நோயிலிருந்து விடுபட்டார்.

பாஞ்சாலங்குறிச்சி வீரபாண்டிய கட்ட பொம்மன் திருச்செந்தூரிலிருந்து பாஞ் சாலங்குறிச்சி வரை மணி மண்டபங்கள் அமைத்து இத்தலத்தில் உச்சிக்கால பூஜை முடிந்த பின்னரே உணவருந்தும் பழக் கத்தைக் கொண்டிருந்தார். அக்காலத்தில் வாழ்ந்து வந்தவர் கந்தசாமிப் புலவர். இரு கண்ணும் ஊனமுற்ற அவர் இரவு பகலாகக் கந்தனையே துதித்து வந்தார். அவரது பக்திக்கு இரங்கி அவரது புகழை இவ் வுலகிற்கு உணர்த்த அவரது வெற்றிலை எச்சில் காவியைத் தனது பரிவட்டத்தில் படும்படி வைத்து அவருக்கு ஒரு கண் அரு ளினர். பூஜை செய்யும் பட்டர்களிடம் கனவில் கந்தசாமிப் புலவரின் வெற்றிலைக் காவி எச்சில் பரிவட்டத்தில் பட்டிருப்பதை யும், அவருக்கு ஒரு கண் அருளியிருப் பதையும் கூறி மறு கண் பார்வை வர கட்ட பொம்ம மகராஜாவை அணுகுமாறு ஏவினர். புலவர் வாயிலாக விவரம் அறிந்த கட்டபொம்மன் ஒரு கையில் தீர்த் தமும் மறு கையில் வாளும் கொண்டு வந்து தீர்த்தத்தைப் புலவரின் கண்ணில் தெளித் தான். புலவருக்கு மறு கண்ணும் வந்தது. வாளேந்தி வந்த விவரத்தைக் கேட்டதற்குப் புலவர்க்குக் கண் பார்வை வராவிடில் தன் பக்தியிலும், பூஜையிலும் களங்கமிருக்கும் எனக் கருதித் தன்னை மாய்த்திடவே வாள் ஏந்தியதாகக் கட்டபொம்மன் கூறினர். என்னே புலவரின் பக்தியும், கட்டபொம் மனின் பக்தியும்!

17ம் நூற்றுண்டின் டச்சுக் கொள்ளை யர்கள் இத்தலத்திலுள்ள ஆறுமுகப் பெரு மானைக் களவு செய்து கப்பலில் கொண்டு சென்றுர்கள். நடுக்கடலில் புயல் உருவாகிக் கப்பல் கடல் கொந்தளிப்பிற்கு இலக் காகியது. உடனே அவர்கள் எம்பெரு மானைக் கடலில் எறிந்து விட்டுப் போய் விட்டார்கள். எம்பெருமானைக் காணுது பக்தர்கள் மனம் வருத்தமுற்றுர்கள். எம் பெருமான் திருநெல்வேலியை ஆண்ட வட மலையப்பப்பிள்ளையனின் கனவில் தோன்றித் தான் நடுக்கடலில் இருப்பதையும் தன்னை வந்து எடுத்துச் செல்லுமாறும் அருளினர். அவ்வண்ணமே பிள்ளையன் அவர்களும் கடலில் எம்பெருமானை எடுத்து வரச் சென்ற பொழுது தான் கிடக்குமிடத்தை, எம்பெருமான் "கருடனை" வட்டமிட ஏவிக் காட்டியருளினர். எம்பெருமான் திரு மேனியைக் கடலிலிருந்து எடுத்துத் தை மாதம் புனர்பூசம் நன்னளில் கோவிலில் சேர்த்தார்கள். எம்பெருமான் ஆவணி, மாசி 7ம்நாள் விழாவில் வீதி உலா வரும் பொழுது முதலில் பிள்ளையனவர்கள் மண்டகப்படியில் தங்கிச் செல்வது தொன்று தொட்டு இன்று வரை நடந்து வருகிறது. இதை நிறுத்தித் தன் மண்டபத்திலே எம்பெருமானை முத லில் எழப்பண்ண வேண்டும் என முருக

பக்தனை கட்டபொம்மு மகாராஜா எண்ணினர். அதற்கு ஆயத்தமாக அழைப்புச் சுருள் வைத்து ஆறுமுகப் பெருமானை ஆராதித்தும் எம்பெருமான் இருப்பிடம் விட்டு அணு அளவும் அசையவில்லை. பின்பு பிள்ளையனவர்கள் அழைப்புச் சுருள் வைத்து ஆராதித்த பின்பே எம்பெருமான் இருப்பிடம் விட்டு நகர்ந்தார். அப்படியிருந்தும் கட்டபொம்மு மகாராஜா தன் மண்டபத்திற்கே முதலில் எம்பெருமான் போகவேண்டுமென ஆணையிட்டார். ஆனால் சுவாமி பிள்ளையன் மண்டபம் அணுகியவுடன் புயல் மழை வந்து பிள்ளையன் மண்டபத்திலே முதலில் இறக்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது. கட்டபொம்மு மகாராஜா சிறந்த முருக பக்தராக இருந்தும் எம்பெருமான் அவரது செருக்கை அடக்கி, எளியரான பிள்ளையனவர்களை ஆட்கொண்ட பெருமையை என் என்பது!

இவ்வாறு பல அற்புதங்கள் இத்தலத்தில் நடந்துள்ளன. சங்க காலத்திற்கு முற்பட்டது இத் திருக்கோவில். இதைச் சுமார் 150 ஆண்டுகளுக்கு முன் அதிசயிக்கத்தக்க முறையில் பெரிய ராஜ கோபுரத்தை அமைத்துத் தந்தவர் ஸ்ரீ தேசிக சுவாமிகள். பின்னர் பிரகாரங்கள் கட்டியது நான்கு சைவத் துறவிகளாகிய ஸ்ரீ மௌன சுவாமிகள், ஸ்ரீ காசி சுவாமிகள், ஸ்ரீ ஆறுமுக சுவாமிகள், ஸ்ரீ வள்ளிநாயக சுவாமிகள். இங்குப் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை குடமுழுக்கு விழா நடைபெறும். சமீபத்தில் 24—6—71. வியாழன் காலை 4-30 மணிக்கு மேல் 5-30 மணிக்குள் குடமுழுக்கு விழா சிறப்பாக நடந்தது.

இப்பேறு பெற்ற இத்தலத்தை அடியார்கள் வந்து வணங்கி அருள் பெற்றுச் செல்லும் காட்சியைக் கண்டுகளிக்கப் பதினுயிரம் கண்கள் போதா.



"பால்என் பதுமொழி பஞ்சென்
பதுபதம் பாவை யர்கண்
சேலென்ப தாகத் திரிகின்ற
நீசெந்தி லோன் திருக்கை
வேலென்கிலை கொற்ற மயூரம்
என்கிலை வெட்சித் தண்டைக்
காலென்கிலை மனமே எங்ஙன
னேமுத்தி காண் பதுவே"

— கந்தரலங்காரம்

# அருள்மிகு திருமலைக் குமாரசுவாமி திருக்கோயில்

## பண்பொழி

தென்காசி வட்டம் - திருநெல்வேலி மாவட்டம்



திருக்குற்றாலத்திற்கு வடமேற்குத் திசையில், தென்காசி, செங்கோட்டை ரயில் நிலையங்களிலிருந்து சுமார் 8 கிலோ மீட்டர் தொலைவில் கம்பீரமாய் ஓங்கி நிற்கும் 450 அடி உயரமுள்ள திருமலையில் கோயில் கொண்டுள்ள கலியுக வரதனும் கந்தப் பெருமான், தனது பக்தகோடிகளைக் காத்து அருள் புரியும் கருணைக் கடலாய்விளங்குகிறான்.

பழந்தமிழ் நூல்களில் காவிமலை என்று போற்றப்படும் இத்திருமலையில், அகத்திய முனிவரும் சப்த கன்னிகைகளும் முருகப் பெருமானை வழிபட்டுத் திருவருள் பெற்றனர் என்று தல வரலாறு கூறுகிறது. இத்திருக்கோவில் பந்தள அரசனால் கட்டப்பட்டுப் பிற்காலத்தில் பல அடியார்களால் விரிவாக்கப் பட்டிருக்கிறது. இவ்விதம் கோயில் திருப்பணியில் ஈடுபட்ட அடியார்களில் **சிவகாமிப் பரதேசி அம்மையார்** என்னும் மூதாட்டியார், திருமலை முருகனிடம் அளவிலாப் பக்தி கொண்டு, அவன் திருவருட் பெருக்கினாலும், தன் தவ வலிமையாலும் திருமலைக் குமரனுடைய கோயிலைப் பெரிதாக்கிப் பல அற்புத சாதனைகளைச் செய்தவர். அருணகிரிநாதரால் போற்றப்பட்ட பெருமையும் இக்கோவிலுக்கு உண்டு. பிற்காலத்தில் முருகனடியாரான வண்ணச் சரபம் தண்ட பாணி சுவாமிகளும் திருமலை முருகனை வழிபட்டு, அவன் திருவடிகளுக்குப் பல தமிழ்ப் பாக்களைச் சமர்ப்பித்துக் களிப்புற்றவராவர்.

இத்திருக்கோயிலில் ஒவ்வொரு மாதக் கிருத்திகை நன்னாளும், மாதாந்திர சுக்கிர வாரமும் மிகவும் விமரிசையாய்க் கொண்டாடப்படுகின்றன. திருமலைக் குமரனுக்கு நடைபெறும் **தைப்பூசப் பெருவிழா** இவ்வட்டாரங்களில் மிகவும் பிரபலமானது. அவன் திருவருளைப் பெற்றுத் தம் மனக் குறைகள் நீங்கப் பெற்றவர் கணக்கில் அடங்கார்.

இத்திருக்கோயிலின் சார்பில் குற்றாலத்தில் ஒரு பெண்கள் உயர்நிலைப் பள்ளியும் பண்பொழியில் சித்த வைத்தியசாலையும், சிறுவர் இல்லமும் நடைபெற்று வருகின்றன.

வாழ்க அவன் திருவடி ! வெல்க அவன் திருக்கை வேல் !!

**திரு T. பாக்கியப் பேரம்பலம் பிள்ளை**
அறங்காவலர் குழுத் தலைவர்

A. **சித்தாரராமன்,** B. A., B. L.
நிர்வாக அதிகாரி

P. **பாலசுப்பிரமணியத் தேவர்**
S. **உத்தமன்**
சொ. **கோவிந்தராசன்**
ஆ. **வள்ளிநாயகம்** என்ற *திராவிடமணி*
அறங்காவலர்கள்

# "பழனிப் பதி"





திரு. அ. ஷ. மாணிக்கம் பிள்ளை

அருள் மிகு நமது தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில் அமைந்திருக்கும் பழனியம்பதி தமிழ் நாட்டின் சரியான மையப்பகுதியாக இருக்கிறது. தமிழ் நாட்டின் அளவு குமரி முதல் வேங்கடம் வரை கிழக்கு வங்கக்கடல் முதல் மேற்கு அரபிக்கடல் வரை. அதன் மத்தியம் பழனியம்பதி. முருகனுக்குத் தமிழ்க்கடவுள் என்ற பெயரும் உண்டு. அகத்தியருக்குத் தமிழை முருகன் கற்பித்ததாகவும் தெரிகிறது.

பழனியம்பதி பலபெருமைகள் உடையது. பெரியநாயகி சிவனை நோக்கித் (பெரியாவுடையார் கோயில்) தவம் இருந்து காட்சி கண்டதால் கன்னிகாவனம் என்ற பெயரும் உண்டு. பதினெண் சித்தர்களுக்கும் திருவாவினன் குடியில் சித்தர் பல் கலைக் கழகம் நடந்ததாகச் சான்று இருக்கிறது. அதனால் சித்தன் வாசல் என்ற பெயரும் உண்டு. இடும்பன் கைலாயத்திலிருந்து சக்திகிரி, சிவகிரி இரண்டையும் கொண்டு வந்து வைத்ததால் சிவகிரி வாழ் பழனபுரி என்று திருப்புகழிலும் இடம் பெற்றிருப்பதுடன் நமது கல்லூரிகள் அமைந்திருக்கும் இடமே சிவகிரி என்ற பெயருடன் இப்பொழுதும் இருக்கிறது. முருகனுக்கும், விநாயகருக்கும் நடந்த போட்டியில் விநாயகர் பழத்தை வென்றார்; முருகன் ஞானப்பழம் நீ என்ற பழநி ஆனார்.

ஆறுபடை வீடுகளில் நமது பழநி முடிவான ஞானமார்க்கத்தின் யோக நிலையில் அமைந்திருக்கிறது. கந்தர் அநுபூதியில் "உல்லாச நிராகுல யோக விதச் சல்லாப விநோதனும் நீயலையோ" என்ற ஒரே வரியில் ஆறுபடை வீடுகளையும் ஆறு குணங்களையும் அமைத்திருக்கிறார். 1. உல்லாச நிலையில் தெய்வயானையைத் திருமணம் செய்த திருப்பரங்குன்றம், 2. நிராகுல (கவலையற்ற) தைரியமான சூரபன்மனைப் போரில் வென்ற திருச்செந்தூர், 3. யோக ஞான நிலையை யாவரும் அடையக் கோவணமும் கைத்தண்டும்கொண்டு நிற்கும் பழநி, 4. இத, தகப்பனுக்கும் உபதேசம் செய்த சாமிநாதனாய் வீற்றிருக்கும் திருவேரகம், 5. சல்லாப நிலையில் வள்ளி தெய்வயானையுடன் வீற்றிருக்கும் திருத்தணி, (குன்று தோறாடல்) 6. விநோதனும், பெருமாள்மலையாகிய அழகர் மலையில் கோயிலில்லாமல் அத்துவித நிலையில் இருப்பது. ஞானத்தை அடைய நமது பழனி ஞான தண்டாயுதபாணியைத் தவிர வேறு வழியே இல்லை.

தலம் தீர்த்தம் மூர்த்தி என்கிற முறையில் முருகன் ஆறு ஆதாரங்களுக்கும், ஆறுபடை வீட்டிற்கும் நமது உட்சமயங்கள் ஆறுக்கும் ஆறுமுகத்துடன் காட்சி கொடுப்பது போல் தீர்த்தத்திலும் ஆறுகிளைகள்

ஒன்று சேர்ந்து வந்து ஷண்முக நதியாய் ஓடுகிறது. அத்துடன் வையாபுரி, இடும்பன் குளம், சரவணப் பொய்கை எல்லாம் மலையைச் சுற்றி அமைந்திருக்கின்றன.

கடவுளின் முச்செயலுக்கு எடுத்துக் காட்டாக நமது மூர்த்தி அமைந்திருக்கிறது. பிரணவ ரூபத்தில் இருப்பவன் பிரணவத்துக்குப் பொருள் சொன்னவன் என்கிற முறையில் சக்தியும் சிவமும் மாயையும் சேர்ந்து அந்தமாயும் ஆதியாயும் இருக்கிறது.

> அவன் அவள் அது எனுமவை மூவினை
> மையின் தோற்றிய திதியே
> ஒடுங்கி மலத்து உளதாம் அந்தம் ஆதி
> என்மனார் புலவர்.
>
> — சிவஞான போதம்

சித்தர்களுள் பேராசிரியர் அகத்தியர். சித்தர் குழாத்தை மூலிகையிலேயே நவ பாசாணம் செய்யும்படி தேர்தல் வைத்தார். போகர் மூலிகையிலேயே நவபாசாணம் செய்து விட்டார். அகத்தியர் அதைப் பார்த்தவுடன் மாணவன் தன்னையும் விடச் சிறந்தவன் என்று பொதிகைமலை சென்று விட்டார். செய்த நவபாசாணம் வீணைப் போகக்கூடாது என்றும், நிரந்தரமாய் யாவர்க்கும் என்றைக்கும் மணிமந்திரம் மருந்தாய் இருக்கவேண்டும் என்ற கருத்துப் படி முருகன் விக்ரகமாக நவபாசாணத்தையும் ஒன்று சேர்த்து மூர்த்தியாக, தனது முழு மந்திரசக்தியையும் உபயோகப்படுத்தி மூர்த்தியை எடுக்க முடியாதபடி ஸ்தாபிதம் செய்து பதினறு அபிடேகம் மூலமாய் பிரசாதம் உண்டால் சகல நோயும் தீரும் வண்ணம் அபிடேக முறையில் நடப்பில் செய்து, தானும் மூர்த்திக்கு அருகேயே சமாதி ஆகியிருக்கிறார். மூர்த்தி வைரத்தை விடக் கெட்டியானது; தேயாது. அடியேன் அறங்காவலனைப் சென்ற குட முழுக்கின் பொழுது நேரில் பார்த்தேன். மூர்த்தியின் தலையில் சிறு குடுமி இருப்பது கூடத் தேயாமல் அப்படியே இருக்கிறது. குடமுழுக்கிற்காக ஒரு நாள் அபிடேகம் நிறுத்தினதால் மூர்த்தியின் ஒளி குன்றி விட்டது. ஆதலால்தான் போகர் அபிடேகப் பிரியராய் மூர்த்தியை அமைத்திருக்கிறார்.

இந்தியாவிலுள்ள சகல கோயில் களிலும், காசியம்பதியும் பழனியம்பதியும் தனிச்சிறப்பு உடையன. இரண்டு கோயில் களும் உதயகாலத்தில் திறந்ததிலிருந்து அர்த்த ஜாமம் வரை மூடப்படுவது இல்லை. காசிலிங்கத்தின் பெருமை நாமே ஆலிங்கனம் செய்து கும்பிடலாம். காசியிற் சிறந்த பழனி என்று பாடியிருப்பதற்கும் பொருள் இருக்கிறது, காசியில் அவயவங் களால் ஆலிங்கனம் செய்கிறோம். பழனியில் உள்ள மூர்த்திக்கு அபிடேகம் செய்த பால் பஞ்சாமிருதம் முதலிய பதினறு வகையான தீர்த்தங்கள் சாப்பிடுவதால், உள் உடம்பில் உள்ள சகல நோய்களும் தீர்கின்றன.

அரிது அரிது மானிடராய்ப் பிறப்பது அரிது என்பது பெரியவர்கள் வாக்கு. மாணிக்க வாசகர் சிவபுராணத்தில் 'புல்லாகிப் பூடாகிப் புழுவாகி.........மனித ராய்த் தேவராய் எல்லாப் பிறப்பும் பிறந்து' என்று சொல்கிறார். மேனாட்டு மேதை டார்வினும் பரிணம வாதத்தை நிச்சயப் படுத்துகிறார். திருமூலர், ஒரு ஆன்மா, பரம்பொருளின் திருவிளையாட்டால் உண் டாக்கப்பட்டதிலிருந்து ஒரு கோடி பிறவி எடுத்து ஆறுகோடி மாயையை வென்று பெருநிலை அடைகிறது என்று விளக்கம் சொல்கிறார். அதில் ஐம்பது லட்சம் பிறவிக்குப் பிறகுதான் மனிதப் பிறவி கிடைக்கிறது. அதிலும் நூற்றுக்கு ஒரு வருக்கு மட்டும் நல்ல அறிவு, ஆயிரத்தில் ஒருவருக்குப் பொறுமை, பதினயிரத்தில் ஒருவருக்கு இரக்கம், ஒரு லட்சத்தில் ஒரு வருக்கு ஐந்தடக்கல், பத்து லட்சத்தில் ஒரு வருக்கு உண்மை, கோடியில் ஒருவருக்கு (அஹிம்சை) அருள்நிலை அடைந்து பரிபூர்ண அன்பு நிலையை அடைகிறார்கள். அவர்கள் தான் பெரு நிலையை அடைந்த ஞானிகள் என்று திருமூலர் விளக்குகிறார்.

சுருதி, யுக்தி, அனுபவம் என்கிற முறையில் நாம் ஆராய்ந்து பார்த்தாலும் தெரிகிறது. ஒரு பள்ளி வகுப்பில் நாற்பது மாணவர்கள் இருந்தால் ஒரு பையன் தான் முதல் தேர்வு எண் பெறுகிறன். கடை நிலையிலுள்ள மாணவர்கள் பூஜ்யமும் வாங்கு கிறார்கள். மாணவர்கள் ஒரே வயது உள்ள

வர்களாயிருந்தும், ஆசிரியர் யாவருக்கும் ஒரே மாதிரி கற்பித்தும் தேர்வில் பாகுபாடு வருவது எதனுல்? முன் பிறவியில் பண்பட்ட மாணவன் பாடத்தை உடனே புரிந்து கொள்கிருன். குறைந்த பிறவி எடுத்த மாணவனுக்கு ஒன்றும் விளங்கவில்லை. ஆதலால் மாணவன் மேல் தவறு இல்லை. பிறவி குறைந்திருப்பதால் விளங்கவில்லை. ஆதலால் நாம் பிறவியை ஒப்புக் கொள்ளத் தான் வேண்டும். திருமூலர் விளக்கப்படி ஒரு நூற்றுக்கு ஒருவருக்குத்தான் நாமும் பெருநிலையை அடையவேண்டும் என்கிற எண்ணம் உண்டாகிறது; மற்ற தொண்ணூற்று ஒன்பது பேரும் நாத்திகராய் இருந்தோ, உலக மயக்கத்திலோ பல பிறவிகள் எடுத்துத்தான் இந்த நூற்றில் ஒருவராக வரமுடியும்.

நூற்றில் ஒருவராக நம்மைப்போல் கோவிலுக்குப் போக, சாமி கும்பிட இகத்திலும், பரத்திலும் பெருநிலை அடைய வேண்டும் என்று தெளிவு இல்லாமல் பல பிறவிகளைக் கடத்தி விடுகிறேம். அதற்குத் தான் பெரியவர்கள் விளக்கம் கொடுத்திருக்கிருர்கள். பள்ளிகளையும், கல்லூரிகளையும் பார்த்தால் மட்டும் போதாது, அவைகளில் சேர்ந்து சட்ட திட்டங்களுக்குக் கட்டுப் பட்டுப் படித்து அநுபூதியில் கொண்டு வந்தால்தான் தேறலாம்.

கோயில்களுக்கும், பெரியவர்களிடமும் நாம் செல்லும்பொழுதாவது தூய்மையாய்ப் போக முயல்கிறேம், அதேபோல் பரம் பொருளை அடையக் கருதினுல் அவனுடைய சில குணங்களையாவது அநுபூதியில் கொண்டுவர வேண்டும். திருவள்ளுவர் "கோளில் பொறியில் குணமிலவே எண் குணத்தான் தாளை வணங்காத்தலை" என்று கடவுள் வணக்கத்தில் சொல்கிருர். அதற்கு விளக்கம் திருமந்திரத்தில் கடவுள் வாழ்த்தின் முதல் பாட்டு:

ஒன்றவன் தானே இரண்டவன்
இன்னருள்
நின்றனன் மூன்றினுள் நான்கு
ணர்ந்தான் ஐந்து
வென்றனன் ஆறு விரிந்தனன் ஏழும்பர்ச்
சென்றனன் தானிருந்தான்
உணர்ந்தெட்டே

நல்லறிவு, பொறுமை, இரக்கம், ஐந்தடக்கல், உண்மை, அஹிம்சை என்கின்ற ஆறு குணத்தையும் தவம் என்கிற அநுபூதியில் கொண்டு வந்தால் அன்பு நிலையை அடையலாம். கொல்லாமை, ஐந்தடக்கல், கொள்பொறுமையோடிரக்கம், நல்லறிவு, மெய்த்தவம் அன்பெட்டும் ஞானமலராகும். தாயுமானவர், அன்புள்ளவர்களுடைய இலக்கணத்தைச் சொல்கிருர்:

இங்கற்ற படியங்கு மெனவறியு
நல்லறிஞர்
எக்காலமும் உதவுவார்
இன்சொல்தவ ருர்பொய்மை யாமிழுக்
குரையார்
இரங்குவார் கொலைகள் பயிலார்
சங்கற்ப சித்தரவ ருள்ளக் கருத்தி
லுறை
சாட்சிநீ யிகபரத்துஞ்
சந்தான கற்பகத் தேவா யிருந்தே
சமஸ்தஇன் பமும் உதவுவாய்

மூவரும் சொன்ன எட்டு குணங்களையும் அநுபூதியில் கொண்டு வருவது கடினம். மேற்கண்ட எட்டு குணங்களும் பரம் பொருளின் அருளினுல்தான் கிடைக்கும். நம்மால் முடிந்தது அவனை இடைவிடாது நினைத்துக் கொண்டு இருப்பதே. அதற்குத் தான் பெரியவர்கள், ஆறு குணங்களையும், ஆறு கடவுளராகவும், ஆறு ஆதாரங்களாகவும் கொண்டு நமது முருகனை அதற்கு வழிகாட்டியாக ஆறுமுகத்துடன் அமைத்து பிரணவத்தையும், பஞ்சாட்சரத்தையும் ஆறு மந்திர எழுத்துக்களாகவும் வடித்துக் கொடுத்திருக்கிருர்கள்.

திருமுறை கண்ட காரைக்கால் அம்மையாரும் அந்தாதியில் இகமும் பரமும் அடையலாம் என்று திட்ட வட்டமாய்ச் சொல்கிருர்கள்:

கருத்தினுல் நீ கருதில் எல்லாமுடனே
திருத்தலாம் சிக்கெனநான் சொன்னேன்-
பருத்தரங்க
வெள்ள நீரேற்ருன் அடிக்கமல நீ விரும்பி
உள்ளமே எப்போதும் ஓது

ஒன்று கண்டேனிவ்வுலகுக் கொருகனி
நன்று கண்டாயது நமச்சிவாயக்கனி
மென்று கண்டாலது மெத்தென்றி
ருக்குந்
தின்று கண்டாலது தித்திக்குந்
தானன்றே
— திருமூலர்

அருணகிரிநாதர் இன்னும் விளக்கமாகப் படத்தைக் காட்டிப் பாடம் சொல்லித் தருவதுபோல் கந்தர் அநுபூதியில் முதல் பாட்டில் கூறுகிருர்:

ஆடும் பரிவேல் அணிசே வல்எனப்
பாடும் பணியே பணியாய் அருள்வாய்

ஆடும் மயிலை ஓங்கார ரூபமாயும் சேவலை சிகாரமாயும், வேலை வகாரமாயும் விளக்கி எப்பொழுதும் நினைக்க அருள் செய்து அந்தப்பணியையே பணியாகக் கொடுக்கும்படி முருகனைக் கேட்டுக் கொள்கிருர்.

சொல்வது எளிது, அநுபூதிகளில் கொண்டு வருவது கடினம். அதற்குப் பெரியவர்கள் வழி சொல்லியிருக்கிருர்கள். நமது உடம்பே ஆறுமந்திர எழுத்தின் ரூபத்தில் அமைந்திருக்கிறது. ஆறுமந்திரக் கடவுள்களும் நமது உடம்பிலேயே இருக்கிருர்கள். இயந்திரமாகிய நமது உடம்பில் மந்திரமாகிய பிரணவ பஞ்சாட்சரத்தைப் பெரியவர்கள் சொன்ன தந்திரவழியில் ஸ்தாபிதம் செய்து முயற்சியால் இடைவிடாது தியானித்தால் நிச்சயம் பெருநிலை அடையலாம்.

அஞ்செழுத்தால் உள்ளம் அரனுடைமை
கண்டரனை
அஞ்செழுத்தால் அர்ச்சித்து இதயத்தில்
அஞ்செழுத்தால் குண்டலியிற் செய்தோ
மங்
கோதண்டஞ்சானிக்கில் அண்டனஞ்
சேடனும் அங்கு
— சிவஞான போதம்

பிரணவ பஞ்சாட்சரம், பஞ்ச பூதங்களாயும், பிரணவ சக்தியாயும், உடம்பின் ஆறு அவயவங்களாயும், (ஆதாரங்கள்) ஆறு மதக் கடவுள்களாயும், ஆறு குணங்களாயும் நமது உடம்பில் இருக்கிறது.

சேர்க்குந்துடி சிகரம் சிக்கணவா விசுகரம்
ஆர்க்கும் யகரம் அபயகரம்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ய கரம் | காற்று | வாய் | சரஸ்வதி (பிர்மா) | நல் அறிவு | ஸ்வாதிஸ்டானம் |
| ந கரம் | மண் | எருவாய் | விநாயகர் | பொறுமை | மூலாதாரம் |
| ம கரம் | தண்ணிர் | வயிறு | திருமால் | இரக்கம் | மணிபூரகம் |
| ஓம் காரம் | பிரணவ தீ | தொப்புளிலிருந்து உண்ணுக்குவரை | முருகன் | ஐந்தடக்கல் | அநாதகம் |
| சி கரம் | தீ | இதயம் | சிவம் | உண்மை | விசுத்தி |
| வ கரம் | ஆகாயம் | தலை | சக்தி | அஹிம்சை | ஆக்ஞை |

யகாரமாகி நல்லறிவினல் (காற்று) மண், தண்ணீர், அகங்கார ஆசையாகிய இரண்டையும், பிரணவத் தீயில் போட்டு பொறுமையையும், இரக்கத்தையும் பெற்று அதன் மூலம் ஐம்புலன், முருகன் அருளால், அடக்கி உண்மை நிலையாகிய சிவத்தை அறிந்து அஹிம்சை நிலையில் உள்ள அருள் சக்தி தயவால் அன்பெனும் பராபரத்தை அடையலாம்.

அகார உகார சிகார நடுவாய்
வகார மோடானும் வளியுடன் கூடி
சிகாரமுடனே சிவன் சிந்தை செய்ய
ஓகார முதல்வன் உவந்து நின்ருனே.
— திருமூலர்

ஆனு அமுதே! அயில் வேல் அரசே!
ஞானு கரனே! நவிலத் தகுமோ!
யானுகிய என்னை விழுங்கி வெறுந்
தானுய் நிலைநின் றதுதற் பரமே.
— அருணகிரிநாதர்

சாதனம் இன்றிச் சாதிப்பார் உலகில் இல்லை என்று கைவல்யம் தாண்டவராய சுவாமிகள் சொல்லியிருக்கிருர்கள். குளவியானது புழுவைக்கூட்டில் வைத்து ஊதி ஊதி ஆகாரம் கொடுத்துப் புழுவைக் குளவியாக்குவதைக் கண்கூடாகப் பார்க்கிறோம். அதுபோல் பெரியவர்கள் சொன்ன தந்திர முறையில் பிரணவ பஞ்சாட்சர மந்திரத்தை நமது உடம்பாகிய இயந்திரத்தில் ஸ்தாபிதம்

செய்து இடையருது சாதனை செய்தால் நிச்சியமாய் பெருநிலை வழிக்கு வந்து விடுவோம். முருகனுக்கு ஞானபண்டிதன் என்ற பெயரும் உண்டு. முருகன் எப்படி நமது உடம்பில் தொப்புளிலிருந்து உண்ணாக்கு வரையில் உள்ள இடத்தில் நின்று கொண்டு ஓங்காரத்துக்குக் கீழ் இருக்கும் சிகார இதயத்தில் இருக்கும் சிவனுக்கு உபதேசம் செய்கிருர்.

ஆங்காரமும் அடங்கார் ஒடுங்கார்
பரமானந்தத்திலே
தேங்கார் நினைப்பும் மறப்புமருர்
தினைப்போதளவும்
ஓங்காரத்து ஒளிக்குள்ளே முருகன்
உருவங்கண்டு
தூங்கார் தொழும்பு செய்யார், என்
செய்வார் எமதூதருக்கே

— கந்தர் அலங்காரம்

மேலும் திருமூலர் திடமாகச் சொல்லுகிருர்:

மானுடர் ஆக்கை வடிவு சிவலிங்கம்
மானுடர் ஆக்கை வடிவு சிதம்பரம்
மானுடர் ஆக்கை வடிவு சதாசிவம்
மானுடர் ஆக்கை வடிவு திருக்கூத்தே.

அடியேன் சென்ற நாற்பது வருடங்களாக வாரம் தவருமல் செவ்வாய் உதயகால பூஜைக்குச் சென்று முருகனை உபாசனு மூர்த்தியாய்த் தரிசித்துத் தியானித்து வருகிறேன். மனத்தெளிவும் சாந்தியும் கொடுப்பதுடன் எல்லா நன்மைகளையும் அருளுகின்ருன்.

சகலர்களும் மேற்சொன்ன முறையைச் சாதனத்தில் கொண்டு வந்து சகல நன்மைகளையும் அடையும்படி கோருகிறேன்.

அடியேன் ஐந்துவருடங்கள் அறங்காவல் குழுவில் இருந்த பொழுது தலைவராக இருந்தவர்களும் அதற்கு முன்னும் பல வருடங்கள் அறங்காவல் துறையில் இருந்தவர்களுமான திரு வி. வி. சி. ஆர். முருகேச முதலியார் அவர்கள் முருகன் கோயிலுக்குச் செய்த தொண்டு அளவற்றது. இன்று பல லட்சங்கள் பெறுமான தங்கத் தேர், தங்க மயில்வாகனம், கல்லூரிக்கு வேண்டிய இடம் மற்றும் நிறையச் செய்திருக்கிருர்கள். நாங்கள் இருந்த பொழுது நினைத்த திட்டம் ஒன்று பாக்கியாயிருக்கிறது. சஞ்சீவிக்காற்றை அநுபவித்து அபிடேக தீர்த்தத்தை அருந்தி சகலரும் நன்மையடைய மலை கிரி வீதி சுற்றி முழுவதும் சிறு குடியிருப்புகளாகக் கட்டி, கிரி வீதி உள் புறத்தில் நந்தவனம் அமைப்பது பூர்த்தி ஆகாமல் இருக்கிறது. ஞான தெண்டாயுதபாணி அறங்காவல் துறைக்குழுவில் உள்ளவர்களும், நிர்வாகத் துறையில் உள்ளவர்களும் தத்தம் மனதில் கொண்டு செய்வர் என்று நம்புகிறேன்.

அடியேன் இருந்தபொழுது ஆரம்பித்த கல்லூரிகள் விரிவடைந்ததோடல்லாமல் பெண்கள் கலைக் கல்லூரி, பெண்கள் தமிழ்க் கல்லூரி, ஊனர்களுக்குப் பள்ளி, அநாதை விடுதி, சித்த வைத்தியசாலைகள் நல்ல முறையில் நடந்து வருகின்றன. வணக்கம் பல.

ஒளியில் விளைந்த உயர் ஞானபூத
ரத்துஉச்சியின் மேல்
அளியில் விளைந்ததோர் ஆனந்தத்
தேனை அனுதியிலே
வெளியில் விளைந்த வெறும் பாழைப்
பெற்ற வெறுந்தனியைத்
தெளிய விளம்பிய வாமுக மாறுடைத்
தேசிகனே.

— கந்தர் அலங்காரம்



# அருள்மிகு சங்கரநாராயணசுவாமி திருக்கோயில்

## ச ங் க ர ந யி னா ர் கோ வி ல்

தமிழ்நாட்டிலுள்ள சிறந்த கோவில்களில் திருநெல்வேலி மாவட்டம் சங்கரன் கோவில் அருள்மிகு சங்கரநாராயணசுவாமி திருக்கோயிலும் ஒன்ருகும். அன்னை கோமதியின் அருந்தவத்திற்கிரங்கிச் சிவபெருமான் அரனும் அரியுமாகக் காட்சி கொடுத்த தலம் இது ஒன்றே. பாம்பரசர்களாகிய சங்கன், பதுமன் ஆகியோர்களால் தோண்டப்பட்ட நாகசுனை ஒரு புண்ணிய தீர்த்தமாகும். இதில் நீராடிப் புற்றுமண் பூசினல் சகல வியாதிகளும் தீருகின்றன. இங்கு மூன்று சந்நிதிகள். ஸ்ரீ சங்கரர், ஸ்ரீ சங்கரநாராயணர், ஸ்ரீ கோமதி என்ற ஆவுடையம்மை. ஒவ்வொரு ஆண்டிலும் மார்ச் 21, 22, 23, செப்டம்பர் 21, 22, 23 ஆகிய தேதிகளில் காலை 6-00 மணியளவில் சூரிய ஒளி ஸ்ரீ சங்கரலிங்கப் பெருமானின் திருமேனியில் விழுகிறது. ஆகவே சூரியபூஜை நடைபெறும் தலங்களில் இதுவும் ஒன்ருகும். இக்கோவில் 11-ம் நூற்ருண்டில் ஸ்ரீ உக்கிர பாண்டியனல் கட்டப்பட்டுப் பின்பு குறுநில மன்னர்களால் புதுப்பிக்கப்பட்டது.

திருவாவடுதுறை 10-வது சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ வேலப்ப தேசிகர் அவர்கள் அன்னையின் சக்திபெற்ற ஒரு சக்கரத்தைப் பதித்துள்ளார்கள். அந்தச் சக்கரத்தின் மேல் பிரதி தினமும் உட்கார்ந்து அம்பாளை வழிபட்டால் மனே வியாதியும், பேய் பிசாசு பிடித்தவர்கட்கு உண்டான நோய்களும் குணமடைகிறது. வீடுகளில் விஷப் பூச்சிகளினல் ஏற்படும் தொந்திரவு நீங்கவும், நோயின்றி வாழவும் மக்கள் வெள்ளி, தங்கத்தினல் தேள், பாம்பு பூரான், கை, கால், உருக்கள் முதலியன செய்து காணிக்கையாகப் பெருமளவில் செலுத்தி வருவதை இன்றும் காணலாம்.

ஆடித்திங்கள் பௌர்ணமியன்று ஆடித்தவசுக்காட்சி காணப் பல லட்சம் மக்கள் கூடுகின்றனர். சித்திரைத் திருவிழா, தைத் தெப்பத்திருவிழா சிறந்த முறையில் நடைபெறுகிறது.

9 நிலைகளும், 125 அடி உயரமுமுள்ள பெரிய ராஜகோபுரமும் இதர விமானங்களும் பல நூற்ருண்டுகளுக்குப்பின் புதுப்பிக்கப்பட்டுத் திருப்பணி சுமார் 5 லட்சம் செலவில் நடந்து வருகிறது. திருப்பணிக்கு நன்கொடை வழங்க வேண்டுகிருேம்.

ஒவ்வொரு வெள்ளிக்கிழமை மாலையிலும் அன்னை கோமதிக்குத் தங்கப் பாவாடை சாத்துவிக்கப்படும். மற்ற நேரங்களில் தங்கப் பாவாடை ரூ. 21/- கட்டித் தெரிசிக்கலாம். யாத்திரீகர்கள் தங்க விடுதி வசதி உண்டு. பொது மக்கள் வசதிக்காகத் திருமண மண்டபம் கட்டப்பட்டுக் குறைந்த வாடகைக்குக் கொடுக்கப்பட்டு வருகிறது.

பஞ்ச சபைகளில் சித்திரசபையையும், அருவியையும் கொண்ட திருக்குற்ருலம் இத்தலத்திலிருந்து தென்மேற்கே 27-வது மைலிலும், சூடிக்கொடுத்த சுடர்க்கொடி அருள்மிகு ஆண்டாள் கோயில்கொண்ட ஸ்ரீவில்லிபுத்தூர் வடகிழக்கே 27-வது மைலிலும் உள்ளது. மதுரையிலிருந்து குற்ருலம் செல்பவர்கள் இத்தலத்தின் வழியே அன்னை கோமதியைத் தெரிசித்துச் செல்லலாம். இரயில், பஸ் வசதி உண்டு.

திருப்பணிக்கு நன்கொடை வழங்க வேண்டுகிருேம்.

*அறங்காவலர் குழுவினர் :*

**வை. பழனிச்சாமி ● கி. வெங்கட்ராமன்**
**கே. எஸ். மாணிக்கவாசகம்**
**அ. சண்முக முதலியார் ● வி. கடற்கரை**

**எஸ். ஆறுமுகம், பி. ஏ.**
*நிருவாக அதிகாரி*

# வீர சைவம்







தவத்திரு
**சாந்தலிங்க இராமசாமியடிகளார்**

உலகில் கடவுளை வழிபடும் நெறிகள் பல உள்ளன. நமது நாட்டில் இந்நெறிகள் பல சமயங்களாக வகுக்கப் பெற்று வளர்ந்துள்ளன. அந்நெறிகளின் கருத்துக்களைத் தன்னகத்தடக்கிச் சிறந்திருப்பது சிவநெறி. சிவநெறி மிகப் பழமையானது. உலக முழுவதும் பரவியிருந்தது. கடல் கடந்த நாடுகளில் சிவநெறிக்குரிய அடையாளங்களும், குறிகளும் தென்படுகின்றன. பண்டைப் பெருநெறியாகிய சிவநெறியினைச் சைவம், வீரசைவம் எனக் குறிப்பிடுகின்றனர். இவற்றின் உட்பிரிவுகளாகப் பாசுபதம், காளாமுகம் முதலான பலவற்றையும் காண்கின்றோம்.

நம் நாட்டில் இமய முதல் குமரி வரை அமைந்துள்ள வழிபாட்டுத் தலங்கள் பல. அவற்றுள் மிகச் சிறப்பாகப் போற்றி வழிபடப் பெறுவன பல. வடக்கே உயர்ந்து விளங்கும் இமய மலையில் உள்ளது கைலாயம். கைலாயத்து உச்சியிலுள்ள பெருமான் சிவபெருமான். அப்பெருமானை மனத்தகத்தும், புறத்தும் வழிபடும் நெறி சிவநெறி. இறைவனை இமைப்பொழுதும் நீங்காது உடனுறையும் மெய்ப் பொருளாக அருளாளர்கள் போற்றி வழிபட்டனர். அவ்வாறு வழிபடுதற்குரிய உருவங்களாக அமைந்த சிவ வடிவங்கள் பல. அத்தகைய திருவுருவங்களை அருளாளர்கள் பலவாகக் கண்டுள்ளனர். சிவபெருமான் அம்மையப்பராக, ஆனந்தக் கூத்தராக, பிட்சாடனராகக் காட்சியளிக்கிறார். மாதர்ப் பிறைக் கண்ணியானை, மலையான் மகளொடு கூடிய வடிவத்தைப் பாடிப் போதொடு நீர் சுமந்தேத்திப் புகுந்து வழிபடுபவர் அடியார்கள். "இது அவன் திருவுரு இவன் அவன்'' எனக் கண்டு வழிபடும் ஆன்றோர்கள் அருவம், உருவம், அருவுருவம் என்னும் நிலைகளில் இறைவனைக் கண்டனர். இவ்வாறு வழிபடும் பெற்றிக் கேற்பச் சிவலிங்கத்தை அமைத்தனர். சிவலிங்கத்தை வழிபடுவது அம்மெய்ப்பொருளை எல்லா நிலைகளிலும் வழிபடுவதாகும்.

இதனை, பக்திச் சுவை நனி சொட்டச் சொட்டப் பாடிய செந்தமிழ் முனிவர் சேக்கிழார் பெருமான், "காணாத அருவினுக்கும் உருவினுக்கும் காரணமாய் நீணாக மணிந்தார்க்கு நிகழ்குறியாம் சிவலிங்கம்'' என அருளியுள்ளார்.

சிவலிங்க வழிபாடு உலகெங்கும் பரவி இருந்ததென்பதை ஆராய்ச்சியாளர்கள் விளக்கியுள்ளனர். அங்கங்கே சிவலிங்கம்

இருப்பதையும் எடுத்துக் கூறியுள்ளனர். சிவ வழிபாட்டினர், கைப்போது மலர் தூவிக் காதலித்து நாடோறும் முப்போதும் வழிபடுவர். அவ்வாறு வழிபடும் திருவுரு சிவலிங்கம். சிவலிங்கத்தைத் தம் வாழ் முதலாகிய பொருள் எனக் கருதித் தம்மி னின்றும் பிரித்தறியாக் கொள்கையினர் வீர சைவர். இக் கொள்கை மிகப் பழமை யானது என்பதை அகழ்வாராய்ச்சியினர் மெய்ப்பித்துக் காட்டி உள்ளனர். சிந்து வெளிப் பள்ளத் தாக்கில் அகழ்ந்த இடங் களிலெல்லாம் வீரசைவர்கள் அங்கத்தில் அணிகின்றதாக உள்ள சிறுசிறு சிவலிங்கங் கள் கிடைப்பதாகக் கூறுகின்றனர். மேலும் பண்டரிபுரத்தில் உள்ள திருமால் திரு வுருவின் முடியில் சிவலிங்கம் இருப்பதும் அங்கலிங்கத்தின் சிறப்பை வெளிப்படுத்து கிறது. மயிலாப்பூரிலுள்ள திருவள்ளுவர் திருவுருவின் முடியிலும் சிவலிங்கம் விளங்கக் காண்கிறோம். இமயத்தின் ஒரு பகுதியாக, முதல் திருக்கோயிலாக விளங்கும் திருக்கேதாரம் வீரசைவ நெறி யினர் வழிபாட்டையுடையது; வீரசைவ பீடத்தைச் சேர்ந்தது. இத்தகைய சான்று களால் நம் நாட்டின் பழம்பெரும் நெறி வீரசைவ நெறி என்பது புலனாகிறது.

வீரம் என்பது ஞானம். ஞான நெறி, இறைவனோடு ஒன்றியிருத்தல். மெய்ப் பொருளை உணர்ந்து பிரிவற நிற்றல் என்பர். அடியார்களது பெருமை கூறும் பெரிய புராணம் அடியார் திறத்தைக் கூறும்போழ்து, "வீரம் என்னால் விளம்புந் தகையதோ" என்று கூறும். "எட்டு உருவமைந்தும் உருவம் ஒன்றின்றி இற்றென உணர்வரும் பொருளை"க் கைத் தலத்தமர்ந்த கண்ணுதலாகக் கண்டு பிரி வற நிற்பதே வீரசைவ நெறி. உரைமனங் கடந்த ஒரு பொருள் உலகத் தோற்றத் திற்கும், ஒடுக்கத்திற்கும் இடமாக நிற்பது. அப்பொருள் குறைவிலா நிறைவு; அதைப் பரம், பரசிவம் என்பர். அது இட்டலிங்கம், பிராணலிங்கம், பாவலிங்கம் என மூவகை யாகக் கொள்ளப்படும். இட்டலிங்கம் (தூல சரீரம்) பருவுடலின் கன்மமல நீக்கத் தின் பொருட்டுத் தரித்திருப்பது. பிராண லிங்கம் (சூக்கும சரீரம்) நுண்ணுடம்பில் மாயாமல நீக்கத்தின் பொருட்டுத் தரித்தி ருப்பது. பாவலிங்கம், யோகவுடம்பில் (காரண சரீரம்) ஆணவமல நீக்கத்தின் பொருட்டுத் தரித்திருப்பது.

இவ்வாறு முழுமுதலாகிய மெய்ப் பொருளை அகத்தும், புறத்தும் ஏற்று, உயிர்க்குயிராய் நிற்பதாக உணர்ந்து வழி படுதலாகிய மூன்று நெறிகளும் ஒன்றுக்கும் பற்றுத நம்மை மேனிலை அடையச் செய் கின்றன. இம்மூன்று நெறிகளையும் ஆறு படி நிலைகளில் நின்று மேற்கொள்ளுதல் முறைமை. அவற்றைச் சடுத்தலம் என்பர். அவை பக்த தலம், மகேச தலம், பிரசாதி தலம், பிராணலிங்க தலம், சரண தலம், ஐக்கிய தலம் என்பன. படி நிலைகளில் நின்று வழிபடும் தகுதி பெற்றவன் இறைவ னிடத்து ஈடுபட்டுக் காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி ஓதி வழிபடும் அன்பின் திறத்தால் உயர்வது பக்தநிலை. அன்பின் முதிர்வால் எவ்வுயிரும் தம்முயிர்போல் எண்ணிச் செந்தண்மை பூண்டு மற்றை யோரால் போற்றப்படும் தகுதியால் தொண்டாற்றும் தன்மையால் சிறப்பது மகேச நிலை. அன்பின் முதிர்வும், அனைத்து உயிர்க்கும் அருள் தாங்கும் தண்ணளியும் பெற்றுத் தான்பெற்ற மெய்யுணர்வை மற்றையோரும் பெற அருளுதல் பிரசாதி நிலை. புன்புலால் யாக்கை புரைபுரை கனியப் பொன்னெடுங் கோயிலாப் புகுந்து என்பெலாம் உருக்கி ஆண்ட திறம் நினைந்து உள்ளொளி பெருக நிற்கும் நிலை பிராண லிங்க நிலை. காயமே கோயிலாகக் கடி மனம் அடிமையாக வாய்மையே தூய்மை யாக மனமணி லிங்கமாக நேய்மே நெய்யும் பாலா நிறைய நீரமைய ஆட்டிப் பூசனை ஈசனார்க்குப் போற்றவிக் காட்டும் நிலையில் ஓங்குவது சரண நிலை.

இறைவியோடு பிறவியற அவனே யாகிய அந்நெறியில் நிற்பது ஐக்கிய நிலை. இவ்வாறு கூறப்படும் ஆறு படி நிலைகளும் வீர சைவத்தின் நுண்மை நிலைகளாகும்.

வீரசைவர் அட்டாவரணங்கள் எனக் கூறும் எட்டனையும் பெரிதும் போற்ற

வேண்டும். அவை திருநீறு, அக்கமணி, ஐந்தெழுத்து, குரு, இலிங்கம், சங்கமம், தீர்த்தம், பிரசாதம் என்பன. இவை எட்டும் வீரசைவ நெறி நிற்போர்க்கு என்றும் வேண்டப்படுவனவாகும். மூன்று நெறிகளிலும் தீட்சைகள் இட்டலிங்க தீட்சை, பிராணலிங்க தீட்சை, பாவலிங்க தீட்சையென மூவகைப்படும். அவை முறையே, சாமானியம், விசேடம், நிரா பாரம் எனக்கூறுவர். இவை விரிக்கிற் பெருகும். வீரசைவ 'சின்மயா தீட்சாவிதி' என்னும் நூலில் விரிவாகக் காணலாம்.

வீரசைவ நெறிபற்றி வீராகமம், வாதுளாகமம், சுவாயம்புவாகமம், சுப்பிரபேதாகமம் ஆகியனவும், இரேணுகாபாடியம், சோமநாதபாடியம், பண்டிதபாடியம், ஸ்ரீகர பாடியம் ஆகியனவும் சிறப்பித்துக் கூறுகின்றன.

வீரசிங்காதன புராணத்தில்:

"வாதுளா கமத்தின்
 உத்தரத்துறு தந்திரோக்த
 வன்பிரதிஷ்டை மருவும்
ஆதியாஞ் சிவசித்தாந்த
 தந்திரத்தும் அதர்வண
 வேத மத்தியினும்
நீதியாம் அநாதிவீர
 சைவத்தின் நிலையினை
 நிகரின்றித் தொடுத்தான்
ஓதிடும் பரம
 ரகசியமாக உரைத்தனன்
 உமையவள் தனக்கே" —எனவும்,

சித்தாந்த சிகாமணியில்;

"ஏகனுற்றருள் காமிக மேமுதல்
ஆகமத்தின் அறைந்திடும் உத்தர
பாகமுற்றும் பகர்வீர சைவமாம்
சோகமற்றுயர் தொன்மதந்
 தோன்றுமால்"

எனவும் விரித்துரைக்கப்படுகிறது.

இந்நெறி, "நிறைமொழி மாந்தரருளிய மறைமொழிக்கும், அறம், பொருள், இன்பம், வீடு அடைதற்கு ஓதிய ஆகமத்திற்கும் ஒருமைப்படுத்தும் தொன்மை நெறி என்பதை, 'வெல்நெறி தேர்மறை நெறி ஆகம நெறி ஒன்றெனக் காட்டும் வீரசைவத் தொன்னெறி மாகேசன் எங்கள் சாந்தலிங்க தேசிகனும் தூயன்' எனும் பாடல் தெற்றென விளக்குகிறது.

வீரசைவ நெறி இமய முதல் குமரி வரையிலும் பரவியிருக்கிறது. நாட்டில் சைவம், வீரசைவம் என்னும் பகுப்பின்றிப் பரவிய காலம் ஒன்று இருந்திருக்கலாம். தமிழ் நாட்டில் பல நூற்றுண்டுகளாக இந்நெறி சிறப்புற்றிருக்கிறது. தமிழ் நாட்டில் தோன்றிய வீரசைவ மடங்கள் ஐம்பத்தாறு. கிளை மடங்கள் பல. பல திருக்கோயில்கள் திருமடங்களுக்குட் பட்டிருந்தன. ஆனால் இக்காலத்தில் பல மறைந்து விட்டன. தமிழுக்கும், சமயத்திற்கும் இத்திருமடங்கள் செய்திருக்கும் உதவிகள் போற்றுதற்குரியனவாகும். சமய நெறி வாழ்வோர் அனைவரும் ஒரே தகுதியினர். அவர்களுள் ஏற்றத்தாழ்வுகள் இல்லை என்பதை வலியுறுத்துவது பெரியபுராணம். அக்கொள்கையே வீரசைவமாகும். இக்கொள்கை சேக்கிழார் காலத்திற்குப் பிறகு சிறப்பாகத் தமிழ் நாட்டில் வலுப்பெற்றிருக்க வேண்டும். ஆனால் பன்னிரண்டாம் நூற்றுண்டில் கன்னட நாட்டில் வலுப்பெற்றுப் பல மாநிலங்களில் பரவியது. பசவண்ணர் தோன்றினர். எழுச்சியுடைய சமய நெறியாக வளர்த்தார். அல்லல்தரும் அயல் நெறிகளில் சுழலா வண்ணம் அனைவரையும் வீரசைவ நெறியில் ஈடுபடுத்தினர். இந்நெறி வடபுலங்களில் இலிங்காயதம் எனக் கூறப்படுகிறது.

பெரியபுராணம் கன்னடத்தில் மொழி பெயர்க்கப்பட்டுப் பசவபுராணம் எனப் போற்றப்பெற்றமையும் ஆய்தற்குரிய ஒன்றாகும்.

வீரசைவர்கள் திருக்கோவிலில் எழுந்தருளும் பெருமானை வழிபடுவதுடன் இமைப்பொழுதும் தன்னை விட்டுப் பிரியாதவராகக் கொண்டு வழிபடுவர். இறைவனை உயிர்க்குயிராகக் காண்பர். உள்ளத்து உறைபவனைக் கொள்வர். உடலிடங்

கொண்டவராக ஏற்பர். இறைவனே பசு, பாசமறக் கருணை கொண்டு எழுந்தருள் புரிகின்ருன். அவனருளாலே அவன்ருள் வணங்குகிருேம் எனக் கருதுவர்.

வீரசைவநெறி, குரு இலிங்கம், சங்கமம் ஆகிய மூன்றனையும் பேணுதலாகிய கொள்கையினை மிகச் சிறந்ததெனக் கொள்கிறது. கொலை வேள்வியை வெறுக்கிறது. "ஒன்றே குலம் ஒருவனே தேவன்'' என்னும் உயரிய கொள்கையினைக் கடைப்பிடிப்பதே சிவநெறி. பண்டைய வழிபாடுகள் இவ்வுண்மையை வலியுறுத்த அன்பும், அருளும் பூண்ட கொள்கையையே சமயக் கொள்கையாகக் கொண்டு விளங்கின.

இறைவன், "புல்லிலை எருக்கமாயினும் வேண்டா'' என்பவன் அல்லன். நல்லனவற்றை மன்பதைக் கருளி அல்லதை எல்லாம் தான் கொள்கிருன். வாஞேரும், மண்ஞேரும் உய்ய நஞ்சுண்டும் சாவாத பேரருளாளன் நம் இறைவன். அன்பும் அருளுங் கொண்ட வாழ்க்கை உடைய வள்ளல்களைப் புலவர்கள் வாழ்த்தினர். அவர்கள் வாழ்த்துக்கு உவமை இறைவனது பேரருள் திறனை விளங்கியது. புறநானூற்றில் ஒளவையார் அதியமானை, "நீலமணி மிடற்ருெருவன் போல மன்னுக பெரும நீயே" என்று வாழ்த்தும் வாழ்த்துரையை நாம் படிக்குந்தோறும் நம் சமயக் கோட்பாடு வளர்ந்திருந்த பெருமையை எண்ணி மகிழ்கிருேம். இத்தகைய அன்புநெறியாகிய சிவநெறி பின்னர் எல்லோரும் ஓர்குலம் என்கிற ஒருமைப் பாட்டினைப் பிறசமயத் தாக்குதல்களால் மறந்தது. அதனை மீண்டும் வலியுறுத்த "ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்'' என்ற ஒற்றுமை முழக்கத்தைத் திருமூலர் எழுப்பினர். ஆனல் சாதிப் பித்தினை வளர்க்கும் பிறரது கலப்பால் நம் தமிழ்நெறி அக்கொள்கையை முற்றும் பின்பற்ற முடியாமல் தளர்ந்தது என்றே கருத வேண்டி இருக்கின்றது.

திருமுறை அருளிய அருளாளர்கள் இச்சாதிக் கொடுமையைப் பார்த்து வருந்தினர். சமயச் செந்நெறியிலும் இப்பேய் புகுந்து கொண்டது என அதைச் சாடினர். இந்தப் பிறவிக் கடலைக் கடப்பதற்குச் சமயச் செந்நெறிதான் வழியாக இருந்தது. ஆனல் அந்நெறிச்செல்லும்தெப்பத்தை மூழ்கடிக்கும் சுழியாக அமைந்துவிட்டன சாதி குலங்கள். அவற்றைக் கடந்து ஏறுவதற்குச் சிவநெறியே துணை செய்தது என்பதனை மாணிக்க வாசகர்,

''சாதிகுலம் பிறப்பென்னும்
சுழிப்பட்டுத் தடுமாறும்
ஆதமிலி நாயேனை அல்லலறுத்
தாட்கொண்டு
பேதை குணம் பிறருருவம் யான்
எனதென்னுரை மாய்த்துக்
கோதில முதானனைக் குலாவு
தில்லை கண்டேனே''

என்று பேசுகிருர்.

இச்சாதி முறை புகுந்து வழிபாட்டுச் செந்நெறியாம் நம் சமயத்தைப் பாழ்ப்படுத்தியது. இதனைக் கண்டு மனம் வருந்திய அப்பரடிகள்,

"சாத்திரம் பலபேசும் சழக்கர்காள்
கோத்திரமும் குலமுங்
கொண்டென் செய்வீர்
பாத்திரஞ் சிவமென்று பணிதிரேல்
மாத்திரைக்குள் அருளும் மாற்பேறரே''

என்கிருர்.

'சாத்திரங்கள் பலபேசும் சழக்கர்காள்' என்பதற்கு வெறும் நூலறிவினலே பயனற்ற நிலையை உருவாக்கும் குழப்பவாதிகளே என்பது தானே பொருள். அதற்குமேல் செம்மையுள் நின்று 'சிவகதி' விளைவதற்காவன செய்யாமல் இருக்கும் தடையையும் எடுத்துக் கூறுவார் போல, "கோத்திரமுங் குலமுங் கொண்டென் செய்வீர்', என்று கூறுவதைக் காண்கிருேம்.

இவ்வாறு பிறரது கொள்கைக் கலப்பால் எழுந்த சாதிக் கோட்பாடுகளைச் சமயத்தினின்றும் அறவே விரட்டும் நெறியாகவே வீரசைவ நெறி விளங்கியது. ஒன்றே குலம் என்ற கொள்கையில் பற்றிக் கொண்டு, தாம் வழிபடும் உயிர்க்குறுதிப் பொருளாம் இறைவனை அகத்தும், புறத்தும்

கொண்டு வாழ்தல் வேண்டும் என்று வற்புறுத்தியது. அவ்வாறு வாழும் நெறியுடையோர், அனைவரும் ஒரே குலத்தினர். அவர்களை வேருகக் கருதினல் அவர்கள் வழிபடும் இறைவனையும் வேருகக் கருதினவர்கள் ஆவார்கள் என்பதையே,

"சங்கம னுக்கொரு சாதி யுன்னினன்
அங்கையின் அமர்தரும் அரற்கு
முன்னினன்"

எனச் சிவப்பிரகாச அடிகள், சித்தாந்த சிகாமணியில் கூறியுள்ளார். வீரசைவநெறி சாதிபற்றிய எண்ணம் பரவாமல் தடுத்து, எல்லோரையும் ஒன்று படுத்திய நெறியென்று கூறலாம். ஆனல் இன்று தமிழ் நாட்டைப் பொறுத்த வரையில் இதுவும் சாதிச் சுழலிலிருந்து தப்பவில்லை. தப்பாதது மட்டுமல்ல. அதனுள்ளும் ஒரு தனிச்சாதி என்கின்ற நிலை வளர்ந்துவிட்டது. இந்நிலை மாறித்தானக வேண்டும்.

நமது சைவ சித்தாந்த நெறி முப்பொருள் உண்மையை வலியுறுத்துவது. உயிர்க்குயிராய் இருந்து இறைவன் அருள் புரிவதை உணர்த்துவது. கண்ணொளியும், அருக்கனொளியும் போல உயிர்க்கு இறைவன் உணர்த்துகிருன் என்பதை விளக்குகிறது. இதனையே வீரசைவ நெறியும் வற்புறுத்துகிறது. பருப்பொருளாகிய (பூத) உடம்பு, தூயதாதற் பொருட்டு அங்கலிங்கமும், நுண்பொருளாகிய (சூக்கும) உடம்பு தூயதாதற் பொருட்டுப் பிராணலிங்கமும், (சூக்குமம்) சிற்றறிவுடைய உயிர் தூயதாதற் பொருட்டுக் காரணலிங்கமும், (அதி சூக்குமம்) கொண்டு வழிபடவேண்டும் என்பது வீரசைவ நெறி. இவ்வழிபாட்டைத் திருமுறையாசிரியர்களும் வற்புறுத்துகின்றனர். நமது அப்பரடிகள்,

"காயமே கோயில் ஆகக்
கடிமனம் அடிமையாக
வாய்மையே தூய்மை ஆக
மணமணி இலிங்கமாக
நேயமே நெய்யும் பாலா நிறைய
நீர் அமைய ஆட்டிப்
பூசனை ஈசனர்க்குப் போற்றவிக்
காட்டினேமே"

என்று கூறுவதை எண்ணும் போதும், "உள்ளம் பெருங் கோயில் ஊனுடம்பு ஆலயம்" என்ற திருமூலர் செஞ்சொல்லை நினைக்கும் போதும், உடம்பும் உள்ளமும் இறைவன் எழுந்தருளுதற்கேற்ற இடம் என்பதும், உணர்வு கொண்டு வழிபாடாற்றுதல் வேண்டும் என்பதும் பெறப்படுகின்றன.

இந்நெறி தமிழகத்தில் துறையூர் சிவப்பிரகாச சுவாமிகளால் மேற்கொள்ளப் பெற்று அவர்வழி எம்குரு முதல்வர் அருண்மிகு சாந்தலிங்க சுவாமிகளாலும், குமாரதேவர், சிதம்பர சுவாமிகள் ஆகியோராலும் பரப்பப்பெற்றது. இவ்வாறே கும்பகோணம் பெரிய மடம், பொம்மபுர ஆதினம் ஆகியனவும் விளங்குகின்றன.

"சித்தமலம் அறுவித்துச்
சிவமாக்கி எனையாண்ட
அத்தன் எனக்கு அருளியவாறு
ஆர் பெறுவார் அச்சோவே"

"வளர்க வீரசைவம்"



உ
சிவமயம்

# அருள்மிகு அக்னீச்வரசுவாமி திருக்கோயில்

## திருப்புகலூர்

**நன்னிலம் வட்டம் - தஞ்சை மாவட்டம்**

சமய குரவர்கள் நால்வரில் மூவரால் பாடப்பெற்ற இத்தலம் மாயவரம்-திருவாரூர் புகைவண்டிப் பாதையில் நன்னிலம் புகைவண்டி நிலையத்திலிருந்து கிழக்கே 5 கிலோ மீட்டர் தொலைவில் நன்னிலம் - நாகப்பட்டினம் பெருவழிப்பாதையில் உள்ளது. உழவாரப் பணியின் சிறப்பை உலகிற்கு எடுத்தியம்பிய திருநாவுக்கரசர் பெருமானுர் இறைவனுடன் இரண்டறக்கலந்த தலம் இதுவேயாகும். அகழால் சூழப் பெற்ற திருக்கோயில் அழகாக அமைந்துள்ளது.

நாயன்மார்களில் ஒருவரான அருள்மிகு முருகநாயனுர் இந்தத் தலத்திலேயே தோன்றி மடம் நடாத்தி மலர்த் தொண்டாற்றி, அப்பர், சம்பந்தர், சிறுத் தொண்டர், திருநீலநக்கர் ஆகியோருடன் உடனுறைந்து பயன் பெற்றிருக்கிருர். சுந்தரர் செங்கற்களைத் தலையணையாக வைத்துத் துயில்கொண்டு பொன் கற்களாக்கிப் பரவையாருக்குக் கொடுத்திருக்கிருர். இத்திருக்கோயில் வேளாக்குறிச்சி ஆதிக்கத்திற்குட்பட்டது.

இத்திருக்கோயிலின் சார்பில் சித்தவைத்தியசாலை ஒன்றும், வேத ஆகமப் பாடசாலை ஒன்றும் செயல்பட்டு வருகின்றன. ஆலய நிதியிலிருந்து ஏழை மாணவர்களுக்கு மதிய உணவு வழங்கப்படுகிறது. வழிபடுவோர்கள் தங்குவதற்குத் தங்கும் விடுதிகளும் இருக்கின்றன.

இத்திருக்கோயில் லிங்கம் சுயம்புலிங்கம். மூலவருக்கு அருள்மிகு அக்னீஸ்வரர் என்றும் கோணப்பிரான் என்றும் பெயர்கள் உண்டு. அசுர வம்சத்தைச் சேர்ந்த பாணாசுரன் தன் தாயாரின் சிவபூசைக்கு அடையாளம் காட்டும் வண்ணம் லிங்கம் சற்று வடக்கே சாய்வாக இருப்பதை இன்றும் காணலாம். இத்திருக்கோயில் அம்பாளின் பெயர் ஸ்ரீ சூளிகாம்பாள் என்றும் கருந்தார்குழலி என்றும் வழங்கப்படுகிறது.

திருநாவுக்கரசருக்கு சித்திரை சதயத்தை 10ம் நாளாகக்கொண்டு அப்பர் திருவிழா சித்திரைத் திங்களில் அதிவிமரிசையாகக் கொண்டாடப்படுகிறது. டி விழாவில் சமயம் திருமுறை மகாநாடும் நடத்தப்படுகிறது. இது தவிர வைகாசி விசாகத்தை 10-ம் நாளாகக்கொண்டு இறைவனுக்குப் 10 நாட்கள் பிரம்மோற்சவம் நடைபெற்றுவருகிறது. இது ஒரு முதல் பிரிவு ஆலயமாக உள்ளது.

ஏ. பட்டாபி சுப்பிரமண்யன்
பி. எஸ்சி.
பொருளாளர் (பொறுப்பு)

ஸ்ரீலஸ்ரீ அஜபாநடேஸ்வர பண்டார சந்நிதிகள்
பரம்பரை அறங்காவலர்
(வேளாக்குறிச்சி ஆதீனகர்த்தர்)



பழனி அருள்மிகு இலட்சுமி நாராயணப் பெருமாள் கோவில்



அகோபில வரதராசப் பெருமாள் கோவில், பாலசமுத்திரம்

# சமயமும் சமுதாயமும்





தவத்திரு சுந்தரசுவாமிகள்

"சமயம்" என்ற சொல்லுக்கு ஒழுங்கு படுத்திய நெறி, அல்லது பக்குவப்பட்டது என்று பொருள். தானியமாகவும், பருப்பாகவும் உள்ளதை, உண்ணும் நிலையில் பக்குவப் படுத்தினால், "சமையல்" என்று சொல்வது போலச் சமுதாய வாழ்வைப் பக்குவமான நெறியில் கொண்டு செலுத்துவது "சமயம்".

உலகிலுள்ள மனிதர்கள் அனைவரும் துன்பத்தை வெறுத்து, இன்பத்தை அடைய விரும்புகின்றனர். அவ்வின்பமும் நீடித்து நிலைபெற்றிருக்க வேண்டுமென்பது அவர்களது விருப்பம். மக்கள் அனைவரும் தங்கள் தங்கள் வாழ்நாளில், சிறிது காலம் இன்பத்தையும், சிறிது காலம் துன்பத்தையும், மாறி மாறி அனுபவித்து வருவதைக் காண்கிறோம். உலகப் பொருள்கள் அனைத்தும், அழியும் தன்மை உடையன ஆதலால், சிற்றின்பம் எனப்படும். என்றும் நிலைபெற்று நின்று இடையறாது அனுபவிக்கத் தக்க இன்பம் பேரின்பம் எனப்படும். இப்பேரின்பத்தை மக்கள் அனுபவிக்க இறைவன் அருளோடு, பெரியோர்கள் வகுத்த வழியே "சமயம்" ஆகும். மனிதராகப் பிறந்தவர்கள், ஒழுங்கான நெறியோடு வாழ வேண்டுமானால், கடவுள் ஒருவர் உண்டென்று உணர்ந்து, பணிந்து வாழ வேண்டும். "தெய்வம் ஒன்றுளதெனத் தேறிப் பணிவது — மானிடப் பிறப்பில் வந்தோர் கடனே" என்பார் தண்டபாணி சுவாமிகள். தேறுதல் – சமய உணர்வு உண்டாதல் — பணிவது — அதன் வழி நிற்றல். நல்வினை, தீவினையின் பயனாகிய இன்ப துன்பம் இரண்டும் இன்றி வாழ வேண்டுமானால், கடவுள் தன்மை உயிரின் தன்மை உணர்தலாகிய, ஆன்ம ஞானம் பெற்று, இறைவன் இணையடிகளை வாழ்த்தி — வணங்க வேண்டும் "இருள் சேர் இருவினையும் சேரா இறைவன் பொருள் சேர் புகழ் புரிந்தார் மாட்டு" என்பார் திருவள்ளுவர்.

சமுதாயத்தில் சீர்கேடு வராமல் காப்பது சமயம். சமுதாயம் மனிதப் பண்பாட்டைக் காத்து வருவதற்குச் சமயமே காரணமாகும். சமய நெறி இல்லாவிட்டால் சமுதாயம் கட்டுப்பாடு இல்லாததாகப் போய்விடும். மனமாற்றத்தை உண்டாக்குவது சமயம். அரசாங்கத்தாலே சமுதாயத்துக்குச் சீர்கேடு வந்த போது, சமய நெறியாளர்கள் தோன்றிச் சமுதாயத்தைச் சீர்ப்படுத்தினர். அரசாங்கச் சட்டத்தாலே, சமுதாயத்தை ஒழுங்குபடுத்த

முடியாது. அந்தச் சட்டத்தை ஏமாற்று வதற்கான வழிகளைச் சமுதாயம் தேடிக் கொண்டிருக்கும். அரசியல் சட்டப்படி, ஒருவன் ஒரு குற்றம் செய்தால், அதற் குரிய சாட்சி, ஆதாரம் இருந்தால் தான், குற்றம் உறுதியாகிறது. சாட்சி இல்லா விட்டால், ஆதாரம் இல்லாவிட்டால், செய்த குற்றம் "குற்றம்" ஆவதில்லை. ஆதலால் குற்றம் செய்தவன் ஏமாற்றம் செய்ய முடிகிறது. குற்றம் செய்யத் தொடங்கும் போதே ஏமாற்றுகிற வழியையும் தேடு கிறுன்.

குற்றம் செய்வது மட்டும் அல்ல, குற்றம் செய்ய மனதில் எண்ணுவதும் குற்றமே என்று சமயம் கூறுகிறது. "உள்ளத்தால் உள்ளலும் தீதே" — என்பார் திரு வள்ளுவர். "சமயநெறி" சமுதாயத்தை ஒழுங்கு படுத்தும் சத்திய மார்க்கமாகும்.

மனிதன், தனக்கும் சமுதாயத்திற்கும் பயனுள்ள வகையில், வாழவேண்டும். அப்பொழுதுதான் அவனுடைய வாழ்க்கை முழுமை பெறுவதுடன், உலகம் இடை யருது இயங்கும். இதற்குத் தெய்வ உணர் வும், ஆன்மீக ஞானமும், இன்றியமை யாதது ஆகும். சமய வாழ்க்கை இவற்றை அருளி மனிதனை உயர்ச்சி அடையச் செய்கிறது.

எதையும் பிடிவாதமாக வற்புறுத் தாமல், மனித சுபாவத்துக்கும், அறிவுக்கும் மதிப்பளிக்கும் பண்பாடு, இந்து மதத்தின் அடிப்படையாகும். அவரவர் அனுபவ முதிர்ச்சிக்கு ஏற்ற வகையில், ஆண்டவனை வழிபடச் சர்வ சுதந்திரம் உண்டு. இதனல், வழிபாடு, சடங்கு ஆகியவற்றில் பல வேறுபாடுகளும், சில முரண்பாடுகளும் கூடக் காணப் பெறுகின்றன. பல உருவங் களில் கடவுளை வழி படுகிறவர்களும், ஒரு நாமம், ஓருருவம் ஒன்றுமிலாப் பரம் பொரு ளாக, நெஞ்சக் கமலத்திருத்தி வழிபடுகிற வர்களும் இருக்கிறுர்கள். ஆனல் எல்லாப் பிறவிகளுக்கும் இடையே, ஊடுருவி நிற்கும் ஒரு பொதுமை இருக்கிறது. நமது இந்து சமயம் விஞ்ஞானத்துக்குப் பொருத்தமான கொள்கைகளை உடையது, விஞ்ஞானத் தால் உணர முடியாத உள்பொருளாகிய மெய்ப்பொருளை, மெய்ஞ்ஞானத்தால் எடுத் தியம்பிச் சமுதாயத்தைத் தீய நெறியில் செல்லவொட்டாது நன்னெறியில் செலுத்து கிறது. இறைவன் இணையடியைச் "சேரா தார் தீ நெறிக்கே சேர்கின்ருரே" என்பது அப்பர் பெருமான் அருள் வாக்கு ஆகும்.

**இந்துசமயம்** — சமுதாயத்தோடியைந்து நன்னெறிச் செலுத்தும் சிறப்பாவன :

1. இந்து மதம் காலத்தால் மிகவும் முந்தியது. கல் தோன்றி மண்தோன் ருக் காலத்தே மக்கட் பண்பாட்டை உருவாக்கியது. ஒரு காலத்தில் இந்து மதம் உலகம் எங்கும் பரவி இருந்தது என்பதை நவீன புதை பொரு ளாராய்ச்சி, கல்வெட்டு முதலிய வற்ருல் அறியலாம்.

2. பிற மதங்கள் சொல்லும் சமுதாயத் தொண்டு, நமது இந்து மதத்தில் நெடு நாட்களுக்கு முன்பே இடம் பெற்றுள் ளது. எல்லா மதங்களுக்கும் தாயகமா யிருந்ததும் இந்துமதமே.

3. பிற்காலச் சமயங்கள் கூறுவதுபோலத் தன்னைச் சாராதவர்களைப் பாவிகள், அஞ்ஞானிகள் என இந்துமதம் கூறுவ தில்லை. "யாதொரு தெய்வம் கொண் டீர் அத்தெய்வமாகி ஆங்கே — மாதொரு பாகனர்தாம் வருவர்" என் றும், "யாவர் எவ்வண்ணம் சொல்லும் எவற்றினும் இசைந்து நின்று—மூவலற் ருெளிரும் தொல்சீர் முதற்பரம் பொருள்" என்றும் சமய சமரச எண் ணத்தைப் பேசுவது இந்து சமயம். எங்களுடைய சமயம் சேர்ந்தவர்கள் தான் வீடு பேறு அடைவார்கள் மற்ற வர்கள் பாவிகள் என்று இந்து சமயம் கூறுவதில்லை.

4. இந்து சமயம் வெறும் நம்பிக்கையோடு நின்று விடாமல், ஒவ்வொரு கொள்கை யையும் நன்கு ஆராய்ந்து, ஐயங்களை

அகற்றிச் சமுதாயத்துக்கு அறிவினைப் புகட்டுவது.

5. சமுதாயத்தை அதிகமாகக் கட்டுப் படுத்தாது. இல்லறத்தாரும், துற வறத்தாரும், மேற்குலத்தாரும், கீழ்க் குலத்தாரும், படித்தவரும், படியா தவரும், வீடுபேறடைய முடியும் எனக் கூறுவது.

6. உலக வாழ்க்கையில் எல்லாச் செயலி லும், இந்து சமயம் இணைந்து, சமுதாய மானது தீய நெறியில் செல்லாமல், நன்னெறியில் நடக்கச் செய்கிறது. மக்கள் செய்யும் நல்வினை, தீவினைக்குத் தக்கவாறு மறு பிறப்பு உண்டு என் பதை வலியுறுத்திச் சமுதாயத்தை நல்ல நெறியிலே செலுத்துகிறது.

7. வீட்டிலும், கோவிலிலும், எல்லா இடங் களிலும், கடவுளை வைத்து வழிபட்டு, கடவுள் எங்கும் இருந்து, நாம் செய்யும் நன்மையையும் தீமையையும், உணர் கிருர் என்பதைச் சமுதாயத்திற்கு உணர்த்திச் சமுதாயத்தைப் பாது காக்கிறது.

8. "ஒன்றே பேரூர் வழியதற் காறுள" என்று கூறிப் பரம்பொருள் அவ்வவர் பக்குவத்திற் கேற்ப உருக் கொண்டு உள்ளது என்று கூறி, நெறிப்படுத்தி, நீக்கமற உள்ள பேரின்பச் சமுதாயம் அடைய வழிசெய்கிறது.

சமயம் அன்பை வலியுறுத்திச் சொல் லும். சமுதாயத்தில் அன்பில்லாதவர் சமய நெறியைப் பற்றி நின்றவராக முடியாது. "அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார், அன்பே சிவமாவதாரும் அறி கிலார், அன்பே சிவமாவதாரும் அறிந்த பின், அன்பே சிவமாய் அமர்ந்திருப்பாரே." என்பார் திருமூலர். அன்பின் இணைப்பால் சமுதாயத்தை இணைத்துச் செல்வது சமயம், "சமய நெறி தொட்டு நின்று சாதித் துண்மைத் தவம் புரிந்து தன் அறிவே சாட் சியாக" என்பார் தண்டபாணி சுவாமி கள். சமயநெறி அளவில் நிற்பவர்கள், சமயநெறி தொட்டு நிற்பவர்கள், சமய நெறி தொட்டு நின்று சாதித்தவர்கள், தவம் புரிந்தவர்கள் என்பது படிமுறையாகும்.

சமயத்தை விட்ட சமுதாயம் பண் புடையதாகாது. எந்தச் சமுதாயமும் ஏதாவது ஒரு நல்ல சமயத்துடன் இணைந் திருந்தால்தான் பயனுடையதாக, பண் பாடு உடையதாக இருக்க முடியும்.

சமுதாயம் என்பது பன்மக்கள் கூட்டம்
சமுதாயம் ஓங்கச் சமயமே நற்றுணை
சமுதாயம் சீர்பெறச் செய்தல் சமயமே
சமுதாயம் வாழச் சமயமும் வாழுமே.

குருபாதமே கதி



# அருள்மிகு காளஹஸ்தீஸ்வரசுவாமி திருக்கோயில்

**திண்டுக்கல் : (மதுரை மாவட்டம்)**

**தல வரலாறு**

திண்டிமாநகர் திண்டீச்சரம் எனப் புராணங்களில் புகழ்ந்துரைக்கப் படும் இந்நகர் தற்போது திண்டுக்கல் என அழைக்கப்படுகிறது. இத்தலத் தில் இறைவன் "பத்மகிரியாக" அமைந்து தேவர்களைக் காத்துத் திண்டிமா சுரனைக் கொன்று அவனது வேண்டுகோளுக்கு இணங்கி இந்நகருக்கு திண்டீச்சரம் எனப் பெயர் சூட்டியதாகப் புராண வரலாறுகள் கூறுகின்றன. பத்மகிரியின் மேல் சேரமன்னன் தர்மபாலன் என்பவன் ஆலயம் கட்டி அதில் அருள்மிகு பத்மகிரீஸ்வரர், அருள்மிகு அபிராமி அம்பிகை சிலா விக்ரகம் பிரதிஷ்டை செய்தான். பின்னர் 1538-ல் விஜயநகர மன்னன் அச்சுத தேவராயர் என்பவர் காலத்தில் தற்போதுள்ள அருள்மிகு காளஹஸ் தீஸ்வர ஆலயம் கட்டப்பட்டதாகவும், மலைக்கோயில் புதுப்பிக்கப்பட்டதாக வும் தெரிகிறது. 1605-ம் ஆண்டு முத்துக்கிருஷ்ணப்ப நாயக்கர் காலத்தில் மலைக்கோயிலைச் சுற்றிலும் கோட்டை கட்டப்பட்டு அது படைத்தளமாக விளங்கியது.

பின்னர் திப்புசுல்தான் திண்டுக்கல் நகரைக் கைப்பற்றியவுடன் மலைக் கோட்டையில் பீரங்கிப்படைகளை நிறுவினான். பக்தர்கள் வேடத்தில் ஒற்றர் கள் மலைக்கோட்டையில் நுழைவார்கள் என எண்ணி அருள்மிகு பத்மகிரீஸ் வரர் அருள்மிகு அபிராமி சிலைகளை மலைக்கோயிலிலிருந்து அப்புறப்படுத்த உத்தரவிட்டான். பின்னர் நகரிலுள்ள பக்தர்கள் அருள்மிகு பத்மகிரீஸ் வரர், அருள்மிகு அபிராமி அம்பிகை சிலா விக்ரகங்களை மலைக்கோயி லிலிருந்து அப்புறப்படுத்தித் தற்போதுள்ள அருள்மிகு காளஹஸ்தீஸ்வரர் ஆலயத்தில் பிரதிஷ்டை செய்தனர். அதிலிருந்து மலைக்கோயிலில் விக்ரகம் இல்லாது பூஜையற்றுப் பாழ்பட்ட நிலையிலுள்ளது.

திண்டுக்கல் மக்கள் அனைவரும் அருள்மிகு அபிராமி, அருள்மிகு பத்மகிரீஸ்வரரை மலைக்கோயிலில் முன்னிருந்தபடி அடைந்து வழிபாடு செய்யும் காலத்தை எதிர்நோக்கியுள்ளார்கள். தற்போது மலைக்கோயில் தொல்பொருள் ஆராய்ச்சி இலாகாவின் பொறுப்பில் இருந்து வருகிறது. இறைவன் திருவுள்ளம் எதுவோ அதன்படியே எல்லாம் அமையும் என்று சொல்வதைத்தவிர வேறென்ன சொல்ல முடியும்

**திரு. உ. சின்னச்சாமி பிள்ளை**
அறக்குழுத்தலைவர்

**திரு. A. சுப்பிரமணியன் B. A.,**
செயல் அலுவலர்

**திரு. V. A. தங்கவேல் பிள்ளை • திரு. A. T. பழனிச்சாமி**
**திரு. T. சுப்புராயலு நாயுடு • திரு. P. சமதர்மம்**
அறங்காவலர்கள்

# ஏழையின் சிரிப்பில் இறைவனைக் காண்போம்!





திரு. மணியன்

"புதிய பாரதம் எழுச்சி பெறட்டும். ஏர் உழும் உழவனின் குடிசையிலிருந்து, மீனவனின் குடிசையிலிருந்து, தோட்டி, செருப்பு வேலை செய்வோர் ஆகியோரது ஏழ்மைக் குடில்களிலிருந்து பாரதம் எழுச்சி பெறட்டும். சாதாரண பெட்டிக் கடையிலிருந்து மாபெரும் தொழிற்சாலைகள் வரை பல்வேறு வடிவங்களிலும் பாரதம் எழுச்சி பெறட்டும். அப்புதிய பாரதம் காடுகளிலிருந்தும் தோட்டங்களிலிருந்தும், மலைகளிலிருந்தும் உருவாகட்டும்"

இன்றைக்கு எழுபத்தாறு ஆண்டுகளுக்கு முன்பு – பாரதம் அன்னியரிடம் அடிமைப்பட்டுக் கிடந்த பொழுது சுவாமி விவேகானந்தர் அவர்கள் புதிய பாரதத்தின் எழுச்சியைத் தன் மனக்கண் முன் கண்டார். விடுதலை பெறுவதற்கான அறிகுறிகள் ஏதும் தோன்றியிராத அந்த நாளிலேயே அவரால் பாரதத்தின் எழுச்சியைக் காண முடிந்தது. புதிதாக எழும் பாரதம் எப்படிப்பட்டதாக இருக்க வேண்டும் என்பதைத்தான் மேற்கண்ட வார்த்தைகளால் அவர் விவரித்து இருக்கிறார்!

சுவாமிஜியின் கனவிற்கு உருக் கொடுப்பது போலத்தான் நாம் நமது அரசியல் அமைப்புச் சட்டத்தில் சமத்துவம், சகோதரத்துவம், சுதந்திரம், நீதி ஆகியவற்றிற்கு முதலிடம் தந்திருக்கின்றோம். அரசியல் அமைப்புச் சட்டத்தில் இடம் கொடுத்து விட்டதால் மட்டுமே இவற்றைச் சமுதாயத்தில் ஏற்படுத்திவிட முடியாது. சட்டங்கள் போடுவதன் மூலமாகச் சமுதாயத்தில் மாற்றங்கள் ஏற்படுத்திவிட முடியாது. அமெரிக்க நாட்டில் அடிமைத்தனத்தைப் போக்குவதற்காகச் சட்டங்கள் இயற்றப்பட்டும்கூட நீக்ரோக்களின் நிலைமையில் எந்தவித முன்னேற்றமும் காணப்படவில்லை. அவர்கள் இன்றைக்கு அடிமைகளாக இல்லை என்பது உண்மை. ஆனால் அவர்கள் சமுதாயத்தில் சம அந்தஸ்தை அனுபவிக்க முடியவில்லை.

நம் நாட்டிலும் சுவாமி விவேகானந்தரவர்கள் வாழ்ந்த காலத்தில் சமுதாயத்தில் தாழ்த்தப்பட்டவர்களும், ஒடுக்கப்பட்டவர்களும் எந்த நிலையில் இருந்தார்களோ, அந்தநிலையிலிருந்து அதிகம் முன்னேறி விட்டதாகக் கூறமுடியாது. ஏராளமான சட்டங்கள் இயற்றிய பிற்பாடும்கூட இன்றைக்கு நம்மிடையே நிலவி வரும் தீண்டாமை, வறுமை, அறியாமை ஆகியவை குறைவதற்கு மாறாக அதிகரித்து வருகிறதோ என்ற அச்சம் நம் உள்ளத்தில் ஏற்படுகிறது.

இந்தச் சமுதாயத்தில் மாற்றங்களை ஏற்படுத்த விரும்பிய சீர்திருத்தக்காரர்கள் அத்தனை பேரும் – விவேகானந்தர் காலத்

திற்கு முன்பிருந்தவர்களும் - அவர் காலத்தில் வாழ்ந்தவர்களும் - அவருக்குப் பின்னல் வந்தவர்களும் - யாராக இருந்தாலும் சரி நமது சமுதாய இழிவிற்கான பழியை நமது ஹிந்து சமயத்தின் மீதே சுமத்தி வந்திருக்கிருர்கள். அதைப்பற்றி சுவாமி விவேகானந்தர் குறிப்பிடுகையில்,

"...அவர்களது கருத்துப்படி, இந்நிலை திருந்துவதற்கு ஒரே வழி உலகத்திலேயே பிரமாதமான நமது சமயத்தை நசுக்கி விடுவது தான்; நண்பனே! நான் கூறுவதைக் கேள், இறைவனின் திருவருளால் நான் இரகசியத்தைக் கண்டுபிடித்து விட்டேன். நம் சமயத்தின் மீது ஒரு குற்றமும் இல்லை. ஒவ்வொருவரும் உனது சொந்த ஆத்மாவின் பல வடிவங்களே என்று நமது சமயம் கற்பிக்கிறது. நாம் அதனை நடைமுறையில் பயன்படுத்தவில்லை. பிறரிடம் நமக்கு அனுதாபம் இல்லாமல் போய் விட்டது. இதயபூர்வமான அன்புணர்ச்சி இல்லாமல் போய்விட்டது ......."

"..... ஹிந்து சமயத்தைப் போல மிக உயர்ந்த முறையில், மனிதகுலத்தின் மேன்மை சிறப்பைப் பற்றி வேறு எந்தச் சமயமும் இந்த உலகத்தில் போதிக்கவில்லை. இன்று காணப்படும் நிலைக்குச் சமயம் பொறுப்பல்ல. ஹிந்து சமயத்திலுள்ள வெளி வேடக்காரர்கள், வறட்டு ஆசார வாதிகள் ஆகியோரே காரணம்; அவர்கள் இறை தத்துவம் வேறு; நடைமுறை விவகாரம் வேறு என்பது போன்ற கொள்கைகளின் வடிவத்தில் பலவிதமான கொடுஞ் செயல்கள் புரியும் பொறிகளைக் கண்டு பிடித்தார்கள். கடவுள் இதனை எனக்குக் காட்டியுள்ளார்" என்ருர்.

சுவாமிஜி அவர்கள் சமுதாயத்தில் காணப்பட்ட ஏழ்மை, அறியாமை ஆகியவற்றைப் போக்குவதற்காக மாபெரும் திட்டத்தைத் தயாரித்தார். நம்முடைய இழிநிலைக்காக நம்முடைய சமயத்தைக் குறை கூறிக் கொண்டிருப்பதைத் தவிர்த்து, முன்னேற்றப் பணியில் ஈடுபடுவதற்கு இளைஞர்களுக்கு அழைப்பு விடுத்தார்.

நமது தேசம் உண்மையில் குடிசைகளில் வாழ்கிறது. மாட மாளிகைகளிலோ, கூட கோபுரங்களிலோ வாழவில்லை. குடிசைகளில் வாழும் உண்மையான தேசம் தனது ஆண்மையை மறந்து விட்டது. தனது தனிச் சிறப்பை மறந்து விட்டது. அவர்களுக்கு அறிவு புகட்ட வேண்டும்.

இந்தப் பணியைச் செய்வதற்கு இளைஞர்களுக்கு அழைப்பு விடுகையில் சுவாமிஜி,

"நமது மனத்திலிருந்து வெறும் கடவுளர்கள் இப்பொழுது மறைந்து போகட்டும். நமது சொந்த மக்கள் இனமாகிற கடவுள் மட்டும் தான் இப்பொழுது விழித்துக் கொண்டு இருக்கிருர். எங்கு நோக்கினும் அவரது கைகள்; எங்கும் அவரது திருவடிகள்; எங்குமே அவரது காதுகள். எல்லாவற்றையும் வியாபித்து மூடி அவர் நிற்கிருர். நம்மைச் சூழ்ந்து காணப்படும் விராட புருடனை வழிபடாமல் வீணை மற்ற தெய்வங்களின் பின்னல் ஏன் போக வேண்டும்? இந்தத் தெய்வத்தை வழிபட்டால் மற்ற எல்லாத் தெய்வங்களையும் வழிபட முடியும்."

"பிறருக்காகத் தமது உடமைகள் எல்லாவற்றையும் கைவிடுகிற மனிதனுக்குத்தான் முக்தி கிடைக்கும். அதாவது நம்மைச் சுற்றிலும் உள்ளவர்களை வழிபடவேண்டும். வழிபாடு என்பதுதான் சரியான சொல்லாகும். இந்த மக்களும் பிராணிகளும் நமது தெய்வங்களாகும். நாம் முதலில் வழிபட வேண்டிய கடவுள் நமது நாட்டு மக்களேயாவர்."

"மாத்ரு தேவோ பவ! பித்ரு தேவோ பவ!" - "தாயே (உனக்குக்) கடவுளாக இருக்கட்டும்" "தந்தையே (உனக்குக்) கடவுளாக இருக்கட்டும்" என்று படித்து இருக்கிறீர்கள். ஆனல், "தரித்திர தேவோ பவ! மூர்க்க தேவோ பவ!" - "ஏழைகள், படியாதவர்கள், அறியாமையில் உள்ளவர்கள், துயருற்றவர்கள் இவர்கள் உங்களது தெய்வமாக இருக்கட்டும்" என்று நான் கூறுகிறேன். இவர்களுக்குத் தொண்டு செய்வதே அனைத்திலும் உயர்ந்த சமயமாகும் என்பதை அறிந்து கொள்ளுங்கள்" என்று அறிவுறுத்தினர்.

இப்படிப் பட்ட பணிக்கு முன்வரும் இளைஞர்களுக்கு அடிப்படைத் தேவை இரக்க உணர்ச்சியே என்று வலியுறுத்த வந்த விவேகானந்தர், அவர்களை நோக்கிக் கீழ்க் கண்டவாறு வினவுகிறார்: —

"தேவர்கள், முனிவர்கள் இவர்களின் சந்ததிகளான கோடானு கோடி மக்கள் விலங்குகளினின்றும் அதிக வேற்றுமைகள் இல்லாமல் வாழுகிறார்கள் என்பதை உணருகிறீர்களா? ஏழ்மையும் அறியாமையும் இந்நாட்டை இருண்ட மேகம் போலக் கவிந்திருக்கிறது என்பதை உணருகிறீர்களா? அவ்வுணர்ச்சி உங்கள் குருதியில் கலந்து, இரத்தக் குழாய்களில் ஓடி, இதயத் துடிப்போடு சேர்ந்து துடிக்கிறதா? அழிவு பற்றிய, துன்பம் பற்றிய கவலைகளால் பீடிக்கப் பட்டு உங்கள் பெயர், புகழ், மனைவி, மக்கள், உடைமை, இவையனைத்தையும் உங்கள் உடலையும் கூட மறந்து விட்டீர்களா? தொண்டு செய்வதற்கு முதற்படி இதுவேயாகும்."

இப்பணிக்காக முன்வரும் இளைஞர்கள் மருத்துவரின் இதயங் கொண்டு பணியாற்ற வேண்டும். பல நூற்றுண்டுகளாக ஏற்பட்ட அடக்குமுறையின் விளைவாகப் பாரத நாட்டுச் சூழ்நிலையானது துயர ஓலம், தாழ்வின் கதறல், ஏழ்மைக் கூக்குரல்களினல் நிறைந்துள்ளது. ஆனல் இக் கூக்குரல்களால் சமுதாயத்தின் மேல் மட்டத்தில் வாழ்ந்துகொண்டு இருப்பவர்களின் அமைதிமயமான வாழ்வில் எவ்வித அதிர்ச்சியும் ஏற்பட்டதில்லை. காலம் காலமாகக் கொடுமைப் படுத்தப்பட்டதன் விளைவாக இறைவனது பிரதி பிம்பமாக விளங்கிய மக்கள் பொதி சுமக்கும் விலங்குகளாகி விட்டார்கள். தெய்விக அன்னையின் சின்னமான பெண்கள், குழந்தைகளைப் பெறும் அடிமைகளாகி விட்டார்கள். வாழ்க்கையே ஒரு சாபக்கேடாகி விட்டது. இந்தப் பாமர மக்களுக்கு அற நெறி வாழ்வில் அவா இல்லை; வருங்காலம் பற்றிய நம்பிக்கை செத்து விட்டது. நடைப் பிணங்களான இந்தப் பாமர மக்களிடையே உயிரூட்ட வேண்டும். உதைத்துக்கொண்டு முரட்டுப் பிடிவாதம் பிடிக்கிற குழந்தைக்கு மருந்து புகட்ட முயலும் மருத்துவரைப் போலச் சேவை செய்ய வேண்டும்.

பாமரர்களுக்கு அறிவூட்டி அவர்களை உயர்த்த வேண்டும். அப்போதுதான் நாடு நாடாகும். தற்போதைக்கு உள்ள கடமை: கிராமம் கிராமமாகச் செல்ல வேண்டும். சோம்பி உட்கார்ந்திருப்பதால் இனிப் பயன் இல்லை என்று மக்களிடம் சொல்லிப் புரிந்து கொள்ளச் செய்ய வேண்டும். அவர்கள் தங்களது உண்மை நிலையைப் புரிந்து கொள்ள வேண்டும். அவர்களுக்கு வாழ்க்கைத் தேவைகள், வாணிபம், தொழில் விவசாயம் முதலானவை பற்றி எளிமையாகச் சொல்லிப் புரிய வைக்க வேண்டும். இதை நம்மால் செய்ய முடியா விட்டால் நமது கல்வியும், நமது வேத, வேதாந்த ஞானங்களும் செல்லாக் காசாகி விடும். நம்முடைய நாகரிகத்தை வளர்த்தவர்கள் பாமரர்களே. பாமரர்கள் விழித்தெழுந்தால் — அவர்களை உறக்கத்தினின்றும் விழித்தெழச் செய்து அவர்களுக்கு அறிவையும், கலாச் சாரத்தையும் ஊட்ட வேண்டும் - நமது நாடு உயர்வடைவது திண்ணம்.

கிராமம் கிராமமாகச் சென்று அறியாத பாமரரிடையே உலகாயதக் கல்வியையும், ஆத்மிக ஞானத்தையும் புகட்டுவதற்கு எண்ணற்ற இளைஞர்களை, சுயநலமற்ற தொண்டர்களை உருவாக்க வேண்டும் என்று சுவாமிஜி கனவு கண்டார். அவர் அதற்காக மிகப் பெரிய திட்டம் ஒன்றையே தீட்டினர். அவருக்கு இந்த நாட்டின் இளைஞர்களிடத்து அளவற்ற நம்பிக்கை இருந்தது. அவருடைய வார்த்தைகளிலேயே அதை உணரலாம்:

"நான் வேண்டுவது இரும்பினையொத்த தசை நார்கள்; எஃகினையொத்த நரம்புகள்; இவற்றினுள்ளே இடியேறு போன்ற வலிமையுள்ள மனம், பலம், ஆண்மை, க்ஷத்திரிய வீரம், பிரம்ம தேஜஸ் — இவையே நான் வேண்டுவது. நமது அழகான, நம்பிக்கையுள்ள இளைஞர்களிடம் இவையெல்லாம் உள்ளன. எனது அழைப்பினை அவர்கள் ஏற்கட்டும்."

அவரது கனவின்படி, தூய்மையின் காரணமாக உற்சாகத் தீ கொழுந்து விட்டு

எரிய, இறைவனிடம் குன்ருத பக்தியென்னும் கவசமணிந்து, சிங்கத்தின் தைரியம் நரம்பு களில் துடிக்க, நூருயிரம் ஆண்களும், பெண் களும், ஏழைகளிடத்தும், தாழ்த்தப்பட்டோ ரிடத்தும், ஒடுக்கப்பட்டவர்களிடமும் கருணை கொண்டு, நாட்டின் மூலை முடுக்கெங்கும் அலைந்து முக்திக்கான உபதேசத்தை, ஒருவ ருக்கொருவர் உதவி புரிந்து வாழ வேண்டு மென்ற உபதேசத்தை, சமுதாய எழுச்சியின் உபதேசத்தை, சமத்துவத்தின் உப தேசத்தைப் பிரச்சாரம் செய்வார்கள்.

சுவாமிஜியின் மேற்கண்ட கனவை நன வாக்குகிற விதத்திலேதான், அவருடைய திட்டத்திற்கு உருக் கொடுக்கிற பாங்கிலே தான் கன்யாகுமரியில் விவேகானந்த கேந்திரம் உருப்பெற்று வருகிறது.

சுவாமி விவேகானந்தர் சொன்னர் அல்லவா! "கன்யாகுமரியில், அன்னையாகிய குமரியின் ஆலயத்தருகே கொடுங்கடல் கொண்டுவிட்ட குமரிக் கோட்டத்தின் கடைசித் திட்டான கற்பாறையில் அமர்ந் திருந்தபோது ஒரு திட்டத்தை உருவாக் கினேன்" என்று. அத்திட்டம் உருவாகிய குமரிக் கோட்டிலேயே அத் திட்டத்தைச் செயல் படுத்தும் பயிற்சிக் கேந்திரம் ஒன்று உருவாகி வருகிறது.

பிரம்மாண்டமான இப்பணிக்கு, தமது திட்டத்தினைச் செயல்படுத்துவதற்கு, சுவாமிஜி, "மனிதர்கள் தேவை; மனப்பூர்வ மாக குருத்தெலும்பு வரை நம்பிக்கை கொண் டுள்ள சுயநலமற்ற மனிதர்கள் தேவை" என்ருர். ஆம்! அப்படிப்பட்ட மனிதர்களை உருவாக்கும் மாபெரும் பணி துவங்கி யிருக்கிறது.

இன்றைய இளைஞர்களிடம் நமக்கு நம் பிக்கை உள்ளது. நவீன சந்ததியிலிருந்து இப்பணிக்கான இளைஞர்கள் தோன்றுவார் கள். துறவையும், தொண்டையும், இலட்சி யங்களாகக் கொண்டுள்ள நமது சமுதாயத் திலிருந்து உருவாகும் இளைஞர்கள் சிங்கங் களைப் போல இந்தப் பிரச்சினை முழுவதை யும் தீர்த்து வைப்பார்கள்.

இளைஞன், பலமுள்ளவன், நல்ல ஆரோக்கியமுள்ளவன், கூரிய அறிவுள்ள வன் — இத்தகையனே இறைவனை அடை வான் என்று நம் வேதங்கள் கூறுகின்றன. நமக்கு இளமையின் சக்தித் துடிப்பு இருக் கும்பொழுதுதான் நமது வருங்காலத்தைப் பற்றி நிர்ணயிக்க வேண்டும்; களைத்துச் சலித்துப் போன பிற்பாடல்ல; இளமையும் முதுமையும் நிரம்பி வழியும் இப்பருவத்தி லேயே முடிவு செய்ய வேண்டும். இறைவ னது பாதங்களில் கைபடாத, முகரப்படாத, புத்தம் புதிய மலர்களையல்லவோ அர்ச்சிக்க வேண்டும்! அதையல்லவோ இறைவனும் ஏற்றருள்வான்?

வரலாற்றில் புகழ் படைத்த குமரிக் கோட்டம் பாரதத்தின் எதிர்கால வரலாற் றினையும் படைக்கவிருக்கிறது என்பதை அறிகையில் நெஞ்சு விம்முகிறது. நூருயிரம் ஆண்களும், பெண்களும் சுயநலமற்ற உள்ளத் துடனும், தேச பக்தி கொண்ட நெஞ்சத் துடனும் நாடு முழுவதும் சென்று தொண் டாற்றப் போகிருர்கள். அந்த நன்னுள் பாரத வரலாற்றின் பொன்னுள்! சுவாமி விவேகானந்தரின் கனவு நனவாகும் அந்நாளை எதிர்நோக்குவோமாக! துறவியாய் ஆவினன் குடி சேர்ந்த அருள்மிகு தண்டாயுதபாணி இப் பணி வெற்றி பெற ஆசியருள்வானுக!



# சிறை வைத்த காதல்







டாக்டர்
திரு. ந. சுப்பு ரெட்டியார்

இராம லட்சுமணரும் சீதாப்பிராட்டியும் கோதாவரி நதிக்கு அருகிலுள்ள பஞ்சவடிக்கு வருகின்றனர். அப்பஞ்சவடியில் மிகவும் தனிமையாக அமைந்துள்ள சோலையொன்றில் இலக்குவனால் இனிமையாகச் சமைக்கப்பட்ட பர்ணசாலையில் அவர்கள் மூவரும் தங்கியிருக்கின்றனர். இவர்கள் இங்குத் தங்கியிருக்கும்போதுதான் அரக்கர்களின் அழிவுகாலத்திற்கு முதற்செயல் தொடங்குகின்றது. இராவணன் தன் குலத்துடன் நாசமடைதற்கு வேண்டிய வித்தும் இடம் பெறுகின்றது.

தன் குலத்துக்கே இறுதி காட்டக்கூடிய சூர்ப்பணகை அங்கு வருகின்றாள். பின்னால் பெரிதாக வளரக்கூடிய ஒரு மரம் அதன் விதையிலேயே சிறிய வடிவில் தோன்றி உறைவது போலவே, தன் குலத்திற்கே நாசத்தை விளைவிக்கவல்ல சூர்ப்பணகை அரக்கர் குலத்தில் தோன்றி வசித்து வருகிறாள். விதை முளைப்பதற்கு வேண்டிய ஈரம், காற்று, சூடு ஆகியவை தக்க அளவில் கிடைத்தவுடன் விதையினுள்ளிருக்கும் குழந்தைச் செடி முளையாக வெளிப்படுதல் போல, சூர்ப்பணகையிடத்தும் அழிவு மரம் முளைவிடத் தொடங்குகின்றது. சூர்ப்பணகையின் தன்மையைக் கம்பன்,

நீலமா மணிநிற நிருதர் வேந்தனை
மூலநா சம்பெற முடிக்கும் மொய்ம்பினாள்
மேலைநாள் உயிரொடும் பிறந்து தான்விளை
காலம்ஓர்ந்(து) உடன்உறை கடிய நோயனாள்[1]

என்று காட்டுகின்றான்.

[நிருதர்வேந்தன்—இராவணன்; மூலம் நாசம் பெற—வேரோடு (குலத்தோடு) அழிவையடையும்படி; மொய்ம்பினாள்—வலிமையுடையவள்; மேலை நாள்—பிறந்த பொழுதே; தான் விளைகாலம் ஓர்ந்து – தான் வெளிப்பட்டுப் பயன் விளைத்தற்குரிய காலத்தை எதிர்பார்த்துக் கொண்டு]

இராமனை இவள் பார்க்கும்போது இவளிடம் குடிகொண்டிருந்த காதல் நோய் வெளிப்பட்டு ஆருக்கனல்போல் எரிகின்றது. இராட்சசக் காதல் இப்படித்தான் இருக்குமோ என்று சொல்லும்படி வளர்கின்றது. பலவிதமாக இராமனிடம் உரையாடிய பிறகு சீதையிருக்கும் வரை தன்னை இராமன் விரும்பான் என்று எண்ணி, அவள் தனிமையாக இருக்கும் அற்றம் பார்த்து அவளைத் தூக்கிக் கொண்டுபோய் மறைத்து வைக்கும் எண்ணத்துடன் பர்ணசாலைக்கு வருகின்றாள்; கண்ணினைக் காக்கும் இமையெனக் காத்து நிற்கும் இளையபெருமாள் அவளைக் காவல் புரிந்து வருவதை அவள்

1 கம்பரா. ஆரண். சூர்ப்பணகை : 8

அறியவில்லை. சீதையைத் தூக்க யத்தனிக் கையில் "நில்லடீ!" என்று இலக்குவன் கடுகி வந்து, அவளது கூந்தலைச் சுற்றிப் பிடித்துக்கொண்டு அவளது வயிற்றில் காலால் உதைக்கின்றான். உடனே சூர்ப் பணகை விண் வழியாகத் தன்னைத் தூக்கிச் செல்ல முயற்சி செய்யும்போது அவளை விரைவில் கீழே தள்ளி, உடைவாளை உருவி யெடுத்து,

மூக்கும் காதும்வெம் முரண்முலைக் கண்களும்
முறையால்
போக்கிப் போக்கிய சினத்தொடும் புரிகுழல்
விட்டான்[2].

[முலைக்கண்கள் — முலைக்காம்புகள்; முறையால் — ஒன்றன்பின் ஒன்ருக; போக்கி — அறுத்து; போக்கிய சினத்தொடும் — தணிந்த கோபத்துடன்; புரிகுழல் — சுற்றிப் பிடித்த கூந்தல்]

தன் குலத்தார்களையெல்லாம் நினைந்து நினைந்து புலம்புகிருள் சூர்ப்பணகை. அவ் விடத்திற்கு வந்த இராமனிடமும் முறையிடு கின்ருள்; இலக்குவனையாவது தன்னை மணக்க ஏற்பாடு செய்யும்படி வேண்டு கின்ருள். ஒன்றும் பலிக்கவில்லை. இறுதி யில் இராமலட்சுமணர்கள் இவளைக் கொல்ல நினைக்கின்றனர். இதையறிந்த அவள்,

'காற்றினிலும் கனலினிலும் கடியானைக் கொடியானைக்
கரனை உங்கள்
கூற்றுவனை இப்பொழுதே கொணர்கிறேன்
என்றுசலங் கொண்டு போனுள்.'[3]

[கனல் — நெருப்பு; கூற்றுவன் — யமன்; சலங் கொண்டு — தணியாத முற்றின வைரங் கொண்டு]

அவ்வாறே பெருஞ்சேனையுடன் கரனும், அவன் தம்பி தூடணனும் வந்து இராமலட்சு மணர்களை எதிர்த்துக் குலத்தோடு மடி கின்றனர்.

சூர்ப்பணகை இலங்கைக்கு வருகின் ருள். நடந்ததை எல்லாம் தன அண்ணனிடம் கூறுகின்ருள். தன்னை அங்கபங்கப்படுத் தினவர் மனிதர் என்றும், அவர்களுடன் உறையும் அழகுடை நங்கையைத் தூக்க முயன்றபோது இச்செயல் நேரிட்டது என் றும் கூறுகிருள். சீதையின் அழகைப் பல வாறு விரித்துரைத்து, இராவணனுக்குக் காம மயக்கத்தை ஏற்றிவிடுகின்ருள்.

'மஞ்சுஒக்கும் அளகம் ஒதி மழைஒக்கும் வடித்த
கூந்தல்
பஞ்சுஒக்கும் அடிகள் செய்ய பவளத்தின் விரல்கள்
ஐய!'[4]

என்று வருணிக்கின்ருள்.

'தோளையே சொல்லு கேனே சுடர்முகத்(து)
உலவு கின்ற
வாளையே சொல்லு கேனே வல்லவை
வழுத்து கேனே'[5]

[சுடர் முகத்து உலவும் வாளை — வாளை மீன் போன்ற கண்கள்]

என்று கூறுகின்ருள். அவளை இராவணன் அநுபவிக்கும் பொருட்டுத் தூக்க முயன்ற போது இலக்குவன் இவ்வாறு செய்துவிட் டான் என்று முறையிடுகின்ருள்.

இராவணனுக்கு ஊட்டிய காம மயக்கம் உச்ச நிலையை அடைந்து விடுகின்றது. அவன் அனைத்தையும் மறந்துவிடுகின்ருன்.

'கரனையும் மறந்தான்; தங்கை மூக்கினைக் கடிந்து
நின்ருன்
உரனையும் மறந்தான்; உற்ற பழியையும்
மறந்தான்; வெற்றி
அரனையும் கொண்ட காமன் அம்பினுல் முன்பு பெற்ற
வரனையும் மறந்தான்; கேட்ட மங்கையை
மறந்திலாதான்'[6]

[தங்கை மூக்கினைக் கடிந்து நின்ருன் — இலக்குவன்; உரன் — வலிமை; பழி — அபகீர்த்தி; அரனையும் வெற்றி கொண்ட காமன் அம்பு — மன்மத பாணம்; முன்பு பெற்ற வரன் — சிறந்த வரபலம்]

ஆனல் சீதையை மட்டிலும் மறக்கவில்லை. சீதை என்னும் பெயரும் அவன் மனமும் பிரிக்க முடியாதபடி ஒன்ருய்ப் போய்விடு கின்றது. சீதையின் உருவத்தை இதயமாகிய சிறையில் வைத்துவிடுகின்ருன்.

2 சூர்ப்பணகைப்: 94. 3 சூர்ப்பணகைப்: 143. 4 மாரீசன் வதைப்: 70 5 மாரீசன் வதைப்: 73
6 மாரீசன் வதைப்: 83

மயிலுடைச் சாய லாளை வஞ்சியா முன்னம் நீண்ட
எயில்உடை இலங்கை நாதன் இதயமாம் சிறையில்
வைத்தான் [7]

[எயில் — மதில்]

என்று கம்பன் நமக்கு அறிவிக்கின்றான். மாயமானை ஏவி இராமலட்சுமணர்களைச் சீதையிடமிருந்து பிரித்து, ஒரு முனிவர் கோலங்கொண்டு பர்ணசாலையுடன் பெயர்த்துக்கொண்டுசென்று வஞ்சனையாகச் சீதையை அசோக வனத்தில் சிறைவைப்ப தற்கு முன்னமேயே, இராவணன் மயில் போன்ற சாயலையுடைய சீதாப்பிராட்டியைத் தனது மனமாகிய சிறையில் வைத்துவிடு கின்றான். இவ்வாறு அவன் கொண்ட காதல்,

விதியது வலியி னானும் மேலுள விளைவி னானும்
பதியுறு கேடு வந்து குறுகிய பயத்தினானும், [8]

[பதி — ஊர் (இலங்கை); கேடு — கெடுதல்; பயத்தினானும் — பயனாலும்]

கல்வி ஞானமில்லாத பேதை ஒருவன் மறைவாகச் செய்த தீவினை வளர்ந்து பிறர்க்குப் புலனாதல் போல, முதலில் மனத்தில் நிலைத்தாலும், பின்பு ஐம்பொறிகளிலும் பரவி வெளிப்படலாயிற்று. நாளடைவில் அக் காதல் இராக்கத உருவத்தை அடைந்து விடுகின்றது. இவ்வாறு தனது குலத்துக்கே அழிவைத் தேடியதை விடணன் நன்கு உணர்ந்திருக்கின்றான். வேண்டுமென்றே, பழிதீர்க்கும் கருத்தினாலே, அழிவைத் தேடினாளோ சூர்ப்பணகை என்றுகூட ஐயப்படு கின்றான். இராவணன் இறந்த பிறகு சகோதர வாஞ்சையால் புலம்பும் வீடணன்,

'கொல்லாத மைத்துனனைக் கொன்றாய்என்(று)
அதுகுறித்துக் கொடுமை சூழ்ந்து
பல்லாலே இதழ் (அ) துக்கும் கொடும்பாவி
நெடும்பாரில் பழிதீர்ந் தாளோ ?' [9]

என்று சொல்லி அழும்போதுதான் இவ் வையப்பாடு வெளிப்படுகின்றது.

இராவணன் மனச்சிறையிலிட்ட காதலின் விளைவுகளை அளவிட்டுச் சொல்ல முடியாது.

'மீன்சுடர் விண்ணும் மண்ணும் விரிந்தபோர்
அரக்கர் என்னும்
கான்சுட முளைத்த கற்பின் கனலி' [10]

அல்லவா சீதாப் பிராட்டி?

[மீன்சுடர் விண் — விண்மீன்கள் விளங்கும் வானம்; மண் — பூமி; விரிந்த — பரவியுள்ள; கான்சுட — காடு எரிய]

வானத்திலும் பூமியிலும் எங்கும் பரவியுள்ள இராக்கதர்களாகிய காட்டை அழிப்பதற்காகத்தானே சீதை தோன்றியிருக்கின்றாள்? அவளை அடைய வேண்டும் என்ற எண்ணத்தால், மாரீசனை மாயமான் உருக்கொண்டு செல்லும்படி ஏவி, இராமலட்சுமணர்களைச் சீதையிடமிருந்து பிரிக்கின்றான். தான் முனிவர் கோலத்துடன் சென்று, சீதையைப் பர்ணசாலையுடன் பெயர்த்து எடுத்துக் கொண்டு சென்று, அசோக வனத்தில் அரக்கியர் நடுவே சிறைவைத்து விடுகின்றான். அரக்கர்களை அழிப்பான் வேண்டிக் கற்புக் கனலே இலங்கைக்கு வந்து விடுகின்றது. நெருப்புடன் விளையாடுகின்றோம் என்பதை இராவணன் சிறிதும் சிந்தித்துப்பார்க்கவே இல்லை.

சீதையாகிய நெருப்பு இலங்கையிலிருப்பதால், விரைவில் அந்நகர் எரிந்து சாம்பராகி விடும் என்று அநுமன்கூட நினைக் கின்றான். தான் தூது வருங்கால் சீதையைத் தேற்றுவதற்காகச் சில செய்திகளைக் கூறும் போது,

வினையுடை அரக்கராம் இருந்தை வெந்துகச்
சனகியென்(று) ஒருதழல் நடுவண் தங்கலால்
அனகன்கை அம்பெனும் அளவில் ஊதையால்
கனகநீ(டு) இலங்கைநின்(று)உருகக் காண்டியால் [11]

என்று குறிப்பிடுகின்றான்.

[வினை — கொடுந்தொழில்; இருந்தை — கரி; தழல் — நெருப்பு; அனகன் — குற்றமற்ற இராமன்; ஊதை — பெருங்காற்று; நீடு இலங்கை கனகம் — பெரிய இலங்கையாகிய பொன்; காண்டி — பார்ப்பாய்]

7 மாரீசன் வதைப்: 85 8 மாரீசன் வதைப்: 86 9 இராவணன் வதைப்: 225
10 சூர்ப்பணகைப்: 58 11 சூளாமணிப்: 59

கொடுந்தொழிலுடைய இராக்கதர்களாகிய கரியின் நடுவே சீதையாகிய நெருப்பு தங்குவதனல், குற்றமற்ற இராமபிரானுடைய அம்பாகிய காற்றின் உதவியால் பொன்மயமான இலங்கை உருகுவதைச் சீதை காணப் போகின்ருள் என்று அநுமன் குறிப்பிடும் போது சீதையை அநுமனும் 'கற்பின் கனலி' யாக வல்லவோ கொள்ளுகின்ருன்!

மண்டோதரியும், வீடணனும் கற்பினுக்கரசியாகிய சீதையை நஞ்சாகக் கொள்ளுகின்றனர். இலக்குவன் அம்பால் இந்திரசித்து பட்டழிகின்ருன். இராவணன் புத்திர சோகத்தால் புலம்பிச்சென்ற பிறகு மண்டோதரி மைந்தன் உடல் மீது விழுந்து கொண்டு பற்பலவாகப் புலம்புகின்ருள். பஞ்சிலே தீப்பற்றினற்போல அரக்கர் சேனைகள் யாவும் மனிதர்களால் அழிந்து கொண்டேயிருக்கின்றன என்று சொல்லி அரற்றுபவள்,

'அஞ்சினேன் அஞ்சி னேன்அச்
சீதையென்று அமிழ்தில் தோய்த்த
நஞ்சினல் இலங்கை வேந்து
நாளை இத் தகையன் அன்ருே ?'[12]

என்று சொல்லி அழுகிருள். சீதை மண்டோதரிக்கு அமிழ்தத்தில் தோயப்பெற்ற நஞ்சாக வல்லவோ காட்சியளிக்கின்ருள்? இன்று தன் மகனுக்கு நேர்ந்த கதிதானே நாளைக்குத் தன் கணவனுக்கும் நேரிடப் போகின்றது என்றல்லவா பயப்படுகிருள்? என்ன செய்வது?

மண்டோதரி அஞ்சியவாறே இலங்கை வேந்தனும் இராமன் பிரயோகித்த மலரவன் அம்பால் மடிந்து விடுகின்ருன். இதனை,

முக்கோடி வாழ்நாளும் முயன்றுடைய
பெருந்தவமும் முதல்வன் முன்னாள்
எக்கோடி யாராலும் வெலப்படா
எனக்கொடுத்த வரமும் ஏனைத்
திக்கோடும் உலகனைத்தும் செருக்கடந்த
புயவலியும் தின்று மார்பில்
புக்கோடி உயிர்பருகிப் புறம்போயிற்(று)
இராகவன்றன் புனித வாளி[13]

என்று கம்பநாடன் நமக்கு அறிவிக்கின்ருன்.

[முதல்வன் — பிரமன்; செருக்கடந்த — போரினல் வென்ற; புயவலி — புஜபலம்; புக்கு ஓடி — புகுந்து ஓடி; புறம் — வெளியே; புனித வாளி — பரிசுத்தமான அம்பு]

பகைமையை விட்டுத் தமயனுக்கு ஈமக்கடன் செய்யும்படி வீடணனை இராமன் ஏவ, அவனும் ஒரு மலையின் மீது மற்ருெரு மலை வீழ்ந்தது என்று சொல்லும்படி இராவணனின் உடலின் மீது வீழ்ந்து புலம்புகின்ருன்.

"உண்ணுதே உயிர்உண்ணு(து) ஒருநஞ்சு
சனகியெனும் பெருநஞ்(சு) உன்னைக்
கண்ணுலே நோக்கவே போக்கியதே
உயிர்; நீயும் களப்பட் டாயே"[14]

என்று சொல்லிப் புலம்புகின்ருன். 'உட்கொள்ளாமல் ஒரு நஞ்சு உயிரைக் கொல்ல மாட்டாது. அதற்கு மாருக சானகி என்ற பெருநஞ்சு உன்னை கண்ணுலே நோக்கிய மாத்திரத்தில் உன் உயிரைப் போக்கி விட்டதே! நீயும் போர்க்களத்தில் உயிரொழிந்து கிடக்கின்றனையே!!' என்றல்லவோ சொல்லி அழுகின்ருன்! சீதையை நஞ்சாக அன்ருே வீடணன் கருதியிருக்கின்ருன்! மந்திராலோசனை செய்தபோது கூட இவ்வீடணன் சீதையை நஞ்சாகத்தான் பாவித்திருந்தான்; கும்பகருணன்கூட அக்கருத்தையே கொண்டிருந்தான்; மந்திராலோசனையின்போது தான் எடுத்துக் காட்டிய உண்மையை இப்போதாவது அறிந்து உணர்ந்திருப்பானே என்று எண்ணுகின்ருன் வீடணன்.

'ஓராதே ஒருவன்றன் உயிராசைக் குலமகள்மேல்
உற்ற காதல்
தீராத வசையென்றேன் எனைமுனிந்த முனிவுஆறித்
தேறி னயோ?'[15]

[ஓராது — ஆராய்ச்சியின்றி; உயிராசைக் குலமகள் — உயிர்போல் விருப்பிற்குரிய குடிப்பிறந்த பெண்; வசை — பழி; முனிவு — கோபம்]

'ஆராய்ச்சியின்றி ஒருவனுடைய உயிர் போன்ற உயர்குடிப்பிறந்த பெண்ணிடத்துப் பொருந்திய காதல் தீராத பழியை விளைவிக்கும் என்று கூறினேன். அப்போது என் மீது காட்டிய சினம் இப்போதாவது தணிந்து

12 இராவணன் சோகப்: 53
13 இராவணன் வதைப்: 198
14 இராவணன் வதைப்: 220
15 இராவணன் வதைப்: 221

*அவ்வுண்மையை அறிந்தாயோ ?' என்றல்லவோ சொல்லியழுகிருன் வீடணன் !*

போர்மகளைக் கலைமகளைப் புகழ்மகளைத்
    தழுவியகை பொருமை கூரச்
சீர்மகளைத் திருமகளைத் தேவர்க்குந்
    தெரிவரிய தெய்வக் கற்பின்
பேர்மகளைத் தழுவுவான் உயிர்கொடுத்துப்
    பழிகொண்ட பித்தா பின்னைப்
பார்மகளைத் தழுவினையோ திசையானை
    பணையிறுத்த பணைத்த மார்பால் ? ' 16

*என்று சொல்லிப் புலம்பும்போதுதான் வீடணனின் துக்கம் உச்சநிலையை அடைகின்றது.*

[போர்மகள் — வெற்றித் திருமகள் ; கலைமகள் — நாமகள் ; புகழ்மகள் — கீர்த்திமகள் ; பொருமைகூர — பொருமை மிக ; சீர்மகளைத் திருமகளை — சிறப்புப் பொருந்திய மகளான இலக்குமி ; தெரிவரிய — உணர்தற்கரிய ; பேர்மகள் — புகழ்பெற்ற சீதாப்பிராட்டி ; பித்தா — காமப் பித்தனே ; பார்மகள் — பூமிதேவி ; இறுத்த — முறித்த ; பணைத்த — பருத்த]

*பைத்தியக்காரத்தனமாகக் கற்புக் கனலியைத் தழுவ நினைத்து இப்போது மண்மகளையல்லவோ தழுவி நிற்கின்ருய்?' என்று வீடணன் கூறும்போது சோகத்தின் கொடுமுடியைக் காண்கின்ரேம்.*

*பிறகு இராவணன் உடல்கிடந்த இடத்திற்கு மண்டோதரி வருகின்ருள். அலைகளையுடைய கடலிலே மின்னல் வீழ்ந்தாற்போலப் பொருந்தி விழுகின்ருள். கைலாய மலையையே தூக்கியெடுத்த அழகிய உடல் எள் இருப்பதற்குக்கூட இடம் இல்லாமல் துளைக்கப்பட்டிருக்கும் நிலையினைக் காண்கிருள். சீதாப் பிராட்டியைக் குறித்து மனமாகிய சிறையில் ஒளித்து வைத்திருக்கும் காதல் இருக்கும் இடம் எங்கே? எங்கே? என்று தேடுவதற்காகத்தான இவ்வாறு சல்லடைக் கண்களாகத் துளைத்திருக்கின்றது ? என்று எண்ணுகின்ருள். அப்படியே சொல்லி மரங்களும் மலைகளும் உருகுமாறு வாய்விட்டுப் புலம்புகின்ருள். அவள் புலம்புவதைக் கம்பன் :*

'வெள்ளருக்கம் சடைமுடியான் வெற்புஎடுத்த
    திருமேனி மேலும் கீழும்
எள்இருக்கும் இடம்இன்றி உயிர்இருக்கும்
    இடம்நாடி இழைத்தவாரே ?
கள்இருக்கும் மலர்க்கூந்தல் சானகியை
    மனச்சிறையில் கரந்த காதல்
உள்இருக்கும் எனக்கருதி உடல்புகுந்து
    தடவியதோ ஒருவன் வாளி ? ' 17

*என்று காட்டுகின்ருள்.*

[வெள் எருக்கம் சடை முடியான் — சிவபெருமான் ; வெற்பு — மலை ; இழைத்தவாரே — தேடிச் செய்த வகையோ ; கள் — தேன் ; ஒருவன் — ஒப்பற்ற இராமன் ; வாளி — அம்பு]

*பஞ்சவடியில் கண்ட சீதையைக் குறித்து சூர்ப்பணகை ஊட்டிய காம மயக்கத்தால் சீதையின்மேல் இராவணன் மனச் 'சிறையில் வைத்த காதலை' இராமன்விட்ட மலரவன் படை துருவித் துருவித் தேடி விடுதலை செய்திருப்பதைக் கம்பநாடன் நமக்குக் காட்டுகின்ருன். 'இலங்கைநாதன் இதயமாம் சிறையில் வைத்த காதலைத்' தேடித்தான் இராவணனுடலை இராமன் அம்பு சல்லடைக் கண்களாகத் துளைத்திருக்கின்றது என்று எவரும் ஒருக்கால் நினைக்கலாம் என்று காட்டுவதற்காகவே கம்பன் மண்டோதரியை, இராமன் அம்பு 'சானகியை மனச்சிறையில் கரந்த காதல் உள்ளிருக்கும் எனக்கருதித் தடவியதோ?' என்று புலம்பிப் பேசும்படி செய்கின்ருன். சிறை வைத்த காதல் வெளிப்பட்ட விதத்தைக் கவிஞன் காட்டுவது பன்முறை சிந்தித்துப் பாராட்டி மகிழ்வதற்குரியதாகும்.*

16 இராவணன் வதைப் : 226

17 இராவணன் வதைப் : 239



# அருள்மிகு நெல்லையப்பர் அருள் தரும் காந்திமதி அம்பாள் திருக்கோவில்

### திருநெல்வேலி

இத்திருக்கோயில் 7ம் நூற்றுண்டைச் சார்ந்தது. ஞான சம்பந்தரால் பாடப் பெற்றது. 14 ஏக்கர் நிலப்பரப்பில், 5 கோபுரங்கள் 25 விமானங் களைக் கொண்ட இரண்டு பெரிய திருக்கோயில்களாக விளங்குகின்றது. பஞ்ச சபைகளில், தாமிர சபை என்ற பெயர் பெற்றது. ஆயிரங்கால் மண்டபம், நூற்றுக்கால் மண்டபம் 96 தத்துவங்களை விளக்கும், ஊஞ்சல் மண்டபம் முதலியவைகளையும் பல அரிய வேலைப்பாடுகள் கொண்ட சிற்பங்களையும், இசைத் தூண்களையும் உடைத்தாய் உள்ளதுமான இப்பழம் பெருங்கோயிலில் 7 லக்ஷ ரூபாயில் திருப்பணி துவங்கப்பெற்று நடை பெறுகிறது. திருக்கோயில்கள் அறங்காவலர்களும் நிர்வாக அதிகாரிகளும் இந்த மாபெரும் திருப்பணிக்குத் தங்கள் திருக்கோயிலிலிருந்து நிதி வழங்க விண்ணப்பித்துக் கொள்கிறோம்.

**வி. டி. ஏ. சேவுகபாண்டியன்**
நிர்வாக அதிகாரி

**ப. இலக்குமணன்,** எம். சி.
அறங்காவலர் குழுத் தலைவர்

**எஸ். கலியாணசுந்தரம் பிள்ளை** — திருமதி **வாமசுந்தரம் அம்மாள்**
**பி. சித்திரை பாண்டியன்** — **எஸ். எம். ஏ. நயினர்**
அறங்காவலர்கள்

**இத்திருக்கோயில் நிதியிலிருந்து நடைபெறும் அறப்பணிகள்**

1. காந்திமதி அம்பாள் உயர்நிலைப் பள்ளி
2. சுவாமி நெல்லையப்பர் அன்பு ஆசிரமத் தொடக்கப் பள்ளி
3. பெண்கள் அன்பு ஆசிரமம்
4. திருஞான சம்பந்தர் மழலைப் பள்ளி
5. வருடத்துக்குப் பத்து இலவசத் திருமணம் செய்விக்கப்படுகிறது.
6. தினசரி 10 ஏழைகளுக்கு உணவளிக்கப்படுகிறது.
7. தேவார பாடல்கள் தினமும் காலை ஒலிபரப்பப் படுகின்றன.
8. 2000 அரிய புத்தகங்களைக்கொண்ட நூல் நிலையம் உள்ளது.
9. தேவார பாடசாலை ஒன்று உள்ளது.
10. மாலையில் தினமும் சமய சொற்பொழிவுகள் நடைபெறுகின்றன.

**இத்திருக்கோயில் நிர்வாகம் செய்ய இருக்கும் பணிகள்**

1. 7 லட்ச ரூபாயில் திருப்பணி வேலை.
2. யாத்ரீகர் தங்க. ரூ. 50,000/- செலவில் ஓய்வு விடுதி.
3. ஆயிரங்கால் மண்டபத்தை ஒரு லட்சம் ரூபாயில் செப்பனிட்டு கலைக்கூடம் அமைத்தல்.
4. திருமண மண்டபம் கட்டுதல். 50,000/- ரூ. செலவில்.
5. காந்திமதி அம்பாள் பெண்கள் உயர்நிலைப் பள்ளியை, ஓர் கல்லூரி ஆக்குதல்.
6. திருக்குறள் வகுப்பு நடத்துதல்.
7. வழக்காடு மன்றத்தில் உள்ள முதலீடு ரூ. 3 லட்சத்தில் பல கட்டிடங்கள் கட்டி வாடகைக்கு விடுவதின் மூலம் வருமானத்தைப் பெருக்குதல்.

# "உறுதுணை"



உளுந்தூர்ப்பேட்டை
**திரு. சண்முகம்**

உன்னுடைய வேலொன்றே உறுதுணையாய் வருகிறது
கும்மிருட்டுப் பாதையிலும் கோலாகத் தெரிகிறது!
(உன்னுடைய)

என்னுடைய ஆட்டமெல்லாம் நீஅமைத்த மேடையிலே
இசைவதுவும் அசைவதுவும் நீகாட்டும் சாடையிலே!
(உன்னுடைய)

பன்னிரண்டு தோள்களெனும் பரந்தவெளி பறந்துவர
சின்னமனச் சிறகதுதான் சிறிதேனும் பயின்றிடுமோ?
தென்பழனிச் சண்முகத்தின் தேன்முகத்தைக் காண்பதற்கு
என்முகத்தில் அமைந்திருக்கும் இருவிழியால் இயன்றிடுமோ?
(உன்னுடைய)

சூழ்ந்திருக்கும் இயற்கையெலாம் சொல்லுதையா திருப்புகழை
சுற்றிவரும் உலகமெலாம் துதிக்குதையா உன்பெயரை
வாழ்ந்திருக்கும் காலமெலாம் வணங்கிடுவேன் திருவடியை
வரவிருக்கும் பிறவியிலும் வாழ்த்திடுவேன் நின்னருளை!
(உன்னுடைய)

# அருள்மிகு வாழைத் தோட்டத்து அய்யன்கோயில்

**அய்யம்பாளையம் — மங்கலம் அஞ்சல்**

**பல்லடம் வட்டம் - கோவை மாவட்டம்**



*"தொல்லுலகில் பல்வினையும் இரவிகண்ட பனியது போல்*
*வல்லமை யாலகற்றும் வாழைவனத் தய்யாவுனை*
*நல்லோர்கள் புகழ்ந்திடுவர்; நஞ்சகற்றும் நாதனெனப்*
*பல்லோர்கள் தொழுதுய்யப் பாடுவது முன்புகழே"*



அஞ்செழுத்து மந்திரத்தால் நஞ்சகற்றும் நாதன் ஆகிய அருள்மிகு வாழைத் தோட்டத்து அய்யன்கோயில் பல மகிமைகளுடன் தீராத பிணிகளையும், ஆறாத புண்களையும், சகல விஷக்கடிகளையும் போக்கி அருளும் திருத்தலமாகவும் ஒரு நூற்றாண்டுக்கு மேலாக விளங்கி வருகிறது. இத்திருத்தலத்தைச் சோமனூரிலிருந்தும், திருப்பூரிலிருந்தும் வரும் டவுன் பஸ்கள், இதர பஸ்கள் மூலமாக அடையலாம். இத்திருக் கோயிலில் தற்சமயம் கர்ப்ப கிரஹம் அர்த்த மண்டபம் முதலான கருங்கல் திருப்பணி வேலைகள் நடைபெற்று வருகின்றன. மேலும் இத்திருக்கோயிலின் சார்பில் அனாதை மாணவர் இல்லம் ஒன்றும், சாமளாபுரத்தில் உயர்நிலைப்பள்ளி ஒன்றும் துவக்கப்பெற்று செயல்பட்டு வருகின்றன. பக்தர்கள் தங்க விடுதிகளும் மின்சாரம், குடிநீர் முதலான வசதிகளும் உண்டு. எனவே பக்தர்கள் அனைவரும், இத்திருத்தலத்திற்கு வருகை தந்து அருட் செல்வமும், பொருட் செல்வமும் பெற்று விளங்க வேண்டுகிறோம்.

*இங்ஙனம்,*

**P. R. கோவிந்தராஜலு**, B. A., B. Com.,
*செயல் அலுவலர்*

**சோ. கு. பழனிசாமி**
*தலைவர், அறங்காவலர் குழு*

**M. சின்ன மாரப்ப கவுண்டர்**
**M. பழனிசாமி**
**M. சுப்பையன்**
*அறங்காவலர்கள்*



தண்டபாணி நிலையம் பணியாளர்கள்



பழைய சத்திரம் பணியாளர்கள்

# தெய்வீக ஆடற் கலை









வழுவூர்
## திரு. பி. இராமையா பிள்ளை

நமது ஆடற் கலை தெய்வீகமானது என்பது அனைவரும் அறிந்ததாகும். உலகத்தில் அனைவரும் சர்வ மங்களமும் அடைவதற்காக ஸ்ரீ நடராஜ மூர்த்தியால் உலகத்திற்களிக்கப்பட்ட கலை.

இவ்வாடற் கலை பரத சாஸ்திரங்கள், நந்திகேஸ்வரர், அகத்தியர், வசிஷ்டர், பரதஞ்சாரங்கதேவர் முதலியவர்களாலும் இன்னும் அநேக பேர்களாலும் மிகவும் விரிவாக எழுதப்பட்டிருக்கிறது.

ஆதியாம் பொருளில் முக்குணஞ்சேர, அம்
  பரமெனுஞ் சத்தம் பிரமம்
ஆயதிற் றோன்று நாதம் தேவாஞத்
  மகம், தொன் ளியாந்து மகமென்(று)

ஓதிய விரண்டு வகையுடன் தனித்த
  உமையொரு பாகன்முன் நாளில்
உலகெனுங் கலைகள் ஈரெட்டை மேவி,
  ஒப்பிலா ஆனந்தம் முதலா

ஏதமில் தாண்டவம் பதினாறும் ஏற்கையாய்
  ஆடிடும்; அப்போது ஏந்திய
உடுக்குக் கிண்கிணி கெச்சை இவற்றுள்
  வியாகரண சூத்தி ரங்கள் ;

மீதுறும் கண முதலாகிய நூல்கள்;
  விளங்குறும் அவற்றுள் இப் பரதம்
விண்ணவர் புகழ ஆடி, இப்பயனை
  விரிஞ்சனுக் கோதினன் அரனே.

விரிஞ்சன் அம்முறையை மறையுள்
  விதிகளைப்பயன்படும்போது, [ஆராய்ந்து
வேதமாம் இருக்கு தன்னுள் நாட்டியமும்
  மேன்மையாம் யசுர்வேதம் தன்னுள்

அரிதென விளங்கும் அபிநயமும், பேர்
  ஆகிய சாமவேதத் துள் அகி
லங்கொண் டாடும் கீதமும், மற்றும்
  அதர்வண வேதத் துள் ரசமும்,

முறைகொளக் கண்டு, சாத்திரம் திரட்டி,
  முப்பத்திரண்டு லட்சமதாய்
முழங்கிய கிரந்தம், தர்மார்த்த காம
  மோக்ஷம்ஈந் திடுமென, பின்னும்

திரைகொளும் துக்கம் பயம்சோகம்
  தீங்குறு பேதங்கள் தீர்த்துத் [வெறுப்புத்
திறம்பெறும் ஆனந் தம்தரும் எனவே
  செப்பியே வாழ்த்தினன் மலரோன்

அம்முறை தன்னை நந்திகண் டே,நா
  லாயிரம் கிரந்த மதாக
அருளிய அதனை, பரதமா முனிவன்
  அறிந்து அரன் நோக்கியே நடிக்க

இம்முறை பெண்பா லாகில்நன் றென்றே
  ஈசனார் நினைத்திட, உமையாள்
இன்பமே பயக்க ஈசன்முன் ஆடி
  எழில்பெற, இவ்விரு முறையைத்

தம்மிலே வாணசுரன் மகட்கு உரைக்க,
 தையலுடன் சார்ஙி தேவன்,
தக்ஷிண கும்பமுனி, பாட்டன், பிருங்கி,
 சார்த்தநாதன், பிரகற் பதியும்,

செம்மைசேர் சுங்கன், தத்திலன், அநுமன்,
 சிறந்தகோ களன், அருச் சுனனும்,
திறமை சேர்.....................

காசிபன் வியாசன் வாணி கம்பளன் வாயு
 தேவன்
பேசிய யாஞ்ஞ வல்கன் வசிட்டனும் சேடன்
 பின்னும்
மாசிலா தோங்கு விச்சு வாவசு உடனே
 பேராம்
தேசம தாளும் ராஜ சேகர வழுதி மற்றும்

திறமான ராவணனும், வாண சுரன்
 சீராகும் அரசர்களில் விக்ர மார்க்கன்,
மருவிலா அரம்பையரும் போஜனோடு
 வாசுகியும், சத்திமுனி, உலகில் மற்றும்,

வருசோம நாதன், கோரட்சகன், பேர்வான்
 நதியைப் புனைந்தோனும், வகைகள்
 தேர்ந்து
முறையாக நூல்களை உண்டாக்கித்
 தாமும்முன்
 நடித்தும்உல கோர்க்கும் உரைத்திட்
 டானே.

அகத்தியர் பரத சூத்திரத்தில் சிவதாண்டவம் நூற்றெட்டு (108) எனக் கூறியுள்ளார். அதில் சிவபெருமானின் துவாதச தாண்டவமென்னும் பன்னிரெண்டு (12) தாண்டவங்களுக்குச் சாரங்க தேவர் பின்வருமாறு விவரம் கூறியுள்ளார் :—

**1. ஆனந்த தாண்டவம்:**

இது சிவபெருமான் சகல பிரபஞ்சமும் தேவர்கள் முதற்கொண்டு சகல ஜீவராசிகளும் தோன்ற ஆடியது. இதில் ஜன்னியம் ஜதிநாட்டியம்.

**2. சந்தியா தாண்டவம்:**

இது தேவதைகளுக்கு வாத்தியங்களும், வாத்தியங்களுக்கு இசைந்த தொனிக்கும் உண்டாகும் பொருட்டுத் தேவதைகள் நிமித்தம் ஆடியது. இதில் ஜன்னியம் கீத நாட்டியம்.

**3. ஸ்ருங்கார தாண்டவம்:**

இது ஜோதிடம் முதலிய ஆறு அம்சங்களும் பாவ ராக தாளமும் உண்டாகும் பொருட்டுப் பார்வதி தேவி நிமித்தம் ஆடியது. இதில் ஜன்னியம் பரத நாட்டியம். இதை மங்களகரமான காலத்தில் செய்கிறவர்களும், பார்ப்பவர்களும் இகபர சுக போகங்கள் அடைவர் எனக் கூறப்படுகின்றது.

**4. திரிபுர தாண்டவம்:**

இது பூமி முதல் ஆகாயம் வரை அனைத்தும் தன்வசமாக்கித் திரிபுரசுரர் நிமித்தம் ஆடியது. இதில் ஜன்னியம் பேரணி நாட்டியம்.

**5. ஊர்த்தவ தாண்டவம்:**

இது தமது செவியினின்று நழுவிய குழை என்னும் ஆபரணத்தைப் பாதத்தால் எடுத்து முன்போல் அணிந்து காளியின் நிமித்தம் ஆடியது. இதில் ஜன்னியம் சித்திர நாட்டியம்.

**6. முனி தாண்டவம்:**

இது பதஞ்சலி முனிவர் தன் வாயினால் தாளாங்கம் காட்ட அதற்கிணங்க பதஞ்சலி வியாக்ரபாதர் நிமித்தம் சதானந்தத் தாண்டவமாய்ச் சிதம்பரத்தில் ஆடுவது. இதில் ஜன்னியம் லய நாட்டியம்.

**7. ஸம்ஹார தாண்டவம்:**

இது மார்க்கண்டேயர் நிமித்தம் நமனை வதைக்கும் பொருட்டு ஆடியது. இதில் ஜன்னியம் முகசாள நாட்டியம். சிம்மள நாட்டியம்.

**8. உக்கிர தாண்டவம்:**

இது ஆடியவர்களைக் காக்கும் பொருட்டுக் கயாசுரன் நிமித்தம் ஆடியது. இதில் ஜன்னியம் ராஜ நாட்டியம்.

**9. பூதத் தாண்டவம்:**

இது மான், மழு, திரிசூலம், டமருகம் முதலிய படைகளை ஏற்றுக் கரி உரி போர்த்தித் தாருகாவன ரிஷிகளுக்கு அனுக்கிரகம் செய்யும் பொருட்டு ஆடியது. இதில் ஜன்னியம் பட்டஸ நாட்டியம். இந்த வரலாற்றை மாயூரத்திற்கு ஐந்து (5) மைல்

தெற்கே உள்ள வழுவூர் என்னும் கஜ சம்ஹார க்ஷேத்திர வரலாற்றில் காணலாம்.

**10. பிரளய தாண்டவம்:**

இது சர்வமும் தன்வயமாக்கி ஆடியது. இதில் ஜன்னியம் பாவைக் கூத்து.

**11. பூஜங்க தாண்டவம்:**

இது ஆலம் உண்ணும் பொருட்டு ஆடியது. இதில் ஜன்னியம் பித்த நாட்டியம்.

**12. சுத்த தாண்டவம்:**

இது வன முனிவர்கள் பொருட்டு ஆடியது என்றும் இதில் ஜன்னியம் பாதாசாரி நாட்டியம் அக மார்க்கம் அந்தரங்க நடனம் என்றும் சாரங்க தேவர் கூறியிருக்கிறார். இப்படித் தெய்வீகமாகத் தோன்றி வளர்ந்த கலையில் நம் தமிழ்நாடு மிகப் பழைய கால முதலே ஆடற்கலையில் பெரும் சிறப்பு வாய்ந்திருந்தது என்பது எவரும் மறுக்க முடியாத உண்மை.

சிலப்பதிகாரத்தில் அரங்கேற்றுக் காதையில் அடியார்க்கு நல்லார் உரையும் பண்டைத் தமிழகத்தில் ஆடற்கலை பெற்றிருந்த சிறப்பை நன்கு விளக்குகிறது. மாதவியின் நாட்டியம் அரங்கேறியபோது "நாட்டிய நன்னூல் நன்கு கடைப்பிடித்து" ஆடியதாகக் கூறப்படுகிறது. ஆகையால் தமிழகத்தில் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கும் முன்பே ஆடற்கலை இலக்கணங்கள் வகுக்கப்பட்ட பழமையான அனேக நூல்கள் இருந்திருப்பது புலனாகிறது. இன்னும் ஆடலாசிரியன் அமைதி கூறுங்கால் இருவகைக் கூத்தின் இலக்கணம் அறிந்து என்றும் சாற்றுகின்றார். இதன் விளக்கம் அடியார்க்குநல்லார் இருவகைக் கூத்து "சாந்தியும் விநோதமும்" என்று கூறி அவற்றின் உட்பிரிவுகளைக் கொடுத்துள்ளார்.

''சாந்திக் கூத்தும் விநோதக் கூத்தும் என்று
ஆய்ந்துற வகுத்தனன் அகத்தியன்தானே.''

''சாந்திக்கூத்தே தலைவன் இன்பம் ஏந்தி நின்றாடிய ஈரிரு நடமவை சொக்க மெய்யே அவிநயம் நாடகம் என்றிப் பாற்படுமென் மனார் புலவர்''. சாந்திக் கூத்தின் உட்பிரிவுகளில் சொக்கம் என்றது சுத்த நிருத்தமாகும். இது நூற்றெட்டு கர்ணமுடையது. மெய்க் கூத்தாவது தேசி, வடுகு, சிங்களம் என மூவகைப்படும். அபிநயக் கூத்தானது கதை தழுவாது பாட்டினது பொருளுக்குக் கைகாட்டி வல்லபம் செய்யும் பலவகைக் கூத்து.

விநோதக் கூத்தின் உட்பிரிவுகள் — குரவை என்பது காமமும் வென்றியும் பொருளாகக் குரவை செய்யும் பாட்டாக எழுவரேனும் எண்மரேனும் ஒன்பதின்மரேனும் கைப் பிணைந்தாடுவது. கலி நடம் என்றது கழாய்க்கூத்து, குடக்கூத்து என்பது பதினோராடலில் ஒன்று. கரணமாவது படிந்தாடல். நோக்கென்றது பாரமும், நுண்மையும், மாயமும் முதலியவற்றை உடையது. தோற்பாவை என்பது தோலாற் பாவை செய்து ஆட்டுவிப்பது ஆகும்.

இன்னும் ஆடலாசிரியன் பதினோராடலுக்குரிய பாட்டும், கொட்டும் அறிந்திருக்க வேண்டுமென்றும் இளங்கோ வடிகள் கூறியுள்ளார். அல்லியம், கொடுகொட்டி, குடை, குடம், பாண்டரங்கம், மல், துடி, கடயம், பேடு, மரக்கால், பாவைக் கூத்து ஆகியவை பதினோராடலாகும்.

சிலப்பதிகாரத்தில் உள்ள ஆய்ச்சியர் குரவை பண்டைத் தமிழிசைக்கும் ஆடற்கலைக்கும் வற்றாததோர் கருவூலம் ஆகும். குரல், துத்தம் கைக்கிளை, உழை, இளி. விளரி, தாரம் என்னும் ஏழுவகை நரம்புகளும் ஏழு பெண்களாகக் கைகோத்து இறைவனைப் பாடி ஆடுவதாக அமைந்துள்ள இக் கற்பனை மிகவும் அழகியது. அரியது.

''செந்நிலை மண்டிலத்தான்
கற்கடக்கைகோத்து அந்நிலையே
ஆடற் சீராய்ந்து''

அவர்கள் முல்லைத் தீம்பாணியில் பாடிய

''கன்று குணிலாக் கனியுதிர்த்த
மாயவன்
இன்று நம் ஆனுள் வருமேல் அவன்
வாயிற்

கொன்றையந்திங் குழல் கேளாமோ
தோழி''

முதலிய இன்னிசைப் பாடல்கள் நம் கருத்தை விட்டு என்றும் அகலா.

நம் தமிழ் நாட்டில் மூவேந்தர் ஆட்சிக்கு முன்னிருந்தே கீதம், வாத்தியம், நிருத்தியம் என்று சொல்லப்பட்டதும், தோல் கருவி, துளைக் கருவி, நரம்புக் கருவி இவற்றைத் தோற்றுவித்து பண், பாடல், ஆடல், சித்திரம், சிற்பம் எல்லாம் ஒருங்கே அமைந்ததுமாகிய ஆடற்கலை நமது பழம் பெரும் பரத நாட்டியக் கலையாகும்.

இத்தகு சிறப்பு வாய்ந்த இப்பழம் பெரும் ஆடற்கலையைத் தொன்று தொட்டுப் பல்லாயிரம் வருடங்களாகத் திறமை வாய்ந்த ஆடல் ஆசிரிய மரபினோர்கள் தம் மாணவ மாணவியர்களுக்குப் பயிற்றுவித்து வந்தார்கள். பழைய ஏடுகளிலும், கல்வெட்டுகளிலும் கண்ட சாந்திக் கூத்து, ஆரியக்கூத்து, தமிழ்க்கூத்து, சாக்கைக்கூத்து முதலியவற்றை அவர்கள் மரபுகெடாமல் போற்றி வந்தார்கள். ஒவ்வோர் அசைவிலும், தட்டிலும், தூக்கலிலும், நிலையிலும் முகத்தோற்றத்திலும் இக் கலையின் தெய்வீகத் தன்மையை மக்களுக்கு நன்கு விளங்குமாறு செய்து வந்திருக்கிறார்கள். இவ்வாறு சிறந்த முறையில் நாட்டியக் கலைக்கு அரும்பணியாற்றி வந்த தேர்ந்த ஆடலாசிரியர்களுக்கு மூவேந்தர்கள் ஆட்சியில் நட்டுவநிலை, நட்டுவக்காணி, கூத்துக்காணிபோன்ற சர்வ மான்யங்களும் நிருத்தப் பேரரையன் சாக்கை மாராயன் போன்ற பல பட்டங்களும் வழங்கிச் சிறப்பித்து இருக்கிறார்கள் என்ற விவரங்களும் மிகப் புராதனமான வழுவூர் நாட்டியாச்சார்ய பரம்பரை வரலாற்றில் கூறப்படுகிறது. பல நூற்றாண்டுகளுக்குமுன் சோழ குல ராஜகுமாரிகளும், இதர அரசகுலப் பெண்களும் அக்காலத்தில் வழுவூரில் வாழ்ந்த நாட்டியாச்சாரியர்களிடம் கலைகள் பயின்றதும், வழுவூர் கஜ சம்ஹார மூர்த்தியாகிய ஞான சபேசர் நடன உற்சவ காலத்தில் நாட்டியாச்சாரியர்களால் சொல்லப்பட்டு வந்த தாண்டவ ஜதிகளின் விசேஷச் சிறப்புக்களும் அது சமயம் வாசிக்கப்படும் சுத்த மத்தளச் சிறப்பும் வழுவூர் கோவில் கல்வெட்டுக்களில் உள்ளதாகச் சான்றோர் கூறுவர்.

இத்தகைய பெருமைகள் வாய்ந்த நமது தெய்வீகக் கலைகள் அனைத்தையும் நமது முன்னோர்கள் பல ஆயிரம் வருடங்களாகத் தேவாலயங்களில் தெய்வீக வழிபாட்டுக்கான ஆன்ம விதிகளையும் வகுத்துப் போற்றி வளர்த்து வந்திருக்கிறார்கள். பண்டைக்காலம் முதற்கொண்டு கீத, வாத்திய நிருத்தியம், சித்திரம், சிற்பம் முதலிய லலித கலைகள் அனைத்தையும் தமிழகத்தில் வாழ்ந்த அரசர்களும், செல்வந்தர்களும், மடாதிபதிகளும் பல ஆயிரம் ஆண்டுகளாக ஆதரித்துப் போற்றி வளர்த்து வந்திருக்கிறார்கள். அதே போல் தற்காலத்திலும், மத்திய அரசும், தமிழக அரசும் கலைகளையும், கலைஞர்களையும் மிகவும் ஆதரித்து வருகிறதோடு கலைகள் வளர்வதற்கு ஆவன பலவும் செய்து வருகின்றது. தமிழகத்தில் உள்ள எல்லா ஆலயங்களிலும் ஒவ்வொரு ஆண்டும் நடக்கும் விழாக்களில் பத்து தினங்களும் சிறந்த தமிழிசைக் கச்சேரிகளும், ஆடல் நிகழ்ச்சிகளும் ஏற்பாடு செய்து ஆங்காங்குள்ள பொதுமக்கள் இலவசமாய் இனிய தமிழிசை கேட்கவும், ஆடல்களைப் பார்க்கவும், கலைகள் வளரவும் துணை புரிவார்கள் என்று நம்புகிறேன். அங்ஙனமே செய்ய வேணுமாய் ஆலய நிர்வாகிகளையும் கேட்டுக் கொள்ளுவதோடு அது சமயம் அவர்கள் இதற்காகக் கோரும் கோரிக்கைகளைப் பூர்த்தி செய்து அறநிலையப் பாதுகாப்புத் துறை ஆணையாளர் அவர்கள் இங்ஙனம் நமது தமிழ்ப் பெருங் கலைகள் வளர்வதற்கு ஆவன செய்ய வேண்டுமாய்ப் பணிவுடன் கேட்டுக் கொள்கிறேன்.

தேமதுரத் தமிழ் வாழ்க!
தமிழ் இசை வாழ்க!
வாழ்க கலை அன்பர்கள்!
வாழ்க தெய்வீக ஆடற்கலை!

கோசாலை மான்கள்



இழுவை ரயில் நிலையம் - மலையின் மேல்



# பழநிப் புகழ்





திரு. டி. எம். நாராயணசாமி பிள்ளை

பொற்பாதம் பெற்றேரே அற்புதம் புரிவர். பல அற்புதங்களைச் செய்து காட்டி பழநிமலை தமிழகத்தில் நிலையான புகழுடைய முருகன் ஆலயமாம். முருகனது திருத் தலங்களாக விளங்கும் ஆறுபடை வீடுகளில் திருவாவினன்குடி - மூன்ருவது படைவீடாகும். முதலாவதான திருப்பரங்குன்றம் மிகப் பழங்காலந்தொட்டே **பரிபாடல்** என்ற நூலில் மிகச்சிறப்பாகப் போற்றப்படுகிறது. அடுத்து திருச்சீர் அலைவாய் - திருச்செந்தூர் ஆறுமுகக் கடவுளின் ஆறுமுகங்களின் சிறப்புக்களை விளக்கி, ஆறுமுகக்கடவுளை வழிபடும் சிறந்த தலமாக விளங்குகிறது. அதற்கடுத்ததாக ஆவினன்குடி புகழப்படுகிறது.

நக்கீரதேவர், திருமுருகாற்றுப் படையில் திருவாவினன் குடியிலே சித்தகணநாதர், முனிபுங்கவர் சிறப்பாக வழிபட்டனர் எனக் கூறுகிருர். காமமும், கோபமும் கடிந்தவர் என்றும் துன்பமில்லாதவர், கற்றேர், அறியா அறிவினர், கற்றேர்க்குத் தாம் வரம்பாகிய தலைமையர், அதாவது கற்ற நூற்கருத்துக்ககப்படாத அப்பாற்பட்ட அனுபவமுடையர் என்று கூறுகின்ருர்.

பிற்காலத்திலே சித்தகணத் தலைவராக விளங்கிய போக நாதரால் பழநி தண்டபாணி சுவாமி நிர்மாணிக்கப் பெற்று அதன் மகிமை தமிழகம் எங்கும் பரவி - இன்று பிரார்த்தனைத் தலமாகச் சென்று வழிபட்டு வருகிற தேவாலயமாக விளங்கி வருகின்றது.

ஆங்காங்கு சென்று பதிகம் பாடிச் சைவ-சிவாலய வழிபாட்டு நெறியைச் - சிறப்பித்த தேவார ஆசிரியர்கள் இங்குச் சென்று பதிகம் பாடியதாக இல்லை. என்ருலும் இந்தத் தலம் தன்பெருமையில் என்றும் ஒன்றும் குறைந்திலது.

இனி அதற்கும் பிற்காலத்திலே வைதிக நெறியைப் பட்டி தொட்டியெல்லாம் சென்று சந்தப் பாக்களால் தமிழையும், பக்தியையும் வளர்த்த அருணகிரிநாதர் காலத்திலே மிகப் பிரபலமாக விளங்கியிருந்தது. அருணகிரிநாதர் வடமொழியும், தமிழும் வல்லவராதலின் புதுமுறையிலே, பாரத, இராமயண பாகவதக் கதைகளை எல்லாம் கொண்டு காலத்துக்கேற்பச் சந்தப் பாவாக மக்களுடைய நடைமுறைகளை எல்லாம் வைத்து இனிய முறையிலே பாடிப் பக்திப் பெருவெள்ளம் தமிழகத்திலே பெருக்கெடுத்து வளர்ந்தோங்கச் செய்தார்.

அந்தத் திருப்புகழிலே ஆவினன்குடி பற்றிப் பல திருப்புகழ்ப்பாடல்கள் உள்ளன. ஆவினன்குடி, பழனி, சிவமலை, சிவவெற்பு

ஞானமலை என்ற பெயர்கள் எல்லாம் பழனியைக் குறிப்பனவே.

அவற்றுள் பழனிமலையின் இயற்கை எழிலும், வழிபடுவோரின் இனிய பண்பும் மிக அழகாக எடுத்துக் கூறப்பட்டுள்ளன. முருக பக்தி சிறப்பாக இருந்த காலம் அது. அருணகிரிநாதரையும் பதினைம் நூற்றாண்டில் உதித்த ஒரு சமயாச்சாரியாராகவே கொள்ள வேண்டும். முருக பக்தியில் சிறந்து விளங்கும் உயர்திரு. டாக்டர் செங்கல்வராய பிள்ளை அவர்கள் அருணகிரிநாதரின் நூல்களைப் பன்னிரண்டு திருமுறைகளாக வகுத்துக்காட்டி வழிபட வேண்டுமென்று வற்புறுத்தியிருக்கிறார். சைவ வைஷ்ணவ ஒற்றுமையைக் கண்டவர்.

அங்கே மக்கள், தம் பிணி தீர்வதற்கும், பிள்ளை பேற்றுக்கும் இன்னும் தங்கள் வேண்டுகோள் நிறைவேற்றுவதற்குமாகச் செல்கின்றனர். பழனிமலை தண்டபாணி சுவாமி கலியுக வரதனை நின்று வேண்டுவார் வேண்டுவதே நல்கும் தெய்வமாக விளங்கும் பிரார்த்தனைத் தலமாக - விளங்கப் பலரும் சென்று வணங்கி வழிபட்டு வருகின்றனர்.

சாதாரண நாட்களே அன்றி பங்குனி, உத்திரம் போன்ற திருவிழாக் காலங்களிலே பால்காவடி, பன்னீர்க்காவடி எடுத்துச் செல்லும் வழிபாட்டு முறைகள் பெருகின. காவடிச் சிந்துப் பாடல்களும் மல்கின. நெடுந்தொலைவில் உள்ளவர்கள் எல்லாம் பிரார்த்தனைக்காக வேண்டுதல் நேர்ந்து தங்கள் காணிக்கைகளைச் செலுத்தப் பழனிக்குச் சென்று வந்தனர்.

காணிக்கைப் பொருள்களும், தங்கம், வெள்ளிக் காசுகளாக, கோழி, ஆடுகள், நவ தானியங்களாகச் செலுத்தப் படுகின்றன. இந்த வழிபாட்டு முறையில் தமிழகத்தில் பழனிதான் சிறப்பாக இருந்து வருகின்றது.

இரயில் வண்டி முதலியதொரு வசதியும் இல்லாத காலத்திலேயே பழனிக்கு மக்கள் திரண்டு சென்று வந்தனர். வசதிகள் நிறைந்த இக்காலத்தில் சொல்லவும் வேண்டுமோ! தமிழ் மக்களுக்கே உரிய தனிப்பெரும் தெய்வம் முருகன்.

பழனி பஞ்சாமிர்தம் - விபூதி எங்கும் பெயர் போனவை. அங்கு நெடுங்காலமாகச் சித்தர்கள், முனிவர்கள், தவசிகள், பக்த கோடிகள் வாழ்ந்து வந்துள்ளனர். 'முருகா' என்ற ஒலி ஒலித்துக் கொண்டே இருக்கும். ஆறுகால பூஜை. மக்கள் கூட்டம் என்றும் இருந்துகொண்டே இருக்கும்.

அரிய சாதனமாக ஞானயோக தியான நிஷ்டை இல்லாதவர்களும் எளிய சாதனமாகப் பக்தி பரவச ஈடுபாட்டிலே மிக்கவர்களாய்ப் பழனிக்கு வந்து தண்டபாணியைத் தரிசித்து - அதிலேயே ஈடுபட்டு - பலன் பெற்றவர்களாய் வேண்டுவது நிறைவேறப் பெறுகின்றனர். எக்காலத்திலும் திரள் திரளாக மக்கள் கூடி வழிபடும் நிலை விளங்கியோங்குகிறது.

'பண்டைத் தன் மணங்கமழ் தெய்வத்து
இளநலங் காட்டி' - என்றாங்கு,

கற்றவரேயன்றி எல்லாத் தரத்திலும் உள்ள மற்றைப் பொதுமக்கள் யாவரும் திரண்டு வந்து வழிபடும் பெருமை உடையது.

நம்காலத்தில் பழனியில் வழிபட்டுச் சித்தியடைந்த ஒருசிலரை மட்டும் இங்கு சிந்திப்போம். வள்ளிமலை சுவாமிகளைச் சொல்லாமல் இருக்க முடியாது. அடியேனுக்கு நன்றாக நேரில் தெரிந்தவர். அவருக்குத் தீராத வயிற்றுவலி ஏற்பட்டுப் பழனி முருகனையே தஞ்சமாக அடைந்து தினம் வழிபட்டு வியாதியிலிருந்து விடுபட்டார். அதுமட்டுமல்லாமல் உலக பாசங்களினின்றும், ஜாதி முதலிய அகங்காரங்களின்றும் நீங்கி அன்பே உருவமாக விளங்கி உபகாரியாய் வாழ்ந்தார். அவர் சற்றும் படிக்காதவர். எழுத்தே அறியாதவர். எப்படியோ முருகன் அருளாலே திருப்புகழில் நிபுணத்துவம் பெற்று, சென்னை, வட ஆற்காடு, திருத்தணி முதலிய இடங்களில் திருப்புகழை விமரிசையாக நம் காலத்தில் பரப்பியிருக்கிறார். வள்ளிமலையைத் தமது இருப்பிடமாகக் கொண்டார். வள்ளிமலை சுவாமிகள் சிறந்த முறையில் சித்தி பெற்றவர்கள். சென்னையில் வழக்கறிஞராகவும், திருவாங்கூர் உயர் முதல் நீதிபதியாகவும்

விளங்கின திரு டி. எம். கிருஷ்ணசாமி ஐயரவர்கள் அவர்களுடைய சிஷ்யர்களில் ஒருவர்.

சாது சுவாமிகளும் இங்கிருந்து நெடுங்காலம் வழிபட்டுச் சித்தி பெற்றவர்கள். ஆயிரக்கணக்கான மக்களுக்கு உபகாரமாயிருந்தார்கள். ஏழைகளுடைய சாப்பாட்டிற்குப் பழநியில் நிரந்தரமாக ஏற்பாடு செய்தார்கள்.

திருக்கோவிலூர் ஆதீனம் ஐந்தாவது பட்டம் மறைத்திரு ஞானியார் சுவாமிகள் பழனி ஆண்டவரிடம் மிகவும் ஈடுபாடு கொண்டவர்கள். அவர்கள் இறந்த முறையே இதற்கு ஒரு சான்றாகும். அவர்கள் சொல்லுவது தங்கள் ஆதீனத்து முதல் குரவரும், நிஷ்டானுபூதி பாடியவருமான ஆறுமுக ஞானியார் அவர்கள் பழனி தண்டாயுதபாணி வரம் பெற்றுப் பிறந்தவர்கள் என்பதாகும்.

பக்தியால் யானுனைப் பலகாலும்
பற்றியே மாதிருப்புகழ்பாடி
முத்தனு மாறெனைப் பெருவாழ்வில்
முத்தியே சேர்வதற் கருள்வாயே

உலகியல் நெறியில் உழலும் நம் போன்றவர்க்குப் பக்தி நெறியே உத்தம சாதனம். ஏனெனில் நமக்குத் துறவோ, வைராக்கியமோ, உலக இச்சை விடுவதோ, வெறுப்பதோ, மூச்சடக்கி யோகம் புரிவதோ, ஞான சாதனமோ, ஊண் உறக்கம் தள்ளுவதோ ஆகாத காரியம்; நினைக்கவும் வராது. ஆகவே முருகனுக்குப் பக்தர்களாகி அவன் திருப்புகழ் பாடி உலகத்திலே வேண்டுவன வேண்டியாங்கு பெற்று வாழ்ந்து

'இசைபயில் சடாக்ஷர மதனாலே
இகபர சௌபாக்யம் அருள்வாயே'

என்று பழனுபுரிவாழ் பெருமானை வேண்டுவோம். வேண்டுவது கிடைக்கும்.

திருப்புகழ்ப் பெருமையை அருணகிரி நாதரே 'சினத்தவர் முடிக்கும்' என்ற திருப்புகழில்

"நினைத்ததை அளிக்கும், மனத்தையும்
உருக்கும்,
நிசிக்கரு வறுக்கும் - பிறவாமல்
நெருப்பையும் எரிக்கும் பொருப்
பையும் இடிக்கும்
நிறைப்புகழ் உரைக்கும் செயல்
தாராய்" என்று

கூறியுள்ளார். எனவே நாம் பழனிமலை வரு, பழனிமலை தரு, பழனிமலை முருகனது திருப்புகழ் பாடிப் பரவசமாகி இகபர சௌபாக்கியமுற்று வாழ்வோமாக.

அபகார நிந்தைபட் டுழலாதே
அறியாத வஞ்சரைக் குறியாதே
உபதேச மந்திரப் பொருளாலே
உனைநான் நினைந்தருள் பெறு
வேனே

என்றும் இளமை தவழ் அழகிய முருகப் பெருமானது திருமணப் பெரும்பதப் பேரின்பப் பெருவாழ்வு பெறத் திருவருள் கூட்டுவிப்பதாக.

2—9—73 அன்று கும்பாபிஷேகம் நடத்துவதற்கு மிகவும் மகிழ்ச்சி. அறங்காவலர்களுக்கும், தலைவருக்கும் மிக்க நன்றி. நாளும் தமது இசையால் திருப்புகழை ஸ்ரீ முருக கிருபானந்த வாரியார் சுவாமிகள் பரப்பி வருகின்றார்கள். அவர்களுக்கும் நன்றி.

தற்காலத்தில் மக்களுக்கு நேரும் கஷ்டங்கள் எல்லாம் நீங்கி, நல்ல நிலைமை உண்டாகும்படியாக எல்லாம்வல்ல பழநியாண்டவரைப் பிரார்த்திக்கின்றேன்.



# அருள்மிகு இலக்குமி நரசிம்மசுவாமி திருக்கோயில்

**சோளிங்கபுரம் ◆ வ. ஆ. மா.**



சோளிங்கபுரம் மிகவும் பிரசித்திபெற்ற ஒரு தலமாகும். அரக்கோணத்திலிருந்து 27 கிலோ மீட்டர் தொலேவிலுள்ளது. திருமங்கை ஆழ்வார் மங்களாசாஸனம் செய்த கெடிகாசல க்ஷேத்திரம் ஆகும். எல்லாப் பக்தர்களும் மனக்கவலே, சரீர நோய்கள் தீர தக்கான் குளத்தில் (பிரம்மதீர்த்தம்) மூழ்கி, பிறகு சிறிய மலேயில் தோன்றியிருக்கும் ஸ்ரீ யோக ஆஞ்சநேயரைத் தரிசித்துப் பிறகு பெரியமலேயில் தேஜோமயமாக வீற்றிருக்கும் ஸ்ரீ யோகநரசிம்மரைத் தரிசித்துத் தங்கள் குறைபாடுகளே நிவர்த்தித்துக்கொண்டு மகிழ்வுடன் தத்தம் இல்லங்களுக்குச் செல்வதைக் காணலாம்.

மேலும் சூனியம், பில்லி, நோய், பிணி, பிசாசு, ஏவல், பைத்தியம், தீராத நோய், மக்கட்பேறு குறை இவைகளால் பீடிக்கப்பட்டவர்கள் இங்குவந்து கொண்டபாளேயம் சத்திரத்தில் தங்கி பிரம்ம தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து பெரிய மலேக்கோ, சிறிய மலேக்கோ காலேயில் சென்று ஒரு சன்னதிக்கு 108 பிரதக்ஷணங்கள் செய்து குறைந்தது 12 நாட்கள் சுற்றி வந்து மனக்குறைகள் தீர ஸ்வப்னம் ஸாதிக்கப்பெற்று மேற்படி ஸ்வாமிகளுக்குத் திருமஞ்சனம் செய்து ஊர் திரும்புகின்றனர்.

தற்பொழுது பிரம்மத்தீர்த்தம் (தக்கான் குளம்) திருப்பணி வேலே சுமார் மூன்று லட்ச ரூபாய் மதிப்பீட்டில் நடைபெற்று வருகிறது. திருப்பணி முழுமையடைய மெய்யன்பர்கள் தாராளமாக நிதி பொருளுதவி நல்கிப் பெருமானின் கிருபைக்குப் பாத்திரர்களாகும்படி கேட்டுக்கொள்ளப்படுகின்றனர்.

சா. இராதா
*அறங்காவலர்*

**ஆர். என். இராதாகிருஷ்ணன்,** பி. காம்.
*நிருவாக அதிகாரி*

# சமயம்







**திருமதி சிவானந்த விஜயலக்ஷ்மி**

சமயம் என்ற சொல்லுக்கு அடையாளம், உடன்படிக்கை, எல்லை, தக்க காலம், தருணம், மதம், நியாயத் தீர்ப்பு என்ற பல பொருள்கள் உண்டு என்று அகராதி பகர்கிறது. ஈண்டு நாம் சமயம் என்ற சொல்லுக்கு மதம் என்றே பொருள் கொண்டு விளக்கம் காண்கிறோம். பாரத நாட்டில் சமயச் சார்புடைய அரசாங்கம் இன்று இல்லை. ஆனாலும் இந் நாட்டின் கலாச்சாரம், கலை, இலக்கியம், வாழ்க்கை முறை அனைத்திலும் விரவி நிற்பது சமயம் தான். இந்தப் பரந்த நாட்டின் பெருமையும் சமயத்தில்தான் வேர் விட்டு வளர்ந்துள்ளது. சமயக் கலப்பில்லாதது இங்கு ஏதும் இல்லை. இயலும் இசையும், கலையும் கூத்தும், சிற்பமும் சித்திரமும், சமயத்தின் அடிப்படையில், சமயத்தினால் சமயத்திற்காகவே வளர்ந்துள்ளது இந்த நாட்டில் தான். எனவே இந்துக்களின் வாழ்வில் சமயம் கலந்துவிட்ட ஒன்று. வாழ்த்துப் பொருளாக விளங்கும் இறைத் தத்துவத்தை வாழ்க்கைப் பொருளாக மாற்றிய பெருமை நமது சமயத்திற்கு மாத்திரமே உண்டு.

எம்மதமும் இம்மதத்துள் அடக்கம் என்ற பெருமை உடையது இந்துமதம். உலகிலுள்ள எந்த மதத்தையும் வெறுக்காததும், அந்த மதக்கோட்பாடுகளின் முக்கியமான மூலமான ஆதார தத்துவங்களைத் தன்னகத்தே கொண்டதும் நம் மதம்.

> இத்தவம் அத்தவம் என்றிரு பேரிடும்
> பித்தரைக் காணின் நகும் எங்கள் பேர்நந்தி
> எத்தவமாகில் என்? எங்குப் பிறக்கிலென்?
> ஒத்துணர் வார்க்கு இல்லை ஊர் புகலாமே.

என்று சிறந்த சிவயோகியாகிய திருமூலர் தமது திருமந்திரத்தில் திருவாய் மலர்ந்துள்ளார். எந்த நெறியிற் சென்றாலும் அந்தந்த சமயத்தவர் பெறும் உயர் நிலை இங்கு நாங்கள் கண்ட பெருநிலையே. எனவே எவர்மாட்டும் நாங்கள் வேற்றுமையோ காழ்ப்போ கொள்ளமாட்டோம் என்கிறார் இம் மாதவயோகி. எம்மதத்திலும் விளக்கப்படும் மெய்ப்பொருளாய் விளங்குபவன் பரமாத்மா. பல பெயரில் கூறப்படினும் கூறப்படும் பொருள் ஒன்றே என்று ஆதியில் வேதகாலத்திலேயே மஹரிஷிகள் கூறினர்.

" ஏகம் ஸத் விப்ர : பஹுதா வதந்தி " என்கிறது உபநிஷதம். கண்ணபிரானும் பார்த்தனுக்குப் பகவத்கீதையில் இதையே உணர்த்தினன். "சிறு குழந்தைகள் விரும்பும் வெவ்வேறு வடிவங்களில் மிட்டாய்களை உருவாக்கித்தரும் மிட்டாய்க் கடைக்காரரைப்போல, மக்களின் பரிபக்குவத்திற்கு ஏற்ப அந்தந்த தெய்வங்களாய் வடிவு கொண்டிருப்பதும் பரமாத்ம தத்துவமான நானேதான்'' என்று பகவான் ஸ்ரீமத் பகவத் கீதையில் ஏழாவது அத்தியாயத்திலும் ஒன்பதாவது அத்தியாயத்திலும் காட்டியுள்ளான்.

ஆகாசாத் பதிதம் தோயம் யதா
கச்சதி ஸாகரம்
ஸர்வ தேவ நமஸ்கார : கேசவம்
ப்ரதிகச்சதி

விண்ணிலிருந்து மழையாக விழும் நீர் எப்படிப் பலவேறு வடிவங்களில் சமுத்திரத்தை அடைகிறதோ, அவ்வண்ணமே பல்வேறு தேவதைகளைப் பணிந்து செய்யும் நமஸ்காரங்களும் ஸ்ரீ கேசவனையே சென்றடைகிறது என்று மஹாபாரதம் பேசுகிறது.

" பொங்கு பல சமயம் என்னும் நதிகள் எல்லாம் புகுந்து கலந்திட நிறைவாய்ப் பொங்கி ஓங்கும் கங்குகரை காணுத கடலாக'' இறைத் தத்துவத்தை விளக்கியுள்ளார் ஸ்ரீ ராமலிங்க சுவாமிகளும். பல்வேறு சமய வாதிகள் 'தம் தெய்வம் எம் தெய்வம்' என்று எதிர் வழக்கிட்டாலும் சமயத்தின் தத்துவமாய் இருப்பவன் மூல காரணமாய் விளங்கும் முதற்பொருளே என்ற உண்மையை இந்நாட்டில் உதித்த மகனீயர்கள் வலியுறுத்தி வந்துள்ளனர். எல்லோருக்கும் முன்னே, இவ்வுலகம் அனைத்துக்கும் முதற்காரணமாய், மூலப் பொருளாய் முளைத்துள்ளவன் சர்வேச்வரனே. 'முளைத்தானை எல்லோர்க்கும் முன்னே தோன்றி' என்று கூறுவார் அப்பர் சுவாமிகள். அந்த சர்வேச்வரனுக்கும் ஆத்மாவுக்கும் இருக்கும் தொடர்பை விளக்கி, அந்தச் சர்வேச்வரனைத் தனக்குள் காணும் ஞானத்தைப்பெறத் தூண்டும் பாதையே சமயமாகும்.

" அஸதோ மாஸத் கமய, தமஸோ மா ஜ்யோதிர் கமய, ம்ருத்யோர் மாமம்ருதம் கமய'' என்கிறது உபநிஷதம். இல்லாத பொருளான அஸத்திலிருந்து நிலைத்த பொருளான சத்திய வஸ்துவை நோக்கி என்னை இட்டுச்செல்க. இருளிடத்திலிருந்து – அக்ஞானம் என்ற மயக்கத்திலிருந்து–ஒளிக்கு – ஞானத்தெளிவு எனும் உயர்நிலைக்கு என்னை அழைத்துச் செல்க. அழிவிடத்திலிருந்து - செத்துப் பிறக்கும் சிறு நிலையிலிருந்து - அமரத்துவம் என்னும் அழியாப் பெருநிலைக்கு – அம்ருதத்துவ நிலைக்கு என்னைக் கூட்டிச்செல்க, என்ற இந்தச் சொற்களில் உள்ள ஆழ்ந்த பொருளை நினைத்துப்பார்க்க வேண்டும். இந்தப் பிரார்த்தனையை நிறைவேற்றும் செயலுக்குத்தான் சமயம் துணைபுரிகிறது. தெய்வ ஞானம் பெறுவது, தெய்வத்தன்மையில் மலர்வது, தெய்வானுபவத்தில் திளைப்பது இதுவே வாழ்க்கையின் நோக்கம். இதைப் பெறுவதே நமக்குத் தலையாய கடன் என்று உணர்த்துவது நமது சமயம்.

தெய்வ ஞானம் பெறுவதில் எல்லோரும் முனைய வேண்டும். வாழ்க்கைக் கடமைகளுடன், அன்றாடச் செயல்களுடன் வாழ்க்கையின் நோக்கம் யாது? என்ற கேள்விக்கு விடைதேடிப் பயனடையவும் வழிகாட்டுவது நம் சமயம். தெய்வ ஞானம் இல்லாவிடில் அரசியலோ, பொருளாதாரமோ, சமூகமோ, கலையோ சிறக்க முடியாது என்று உணர்ந்த மூதாதையர்களால் பேணி வளர்க்கப்பட்டது இந்த மதம். எல்லா உயிர்களும் அமைதியும் ஆனந்தமும் பெற்று வாழவேண்டும் என்று ஆசைப்படும் மதம் நமது இந்து மதம்.

ஸர்வேஷாம் ஸ்வஸ்திபவது – எல்லோருக்கும் எல்லா நலன்களும் அமைவதாக. ஸர்வேஷாம் சாந்திர் பவது – அனைவருக்கும் சாந்தி கிட்டட்டும். ஸர்வேஷாம் பூர்ணம் பவது – அனைவரும் நிறைவுபெற்று வாழ்க. ஸர்வேஷாம் மங்களம் பவது – அனைவரும் மங்களம் பெற்றிடுக. ஸர்வே பவது சுகின – அனைவரும் இன்புறட்டும். ஸர்வே ஸந்து நிராமயா – துன்பங்களும் ஆற்றுமை

யும் இன்றி எல்லோரும் வாழ்க. ஸர்வே பத்ராணி பச்யந்து – எல்லோரும் பிறரின் நலத்தை நோக்குபவர்களாக விளங்குக. மா கச்சித் துக்க பாக் பவேத் – எவரும் துக்கத்தினுல் துயருருது இருப்பார்களாக'' என்ற பிரார்த்தனை இந்த மதத்திலுள்ளது போல வேறு எந்த மதத்தில் காண இயலும்.

வாழ்க்கையைவிட்டு ஒதுங்கி இருப்பது அல்ல இந்த மதம். நம் சமயம் வாழ்க்கைக்கும் மக்களுக்கும் சமூகத்துக்கும் புறம்பானதல்ல. இது ஒரு மகத்தான தர்மம். மகத்தான சக்தி - எல்லா நிலைகளிலும் மனிதனைச் செம்மைப் படுத்தும் திட்டம்.

உயிரை மீண்டும் கடவுளிடம் கட்டுவது எதுவோ அதுவே சமயம் என்று அச்சொல்லுக்கு விளக்கம் கூறலாம். மனிதனின் அடிமனத்தில் உள்ள தாபத்தையும் தாகத்தை தணிக்கவல்ல புனிதமான நீர் சமயமாகும். வெறும் உணவினுலும் புலன் இன்பங்களினுலும் திருப்தியைப்பெற்று நிறைவு கொள்ளும் தன்மை மனித மனத்துக்கு இல்லை. மிருகத்திற்கும், மனிதனுக்கும் உள்ள வேறுபாடு இதில்தான் உள்ளது 'ஏன்? எதற்கு?' என்று கேட்கும் அறிவுத்திறனும், கிடைத்த பதிலினுல் சாந்தியுற்றுத் தெளிவும் அமைதியும் பெறும் இதயமும் பெற்றவனே மனிதன். ஒவ்வொருவர் வாழ்க்கையிலும் ஏதேனும் ஒருசமயம், ஏதோ ஓரிடத்தில் ஒரு சிறு தயக்கம், குழப்பம் நேரிடும். மனம் சாந்திக்காகவும் ஆறுதலுக்காகவும் ஏங்கும். அப்படி ஏங்கும் எண்ணத்தை அகமுகமாகத் திருப்பக் கைகொடுப்பது சமயமே. இந்த அகமுகமான திருப்பத்திற்கும், மனத்தின் தாபத்திற்கும் மாற்று மருந்து தருவதற்கும் திவ்யமான நிலைதருவதற்கும் திறமை படைத்தது சமயமேயாகும்.

சமய நெறிகளுக்கெல்லாம் மூலமானது, முதலானது என்ற பெருமை, (தலைமைப் பதவி) பெற்றிருப்பது இந்துமதம். இந்துக்களின் மதம் இந்துமதம் என்று இன்று உலகம் கூறுகிறது. இன்று உலகிலுள்ள மதங்களிலெல்லாம் மிகப் பழமையானது இந்துமதம். இது எந்த ஒரு தனி மனிதனுலும் தோற்றுவிக்கப்படவில்லை. கிறிஸ்தவ மதம், பௌத்த மதம், முகமதிய மதம் இவைகளெல்லாம் மூலகாரணமாகத் தனி ஞானிகளைக் கொண்டுள்ளன. அவை தோன்றிய காலத்தையும் வரையறுத்துக் கூறிவிடலாம். ஆனுல் இந்து மதமோ என்று எவரால் தோற்றுவிக்கப்பட்டது என்று கூறமுடியாத படி காலம் கடந்ததாக உள்ளது. இம்மதத்தின் சரியான பெயர் ஸநாதன தர்மம், வைதிக தர்மம் என்பதேயாகும். வேதத்தினுல் காட்டப்படும் சமயம் எனவே வைதிக தர்மம். ஸநாதனமானது அதாவது பழமையானது. எனவே ஸநாதன தர்மம், முன்னைப் பழம் பொருட்டும் முன்னைப் பழம்பொருளான ஈஸ்வரனுல் காக்கப்படுவது எனவே ஸநாதன தர்மம். இதனைக் கைக் கொள்வாரையும் நித்தியத்துவம் அடைவிக்கவல்லது. எனவே ஸநாதன தர்மம் என்று இதனை விளக்கலாம்.

நமது மதத்திலுள்ள உட்பிரிவுகள், அனுஷ்டான முறைகளிலுள்ள வேறுபாடுகள் இவற்றைப் பார்க்கும் அந்நியர்கள் இதனை ஒரு குறை என்று கருதுவதும், பேசுவதும் உண்டு. ஆனுல் இந்த வேறுபாடும், புறவேறுபாட்டிற்கு உள்ளே ஊடுருவி நிற்கும் ஒற்றுமையும் இந்த மதத்தின் தனிச் சிறப்பு. வெவ்வேறு நிலையிலுள்ள மக்களின் மனத்திற்கு ஏற்ப வெவ்வேறு முறையில் ஒரே பொருளாக விளங்கும் பரமாத்ம தத்துவத்தை நோக்கி இட்டுச் செல்லும் அனுஷ்டான முறைகள் கொண்ட மதம் இது என்று நாம் பெருமையும் பெருமிதமும் அடையலாம்.

ஒன்றது பேரூர் வழியா றதற்குள
என்றது போல இருமுச் சமயமும்
நன்றிது தீதிது என்றுரை யாளர்கள்
குன்றுகு ரைத்தெழு நாயை
ஒத்தார்களே.

என்கிருர் திருமூலர். ஓர் ஊருக்குப் போகும் ஆறு பாதைகள் போன்றது இந்த இரு மூன்று சமயங்களும் என்ற உண்மையை உணர்ந்தால் இடைப்பட்டுள்ள

பேதச் சுவர்கள் தாமே தகர்ந்தொழி யாவோ?

சரயு நதியினை வர்ணிக்கத் தலைப்பட்ட கம்பரும் "எல்லையில் மறைகளாலும் இயம்ப அரும் பொருள் ஈது என்னத், தொல்லையில் ஒன்றேயாகி துறைதொறும் பரந்த சூழ்ச்சிப் பல்பெரும் சமயம் சொல்லும் பொருளும் போல் பரந்தது அன்றே" என்று சமயங்கள் பலவற்றிலும் பேசப்படும் பரவஸ்து ஒன்றே என்ற உண்மையை உணர்த்துகிறார். வழிபாட்டு முறைக்கு ஆறு சமயங்களைக் கொண்டுள்ள இந்து மதம் மெய்ப்பொருள் தத்துவ விளக்கத்திற்கு மூன்று பெரும் பிரிவுகளை உடையதாக இருக்கிறது. அத்வைதம், விசிஷ்டாத்வைதம், த்வைதம் என்ற பெரும் பிரிவுகளுக்கு உட்பிரிவுகள் அவ்வப்போது வந்த அனுபவசாலியான ஆசாரியர்களால் காட்டப்பட்டன. இந்த நெறிகளில் ஈடுபட்டு மேல்நிலை அடைய இந்நாட்டவர் மாத்திர மல்லாது பிற நாட்டவர்களும் இன்று முயலுகிறார்கள் என்பதைக் கண்கூடாகக் காண்கிறோம்.

தென்னாட்டில் உதித்த சமய குரவர்களின் அருளால், அனுபவத்தால் உதித்த சைவ சித்தாந்த மதமும் வேதாந்தக் கனியின் விழுமிய இரசமாகவே உள்ளது. உலகம், உயிர், இறை எனும் முப் பொருளின் உண்மை நிலையை உணர்த்தி, உலகக் கட்டினின்றும் உயிர் விடுபட்டு இறைவன் திருவடி இன்பத்தை அடைய வேண்டும் என்ற உண்மையை வலியுறுத்துகிறது சைவ சித்தாந்தம்.

சக்தியோக விளக்கத்தினால் மக்களை நல்வழிப் படுத்தும் முறையும் நமது சமயத்தில் ஓர் அங்கமேயாகும். சித்ரூபிணியான சக்தியே எல்லா இயக்கத்திற்கும் மூல காரணம். சிவத்தின் அசைவாக, இயக்கமாக விளங்கும் அவளே இயற்கையாக விளங்குகிறாள். அவளே உலகின் தாய் — ஜகஜ் ஜனனி. ஒவ்வொரு உயிரிலும் உயிர்க் கனலாய் விளங்குபவள் அவளே. இந்தச் சக்தியை எழச் செய்வதே யோக நிலையின் முதற்படி. விம்மியெழும் சக்தியைச் சிவத்துடன் கலக்கச் செய்வதே யோகம். இந்த யோகத்தின் சாதனங்களே புறப்பூஜைகள்.

சார்ந்ததின் வண்ணமும் தன்மையும் பெறும் இயல்புடையது உயிர். எப்பொருளை உயிர் சாருகிறதோ அப்பொருளின் தன்மையாகிவிடும்; வண்ணமாகிவிடும். வீட்டைச் சார்ந்து, மனைவி மக்கள் வரவு செலவு என்று மயங்கித் துன்புறும் உயிரை ஈஸ்வரனைச் சார்ந்து கடவுளும், கடவுள் நினைவும், கடவுள் உருவமுமாகிப் பேரின்ப நிலையை அடையச் செய்ய வேண்டும். இந்நிலைக்கு உதவும் முறையே சமயம் என்ற நெறியாகும்.

பேசும் மொழியும், இடும் திலகங்களும், வழிபடும் முறைகளும், இஷ்டத்துடன் பூஜிக்கும் தெய்வத்திரு வடிவங்களும் நமக்குள் வெவ்வேறாக இருந்தாலும், இவையனைத்தையும் ஒன்றாகக் கொண்டு, இவை எல்லாவற்றிலும் ஊடுருவி நிற்கும் தத்துவம் எது என்று எண்ணிப் பார்ப்போம். அதுவே நமது சமயத்தின் சத்துப் பொருள். அதுவே இந்து சமயத்தின் அஸ்திவாரமாக அமைந்துள்ள தத்துவம்.

தெய்வ தத்துவம் எல்லா வடிவங்களையும் கடந்திருப்பினும் ஆன்மாக்களுக்குப் போகமும், யோகமும், முக்தியும், அருளும் கருணையினால் அவரவர் காண அருட்டிரு மேனி கொண்டு வெளிப்படும் என்பதை ஆழ்வார்கள், நாயன்மார்கள் வாக்குகளில் காண்கிறோம். எண்ணிறந்த அருட்கோலங்களை ஏற்றுச் சேதன, அசேதன பிரபஞ்சங்களை இயக்குவது அதுவே. உருவம், அருவம், அருவுருவமாகி நிற்பான் இறைவன் 'கண்ணால் யானும் கண்டேன் காண்க' என்று மாணிக்கவாசகர் கண்டு இறும்பூதெய்திக் கூறியது போல நாமும் கூறலாம் அல்லவா! அவர்களைப் போல நாமும் கண்டாலன்றோ கூற இயலும். அப்படிக் காணுவதற்கு அப்பெரியோர்கள் அனுஷ்டித்த நெறியிற் சொல்லவேண்டியது மிக மிக முக்கியமல்லவா!

சமயப் பற்றும் சமயாசாரமும் இல்லாமல் நற்கதி அடைய வழியில்லை. மதம் தோணி. பக்தி சரக்கு. அருளனுபவம் பெறுதலே இதனால் இங்கு அடையக் கூடிய இலாபம். நாம் நமது மூதாதையர்கள் வழியில் தோன்றியவர்கள் என்று கோத்திரப் பெயர்கள் கூறுகிறோம். கோத்திரத்தின் முதல்வர்களாகிய மஹரிஷிகளின் இரத்தம் நமக்குள் ஓடுவது மெய்யானால் அதை நம் செயல்களால் நிரூபிக்க வேண்டியது நமது கடமையன்றோ! இந்துக்கள் அனைவரும் எத்தனை புறவேறுபாடுகள் இருப்பினும் அவற்றை மறந்து, அடிப்படைத் தத்துவங்களிலுள்ள ஒற்றுமையை உணர்ந்து, உண்மை நெறியினைக் கைக்கொண்டு, சமய அனுஷ்டானங்களில் பற்றும் ஈடுபாடும் கொண்டு அவற்றை ஏற்று நடக்க வேண்டும். இறைவனின் அருளாட்சியில் உலகம் இயங்குவதை உணர்ந்து, ஆணவம் அகந்தை ஒழித்து, பணிவும், பண்பும், பக்தியும் பெருகவொழுவேண்டும். நமது சமயம் காட்டிய சட்டம் உண்டு, ஒழுங்கு உண்டு, கட்டுப்பாடு உண்டு, கடமை உண்டு, ஏற்றமுண்டு, தோற்றமுண்டு, வாழ்வு உண்டு, தாழ்வு உண்டு, தண்டனை உண்டு, மன்னிப்பும் உண்டு. இந்த நினைவினால் நம்மை நாம் சீர்ப்படுத்திச் செம்மை நெறி நிற்க முயலுவோம்.

சமயத்தைப் பற்றி எழுதுவதைக் காட்டிலும், பேசுவதைக் காட்டிலும், படிப்பதைக் காட்டிலும், சமய அனுஷ்டானங்கள் ஒன்றிரண்டையேனும் கைக் கொள்வது நமக்கு ஏற்றம் தரும். புதிதாக நாம் புரட்சி செய்து புதிய சமயத்தைத் தோற்றுவிக்க வேண்டாம். நம் முன்னோர்கள் எதை அனுஷ்டித்தார்களோ அதனையே ஏற்று அவர்கள் செய்த பணியைத் தொடர்ந்து செய்து அவர்கள் சிறப்பாக அமைத்தவற்றைச் சீராகப் பேணுவோம். சீலத்துடன் சிறப்புற வாழுவோம். இதுவே சிறந்த சமயப் பணி.

அருவமும் உருவு மாகி
அநாதியாய்ப் பலவாய் ஒன்றாய்ப்
பிரமமாய் நின்ற சோதிப்
பிழம்பதோர் மேனியாகிக்
கருணைகூர் முகங்க ளாறும்
கரங்கள்பன் னிரண்டும் கொண்டே
ஒருதிரு முருகன் வந்தாங்
குதித்தனன் உலகம் உய்ய

— கந்தபுராணம்

# திருஆலங்காடு இம்முடி அகோர
# தர்மசிவாச்சாரிய ஆயிர வைசியர் மடம்

நெரிஞ்சிப்பேட்டை - 638311 (அஞ்சல்)

பவானி வட்டம் - கோவை மாவட்டம்

(தொலைபேசி: 26, பவானி, அம்மாப்பேட்டை)





அருள்மிகு பழனி தண்டாயுத
பாணி சுவாமி மலைக்கோயில்
திருக்குட நீராட்டுப் பெரு
விழா சிறப்புற நடைபெற
வும், திருக்குட நீராட்டு விழா
மலர் சிறந்து வெளிவரவும்,
மலர் வெளியீட்டுக் குழுவின்
சீரிய சேவையும், அறங்
காவலர் குழுவின் சிறந்த
தொண்டும் சிறப்புற விளங்க

**ஸ்ரீ சிதம்பரேசுவரர், ராஜராஜேஸ்வரி
பாதகமலங்களை வணங்குகிறோம்.**

**சி. சிவதாணு,** பி. ஏ.
*மேலாளர்*

**எம். கோதண்டராமன்**
*அறங்காவலர் (பொறுப்பில்)*

# தமிழகக் கோயிற் கட்டிடக்கலை



டாக்டர்
**திரு. சி. கிருஷ்ண மூர்த்தி**

தெய்வ வழிபாடு துவங்கிய காலத்திலிருந்தே மனிதன் தான் வழிபடும் கடவுளைத் திறந்த வெளியில் தொழுவதைத் தான் விரும்பினன். அதற்கென்று சுவரெழுப்பிய இடத்தைப் பயன்படுத்தவில்லை. ஏனெனில் மனிதன் அக்காலத்தில் நிலையான ஓரிடத்தில் நிலைத்து நிற்காமலிருந்ததேயாகும். தவிரவும் அவன் இயற்கைச் சக்திகளான ஞாயிறு, நெருப்பு, காற்று போன்றவற்றை வழிபட்டதால் அவற்றைத் திறந்த வெளியிலேயே தொழுதான்.

சில காலத்திற்குப் பிறகு, மனிதன் நிலையான இருப்பிடத்தில் வசிக்க ஆரம்பித்தவுடன், தான் வழிபடும் கடவுளுக்கும் ஓர் இருப்பிடம் தேவை என்பதை உணர்ந்தான். எனவே, அவன் தான் வழிபடும் கடவுளைச் சாதாரண கல்லில் உருவேற்றி, அதையே வழிபட்டானுகையால், அதை ஒரு மரத்தினடியில் மேடையமைத்து அமர்த்தி, வழிபட்டான். இவ்வாறு வழிபடுமிடமாக ஏற்பட்ட மரம், அதனடியிலிருந்த கடவுள் உருவத்திற்கு ஏற்பட்ட தெய்வத் தன்மையைத் தானும் ஏற்றுக் கொண்டது. வழிபடும் உருவத்திற்கு மட்டுமல்லாது வழிபடுவோர்க்கும் நிழல் கொடுத்து மரம் தன் பணியை அதிகப்படுத்திக் கொண்டதால் நாளடைவில் அம்மரமே வழிபடும் பொருளாகத் திகழ்ந்தது.

நம் நாட்டில் மரவழிபாடு மிகவும் பழமையானதாகும். மொஹன்சொதாரோ, ஹரப்பா பண்பாட்டிலேயே மர வழிபாடு இருந்ததாகத் தெரிகிறது. இவ்விடங்களில் கிடைத்திருக்கும் பல முத்திரைகளில் மரமும் அதனெதிரில் அதனை வழிபடுவோரும் செதுக்கப்பட்டிருக்கின்றனர்.

தமிழ் நாட்டிலும், மரவழிபாடு மிகவும் தொன்மையானதாகும். தமிழ் நாட்டின் தெய்வத்திரு உருவ வழிபாட்டு வரலாற்றை நன்கு ஆராய்கையில், முற்காலத்தில் வழிபட்ட கடவுள் உருவங்கள் தனிமையான இடங்களில், நான்கு சுவர்கள் கொண்ட கட்டிடங்களுக்குள் வைக்கப்படவில்லை என்பது விளங்கும். நமது சிற்றூர்களில் வழிபடும் தெய்வம் கிராம தேவதையாகும். அதற்குக் கட்டிடமெடுத்து வழிபடும் வழக்கம் பிற்காலத்தில் ஏற்பட்ட ஒன்ருகும். முற்காலத்தில் கிராம தேவதைகளை ஒரு பெரிய மரத்தினடியில் வைத்தே வழிபட்டனர். இதற்கு அரசு, ஆல், வேம்பு போன்ற மரங்கள் தேர்ந்தெடுக்கப்பட்டன. பிற்காலத்தில் தெய்வங்களுக்குக் கட்டிடங்கள் ஏற்பட்ட

பிறகு, இம்மரங்களையும் சேர்த்தே மக்கள் வழிபட்டனர். எனவே இம்மரங்கள் "தல விருக்ஷங்கள்" என அழைக்கப்பட்டன.

கிராம தேவதைக்கு அடுத்ததாக மரத்தினடியிலிருப்பவர் விநயகப் பெருமான் ஆவர். இக்காலத்திலும் விநயகர் உருவத்தைப் பல சிற்றூர்களில், ஆற்றங் கரையிலோ, வாய்க்கால் கரையிலோ உள்ள மரத்தினடியில் காணலாம். மேலும் சிவன், திருமால் போன்ற தெய்வங்களின் இருப்பிடமும் முற்காலத்தில் மரத்தினடியில் இருந்ததாக அறிகிறோம்.

சங்க காலத்தில் கோயிலின் உருவம் எவ்வாறு இருந்தது என்பது சங்க இலக்கிய நூல்களிலிருந்து தெரிய வருகிறது. எட்டுத் தொகை, பத்துப்பாட்டு முதலிய நூல்களில் அங்காங்கு கட்டிடங்களின் தோற்றம் பற்றிய குறிப்புகள் கிடைக்கின்றன. பட்டினப் பாலை, மதுரைக்காஞ்சி, பெரும்பாணாற்றுப் படை, அகநானூறு, சிலப்பதிகாரம் போன்ற நூல்களின் புகார், உறையூர், கரூர், மதுரை முதலிய ஊர்களைப் பற்றிய விளக்கங்களில் கோட்டம், கோயில், மாடம் போன்ற சொற்கள் பயன்படுத்தப் பட்டுள்ளன. நக்கீரரின் நெடுநல் வாடையில் கருவறையின் கட்டட அமைப்பு பற்றிய விளக்கம் கிடைக்கிறது.

நாயன்மார் காலத்தில், கோயில் வழிபாடும், கோயிற் கட்டிடங்களின் அமைப்பு பற்றியும் அவர்கள் பாடல்களிலிருந்தே அறிய வருகின்றன. தேவார மூவர்களுள் முதல்வரான அப்பர் காலத்தே பலவகைப் பட்ட கோயில்கள் இருந்தனவென்று தெரிய வருகிறது. அவை வருமாறு: (1) பெருங் கோயில் (2) கரக்கோயில் (3) இளங் கோயில் (4) மணிக்கோயில் (5) ஆலக் கோயில் (6) திருக்கோயில் (7) மாடக் கோயில் (8) தூங்கானை மாடம். அக் காலத்தில் இந்த கோயில்களின் உண்மையான தோற்றம் எவ்வாறிருந்ததென்பது நன்ருகப் புலப்படவில்லை.

அடுத்துப் பல்லவர்காலத்தில் கோயிற் கட்டிடக் கலை ஓர் உயர்ந்த நிலையை அடைந்தது. முதலாம் மகேந்திர வர்மனல் (610 A. D. - 630 A. D.) அமைக்கப்பட்ட கோயில்கள் யாவும் குகைக் கோயில்கள் ஆகும். தென்னற்காடு மாவட்டத்தில் மண்டகப்பட்டு என்னுமிடத்தில் இவ்வரசனல் குடைந்தெடுக்கப்பட்ட குகை, இந்தத் தொகுப்பில் முதலாவது என்று, அங்குச் செதுக்கப்பட்டுள்ள ஒரு வடமொழிக் கல்வெட்டால் அறிகிறோம். "விசித்திரசித்தன் என்னுமரசனல் செங்கல், மரம், உலோகம் சுதை இவைகளின் கலப்பில்லாமல் பிரமன், திருமால், சிவன், மூவருக்கும் கோயில் எழுப்பப்பட்டது" என்ற குறிப்பை இக்கல்வெட்டு தெரிவிக்கிறது. இதிலிருந்து மகேந்திரவர்மன் காலத்துக்கு முன்பு தமிழ் நாட்டில் கோயில்கள் செங்கல், மரம், சுதை போன்ற விரைவில் அழிந்துபோகும் பொருள்களால் கட்டப்பட்டு வந்தன என்பதும் தெளிவாகிறது. ஆகையால் கி. பி. ஏழாம் நூற்ருண்டின் தொடக்கத்தில் தான் கருங்கல், கோயில் கட்டும் பொருளாகத் தமிழ் நாட்டில் பயன்படுத்தப்பட்டது என்பதை உணருகின்ருேம்.

பல்லவர் காலத்தில் உருவாக்கப்பட்ட கோயில்களை மூன்று பிரிவுகளாகப் பிரிக்கலாம். (1) மகேந்திரவர்மனல் மலைகளைக் குடைந்து, தூண்களுடன் மண்டபம் போன்று அமைக்கப்பட்ட குகைக் கோயில்கள் (2) இரதங்கள் (3) இரண்டு தளங்களுடன் கட்டப்பட்ட கோயில்கள். இவ்வகைகளுள் முதலிரண்டும் கற்பாறையில் செதுக்கப் பட்டன. மூன்ருவது கட்டிடமாகக் கட்டப் பட்டது.

பிற்காலப் பல்லவர் கட்டிடங்கள், இராசசிம்மன் என்ற இரண்டாம் நரசிம்ம பல்லவன் காலத்தில் தொடக்கமாகிறது. இவன் காலத்தில் குகைக் கோயில்கள் மறைந்து, கட்டிடக் கோயில்கள் தோன்றின. இவன் காலத்திலிருந்து தோன்றிய கோயில்கள், மாமல்லபுரத்துக் கடற்கரைக் கோயில், முகுந்தர் கோயில், காஞ்சி கைலாசநாதர் கோயில் முதலியவையாகும்.

பல்லவர் காலத்திற்குப் பிறகு சோழ அரசர்களின் காலத்திலும் கோயில் உருவங்கள் வெகுவாக வளர்ச்சியடைந்தன. இக்காலத்துக் கோயில்கள் பல்லவர் கோயில்களைவிட மிகப் பெரியதாகவும், விரிவாகவும் கட்டப்பட்டன. ஆயினும் கி. பி. ஒன்பது-பத்து நூற்றாண்டுகளில் ஆண்ட சோழ மன்னர்களால் கட்டப்பட்ட கோயில்கள் எண்ணிக்கையில் மிகக் குறைவாகவே காணப்படுகின்றது. முற்றிலும் கற்கட்டிடங்களான இக்கோயில்கள் விசயாலயன், ஆதித்தன் முதலான அரசர்களால் கட்டப்பட்டு, புதுக்கோட்டையை அடுத்து நார்த்தமலை, கொடும்பாளூர், கண்ணனூர் முதலிய இடங்களிலும், தென்னாற்காடு மாவட்டத்தில் சில ஊர்களிலும் காணப்படுகின்றன.

நார்த்தாமலையிலுள்ள விசயாலய சோழீச்சுரம், ஏழு பரிவார தேவதைகளுக்கான அறைகளையும் நந்திக்குத் தனி அறையையும் உடையது. இதன் கருவறை வட்ட வடிவமானது. விமானத்தின் கீழ்த் தளங்கள் சதுரமாகவும், எல்லாவற்றிற்கும் மேலுள்ள தளம் வட்டமாகவுமுள்ளது. ஆங்காங்குள்ள கூடுகளில் சிங்கமும் செதுக்கப் பட்டிருக்கிறது. கருவறைக்கெதிரில் உள்ள மண்டபமும், அம்மண்டபத்தின் தூண்களும் சோழ காலப் பாணியை எடுத்துரைப்பனவாய் உள்ளன. இவ்வரிசையிலுள்ள கோயில்களுள் திருக்கட்டளையிலுள்ள சுந்தரேசுரர் கோயிலும், கொடும்பாளூரிலுள்ள மூவர் கோயிலும் குறிப்பிடத் தக்கவையாகும்.

முதலாம் பராந்தகன் காலத்திலேற்பட்ட கோயில், திருச்சி மாவட்டத்தில், சீனிவாசநல்லூரிலுள்ள கொரங்கநாதர் கோயிலாகும். இக்கோயில் கருவறை, அர்த்த மண்டபம், அந்தராளம் போன்ற கோயிற் கட்டிட அமைப்பிலுள்ள எல்லாக் கூறுகளையும் கொண்டுள்ளது. இதன் வெளிச்சுவர்களில் பல முழு உருவச் சிற்பங்கள் அமைக்கப்பட்டுள்ளன.

சோழர் பாணியிலேயே முழுமையடைந்து எல்லாவற்றிலும் முதலாவதாகத் திகழ்ந்த கோயில் முதலாம் இராசராசனல் (கி. பி. 785-கி. பி. 1012) தஞ்சையில் கட்டப்பட்ட இராசராசேச்சுரமென்னும் பிரகதீசுரர் ஆலயமாகும். சோழர் கோயில்களில் மிகவும் அழகானதும், அதிக உயரமானதுமான இக்கோயில் சோழர் கலையின் சிகரமாக விளங்குகிறது. இக்கோயில் சிற்பக் கலையிலும், ஓவியக் கலையிலும் முதலாவதாகத் திகழ்கிறது. கருங்கற்களால் கட்டப்பட்ட இக்கோயில் 500 அடி நீளமும், 250 அடி அகலமுமுள்ளது. ஏறக்குறைய 200 அடி உயரமுள்ள இதன் விமானம் அடியில் சதுரமாகவும் மேலே ஸ்தூபியில் வட்டமாகவும் உள்ளது. இக்கோயிலின் வெளிச்சுவர்களில் கடவுள் உருவங்கள், இரண்டு வரிசைகளில் செதுக்கப்பட்டிருக்கின்றன. அடித்தளத்தில் பல கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன. இக் கல்வெட்டுக்களிலிருந்து கோயில் திருவிழாக்கள் பற்றிய செய்தியும் இராசராசனும் அவன் மனைவியரும் மற்றவரும் கொடுத்த நன்கொடைகள் பற்றிய குறிப்புக்களும் நமக்குக் கிடைக்கின்றன. இராசராசன் மகனை முதலாம் இராசேந்திரனல் (கி. பி. 1014-1044) கங்கை கொண்ட சோழபுரத்தில் கட்டப்பட்ட கோயில், தஞ்சைப் பெருங்கோயில் உருவ அமைப்பிலேயே கட்டப்பட்டதாகும். இது உயரத்தில் தஞ்சைக் கோயிலைவிடக் குறைந்தும், ஆனல் நீளத்தில அதிகமானதுமாகும். இக்கோயில் முதலாம் இராசேந்திரனின் வீரத்தின் சின்னமாகவும், அவன் வடநாட்டின்மீது வெற்றிகொண்டு அங்கிருந்து கங்கை நீரைக்கொணர்ந்ததின் நினைவாகவும் கட்டப்பட்டதாகும்.

சோழர்கால இறுதியில் தோன்றிய கோயில், திருபுவனத்திலுள்ள கம்பேசுரர் கோயிலாகும்.

அடுத்து, பாண்டியர் காலத்தில் 12-ஆம் நூற்றாண்டிலிருந்து 14-ஆம் நூற்றாண்டு வரை கருவறையின் மேலெழுப்பப்பட்ட விமானத்தின் முக்கியத்துவம் குறைந்து, கோபுரவாயிலின் வளர்ச்சி தொடங்கலாயிற்று. இக்கோபுரங்கள் பல தளங்களைக் கொண்டுள்ளன. ஒவ்வொரு தளத்

திலும் பல சிற்ப உருவங்கள் அமைக்கப் பட்டன. இம்மாதிரியான கோபுரங்களினுள் திருவானைக்காவல் கோபுரமும், சிதம்பரம் நடராசர் கோயிலின் கீழ்க்கோபுரமும் பாண்டியர் காலத்திய கோபுரங்களாகும்.

விசயநகர மன்னர் காலத்தில் கட்டிடக் கலையில் பல மாறுதல்கள் புகுத்தப் பட்டன. இக்காலத்திலேற்பட்ட பல சேர்க்கையில் அம்மனுக்கு எழுப்பிய தனிக் கோயிலும், கல்யாண மண்டபங்களும் குறிப்பிடத் தக்கனவாகும். கல்யாண மண்டபம் பல தூண்களுடன் நுணுக்கமான சிற்ப வேலைப் பாடுகளுடன் திருவிழாக் காலங்களில் வழி படும் தெய்வங்களின் மண விழாக் கொண்டாடுவதற்காகக் கட்டப்பட்டதாகும்.

தென்னாட்டுக் கோயிற்கலை முழுமுதிர்ச்சி அடைந்தது விசயநகர காலத்திற்குப் பிறகு நாயக்க மன்னர் காலத்தில்தான். பாண்டிய மன்னர்களைப் போல் நாயக்க மன்னர்களும் பழைய கோயில்களில் சிறிய கட்டிடங்களைச் சேர்த்தனர். கோயிற் மதிற்சுவர்களும், கோபுரங்களும் இக் காலத்தில் மிகுதியாக ஏற்பட்டன. இக் காலத்திய கோபுரங்கள், நூற்றைம்பது அடி உயரம் வரை எழுப்பப்பட்டன. ஆயிரங்கால் மண்டபங்களும், கோயிற் குளங்களும் இக்காலத்திய சேர்க்கைகளாகும். மண்டபங்களின் தூண்கள் பல்வேறு விலங்குகளின் உருவங்களால் அலங்கரிக்கப்பட்டன. மனித உருவங்களும் செதுக்கப்பட்டன. நாயக்கர் பாணியில் முழுமையடைந்த கோயில்களில் திருவரங்கம், சம்புகேசுரம் கோயில்களும், இராமேசுரம், திருவண்ணாமலை, ஸ்ரீவில்லிபுத்தூர், மதுரைக் கோயில்களும் குறிப்பிடத் தக்கனவாகும். மதுரை மீனாட்சி கோயில் நாயக்கர் பாணிக்குச் சிறந்த சான்றாகும்.

**தாள் போற்றி**

முருகோட்டம் தரப்பாயும் மும்மதமு
மூற்றெடுப்ப முரிவிற் கோட்டு
மொருகோட்டு மழகளிற்றை இருகோட்டு
முதுகளிரு உலவக் காட்டிப்
பருகோட்ட நறைவேட்டுப் பைங்கோட்டுத்
தினைப்புனத்துப் பரண்மேற் கொண்டு
குருகோட்டும் பெடைமணந்த குமரகோட்
டத்தடிகள் குலத்தாள் போற்றி

— காஞ்சிப்புராணம்

*

# அடியேனுக்கு அருளிய ஆண்டவன்

*

"யான் ஆர்? என் உள்ளமார்? ஞானங்களார்? என்னை யாரறிவார்?
வானோர் பிரான் என்னை ஆண்டிலனேல்."

— திருவாசகம்



திருவாசகமணி

## கே. எம். பாலசுப்பிரமணியம்

**1908**வது ஆண்டிற்கு நேரான கீலக வருஷம். அவ் ஆண்டின் தொடக்கத்தில் என் மூத்த சகோதரனுக்குச் சுமார் ஈராண்டு. அப்போது தாராபுரத்தில் தாலூகா சிரஸ்தேதார் உத்தியோகத்தில் இருந்த என் தந்தை திரு. எஸ். முத்துச்சாமி பிள்ளையவர்கள் அடுத்த திங்களில் என் சகோதரனுக்குப் பழநிமலையில் முடி இறக்கிக் காது குத்த ஒரு நாளைக் குறித்து வைத்திருந்தார். ஆனால் குறித்த அந்த நாளன்று என் தாயார் சொர்ணத்தம்மாள் தமக்கு மாதவிடாய் வரும் என்று ஐயுற்றூர். இருந்தாலும் அதே தேதியில் பழநிக்குப் போகலாமா அல்லது போகும் நாளை ஒத்திப் போடலாமா என்று அந்தக் கால வழக்கப்படி உடுக்கடித்துக் குறி சொல்லும் ஒரு பூசாரியிடம் சென்று என் தாயார் கேட்டார். அந்தப் பூசாரி மீது வந்த ஆவேசத்தில் பழநி ஆண்டவர் கூறினர்: "உனக்கு மாதவிடாய் வராது, குறிப்பிட்ட நாளன்றே பழநிக்கு வந்து உன் மகனைக் காவடி எடுக்கச் சொல். உன் வயிற்றில் இப்போது ஓர் ஆண் பிள்ளை தரித்துள்ளான். அஞ்சாதே."

இந்த உறுதி மொழியை நம்பியே என் பெற்றோர்கள் தாங்கள் குறித்திருந்த நாளன்று பழநிக்குச் சென்று தமது புதல்வனுக்கு முடி இறக்கிப் பிரார்த்தனையை நிறைவேற்றினர்கள். பூசாரி வாயிலாகப் புனித முருகன் புகன்றவாறே அடுத்த பத்தாவது திங்களில் அடியேன் பிறந்திட்டேன். (9—12—1908) யான் பிறந்த மாதமாகிய கார்த்திகை முருகனுக்குரியது. யான் பிறந்த நட்சத்திரமாகிய திரு ஆதிரை சிவனுக்கு உகந்தது! எனவே யான் பழநியாண்டவர் வழங்கியதொரு பிச்சை. அதன் காரணமாகவே அடியேற்குப் பாலசுப்பிரமணியம் என்ற நாமம் என் தந்தையால் சூட்டப் பெற்றது! இவ்வரலாற்றினைத்தான் எனது "கீதத் தமிழ்" என்ற இசைத் தமிழ் நூலில் ஒரு கீர்த்தனையில் பின்னர் பாடியுள்ளேன்.

இராகம்: சாமா — தாளம்: ஆதி

பல்லவி

உன்னருளாலே பிறந்தேன் — எனக்கும் உன்றன்
இன்னருள் தாநீ சுரந்தே (உன்)

அனுபல்லவி

மன்னருள் பிறந்திடும் மகிமையில் லேன் எனினும்
மாமயில் மீதமரும் மாமுருகனே கோனே (உன்)

சரணம்

அன்னைவயிற்றுள் அன்று ஆறுமுகா நின்குன்று
தன்னையடையும் போது தரிக்கஅருள் தந்தவா!
பின்னைவயிற்றில் திண்ணம் பேர்த்துப் பிறவாவண்ணம்
நின்னைவணங்கி நின்றேன் நீயேஅருள் செய்வாயே! (உன்)

பின்னர், 1944வது ஆண்டில் இரண்டாவது மகாயுத்தத்தின் மாநிலப் போர் இசை விளம்பர அதிகாரியாக யான் பணியாற்றி வந்தபோது யான் ஒரு நாள் பழநிக்குச் சென்றிருந்தேன். அவ்வமயம் பழநியாண்டவரைத் தரிசனம் செய்தேன். அப்போதே அவர் சந்நிதியிலேயே கீழ் வரும் இரண்டு கீர்த்தனைகளை அவரருளால் பாடினேன்.

இராகம்: தோடி தாளம்: ஆதி

பல்லவி

பார்த்திருப்பேன் பழநிப்பண்டாரக் கோலத்திலே
பாலசுப்ரமணியன் பண்பினையே (பா)

அனுபல்லவி

நேர்த்தியு டன்நிமிர்ந்து நீளுல காண்டிடும்
கீர்த்தியு டையனுன் தன்னைக் கெஞ்சிப் பணிந்திருந்தே (பா)

சரணம்

ஆர்த்தொலிக்கும் கழலைச் சேர்த்துப் பிடித்துநின்றே
ஆசைக் குகந்தமண வாளஎனப் புகன்றே
வார்த்தை குழறிமெய்யே வேர்த்து விதிர்விதிக்க
வஞ்சம் அகன்றநெஞ்சால் தஞ்சம் எனநினைந்தே (பா)

●● ●● ●●

இராகம்: கல்யாணி தாளம்: ஆதி

பல்லவி

ஐயா புரிந்த தெனக்கே உன்றன்பெருமை
ஐயா புரிந்த தெனக்கே!

அனுபல்லவி

வையாபு ரிக்கந்தனே வாழ்த்தும் அடியவர்தம்
கையால் தொழஅவரைக் கண்ணுற் பார்த்தும்காப்போயே (ஐயா)

சரணம்

மெய்யாம் உளத்திேனாடும் மேலாம் உனைத்தொழவே
மேவிக் கனிந்துசென்றேன் தாவிக் குனிந்துநின்றேன்
செய்யாயுன் தண்ணருளைச் சீராய்எனக் குன்றன்னைச்
சேயாய்ப்பணிந்தேன் நீகாப் பாயே பழநியப்பா (ஐயா)

மற்றும் ஒரு நாள் 1951வது ஆண்டில் பழநியாண்டவர் பொற் கவசக் காட்சியுடன் பொலிந்திலங்கும் கோலத்தைக் கண்டுப் பூரித்துப் புளகாங்கிதம் அடைந்து உவகைக் கண்ணீர் சொரிந்து நின்றேன். அவ்வமயம் அவர் மீது ஒரு நூறு வெண்பாக்களைப் பாடி முடித்தேன். நான் மதுரைத் 'தமிழ் நாடு' இதழ் ஆசிரியனாகப் பணியாற்றிய 1952வது ஆண்டில் அவை "திருப்பழநி வெண்பா அந்தாதி" என்ற பெயரில் நூல் உருவம் பெற்றன. அந்நூலினின்றும் ஒரு சில வெண் பாக்கள் வருமாறு:

## வெண்பா

1. பொன்னார் திருக்கவசம் பொற்புமிகப் பூண்டெழிலின்
மன்னாக வேல்தாங்கி மாண்புடனே — எந்நாளும்
மாபழநிக் குன்றுமிசை மண்ணெடுவிண் ணும்பணிய
நீபழகிக் கொண்டிருப்பாய் நின்று.

2. உள்ளே புகுந்ததுமுன் ஓங்கெழிலைக் கண்பருகக்
கள்ளே புகுந்ததெனக் கண்ணுற்றேன் — புள்ளேறும்
மாலே மகிழ்மருகா மங்கைவள்ளி தான்மருவும்
காலே மகிழ்முருகா காண்.

3. பாராளும் வேந்தர்களும் பாங்குமிகு மாந்தர்களும்
சீராளும் செல்வச் சிறுமியரும் — நேராகக்
கந்தாகந் தாவென்றே கத்தித் திருப்பழநி
முந்தாநின் றேத்துவர்நின் முன்.

4. தாலாட்டு கின்றஉமை தாங்கித் திருமுலையால்
பாலூட்டு கின்றமையும் பாராது — வேலாட்டித்
தண்பழநி சார்ந்தடியார் பாலாட்டித் தாலாட்டும்
பண்பழகி நின்றாயிப் பார்.

5. கண்ணிற் பொழிந்துமழை காயமெலா மேநனைக்க
எண்ணிப் பணிந்தேன் எழில்வேலா — மண்ணுற்றே
யான்பிறந்தும் என்னபயன் யாண்டும் பணியாக்கால்
தேன்பிறந்த தென்பழநி சேர்ந்து.

6. போமுன்னம் நாமிறந்து போய்ப்பழநிக் குன்றமர்ந்த
ஓமென்னும் ஒண்பொருளை ஓதிடுவாம் — நாமன்னிச்
சாற்றுகின்ற நான்மறைகள் சாத்திரங்கள் ஆகமங்கள்
தேற்றுகின்ற தும்முருகன் சீர்.

7. அப்பா திருப்பழநி யப்பா உனைக்கண்கள்
எப்போது மேகாண்டற் கேங்கிடுமே — தப்பாதே
என்கனவும் என்நனவும் எம்பெருமான் நீயமர்ந்து
பொங்கும்அருள் தங்கப் புரி.

8. உயிரோவி யப்பொருளாய் ஓங்கார மாகிச்
செயிரோட்டி என்னுள்ளம் சேர்வாய் — தயிரோடும்
நெய்யோடும் பால்கனிதேன் நீங்காப் பழநியுளாய்
கையோடு வேல்இருக்கக் காத்து.

9. பண்எனிலே முன்னாள் அருணகிரி பாடியதே
கண்எனிலே நின்னடியைக் காண்பதுவே — எண்ணும்
மனமதுவும் மாபழநி சார்மனமே மன்னும்
இனமதுவும் நின்னடியா ரே.

10. கொள்ளுவதுன் பாதத்தேன் கூடுவதுன் தென்பழநி
உள்ளுவதும் நின்னுருவின் ஓவியமே — தெள்ளு
தமிழ்பாடி நின்சரணே தானடைந்தேன் கீரன்
அமிழ்தாடு பாடலின்ஐ யா!

oooooooo

# அருள்மிகு மீனாட்சி சுந்தரேசுவரர் திருக்கோயில்

## மதுரை

1. அருள்மிகு மீனாட்சி சுந்தரேசுவரர் மகளிர் உயர்நிலைப்பள்ளி ஒன்று ஆலய நிதியிலிருந்து நடத்தப்படுகிறது. ஏழை மாணவிகளுக்கு இலவச மதிய உணவு நோட்டு புத்தகங்கள் வழங்கப்படுகின்றன.
2. கல்லுப்பட்டி காந்தி நிகேதனில் மீனாட்சி மாணவர் இல்லம் 20 மாணவர்களுக்கு உணவு, உடை, விடுதி பள்ளிச் செலவுகளுக்கு நிதி உதவி செய்யப்படுகிறது.
3. அருள்மிகு மீனாட்சி சுந்தரேசுவரர் நூல் நிலையம் ஒன்று தெற்கு ஆடி வீதியில் நடத்தப்படுகிறது.
4. யாத்ரீகர்கள் தங்க மேலச் சித்திரை வீதியில் சுமார் ரூ. 4,00,000/- மதிப்பீட்டில் ஒரு விடுதி பிர்லா விஷ்ரம் என்ற பெயரில் நடத்தப்பட்டு வருகிறது. கட்டிடம் கட்டும் செலவில் ஒரு பகுதி தொழில் அதிபர் பிர்லா அவர்களால் நன்கொடையாகக் கொடுக்கப்பட்டது.
5. ஆயிரக்கால் மண்டபத்தில் எழில்மிகு கலைக்கூடம் நடத்தப்படுகிறது.
6. கூடல்செங்குளம் பண்ணை திருக்கோயில் நேரடிப் பார்வையில் விவசாயம் நடைபெறுகிறது.
7. ஏழை மக்களுக்கு ஆலய நிதியிலிருந்து இலவச திருமணம் நடத்தப்படுகிறது.
8. திருப்பரங்குன்றத்தில் முதியோர் இல்லம் ஒன்று நடத்தப்படுகிறது. இதில் ஆதரவற்ற பெண்களுக்கு உணவு, இருப்பிடம் வசதிகள் அளிக்கப்பட்டு வருகின்றன.
9. இத்திருக்கோயிலின் உபகோயில்களில் படைவீடுகளில் ஒன்றான திருப்பரங்குன்றம் அருள்மிகு சுப்பிரமணிய சுவாமி ஆலயம் ஒன்றாகும். இங்கு இரண்டு கலியாண மண்டபங்கள் உபயோகத்துக்குக் கொடுக்கப்பட்டு வருகின்றன.
10. சமய குரவர்களில் ஒருவரான அருள்மிகு மாணிக்கவாசகப் பெருமான் அவதரித்த ஊரான திருவாதவூரில் உள்ள அருள்மிகு திருமறைநாத சுவாமி ஆலயம் இத்திருக்கோயிலின் உபகோயிலாகும்.
11. ஆன்மீகப் பெருமக்கள் அனைவரும் தமிழ் வளர்த்த தலைநகர் பாண்டிப்பழம்பதி மதுரை மாநகரில் அன்பர்களுக்கு அருள் வழங்கும் அருள்மிகு மீனாட்சி சொக்கநாதரைக் கண்டு வணங்கி அருள் பெற்றுய்யத் திருவாலவாய்க்கு வருகை தருவீர்களாக.

திரு. என். நாராயணன் செட்டியார்
*தர்மகர்த்தாக் குழுத் தலைவர்*

என். எஸ். இராமச்சந்திரன், பி. ஏ., பி. எல்.,
*நிருவாக அதிகாரி*

*அருள்மிகு மீனாட்சி சுந்தரேசுவரர் திருக்கோயில், மதுரை*




# 1960-ல் கும்பாபிஷேகம்






திரு சி. எஸ். தீனதயாளு

நெஞ்சமென வந்து அடையும் அடியார்களின் நெஞ்சமெனும் கல்லை நெகிழ்ந்துருகச் செய்யும் மால் மருகன் ஆறுபடைவீடுகளில் சிறப்புற அமர்ந்து அருள் புரிகின்றான். பழனியம்பதியில் அடியார்களை வாழ்விக்கும் கருணைமூர்த்தியாய் விளங்குகிறான். மூன்றாம் படை வீடாகிய இத்திருத்தலத்தில் வேண்டுவார்க்கு வேண்டுவன அளித்துத் தான் மட்டும் ஆண்டிக் கோலத்தில் ஞான தண்டாயுதபாணியாகக் காட்சியளிக்கின்றான். பழநி என்ற பெயரைச் சொன்னாலே போதும் அவன் அருள் கிடைக்கும் என்பதைக் கந்தரலங்காரத்தில் அருணகிரிநாத சுவாமிகள் கூறுகின்றார்.

"படிக்கின்றிலை பழநித்திருநாமம்,
படிப்பவர்தாள்
முடிக்கின்றிலை முருகா என்கிலை
முசியாமலிட்டு
மிடிக்கின்றிலை பரமானந்தம் மேற்கொள
விம்மிவிம்மி
நடிக்கின்றிலை நெஞ்சமே! தஞ்சம் ஏதுநமக்கு
இனியே"

பழநி முருகனின் திருமேனி மகாசித்தர் போகர் முனிவரால் நவபாஷாணம் எனும் மருந்தினால் உருவாக்கப்பட்டது எனக்கூறப்படுகிறது. அத்திருமேனி மீது அபிஷேகம் செய்த பொருட்களை உட்கொள்வதின்மூலம் உடற்பிணி நீங்குகிறது என்பது பலர் கண்டறிந்த உண்மை.

போகசித்தரால் உருவாக்கப்பட்ட தண்டபாணித் திருவுருவம் அவருடைய சிஷ்யர் புலிப்பாணியால் பாதுகாக்கப்பட்டதாகத் தெரிகிறது. முதன் முதலில் சேர மன்னரால் திருக்கோயில் எழுப்பப்பட்டதென்று கூறப்படுகிறது. பின்னர் நாயக்க மன்னர்கள் காலத்தில் பல திருப்பணிகள் நடைபெற்றுள்ளன. அதற்கடுத்தும் பல திருப்பணிகள் செய்யப்பட்டு *1933, 1936, 1940* ஆகிய வருடங்களில் மகா கும்பாபிஷேகம் நடைபெற்றுள்ளதாகத் தெரிய வருகிறது. *1958* ம் வருஷத்தில் திருப்பணி வேலைகள் மீண்டும் துவக்கப்பட்டு சார்வரி ஆண்டு ஆவணித்திங்களில் (*29—8—1960*)ல் திங்கட்கிழமை அனுஷ நக்ஷத்திரமும் சித்தயோகமும் சிம்மலக்கினமும் கூடிய சுபதினத்தில் காலை *6–45* மணியளவில் வேதாகம முறைப்படி மகா கும்பாபிஷேகம் மிகச் சிறப்பாக நடைபெற்றது.

ஆம், அன்று நடைபெற்ற கும்பாபிஷேக நிகழ்ச்சிகள் என் மனக்கண் முன் நிழற்படம் போலத் தோன்றுகிறது. தென்னகத்

திலேயே முதன் முறையாக 33 யாக குண்டங்கள் கொண்ட ஒரு மகத்தான யாக சாலை திரு. செல்லக்கண்ணு ஸ்தபதி மூலம் நிர்மாணிக்கப்பட்டு, பழநியில் சிறந்த வேதாகம விற்பன்னர் திரு. ஈசானசிவாச்சாரியார் தலைமையில் யாகபூசை முதலிய வேள்விகள் நடைபெற்றன. இராஜ கோபுரம் புதுப்பிக்கப்பட்டுத் தங்க முலாமிட்ட கலசங்கள் பொருத்தப்பட்டன. பழநிமலை அடிவாரத்திலுள்ள ஸ்ரீ மீனாக்ஷியம்மன் கோவில், பாத விநாயகர் கோவில்முதல் மலைமேல் செல்லும் படிக்கட்டுகளில் ஆங்காங்குள்ள சந்நிதிகள், இடும்பன் கோவில் இன்னும் இதர மண்டபங்களிலுள்ள சந்நிதிகள் யாவற்றிற்கும் புதிதாக விமானங்கள் கட்டப்பட்டுப் புதுப்பிக்கப்பட்டன. மலைக்கோவில் வெளிப் பிரகாரத்தில் கண்ணைக்கவரும் மின்னொளி விளக்குகள் பொருத்தப்பட்டு இரவில் பார்க்கும்பொழுது வான மண்டலத்தில் ஒரு சுவர்க்கலோகம் போல் பிரகாசித்தது. அடிவாரத்தில் இரண்டு பெரிய கொட்டகைகள் யாத்ரிகர் வசதிக்காக நிர்மாணிக்கப்பட்டன.

25—8—'60 அன்று மலைக்கோவில் நாயக்கர் மண்டபத்தில் இருக்கும் சுப்பிரமணிய விநாயகர் சந்நிதி முன்பாக புஷ்பப் பந்தல் அமைத்து கங்கை, காவேரி, வைகை, முதலிய ஒன்பது நதிகளின் தீர்த்தங்களுள்ள கும்பங்கள் வைக்கப்பட்டு சாஸ்த்ர பூர்வமான பூசைகள் செய்யப்பட்டன. புதுப்பிக்கப் பட்டிருந்த மூலவர் விமானத்தின் மேல் பொருத்த இருந்த தங்கக் கலசத்திற்குப் பூசைகள் செய்யப்பட்டுக் கோவில் மேல் தளத்திற்கு வலமாக மேள தாளத்துடன் எடுத்துச் செல்லப்பட்டு மூலவர் விமானத்தின் மேல் பொருத்தப்பட்டது.

கும்பாபிஷேகத்தின் முன்னோடியாக பெரியநாயகியம்மன் கோவிலிலிருந்து ஷண்முக நதி தீர்த்தம் கொண்ட தங்கக்குடம் யானை மீது வைக்கப்பட்டு, குருக்கள், பண்டாரங்கள் வெள்ளிக் குடங்களைத் தலையில் வைத்து, நாதசுரப்பள்ளி மாணவர்கள் நாதசுர இசை முழங்க, ஓதுவார்கள் தேவாரப் பண் இசைக்க, முன்னாள் ஆணையர் திரு உத்தண்டராமன் அவர்கள் தலைமையில் ஒரு பிரம்மாண்டமான ஊர்வலம் புறப்பட்டு மலைக்கோவிலுக்குச் சென்ற காட்சி கண் கொள்ளாக் காட்சியாகும். மூன்று நாட்களுக்கு யாகசாலை பூசைகள் வேத பாராயணங்கள், தேவார இசை, நாதசுர இசை முதலியவை முழங்கின. அடிவாரத்தில் கும்பாபிஷேக நினைவுக் கொட்டகையில் இன்னிசைக் கச்சேரிகளும் சமயச் சொற்பொழிவுகளும் மிகச் சிறப்பாக நடைபெற்றன.

கும்பாபிஷேக யாகசாலைக்கு வேண்டிய சமித்துக் குச்சிகளை பொள்ளாச்சி நண்பர் திரு வி. எஸ். சுப்பிரமணியன் செட்டியார் சுமார் 99 வகை மரங்களிலிருந்து வெட்டி 108 குச்சிகள் கொண்ட கட்டுகளாகத் தயாரித்து ஒரு லாரி நிறைய கொண்டுவந்து குவித்திருந்த காட்சியை மறக்க முடியாது. கோவைப் பிரமுகர் திரு ராஜு செட்டியார் பதினோரு டின் நெய் சப்ளை செய்ததையும் மறக்க முடியாது.

முன்னாள் அறநிலைய அமைச்சர் திரு பக்தவத்சலம் அவர்களும் முன்னாள் மின் அமைச்சர் திரு கக்கன் அவர்களும் மற்றும் நூற்றுக் கணக்கான பிரமுகர்களும் பல்லாயிரக்கணக்கான பொது மக்களும் 29—8—'60 அன்று நடந்த மகா கும்பாபிஷேகத்தில் கலந்து கொண்டனர். பழனியாண்டவர் மண்டபத்தில் பதிக்கப்பட்ட திருப்புகழ்க் கல்வெட்டுக்களை அறநிலைய அமைச்சர் திறந்து வைத்தார்.

கும்பாபிஷேகம் நடப்பதற்கு முன் திருக்கோவில் வருஷ வருமானம் ஏழு லக்ஷமாகயிருந்தது. அடுத்த வருஷத்திலேயே அது பத்து லக்ஷமாக மாறி வருஷந்தோறும் வருமானம் அதிகரிக்கத் தொடங்கி இப்பொழுது ஐம்பது லக்ஷமாக ஓங்கி வளர்ந்து முன்னேற்றப் பாதையில் பழனி முருகன் பவனி வருகின்றான். பதின்மூன்று வருஷங்களுக்குப் பிறகு இப்பொழுது 2—9—1973-ல் மீண்டும் பழநிமலையில் திருக்குடமுழுக்கு நடைபெறுவது பெருமகிழ்ச்சிக்குரிய செயலாகும்.



பெரியாவுடையார் கோவில்




பட்டத்து விநாயகர் கோவில்

# முருகனும்............
# ..........சம்பந்தரும்







**கி. வா. ஜகந்நாதன்**

திருஞானசம்பந்தப் பெருமான் முற்பிறவியில் இருந்த நிலை என்ன? அவர் யாருடைய திரு அவதாரம்?

இந்தக் கேள்வியை எழுப்பிச் சேக்கிழாருடைய பெரியபுராணத்தைப் பார்ப்போம். அங்கே சில குறிப்புக்கள் கிடைக்கின்றன. முன்னைப் பிறவியில் சம்பந்தப்பெருமான் சிவபெருமானோடு தொடர்புடையவராக இருந்தார் என்பதை இரண்டிடத்தில் சேக்கிழார் குறிக்கிறார்.

சம்பந்தப் பெருமான் இளம் பருவத்தில் சில சமயங்களில் எதையோ நினைத்துக் கொண்டு அழுபவரைப்போல அழுவாராம்; அதைச் சேக்கிழார் :

"பண்டுதிரு வடிமறவாப்
பான்மையோர் தமைப்பரமர்
மண்டுதவ மறைக்குலத்தோர்
வழிபாட்டின் அளித்தருளத்
தொண்டினிலை தரவருவார்
தொடர்ந்தபிரி வுணர்வொருகால்
கொண்டெழலும் வெருக்கொண்டாற்
போலழுவார் குறிப்பயலாய்"

என்று சொல்கிறார்.

'முன்பிறவியில் தம்முடைய திருவடி மறவாப் பான்மையராக இருந்த இப்பெருமானை, சிவபெருமான், தவம் நிறைந்த மறைக்குலத்தவராகிய சிவபாத இருதயர் தம்மைப் பணிந்த வழிபாட்டினால், அவருக்குத் திருமகனை அளித்தருள, சிவத் தொண்டு, இன்னதென்று உலகத்தாருக்கு வெளிப்படுத்தத் திருவவதாரஞ் செய்த இவர் முன்பு தொடர்ந்து பின்பு உண்டான பிரிவுணர்ச்சி ஒவ்வொரு சமயம் பெற்று எழுச்சிபெறவே, அயலான குறிப்பையுடையவராய் அஞ்சினவர்போல அழுவார்' என்பது இதன் பொருள்.

இங்கே, '**பண்டு திருவடிமறவாப் பான்மையோர்**' என்றும், '**தொடர்ந்த பிரிவு உணர்வு**' என்றும் கூறுவன சம்பந்தப் பெருமானுக்கும் சிவபிரானுக்கும் முற்பிறவியில் இருந்த தொடர்பைக் குறிப்பவை.

பிரமதீர்த்தத்தில் சிவபாத இருதயர் மூழ்கியபோது அவரைக் காணாமல் இப்பெருமான் தோணியப்பருடைய கோயிலை நோக்கி, "அம்மே, அப்பா" என்று அழுதார். இதனைச் சொல்லுகிறார் சேக்கிழார் :

"மெய்ம்மேற்கண் துளிபனிப்ப
வேறெங்கும் பார்த்தழுவார்,
தம்மேலைச் சார்புணர்ந்தோ
சாரும்பிள் ளைமைதானோ
செம்மேனி வெண்ணீற்றார்
திருத்தோணிச் சிகரம்பார்த்து
அம்மேஅப் பாஎன்றென்
றழைத்தருளி யழுதருள"

தோணியப்பர் எழுந்தருளியிருக்கும் திருக்கோயிற் சிகரத்தைப் பார்த்து, 'அம்மே, அப்பா' என்று இப்பெருமான் அழுதார். அதற்கு என்ன காரணம், 'தமக்கும் இறைவனுக்கும் முன்பு உள்ள சார்போ, அல்லது குழந்தையின் இயல்போ' என்கிறார் சேக்கிழார். "**தம்மேலைச் சார்பு உணர்ந்தோ**" என்பதனால் இப்பெருமானுக்கும் இறைவனுக்கும் முன்பிறவியில் தொடர்பு இருந்தது என்பது புலப்படும்.

இந்தத் தொடர்பு எத்தகையது?

திருஞானசம்பந்தர் தேவாரத்தில் திருத்துருத்திப் பதிகத்தில் உள்ள திருப்பாடல் ஒன்று வருமாறு:

"துறக்குமா சொலப்படாய்,
துருத்தியாய், திருந்தடி
மறக்குமா றிலாதஎன்னை
மையல்செய்திம் மண்ணின்மேல்
பிறக்குமாறு காட்டினாய்;
பிணிப்படும் உடம்புவிட்
டிறக்குமாறு காட்டினாய்க்கு
இழுக்குகின்ற தென்னையே."

இதில் '**திருந்தடி மறக்குமாறு இலாத என்னை மண்ணின்மேல், பிறக்குமாறு காட்டினாய்**, என்ற பகுதி, சம்பந்தர் முன்பு இறைவன் திருவடியை மறவாமல் வாழ்ந்தவர் என்பதையும், பின்பு இறைவன் செயலால் இப்போது பிறந்தார் என்பதையும் தெரிவிக்கின்றது. இந்தக் குறிப்பை எண்ணியே சேக்கிழார் மேற்சொன்ன பாடல்களைப் பாடியிருக்க வேண்டும்.

●● ●● ●●

முருகனுடைய திருவருளால் அநுபூதி பெற்றவரும்; முருகனை, "பெம்மான் முருகன் பிறவான் இறவான்" என்று சொல்பவருமாகிய அருணகிரிநாத சுவாமிகள், முருகனே ஞானசம்பந்தப் பெருமானைத் திருவவதாரம் செய்தருளியதாகப் பல இடங்களில் கூறுவார்.

"புழுகொ முருகாழி கவுணியரின் ஞான
புனிதனென ஏடு தமிழாலே
புனலிலெதிர் ஏற அமணர்கழு வேற
அமர்பொருத வீர குருநாதா"

"பாலரூத்திரு வாயால் ஓதிய
ஏருநீர்க்கெதிர் போயே வாதுசெய்
பாடல் தோற்றிருநாலாம் ஆயிர
சமண் மூடர்
பாரின்மேற்கழு மீதே ஏறிட
நீறிடாத்தமிழ் நாடீடே றிடப்
பாதுகாத்தரு ளாலே கூனிமிர்
இறையோனும்
ஞாலமேத்திய தோர்மா தேவியும்
ஆலவாய்ப்பதி வாழ்வா மாறெனும்
ஞானபாக்கிய பாலா வேலவ
மயில்வீரா"

என்பனபோல வரும் திருப்புகழ்ப் பகுதிகள் இந்தக் கருத்தைத் தெரிவிக்கின்றன.

பதினைந்தாம் நூற்றாண்டில் வாழ்ந்த அருணகிரிநாதர் இந்தக் கருத்தைச் சொன்னார். அவருக்குமுன் சேக்கிழார் காலத்தில் வாழ்ந்திருந்த ஒட்டக்கூத்தரும் ஞானசம்பந்தர் முருகன் அவதாரம் என்ற கருத்தைச் சொல்கிறார்.

அவர் பாடிய தக்க யாகப் பரணியில் 'கோயிலைப் பாடியது' என்ற பகுதியில், கொற்றவையின் திருமுன் கலைமகள், ஞானசம்பந்தர் சமணரை வாதில் வென்ற வரலாற்றைச் சொல்வதாக ஒரு செய்தி வருகிறது. அங்கே அந்த வரலாற்றையே ஒட்டக்கூத்தர் பாடுகிறார்.

தேவி கலைமகளைப் பார்த்து அருளிச் செய்கிறாள்,

"வருகதை தெய்வமகள்என மருமகள் வள்ளிவதுவை
மனமகிழ் பிள்ளைமுருகன் மதுரையில்
வெல்லுமினிய
தொருகதை சொல்லுதவரி ஒளிவிரி செவ்விமுளரி
ஒளிதிகழ் அல்லிகமழும் ஒருமனை வல்லிஎனவே"

'என் மருமகளாகிய வள்ளியின் மணத்தைப் பெற்று மகிழ்ந்த பிள்ளையாகிய முருகன் மதுரையில் வெல்லும் இனிய கதையைச் சொல்வாயாக' என்று பணிக்கிறாள் தேவி.

இதைக்கேட்டுக் கலைமகள் சொல்கிறாள்:

"எழுமலை சொல்லும் அசனி இளமயில் வள்ளி
கணவன்
இறைமலை வில்லி புதல்வன் இகன்மகன் ஐயை
களிறு
கழுமலம் உய்ய விரவு கலியுக எல்லை பொருத
கதைகளில் உள்ளத மணர் கழுமிசை
கொள்வதிதுவே."

இங்கும், 'மலையைக் கொன்ற இடியை ஒப்பவன், வள்ளிகணவன், சிவபிரான் புதல்வன்,

அம்பிகையின் பிள்ளை, கழுமலமாகிய சீகாழி உய்யும்படி வந்து பொருத கதை' என்கிருள்.

இந்த இரண்டு பாடல்களிலும் முருகனே ஞானசம்பந்தராக அவதாரம் செய்தவன் என்ற கருத்தைத் தெளிவாகச் சொல்கிருர் ஒட்டக்கூத்தர்.

சேக்கிழார் இந்தக் கருத்தைக் குறிப்பாகக்கூடச் சொல்லவில்லை, திருஞான சம்பந்தரைப் பிள்ளையார் என்று குறிப்பார், அவர் அம்மையின் முலைப்பாலை உண்டமையால்,

"யாவருக்கும் தந்தைதாய்
எனும்இவர் இப்படியளித்தார்
ஆவதனல் ஆளுடைய
பிள்ளையாராய்"

என்று பாடுகிருர் சேக்கிழார்.

சேக்கிழார் பாடிய பெரியபுராணத்துக்கு மூலநூல் திருத்தொண்டத் தொகை. சுந்தரர் பாடிய அது முதல் நூல். அதன் வழிநூல் நம்பியாண்டார்நம்பி பாடிய திருத்தொண்டர் திரு அந்தாதி. அதன் விரிநூல் பெரியபுராணம். "திருத்தொண்டத் தொகைவிரி'' என்று சேக்கிழாரே சொல்வார்.

நம்பியாண்டார் நம்பி சேக்கிழாருக்கு முன் வாழ்ந்தவர். முதலாம் இராஜராஜ சோழன் காலத்தில் இருந்து, அவன் திருமுறையைக் கண்டுபிடிக்கத் துணை செய்ததோடு, அவற்றை வகைப்படுத்தவும் உதவி செய்தவர். அவர் திருஞானசம்பந்தரைப் பற்றி ஆறு நூல்கள் பாடியிருக்கிருர். அவை ஆளுடைய பிள்ளையார் திருவந்தாதி, ஆளுடைய பிள்ளையார் திருச்சண்பை விருத்தம், ஆளுடைய பிள்ளையார் திருமும்மணிக் கோவை, ஆளுடைய பிள்ளையார் திருவுலா மாலை, ஆளுடைய பிள்ளையார் திருக்கலம்பகம், ஆளுடைய பிள்ளையார் திருத்தொகை என்பன. அந்த நூல்களில் ஞானசம்பந்தரைப்பற்றிய பல செய்திகளைக் காணலாம். சேக்கிழார் அவற்றையெல்லாம் பார்த்துப் பலவற்றைப் பெரியபுராணத்தில் சொல்லியிருக்கிருர். நம்பியாண்டார் நம்பிகள் திருவாக்கில் காணப்படும் சில செய்திகள் பெரியபுராணத்தில் இல்லை. அவற்றுள் ஒன்று சம்பந்தருடைய முன்னை நிலை.

நம்பியாண்டார் நம்பி சம்பந்தர் முருகனுடைய திருவவதாரம் என்பதைக் குறிப்பாகப் புலப்படுத்துகிருர். அவற்றை இனிப் பார்ப்போம்!

•• •• ••

முருகனை மலைமகள் புதல்வன் என்பது வழக்கு. "இழையணி சிறப்பிற் பழையோள் குழவி" என்பது திருமுருகாற்றுப்படை. முருகனுக்குரிய இந்தத் தொடரால் சம்பந்தப் பெருமானைச் சொல்லுவார் நம்பிகள்,

"காழி நாடன் கவுணியர் தலைவன்
மாழை நோக்கி மலைமகள் புதல்வன்" (1)
"பொற்பமர் தோள நற்றமிழ் விரச
மலைமகள் புதல்வ கலைபயில் நாவ" (10)

என்பவை ஆளுடைய பிள்ளையார் திருமும்மணிக் கோவையில் வருவன.

ஆளுடைய பிள்ளையார் திரு அந்தாதியில் ஒருபாட்டு, அகத்துறையமைந்தது, பாங்கன் தலைவனை வியத்தல் என்னும் துறை அது. தலைவி இன்ன இடத்தில் இன்ன எழிலோடு இருக்கிருள் என்று தலைவன் சொல்ல, அதுகேட்ட பாங்கன் அங்கே சென்று அவளைப் பார்க்கிருன். 'அறிவிற் சிறந்த நீ ஒரு பெண்ணிடம் மயங்கலாமா?' என்று தலைவனை இடித்து உரைத்துவிட்டு வந்தவன் அவன். இப்போது தலைவியைப் பார்த்த பிறகு, 'இந்த எழில் மங்கையைப் பார்த்து இங்கேயே மயங்கி நின்றுவிடாமல் நம்மிடம் வந்து செய்தியைச் சொன்ன அவன் மன உறுதியைப் பாராட்டத்தான் வேண்டும்' என்று வியந்து கூறுகிருன். பாங்கன் தலைவனை வியந்து சொல்வதாக அமைந்த பாட்டு அது, 'இந்த பெண்ணின் கண்ணுகிய அம்புக்கு இலக்காகியும் தன் இயல்பு மாருமல் வந்த என் தலைவனுக்கு ஒப்பானவர் இவ்வுலகத்தில் யார் இருக்கிருர்கள்?' என்று வியக்கிருன்.

"மயில்ஏந் தியவள்ளல் தன்னை அளிப்ப
மதிபுணர்ந்த
எயில்ஏந் தியசண்பை நாதன் உலகத்து
எதிர்பவர் யார் ?
குயில்ஏந் தியபொழில் சோங்கேந்
தியகொம்பின் அம்பு தழீஇ
அயில்ஏந் தியமலர் கண்டுள
ஞய்வந்த அண்ணலுக்கே" (64)

'குயில்களைத் தன்பால் தாங்கிய சோலையில், கோங்கரும்பு போன்ற தனங்களை ஏந்திய பூங்கொம்பு போன்ற தலைவியினுடைய, அம்பின் இயல்பைப் பொருந்திக் கூர்மையைத் தாங்கிய மலரைப் போன்ற விழிகளைக் கண்டும், உயிரோடு வந்த தலைவனுக்கு, மயிலைக் கொடியாக ஏந்திய முருகனைத் தன்பால் உண்டாக்குவதற்காக, சந்திரனேடு சேர்ந்த மதில்களை உடைய சீகாழிக்குத் தலைவனுகிய சம்பந்தப் பெருமானுக்குரிய உலகத்தில் ஒப்பானவர் யார்? என்பது இதன் பொருள்.

'சண்பைநாதன் உலகத்துக்கு அண்ணனுக்கு ஒப்பவர் யார்?' என்று முடியும்.

இதில் சம்பந்தப் பெருமானைப் பாட்டுடைத் தலைவராக வைத்துப் பாடுகிருர் நம்பிகள். மயிலைக் கொடியாக ஏந்திய வள்ளல் முருகன். அவனைச் சம்பந்தப் பெருமாஞக உலகத்துக்கு அளிக்க வேண்டும் என்று சீகாழி எண்ணியதாம். சிவபெருமான் அளித்த புதல்வன் முருகன், அவனைச் சம்பந்தராகத் தர எண்ணிய சீகாழி ஓரளவு சிவபெருமானைப்போலத் தோற்றம் அளிக்க விரும்பியதாம். சிவபெருமான் தன் தலையில் மதியை வைத்திருக்கிருன். அதுபோல நாமும் நம் சிகரத்தில் மதியை வைக்கலாம் என்று தன் உறுப்பாகிய மதிலில் சந்திரனை அணிந்திருக்கிறதாம். இங்கே சண்பைநாதனுகிய சம்பந்தர் முருகன் திரு அவதாரம் என்ற குறிப்பை வைத்திருக்கிருர். முருகனைத் தரத்தாலும் சிவபிரானைப்போல சந்திரனைக் சூடிக் கொண்டதாகக் கற்பனை செய்கிருர்.

ஆளுடைய பிள்ளையார் திருக்கலம்பகத்தில் ஒருபாட்டு; அதுவும் அகத்துறை அமைந்த பாட்டே, 'நொதுமலர் வரைவுணர்த்தித் தோழி வரைவு கடாதல்' என்னும் துறை. தலைவனும் தலைவியும் களவும் காதல் செய்து வரும்போது, அவளை அவன் மணக்கும்படி செய்ய வேண்டுமென்று தோழி எண்ணுகிருள். 'அயலார் இவளை மணக்க முயலுகிருர்கள். அதற்குள் நீ இவளை மணப்பதற்குரிய முயற்சியை மேற்கொள்ள வேண்டும்' என்று சொல்கிருள். இந்தப் பாடலிலும் பாட்டுடைத் தலைவராகச் சம்பந்தர் வருகிருர்.

"சரதம் மணம்மலி பரிசம் வருவன;
தளர்வில் புகலியர் அதிபன், நதிதரு
வரதன், அணிதமிழ் விரசன், மிகுபுகழ்
மருவு சுருதிநன் மலையின் அமர்தரு
விரதம் உடையை நின் இடையி னவண்மனம்
விரைசெய் குழலியை அணைவ தரிதென
இரதம் அழிதர வருதல் முனம்இனி
எளிய தொருவகை கருது மலையனே (23)

'மலைக்குத் தலைவனே, இவருடைய மணத்தின் பொருட்டு நிரம்பிய பரிசங்கள் வருகின்றன; இது நிச்சயம். தளர்ச்சியில்லாத சீகாழிப்பதியில் உள்ளார்க்குத் தலைவனும், நதிதரு வரதனும், அலங்காரம் செய்யும் தமிழ் விரசனும் ஆகிய ஞானசம்பந்தப் பெருமானுடைய, மிக்க புகழ் பொருந்திய சுருதிமலையில் தங்கும் தவமுடையாய் நீ; நின்னிடத்தில் மனமானது, 'இனிமேல் அங்குள்ள மணமுடைய குழலையுடைய தலைவியைச் சேர்வது அரிது' என்று சுவை அழியும்படியான நிலைவருவதற்குமுன், இப்போதே அவளை மணப்பதற்குரிய எளிய வழி ஒன்றை ஆராய்ந்து மேற்கொள்வாயாக' என்பது இப்பாடலின் பொருள்.

இங்கே ஞானசம்பந்தப் பெருமானை மூன்று வகையாகச் சிறப்பிக்கிருர் நம்பிகள். புகலியர் அதிபன், நதிதரு வரதன், தமிழ் விரசன் என்பன அவை. புகலியர் அதிபன் என்பது அவர் திருவவதாரம் செய்த சீகாழித் திருப்பதியை எண்ணி அமைந்த பெயர். மூன்ருவதாகச் சொல்லும் தமிழ் விரசன் என்பது சம்பந்தப் பெருமானே தம்மைத் தம் தேவாரப் பாசுரங்களில் சொல்லிக்கொள்ளும் தொடர்.

இடையில் உள்ள நதிதரு வரதன் என்பதுதான் ஆராய்வதற்குரியது. அதற்கு நதியைத்தரும் வரதன் என்றும், நதியால் தரப்பெற்ற வரதன் என்றும், இருவகை

யாகப் பொருள் விரிக்கலாம். ஞானசம்பந்தர் எந்த ஆற்றையும் உண்டாக்கியதாக வரலாறு இல்லை. அப்படியே நதியால் தரப்பெற்ற வரதன் என்பதும் ஞானசம்பந்தர் வரலாற்றில் இல்லை.

என்றாலும் நதியால் தரப்பெற்ற வரதன் என்பது முருகனுக்குப் பொருத்தமான பெயர். அவன் கங்கையால் தரப்பெற்றவனாதலின் காங்கேயன் என்னும் பெயர் பெற்றான். "நதிபுத்திர" என்று அநுபூதியிலும், "ஆயிரமுகத்து நதி பாலனும்" என்று திருவகுப்பிலும் அருணகிரிநாதர் முருகனை நதிதரு வரதனாகக் கூறுகிறார்.

எனவே, 'நதிதரு வரதன்' என்பது முருகனைக் குறிக்கும் தொடராகவே கொள்வதற்குரியது. சம்பந்தரைச் சொல்லும் போது முருகனுக்குரிய பெயரைச் சொல்வதற்குக் காரணம், முருகனே சம்பந்தராக அவதரித்தான் என்பதே.

எனவே நம்பியாண்டார் நம்பிகள் முருகனுக்குரிய பெயர்களாகிய "மலைமகள் புதல்வன்", "மயில் ஏந்திய வள்ளல்", "நதிதரு வரதன்" என்பவற்றால் சம்பந்தரைக் குறித்தலால், அவரும் முருகனே சம்பந்தப் பெருமானாக எழுந்தருளினான் என்ற கருத்துடையவர் என்பது தெளிவாகும்.

இந்தக் கருத்தை முதன் முதலாகச் சொன்னவர் நம்பியாண்டார் நம்பிகள், பிறகு கூறியவர் ஒட்டக்கூத்தர், அப்பால் பலகாலும் கூறியவர் அருணகிரிநாதர் என்பதை இதுகாறும் எழுதியவற்றால் உணரலாம்.

அருமறையா கமமங்கம் அருங்கலைநூல் தெரிந்த
அகத்தியனுக் கோத்துரைக்கும் அருட்குருவாம் குருவை
திருமறைமா முனிவர்முனி தேவர்கள்தம் தேவன்
சிவனருள்சேர் திருமதலை தவநிலைபோர் தெய்வம்
பொருமறையார் கழல்வீரர்வீ ரன் கையிற்
பூநீர்கொண் டோவாது போற்றுமடி யவர்கள்
கருமறையா வகையருளிக் கதிவழங்குங் கந்தன்
கழலிணைகள் எஞ்சிரத்திற் கருத்தில் வைப்பாம்

— சிவஞான சித்தியார்

# அருள்மிகு வரதராஜப் பெருமாள் வகையரு திருக்கோவில்கள்

## வெங்கம்பூர் அஞ்சல்

ஈரோடு வட்டம் - கோவை மாவட்டம்



கொங்கு நாட்டில் சிறந்த ஏழு ஸ்தலங்களில் ஒன்ருனதும், காவிரி நதியின் மேல் கரையில் உள்ளதுமான திருப்பாண்டிக் கொடுமுடிக்கு அருகில் 2 கல் தொலேவில் உள்ளது. இந்தத் திருக்கோவில் நிர்வாகத்தின் கீழ், திரு வரதராஜப் பெருமாள் கோவில், திரு சோளீஸ்வரர் கோவில், திரு அங்காளம்மன் கோவில், திரு பொன்காளியம்மன் கோவில், திரு மாரியம்மன் கோவில் என இன்னும் பல கோவில்கள் உள்ளன.

சமீப காலத்தில் இந்தக் கோவில்களின் திருப்பணி வேலேகள், திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகள் அவர்களால் துவக்கிவைக்கப் பட்டு, வேலேகள் பூர்த்தி செய்யப்பட்டு பரிதாபி ஆண்டு ஐப்பசித் திங்கள் 9-ஆம் நாள் (25—10—72) திருக்குட முழுக்குப் பெருவிழா சிறப்பாக நடை பெற்றது. கோவை மண்டல அறநிலேய ஆட்சித் துறை துணே ஆணேயர் உயர்திரு. M. சூரியராஜ், B. A., B. L., அவர்கள் வருகை தந்து சிறப்பித் துள்ளார்கள். சுமார் 3000 பக்தர்களுக்கு குடமுழுக்குப் பெருவிழாவின் போது அன்னதானம் செய்யப்பட்டது. செவல்குளம் சி. தங்கையா அவர்கள் வில்லிசைக் கச்சேரியும், மதுரை சோமு அவர்கள் இன்னிசைக் கச்சேரியும் நா. கிரிதாரி பிரசாத் அவர்கள் சொற்பொழிவும், மு. குமாரசாமி தேசிகர் திருமுறைக் கச்சேரியும் நடைபெற்றன.

இத்திருக்கோவில் நிதியிலிருந்து வெங்கம்பூர் கிராமத்தில் சுமார் 2 லட்சம் ரூபாய் செலவில் ஒரு கல்யாண மண்டபம் கட்டும் வேலேக்குத் தமிழ்நாடு அறநிலேயத் துறை அமைச்சர் மாண்புமிகு மு. கண்ணப்பன் அவர்களால் அடிக்கல் நாட்டப்பெற்று, வேலேயும் நடந்து வருகிறது. இலவசத் திருமணம் நடத்துதல், ஏழைக் குழந்தைகளுக்குப் பால் வழங்குதல், சித்த வைத்தியசாலே நடத்துதல் முதலிய திட்டங்கள் விரைவில் செயல் படுத்தப்பட இருக்கின்றன.

பக்தர்கள் கோவில்களுக்கு வருகை தந்து இறைவன் திருவருளேப் பெற்றுய்யுமாறு வேண்டப்படுகிறது.

இங்ஙனம்,

**த. முனியப்பன்,** B. A.
செயல் அலுவலர்

26—7—73
வெங்கம்பூர்

# வையாவி நாட்டுச் சங்க காலத்து அரசர்கள்







திரு. மயிலை சீனிவேங்கடசாமி

**மு**ருகப் பெருமான் எழுந்தருளியுள்ள ஆறுபடை வீடுகளில் பழனியும் முக்கியமான இடம். மற்றப் படைவீடுகளைப் போலவே பழனியும் மிகப் பழமையானது. சங்க காலத்திலே பழனி, **பொதினி** என்று பெயர் பெற்றிருந்தது. பொதினி என்னும் பெயர் பிற்காலத்தில் பழனி என்று மருவி வழங்குகிறது. பழனி (பொதினி) யைச் சூழ்ந்திருந்த நாடு அந்தக் காலத்தில் **ஆவி நாடு** என்றும் **வையாவி நாடு** என்றும் பெயர் பெற்றிருந்தது. ஆவி நாட்டையரசாண்ட அரசர் **ஆவியர்** என்றும் **வையாவிக்கோ** என்றும் **வேள் ஆவி** என்றும் பெயர் பெற்றிருந்தனர். மாமூலனர், வேள் ஆவியரசரையும் அவர்களுடைய பொதினியையும் கூறுகிறார்,

> "வண்டுபடத் ததைந்த கண்ணி
> ஒண்கழல்
> உருவக் குதிரை மழவர் ஓட்டிய
> முருகன் நற்போர் நெடுவேள் ஆவி
> அறுகோட் டியானைப் பொதினி
> (அகம், *1 : 1—4*)

என்றும்,

> "முழவுறழ் திணிதோள் நெடுவேள் ஆவி
> பொன்னுடை நெடுநகர்ப் பொதினி
> (அகம், *61 : 15—16*)

என்றும் அவர் கூறுகிறார்.

ஆவி நாட்டில் எழுந்தருளியுள்ள முருகப் பெருமானை நக்கீரர், 'ஆவினன் குடி முருகன்' என்று கூறுகிறார். ('ஆவினன்குடி அசைதலும் உரியன்'. திருமுருகாற்றுப் படை, *176*)

பொதினி (பழனி) யும் வையாவி நாடும் இந்தக் காலத்திலே பாண்டி நாட்டிலே மதுரை மாவட்டத்து மதுரைத் தாலுகாவில் இணைந்திருக்கின்றன. சங்க காலத்திலே இவை கொங்கு நாட்டைச் சார்ந்திருந்தன. பழைய கொங்கு நாட்டின் தென்கோடியிலே வையாவி நாடும் பொதினியும் அமைந்திருந்தன.

கடைச்சங்க காலத்திலே வையாவி நாட்டை அரசாண்ட வேள் ஆவிக் கோக்களில் பேர்போன அரசன் **பேகன்** என்பவன். அவனை **வையாவிக் கோப் பெரும் பேகன்** என்றும் கூறுவர். வையாவிக் கோப் பெரும்பேகன் கடையெழு வள்ளல்களில் ஒருவனாகத் திகழ்ந்தான். புலவர்களுக்கும் மற்றவர்களுக்கும் அவன் பொன்னையும் பொருளையும் வழங்கினன். ஆகவே கபிலர் அவனைக் "கைவண் ஈகைக் கடுமான் பேகன்". என்று கூறுகிறார். (புறம் **144**).

மேகம் சூழ்ந்து மழை பெய்கிறபோது மயில்கள் மகிழ்ச்சியினல் தோகையை

விரித்து ஆடுவது இயல்பு. மேகத்தைக் கண்டால் மயில்களுக்கு மகிழ்ச்சியுண்டாகும். இந்த இயற்கையின்படி மயில் ஒன்று மழை காலத்தில் தன் தோகையை விரித்து அசைந்து ஆடிற்று. அதனைக் கண்ட வையாவிக் கோப் பெரும்பேகன், அந்த மயில் குளிரினால் நடுங்கி வருந்துகிறது என்று கருதினான். கருதி, அந்த மயிலுக்குப் போர்வையை விரித்துப் போர்த்தினான். மகிழ்ச்சியினால் ஆடுகிற மயிலைக் குளிரினால் நடுங்குகிறது என்று கருதியது அவனுடைய அறியாமை என்று கருதுவதை விட அவனுடைய வள்ளன்மையான அருள் உள்ளத்தைக் காட்டுகிறது என்று கருதுவது சிறப்பாகும். பாணர் அவனுடைய இந்தச் செயலைப் பாராட்டியுள்ளார்.

"மடத்தகை மாமயில் பனிக்கும்
என்றருளிப்
படாஅம் ஈத்த கெடாஅ நல்லிசைக்
கடாஅ யானைக் கலிமான்பேகன்."
(புறம் 145.)

இடைக்கழி நாட்டு நல்லூர் நத்தத்தனாரும் தாம் பாடிய சிறுபாண் ஆற்றுப் படையில், பேகன் மயிலுக்குப் போர்வை யளித்ததைக் கூறுகிறார்.

"வானம் வாய்த்த வளமலைக் கவாஅன்
கான மஞ்ஞைக்குக் கலிங்கம் நல்கிய
அருந்திறல் அணங்கின் ஆவியர்
பெருமகன்
பெருங்கல் நாடன் பேகன்."
(சிறுபாண். 84—87)

வையாவிக்கோப் பெரும் பேகனுக்குக் கண்ணகி என்ற பெயர் கொண்ட மனைவி ஒருத்தியிருந்தாள். சங்க காலத்திலே கண்ணகி என்னும் பெயர் மகளிர்க்குப் பரவலாக வழங்கப்பட்டது. கண்ணகி என்பது கண்ணழகி என்பதன் திரிபு. மகளிரின் கண் அழகைச் சுட்டுகிற பெயர்களை மகளிர்க்குச் சூட்டுவது வழக்கம். இந்த வழக்கம் அக்காலத்திலும் இக்காலத்திலும் இருந்து வருகிறது. கண்ணகி (கண்ணழகி), நக்கண்ணை, காமக்கண்ணி, கயற்கண்ணி, மீனாட்சி, காமாட்சி, விசாலாட்சி, அஞ்சனாட்சி முதலான பெயர்களைச் சூட்டுவது அக்காலத்தும் இக்காலத்தும் உள்ள மரபு. கோவலனுடைய மனைவியின் பெயரும் கண்ணழகியே.

வையாவிக் கோப் பெரும் பேகன் தன்னுடைய மனைவியை விட்டுப் பிரிந்து இன்னொருத்தியோடு வாழ்ந்து வந்தான். இதனை யறிந்த புலவர்கள் வள்ளலாகிய இவனிடஞ் சென்று இவனுடைய மனைவியோடு சேர்ந்து வாழும்படி வேண்டினார்கள். கண்ணகி காரணமாக வையாவிக் கோப் பெரும்பேகனைப் பெருங்குன்றூர் கிழார் (புறம் 146) கபிலர் (புறம் 143) பாணர் (புறம் 144, 145) அரிசில்கிழார் (புறம் 146) முதலானோர் பாடினார்கள்.

வையாவி நாட்டு அரசர்களில் பேர் போன இன்னொரு வேள் அரசன் பெயர் பதுமன் என்பது. இவனை 'வேள் ஆவிக் கோமான் பதுமன்,' என்றுங் கூறுவர். வையாவிக் கோமான் பதுமனுக்கு இரண்டு பெண்கள் இருந்தார்கள். அவர்களுக்குத் **தேவி** என்று பெயரிட்டான். அந்தப் பெண்களைச் சேர அரசர் குலத்தில் மணஞ் செய்து கொடுத்தான். மூத்த மகளைக் குடக்கோ நெடுஞ்சேரலாதன் என்னும் சேர மன்னனுக்கு மணஞ் செய்து கொடுத்தான். இளைய மகளைப் பொறையர் என்னும் சேர மன்னர் மரபைச் சேர்ந்த செல்வக் கடுங்கோ வாழியாதனுக்கு மணஞ் செய்து கொடுத்தான். செல்வக் கடுங்கோ வழியாதன் கொங்கு நாட்டையரசாண்டான். குடக்கோ நெடுஞ்சேரலாதனும் செல்வக் கடுங்கோ வாழியாதனும் தாயாதி முறைத் தமயன் தம்பியர் ஆவர். வையாவிக்கோ பதுமனுடைய மகளிரான தமக்கை தங்கையரை இந்தத் தமயன் தம்பிமார் திருமணஞ் செய்து கொண்டு வாழ்ந்தார்கள். எனவே இவர்கள் சமகாலத்தில் வாழ்ந்தவர்கள். ஒவ்வொரு பெண்களும் இரண்டிரண்டு மக்களைப் பெற்றெடுத்தனர். அவர்களுடைய பெயர்கள் களங்காய்க் கண்ணி நார் முடிச்சேரல் (4-ம் பத்தின் தலைவன்), ஆடு கோட்பாட்டுச் சேரலாதன் (6-ம் பத்தின் தலைவன்), பெருஞ்சேரல் இரும்பொறை (8-ம் பத்தின் தலைவன்), குட்டுவன் இரும்பொறை என்பவை. இவர்களுடைய வழி முறை கீழே காட்டப்பட்டுள்ளது.




இவ்வாறு, வேள் ஆவிக் கோமான் பதுமனுடைய இரண்டு பெண்களுக்கு நான்கு அரச குமாரர்கள் பிறந்தனர். ஆனால், பதுமனுடைய மூத்த மகளை மணஞ் செய்திருந்த குடக்கோ நெடுஞ்சேரலாதன் இன்னொரு மனைவியையும் மணஞ் செய்திருந்தான். அந்த மனைவி சோழ அரசன் மகளான நற்சோணை என்பவள். நற்சோணைக்கும் இரண்டு பிள்ளைகள் பிறந்தனர். ஆகவே, குடக்கோ நெடுஞ்சேரலாதனுக்கு இரண்டு மனைவியரிடத்திலும் நான்கு பிள்ளைகள் பிறந்தனர். நற்சோணைக்குப் பிறந்த மக்கள், தமிழக வரலாற்றில் புகழ் பெற்றவனான செங்குட்டுவனும் தமிழில் ஆதிகாவியத்தை இயற்றிப் புகழ் பெற்றவரான இளங்கோவடிகளும் ஆவர். குடக்கோ நெடுஞ்சேரலாதனுடைய வழிமுறையைக் கீழே காண்க.




இவர்களில் களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரலும் ஆடுகோட்பாட்டுச் சேரலாதனும் செங்குட்டுவனுக்கும் இளங்கோவடிகளுக்கும் (மாற்றாந்தாய் வழித்) தமயன் தம்பியர் ஆவர். தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறையும் குட்டுவன் இரும்பொறையும் இவர்களுக்குத் தாயாதிச் சகோதரர் ஆவர். இந்தச் சகோதரர் எல்லோரும் ஏறத் தாழச் சமகாலத்தில் (கி. பி. இரண்டாம் நூற்றாண்டில்) வாழ்ந்தவர்கள். இவர்களில் இளங்கோவடிகளும் குட்டுவன் இரும்பொறையும் தவிர மற்றவர் எல்லோரும் பதிற்றுப் பத்தின் ஒவ்வொரு பத்துக்குத் தலைவர் ஆவர். இவர்களில் அதிக காலம் அரசாண்டவன் கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன். இவன் ஐம்பத்தைந்து ஆண்டு அரசாண்டான். இவனுடைய மற்றச் சகோதரர்கள் எல்லோரும் இவனை விடக் குறைந்த காலம் அரசாண்டார்கள். இவனுடைய தமயனை களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல் இருபத்தைந்து ஆண்டு அரசாண்டான். தம்பியாகிய ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் முப்பத்தெட்டு ஆண்டும் தாயாதித் தமயனை பெருஞ்சேரல் இரும்பொறை பதினேழு ஆண்டும் அரசாண்டார்கள். இவர்கள் எல்லோரையும் விட அதிகக் காலம் (55 ஆண்டு) அரசாண்டவன் செங்குட்டுவன் ஒருவனே.

சேரன் செங்குட்டுவன் கண்ணகிக்குப் பத்தினிக் கோட்டம் அமைத்துச் சிறப்புச் செய்தான். அவன் விழாச் செய்தது அவ

னுடைய ஐம்பதாம் ஆட்சி ஆண்டில் என்று சிலப்பதிகாரம் கூறுகிறது. அந்த விழாவைச் சிறப்புச் செய்ய அயல் நாடுகளிலிருந்து சில அரசர்கள் வந்திருந்தனர் என்றும் அவர்களில் இலங்கை அரசனை கயவாகுவும் (கஜபாகுவும்) ஒருவன் என்றும் சிலப்பதிகாரம் கூறுகிறது. 'கடல் சூழ் இலங்கைக் கயவாகு (கஜபாகு) வேந்தன்' கி. பி. 171 முதல் 193 வரையில் இருபத்திரண்டு ஆண்டு இலங்கையை அரசாண்டான் என்று மகாவம்சம் என்னும் நூல் கூறுகிறது. எனவே, கஜபாகுவும் செங்குட்டுவனும் சமகாலத்தில் இருந்தவர் என்று தெரிகின்றனர். கஜபாகு ஏறத்தாழ கி. பி. 175-ல் வஞ்சிமா நகரத்துக்கு வந்து பத்தினி விழாவைச் சிறப்புச் செய்தான் என்று கொள்வோமானல், அந்த ஆண்டு செங்குட்டுவனுடைய ஐம்பதாவது ஆட்சியாண்டாக அமைகிறது. செங்குட்டுவன் 55-ஆண்டு ஆட்சி செய்தபடியால், அவன் கி. பி. 175 க்குப் பிறகு ஐந்து ஆண்டு ஆட்சி செய்து கி. பி. 180-ல் இறந்திருக்க வேண்டும் என்று கருதலாம். எனவே, செங்குட்டுவன் ஏறத்தாழ கி. பி. 125 முதல் 180 வரையில் அரசாண்டான் என்று கருதலாம். இதில் இவனுடைய இளவரசுக் காலமும் சேர்ந்தது.

செங்குட்டுவனுடைய தந்தையான நெடுஞ்சேரலாதன் ஐம்பத்தெட்டு ஆண்டு அரசாண்டான், ஆகையால் அவன் ஏறத்தாழ கி. பி. 72 முதல் 130 வரையில் அரசாண்டிருக்கலாம். நெடுஞ்சேரலாதனுக்குப் பெண் கொடுத்த மாமனாகிய வேள் ஆவிக்கோ பதுமன் அவனைவிட மூத்தவனானபடியால் அவன் ஏறத்தாழ கி. பி. 20 முதல் 80 வரையிலும் வாழ்ந்தவனாதல் வேண்டும் என்று கருதலாம். ஆகவே வேள் ஆவிக்கோ பதுமன் கி. பி. முதல் நூற்றாண்டிலும், அவனுடைய மருமகனான நெடுஞ்சேரலாதன் கி. பி. முதல் நூற்றாண்டின் பிற்பகுதியிலிருந்து இரண்டாம் நூற்றாண்டின் முற்பாதி வரையிலும், அவன் மகனான சேரன் செங்குட்டுவன் கி. பி. இரண்டாம் நூற்றாண்டிலும் வாழ்ந்தவர்கள் எனக் கருதலாம்.

வையாவிக்கோ மன்னர்களைப் பற்றி இவ்வளவுதான் சங்க நூல்களிலிருந்து தெரிகின்றன. அவர்கள், சங்க காலத்தில் கொங்கு நாட்டின் தென் பகுதியைச் சேர்ந்திருந்த வையாவி நாட்டை அரசாண்டார்கள் என்றும் சேர அரசரோடும் கொங்குச் சேரரோடும் உறவு கொண்டிருந்தனர் என்றும் தெரிகின்றனர். சங்க காலத்துக்குப் பிறகு வையாவி நாடும் பொதினி நகரமும் பாண்டியர் ஆட்சிக்குட்பட்டுப் பாண்டிய நாட்டோடு இணைந்துவிட்டன. கடைச் சங்க காலத்தில் பொதினி என்று பெயர் பெற்றிருந்த நகரம் இப்போது பழனி என்று புகழ் பெற்று விளங்குகிறது. இந்த வரலாறுகளைச் சங்க நூல்களிலிருந்து அறிகிறோம்.



# பழனி ஆண்டவர் அம்மானை







திரு. ரா. முருகேச கவிராயர்

1. பூவலயம் போற்றிப்புகழ் பழனிச் சண்முகனார்
கோவணமும் கையிலொரு கோல்கொண்டா ரம்மானை
கோவணமும் கைக்கோலும் கொண்டுள்ளா ராமானல்
பாவலர் தாம்பாடப் பரிசுண்டோ வம்மானை
பாடினுல் காவலுக்குப் பஞ்சமில்லை அம்மானை

2. சங்கரற்கும் ஞானந்தரும் பழனிச் சண்முகனார்
மங்கை யிருவர்க்கு மணவாள ரம்மானை
மங்கை யிருவர்க்கு மணவாள ராமாயின்
பொங்குவதும் அங்கே பொருந்துமோ அம்மானை
பொருந்தா விடமெல்லாம் பொங்கல்தான் அம்மானை

3. சீலங் கமழும் திருப்பழனிச் சண்முகனார்
பால்மணக்கும் செவ்வாய்ப் பசுங்குழவி அம்மானை
பால்மணக்கும் செவ்வாய்ப் பசுங்குழவி யாமாகில்
வேல்வீர னென்பதற்கு வெற்றிஎன்ன அம்மானை
வெற்றியெல்லாம் மாவுருவை வீட்டியதே அம்மானை

4. ஓம்வடிவக் கொண்ட லுயர்பழனிச் சண்முகனார்
தாமரையா ளுக்குத்தனி மருக னம்மானை
தாமரையா ளுக்குத்தனி மருக னுமாகில்
சோமனொரு காவித் துணியன்றோ அம்மானை
துணிவில்லையால் விதியை நொந்துசொல்வாரோ அம்மானை

5. கோபுரமே தங்கமயம் கொண்டான் பழனிமலை
மேவிநிற்கும் வேலன்மிகச் சமர்த்தன் அம்மானை
மேவிநிற்கும் வேலன்மிகச் சமர்த்தன் என்னிலவன்
மாய ரசவாத வல்லனே அம்மானை
வாய்ப்பேச்சில் மாதங்கம் வரவழைப்பா னம்மானை

# அருள்மிகு சுவாமிநாத சுவாமி திருக்கோயில்

**சுவாமி மலை - தஞ்சை மாவட்டம்**

Phone No.
Swamimalai P. C. O. Ext. 1

திருமுருகன் கோயில்கொண்டு வீற்றிருந்தருளும் படை வீடு ஆறினுள் சீரும் சிறப்பும் வாய்ந்த, தந்தைக்கே உபதேசம் செய்த ஞான தேசிகனுக அமர்ந்து அருள்பாலித்து வருவதும், நான்காம் படைவீடாக சிறப்புற்று விளங்கி வருவதுமான இத்தலத்தைக் கண்டார் மெய் சிலிர்ப்பர், நினைத்தார் முக்தி பெறுவர். அப்பேறு பெற்ற இத்திருத்தல முருகனைத் திரு நக்கீரரும், திரு அருணகிரிநாதரும் பாடிப் பேறு பெற்றுள்ளார்கள். பிறவிக் குருடனுக்கு கண்ணொளி வழங்கியமையால் நேத்திர விநாயகர் என்ற திருநாமம் பூண்டு விளங்கிவரும் விநாயகப் பெருமானை முதன்மையாகக் கொண்டு அமைக்கப் பட்ட கட்டுமலையாம் இத்திருக்கோயில்.

இவ்வாலயத்தில் கார்த்திகைத் திங்களில் வரும் ''திருக்கார்த்திகை'' தினம் பல லட்சக் கணக்கில் பக்தர்கள் கூடி இறைவனுக்கு காணிக்கை செலுத்துவதும், பங்குனித் திங்களில் நடைபெறும் திரு வள்ளிநாயகியார் திருக்கல்யாண விழா சரித்திரபூர்வமாக நடப்பதைக் கண்டு மகிழும் பக்தர்கள் பலகோடி.

அச்சிறப்பு வாய்ந்த இத்திருத்தலத்தில் சென்ற 7—6—1973ந் தேதி முதல் ''கோடி அர்ச்சனை'' ஆரம்பிக்கப்பெற்று சிறப்புற நடந்து வருகிறது. கட்டணம் ரூ. 15/-. ஜென்ம நட்சத்திரத்தில் 7 மாதங்கள் அர்ச்சனை செய்ய ரூ. 100/-. அர்ச்சனை பிரசாதத்துடன் திரு சுவாமிநாத சுவாமி திருவுருவம் பொறிக்கப்பட்ட வெள்ளிக்காசு ஒன்று வழங்கப்படுகின்றது.

இவ்வாலயத்தில் தங்கி முருகப் பெருமானை வழிபடுவோர்க்குத் தங்கும் விடுதிகள் உள்ளன.

''வண்டுகுடி கொண்டகுழல் கெண்டைவிழி கண்டுமொழி வள்ளி மணவாளனும், வண்ணமயில் வாகனனும் பொன் எரகப்பதிவாள் திரு சுவாமிநாதப் பெருமானை'' வந்து தரிசித்து தெவிட்டாப் பேரின்பத்தில் திளைத்திட வேண்டுகிறோம்.

டி. எஸ். சுவாமிநாத உடையார்
அறங்காவலர் குழுத் தலைவர்

எஸ். மகாலிங்கம், பி. எஸ்ஸி.
செயல் அலுவலர்

ஆர். எஸ். முத்து
எஸ். கோவிந்தசாமி பிள்ளை
என். சுவாமிநாதன்
அறங்காவலர்கள்



தண்டபாணி நிலயம் - முதல்வகுப்பு அறைகள்



தண்டபாணி நிலயம் - இரண்டாம்வகுப்பு அறைகள்



# "அறுசமயம்"







திரு. மு. ஸ்ரீநிவாஸன்

### சமயம்

ஆங்கிலத்தில் 'Religion' என்றும் வடமொழியில் 'மதம்' என்றும் கூறப்படும் நெறியே 'சமயம்' எனப்படும். மனிதன் தன் பலவிதமான தேவைகளை அடையும் பொருட்டுத் தன் அறிவு, ஆற்றல் இவைகளின் துணைக்கொண்டு பல முயற்சிகளை மேற்கொள்கிறான். அம்முயற்சிகளில் ஈடுபடும்போது தான் எவ்வளவு புத்திசாலியாக இருந்தபோதிலும் தன் அறிவாலும் ஆற்றலினாலும் மட்டும் தான் வெற்றியடைய முடியாதென்றும் தன் அறிவுக்கும், ஆற்றலுக்கும் மிஞ்சிய சிறந்த அறிவும் அதிக ஆற்றலுமுள்ள ஒரு உயர்ந்த சக்தி நிச்சயமாக உளது என்றும் முடிவுக்கு வருகிறான். அந்தச் சக்தியை முழுவதும் நம்புவதோடு அந்தச் சக்தியே எல்லாவற்றிற்கும் முதற் காரணமாக இருக்கும் 'கடவுள்' எனவும் அக்கடவுளை வழிபடுவது தன் கடமையெனவும் கொள்கிறான். அப் பரம்பொருளை நன்கு உணரவேண்டுமென்றும் அப்பொருளுக்கும் தனக்குமுள்ள தொடர்பு எத்தகையதென்றும் அறிய முயல்கிறான். இந்த ஆன்ம உணர்வுக்கு அறமும் அன்பும் இன்றியமையாத வழிகள் எனத் தெளிகிறான். இவ்வுணர்வு வெவ்வேறு தேசத்தவருக்கும் வெவ்வேறு காலத்தவருக்கும் அவரவர்களுடைய நம்பிக்கை, பழக்க வழக்கங்கள், மனோநிலைகள், அனுபவங்கள் இவைகளைப் பொறுத்து வெவ்வேறு விதமாய் அமைகிறது. இதனால் அவரவர்களுக்கு ஏற்பட்ட நம்பிக்கையின் வழியில் வகுக்கப்பெற்ற நெறியே 'சமயம்' எனப்பெற்றது.

பொதுவாகச் சமயம் என்பது கடவுளுண்டு என்ற நம்பிக்கையை ஏற்படுத்துவதே. அடிப்படையில் அநேகமாக எல்லாச் சமயங்களுமே ஆண்டவனை அறியவேண்டும், அவனை அடையவேண்டும் என்ற ஒரே குறிக்கோளுடன் தான் இருக்கின்றன. இச்சமயத்தினால் தொடர்புபெறும் பொருட்கள் கடவுளும் மனிதனும். அம்மனிதன் கடவுளையடைய வேண்டும் என எண்ணும் ஓர் புனித உணர்வு சமய உணர்ச்சி எனப்படும். இவ்வுணர்வே ஆன்ம அறிவுக் கருவியாகும். அதுவே கடவுள் உண்டு என்பதற்கு உறுதியான சான்றாகும். ஒவ்வொரு சமயத்திலும் இவ்வுணர்வுதான் அடிநிலை (Foundation). உலகில் பல்வேறு சமயங்கள், பல்வேறு வழிபாடுகள், பல்வேறு சடங்குகள் இருப்பதைக் காண்கிறோம். சிலர் இயற்கைப் பொருட்களான நிலம், நீர், காற்று, தீ, வெளி இவைகள்தாம் ஆண்டவன் என அவைகளையும் விண்ணில் தோன்றும் சூரியன், சந்திரன் முதலிய சுடர்களையும்

போற்றி வந்தனர். நாட்கள் செல்லச் செல்ல மனிதன் தான் வணங்கும் தெய்வம் தன்னைப்போலவே உருவ உடலுறுப்புக்களுடன்தான் இருக்க வேண்டுமென எண்ணித் தெய்வங்களுக்கு உருவம் கற்பித்தான். மனிதன் அவைகட்குக் கோயில்கள் கட்டினன். வழிபாடுகள் செய்வதற்கெனப் பல வழிகளையும் சடங்குகளையும் வகுத்தான். பல்வேறு சமயவாதிகளால் உலகில் பல்வேறு சமயங்களும் அவற்றுள் பல்வேறு வழிபாடுகளும் சடங்குகளும் வகுக்கப்பட்டு உள்ளன. அவற்றுள் இந்து சமயம் சகல நம்பிக்கைகளுக்கும், சடங்குகளுக்கும் இடங்கொடுத்துச் சமய உணர்ச்சியை மங்க விடாமல் காத்து வருகின்றது. இந்தச் சடங்குகளையும், பலதெய்வக் கொள்கைகளையும் சிலர் ஏற்காது ஒரு தெய்வக் கொள்கையையும் அதுவும் உருவமே இல்லாத கடவுள் தத்துவத்தையும் கைக்கொண்டுள்ளனர்.

உலகில் சிறிதும் பெரிதுமாகப் பல சமயங்கள் இருந்தபோதிலும் அதிகமாகச் செல்வாக்குப் பெற்று அதிகமான மக்களால் பின்பற்றப்பெறும் சமயங்கள் இந்து, பௌத்தம், கிறிஸ்து, இஸ்லாம் என்ற நான்காகும். பின்மூன்றும் தனித்தனி ஆசிரியர்களால் வெவ்வேறு காலத்தில் தொடங்கப் பெற்றவை. தொடங்கிய காலம் ஆராய்ச்சியாளர்களால் நிர்ணயிக்கப்பட்டது. ஆனல் இந்து சமயமோ எப்போது யாரால் தொடங்கப் பெற்றது என்று தெரிந்துகொள்ள இயலாதவாறு பல்லாயிரம் ஆண்டுகட்கு முன்பிருந்தே வழக்கத்தில் வந்துள்ளது. மனிதன் பகுத்தறிவு பெற்றது முதல் மதமின்றி வாழ்ந்தது கிடையாது. முன்பு சொன்னதுபோல் மதம் அல்லது சமயம் மனிதனுக்கும் கடவுளுக்கும் ஏதோ ஓர் உறவை ஏற்படுத்தி அவன் வாழ்வை அப்பரம்பொருளோடு கட்டுப்படுத்தி ஒரு ஒழுக்க நெறிக்கு அவனை உள்ளாக்குகிறது.

நம் பாரத நாட்டில் பல சமயங்கள் பரவியிருந்தாலும் பெரும்பான்மை மக்கள் மேற்கொள்வது இந்து சமயமேயாகும். நம் இந்து சமயத்திற்கு ஆதாரக் கருத்துக்களும் கொள்கைகளும் வேதங்களிலிருக்கின்றன. வேதங்கள் யாராலும் எழுதப் பெருமல் முன்னேர்களிடமிருந்து வழிவழியாகத் தெரிந்து கொள்ளப்பெற்று வந்ததால் வேதத்திற்கு 'எழுதாக் கிளவி' என்ற பெயரும் அமைந்துளது. வேதத்தை அடிப்படையாகக் கொண்டதால் இந்து சமயம் வைதிக சமயமென்றும், வேதம் ஓதுவோர்களை வைதிகரென்றும் கூறுகிருேம். வேதங்களின் மூலம் நாம் தெரிந்துகொள்ளும் இந்து சமயக் கொள்கைகளைப் பின்வருமாறு சுருக்கமாகச் சொல்லலாம்: பரம்பொருள் (கடவுள்) ஒன்றுண்டு. அதனை உணரப் பிரமாணமாய் இருப்பது வேதம். நாம் செய்யும் வினைகளுக்கேற்பவே பிறப்பு உண்டாகிறது. நாம் நமக்கு வேதத்தில் விதிக்கப்பட்ட கடமைகளைச் செய்து அறம், பொருள், இன்பம், வீடு என்ற நாற்பயன்களையும் பெறவேண்டும். பரம்பொருளையடைய கர்ம மார்க்கம், பக்தி மார்க்கம், ஞான மார்க்கமென மூன்று வழிகளுண்டு. ஒரே பரம்பொருள் படைத்தல், காத்தல், துடைத்தல் என்ற முத்தொழில்களைச் செய்ய மூன்றுமூர்த்திகளாய்ப் பிரிகிறது. இவையேயன்றிப் பக்தர்களைக் காக்கும் பொருட்டு "அவதாரங்கள்" எடுப்பதுமுண்டு. ஒவ்வொருவரும் தமக்குகந்த ஒரு தெய்வத்தினை வழிபடலாம். ஆனல் அந்தந்த மூர்த்தியை வழிபட வேண்டிய முறைப்படியே வழிபட வேண்டும். வேதங்கள் ருக், யஜுர், சாமம், அதர்வணம் என நான்காகும்.

ஆதிசங்கரர் இந்து சமயத்தைப் பின்பற்றுவோரின் மனநிலை, மற்ற வழிகளில் எளிமையாக இருக்கும் பொருட்டு ஆறு பிரிவுகளாகப் பிரித்தருளினர். இதை வடமொழியில் "ஷண்மதஸ்தாபனம்" எனக் கூறுவர். அச்சமயங்களாவன: காணபத்யம், கௌமாரம், சாக்தம், சைவம், வைணவம், சௌரம் என்பன. இச்சமயங்களுக்குரிய கடவுளர் வருமாறு: யானைமுகன், ஆறுமுகன், சக்தி அல்லது அம்பிகை, சிவன், திருமால், கதிரவன் ஆவர். ஸ்ரீ ஆதி சங்கரரின் ஆறு சமயங்களும் ஒரே பரம்பொருளை ஆறு முக்கிய தெய்வங்களாகப் பிரித்து வழிபட உதவுகின்றன. இறைவனுக்குப் பெயர், உருவம், இவைகள் இல்லாவிடினும் பாமர

உள்ளங்களை வசப்படுத்த உருவ வழிபாடு தேவையாகின்றது. நம் மனத்தை ஒரு நிலைப்படுத்த ஒரு குறி அதாவது அடையாளம் அல்லது உருவம் தேவைப்படுகின்றது. மிகுந்த அறிவாளிகளான ஞானிகளுக்கு இது தேவையில்லை. பரம்பொருளை பரப்பிரம்மம் என்றும், அப்பிரம்மம், சகுணப்பிரம்மம் (உருவத்தோடு கூடிய பரம்பொருள்) என்றும் நிர்க்குணப்பிரம்மம் என்றும் (உருவமேயில்லாத எங்கும் நிறைந்தவர்) என்றும் இரண்டு வகையாகக் கூறுவது.

## 1. காணுபத்யம்

காணுபத்ய சமயத்தினரின் வழிபடு கடவுளாகிய யானைமுகனுக்கு 'கணபதி' என்றும் 'விநாயகர்' என்றும் 'விக்னேச்வரர்' என்றும் பல்வேறு பெயர்களுண்டு. விநாயகர் என்ருல் தனக்கு மேல் ஓர் தலைவனில்லாதவர், அதாவது தானே தலைவனுக இருப்பவர் என்று பொருள். கணபதி என்பதற்குச் சிவகணங்களுக்குத் தலைவராக இருப்பவர் என்று பொருள். விக்னேச்வரர் என்பதற்கு இடர்களைக் களைபவர் என்று பொருள். கணபதியை முழுமுதற்கடவுளான சிவபெருமானின் மகனெனப் போற்றப்பெறும் காரணத்தால் 'பிள்ளையார்' என்றும் கூறுவர். வேதத்தின் முதலெழுத்தான ஓம் என்னும் பிரணவ எழுத்தைப்போல் கணபதியின் உருவம் அமைந்திருப்பதால் அவருக்குப் 'பிரணவ மூர்த்தி' என்னும் பெயரும் விளங்குகிறது. அவருக்கு நான்கு கைகளும், கையைப் போன்றே உளதாய துதிக்கையும் இருப்பதால் ஐங்கரன் என்ற பெயரும் உண்டு. (ஐங்கரன் = ஐந்து கைகளை உடையவன்) பிள்ளையாரை மிகுந்த அறிவுக்கூர்மை உடையவர் என்று கூறுவர். அதை மெய்ப்பிக்க ஒரு புராணக் கதையுமுண்டு. பரமசிவனுக்கு நாரதரளித்த ஒரு கனியை உலகை முதலில் சுற்றி வருபவருக்கே தருவதாகச் சிவபெருமான் சொன்னதாகவும் உடனே முருகப்பெருமான் தனது வாகனமாகிய மயிலின் மேலேறி உலகை வலம் வரச் சென்று விட்டதாகவும் கணபதி எல்லா உலகங்களுக்கும் ஆதாரமான சிவன் சக்தி இரண்டுமான தம் பெற்ரோர்களை வலம் வந்து தன் அறிவுத்திறனுல் அக்கனியைப் பெற்றதாகவும் புராணம் சொல்லிச் செல்லும். இப்படிப் பலவிதமான வல்லமையுடையவரான விநாயகப் பெருமானை வணங்கி வந்தால் நாமும் அறிவு, வல்லமை, மனஉறுதி இவைகளைப் பெறுவதோடு நாம் நினைத்த செயல்களும் இடையூறின்றி நிறைவுறுமென இந்து சமயத்தினர் எந்த நற்காரியத்தைத் தொடங்கும் போதும் முதலில் விநாயகர் வழிபாடு செய்தே தொடங்குவர். வைணவர்களும் கணபதியைத் "தும்பிக்கையாழ்வார்" என்ற பெயர் சூட்டி அவர் நெற்றியில் திருமண் இட்டு வணங்குவர். நாமும் கணபதியை வணங்கிக் கருதியது முடிப்போமாக.

## 2. கௌமாரம்

கௌமார சமயத்தினருக்கு வழிபடு கடவுள் குமாரனென்றும், குமரனென்றும் கூறப்படும் முருகப் பெருமானுகும். இவரும் சிவபெருமானின் மகனென்றே கூறுவர். கணபதிக்குச் சிவபெருமானின் மகனென்ற காரணத்தால் பிள்ளையார் எனும் பெயர் வாய்த்தது போன்றே குமரக்கடவுளுக்கும் குமாரன் என்ற பெயர் ஏற்படலாயிற்று குமாரக் கடவுளுக்கு 'முருகன்' என்ற அருமையான தமிழ்ப்பெயருமுண்டு. முருகு என்ருல் 'இளமை' 'அழகு' எனப் பொருள் படும். அதாவது முருகன் என்றும் இளமையோடும் அழகோடும் இருப்பவனென்று பொருள். அசுரர்களை ஒழிப்பதற்காகச் சிவபெருமானின் நெற்றிக் கண்களிலிருந்து உண்டான ஆறு பொறிகளினின்றும் சரவணப் பொய்கையில் முருகன் உதித்தது யாவரும் அறிந்த ஒன்றே. அம்முருகனே முன்னுல் விநாயகரைப் பற்றிய புராணக் கதையில் கூறியிருப்பது போல் சிவபெருமானுக்கு நாரதர் கொடுத்த கனியைத் தான் அடைய முடியாது போகவே கோபித்துக்கொண்டு திருவாவினன் குடிக்கு வந்து பழனி மலை மீது ஏறி அங்கிருப்பதாகப் புராணம் கூறும். மிகச் சிறு பிராயத்திலுள்ள குழந்தைகளிடம் யார் சென்று கேட்டாலும் அதனிடமுள்ள பொருளைத் தயங்காது கொடுத்து விடுமாப் போல் என்றும் இளமை

யோடுள்ள முருகப்பெருமானும் தன்னிடம் வரும் பக்தர்களுக்கு எதைக் கேட்டாலும் அருளுகின்றார் என்பது பலர் அனுபவத்தில் கண்ட உண்மை. அப்பேர்ப்பட்ட குமரக்கடவுள் கோயில் கொண்டுள்ள பழனி மக்களின் பேற்றை என்னென்றியம்புவது? சக்தியின் மூன்று பிரிவுகளான இச்சா சக்தி, கிரியா சக்தி, ஞான சக்தி என்பவையே முருகனிடம் வள்ளி, தெய்வானை, (ஞான) வேல் இவைகளாக இருக்கின்றன. வேதத்தில் முருகக் கடவுளுக்கு மையமான இடம் தரப்பெற்றிருப்பதால் முருகக்கடவுள் சிவபெருமானுக்குச் சமமானவரென்று பெரியோர் கூறுவர். தொல்லைகளும் கவலைகளும் நிறைந்துள்ள இக்கலியுகத்தில் கந்தனே கண்கண்ட தெய்வம் என்று போற்றப் பெறுகின்றார். "சுக்குக்கு மிஞ்சிய மருந்தில்லை, சுப்பிரமணியனுக்கு மிஞ்சிய தெய்வமில்லை" என்பது அனுபவசாலிகளின் கூற்று. இம் முருகனின் வாகனமான மயில் பக்ஷிகளிலே மிகுந்த உயர்வான இடத்தைப் பெறுகின்றது. காரணம் மற்ற பக்ஷிகளைப் போல் ஆண், பெண் பக்ஷிகளின் உடலுறவால் மயில் உண்டாவதில்லை. ஆண் மயிலின் பார்வையினலேயே பெண்மயில் கருவுறுகின்றது. முருகப் பெருமான் கையிலுள்ள ஞானசக்தியாகிய வேலானது அனைத்துலகுக்கும் அன்னையாம் பராசக்தியால் தன் அம்சத்தையும் சேர்த்து அருளப் பெற்றமையால் வேலைப் பராசக்தியாகவே நினைத்து வழிபடல் வேண்டும். முருகனின் கையிலுள்ள வேலும் வாகனமாகிய மயிலும் முருகனைப் போன்றே பக்தர்களுக்கு வரும் இடர்களைப் போக்க உதவும் காரணத்தால் "வேலுண்டு வினையில்லை, மயிலுண்டு பயமில்லை, குகனுண்டு குறைவில்லை" என்று ஆன்றோர் அறைகின்றனர். முருகனின் புகழைப் புராணக் கதைகளாலும் அருணகிரியார், வள்ளலார் போன்ற பக்தர்களின் எண்ணற்ற பனுவல்களிலிருந்தும் தெரிந்து கொள்ளலாமாதலின் இங்கு அவைகளை விவரித்துக் கொண்டு சொல்லாமல்,

"இசை பயில் சடாக்ஷர மதாலே
இகபர சௌபாக்ய மருள் வாயே"

என எல்லோருக்குமாக வேண்டிக் கொண்டு மேலே செல்வேன்.

### 3. சாக்தம்

சாக்த சமயத்தினரின் வழிபடு கடவுளான சக்தி வழிபாட்டைச் சாத்திரங்கள் விரிவாகக் கூறுகின்றன. இந்தச் சக்தியும் சிவனும் உலகத்தின் தாய் தந்தையர் எனப் போற்றப் பெறுகின்றனர். சக்தியெனும் பெயருக்கு ஆற்றல் என்பது பொருள். இந்தச் சக்தி சிவனோடு சேர்ந்து தான் உலகத்தில் இயக்கமுண்டாகிறது. சக்தியில்லாவிடில் சிவன் ஒன்றும் செய்ய இயலாது என்று ஆன்றோர் கூறுவர். இந்தச் சக்தி கருணை நிறைந்தவர். இந்தச் சக்தியைத் துர்க்கை, லக்ஷ்மி, சரஸ்வதி என்ற மூன்று ரூபங்களிலும் வழிபடுகிறோம். நிறைந்த அறிவு பெறுவதற்குக் கலைமகளையும், குறையாத செல்வம் பெறுதற்கு அலைமகளான இலக்குமியையும், சிறந்த வல்லமை பெறுதற்கு மலைமகளையும் வழிபட வேண்டும். இந்தச்சக்தி சிவனோடு ஒன்றிச் சிவனின் ஒரு பாதியாகவே இருப்பதனல் சிவபெருமானுக்கு உமையொரு பாகன் (அர்த்தநாரீஸ்வரன்) என்ற பெயர் வந்தது. இந்தச் சக்தி பத்தர்களைக் காக்கும் பொருட்டுப் பல பெயர்களில் பல ரூபங்களை எடுத்துப் பக்தர்களுக்கு அருள்பாலித்திருக்கிறாள். அவைகளைத் தேவிமகாத்மியம் என்னும் நூல் விரிவாகக் கூறும். ஆதாரம் சக்தியென்றே அருமறைகள் கூறும் என்று பாரதியார் பாடியிருக்கின்றார். சக்தியின் அருளைப் பெறவே நவராத்திரி என்ற ஒன்பது இரவுகளில் சக்தியை மூன்று உருவங்களில் (துர்க்கை, இலக்குமி, சரஸ்வதி) வழிபடுகின்றோம். இந்தச் சக்தியை வணங்கி வரம் பெறுவோமாக.

### 4. சைவம்

சைவ சமயவாதிகளின் வழிபடுகடவுள் சிவபெருமானவார். அவரே தென்முகப் பரமாசாரியனுகவும் நடராஜ மூர்த்தியாகவுமிருப்பவர். சிவபெருமானை வேதம் விரிவாகப் புகழ்ந்து போற்றுகின்றது. சிவனுக்கும் மேலான தெய்வம் இல்லையென்பது சைவர்களின் முடிந்த முடிபு. சிவன் துடைக்கும் கடவுள் என்று சொல்லப் பெற்றாலும் படைத்தல், காத்தல், துடைத்தல், மறைத்தல், அருளல் எனும்

ஐந்தொழில்களையும் அவரே செய்கின்றாரென்பதும் சிவபெருமானின் நடராஜத் திருக்கோலம் மேற்சொன்ன ஐந்தொழில்களையும் காட்டுவதாகவும் சைவ நன்மக்கள் உறுதியாகக் கூறுவர். அது மட்டுமல்ல, அம்பலவாணன் தொடர்ந்து நடனம் செய்து வருவதனாலேயே இந்த உலகத்திலுள்ள உயிரினங்கள் இயங்குகின்றனவென்பது நம் நாட்டு அறிஞர்கள் மட்டுமல்லாமல் மேனாட்டு அறிஞர்களின் கூற்றுமாகும். சிவ பரம்பொருளும், அவரது இடதுபாகத்தை நீங்காது அணி செய்யும் சக்தியும் சேர்ந்தே உலகத்தின் எல்லா இயக்கங்களுக்கும் காரணமாயிருக்கின்றனவென்பது நம் முன்னோர்களின் முடிந்த முடிபு. இவ்வுலகத்திலுள்ள மக்களுக்குப் பசுக்களென்றும் அவர்களைக் காப்பதினால் சிவபெருமானுக்குப் பசுபதி என்றும் எல்லா உயிர்களும் அவனிடமிருந்தே தோன்றுகின்றனவென்றும் உயிர்கள் மறுபடியும் அவனை அடைவதே வீடுபேறென்றும் அவ்வாறடையமுடியாமல் பதிக்கும் பசுக்களுக்குமிடையே தடங்கலாக இருப்பதே பாசமென்றும், பதி, பசு, பாசம் இம் மூன்றும் அனாதியென்றும் பாசமாகிய ஆணவமலம், கன்மமலம், மாயாமலம் இம் மூன்று தடைகளையும் நீக்கினால் பசுக்கள் பதியை அடையலாமென்றும் இதையே சிவபெருமான் தென் முகப்பரமாசாரியனாக (குருவாக) இருந்து காட்டுகின்றாரென்றும் சைவப் பெருமக்கள் கூறுவர். இறைவனுக்கு உருவமோ, பெயரோ இல்லையென்றாலும் நம் மனத்தை ஒருநிலைப் படுத்த வேண்டி அடையாளமாக ஓர் உருவத்தையும், இறைவனின் எல்லையற்ற கருணைச் செயல்களின் காரணமாகப் பல பெயர்களையும் நாம் கொடுத்து வழிபடுகின்றோம். இதைத்தான் மணிவாசகப் பெருமான் தன் திருவாசகத்தில் திருத்தெள்ளேணம் என்ற பகுதியில் "ஒரு நாமம், ஓருருவம் ஒன்றுமில்லார்க்கு ஆயிரம் திருநாமம் பாடி நாம் தெள்ளேணம் கொட்டாமோ'' என்று பாடியுள்ளார். சிவபெருமான் அன்பே உருவானவர். உயிர்களிடத்து எல்லையற்ற கருணையுடையவர். இது பற்றியே திருமூலர் தன் திருமந்திரத்தில் "அன்பும் சிவமும் இரண்டென்பார் அறிவிலார். அன்பே சிவமாவது யாருமறிந்திலார். அன்பே சிவமாவது யாருமறிந்தபின் அன்பே சிவமாய் அமர்ந்திருப்பாரே'' என்று கூறியுள்ளார். தேவர்களும் அசுரர்களும் பாற்கடலைக் கடைந்தபோது உண்டான ஆலகால விடத்தைக்கண்டு பிரமன், திருமால் முதலாய எல்லாத் தேவர்களும் அஞ்சியோட சிவபெருமான் மட்டுமே ஓடாது தன் எல்லையற்ற கருணை காரணமாக அவ் விடத்தை உண்டு எல்லோரையும் காத்தருளினார் என்பதொன்றே அவருக்கு உயிர்கள்மேல் உள்ள கருணையைப் புலப்படுத்தப் போதுமான சான்றாகும். சிவனின் அளவற்ற கருணையையும் அக்கருணையினால் அவர் தேவர்களையும் மற்றவுயிர்களையும் காத்தருளிய கணக்கற்ற நிகழ்ச்சிகளையும் அவரது முழுமுதற்றன்மையையும் சைவத் திருமுறைகளில் முதல் எட்டுத் திருமுறைகளாகியதேவார-திருவாசகப்பனுவல்களில் விரிவாகக் காணலாம்: விரிக்கிற் பெருகும். எனவே "தென்னாடுடைய சிவனே போற்றி, எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி'' என்று கூறி முடிக்கின்றேன். நமச்சிவாய வாழ்க, நாதன்றாள் வாழ்க.

### 5. வைணவம்

விஷ்ணு என்று கூறப்படும் திருமாலை வழிபடு கடவுளாகக் கொண்டோரின் சமயம் வைணவமெனப்படும். சைவத்தைப் போன்றே வைணவமும் நம் நாட்டில் வழங்கி வரும் ஆறு சமயங்களில் சிறப்புடன் விளங்குமொன்றாகும். சிவனைப் போன்றே திருமாலும் வேதத்தில் போற்றப் பெறுகின்றார். அவரும் சிவனைப்போன்றே உயிர்களிடத்தில் கருணை உள்ளவர். அவரைக் காக்கும் கடவுளென்பர். செல்வத்திற்குத் தலைவியான கலைமகள், திருமாலின் மனைவியென்றும் அவளைத் திருமால் தன் மார்பிலே நீங்காது வைத்திருக்கின்றாரென்றும் இதனால் திருமாலுக்கு லக்ஷிமிகாந்தன், லக்ஷிமிநாராயணன், லக்ஷிமிபதி என்ற பெயர்கள் வந்தனவென்றும் கூறுவர். திருமாலின் உந்திக்கமலத்தில் பிரமன் தோன்றியதால் திருமாலைப் பிரமனின் தந்தையெனக் கூறுவர். சிவபெருமானிடம் பெற்ற வரத்தினால் தீயவர்கள் நல்லவர்களை வருத்திய போது திருமால் பல அவதாரங்கள்செய்து தீயவர்களை அழித்து நல்லவர்களைக் காப்பாற்றிய புராண வரலாறுகள்

பல. திருமாலுக்கும் அவரது கருணைச் செயல்கள், திறமைகள் காரணமாகப் பல பெயர்களுண்டு. அவற்றுள்ளிருந்து தொகுக்கப் பெற்ற ஆயிரம் பெயர்களே விஷ்ணுஸஹஸ்ரநாமம் எனப்படும். திருமாவின் பல அவதாரங்களையும் கருணைச் செயல்களையும் அவரது கல்யாண குணங்களில் ஆழ்ந்து பாடிய ஆழ்வார்களின் பனுவல்களடங்கிய நாலாயிர திவ்வியப் பிரபந்தத்திற் காணலாம். இங்கு விரிக்க இடமில்லையென்பதால் 'திருமாலுக்கடிமை செய்' எனக் கூறி முடிக்கின்றேன்.

6. சௌரம்

சூரியனை வழிபடு தெய்வமாகப் போற்றுவோரின் சமயம் சௌரம். சூரியன் சிவபெருமானின் முக்கண்களில் ஒன்றெனக் கூறுவர். நவநாயகர்களுள் சூரியனே முதல்வர். வாரத்தின் ஏழு நாட்களுள் சூரியனின் நாளான ஞாயிறே முதல் நாளாகும். சூரியன் பகலை உண்டாக்குவதனால் அவருக்குப் பகலவன் என்ற பெயருமுண்டு. எல்லா உயிரினங்களும் தூக்கத்தினின்றும் விழித்துப் பகல் முழுவதும் மகிழ்ச்சியோடு கழிக்கக் காரணமாயிருப்பது சூரியனே. சூரியன் தோன்றாவிடில் சூரிய உஷ்ணத்தினால் கடலிலும் மற்றும் பல நீர்த்தேக்கங்களிலும் உள்ள நீர் ஆவியாக மாறி மேகமாக மேலே சென்று மழை பெய்யாததலின் தாவரங்களோ, உயிரினங்களோ வாழாது அழிந்து படும். சூரிய உஷ்ணமில்லையேல் உயிரினங்கள், தாவரங்கள் எவையுமே வளர்ச்சியுறா. சூரியனை வேதமும் புகழ்கின்றது. சூரியன் மிகுந்த கல்விமான். அனுமான் சூரியனிடம் கல்வி கற்றதாக அறிகிறோம். சூரியன் கடமையில் தவறாதவன். உயிர்களைக் காக்கும் பொருட்டுக் குறித்த நேரத்தில் தோன்றிக் குறித்த ரேத்தில் மறைகிறான். கடமையில் தவறாத நன்மக்களைச் சூரியனுக்கு ஒப்பாகக் கூறுவதைத் தமிழிலக்கியங்களிற் காணலாம். சூரியன் இருளை அகற்றுவதனால் அஞ்ஞானமாகிய இருளை அகற்றும் மெய்ஞ்ஞானத்தை ஆன்றோர் ஆதவனுக்கொப்பாகக் கூறுவர். சூரியனுக்கு, ரவி, பானு, ஆதித்தியன், பாஸ்கரன், மார்த்தாண்டன், சூரிய நாராயணன் முதலிய பல பெயர்களுண்டு. காலை நேரத் தேவதையாகிய உஷாதேவியும், மாலை நேரத் தேவதையாகிய சாயாதேவியும் சூரியனது மனைவிமார் என்று கூறுவர். சூரியனைப் போற்றிப் பல பெரியோர்களால் பல வடமொழித் தோத்திரங்கள் இயற்றப் பெற்றுள்ளன. அவற்றுள், ஆதித்ய ஹ்ருதயம் என்பதொன்று. இராம இராவண யுத்தக் காலத்தில் அகத்தியரால் இராமபிரானுக்கு ஆதித்ய ஹ்ருதயம் உபதேசிக்கப் பெற்றதாகவும் அதைக் கூறிச் சூரியனைப் போற்றி வணங்கிய பின்னரே இராமபிரான் இராவணனை வென்றதாகவும் இராமாயணம் கூறும். நாமும் ஆதவனைப் போற்றி அறச் செயல்களில் வெற்றிபெறுவோமாக.

முடிவுரை

மேற்கூறிய இந்து சமயத்தின் ஆறு பிரிவுகளும் ஒரே ஊருக்குச் செல்ல பல வழிகள் இருப்பது போன்றே இறைவனை அடைவதற்குரிய பல வழிகளாகும். மற்ற சமயங்களும் அவ்வாறே. எல்லாச் சமயங்களின் அடிப்படையான குறிக்கோள் ஒன்றேயாதலின் சமயவாதிகள் இதையுணர்ந்து சச்சரவின்றி வாழ்வதே தமக்கும் நல்லது. நாட்டு நலனுக்கும் நல்லது. இதையே பிரம்மஞான சங்கம் வலியுறுத்தும். சமயத் தலைவர்களும் தம்மைப் பின்பற்றுவோர்க்கு இதையுணர்த்தி ஒற்றுமையமைதியைப் பேணுவது தலையாய கடனாகும்.

மேலும் "அன்பே கடவுள்'' என ஆன்றோர்கள் கூறியிருப்பதால் கடவுளுக்கு நாம் செய்யும் வழிபாடு அவரால் படைக்கப் பெற்ற உயிர்கட்குத் தொண்டு செய்தலேயாம். மக்கள் தொண்டே மகேசன் தொண்டு என மனவுறுதிகொள்ள வேண்டும். இது குறித்தே வள்ளற் பெருமான் "அப்பா நான் வேண்டுதல் கேட்டு அருள் புரிதல் வேண்டும், ஆருயிர்கட்கெல்லாம் நான் அன்பு செயல் வேண்டும்'' எனப் பாடியுள்ளார். நம்மைச் சுற்றிலும் துன்பமுறும் உயிரினங்கட்குத் துன்பம் துடைக்க உதவாது வெறும் கடவுள் வழிபாடு மட்டும் செய்வதால் கடவுள் நம்மீது கருணை காட்டமாட்டார். அவரையே மறந்துகூட மக்களுக்குத் தொண்டு செய்தால் அதைத் தனக்குச் செய்த வழிபாடு எனக் கொண்டு அருள் பாலிப்பார். 'அபூபன் ஆதம்' கதை நமக்குத் தெரிந்த தொன்றே.

அன்பு செய்து அவனடி சேர்வோமாக!

# கற்போம், கனிவு பெறுவோம்!!



படிக்கின்றிலை "பழநி"த் திருநாமம், படிப்பவர்தாள்
முடிக்கின்றிலை, "முருகா" என்கிலை முசியாமலிட்டு
மிடிக்கின்றிலை, பரமானந்தம் மேற்கொள விம்மிவிம்மி
நடிக்கின்றிலை, நெஞ்சமே! தஞ்சம்ஏது? நமக்கு இனியே.



திரு. என். எஸ். தாதாசாரியார்

## முன்னுரை

அருளே வடிவாய், பொருளே முடிவாய், உருவே கனியாய், கருவே திருவாய்க் காட்சி அளிப்பவன் நம்மண்ணல் முருகன். "சுக்குக்கு விஞ்சிய மருந்தில்லை, சுப்பிரமணியனுக்கு மிஞ்சிய தெய்வம் இல்லை" என்பது நம் தமிழின் ஆன்ற பழமொழி. இஞ்சியே சுக்காய்ச் சுருங்கி, நம் உடல் நோயுக்குத் தஞ்சமாக இருப்பதுபோல், ஐமுகத்தானாகிய ஈசனது சக்தியே உடலால் சுருங்கி, உகப்பால் நெருங்கி சேயோன் முருகனாகியது. இவன் கலியுகக் கண்கண்ட கடவுள். நலிந்தார் துன்பம் துடைக்கும் தண்டபாணி. அப்பனுக்கு ஆசான்; அம்மைக்குப் பழம்; நமக்கு நண்பன்; தமக்குத் தானேயாய் விளங்குபவன். இவனே தமிழ்; இவனே தமிழ் தந்த தெய்வம்; இவனே தமிழின் சுவை. இவனே முத்தமிழ்ப் புரவலன். "சங்கத் தமிழின் தலைமைப் புதல்வா'' என்றும் "தோலாத முத்தமிழ் நாவா" என்றும் குமர குருபரர் அழைக்கும்பொழுது அழகும், இளமையும், மணமும், அருளும் கொண்ட வடிவாய் ஆண்டவனாய் நம் முன் நின்று, இளமுறுவல் காட்டுவான். "இவனை வழுத்தா நாவெல்லாம் பழுதானதே!'' என்பர். முத்தமிழால் வைதாரையும் வாழவைக்கும் அருட்பெருமான் திருவடி அன்றோ நமக்கு மாறாத இன்பம் அளிக்கும், இவனை வழுத்திப் பதம் பெற்றவர் எண்ணிலடங்கார். ஏட்டில் விடாப்படார். இவன் குறிஞ்சிக் கடவுள் என்பதை எடுத்துக் காட்டிய தொல்காப்பியம் உலகத் தோற்றத்தில் முதலிடங்கொண்ட மலையில் வீற்றிருக்கும் சிவனே முழுமுதல் தெய்வம் என்பதைக் குறிப்பிட்டுக் காட்டியது. "நம் வினை என்னும் எழுதுகோலை எடுத்து நம் தலையில் சிலையிலங்கு எழுத்துப்போல் பிரமனால் எழுதப்பட்ட நம் தலை எழுத்தை மாற்ற மற்றுமோர் தெய்வம் உண்டோ'' என்ற வினாவிற்கு, அருணகிரிநாதர், அலங்காரத்தில் உண்டு. ஒன்றே உண்டு. அது தான் நம் பழனி ஆண்டவனாகிய திருவடிக் கட்டை விரல்'' என்றார். பிரமன் கை எழுத்தை மாற்றவல்லது முருகன் செந்தளிர்த்திருவடி. அதுவே அழியா எழுத்தை அழிக்கும் ரப்பர். ரப்பர் அழித்துவிட்டு அகலும் அவ்வளவுதான். ஆனால் முருகன் திருவடிக் கட்டைவிரலாகிய "ரப்பர்'' பிரம்மன் எழுத்தை அழிக்கும். திருப்பினால் நல்லெழுத்தையும் எழுதும் என்றும் அருணகிரிநாதர் அருள் மொழிக்கு நயம் கூறுவார்.

"மலை கிழவோன்'', "காஅய் கடவுள் சேய்''. "கடிதூஉண் கடவுள்'' என்றெல்

லாம் சங்கப்புலவர்கள் இவனை வாய்மணக்க அழைத்து உள் மணக்க மகிழ்ந்தார்கள். ஓங்கு பரிபாடல் என்ற சங்க நூலில் வரும் எட்டுப் பாடல்களைப் பாடிப் பதம் பெற்ற நல்லந்துவனர், இளவெயினனர், குன்றம் பூதனர், நப்பண்ணனர், கேசவனர், நல்லச் சுதனர், நல்லழிசியார் என்ற ஏழு புலவர் களும். முருகன் பெருமைக்கு எழு விளக் கானர்கள். அதன்பின் இன்றைக்கு 1800 ஆண்டுகளுக்கு முன் தோன்றிய நக்கீரரோ. முருகனேடு உரையாடி, நிறை கூடி நின்றவர் அவருக்குப்பின் ஏறக்தாழ 1000 ஆண்டு களுக்குப்பின் அருட்செல்வராய் அவதரித்த கச்சியப்ப சிவாசாரியாரோ குமரக் கோட் டத்தில் அமரநின்ற பெருமானை அள்ளிப் பருகி ஆனந்தப் பரவசம் அடைந்தார். அதே வரிசையில் இவருக்குப்பின் தோன்ருத் தோன்ருலாய், குன்ருப் பெருவிளக்காய் முருகனே இவர், இவரே முருகன், என்று பக்தர்கள் பாடிப் பரவநின்ற அருண கிரியோ, பழமாய்ப் பழுத்துக் கனியாய்க் கனிவு காட்டும் கந்தப் பழத்தைக் கொத்திக் கொத்திப் புசித்தார். இவர்களுக்குப் பின் னும் சமகாலத்திலும் வந்த அரும் தோன் றல்களாகிய, மகான் வண்ணச் சரபம் குமர குருபரர்; பாம்பன் சுவாமிகள் போன்ற அரும் அருட்பெரும் செல்வர்கள் நம் ஐயன் பெருமையை நம்பால் பாலெனப் பழகிப் பருக வைத்தனர்.

### அறுபடை வீட்டில்

அறுமுகப் பெருமானுக்குப் பிடித்தவை கள், ஆறு பொருள்களே. அவைகளை இவை இவை என்று பெரியோர்கள் முடிவு கட்டி யுள்ளார்கள். அவ்வரிசையில் (1) முகங்கள் — ஆறு. (2) தோன்றிய இடம் – ஆறு. (கங்கை) (3) உகந்த இடங்கள் – ஆறு. (திருப்பரங் குன்றம், திருச்சீர்அலைவாய் – பழநீ – சுவாமி மலை – குன்றுதோருடல், பழமுதிர் சோலை என்பன) (4) உகந்த நூல்கள் – ஆறு (திரு முருகாற்றுப் படை – திருப்புகழ் – அலங் காரம் – அந்தாதி – அனுபூதி – திருவகுப்பு என்பன)(5) மந்திரங்கள் – ஆறு(சரவணபவ அல்லது குமாராயநம என்பன) (6) மலர்கள் – ஆறு (கடம்பு, குரா, கூதனம், தாமரை, பிச்சி, வெட்சி என்பன) (7) திருவடி அணி கள் – ஆறு (தண்டை – வெண்டையம் – கிண் கிணி–சதங்கை–கழல்–சிலம்பு என்பன) இப் புடையில் ஒன்பது தெய்வ உருவங்களில் வீற்றிருப்பன் என்றும். – வீரபாகு – வீர கேசரி – வீரமகேந்திரன் – வீரமகேசுவரன் – வீரபுரந்தரன் – வீரராக்கதன் – வீரமார்த் தாண்டன் – வீராந்தகன் – வீரதீரன் என்ற ஒன்பது படை வீரர்களுடன் விளங்குகிருன் என்றும் பற்பல முறையில் அவன் நிலைகளைப் பெரியார் சரித்திர நூல்களின் வாயிலாக எடுத்துக் காட்டியுள்ளனர். இவைகளில் இவனது அறுபடை வீடுகளை எடுத்துக் கொண்டால் இவைகள் முருகனது அருளுக் குரிய இடங்கள் என்று தேறிநிற்கும். இவ் வறு படை வீடுகளையும், அவைகளின் சிறப் பையும் நமக்குக் காட்டிக் கொடுத்தவர் நக்கீரர். இவ்வறு படை வீடுகளில் முருகனை அடைந்து அறுமுக மந்திரத்தால் வழி பட்டால், அம் முருகன் அவர்கள் உள்ளத் தில் குடிகொள்வான் என்பதை "ஆறு திருப்பதிகண்டு ஆறெழுத்தும் அன்பினுடன் கூறும் அவர் சிந்தை குடி கொண் டோனே'' என்று கந்தர் கலிவெண்பாவும் கூறிற்று. முருகனின் ஆறு சிறந்தத் தலங்களையும் முருகனது படை = படை வீரர்கள் = விடுதல் = தங்குதல் எனவே படை வீடென அழைப்பார்கள். படைவீடு என்பது அரசு இருக்கை எனவும் பொருள் கொள்ள லாம். முருகனது படை வீடுகள் திருப்பரங் குன்றம்–திருச்சீர் அலைவாய்–திருவாவினன் குடி – திருவேரகம் – குன்றுதோருடல் – பழ முதிர்சோலை என ஆருகும்: இவைகளின் தனிச்சிறப்பையும் அத்தலங்களில் முருகன் நடத்திய திருவிளையாடலையும் காட்டிச் சிறப்பித்துப் பேசிய பெருமை திருமுருகாற் றுப்படையின் ஆசிரியரான நக்கீரர் பெரு மான் அவருக்கே தலைபெற்று நின்றது. முருகன் தெய்வயானையை மணந்தது பரங் குன்றத்தில் – படை கொணர்ந்து தங்கியது திருச்சீரலைவாயில் – சினந்து ஒதுங்கியது பழநியில், தந்தைக்குப் பிரணவப் பொருளை உணர்த்தியது திருவேரகத்தில்–வள்ளியை மணந்தது குன்றுதோருடல் என்று பேசப் படும்–திருத்தணியிலே, மயிலேறி மன்பதை களுக்கு ஆசி கூறி அருளியது பழமுதிர் சோலையிலே என்பது பெருவழக்கு. இந்த

அறுபடை வீடுகளையும் அடையவே நாள் தோறும் நினைந்து வணங்கி வழிபட்டால் நமது எண்ணங்கள் எண்ணியாங்கு நிறைவேறும். அதற்காக அருள் உள்ளம் களி கூறும் கச்சியப்ப சிவாசாரியார் அவர்கள் தமது கந்தபுராண நூலில் அறுபடை வீடுகளைப் பற்றி ஆறு அருட்செய்யுளை அருளியுள்ளார். அவைகளை நாள்தோறும் கற்போம்! கனிவு பெறுவோம். அவை ஆறுகளாவன—

### கச்சியப்பர்

காஞ்சிபுரத்திற் குமரக் கோட்டம் என்றழைக்கப்படும் முருகப் பெருமான் திருக்கோயிலில் சிவாசாரியராக விளங்கி நின்று "கந்தபுராணம்'' என்னும் சிறந்ததோர் நூலை அருளியவர் கச்சியப்ப சிவாசாரியார் அவர்கள். இவர் திருமுருகாற்றுப்படையில் குறித்த முருகப் பெருமானின் ஆறு படை வீடுகளைப் பற்றி தானும் சிறப்பித்துப் பேசினார். தான் கீரன் அருள்வாக்கை, உள்ளம் கனியக் கொள்பவர் என்பதை "பொய்யற்ற கீரன் முதலாம் புலவோர் புகழ்ந்த ஐயற்கு எனது சிறு சொல்லும் ஒப்பாகும்" என்று குறிப்பிட்டார். நூலின் முகப்பில் கடவுள் வாழ்த்துப் பகுதியிலும் முருகனது ஆறு படை வீடுகளைப் வீறுபடப் புகழ்ந்துள்ளார். இவ்வருள் ஆசிரியர் முருகனின் அறுபடை வீடுகளுக்கும் சென்று, ஆங்காங்கு கோயில் கொண்டருளா நிற்கும் ஐயன் முருகப் பெருமானைத் தரிசித்து மகிழ்ந்து அம்மகிழ்ச்சியின் மேலீட்டால் ஒவ்வொரு படை வீட்டையும் பற்றி ஒவ்வொரு பாவில் விளக்கி நமக்குத் தந்துள்ளார். அவ்வாறு தந்த அருள்மொழிப் பாடல்களையும் நாம் நாள் தோறும் ஒருமுறையாவது முருகனை உள்ளம் கனிய நினைந்து படித்தால் எண்ணிய செயல்கள் கந்தவேள் பழநியப்பன் திருவருளால் சட்டென நிறைவேறும் என்பது நடைமுறையில் காண்பது. அந்த ஆறு பாடல்களை மட்டும் ஈண்டு எடுத்துக் காட்டுவோம்.

### திருப்பரங்குன்றம்

இருப்பரங் குறைத்திடும் எஃகவேலுடைப்
பொருப்பரங் குணர்வு றப்புதல்வி தன்மிசை
விருப்பரங் கமரிடை விளங்கக் காட்டிய
திருப்பரங்குன்று அமர்சேயைப் போற்றுவாம்!

பொழிப்புரை: இரும்பு அரங்கொண்டு அராவிச் செய்யப்பட்டக் கூர்பொருந்திய ஈட்டியுடன் கூடிய மலைவேடர்கள், சமரில் மயங்கிக் கீழே விழுந்தனர். அவர்களை வள்ளியம்மைக்காக மறுபடியும் உணர்வுகொண்டு எழுந்திடச் செய்த திருப்பரங்குன்றத்துச் செவ்வேளை வணங்குவோம்!

### திருச்செந்தூர்

சூரலை வாயிடைத் தொலைத்து மார்புகீண்டு
ஈரலை வாய் இடும் எஃகம் ஏந்தியே
வேரலை வாய் தரு வெள்ளி வெற்பொரீஇச்
சீரலை வாய் வரு சேயைப் போற்றுவாம்!

பொழிப்புரை: அலைகள் என்றும் வந்து போந்து வீரிட்டு எழும் கடலின் நடுவே சூரனை மாயச் செய்து, அவனது மார்பைக்கீண்டு, அவன் குடல் ஈரலைச் சூலத்தின்கண் மடுக்கச் செய்து ஏந்திக் கொண்டு, மூங்கில் இலைகள் பொருந்தி இருக்கும் வெள்ளிமலையாம் கயிலாயத்தைவிட்டுத் திருச்செந்தூரில் வந்து எழுந்தருளி அடியார் துன்பம் துடைக்கும் வீரன் முருகப்பெருமானை வணங்கலாம்!

### திருவாவினன்குடி (பழநி)

காவினன் குடிலுறு காமர் பொன்னகர்
மேவினன் குடிவர விளியச் சூர் முதல்
பூவினன் குடிலையம் பொருட்கு மாலுற
ஆவினன் குடிவரும் அமலற்போற்றுவாம்

பொழிப்புரை: அமராவதி என்ற தனது தலைநகரை இந்திரன் மறுபடியடையவும், சூரன்—பதுமன்—போன்ற அரக்கர்கள் மடிந்தொழியவும், தாமரை மலரை இருப்பிடமாகக் கொண்ட நான்முகன் ஓம்காரப் பிரணவத்தின் செழும்பொருள் அறியாமல் திகைக்கவும், இக்குறைகளை நீக்கத் திரு+ஆ+இனன்+கு+டி (இலக்குமி+பசு+கதிரவன்+பூமி+அக்கினி முதலியோர் போற்றிய) = திருவாவினன்குடி என்ற பழநியில் எழுந்தருளியிருக்கும் தண்டபாணிக் கடவுளை வணங்குவோம்!

### திருவேரகம் (சுவாமிமலை என்பர்)

நீரகத் தேதனை நினையும் அன்பினோர்
பேரகத் தலமரும் பிறவி நீத்திடும்
தாரகத் துருவாம் தலைமை எய்திய
ஏரகத் தறுமுகன் அடிகள் ஏத்துவாம்!

பொழிப்புரை: நீர்மை பொருந்திய தமது தூய உள்ளத்தில் அன்புமிக்க அடியார்கள் போற்றி வணங்கிடும், பிறவி என்னும் பெரும் இடரைக் களையும், தந்தையாம் சிவபெருமானுக்கும் தத்துவப் பொருள் உணர்த்திப் பிரணவ மந்திரத்தின் வடிவாய் எழுந்தருளி இருக்கும் சுவாமிமலை ஞான பண்டிதனை வணங்குவோம்!

#### குன்றுதோருடல்

ஒன்று தோருடலை ஒருவி ஆவிமெய்
துன்றுதோருடலைத் தொடங்கி ஐவகை
மன்றுதோருடிய வள்ளல் தாமுறக்
குன்றுதோருடிய குமரற் போற்றுவாம்!

பொழிப்புரை: உலகத்து உயிர்கள் யாவும் ஊழிக் காலத்தில் ஒடுங்கி அயர்ந்திருக்கத் தனது ஆடலை விடுத்தும், பிறகு உலகப் படைப்பில் தமது மெய் நடனத்தைத் தொடங்கி ஐந்து வகைப்பட்ட மன்றங்களில் (பொன் மன்றம்= சிதம்பரம், வெள்ளி மன்றம்=மதுரை, மணி மன்றம் = திருவாலங்காடு, செப்பு மன்றம் = திருநெல்வேலி, ஓவிய மன்றம் = திருக்குற்றாலம் என்பவை சிவபெருமான் நட்டம் ஆடிய அம்பலங்களாகும்.) நடனம் ஆடிய தந்தை சிவபெருமான் உள்ளம் உவந்து மகிழக் குன்றுகள் தோறும் எழுந்தருளித் திருவிளையாடல் புரியும் முருகேசனை வணங்குவோம்!

#### பழமுதிர்சோலை

எழ முதிரைப்புனத்து இறைவி முன்புதன்
கிழ முதிர் இள நலம் கிடைப்பமுன்னவன்
பழ முதிர் களி றென வருதல்வேண்டிய
பழ முதிர் சோலையம் பகவற் போற்றுவாம்!

பொழிப்புரை: ஓங்கி வளர்ந்து செழித்திருக்கும் அத்தினைப் புனத்திலே இறைவியாகிய வள்ளியம்மையின் திருமுன் தனது இளமைப் பருவத்து இன்பப் புணர்ச்சி கிடைப்பதற்குத் தனது தமையனாகிய விநாயகர் யானை வடிவத்தில் வந்து தோன்றுதலை விரும்பியருளிய பழமுதிர் சோலை என்னும் பதியில் வீற்றிருக்கும் பகவான் முருகனை வணங்குவோம்! (இதனைக் "களிறுதரு புணர்ச்சி" எனச் சங்க நூல் கூறும்.)

இத்தகைய அறுமுகப் பெருமானை இந்த ஆறு பாடல்களால் போற்றிநற் பதம் பெறுவோம்.

"ஆகம வேதப் பொது ஞான தேசிகனுகிநிற்கும்
ஏகனைத் தென்பழனிக் குவட்டேகண்டு
இறைஞ்சவல்லார்
சாகரநீர் முழுதுண்டு விட்டானும், தமிழ்க்கிளியும்
போக முனியும் புலிப்பாணிச் சித்தரும்
போல்பவரே"

## வித்தகர்

oooo



எத்துணையும் பேதமுரு தெவ்வுயிரும் தம்முயிர்
போல் எண்ணி உள்ளே
ஒத்துரிமை உடையவராய் உவக்கின்ருர் யாவர்
அவர் உளந்தான் சுத்த
சித்துருவாய் எம்பெருமான் நடம்புரியும் இடம்
எனநான் தெரிந்தேன் அந்த
வித்தகர்தம் அடிக்கேவல் புரிந்திட என்சிந்
தைமிக விழைந்த தாலோ.

— திரு அருட்பா





# சுடுமண் கலை







திரு. சா. குருமூர்த்தி

களிமண்ணில் செய்யப்படும் பல வண்ண பொம்மைகள் நம் நாட்டில் தற்போது வழக்கத்தில் இருப்பதை நாம் அறிவோம். குறிப்பாக நவராத்திரி விழாக் காலத்தில் இப்பொம்மைகளுக்குப் பெருத்த வரவேற்பு உண்டு. அப்போது கடைகளிலும், சாலை ஓரங்களிலும், சிறு வியாபாரிகள் தங்கள் தலையில் சுமந்து செல்லும் கூடைகளிலும் இப்பொம்மைகள் கொலு வீற்றிருக்கும் காட்சியை நாம் காணலாம். இவ்வாறு இந்த விழாவினை முன்னிட்டு செய்யப்படுகின்ற களிமண் பொம்மைகளின் கதை மிகப் பழமையானதாகும், இக்கலையின் தோற்றத்திலும், வளர்ச்சியிலும் ஒரு நாட்டுப் பண்பாட்டின் தோற்றமும், வளர்ச்சியும் அடங்கியிருக்கின்றன. இது நம்மில் பலருக்கு வியப்பை உண்டாக்கலாம். ஆனால், தொல்பொருள் ஆய்வாளருக்கு இது ஒரு சாதாரண நிகழ்ச்சியாகும். நாகரிகத்தின் உச்சாணிக்கொம்பில் கம்பீரமாக வீற்றிருக்கும் இருபதாம் நூற்றுண்டு மக்கள் இப்பொம்மைகளை மிகச் சாதாரணமாக எளிதில் உடைந்து, மறைகின்ற விலை மதிப்பற்ற பொருள்களாகத்தான் கருதுகிறார்கள். ஒரு மண் பொம்மை உடைந்து விட்டதென்றால் அதனை நாம் தூர எறிந்து விடுகின்றோம். காரணம் அதன் மதிப்பு மிகச் சொற்பமானதேயாகும். ஆனால், மிகப் பழங்காலத்திய களிமண் பொம்மைகள் கிடைத்தால் அவற்றின் விலை மதிப்பை கணக்கிடமுடியாது. அவை அக்கால மக்களின் கலைப்பெட்டகங்களாகும். அவை பண்பாட்டின் மேன்மையை, அன்றாட வாழ்க்கை முறையினை நமக்கு பறைசாற்றும் பண்டையச் சின்னங்களாகும். பழங்கால மக்களின் வாழ்க்கை முறையினை பிரதிபலிக்கும் கண்ணாடி என்றால் அது மிகையாகாது.

களிமண் எல்லோருக்கும் எப்போதும் எளிதில் கிடைக்கும் பொருளாகும். அதுவும், காசை செலவழிக்காமல் கிடைக்கக் கூடிய பொருளாகும். எனவே தான் அதற்குத் தற்காலத்தில் மதிப்பில்லை. தங்கமும், வெள்ளியும் மக்களால் பாதுகாக்கப்படுகின்றன - போற்றப்படுகின்றன - ஏன்? நம்மவர்கள் அவற்றைப் பய பக்தியுடன் வழிபடவும் செய்கின்றார்கள். மண்ணிலே தோன்றி, வாழ்ந்து, மண்ணோடு மண்ணாக மறையப் போகின்ற மனிதனுக்குத் தான் வாழ்ந்த நிலம்தான் தெய்வம்! சோறுபோடும் தலைமகள். எனவே அவன் நிலமகளை வணங்கி வழிபட்டு வந்தான். நிலத்தில் கிடைக்கின்ற களிமண்ணை எடுத்துத் தனது கலை ஆர்வத்தைத் (தாகத்தை) தணித்துக்கொண்டான்.

மனித குலத்தின் வரலாற்று ஏடுகளை பின்னோக்கிப் புரட்டினால் கற்கால மனிதனைக் காணலாம். மிகப் பழைய கற்கால மனிதன் நாடோடியாக விலங்குடன் விலங்காக காடுகளில் வசித்து வந்தான்: வாழ்க்கை, பண்பாடு என்றால் என்ன என்ற உணர்வில்லாமல் அவன் வாழ்ந்து வந்தான். பல இலட்சம் ஆண்டுகள் உருண்டு ஓடின. மனிதனுக்கும், இயற்கைக்கும் நடந்த போராட்டத்தில் மனிதன் வெற்றிப் பாதையை நோக்கி நடக்கலானான். அவன் அன்றாட வாழ்க்கைக்குத் தேவையான வசதிகளை நிரந்தரமாகப் பெற்றுவாழ வழி வகைகளைக் கண்டுபிடித்தான். அதன் காரணமாக உலகில் பண்பாடு மலரத் தொடங்கியது. புதிய கற்காலத்தில் வேளாண்மை, மட்பாண்டத்தொழில், ஆடு, மாடுகளைப் பழக்கி வளர்த்தல், பளபளப்பான கற்கருவிகளைச் செய்தல் போன்ற பல சாதனைகளை மனிதன் செய்து முடித்தான். மனித இனம் உலகில் நன்றாக வேரூன்றி வளர்வதற்கு இந்தக் கண்டுபிடிப்புகள் வகை செய்வனவாக இருந்தன. அவற்றின் மூலம் தான் மனித இனத்தின் பெருமையும், மேன்மையும் வளரத் தொடங்கின. மனிதன் விலங்கினத்திலிருந்து விடுபட்டு, மாறுபட்டு மனிதனாக வாழத் தலைப்பட்டான். அவனது மூளை இயங்கலாயிற்று. அறிவு வளரத் தொடங்கிற்று. அதன் பயனாக, அவனது அன்றாட வாழ்க்கைக்குத் தேவையான பல வசதிகளைச் செய்து கொண்டான். அந்த வசதிகள்தான் அவன் உள்ளத்தின் அடித்தளத்தில் ஒளிந்து கொண்டிருந்த கலை ஆர்வத்தை வெளியே கொண்டுவர வழி செய்தன.

சுடுமண்ணின் கதை, மட்பாண்ட தொழில் கண்டுபிடிப்பில், அதாவது புதிய கற்காலத்தில் ஆரம்பமாயிற்று. சுடுமண் கலை என்பது ஓர் ஆக்கத் தொழிலாகும். அது பிரம்மாவின் பணியாகியப் படைத்தலுக்கு ஒப்பாகும். ஒரு பொம்மை செய்ய வேண்டுமானால் ஈரமான களிமண் கிடைத்தால் மட்டும் போதாது. அதைப் படைப்பவனுடைய உள்ளப்பாங்கு, கலை ஆர்வம், நுண்ணிய அறிவுத்திறன், கற்பனைத்திறன் போன்ற பலவும் ஒருங்கிணைந்து அவனுடன் ஒத்துழைக்க வேண்டும். ஒரு மண் பொம்மையை உடைப்பது எளிது; ஆனால் அதனை உண்டாக்குவது அவ்வளவு எளிதல்ல.

இந்த ஆண்டு, விரைவில் நவராத்திரித் திருவிழா நடக்கவிருக்கிறது. அந்தத் திருவிழா முடிந்ததும் பொம்மைகளை பெட்டியில் போட்டு வீட்டுப் பரணில் குடி புகுத்தி விடுவார்கள். அதனால் பொம்மைகள் உடையலாம். உடைந்த மண்பொம்மைகள், அவற்றின் துகள்கள் போன்றவை வீட்டின் வெளியே காணப்படும் குப்பை மேட்டில் அல்லது தொட்டியில் வீசி எறியப்படலாம். ஐந்நூறு அல்லது ஆறு நூறு ஆண்டுகளுக்குப் பின்பு புதைபொருள் ஆராய்ச்சியாளர்கள் சென்னையில் மயிலாப்பூரிலோ, திருவல்லிக்கேணியிலோ நிலத்தை அகழ்வார்களானால் கை, கால், தலை போன்ற உறுப்புகள் உடைந்து, உருக்குலைந்த இந்தப் பொம்மைகள் அவர்களுக்குக் கிடைக்கலாம். அவற்றை ஆய்ந்து நமது பண்பாட்டுச் சிறப்பினை அவர்கள் உணர்வார்கள் - வருங்காலச் சந்ததியார்களுக்கு உணர்த்த முற்படுவர். இப் பொம்மைகளின் உருவ அமைப்பு, நிறம், ஆடை, ஆபரணம், சிகை, ஒப்பனை எல்லாம் இந்த நூற்றாண்டுகளுக்குரிய பாணியில் அமைந்திருக்கும் என்பது குறிப்பிடத்தக்கதாகும். பலநூறு ஆண்டுகட்குப் பின்பு நாம் வாழப்போவதில்லை. ஆனால் இப் பொம்மைகளைப் பார்க்கின்றவர்கள் நம்மைப் பார்க்கின்றவர்கள் நம்மை பார்த்தவர்களாவர். நமது சமூகம், சமயம், கலை உணர்வு, ஆடை, அணிகலன்கள், திருவிழாக்கள் ஆகியவற்றைப் பற்றிய பல உண்மைகளைத் தெரிந்துகொள்ளுவார்கள். இதுபோலவே பல ஆயிரம் நூற்றாண்டுகட்கு முன்பு வாழ்ந்து, மறைந்துபோன நமது முன்னோர்களைப் பற்றி அவர்களது பண்பாட்டுச் சிறப்பினைப்பற்றி அறிய உதவுகின்றன, அவர்கள் விட்டுச்சென்ற களிமண் பொம்மைகள். வரலாற்றுச் சிறப்பு மிக்க ஊரில் அகழ்வாராய்ச்சி நடத்தும் போது பலவிதமான சுடுமண் பொம்மைகள் நமக்குக் கிடைக்கின்றன.

புதிய கற்காலத்தில் தோன்றிய இந்தக் கலை பல கட்டங்களைக் கடந்து வளர்ந்து வந்துள்ளது. இக்கலை அந்தக் காலத்தி லிருந்தே ஒரு கைத்தொழிலாகவோ குடிசைத் தொழிலாகவோதான் வளர்ந்து வந்திருக்கின்றது. வடநாட்டில் சிந்துவெளிப் பண்பாட்டுக் காலத்திற்குரிய நேர்த்தியான மண்பொம்மைகள் பல கிடைத்துள்ளன. அவற்றுள், ஆடும் மகளிர் உருவங்களைப் பார்க்கும்போது அக்காலப் பெண்டிர் உடல் அமைப்பு, அவர்கள் அணிந்த ஆடை, ஆபரணங்கள், சிகை ஒப்பனை ஆகியவைப் பற்றி நாம் தெரிந்துகொள்ள முடிகின்றது. மேலும் அக்காலத்திய நாட்டியக்கலையின் மேன்மையையும் வளர்ச்சியையும் உணர முடிகின்றது. ஆடும் பாவைகளின் உருவங்கள் நாட்டிய முத்திரைகளைக் காட்டுகின்றன. மேலும் குழந்தைகளின் விளையாட்டுக் கருவிகள் ஏராளமாகக் கிடைத்துள்ளன. அவற்றில் முக்கியமானது ஒரு சிறு கை வண்டியாகும். இதுபோல வண்டி இப் பகுதிகளில் இன்றும் வழக்கத்தில் இருக்கிறது என்பது குறிப்பிடத்தக்கதாகும். சிறுவர்கள் போற்றி விளையாடிய அத்தகைய சிறு வண்டிகள் அக்காலத்திய போக்குவரத்துப் பற்றி மட்டும் நமக்கு உணர்த்தவில்லை. சுமார் 5000 ஆண்டுகளானாலும், அதுபோன்ற வண்டிகள் இன்றும் பயன் படுத்தப்படுகின்றன என்பதுதான் பெருமைக்குரிய செய்தியாகும். பழம்பெரும் பண்பாடு, தற்காலத்திய நவீன வாழ்க்கையிலும் கலந்து மிளிறுவதைக் காண்கின்றோம். சிந்துவெளி மக்கள் திடீரென்று தோன்றிச் சீரும் சிறப்புமாக வாழ்ந்தவர்களாவர். பிறகு திடீரென்று மறைந்துவிட்டார்கள். அவர்களது பண்பாடும், நாகரிகமும், அவர்களுடனேயே மறைந்துவிட்டன. எனினும் அம்மக்கள் திராவிடப் பெருங்குடி மக்களே யாவர் என்பதை அறியும்போது நாம் பெருமையடைகிறோம்.

சிந்துவெளி காலத்திற்குப் பிறகு, இந்தியப்பண்பாடு, நாகரிகம், வாழ்க்கை முறை அத்துணைச் சிறப்பாக அமையவில்லை எனலாம். வேதகால ஆரியர்கள், மௌரியர்கள்: சுங்கர்கள், குப்தர்கள் என்ற பல வம்சத்தினர்கள் ஆட்சி செலுத்தினர். ஆனால் சிந்துவெளி நாகரிகத்தின் தொடர்பையோ, ஆதிக்கத்தையோ, முத்திரையையோ இவர்களது பண்பாட்டில் காண முடியவில்லை. இவர்களது பண்பாடு சிந்துவெளி நாகரீகத்தின் தொடர்பு கொண்டதாகவோ, தொடர்ச்சியாகவோ அமைந்திருந்தால் நம்நாட்டின் வரலாறு மிகச் சிறப்பாக அமைந்திருக்கும் எனலாம்.

சுங்கர்கள் மிகக் குறுகிய காலமே ஆட்சி செய்தனர் என்றாலும் அழகுக்கலைகளில் அவர்களின் ஆர்வம் கரைபுரண்டு ஓடிற்று. இவர்கள் காலத்திற்குரிய அழகிய சுடுமண் பொம்மைகள் ஏராளமாகக் கண்டெடுக்கப் பட்டுள்ளன. அவற்றுள் பெரும்பாலானவை, தற்போது நாட்டின் பல்வேறு மாநிலங்களிலுள்ள பொருட்களஞ்சியங்களில் வைக்கப்பட்டுள்ளன. இப்பொம்மைகளுள் அழகிய மகளிர் உருவங்கள் குறிப்பிடத் தக்கனவாகும். பெண்கள் தலை முதல் கால் கட்டைவிரல் வரை கனமான ஆபரணங்களை அணிந்திருக்கிறார்கள். தங்கள் மேனியை ஆடையின்றி, அணிகலன்களால் மறைந்திருக்கிறார்கள். அதேபோல் அவர்களது சிகை பலவாறு ஒப்பனை செய்யப்பட்டு, இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட முடிச்சுகளைக் கொண்டுள்ளது.

அடுத்தபடியாகக் குப்தர்கள் காலத்திற்கு வருவோம். குப்தர்களின் காலம் இந்திய வரலாற்றில் பொற்காலம் எனப்படும். அக்காலக் கவின்கலைகளின் வளர்ச்சிக்கு இந்தக் கூற்று மிகப் பொருந்தும். தெய்வத்திரு உருவங்கள், அழகான பெண்ணுருவங்கள், விலங்குகள், பறவைகள் போன்றவை ஏராளமாகச் செய்யப்பட்டு வழக்கத்தில் இருந்தன என்பது புலனாகிறது. உத்தரப் பிரதேசத்தில் உள்ள அகிச்சத்திரம் என்ற இடத்தில் நடத்தப்பட்ட அகழ்வாராய்ச்சியில் நூற்றுக்கணக்கான சுடுமண் பொம்மைகள் கிடைத்துள்ளன. அவற்றை நுட்பமாக ஆய்கையில் குப்தர்களின் அன்றாட வாழ்க்கையே நம் கண் முன்னால் தோன்று

கிறது. இந்தியாவில், அகிச்சத்திரத்தில் கிடைத்ததுபோல அதிக எண்ணிக்கையில் சிறப்புமிக்க சுடுமண் பொம்மைகள், வேறு எங்கும் கிடைக்கவில்லை என்று கூறலாம். அவற்றுள் சில சக்திவழிபாட்டினைக் குறிக்கின்ற பெண்ணுருவங்களாகும். அவை சக்தி வழிபாட்டின் தோற்றத்தினையும், வளர்ச்சியையும் விளக்குகின்றன. இந்தியாவில் மட்டுமின்றி, நாகரீகச் சிறப்பும், தொன்மையும் வாய்ந்த திபெத், ஸ்பெயின் ஆகிய நாடுகளிலும் பல ஆயிரம் வருடங்களுக்கு முன்னமேயே இந்தச் சக்தி வழிபாட்டுக்குரிய பெண்ணுருவங்கள் செய்யப்பட்டன. இந்த உருவங்களின் அமைப்பு குறிப்பிடத்தக்கதாகும். இடுப்பும், வயிறும் பெருத்துக் காணப்படுகின்றன. பிறந்த கோலத்தில், ஆடையின்றி காட்சியளிக்கின்றன. சில உருவங்களில், ஆடைக்குப் பதிலாக சிறு புள்ளிகளினாலாகிய ஒப்பனைக் கோடுகள் இடுப்பைச் சுற்றி ஓடுகின்றன. பெரும்பாலான உருவங்களுக்குத் தலையும், காலும் கொடுக்கப்படவில்லை. இந்தியாவில் மொகஞ்சொதாரோ, ஹரப்பாவிலிருந்து, தமிழ்நாட்டில் திருக்காம்புலியூர் (திருச்சி மாவட்டம்) காஞ்சிபுரம் (செங்கற்பட்டு மாவட்டம்) வரை உள்ள பகுதிகளில் நடத்தப்பட்ட அகழ்வாராய்ச்சிகளில் இப்பொம்மைகள் கண்டெடுக்கப்பட்டுள்ளன.

மேலும் பல்வேறு தேவதைகளின் உருவங்களும் வணங்கப்பட்டு வந்தன என்றும் தெரிகிறது. எடுத்துக்காட்டாக மரத்தில் உறையும் தேவதை, இறக்கைகளைக் கொண்ட தேவதைபோன்ற உருவங்கள் திருக்காம்புலியூரில் கண்டெடுக்கப்பட்டுள்ளன. இவற்றைத் தவிர, இந்து சமயத்தின் தோற்றம், வளர்ச்சி, பரவல், ஊடுருவல் போன்றவற்றை வெளிப்படுத்தும் வகையில் பல காலங்கட்குட்பட்ட சுடுமண் பொம்மைகள் இங்கு கண்டெடுக்கப்பட்டுள்ளன. அவை முறையே சிவன், அவனுக்குரிய பல வடிவங்கள், திருமால், திருமாலின் அவதாரங்கள் போன்றனவாகும். இவற்றை நன்கு ஆராய்ந்தால் சைவ, வைணவ, சமயங்களின் வளர்ச்சியைச் சுமார் 2000 ஆண்டுகட்கு முன்பே காணலாம். ஒரு குறிப்பிட்ட காலத்தில் ஒரு நாட்டில் அல்லது நாட்டின் ஒரு பகுதியில் நிலவிவந்த சமய நிலையை அல்லது சமய வளர்ச்சியை நாம் இந்தப் பொம்மைகளைக் கொண்டு தெரிந்து கொள்ள இயலும். குறிப்பாக, எழுத்தும் இலக்கியங்களும் தோன்றுவதற்கு முன்னர் வாழ்ந்த மக்கள் வாழ்க்கை நிலை, சமய உணர்ச்சி, கடவுள் பற்று ஆகியவற்றைப் பற்றி அறிந்துகொள்வதற்கு இப்பொம்மைகள் மிகவும் உதவுகின்றன. மேலும் அவர்களது பொழுதுபோக்கு விளையாட்டுக்கள், அவர்கள் பின்பற்றிய சிறுதொழில்கள் ஆகியவற்றைப் பற்றியும் தெரிந்துகொள்ளலாம். எடுத்துக்காட்டாக மீன் வலைகளில் பொருத்தப்படுகின்ற கனமான உருளைகள், அக்காலத்தில் களிமண்ணில் செய்யப்பட்டன. மீன் பிடிக்கும் தொழிலை ஒரு சில மக்கள் பின்பற்றி வந்திருக்கிறார்கள் என்பதையே இந்த உருளைகள் உணர்த்துகின்றன. விளையாட்டுப் பொருள்களாகிய 'தாயக்கட்டை' 'செஸ்' காய்கள் போன்றவை தமிழ்நாட்டில் பல ஊர்களில் கண்டெடுக்கப்பட்டுள்ளன. அதே போன்று சுடுமண் இலச்சினைகள், எடைகள், காசு போன்ற வட்டவடிவமான பொருள்கள் ஏராளமாக அகழ்வாராய்ச்சிகளின் மூலம் கண்டெடுக்கப்பட்டுள்ளன. இவை அக்காலச் சமுதாயத்தில் நிலவி வந்த வாணிகம், நாணயச் செலாவணி, பொருளாதார நிலை ஆகியவற்றைப் பற்றி தெரிந்து கொள்ள உதவுகின்றன.

ஆகையால் மிகப் பழங்காலத்தில், மக்கள் பயன்படுத்திய பொருள்களில், சுடுமண் பொருள்களே எண்ணிக்கையில் அதிகம் எனக் கூறலாம். இந்தப் பொருள்களைப் பல கூறுகளாகப் பிரித்து ஆராய்ந்தால், ஏராளமான செய்திகள் நமக்குத் தெரியவரும். இவை, பழங்கால மக்களின் வாழ்க்கையைப் படம் பிடித்துக் காட்டும் கண்ணடியாகும் என்றால் அது மிகையாகாது.

◆

# Temple Worship in Pre - epic Period

*(i.e. Prior to 1000 B. C.)*

*Lead me from the unreal to the real;*
*Lead me from darkness to light;*
*Lead me from death to immortality.*

(Brihadaranyaka Upanishad)



**Thiru K. K. MENON, B. A., B. L.**

## Idol Worship

"It has become a trite saying that idolatory is bad and everyone swallows it at the present time without questioning. I once thought so, and to pay the penalty of that, I had to learn my lessons sitting at the feet of a man who realised everything from idols; I allude to Ramakrishna Paramahamsa. If such Ramakrishna Paramahamsas are produced by idol worship, what will you have, the reformer's creed or any number of idols? I want an answer. Take a thousand idols more, if you can produce Ramakrishna Paramahamsas through idol worship. Yet idolatory is condemned, why? Some hundreds of years ago, some man of Jewish blood happened to condemn it. He happened to condemn everybody else's idols except his own. If God is represented in any beautiful form or any symbolic form, said the Jew, it is awfully bad; it is sin., But if He is represented in the form of a chest with two angels sitting on either side, it is the holy of holies. If God comes in the form of a dove, it is holy. But if He comes in the form of a cow, it is heathen superstition, condemn it; that is how the world goes"[1] so said Swami Vivekananda:

*Klesso' dhikaras Tesam,*
*Avyaktasakta cetasam;*
*Avyakta hi gatir dukham,*
*Dehovadhbtir Avapyate.*

(Gita XII-5)

"The difficulty of those whose thoughts are set on the unmanifested is greater, for the goal of the unmanifested is hard to reach by the embodied beings[2], so says the Bhagavat Gita. Sir Radhakrishnan explains this verse saying that the search of the transcendent Godhead is more difficult than worship of the living Supreme God; the soul of all things and persons. He quotes Dattatreya, who asks in his Avadhuta Gita " How can I bow to him who is formless, undifferentiated, blissful and indestructible, who has thought Himself and in Himself filled up everything". He quotes a Baktha who says, with mind rapt in meditation if mystics see the actionless light, let them see. As for myself, my only yearning is that there may appear before my gladdened eyes

1 Complete works of Swami Vivekananda Vol. III.
2 Bhagavat Gita—Sir Radhakrishnan.

that bluish someone who keeps romping on the shores of the Yamuna". Idols or temples or churches or books are only supports, the helps of man's childhood. Sri Ramakrishna Paramahamsa, compares them to the props and supports which we put up when we construct a house. Such worship is the lowest stage. We have to struggle to rise high. Thukaram sang:

Be thou formless for those who want to be
But for me take thou on a Form, Oh! Lord.
I have fallen in love with Thy name.

The Hindu never says that the idol is God. Through Sagunopasana one rises higher and higher. A stage would thereafter came to him when he can discard idols, when he can perform Nirgunopasana. At the stage the construction of the mansion is completed, there is no need for the props and supports to use the language of Sri Ramakrishna Paramahamsa[3]. They can be removed.

### What Temples are

We often hear people who are obsessed with what they see in churches and mosques who attack our temples saying that they are very noisy and that worship or meditation is not possible in them. Swami Vivekananda answers them. He says "our temples are not churches in your sense of the word. They are not places of public worship, for, properly speaking, there is no such thing as Public worship in India". Arthur Koestler, author of "Darkness at Noon" put this question to Jagadguru Kanchi Kamakoti Sankaracharya Swami. He answered thus[4] "Our temples are not organised as places for meditation, nor for congregational worship. The purpose of a temple is different. We enjoy the good things in life such as house, food, clothing, ornaments, music, dance etc. We pay a tribute in the form of taxes to the king - Now the Government - for making it possible for us to enjoy them by giving us their protection. The king-protector is provided with a place and other paraphernalia of royalty. Even as we render homage to the king for the enjoyment of these things, we are bound to render our gratitude to God who has primarily given us the good things of life. We offer a part of these good things as a token of our gratitude to Him in the temple. We first offer to Him all that He has given us, in the shape of food, clothing, jewels, Music, flowers, light, incense, etc., with the grateful consciousness that they are His gifts to us; and we receive them back from Him as His prasada. The temple is the place where these offerings are made on behalf of the collective community. Even if people, do not go to the temple, it is enough if these offerings are made to God on behalf of the community. The duty of the people at the place is to see that these offerings are made in a proper manner. There are people who do not take their day's meal till the temple bell announces that the offering to God of food for the day has been done. Then only do they take their meal as Prasadam". According to the Gita if we enjoy these things without offering them first to the giver, it would tantamount to theft. It is through our five Indriyas, viz: eyes, ears, nose, tongue and touch that we receive the various impulses from outside and carry them to our brain. Each of the five senses contribute to our joy in life. It is this offering of the objects of the five-fold joys that is known as Panchopachaaraas to God, the offerings namely Ganda (sandal), Pushpa (flowers), Dhoopa (incense), Deepa (lamps) and Neivadya (food). If your jnanendriyas and

3 The Gospel of Ramakrishna by M.

4 The Jagadguru - Edited by Dr. V. Raghavan.

their stimuli are reverentially offered to the Paramathma, then we shall not be inclined to misuse these sense organs. By such dedications to God, we deflect these from evil propensities and sublimate them to a divine goal.

Besides, requirements which are the mimimum sources of material pleasure, there are other things which make for life's comfort, like house, clothes, conveyance etc. These too are to be used only after they are offered to God. All such offerings are inclined in what is known as shodasopachaaras (sixteen offerings). And then there are other sources of enjoyment like music, dance, chariot, elephant, horse etc., applicable to the case of highly placed persons and which may be regarded as luxuries for the common man. All these should also be offered to god and they are included in the 64 or Chatushashti Upacharaas.[5]

## Indus Valley Civilization

The Mohanjadaro and Harappa civilizations are considered to be about 5500 years old. Col. D. H. Gordon in his "Pre Historic Background to Indian Culture" says that the numerous female figurines in Harappa suggest the worship of such a goddess as they out-number by far similar representations of the horned god. It is probable that the Harappans embodied the worship of a horned God and mother-goddess and the sacred prototype of Siva has a very great deal to commend it." Marshall takes almost the same view. According to him the people of Mohanjadaro and Harappa had not only reached the stage of anthromorphising their deities but were worshipping them in that form as well as in the aniconic. Dr. Wheeler feels that there is no uncertainty attached to the divinity of the seated "Siva" of the seals — which is replete with the brooding miniatory power of the great God of historic India. He apparently refers Dakshinamurthy. He feels that phallus was also present during the period. [6]Dr. Ayyappan while assessing the antiquity of Indian culture, quotes Dr. Wheeler who says that the Harappans worshipped mother goddess, Siva and the Linga. He further says that is now certain that the remnants of the big building 52 feet long, 40 feet wide and with walls 4 ft. thick are the remains of a temple. Many of the idols and the linga were discovered from this spot. He has no doubt that the Harappans were Hindus—and that temple worship had a place then.

**Vedic Period**: 2000 B. C. to 7000 B. C.

Dr. Gopinatha Rao in his "Hindu Icnography" refers to the divided opinion among the European savants about image worship in Vedic period. According to Max Muller the religion of the Vedas know no idols and the worship of idols in India was a secondary formation, a later degeneration of the more primitive worship of ideal God. As against this, Gopinatha Rao quotes Dr. Bollenson who says "Indians did not only merely in imagination assigned human forms to their gods but also represented them in a sensible manner". Subsequent discoveries have shown, as mentioned supra, that such representations in a "sensible form" existed even prior to the vedic period. Perhaps there was less prominence or some antagonism for idol worship in the Vedic age. Lt. Col. Thapur in his book on "Icons in Bronze" says that one of the reasons for the antagonism of the vedic cult

5 Temple worship—Jagadguru Kanchi Kamakoti Sankaracharya Swami Shanmata Conference Souvenir compiled by Dr. V. Raghavan.

6 Bharatha Pazhama—(Malayalam) —Dr. Ayyappan.

towards Saivism was due to its homage to phallic emblem." This does not seam to be correct. This view is apparently based on the interpretation of the term 'Sisnadeva' in the Rig Veda by Western scholars. They interpret this term as "worshippers of phallus". But the Indian scholars like Yaska and Sayana say that this expression refers to only sex-minded people. It has nothing to do with the worship of the phallus. [7] Swami Vivekananda feels that "the worship of the Sivalinga originated from a famous hymn in Atharvana Veda Samhita sung in praise of the Yupa Stampa, the sacrifical post; in that hymn a description is found of the beginingless and endless stampa. It is shown that the said stampa is put in place of the eternal Brahman. Later all things associated with Yagna like fire, smoke, ashes etc. were worshipped. The Yupa stampa gave place to sivalinga and defined in the high Devahool of Sri Sankara." But we are now aware that linga worship was prevalent even during the Harappa period. It has, however, to be remembered that the linga has three parts, the lowest portion cut with 8 faces is called the Brahma portion; the middle portion with four faces is called the Vishnu portion and the top portion called the Siva portion. Avudayar, the Sakthi portion is fixed to the Vishnu portion, the Brahma portion is embedded under the earth. In the path of Sadhaka from Sagunopasana to Nirgunopasana, there are three stages. In the first stage he worships god with form. That is Nataraja. In the second stage he worships the formless form. That is the linga. It has a form but at the same time formless in as much as it has no features like head, face, etc. In the third stage he worships the formless. That is what we do at Chidambararahasyam, Palliyarai etc. Thus we see that the linga form represents the intermediate stage between Sagunopasana and Nirgunopasana. In Kerala, Sastha, Bhagavathi etc. have also such formless forms.

[8] Thapur goes a step further and says that the worship of the phallus was started by the non-aryans and was practised in many countries. In ancient Egypt the Phallus or Oris was idolised. The Greeks copied this custom by venerating pripus derived from Apis the big bull-god of Egypt. There were several cults of Venus in Greece. Mylitta was the Goddess of fertility in ancient Babylon. The Romans called the phallic emblem *Mutinus* which was taken out in large and gorgeous processions with dancing and singing of lascivious songs. Such reverence was also common in Greece in the 8th Century A. D. and remained in vogue in Germany till the 12th Century A. D.

Sardar K. M. Panicker in his scholarly introduction to Vallathol's translation of the Rig Veda says that when the Aryans entered India they had to face the Harappans. These Harappans, he says, were a very powerful race with a culture of their own. He says that the expression "Dasyus" mentioned in the Rig Veda refers to the Harappans. In the Rig Veda, there is no direct reference to idols or temple worship. Importance is given to Homams, Yagnams etc. The Gods we saw in the Harappa period make only brief appearances. The prominent deities are Indra, Agni, Varuna, Mitra and others. Indra is number one.

> "He bends not to the strong nor to the firm nor to the defying foe, instigated by the lawless (dasyus).

7. Complete works of Vivekananda—Vol. I.

8. Icons in Thapur—Lt. Col. Taper.

For Indra the lofty mountains are like plains, and in the deeps there is a ford for him.

(Rig-Veda VI–24–8)[9]

Heaven and earth bow before Indra;
before His the mountain's tremble

(Rig-Veda II–17–13)[9]

Agni is equally powerful. "He is the preist, God of sacrifices, the Minister of the ritual.

The offerer of oblation, the best Giver of Treasure.

(Rig-Veda I–1–1)

Ushas is beautiful, she and Saraswathy are probably the representatives of the mother-goddess. "Like a noble lady Ushas comes tending everything, carefully,

Rousing all life she stirs every footed creature and makes the birds fly.

(Rig-Veda I–48–5)[9]

She is lovely "as a bird adorned by her mother."

(Rig-Veda I–123–11)[9]

Rudra comes and goes once. "Vishnu the upholder of eternal statutes, the Protector"[9] appears five or six times. Trivikrama-vatharam is known to the Aryans. Though these different Gods are mentioned, the fundamental principle of Hinduism is laid down.

"They speak of Indra, Mitra, Varuna, Agni and there is the Divine, winged Suparna;

The one being, the wise call by many names as Agni, Yama, Matariswa."

(Rig-Veda I–164–46)[9]

"Ekam sat-Vipra bahudha vadanthi", the one being the wise call by different names. Later when there was a mingling of both the civilizations, the Harappan Gods again came into prominence.

9. The call or the Vedas, A. C. Bose.



திருவடியுந் தண்டையுஞ் சிலம்பும் சிலம்பூடுருவப்
பொருவடிவேலும் கடம்புந் தடம்புய மாறிரண்டும்
மருவடிவான வதனங்களாறும் மலர்க்கண்களும்
குருவடிவாய் வந்தென்னுள்ளங் குளிரக்குதிகொண்டவே.

— கந்தரநுபூதி.

தொலைபேசி { அலுவலகம் : 23
மலைக்கோயில் : 63 }

# அருள்மிகு சுப்பிரமணிய சுவாமி ஆலயம்

## சென்னிமலை

ஈரோடு வட்டம் - கோவை மாவட்டம்



### சென்னிமலை சிரகிரி வேலனை தரிசிக்க வாரீர்!

*கொங்கு நாட்டு முருகப் பெருமான் ஆலயங்களில் சிறப்புடன் விளங்கி வருவதில் இதுவும் ஒன்று. அருணகிரி நாதருக்கு படிக்காசு வழங்கப்பட்ட புனித தலம் சிவாலய சோழனின் பிணி போக்கிய புண்ணியத் தலம். தமிழகத்தின் பல பகுதிகளில் இருந்தும் பல்லாயிரக் கணக்கான பக்தர்கள் நாள்தோறும் வந்து தரிசித்து நலம் பெறும் பெருமை வாய்ந்த தலம். மலை உச்சியில் அமைந்திருக்கும் இவ்வாலயத்திற்கு மலைப் பாதை போடப்பட்டு கார், உல்லாசப் பேருந்து முதலான வாகனங்களில் செல்ல வசதியுண்டு.*

*இங்கு வீற்றிருக்கும் முருகக் கடவுளுக்குக் கடந்த 4—6—73ல் திருக்குட நீராட்டுப் பெருவிழா சிறப்பாக நடை பெற்றது.*

*வேண்டுவோருக்கு வேண்டியதைக் கொடுத்து அருளும் சிரகிரி வேலனை குடும்பத்துடன் வந்து தரிசித்து முருக பெரு மானின் அருளுக்குப் பாத்திரராக வேண்டுகிறோம்.*

O. M. அண்ணாமலை
S. திருமலைசாமி
O. S. சிவன்மலைக் கவுண்டர்
S. பெரியசாமி
*அறங்காவலர்கள்*

இரா. கோவிந்தன்
*செயல் அலுவலர்*



# பழநி ..........மாம்பழம்...





## திரு. அ. கி. செல்வக்கணபதி

"அதிமதுரச் சுவையாலே தன் வாக்கில் வரும்பாக்கள் அமைதலாலே மதிமிகு மாம்பழ மெனும்பேர் தக்கதெனுங் கவிச் சிங்கம்" எனப் புகழ் பெற்ற கவியரசர் 'பழநி மாம்பழம்' என்ற பெயர் கொண்டு கி. பி. 1836 முதல் 1884ஆம் ஆண்டுவரை பழநியில் வாழ்ந்தவராவார். இப்புலவரேறு செஞ்சொல்லும், செவ்விய நடையும் அமைந்த இன்பக் கவிகளைத் தமிழறிவு சான்ற செல்வர்களின் செவிகளில் இனிக்குமாறு தித்திக்கப்பாடி, அவர்கள் வரிசையறிந்து கொடுத்த பரிசுகளை மனமகிழ்ந்து வாங்கி, அயர்ந்து கிடக்கும் தமிழர்களை, மொழி உணர்வால் விழிப்படையச் செய்து, "மாம்பழக் கவிச்சிங்க நாவலர்" என்று அழைக்கப் பெற்றுத் தமிழன்னையின் தவ மகனாக விளங்கியவராவார்.

மாம்பழத்தின் கவிகள் கனியெனத் தேனென இனிப்பன; கற்பனை வளம் களிநடம் புரிவன; இரட்டுற மொழிதல் முதலான சீட்டுக் கவிகளும் தித்திப்பன. முடுக்குடன் கூடிய சொற்கட்டும் அந்தமிகு சந்தமும் அமைந்து அளவில் இன்பம் பயப்பன, பழமைக்கும் பழமையாய்ப் புதுமைக்கும் புதுமையாய்ப் பொலிவன. இவர் வரலாறு கலைக் கருவூலமாகும்.

### பழம் புகழிற் பழநி

'பூ மணமும் மின்னார் புழுகு மணமும் புலவோர், பாமணமும் வீசும் பழநி' என்று பாராட்டப் பெற்ற பழநியை அறியாதார் யார்? அன்றும் பாண்டிநாட்டில் உள்ள வைகாவூர் நாட்டின் தலைநகராகக் காட்சியளித்தது. வைகாவூர் நாடு, கோதை மங்கலம், பழநி முதலான பதினெண் ஊர்களைத் தன்னகத்தே கொண்டு திகழ்ந்தது. ஆவினன்குடி, பொதினி, சித்தன் வாழ்வு, வைகாவூர், சிவகிரி முதலானவற்றைச் சிறப்புப் பெயராகப் பெற்ற பழநிப் பகுதியைக் கடையேழு வள்ளல்களுள் ஒருவனை வையாவிக் கோப் பெரும் பேகன் ஆண்டான் எனப் புறநானூறு கூறும் பழம் புகழ் பெற்றது பழநியம்பதியென்றால், இதனை ஒப்பது வேறெப்பதி?

### பழத்தாற் புகழ்பெற்ற பழநி

வஞ்ச நெடும் பாவ மயக்கையெலாந் தீயிலிட்டுப் பஞ்செனவே செய்யும் பழநிப் பதியில் எழுந்தருளிய முருகன் மாம்பழம் காரணமாகவே பழநிக் குன்றமர்ந்தான் என்ற வரலாற்றை அறியாதார் யார்? செந்தமிழ் மணங்கமழும் சேயோன் அமர்ந்த திருவூரில் தேரோடும் தெற்கு வீதியில் திருவள்ளுவராண்டு 1867 ல் அம்மணி அம்மை

யாரின் திருவயிற்றினின்று மாம்பழப் புலவர் பிறந்தார். தவமிழைத்துப் பெற்ற தன் மகனுக்குத் தம் மரபுப் பெயரான 'மாம் பழம்' என்ற பெயரை முத்தைய பத்தர் சூட்டி மகிழ்ந்தனர். மூத்தமகன் பெயரும் மாம்பழமே.

### மாம்பழ மரபு வரலாறு

மாம்பழப் புலவர்க்கு ஏழாந்தலை முறைப் பாட்டனர் ஒருவர் சிற்பநூல் விதி வழாஅது கோயில், மண்டபங்கள் கட்டு வதில் சிறந்து விளங்கினர். மாடங்கள் நிறைந்த மதுரை மாநகரில் சிற்ப ஓவியங் களுக்குச் சிறந்த வைப்பு நிதியாக இருப் பதும், கண்ணுக்கும், கருத்துக்கும் விருந் தளிப்பதுமான எழில் குலுங்கும் வசந்த மண்டபத்தை (புதுமண்டபம்) அமைத்த சிற்பியும் இவரே. இப்புதுமண்டபம் கட்டி முற்றுப் பெறும்போது சிற்பியின் மகன் மாம்பழம் கிடைக்காத அக்காலத்தில் மாம் பழம் வேண்டி அழுதானும். இதனை உணர்ந்த திருமலை மன்னர் தன் அரண்மனை யிலுள்ள தங்கமாம்பழத்தைக் கொண்டு வரச் செய்து அழுத குழந்தைக்கு அளித்து அமைதிப் படுத்தினராம். அதுமுதல் அவர் மரபினர், பிறக்கும் குழந்தைகட்டு மாம்பழப் பெயரிட்டழைக்கலாயினர் என்பர்.

### மணங் கமழும் மாம்பழம்

கலை மணம் படைத்த அச்சிற்பி அமைத்த கலைக் கோவில் போல அழகிய சொற்களால் கவிக் கோவில் எழுப்பிய பாவலர், மாம்பழம் போலப் புலமை மண மும் அழகு நிறமும் தோற்றப் பொலிவும் பெற்று விளங்கினர். இளமையில் 'அம்மை' அருளிய வெண்முத்துகள் இளைய மாம் பழத்தின் உடலைப் புண்செய்தன. அருந் தவ மகனின் அவல நிலைக்காற்ருத முத் தைய பத்தர் 'தன்னந் தனியனுய்த் தண் டூன்றிய கையனுய்க் கோவணந் தாங்கி நின்ற கோலத்தினனுய்க் காட்சியளிக்கும் பழநி ஆண்டவனிடம் முறையிட்டார். முருகனின் திருவருளால் வெண்முத்துக்கள் மறைந்தன ஆனால் கண்முத்துக்கள் ஒளி இழந்தன. 'கலியுக வரதன் கண்கண்ட கடவுள்' சாவைத் தவிர்த்தான். கண் மணியைத் தகர்க்கலாமா? என இருமுது குரவரும் நைந்து புலம்பினர். மலைக் கோயில் சென்று திரும்பிய நாள்முதல் இளைய மாம்பழம் புதிதாக வாய்திறந்து, முருகா! முருகா! என மழலை மொழியத் துவங்கினன். அருங் கண்ணிழந்த அருந் தவப் புதல்வன் பேசும் மொழி கேட்டு யாவரும் மகிழ்ந்தனர்.

'தொட்டனைத் தூறு மணற்கேணி
மாந்தர்க்குக்

கற்றனைத் தூறு மறிவு' என்ற மறை மொழியை மனத்திற் கொண்டு, முத்தைய பத்தர் நாள்தோறும் பூவார் கடம்பனைப் புந்தியில் நினைந்து, செவிக்கினியதும் வாய்க்கினியதுமான வான்கலந்த மாணிக்க வாசகரின் தேன்கலந்த வாசகத்தையும், தெய்வ மணங்கமழும் தேவாரத்தையும் வாய் மணக்கப்பாடி, மாம்பழத்தையும் பாடப் பயிற்றுவித்தார். சீர்காழிப் பிள்ளை போலவே பழநிப் பிள்ளையும் பாலப் பரு வத்தே பாடத் தொடங்கிற்று. தன் மகன் பலர் புகழ் ஞாயிருக விளங்க வேண்டும் என்று எண்ணிய முத்தைய பத்தர் மாம் பழத்தைத் தமிழ் மணம் பெற, மாரிமுத்துக் கவிராயரிடம் ஒப்புவித்தார். செவி வாயாக நெஞ்சு களனுகக் கொண்டு ஆசி ரியர் வழி நின்று இலக்கண இலக்கிய நூல் களை, முதுகின் வழி எழுதச் செய்தும், சொல்லச் செய்தும் ஓதி உணர்ந்தார். அந் தாதி, மாலை, உலா, தூது, பிள்ளைத் தமிழ், கோவை முதலியன இயற்றும் ஆற்றலும் பெற்று ஏடாயிரம் கோடி எழுதாது தன் மனத்தே எழுதிப் படித்த பாவலனுகத், தமிழ் மணங் கமழும் மாம்பழமாக விளங் கினர். வல்லுநர் வழிக் கேட்டுணர்ந்து வட மொழியிலும் புலமை நலம் பெற்ருர். இத் தகு வரகவியை மக்கள் 'ஞான காந்தம்' என அழைத்தனர்.

### அருளால் விளைந்த பழம்

'பாட வந்தால் பரமனைப் பாடு', 'குழறிக் குழறிக் குமரனைப் பாடு' என்ற பழமொழிப்படி மாம்பழப் புலவர் வழிபடு தெய்வமாகிய பழநித் தண்டாயுதபாணி மீது, குமர குரு பதிகம், செந்திற் பதிகம்,

சிவகிரிப் பதிகம், பழநிப் பதிகம் என்ற நான்கு பாமாலைகளைத் தொகுத்து முருகனுக்குச் சூட்டினர். கன்னித் தமிழில் இன்னிசையுடன் கூடிய அப்பதிகங்கள் கற்போர், கேட்போர் உள்ளங்களைப் பிணிப்பனவாய் உள்ளன. சுவைத்தின்புற அப்பாடல்களுள் ஒன்றை மட்டும் காட்டுதும்,

**பழநிப்பதிகம்—ஆசிரிய விருத்தம்**

மணிகொண்ட கனகதட மகுடபந்தியு
வயங்குசண் முககமலமும் [மெழில்
வளர்கருணை பொழிவிழியு மிளநகையு
முதுமறையின்
மதுவொழுகு குமுதவாயும்
திணிகொண்ட பனிரெண்டு
தோளுமெந் நாளும்
சிலம்பொலி யியம்புதாளும்
திரள்புனித கரமுமக வுரமுமிகு
சேவற்பெருந் துவசமுங் [கவசமுஞ்
கணிகொண்ட வயிலுநட மயிலுமணி
வெயிலுமிரு
கன்னியர்க டுன்னுமொயிலும்
கண்டுமன மண்டுதுயர் விண்டுனது
தொண்டனென்
கனிவினெடு பணிய வருள்வாய்
பணிகொண்ட கண்டகர் பயங்கொண்ட
வண்டரைப்
பரிவுகொண் டாண்ட தேவே
பழகுமங் களகீத முழவுகண் டுயிலாத
பழநியம் பதிநாதனே.

தமிழ் விரகராகிய முருகனே குருநாதனை வந்து தமிழருளினன் எனப் பல பாடல்களில் குறிப்பிட்டுச் சொல்லும் மாம்பழப் புலவரின் பல்வேறு அருள் வினையும் பாடல்கள் எண்ணிறந்தன. சுவைத்தின்புறல் தமிழர் தம் கடனாகும்.

### புலமைப்பழம் போற்றிய புரவலர்

மாம்பழப் புலவர் ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் எனும் நாற்கவிகளையும் நன்கு பாடும் ஆற்றல் பெற்றதை அறிந்த தமிழ்ச் சுவை உணர்ந்த வள்ளல்களும் மக்களும் கன்னிக் கவியின் புதிய வரவுக்கு வாழ்த்துக் கூறினர். பழநிப்பதியில் விளங்கிய புகழ், கலைக் கோயில்களிலும் பரவத் தொடங்கிற்று. அன்று பழநிக் கோவில் தலைவராகிய பாப்பம்பட்டி வள்ளல் மேதகு, வேங்கிடசாமி அவர்கள், புகழ்ச்சிப் பாடல்களைக் கேட்டு பொன் முடிப்பு, பட்டாடை, பெட்டிவண்டி முதலியன பரிசாகத் தந்தனர் எனச் சீட்டுக் கவிகள் தெளிவுறுத்துகின்றன.

யமகம், திரிபு, அடிமடக்கு, ஏகபாதம், நிரோட்டகம், நாகபந்தம் முதலிய சித்திரக் கவிகளையும், புராணம், காவியம் முதலிய வற்றையும் பாடிப் புகழ்பெற்று வருவதை அறிந்த சேதுநாட்டு மன்னர் பொன்னுசாமித் தேவரவர்கள் மாம்பழத்தை வரவேற்று, வேண்டும் பரிசளித்தனர். தமிழழகனின் தண்ணருளால் அமைந்த கற்பனை ஊற்றுக் கவிஞர் உள்ளத்தில் எப்பொழுதும் பெருக்கெடுத்துக் கொண்டே யிருக்கும். தேர்ந்த கல்வியும், தெளிந்த ஞானமும், கூரிய மதியும் படைத்த மாம்பழப் புலவரைப் புரவலர்களும், புலவர்களும் 'மாம்பழக் கவிச் சிங்க நாவலர்' என அழைத்துப் பாராட்டுவராயினர். செந்தமிழ் வளர்த்துத் தமிழ்ச் சங்கம் கண்ட சேது மன்னர்களால் பாராட்டப் பெற்ற புலவரேற்றைப் பொது மக்களும் போற்றினர். மற்ற வள்ளல்களும் வரவேற்று விரும்பிய பரிசுகளை வழங்கினர். சங்கப் புலவர்க்கிருந்த தன்மானமும், பாடற்சுவை அறிந்து அளித்த பரிசுகளையே பெற்று வந்த சிறப்பும் மாம்பழத்தை மின்னும் தங்க மாம்பழம் ஆக்கின. இவர் தம் புலமை நலத்தை எழுத்தால் எழுத ஒல்லுமோ ?

### தொகுத்து முடித்தல்

பழம் பெயர் பெற்ற பாவல! பைந்தமிழ்க் காவல! கவிச்சிங்க நாவல! நும்மை எவ்வாறு புகழ்வேன். நும் பா நலத்தை அறிதொறும், அறிதொறும் எம் அறியாமையையே காண்கின்றேம். இறைவர் எதிர் நின்று வரவேற்றது நும் செயலோ! நும் புலமையின் செயலோ! பலரறி புலவன் நும் முருகனே! அல்லது நீரோ! தமிழ் முருகனை நீவிர் எவ்வாறு கண்டீர்! கண்ணொளியிருந்தும் எம்மாற் காணமுடியவில்லையே!

'பொறியின்மை யார்க்கும் பழியன்று
அறிவறிந்த
ஆள்வினை யின்மை பழி'

என்ற பொய்யா மொழியை மெய்ப்பித்துப் பரிமேலழகரைப் பொய்ப்பிக்க வந்த புலவரேறே நும் பாட்டிடை அறிவின் நுட்பத்தை அறிய அறிய, எழுதக் கையெழவில்லை; புகழவும் நா எழவில்லை; எழுத்துக்களும் ஓடி ஒளிகின்றன. நும் கலைக் கருவூலத்தைத் தமிழ்ச் சுவை அறிந்த தலைவர்கள் கலைக் கோவிலில் சொற்கோவில் எழுப்பிக் காப்பார்கள் என்பதில் ஐயமில்லை. கலைச் செல்வர்களுக்கு விருதளித்து முத்தமிழ் மணக்க வைக்கும் தலைவர் வாழ, அறப்பணிக் குழுவினர் வாழ வாழ்த்துவீராக!

# அருள்மிகு சம்புகேசுவரர் அகிலாண்டேசுவரி திருக்கோயில்

**திருவானைக்கா**

திருச்சி-5



அன்னை அகிலாண்டேசுவரி தாயுள்ளம் கொண்டு அகிலத்தின் படைப்புகளையெல்லாம் காத்து அருள் வழங்கும் பெருந்தலம். எல்லாம் வல்ல ஈசன் செழுநீர்த்தினராய் உயிர்களைத் தூய்மை படுத்தும் திருத்தலம். உயிரினங்களில் மிகப் பெரிய யானைக்கும், சின்னஞ்சிறு சிலந்திக்கும் வீடு பேறு அளித்த அருட்தலம் திருவானைக்கா. அப்பர், சம்பந்தர், சுந்தரர், மாணிக்கவாசகர், அருணகிரிநாதர், காளமேகப்புலவர் ஆகிய புலவர் பெருமக்கள் பாடிப் பரவிய பழந்தலம். அண்மையில் சுமார் 20 லட்சம் ரூபாய் செலவில் திருப்பணி செய்யப்பட்டு, 5—7—1970 அன்று திருக்குட முழுக்கு பெருவிழா சிறப்பாக நடந்தேறியது. இன்னும் திருநீற்றான் திருமதில் வடக்குபாகம் திருப்பணி நடைபெற வேண்டும். அரசினர், அறநிலையங்கள் அறவழி நிற்கும் நல்லவர்கள் எல்லோரும் திருப்பணிக்கு உதவி அன்னை அகிலாண்டேசுவரியின் அருளைப்பெற வேண்டுகிறோம். 20—8—72 முதல் அன்னை அகிலாண்டேசுவரிக்கு கோடி அர்ச்சனை ஆரம்பித்து தொடர்ந்து நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. கோடி அர்ச்சனை 1க்கு ரூ. 15/- (பதினைந்து). அன்பர்கள் அனைவரும் பங்குகொண்டு கோடி அர்ச்சனையைப் பூர்த்தி செய்ய வேண்டுகிறோம்.

சித. ராம. வெங்கடாஜலம் செட்டியார்
அறக்குழுத் தலைவர்

எஸ். சுப்பையா
நிர்வாக அதிகாரி

டி. எஸ். சுப்பையா
வீ. நடராஜன்
புலவர் மு. அருணை
சி. நமசிவாயம் பிள்ளை
அறங்காவலர்கள்

# வினையும் வீடுபேறும்





திரு. சி. இராமலிங்கம்

வினை என்பது, நல்வினை, தீவினை என்று இருவகை வினைகளைக் குறிக்கும். வீடுபேறு வினையினின்று விடுபடுதலாகும். வினையின் விளைவுகளினின்று விடுபட்ட நிலையிலேயே வீடுபேறு அமைவதாகும் என்பது, சிலர் கருத்தாகும். வினையினின்று விடுபட்டு, இறையொடு ஒன்றுதலே, வீடுபேருகும் என்பர் பிறர். வினையின் சுழற்சிக்கு உட்பட்டு, மீண்டும் மீண்டும் பிறப்பு, இறப்பு ஆகிய நிலைகளினின்று நீங்குதல் எவ்வாறு வீடுபேற்றிற்கு வழி வகுக்கின்றது என்று கருதுவதே இக்கட்டுரையின் நோக்கம்.

வினை என்பது செயல் என்று பொருள் படும். வினை மூவகையாக நிகழலாம். மனத்தின் செயலாகிய சிந்தனையும் செயலே ஆகும். வாயின் தொழிலாகிய, பேசுதலும் செயலாகும். உடல்கொண்டு, கருவிகளாகிய, கை, கால்கள் மூலம் செயற்படுதலும் செயலாகும். பொதுவாக வினை, நல்வினை தீவினை என்று பாகுபடுத்தப் பெறுகிறது. நல்வினை என்பது, நல்லதன் ஆக்கத்திற்கு உதவுவது; தீவினை என்பது, தீமையின் ஆக்கத்திற்குக் காரணமாவது ஆகும்.

வினைக்குக் காரணம், ஒருவன் கொள்ளும் விருப்பங்களாகும். இவ்விருப்பம் நிறைவேறற்பொருட்டு, பல்வகையான செயல்களில் அவன் ஈடுபடலாம். இவ்வகையில் தொடர்ந்து வினைகள் ஆற்றப் பெறுகின்றன. அறிவு நிலையிலும் வினைகள் நிகழலாம். உள்ளத்து உணர்ச்சிகளும் செயல்களுக்குக் காரணமாகலாம். இவையன்றி உடலோம்பல் காரணமாகவும் செயல்கள் அமையலாம். ஒருவன், தனது வாழ்விற்கு ஊறு செய்பவனை மற்ருெருவனைக் காண்கின்ருன். அவனது செயல்கள் வெறுப்பைத் தூண்டுகின்றன; உணர்ச்சி வயப்பட்டு, தாக்குகின்ருன். இங்கே, எண்ணம், உணர்ச்சி, செயல் என்ற மூன்று நிலைகளைக் காண்கின்ரேம். ஒன்று மற்ருென்றிற்கு வழி செய்கின்றது; காரணமாகின்றது. இதனலன்ரே, வள்ளுவப்பெருந்தகை, 'மனத்துக்கண் மாசிலனுக' அமைதல், அனைத்தறத்திற்கும் அடிப்படை என்று வற்புறுத்தினுர். பிறிதோரிடத்தில் 'உள்ளத்தில் உள்ளலும் தீது' என்ருர். சுருங்கக் கூறின், உள்ளத்தறம் என்பது உள்ளம், அழுக்காறு, அவா, முதலியனவற்றைக் கடிதல் ஆகும். உள்ளம் தூயதானுல், உரை தூயதாகும். சொல்லறம் என்பது, பயனில சொல்லாமை,

புறங்கூறுமை, பொய் பேசாமை, முதலியன வற்றை உட்படுத்தும்.

செயலறம் என்பது, கொலை, களவு, இன்னு செய்தல் ஆகியவற்றை நீக்குதல் ஆகும். இம்மூவகை அறங்கட்கும், உள்ளத் தறமே அடிப்படை. அதனுல்தான், வள்ளுவர், மாசில்லாத மனம், அடிப்படை யானது என்று கூறுகிருர். மூவகை அறத் தையும் ஒருங்கே வலியுறுத்த எண்ணிய வள்ளுவர்; "அழுக்காறு, அவா, வெகுளி, இன்னுச்சொல் நான்கும் இழுக்கா இயன் றது அறம்" என்ருர். அறவாழ்வு என்பது, பொருமை, ஆசை, சினம், கடுஞ்சொல், (பிறருக்குத் தீமை பயப்பது) ஆகிய இந் நால்வகை குற்றங்கட்கும் இடந்தராதது ஆகும் என்ருர்.

அறநூல்கள், நல்வினைகளை வற்புறுத்து கின்றன. நல்வினைகளால் விளையும் நற் பயன்கள், சமுதாய வாழ்விற்கு ஆக்கம் தருவன. தனியொருவனது வாழ்விற்கும் அரண் செய்வதாகும். ஆனல், சைவ சித் தாந்தம், நல்வினை, தீவினை இவ்விரண்டும் நம்மைக் கட்டுப்படுத்துவன என்று கூறு கின்றன. இவை, பொன்விலங்கு, இருப்பு விலங்கு போல்வன என்பர்.

வினை என்பது, வினை செய்வான், வினை யின் விளைவு, வினை ஆகிய மூன்றையும் குறிக்கும். வினை செய்வான், விளைவைக் கருத்தில் கொள்ளாது, வினையை ஆற்று தலே தன் கடன் என்று கொள்வானே யானல், வினையினல் கட்டுருன் என்பது சமய நூல்களின் கருத்தாகும். வினையினல் விளைவனவற்றைப் பற்றிக் கருதுதல் ஆகாது. வினையை ஆற்றுதலே நமது கடமை என்று பகவத்கீதை வற்புறுத்து கின்றது. பயன் கருதாது, பயன் நோக் காது, அவ்வவர்க்குரிய கடமைகளைச் செவ்வையாகச் செய்வதே, ஒருவன் மேற் கொள்ளத்தக்கது என்று கீதை விளக்கு கிறது. இவற்றை 'ஸ்வதருமம்' என்றும், 'நிஷ்காமிய கருமம்' என்று கீதை பேசு கின்றது. 'ஸ்வதருமம்' என்பதை தற்கருமம், என்று வள்ளுவர் கூறுகிருர். 'பயன் தூக்காது' பணியாற்றுதல் என்று 'நிஷ்காமிய கருமத்தை'க் கூறுகிருர். இவ்வாறு, பயன் கருதாது, அவரவர் கடமைகளினின்று வழுவாது செயற்பட்டால், வினைகளினின்று விடுபடலாம். வினையைச் செய்பவன், தன்னைக் 'கருத்தா' அல்லது செயற்காரணன் என்று கருதுதல் கூடாது. கருதினுல், செயல்களின் விளைவு இவனைப் பற்றும் என்பர். சமுதாயம் இயங்குவதற்கு செயலினின்று நீங்குதல் கூடாது; செயற் படவேண்டும். சமுதாய நலங்குறித்துச் செயல்களில் ஈடுபடுதல் வேண்டும். செயல் களில் ஈடுபடுதல் மூலம், நாம் தூய்மை அடைய இயலும். எவ்வாறு செயற்பட்டால் நாம் தூய்மை அடைதல் இயலும் என்ருல் இறைவனுக்கு அருப்பணித்துத் தன் செய லற்றுப் பணிபுரிதல் மூலம், வினையினின்று விடுபடுதல் இயலும்.

சைவ சித்தாந்தம் மூவகை மலங்களைக் குறிக்கின்றது. அவை, ஆணவம், கன்மம் மாயை என்பனவாகும். இங்கே நாம் கருத்தில் கொள்ளவேண்டுவது, கன்ம மாகும். கன்மத்தை மூவகையாகப் பகுத்துக் காண்பர். அவை சஞ்சிதம், பிராரப்தம், ஆகாமியம் என்பன. சஞ்சிதம் என்பது, பழவினையாகும்; பிராரப்தம் என்பது நிகழ்வினை ஆகும், ஆகாமியம், மேல்வினை யாகும். பழவினைகளின் ஒரு கூறு, நிகழ் வினையாக மாறி, இப்பிறப்பில் நாம் நுகர் வனவற்றிற்குக் காரணமாகும். மற்ற பகுதி எஞ்சி நிற்கின்றது. இப்பிறப்பில் நாம் வாளா இருந்ததில்லை; வினைகளில் ஈடுபடு கிருேம். ஆதலால் இவ்வினைகள் வருகின்ற பிறப்புகளில் பயனை விளைக்கும். இவ்வாறு, முற்பிறப்புகளில் ஈட்டிய வினை இப்பிறப் பில் பயன் தருகின்றன. இப்பிறப்பில் ஈட்டும் வினைகள், அடுத்தடுத்த பிறப்பு களில் பயன் தரும். ஆகவே, வினைகள் நம்மைப் பிறப்பு இறப்புகட்குத் தொடர்ந்து உட்படுத்துகின்றன. வினையின் சுழற்சியி னின்று விடுதலை பெறுமாறு யாங்ஙனம்?

சைவ சமயக்குரவர் நால்வரும் நமக்கு உணர்த்தியருளிய பக்தி நெறியில், வினை களினின்று விடுபடுகின்ற முறைமையை உணர்த்தியுள்ளனர். ஞானசம்பந்தப்

பெருமான் முதற் பதிகத்திலேயே, "ஒரு நெறிய மனம் வைத்துணர் ஞான சம்பந்தன் உரை செய்த திருநெறியத் தமிழ் வல்லவர் **தொல்வினை** தீர்தல் எளிதாமே" என்று அருளுகின்றார். தொல்வினை என்றது பழவினையாகும். தாண்டக வேந்தர், திரு ஆரூர் திருக்குறுந்தொகையுள், "அண்ட வாணன்றன் ஆரூர் அடிதொழப் **பண்டை வல்வினை** நில்லா, பறையுமே" மேலும், ஆரூரைத் தூரத்தே தொழுவார் வினை தூளியே" என்று அருளியுள்ளதை நோக்க. இறைவனைத் தொழுதலால், இறைஞ்சுதலால், புகழை ஓதுதலால், பண்டை வினை விரைந்து நீங்கும் என்பது புலனாகும்.

மாணிக்கவாசகர், "சிந்தை மகிழச் சிவபுராணந் தன்னை **முந்தைவினை** முழுதும் ஓய உரைப்பன் யான்" என்று கூறியுள்ளார். இவர் முந்தைவினை என்று குறிப்பது பழவினையையேயாகும், அச்சோபதிகத்தில்

"முத்தி நெறி யறியாத மூர்க்கரொடு
முயல்வேனை
பத்தி நெறி யறிவித்துப் பழவினைகள்
பாறும் வண்ணம்"

என்று மேலும் கூறுவதால், பண்டை வினைகளின் நீக்கத்திற்குப் பக்தி நெறியே சிறந்தது என்பது தெளிவு. இவ்வுடல் உள்ளளவும், வினையின் விளைவுகளைத் தவிர்த்தல் இயலாது. ஆதலால், பிராரப்தம் என்பது உடற்புசிப்பாகக் கழியும். முற்பிறப்புகளில் ஈட்டிய வல்வினைத் தொகுதியை பழவினை, பண்டைவினை, முந்தைவினை என்று கூறுகிறோம். இத்தொகுதியின் நீக்கத்திற்கு இறையருள்தான் துணை செய்யும் மேலே காட்டிய மேற்கோட் பகுதிகள் இவ்வுண்மையை நன்கு எடுத்து இயம்புகின்றன. சஞ்சிதம், பிராரப்தம் ஆகிய இவ்விரண்டும் நீங்கும் வகையைக் கண்டோம். ஆசாமியம், பயன் கருதாது, பணியாற்றுதலால் கழியும். மணிவாசகப் பெருந்தகை, திருப்பள்ளி யெழுச்சியில் 'எது எமை பணிகொள்ளும் ஆறு' என கேட்டு நிற்கின்றார். 'இறை பணி நிற்றல்' என்று இதைச் சாத்திரம் கூறும் இறைவனுக்குப் பணி செய்தலின் மூலம், தன் செயலறுகிறது. பயன் கருதாது பணி புரிதலால், செய்வினைகளின் பயன்கள் இவனைத் தொடர்புபடுத்த மாட்டா. 'இருவினையொப்பு' என்று சாத்திரம் கூறுவது, இந்நிலையையேயாகும். இன்பம் நேர்கின்றபோது, இறை நெறி நிற்பவன் அதில் திளைத்தலிலன்; துன்பம் நேர்கின்றபோது, உள்ளம் வருந்துதலிலன். இன்பத்துள் இன்பம் விளையாதான் துன்பத்துள் துன்பம் அடையாது விளங்குகின்றான். தன் செயலற்றதால், நல்வினை, என்ற பாகுபாடு அவனைப் பொறுத்த மட்டில் இல்லை. அவன் புரிவன யாவும், இறையருள் வழிநின்று ஆற்றப்பெறுவன வாகும்.

புறச் சமயங்களாகிய பௌத்த சமண சமயங்களிலே, வினைகட்கே ஆட்சிதந்து, வினைகட்கு ஏற்ற பயனை நுகர்விக்கின்ற இறையைப்பற்றிப் பேசுகின்றனை சைவ சமயம் சிறப்பாக இறைவனை வினைகட்குரிய பலன்களைச் சேர்ப்பவன், என்று குறிக்கின்றது. வினை, சடமாதலால், தனக்குரிய வனை தானே தேடி அமையாது. வினையின் விளைவுகளை, அவற்றிற்குரிய பலன்களே வினையைச் செய்தவனுக்கே சேரும் வகை சேர்ப்பிப்பன் இறைவன் என்பது சைவ சித்தாந்தம் உணர்த்தும் உண்மையாகும். இவ்வுண்மையை, அருள்மொழித் தேவர் - நமக்குப் பெரியபுராணத்தில் அருளியுள்ளார்.

"செய்வினையுஞ் செய்வானும் அதன்
பயனுங் கொடுப்பானும்
மெய்வகையில் நான்காகும்
விதித்த பொருள்"

எனக்கொண்டே "இவ்வியல்பு சைவநெறி அல்லவற்றுக்கில்லை" என வகையாற் "பொருள் சிவன்" என்று கூறுகின்றார். வினையைச் செய்த ஆன்மாவும், தனது வினைப் புசிப்பிற்கு ஏற்ற உடலைத் தேடிக் கொள்ளும் ஆற்றல் அற்றது என்பது சித்தாந்தம்.

அருணந்தி சிவனார், சிவஞானசித்தியாரில் "இருவினை இன்பத்துன்பத்திவ்வுயிர் பிறந்து இறந்து வருவது போவதாகும், மன்னிய வினைப்பயன்கள் தருமரன்" என்று

விளக்குகிறார். வினைகட்கு ஏற்ற பயனைத் தருகின்றவன் அரன் என்னில் அவ்வினைகளினின்று விடுவிப்பவனும் அவனே என்று நாம் கொள்ளுதல் வேண்டும்.

நாவுக்கரசர், இப்பிறப்பை வேண்டுகிறார். இறைக்காட்சி அமையுமேல் இப்பிறப்பு வேண்டத்தக்கதே. அருணெறியாளர், இறையைக் காணும் பேறு பெற்றோராவர். ஏனையோர் அருணெறியில் நிற்றல் பொருட்டு இப்பிறவியைப் போற்றுதல் வேண்டும்.

திருவள்ளுவர், கடவுள் வாழ்த்திலேயே இருள்சேர் இருவினை சேராமல் இருக்க, பொருள்சேர் புகழைப் பரவுமாறு பணிக்கின்றார். இது பக்திநெறிக்கு வித்திட்டதாகும். பின்னே, வள்ளுவர், பற்றற பரமனை, பற்றற்றான் பற்றினைப் பற்றுக என்று கூறுகிறார். நமது உலகப் பற்றுகள் நீங்க, இறைப்பற்று மிகுதல்வேண்டும். இதற்கு உலகப்பற்று இறைப்பற்றாக மாற வேண்டும். உலகியல் வாழ்வு, இறையை நடுவணதாகக்கொண்டு விளங்கவேண்டும். சூடிக்கொடுத்த நாச்சியார், 'மற்றை நங்காமங்கள் மாற்று' என்று வேண்டுகிறார். நமது கருவிகரணங்கள் யாவும் இறை வழிபாட்டில் ஈடுபடுதல் வேண்டும். இவ்வாறு ஈடுபட்டால், நமது வினைகள் யாவும் நீங்கும். முந்தைவினை முழுவதும் ஓயும்; பழவினைகள் மாறிப்போகும்; மேல்வினை நமக்கு அமையாது. தொல்வினை தீர்தல் எளிதாகும் ஒருமை மனத்துடன் இறையருளை இறைஞ்சி இறைபணி நிற்போம். வினையின் சுழற்சியினின்று விடுபடுவோம்; வீடுபேறு எய்தும் நெறிப்படுவோம்.



உருவாய் அருவாய் உளதாய் இலதாய்
மருவாய் மலராய் மணியாய் ஒளியாய்க்
கருவாய் உயிராய் கதியாய் விதியாய்க்
குருவாய் வருவாய் அருள்வாய் குகனே



— கந்தரனுபூதி

# ஒழிவற நிறைந்த ஒன்று





திரு ம. ரா. போ. குருசாமி

நுண்மைக்குள் நுண்மையாய்
நுழைந்திலங்கு தத்துவ
உண்மைக்கோர் உணர்வூட்டும்
உயரான்மா யானேதான்

கனலுக்குக் கனலூட்டிக்
கதிரவனில் சோதியாய்
வனப்பூட்டும் திங்களிலே
வாய்த்திருக்கும் நிலவாகி

விண்ணீல வீதியிலே
விரைந்துசுழல் கோள்களிலும்
எண்ணற்ற மீன்களிலும்
இலங்குகின்ற ஒளியாகிச்

சுழன்றுதிரி காற்றைச்
சுற்றிவரச் செய்வதுடன்
சுழன்றுருளும் அலைகளிலே
சுருண்டுவரும் சக்திநான்

ஆண்மகனும் யானே
அரிவையரும் யானே
காண்டகுநற் காளையரும்
கன்னியரும் யானேதான்

உலகத்துள் உயிர்ப்பெடுத்து
உதிக்கின்ற குழவியாய்ப்
பலமின்றிக் கோலூன்றி
வலியுதிர்ந்த கிழவனுமாய்

எல்லாமாய் எங்கணுமே
இலங்கும் பொருளாவேன்
அல்லுருவக் காரியாய்
அச்சுறுத்தும் கடும்புலியாய்

நீந்திவரு மீனாகி
நிறக்கொலுவாம் பறவைகளாய்க்
காந்த இடியிடிக்கும்
கார்மேகம் தானாகி

நிழல்பரப்பும் மரங்களாய்
நிலம்போர்க்கும் புல்வெளியாய்ச்
சுழன்றுவரும் இருதுகளாய்ச்
சுழலுமலைக் கார்கடலாய்ச்

எல்லாமாய் எங்கணுமே
இலங்கும் பொருளாவேன்
எல்லாம் என்னுள்
இருப்பவை மேலும்

என்னிலே தோன்றி
என்னுளே மறைபவை
இன்னதே ஆன்ம
நிலை.

உபநிடதப் பாடல் ஒன்றின் தழுவல் —
எட்வின் ஆர்னல்டின்
ஆங்கில வடிவிலிருந்து.

# HINDUISM:

## A Commonwealth of God







**Thiru S. RAMAKRISHNAN**

Hinduism is not a religion or a dogma but a comprehensive, co-operative, complementary, ever-pulsating and self-revitalising way of life. From time immemorial, it has thrown up a grand *perennial procession* of God-men and God-women to cleanse, purify and revitalise this Way of Life.

In the modern age too, a galaxy of distinguished men and women from Raja Ram Mohan Roy to Dr. S. Radhakrishnan have, with unwearied and unflinching constancy, carried on the purificatory function of ridding Hinduism of its dross and the maladies caused by the intrusion of certain crude and corrupt practices like caste and untouchability.

Maharshi Debendranath Tagore and Keshab Chandra Sen, who founded the Brahmo Samaj; Paramahamsa Sri Ramakrishna and Swami Vivekananda who established the Ramakrishna Math and Mission; Swami Dayananda Saraswathi and the Arya Samaj; Mahadev Govind Ranade and the Prarthana Samaj; Swami Shraddananda and the Gurugul Kangdi; Mahatma Gandhi and the Harijan Sevak Sangh; Maharshi Sri Ramana and the Tiruvannamalai Ashram; Mahayogi Sri Aurobindo and the Auroville; Swami Sivananda and the Divine Life Society, Swami Chinmayananda and the Chinmaya Mission, are some of the shining examples of this continuous cleansing, purifying and revitalising process of our times.

II

It needs no savant to say that the caste system has nothing to do with the Hindu religion as such. As Shri Frank Moraes, till recently Editor-in-chief * recently put it, caste and untouchability merely constitute the "social ethos", which is vastly different from the religious ethos.

To bracket Hindu ethos with some of its dying social ethos is like linking the rose with the thorns.

What then is the Hindu ethos, the real religious ethos behind it?

Hindu scriptures, as is well-known, belong to two categories – the *Srutis* like the *Vedas* and the *Upanishads* and *Smritis* like the celebrated *Yagnavalkya Smriti* and *Manu Smriti.*

---

* If Indian Express.

The *Srutis* embody the fundamental, immutable Truths. The *Smritis* are nothing but codes of conduct for a particular period of time and must needs change as the social milieu changes.

When India switched over to democracy after the British rule, did not sweeping changes take place in the political field? In the same way, as Hindu reformers have always asserted, some of the *Smritis* warranted drastic changes and would continue to need change.

The late Mahamahopadhyaya Dr. P. V. Kane in his *magnum opus*, the *History of Dharmasastra*, has established, much to the chagrin of some of the obscurantist high-priests of our religion, that no Hindu scripture has enjoined the tonsuring of widows. After all, it was a social custom that had accreted into society by compulsion of development and events, to meet a special danger at a particular period when India was subjugated and subjected to repeated waves of military conquests and our young widows were victims of wholesale molestation and rape at the hands of the iconoclastic overlords and conquerors.

With subsequent changes in social and political conditions, when the life and honour of our womenfolk were no longer threatened with such dangers, the practice of tonsuring young widows is no more in vogue. Many more changes have taken place in the Hindu Way of Life by law, by custom and by social reform. The Hindu Code enacted by Free India at the passionate insistence of Pandit Jawaharlal Nehru is the latest concerted effort in the chain of social reforms.

III

The *Bhagavad Gita*, one of the sacred scriptures of India, which is held in veneration by even some of the greatest Western minds, never speaks of caste as something that comes with birth. It merely refers to caste as denoting the diverse qualities and actions of different types of persons. Lord Sri Krishna Himself has said in the Gita that He created the caste system on the basis of quality and action–*guna* and *karma*.

*Chaturvarnyam maya sristam, gunakarmavibhagashah:* "By Me were created the four castes in accordance with the qualities – *guna*, and actions – *karma*".

Accoring to this, all people whose profession is service would belong to the category of Sudras and those engaged in ware fare and statecraft would be Kshatriyas.

And Mahatma Gandhi, by birth a Bania, would eminently be fit to be considered as a Brahmin by his *karma* and *guna* as he painstakingly developed all the qualities of a Brahmin and perseveringly observed the *Mahavratas: ahimsa* (Non-violence), *satya* (truth), *asteya* (non-stealing), *brahmacharya* (self-control) and *aparigraha* (non-possession).

Even in the age-old *Upanishads* there is a beautiful story which testifies to the fact that caste was determined by the character of a man and not according to his birth.

The story is told of one boy, Jabala, who goes to a Rishi to be initiated into religious learning. The teacher asks him about his parentage and the boy is able to give the name of his mother alone. Directed by the Guru, he goes to his mother and asks the name of his father. The mother directs the boy to tell the Guru that even she was in no position to give the answer as she, in younger days, had served in many houses!

The Guru, an ancient Rishi, is astounded by this bold utterance of truth. He

declared: "Verily Jabala, you are indeed a Brahmin, for none other than a Brahmin would have been bold enough to utter such a damaging truth about himself".

It is indeed a fact that with the passage of time, like all other instituions, the caste system too became corrupt and overladen with dust and filth. Birth became the determinative factor for establishing one's caste and the caste system did become a handmaid of social exploitation in Hindu society. But thanks to the sustained work of generations of enlightened Hindus the once seemingly impregnable edifice of the caste barrier is crumbling and the day is not far off when all the evils arising from it will be eradicated.

Today, everyone knows that the caste system was nothing but the old guild system whereby the son took up the father's profession. And its greatest economic evil, even in those days, was that it eliminated competition and accounted for a lot of undeserved privilege, lethargy and nepotism.

This theoretical aspect apart, today none pleads for the retention of the caste system in its present degenerate form.

In fact, the caste system has never been a bar for God-realisation. Some of India's greatest saints, who were and are still being venerated even by the highest of Brahmins, have sprung from among the so-called untouchables. The names of such saints are legion.

Hinduism's *Sannyasi Parampara* is the world's oldest continuing Ascetic Order, founded some 5000 years ago by Rishi Yagnavalkya and perhaps the forgotten fact about Hinduism is that *Sannyasins* who are in the highest ladder of spiritual evolution, have no caste at all. Even when a Brahmin takes to *Sannyas*, he has to give up his caste, sacred thread and all. What does this signify? It proves that God-realisation and caste system have nothing in common with each other. The former is the goal of Hinduism and the latter just a social relic.

IV

How was it that long before the influence of Greece and Rome came to be felt, and even before Egypt and Babylon made their impact on the world scene, India had emerged as the glorious rising sun of the East, shedding light, lusture and vigour round the Universe? How was it that India has to this day continued its record of ceaseless creative striving?

What is the alchemy that enabled India to maintain this unbroken continuity of purposive life, great tradition and noble endeavour? What is the catalyst that helped our ancestors to build up and bequeath to us a unique cultural heritage, endowed with the inherent strength to withstand the ravages of time? What is the magnetic power that made our motherland the perennial source of inspiration to people, not only in India but in many other countries, to pursue excellence, to cultivate the art of creative life?

Undoubtedly it is the message of Hindu religion and philosophy.

V

The core and kernel of Hindu religion, the secret of its survival, the source of its astonishing vitality and the storehouse of its inexhaustible recuperative powers are :

(a) its widely tolerant, non-dogmatic, non-conformist and all-pervasive outlook ;

(b) its catholicity and freedom from fossilised thinking ;

(c) its legions of known and unknown votaries, in the past

in the present, conscientiously striving to live up to its great ideals, at the same time welcoming noble thoughts from all sides; Aano *bhadrah kratavo vantu visvatah :*

(d) its refusal to go about forcing or tempting other people to desert their religion and enter its own fold ;

(e) its inherent vitality and inner power of assimilation, elimination and adjustment according to changing times ;

(f) its maintaining the ancient tradition of veneration for the sentinels of religion and culture of all climes. Where else in this wide world would the high priet of a different faith receive the tumultuous welcome which was accorded to Pope Paul VI in Bombay in 1964? Eighty per cent of the vast concourse which thronged to welcome him, listen to him and see him off comprised Hindus. They looked upon the Catholic Pontiff not as a leader of another faith, but as one who stood for ethical and spiritual values, a man of God ;

(g) its precious heritage of an unending cleansing, purificatory and revitalising process initiated at frequent intervals by its own vigilant adherents and the reintegration of fundamental values to suit the changing needs of the times, in the context of the ever-recurring unfoldment of greater and greater mysteries of nature–but always tied to the sheet-anchor of ethical and spiritual values ;

(h) its belief that all living being are enfranchised in the Commonwealth of God, and are brothers and kinsmen comprising one fraternity.

The inner core of Hinduism is that man is not merely a Creature of Time. *Sanatana Dharma* stands for *Rita* — the majesty of the Moral Law. It looks upon the whole Universe as being under the purview of the Moral Law; that life is the scene of man's moral choice; that all men are brothers and children of the Immortal–*Amritasya Putrah.*

## VI

Hinduism is the latter-day name given to this very, very old but ever-young, vital and vibrant Way of Life. It existed long before the "founded" religions. It does not date back to a particular point of time.

It is the distilled essencc of experiments with life and the cumulative life-experience of generations of *Rishis, Munis* and *Tapasvins.*

The ageless *Vedas* are its source: *Vedo 'Khilo Dharmamulam*. The Vedas and the Upanishads gave the first norms of creative life for mankind. With the passage of time, the *Kalpa Sutras*, the *Smritis*, the *Ramayana*, the *Mahabharata*, the *Puranas* and *Darshanas* moulded this Way of Life aceording to the particular *Yugadharma* and the exigencies of time, but never deviating from the basic concept of life.

That is why, in spite of its antiquity, Hindusium is not aging. That is why it is "momentous", as many Western savents have affirmed. The reasons for its deathlessness are peculiar to the universal message it spreads. In Hinduism we have a fine combination of the ideal of action and the ideal of renunciation. Asked to difine Hinduism in two words, Swami Vivekananda

said: ***Pravritti*** and ***Nivritti.*** We have here a harmonious blending of action and contemplation.

Let not strangers be confused by the innumerable names of dieties and forms of worship enjoined by Hinduism. They are scaffoldings of different designs to suit the needs of men and women of varying temperaments, aptitudes and psychological stages, abounding in all societies. Even materialists and agnostics have been provided for. Every individual man, bird and beast and even insect has a place in this scheme of life. The concept of the unity of life is a peculiarity of Hinduism; and it envisages salvation not for human beings alone but for all the creatures of god.

Noted philosoper C. E. M. Joad says: "Hinduism developed from the first a wide tolerence. Hindus do not proselytise: they do not lay exclusive claim to salvation, and they do not believe that God will be pleased by the wholesome slaughter of those of His creatures whose beliefs are mistaken. As a result, Hinduism has been *less degraded than most religions by the anomaly of creed wars*".

Mahatma Gandhi, who exemplified the life of a true Hindu. who was a firm believer in *Sarva Dharma* Samanatva — equal respect for all religions — and one of the greatest crusaders for the eradication of untouchability, has stated in unmistakable terms why he was a Hindu. "I find Hinduism to be the most tolerant of all religions known to me. Its freedom from dogma makes a forcible appeal to one. Not being an exclusive religion, it enables the followers of that faith not merely to respect all other religions but it also enables them to admire and assimilate whatever may be good in the other faiths".

Hinduism has always been and it will ever be. It is *anadi*, beginningless, *ananta*, endless and *Sanatana*, eternal as its name *Sanatana Dharma* or the Law Eternal proclaims.



**திருவாளர்**

எவ்வுயிரும் பொதுஎனக்கண் டிரங்கிஉப
கரிக்கின்ருர் யாவர் அந்தச்
செவ்வியர்தம் செயல்அனைத்தும் திருஅரு
ளின் செயல்எனவே தெரிந்தேன் இங்கே
கவ்வைஇலாத் திருநெறிஅத் திருவாளர்
தமக்கேவல் களிப்பால் செய்ய
ஒவ்வியதென் கருத்தவர்சீர் ஓதிடஎன்
வாய்மிகவும் ஊர்வ தாலோ

— *திரு அருட்பா*

Tel. KAPALICHARM Phone: 71670

# SRI KAPALEESWARAR TEMPLE

MYLAPORE - MADRAS-4

## AN APPEAL FOR FUNDS

Sri Kapaleeswarar Temple in Mylapore, is one of the sacred shrines in Tamilnadu virtually over-flows with pilgrimage public from far and wide. The beautiful temple, picturesque tank and the majestic Gopuram draw visitors from all parts of the Globe. The Saivite Saints of the 7th century, Sambandhar and Appar have sung about this shrine in their hymns. Lord Singaravelar in this temple is also sanctified by the Thiruppugazh song of Arunagirinathar. Bringing back to life of the girl Poombavai by the Saint Gnana Sambandhar is considered to be the most beautiful miracle in this temple. Thus this temple is famous for its hoary traditions, historical significance and mythological importance.

In this famous, ancient holy temple, it is proposed to pave the praharam with the granite cutstone at an estimated cost of Rs. 2,00,000/- The devotees are requested to come forward with their support and to contribute liberally their mite to make this holy task a success. The Hon'ble Minister for Hindu Religious and Charitable Endowments (Administration) Department, Madras, Thiru M. Kannappan has inaugurated this scheme on 22—8—71. The cost of granite cutstone pavement is only Rs. 400/- per one hundred square foot.

It is for the devotees to complete the noble task and to restore the ancient temple to its original grandeur. The donations may be sent to the ' EXECUTIVE OFFICER, SRI KAPALEESWARAR TEMPLE, MYLAPORE, MADRAS-4" and to get the receipt for the amount paid from the Devasthanam office and to receive the blessings of SRI KARPAGAMBAL KAPALEESWARAR

**T. BALAKRISHNAN,** J. P.
**S. JAYARAMAN**
**R. KOTHANDARAMAN**
*Trustees*

**T. NAGARAJAN,** B. Sc.
*Asst. Commissioner/Executive Officer*



# கபிலர் அகவலும்



# அதன் காலமும்



திரு. ஏ. வி. சுப்பிரமணிய அய்யர்

தமிழ் நாட்டில் சாதி எதிர்ப்பு இயக்கம், கிறித்து மதமும் மேனாட்டுத் தற்கால நாகரிகமும் வந்த பிறகுதான் தோன்றியது என்று சிலர் சொல்வதுண்டு. இது தவறு. பண்டைக் காலத்திலிருந்தே சாதி அமைப்பு முறைக்கும் அதன் அடிப்படையில் எழுந்த ஏற்றத்தாழ்வுகளுக்கும் எதிர்ப்பு தோன்றியிருந்தது. சைவ, வைணவ சமயங்கள், கி. பி. 6, 7 நூற்றாண்டுகளில் சமண பௌத்தங்களின் வியாபகத்தை எதிர்த்து வெற்றி பெற்று, சமுதாயத்தில் தனி ஆட்சி செய்யத் தொடங்கிய காலத்திலேயே, சாதி முறைக்கு எதிர்ப்பு எழுந்தது. திருமூலர் "ஒன்றே குலம், ஒருவனே தேவன்" என்று பாடினார். சைவ, வைணவ சமயத் தலைவர்கள், அவரவர்கள் சமய வரம்புக்குள் பக்தர்கள் எல்லோரும், எந்த சாதியைச் சேர்ந்தவர்களாயிருந்தாலும் சமம் என்று பறைசாற்றினார்கள். நந்தனார், திருப்பாணாழ்வார் முதலியோரின் வரலாறு இந்த உண்மையை எடுத்துக் காட்டுகிறது. சற்று பிற்காலத்தில் சித்தர்கள், சாதி அமைப்பின் மீது தமது சொல்லம்புகளைப் பலமாகத் தொடுத்திருக்கிறார்கள்; ஈசன் மீது பக்தி செலுத்துவதே உய்வதற்கு ஒரே வழி என்று பாடினார்கள்.

காரணங்களோடு அரிய சக்தியுடன் சாதி அமைப்பை எதிர்க்கும் பாட்டு ஒன்று தமிழ் இலக்கியத்தில் காணப்பெறுகிறது. இதற்குக் கபிலர் அகவல் என்று பெயர். இந்தப் பாட்டு, அதன் தலைப்பு கூறுவது போல் அகவல் நடையில் அமைந்திருக்கிறது; 135 வரிகளையே உடையது. இது எப்போது யாரால் எழுதப் பெற்றது என்பது தமிழ் இலக்கிய வரலாற்றில் ஒரு தீராத புதிராக இருக்கிறது; பல கருத்து வேறுபாடுகள் இருந்து வருகின்றன. சிலர் கி. பி. 19ம் நூற்றாண்டிலிருந்த யாரோ ஒரு பெயர் தெரியாத புலவன் பாடியிருக்கிறான் என்றார்கள். வேறு சிலர் இது 17ம் நூற்றாண்டைச் சேர்ந்தது என்று கருதினார்கள்; இதன் வாக்கும் சொல்லமைப்பும் மிகவும் பிற்காலத்தைச் சேர்ந்தன என்று காரணம் கூறினார்கள். இன்னும் சிலர் இது 15ம் நூற்றாண்டில் ஆக்கப் பெற்றதாகக் கொள்ளலாம் என்று கொண்டு அதன் நடையானது, நூல் மிகவும் பழையது எனவோ, அல்லது மிகவும் பிற்காலத்தது எனவோ கூற இடம் தராது என்று சொன்னார்கள். ஆனால் பழைய காலம், பிற்காலம், மிகவும் பிற்காலம் என்ற தொடர்கள் எல்லாம் தெளிவற்றவை. சற்று தெளிவாகக் கூற வேண்டுமானால், தமிழ் இலக்கியத்தின் வளர்ச்சியையும் வரலாற்றையும் பொறுத்த வரையில், பழைய காலம் என்பது கி. பி. 6 வது நூற்றாண்டோடு முடிவதாகவும், அதி

லிருந்து பத்து நூற்றாண்டுகளை இடைக் காலமாகவும், 16 ம் நூற்றாண்டிலிருந்து பிற் காலமாகவும், 19 ம் நூற்றாண்டிலிருந்து தற் காலம் எனவும் வகுக்கலாம்.

கபிலர் அகவல், அதை எழுதிய கவி யின் கற்பனை; அதில் நாடகத்தன்மை முனைந்து நிற்கிறது. கபிலர் என்ற புலவர் எழுதிய பாட்டு என்று கொள்வது பொருத்தமில்லை. கவிஞன், தமிழ் நாட்டில் வெகு காலமாக நிலவி வந்த ஒரு கதையை **(Legend)** அடிப்படையாக வைத்து அந்தக் கதையில் வரும் கபிலர் என்பவரை ஒரு பாத்திரமாகப் படைத்து, அவன் மூலமாக சாதி முறையை எதிர்த்து ஒரு உணர்ச்சி வசமான பேச்சைப் புனைந்திருக்கிறான். கதையின்படி, கபிலன் பகவன் என்ற ஒரு பார்ப்பனனுக்கும், ஆதி என்ற ஒரு புலைச் சிக்கும் பிறந்த எழுவர்களுள் ஒருவன் என் பதும், அவர்கள், தங்களுடைய திருமண ஒப்பந்தத்தின் படி பிறந்த ஒவ்வொரு குழந்தையையும் அந்த இடத்திலேயே விட்டுப் போய் விட்டார்கள் என்பதும், கபிலன் ஒரு அந்தணரால் எடுத்து வளர்க் கப்பட்டான் என்பதும். அந்த அந்தணர் அவனுக்கு உரிய காலத்தில் உபநயனம் செய்ய யத்தனித்த போது பிற அந்தணர் கள், குழந்தையின் குலம் தெரியாததால் அதை எதிர்த்தார்கள் என்பதும், இந்த எதிர்ப்பைச் சகியாத கபிலன் அவர்களுக்கு இந்தப் பாட்டின் மூலம் பதிலும் சமா தானமும் சொன்னான் என்பதும் நிகழ்ச்சி களின் அமைப்பு. இது பொய்க்கதை என பல தமிழ் அறிஞர்கள் கூறியிருக்கிறார்கள். கதை பொய்யாயிருக்கலாம். அல்லது மெய்யாயிருக்கலாம்; அதைப்பற்றிய ஆராய்ச்சி இக்கட்டுரைக்குத் தேவையில்லை. ஆனால் அது வெகு காலமாக இந்த நாட்டில் நிலவிவந்திருக்கிறது என்பது உண்மை. தனிமனிதன் ஒருவன் அதை சிருஷ்டித் திருக்க முடியாது. அக் கதையைப் பயன் படுத்தி ஒரு கவிஞன் கபிலர் அகவல் என்ற அற்புதமான பாட்டைப் பாடினான் என் பதும் உண்மை.

சிலர் கபிலர் அகவல் என்பதற்குக் கபிலர் என்ற புலவர் செய்த அகவல் என்று கைக்கொண்டு யார் அந்தக் கபிலர் எனத் தெரிய முயன்றார்கள்; முடிவு கிட்டவில்லை. முன்னர்க் கூறியிருப்பது போல் கபிலர் என்ற ஒரு பாத்திரம் வாயிலாக பெயர் தெரியாத ஒரு புலவன் ஆக்கிய பேச்சு இந்தப்பாட்டு. இதன் காலத்தை முதலில் ஆராய்வோம்.

பட்டினத்தார் சிவவாக்கியர், பத்ர கிரியார் ஆகிய மூன்று கவிகளின் பாடல் களை ஆராய்ந்தால் வெளிச்சம் தோன் றலாம். பட்டினத்தார் கி. பி. 10ம் நூற் றாண்டைச் சேர்ந்தவர்; பரம சிவ யோகி; முற்றுந் துறந்த சித்தர். அவர் பாடல்களில் சில பதினோராந் திருமுறையில் தொகுக்கப் பெற்றிருக்கின்றன. வேறு சில அவ்வாறு தொகுக்கப் பெறவில்லை, தக்க காரணங் களால். இவை பிற்காலத்தில் பட்டினத் தார் பெயரை வைத்துக் கொண்ட ஒரு சித்தரால் பாடப்பெற்றவை என்று சிலர் கருதுகிறார்கள். இதற்கு ஆதாரம் இல்லை. அதே போல் சிவவாக்கியரும் பிற்காலத் தவர் என்பர் சிலர். இதற்கும் ஆதாரம் இல்லை. சிவவாக்கியர், பட்டினத்தாரைப் போல் செல்வத்தைத் துறந்த ஒரு யோகி; சிலகாலம் சைவத்துறவியாயிருந்த பின்னர் வைணவத் துறவியானார். பதினோராந் திரு முறையில் சேர்க்கப் பட்டிருக்கும் திருவிடை மருதூர் மும்மணிக் கோவையில்:

"அத்தகு செல்வத் தவமதித்தருளிய
சித்தமார் சிவவாக்கிய தேவர்"

என்று பட்டினத்தார் பாடியதிலிருந்து, பட் டினத்தார், தமது காலத்திலோ அதற்குச் சற்று முன்னரோ இருந்த சிவவாக்கியரைத் தான் குறிப்பிடுகிறார். தமிழ் சமய, இலக் கிய வரலாற்றில் வேறொரு சிவவாக்கியர் இருந்ததாகத் தகவல் இல்லை. பட்டினத் தாரின் நண்பர் பத்ரகிரியார் என்பது மரபு. கி. பி. 15 ம் நூற்றாண்டைச் சேர்ந்த கண் ணுடைய வள்ளலார் எழுதிய 'ஒழிவி லொழுக்கம்' என்ற நூலில் 'பட்டினத்துப் பிள்ளையைப் பத்ரகிரியைப் பரவி', என்று இவர்கள் இருவரையும் சேர்த்துப் பாடி யிருப்பதிலிருந்து, இந்த மரபு ஊர்ஜித மாகிறது. பத்ரகிரியார் பட்டினத்தார்

காலமாகிய கி. பி 10ம் நூற்றாண்டைச் சேர்ந்தவர். இதை ஒப்புக் கொள்ளாதவர் கூட பத்ரகிரியார் எப்படியும் கி. பி. 15ம் நூற்றாண்டுக்கு முந்தியவர் என்று ஒப்புக் கொண்டுதான் ஆகவேண்டும்.

பத்ரகிரியாரின் பாடலில் (பத்ரகிரியார் புலம்பல்)

"ஆதிபகலர் சொன்ன ஆகமத்தின்
சொல்படியே
சாதிவகை இல்லாமல் சஞ்சரிப்பது
எக்காலம்"

என்ற கண்ணி காணப்பெறுகிறது. இதற்குப் பொருள் என்ன? இதில் பத்ரகிரியார் கபிலர் அகவல் என்ற பாட்டைத் தான் குறிக்கிறார் என்று நியாயமாய் ஊகிக்கலாம். சாதியை எதிர்த்து கபிலர் என்ற ஒருவர் பாடியதாக வேறு கவி தமிழில் இருப்பதாகத் தெரியவில்லை. 'ஆதி கபிலர்' என்று குறிப்பிட்டிருப்பதில் பத்ரகிரியார் பழையக் கதைப்படியுள்ள ஆதியின் மகன் கபிலர் என்ற கருத்தில் எழுதியிருக்கிறார். 'ஆதி' என்பதற்கு 'முன்னாள்' அல்லது பழைய என்ற பொருள் கொள்ள முடியாது. பண்டைக் கால கபிலர் என்ற பெயருடையவர்கள் பாடல்களில் சாதியைப் பற்றிய பிரஸ்தாபமோ அதற்கு எதிர்ப்போ இல்லை. ஆகையால் பத்ரகிரியார் குறிப்பிடுவது கபிலர் அகவல் என்ற பாட்டைத்தான். ஆகையால் இந்தப் பாட்டு பத்ரகிரியார் காலமாகிய கி. பி. 10ம் நூற்றாண்டையோ அதற்குச் சிறிது முன்னுள்ள காலத்தையோ சேர்ந்திருக்க வேண்டும். பத்ரகிரியார் பட்டினத்தார் காலத்தவர் இல்லை என்று கொள்பவர்களும், பாட்டு கி. பி. 14ம் நூற்றாண்டைச் சேர்ந்தது என்று கருத்தைத் தவிர்க்க முடியாது.

பாட்டின் நடையும் அதில் கையாளப் பெற்ற சொற்களும் இந்தக் கருத்துக்குத் தடையாய் இருப்பதாகச் சிலர் கூறலாம். ஆனால் இந்த வாதத்தில் வலிமை இல்லை பாட்டின் நடையிலோ அல்லது அதன் சொல்லாட்சியிலோ அது பிற்காலத்தது தான் என்று நிச்சயமாய் சொல்லக் கூடிய தன்மை இல்லை. ஒரு பாட்டின் நடையும் சொல்லாட்சியும் அதைப் பாடிய கவிஞனின் மனப் போக்கையும் பயிற்சியையும் ஆற்றலையும் பொறுத்தவை. அவன் காலத்திலுள்ள பிற புலவர்களின் நடையையோ, சொல் மரபையோ அவன் கையாள வேண்டும் என்ற நியதியும் இல்லை. கி. பி. 10ம் நூற்றாண்டில் வழக்கில் இல்லாத சொற்கள் பாட்டில் இருக்கின்றன என்று கூற முடியாது. தேவார திவ்யப் பிரபந்த காலத்தில் கவிஞர்களின் தமிழ் நடை, சங்க காலப் புலவர்களின் நடையினின்று பெரிதும் வேறுபட்டு எளிதாக அமைந்திருப்பது, தமிழ்க் கவிதையின் வளர்ச்சியில் நேர்ந்த ஒரு அற்புதக் கட்டம். பேச்சு வழக்கிலுள்ள பல சொற்களை ஒதுக்காமலும் புராணக் கதைகளை அதிகமாகக் குறிப்பிட்டும், கவிஞர்கள் பாடத் தொடங்கினார்கள். இந்த இரண்டு இயல்புகளும் கபிலர் அகவலில் காணப் பெறுகின்றன. அது கி. பி. 10ம் நூற்றாண்டில் வாழ்ந்த சமுதாய முன்னேற்றக் கருத்துக்களைக் கொண்ட ஒரு புலவனால் எழுதியிருக்கக் கூடியதுதான். பொருளிலுள்ள புரட்சித் தன்மை நடையிலும் பிரதிபலித்திருக்கிறது; அவ்வளவுதான்.

சாதி அமைப்பு முற்றிலும் தவறு என்று கவிஞன், கபிலன் என்ற ஒரு பாத்திரத்தின் மூலம் உலகத்தோருக்குச் சொல்லும் வாதங்கள் வலிமையுடன் இருப்பது மன்றி, பாட்டும் சக்தியுடன் உருவாகியிருக்கிறது. இயற்கையே சமத்துவத்தைப் பறைசாற்றுகிறது என்று சமத்காரமாக கவிஞன்

மாரிதான் சிலரை வரைந்து
பெய்யுமோ?
காற்றுஞ் சிலரை நீக்கி வீசுமோ?
மானிலஞ்சு மக்கமாட்டேனென்னுமோ?
கதிரோன் சிலரைக் காயே
னென்னுமோ?

என்ற வரிகளில் காட்டுகின்றான். பின்னர் மிகுந்த உணர்ச்சிப் பெருக்கோடு பாட்டை இவ்வாறு முடிக்கிறான்:

குலமுமொன்றே குடியுமொன்றே
இறப்புமொன்றே பிறப்புமொன்றே
வழிபடு தெய்வமு மொன்றே யாதலால்
முன்னோருரைத்த மொழி தவறாமல்

எந்நாளாயினு மிரப்பவர்க்கிட்டுப்
புலேயுங் கொலேயுங் களவுந் தவிர்ந்து
நிலேபெறவறத்து நிற்பதையறிந்து
ஆணும் பெண்ணுமல்லதை யுணர்ந்து
பேணியுரைப்பது பிழையெனப் படாது
சிறப்புஞ் சிலமுமல்லது பிறப்பு நலந்
பேதையீரே. [தருமோ

இனி ஒன்றிரண்டு வார்த்தைகளேக் கூறிக் கட்டுரையை முடிப்போம். கபிலர் அகவலேப் பாடிய புலவன், எவ்வளவு சக்தியுடனும், வாதத்திறமையுடனும் சாதி அமைப்பை எதிர்த்திருக்கிருனே அவ்வளவு சக்தியுடன் இக்காலத்துச் சீர்திருத்த வாதிகளும், பகுத்தறிவு வாதிகளும் எதிர்க்கவில்லே. அந்த எதிர்ப்புக்குப் பழைய கதை ஒன்றைச் சட்டமாகப் பயன்படுத்திக் கொண்டு நாடகத் தன்மையுடைய ஒரு சித்திரத்தைத் தீட்டியிருக்கிருன். இன்று சாதி அமைப்பை எதிர்ப்பவர்களில் சிலர் நாத்தழும்பேற நாத்திகம் பேசுகிருர்கள். ஆனல் கபிலர் அகவல்பாடிய புலவன் பழுத்த ஆத்திகன். தெய்வ நம்பிக்கையில் திளைத்து ஊறினவன், கடவுள் தத்துவத்தின் அடிப்படையில் அவன் மக்களுக்குக் கூறும் அறிவுரை அமைந்திருக்கிறது. பாட்டில் முன்னிருந்த சான்ருேர் பாடல்களின் எதிரொலியும் பல இடங்களில் கேட்கிறது. இவ்வளவு அருமையான பாடலே ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் பாடிய இப்புலவனின் புகழ் ஓங்குக.



## மரணமிலாப் பெருவாழ்வு

நினேந்து நினேந்து உணர்ந்து உணர்ந்து
நெகிழ்ந்து நெகிழ்ந்து அன்பே

நிறைந்து நிறைந்து ஊற்றெழும் கண்
ணீர தனல் உடம்பு

நனேந்து நனேந்து அருளமுதே
நன்னிதியே ஞான

நடத்தரசே என்னுரிமை
நாயகனே என்று

வனேந்து வனேந்து ஏத்துதும் நாம்
வம்மின் உலகிய லீர்

மரணமிலாப் பெருவாழ்வில்
வாழ்ந்திடலாம் கண்டீர்

புனேந்துரையேன் பொய்புகலேன்
சத்தியம் சொல்கின்றேன்

பொற்சபையில் சிற்சபையில்
புகுந்தருணம் இதுவே.

— திரு அருட்பா







# பெரும்பெயர் முருகன்







**திரு பி. எஸ். கே. லக்ஷிமீபதி ராஜூ**

உயிர்களின் துயர்போக்கி அந்தமில் இன்பத்து அழியா வீடுபேறு அளிக்கும் ஒப்பற்ற வள்ளல் முருகப்பெருமான் ஆவான். தமிழ் நாட்டில் முதல் நிலமாகக் கொள்ளப்படும் குறிஞ்சி நிலக் கடவுளும் அவனே. ஒவ்வோர் அணுவினும் உள்ளீடாய் உறைந்து, உயிர்க்கு உயிராய் நிலைத்து இவ்வுலகை இயக்குகின்ருன். எங்கும் நிறைந்து எவ்வுயிர்க்கும் தானே பற்றுக்கோடாய் நிற்கின்ருன். இப்பேருலகில் காணப்படுகின்ற அழகே அக்கடவுளின் தோற்றம்; அதுவே செம்பொருள்–செழும் பொருள் ஆகும். அன்பர்களது உள்ளத் தாமரையில் மலர்ந்து, மணங்கமழ்ந்து, இன்பம் ஊட்டிப் பேரின்ப வீடு அளிப்பவனும் இவனே. பரம்பொருளின் திருவருள் கைவரப் பெற்ற சான்ருேர்கள், உலகம் கடைத்தேறும் பொருட்டு இப் பேருண்மையைத் தெளிவுறக் கூறியுள்ளனர்,

அன்புநெறி; அறிவுநெறி ஆகிய இரண்டும் இறைவனது திருவருளைப் பெறற்குரிய நெறிகளாகும். இவ்விரண்டு நெறிகளாலும் வீடு பேரின்பத்தை அடையலாம். மெய்யன்பு உடையார்க்கு முருகப் பெருமான் தானே எளியவனுக வந்து அருள்புரிவான். அவன் எளியார்க்கும் எளியன்; அன்பே வடிவானவன். பெறற்கரிய பெரும் பொருளை உடையவன். அப்பொருளைப் பெறுதற்குரிய பெரு முயற்சியை மேற்கொண்டு அவனிடம் செல்லுவோர் மிகக் குறைவு. ஆகையால் தேவையாளர்களை அப்பெருமானே தேடி அலைகின்ருன். அவர்கள் இருக்கும் இடத்தை அடைந்து, அவர்களுக்கு மிகப் பேரின்பமாகிய வீடுபேற்றை அருள்கின்ருன். நூலறிவு; சடங்கு; ஆகியவற்றை அறியாதவர்களும் அவனிடத்தில் மெய்யன்பு செலுத்திஞல் போதும், அவர்கள் பொருந்திய இடத்தை அப்பெருமானே அடைந்து அருள் புரிகின்ருன்.

உயிர்கள் "ஆணவம்; கன்மம், மாயை" ஆகிய மும்மலச் சேற்றுள் சிக்கிக் கட்டுண்டு கிடக்கின்றன. அத்தளையினின்றும் விடுபட்டு மெய்யின்பம் பெற அருள் பாலிப்பவனும் இப்பெருமானே. அதிகாலையில் அசைவற்ற பெருங்கடற் பரப்பில் எழுகின்ற சூரியனது தண்ணொளியிலும் காட்சியளிக்கின்ருன்; ஒளிபுகாத கடம்பவனத்தில் கையினல் தடவிப் பறிக்கும் கடம்பம்பூவிலும் காட்சியளிக்கின்ருன். உயர்ந்த ஒழுக்கத் திணையுடைய "கைபுனைந்தியற்ருக்கவின் பெருவனப்பினரான" குரர மகளிர் அவனைப் பாடி ஆடும் சோலையிலும் காட்சி

தருகின்ருன்; பேய்மகள் கூத்தாடும் பிணக் காட்டிலும் காட்சி தருகிருன். அடங்காத அவுணரை அடக்கிச் சூரனை அழித்த உக்கிர மூர்த்தியாகவும் அவனே காட்சி தருகிருன். உலக மக்கள் மேற்கொள்ளும் அனைத்து முயற்சிகளையும் ஆறு திருமுகங்களாகவும், அவற்றின் இயக்க நிலைகளைப் பன்னிரண்டு திருக்கரங்களாகவும் கொண்டு காட்சி தருகிருன். அறியாமைச் செருக்குற்ற நான்முகன் முதலிய அனைவரையும் அடக்கி ஆள்கிருன். இகலொரு செற்றம் நீக்கிய மனத்தினையும், கற்ருேர் அறியா அறிவினையும்; கற்ருேர்க்குத் தாம் வரம்பாகிய தலைமையையும், காமமொடு கடுஞ்சினம் கடிந்த அறவொழுக்கம் சான்ற முனிவர்களும் அவன் அருளை நாடிக் காத்திருக்கின்றனர். கந்தருவர்; பதினெண் கணங்கள்; இந்திரன், கருடக் கொடியையுடைய திருமால்; மூவெயில் முருக்கிய முரண்மிகு செல்வனை சிவபிரான், ஆகியோரும் அப் பெருமானது அருளைநாடி வருகின்றனர். ஆறெழுத்து அருமறை ஓதும் அந்தணர்களும் அவனது திருவருள் வேண்டிக் கிடக்கின்றனர்.

அன்பர்க்கு அடியனுக முருகன் கானவர் அன்பொடு அயரும் குரவைக்கூத்தில் அவர்க்கு முதல் கைகொடுத்து மகிழ்ந்து விளையாடுகின்ருன். ஆன்மாக்கள் பல வற்ருேடும் இயைந்து அவற்றிற்குப் பேரின்பம் அளிக்கும் தலைவனை அவன், ஊர் தோறும் மேற்கொள்ளும் விழாவிலும், மெய்யன்புடன் துதிப்போர் பொருந்திய இடத்திலும் நீக்கமற நிறைந்திருக்கிருன். காடு; சோலை; ஆற்றிடைக்குறை; ஆற்றங்கரை; நாற்சந்தி; முச்சந்தி; ஆகிய இடங்களிலும் இருக்கிருன். மலர்ந்த கடம்பமரம்; அம்பலம்; ஊர் மன்றம்; அருட்குறியாக நடப்பட்டவை ஆகிய அனைத்திலும் நீக்கமற நிறைந்திருக்கின்ருன். ஆனல் பேரின்பம் பயக்கும் அவனது அருள் வெள்ளத்தினை உணர்ந்து நுகரமுடியாமல் விலங்குத் தன்மையுடையோர் அஞ்சி ஓடுகின்றனர். முருகப்பெருமானைப் பாட்டுடைத் தலைவனுகக் கொண்ட முதல் தமிழ் நூலாகிய திருமுருகாற்றுப்படையில் இப்பேருண்மையை ஆசிரியர் நக்கீரர் தெளிவுபடுத்துகின்ருர்.

"சேவடி படரும் செம்மல் உள்ளமொடு செலவு நயந்தால், முன்னிய வினையை இன்னே பெறலாம்" என்று உறுதியாகக் கூறுகிருர் ஆசிரியர். அப்பெருமான் "ஆல்கெழு கடவுள் புதல்வன், மலைமகள் மகன்; மாற்ருேர் கூற்று; நூலறி புலவன்; பொருவிறல் மள்ளன்; அந்தணர் வெறுக்கை; அறிந்தோர் சொல்மலை; குறிஞ்சிக் கிழவன்; நன்மொழி புலவர் ஏறு; நசையுநர்க்கு அளிக்கும் இசை பேராளன்; பரிசிலர்த் தாங்கும் உருகெழு நெடுவேள்; சூர்மருங்கு அறுத்த பொய்ம்பின் மதவலி; போர்மிகு பொருநன்; அவனை அளந்து அறிதல் மன் உயிர்க்கு அரிது", ஆதலின் தான் அறிந்த அளவு-மேற்கூறியவாறே-அவனைப் போற்றி வணங்கினல் போதும்; உடனே முருகப் பெருமான் "தெய்வம் சான்ற திறல் விளங்கு உருவின் வான்தோய் நிலைப்பின் தான் வந்தெய்தி, அணங்கு சால் உயர்நிலை தழீஇப், பண்டைத்தன் மணங்கமழ் இளநலம் காட்டி,—அஞ்சல் ஓம்புமதி, அறிவன் நின் வரவு என அன்புடை நன்மொழி"— கூறுவன். அதன்பின் "கடல் சூழ்ந்த உலகில் ஒப்பற்றவன் நீயேயாகத் தோன்றும்படி, எல்லாவற்றிலும் சிறந்ததும், பெறுதற்கரியதுமாகிய வீடுபேற்றினை அருள்வான்" எனத் தெளிவுறக் கூறுகின்ருர் நக்கீரர்.

"நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த-மறைமொழி தானே மந்திரமாகும்" ஆதலின் "சேவடி படரும் செம்மல் உள்ளத்துடன், முகனமர்ந்து ஏத்திக் கைதொழுது பரவிக் கால்உற வணங்குவோம் நல்லிசைச் செவ்வேட் சேயின் திருவடிகளை" பெறற்கரிய பெரும் பொருளையுடைய கலியுக வரதனை பெரும்பெயர் முருகன் இம்மை, மறுமை ஆகிய இருமையிலும் இன்பம் அருளிக் காப்பாற்றுவான்.

"காக்கக் கடவிய நீகாவா திருந்தக்
கால்
ஆர்க்கும் பரமாம் அறுமுகவா—பூக்கும்
கடம்பா முருகா கதிர்வேலா நல்ல
இடங்காண் இரங்காய் இனி." ❁

# சிங்கார வேலன் என் தோழன்







திரு. பெரி. சிவனடியான்

மயிலில் அமர்ந்த மால்மரு காவுனைக்
குயிலென மாறிக் கூவிட முயல்கிறேன்.
காத்துக் காத்துக் களைப்படை யாமல்
பூத்துக் குலுங்கும் புதுமலர் முகத்தாய்!
நேற்றுப் பிறந்தவன் நின்புகழ் பாடவா?
காற்றைக் கடலைக் கைக்குள் அடக்கவா?
மலையைச் சிறுமண் மதிப்பிட முயல்வதா?
சிலையைச் சிறுவன் செதுக்கிட இயலுமா?
சந்தக் கவிமழை தரணியில் பெய்தபின்
இந்தத் துளியா ஏத்திப் புகழ்வது?
"திருப்புகழ்" பெற்றபின் சிறியவன் புகழ்வதா?
விருப்ப மிருப்பினும் விரித்திடத் துணிவதா?
கந்தன் புகழைஎன் கவிதையிற் சொல்வதா?
விந்தை! விந்தை! விளம்பினல் விந்தை!
பழநி மலையானைப் பாடிப் படியேறி
உழலும் துயர்போக்க உருகித் தினம் நடப்பேன்
"சிக்கலிலே" பாடிஎன் சிக்கல் தவிர்த்திட்டேன்.
பக்கமுள்ள விராலிமலை பாடிக் களித்திட்டேன்
திருமயிலைச் சிங்காரன் சேவடியைத் தொட்டபின்னும்
ஒருமயிலை விட்டிறங்கி ஓடிவந்தால் ஆகாதா?
இருமயில் விட்டுவர இல்லை மனமுனக்குப்
பொறுமையில் என்றனுக்குப் புறப்பட்டு வாதோழா!
பிறப்பெடுத்தால் தாய்தந்தை பெற்றிடலாம் உயிர்காக்கும்
சிறப்புடைய ஓர்தோழன் சேர்வ தரிதாகும்.

வாழ்ந்தால் துணையாக வருவார் பலதோழர்
தாழ்ந்தால் தனியே தவிக்கவிட்டுச் சென்றிடுவார்
பாழும் உலகப் பழக்கமிது, இந்நாளில்
சூழும் தோழர்நிலை சொல்லி முடிந்திடுமா?
இந்தத் துயருலகில் எனக்குத் துணையாகக்
கந்தன்நீ! தோழனுய்க் கைகொடுக்க முன்வந்தால்
கவலை மறையாதா? கண்ணீர் குறையாதா?
அவலம் தொலையாதா? அருள்வெள்ளம் பாயாதா?
வறுமை குறையாதா? வளமே பெருகாதா?
சிறுமை மறையாதா? சீர்வந்து சேராதா?
வேலன்என் தோழன் விரும்பி அருகிருக்கக்
காலனே வந்தாலும் கவலைப் படுவேனே?
கவலைக் கடல்கடக்கக் கட்டுவித்த பாலம் நீ
சிவனுக் குபதேசம் செய்வித்த பாலன்நீ
வழிக்குத் துணையாக வாவென்ருல் வந்திடுவாய்
விழிக்குத் துணையாக விடிவெள்ளி யாகிடுவாய்
பாட்டெழுத உட்கார்ந்தால் பக்கத் துணையிருப்பாய்
"நோட்"டெழுத நேர்ந்தாலோ நூறு முறைபார்ப்பாய்.
ஆயிரத்தைத் தந்து ஐயா யிரமெழுதும்
சேயா யிரம்வாழும் திருநா டிதுவலவா?
ஆதலினுல் நோட்டெழுதா அன்புள்ள நண்பர்களைத்
தோதாகப் பார்த்தளித்துச் சுமையைக் குறைத்திடுவாய்.
என்னுள் நடக்கின்ற எதற்கும் துணையாகப்
பின்னிக் கிடக்கின்ருய்! பேச்சுத் துணையனுய்!
உடுக்கை நழுவே உதவும் கரம்போல
இடுக்கண் வருங்கால் எனக்குடனே கைகொடுப்பாய்!
கெடுக்க வரும்பகையைக் கிட்டஇருந் தேஒறுப்பாய்.
அடுத்துப் பணிந்தாலோ அருள்சுரந்து மன்னிப்பாய்
படுத்துறங்கும் போதும் பக்கத்தி லேபடுப்பாய்
கொடுக்கும் கனவினையும் கிள்ளி எடுத்தெறிவாய்
அடுத்து முயன்றும் ஆகாச் செயலெதையும்
கொடுத்து முடித்துத் துவங்க வழிசெய்வாய்.
குடும்பப் பிணக்கறுப்பாய் குமரியழு தால்அழுவாய்
உடும்புப் பிடியாக உண்மை எடுத்துரைப்பாய்
பிள்ளைக்கு நோயென்ருல் பெரிய மருத்துவர்பால்
அள்ளி எடுத்தணைத்தே அப்பொழுதே ஓடிடுவாய்
குழந்தை விளையாடக் கொண்டுவரு வாய் மயிலை
எழுப்பிவிட வீட்டாரை இருசேவல் வளர்த்திடுவாய்
ஒருசேவல் தூங்கிடினும் ஒருசேவல் கூவுமென்பாய்

வருமுன்னர்க் காக்கின்ற வகையெல்லாம் கண்டுரைப்பாய்
(இத்தகைய)
தோழன் உரிமைகண்டு சுற்றத்தார் வாட்டமுற்று
ஆழமாய் எண்ணி அவதிமிகப் பட்டார்கள்.
சுற்றத்தார் பழக்கமிது தூரத்தார் உறவுவரின்
பற்றில்லா விட்டாலும் பழிபாவம் பேசிடுவர்.
வெற்றித் திருத்தோளா! வேல்கொண்ட என்தோழ!
சுற்றிவரும் பேச்செல்லாம் "தூ"வென்று தள்ளிடுவாய்
நெற்றிக்கண் பெற்றநீலகண் டன்மகனே
வெற்றுரைக்கும் பொல்லா வீணர்க்கும் அஞ்சிடுவாய்?
நட்புரிமை யைமாய்க்க நாலைந்து பேர்முனைந்தால்
துட்டத் தனத்தையோர் சொல்லால் அடக்கிடுவாய்
அசுரர் தமைநசுக்கி அதம்செய்த வேலவனே
அசுர மனத்தை அடக்காமல் விட்டிடுவாய்
வணங்கும் தலைக்கெல்லாம் வரமளிக்கக் காத்திருப்பாய்
சுணங்காமல் ஈந்து சுகத்தை மிகுத்திடுவாய்
வைதாரைக் கூட வாழ்த்தி மகிழ்ந்திடுவாய்
கைதொட்ட கயவரையோ காலில் விழச்செய்வாய்
என்னருமைத் தோழா நீ! எனக்குமட்டு மாதோழன்
ஒன்றி நினைக்கும் உயிர்கட்கெல் லாம்தோழன்
எங்கும் நிறைந்திருக்கும் எல்லோர்க்கும் நீதோழன்
மங்கையர்க்கும் தோழன் மாற்றார்க்கும் நீதோழன்
குடிகெடுக்க வந்த கொடுஞ்சூர பத்மனுக்கும்
கொடியில் இடங்கொடுத்துக் கூவவிட்ட நற்றோழன்
அன்புக் கொருதோழன் அழகுக் கொருதோழன்
என்றுந் தோழன் எனக்கு.



# அருள்மிகு மீனாட்சி சுந்தரேசுவரர் திருக்கோயில்

**மதுரை**

தமிழ்நாட்டில் கோயில் மாநகர் என சிறப்புப் பெயர் பெற்றது மதுரை. மதுரை நகரின் நடுநாயகமாக அருள்மிகு மீனாட்சி சுந்தரேசுவரர் திருக்கோயில் அமைந்துள்ளது. இத்திருக்கோயிலில் ஒவ்வொரு ஆண்டிலும் நடக்கும் மீனாட்சி திருக்கலியாணம் மிகவும் சிறப்பு வாய்ந்தது. திருக்கலியாணத்தைக் கண்டு களிக்க ஒவ்வொரு ஆண்டும் பல்லாயிரக் கணக்கான மக்கள் பல்வேறு இடங்களிலிருந்து வருகின்றனர். மதுரைக்குத் தெற்கே 5 கல் தொலைவில் அமைந்துள்ளதும், ஆறுபடை வீடுகளில் முதலாவதுமான திருப்பரங்குன்றம் அருள்மிகு சுப்பிரமணிய சுவாமி திருக்கோயில் இதன் உப கோயிலாகும். திருப்பரங்குன்றத்தில் ஒவ்வொரு ஆண்டும் பரமன், குமரன் முருகனுக்கும் தெய்வானைக்கும் நடக்கும் திருமணம் சிறப்பு வாய்ந்ததாகும். ஒவ்வொரு ஆண்டும் தெய்வானை திருமணத்திற்கு மதுரையிலிருந்து அருள்மிகு மீனாட்சி சுந்தரேசுவரர் சென்று வருவது கண்கொள்ளாக் காட்சியாகும். சமயக் குரவர்களில் ஒருவரான அருள்மிகு மாணிக்கவாசகப் பெருமான் அவதரித்த ஊரான திருவாதவூரில் உள்ள அருள்மிகு திருமறைநாத சுவாமி திருக்கோயிலும் இதன் உபகோயிலாகும்.

சங்க காலத்தில் பரமனே தருமி என்ற ஏழைப் புலவனுக்காக சபைக்கு வந்து நக்கீரருடன் வாதாடி தருமிக்கு பொற்கிழி பெற்றுக்கொடுத்ததாகப் புராணங்கள் கூறுகின்றன. அதன் ஞாபகார்த்தமாக ஆண்டுதோறும் திருக்கோயில் நிதியிலிருந்து ரூ. 1001/- வெண்பொற்காசுகள் சிறந்த தமிழ்ப் புலவர் ஒருவருக்குக் கொடுக்க ஏற்பாடு செய்யப்பட்டு வருகின்றது. அதையல்லாமல் கீழ்க்கண்ட திட்டங்களும் திருக்கோயிலால் நடத்தப்பட்டு வருகின்றன.

1. ஸ்ரீ மீனாட்சி சுந்தரேசுவரர் மகளிர் உயர்நிலைப் பள்ளி நடத்தப்படுகிறது. ஏழை மாணவிகளுக்கு இலவச மதிய உணவு, புத்தகம், நோட்டுகள் வழங்கப்படுகிறது.

2. கல்லுப்பட்டி காந்தி நிகேதனில் மீனாட்சி மாணவர் இல்லம் 20 மாணவர்களுக்கு உணவு, உடை, விடுதி பள்ளிச் செலவுகளுக்கு நிதி உதவி செய்யப்படுகிறது.

3. ஸ்ரீ மீனாட்சி சுந்தரேசுவரர் நூல் நிலையம் தெற்கு ஆடி வீதியில் நடத்தப்படுகிறது.

4. யாத்ரீகர்கள் தங்க, மேலச் சித்திரை வீதியில் சுமார் ரூ. 4,00,000/- மதிப்பீட்டில் விடுதி கட்டப்பட்டு நடந்து வருகிறது. (ஒரு பகுதி தொழில் அதிபர் திரு. பிர்லா அவர்களால் நன்கொடையாகக் கொடுக்கப்பட்டது).

5. ஆயிரக்கால் மண்டபத்தில் எழில்மிகு கலைக்கூடம் அமைக்கப்பட்டுள்ளது.

6. கூடல் செங்குளம் பண்ணை திருக்கோயிலின் நேரடிப் பார்வையில் விவசாயம் நடைபெறுகிறது.

7. ஏழை மக்களுக்கு ஆலய நிதியிலிருந்து இலவசத் திருமணம் நடத்தப்பட்டு வருகிறது.

8. திருப்பரங்குன்றத்தில் முதியோர் இல்லம் ஒன்று நடத்தப்படுகிறது. இதில் ஒன்பது வயதடைந்து ஆதரவற்ற பெண்களுக்கு உணவு, இருப்பிடம வசதிகள் அளிக்கப்பட்டு வருகின்றன.

இத்திருக்கோயிலில் அஷ்ட சக்தி மண்டபம், மீனாட்சி நாயக்கர் மண்டபம், கிளிக்கட்டு மண்டபம், சிற்பக்கலை மிக்க கம்பத்தடி மண்டபம், வானளாவும் கோபுரங்கள், இசைத் தூண்கள், பொற்றாமரைக் குளம், கலியாண மண்டபம் ஆகியவைகளையும் இன்னருள் சுரக்கும் அன்னை மீனாட்சியையும் காணக் கண் கோடி வேண்டும்.

"நான்மாடக்கூடல் காணும் வாய்ப்பினை பெற்ற போது
நவமணிகள் பதித்த அணிகள் பலவற்றை கண்டேன்
காலகாலத்திற்கும் தமிழகத்தின் கலையுணர்வையும்
கற்பனைத் திறனையும் பாடிநிற்கும் கவிதைதான்
இந்த ஆலயம்"

என்று தமிழக முதல்வர் டாக்டர் கலைஞர் அவர்களால் போற்றப்பட்ட ஆலயம். தமிழ் வளர்த்த தலைநகர் பாண்டிப் பழம்-பதி மதுரை மாநகரில் அன்பர்களுக்கு அருள் வழங்கும் அருள்மிகு மீனாட்சி சொக்கநாதரைக் கண்டு வணங்கி அருள் பெற்றுய்ய திருவாலவாய்க்கு வருகை தருவீர்களாக.

**திரு. என். எஸ். இராமச்சந்திரன்,** பி. ஏ., பி. எல்.
நிர்வாக அதிகாரி

# இலக்கியம்



திரு. சொ. சிங்காரவேலன்

**நடை வேறுபாடு :**

கருத்தை உணர்த்துவது மொழி; மொழியில்தான் எத்தனை வேறுபாடுகள்! ஒருவருடைய மொழியைப்போல் மற்றவர்க்கு அமைவதில்லை; அவரவர்க்கும் தனி இயல்பான போக்குத் தென்படுகின்றது. ஆனல் அடிப்படை இயல்புகள் மாறுவதில்லை. அதனையே தனிப்பட்ட முறையில் எடுத்தாராய்வது இனிமையாக இருக்கும். தனிமனிதர் மொழி நடைகளில் வேறுபட்டு விளங்குகின்றது பாவலர் மொழி நடை. பாவலர் நடை வேறுபட்டு விளங்குவதற்குக் காரணம் அவர்களது வெளியீடே ஆகும். பாவலர் அழகுணர்ச்சியோடு எதனையும் வெளியிடும் திறன் பெற்று விளங்குகின்றனர். ஒரு சோலையைப் பற்றிக் கூறப் புகுந்தால், என்னதான் முயன்று முயன்று கூறினலும், ஒரு கவிஞர் கூறும் திறன் தனிச் சிறப்புடையதாகவே இருக்கும். காரணம் யாது என்று ஆராயப் புகுந்தால், அழகு தோன்ற வெளிப்படுத்தும் திறன்பாடு எழுதும் பாவலர்க்கு இயல்பாக உள்ளமையே என்று கூறலாம். கவிஞருடைய மொழிகள் தனிச் சிறப்புப் பெற்று விளங்குவதற்குக் காரணம் இந்த அழகுணர்ச்சி வெளியீடு மட்டும்தான? வேறு உண்டா?

**கருத்து அமைதி :**

இலக்கியம் என்பது அது வெளிப்படுத்தும் அழகுணர்ச்சியாலும், அது வெளிப்படும் திறத்தாலும் மட்டும்தான் சிறந்து விளங்குகின்றது என்று இல்லை. இன்னும் இன்றியமையாத ஒன்றும் உள்ளது; அதுதான் கவிதை வெளிப்படுத்த முற்படும் கருத்து ஆகும். 'விழுமிய கருத்து' கவிதை அல்லது இலக்கியத்தின் கருவாக அமைதலையே தமிழ் கூறு நல்லுலகம் விரும்பியது; விரும்பி வருகின்றது. 'கலை கலைக்காக' என்ற வாதம் தமிழ் உலகிற்குப் பொருந்தாது; 'கலை வாழ்க்கைக்காக' — என்பதே தமிழ் மரபு. இலக்கியம் சமுதாயத்திற்கு உயர்ந்த கருத்தை ஊட்டுவதாக அமைதல் வேண்டும் என்றே தொல்காப்பியர் கருதினர். அவரது இலக்கியக் கொள்கைகளை ஆராயும்போது இது புலனகின்றது. மிகு பழங்காலத்திலேயே உயர்ந்த குறிக்கோளை உடையதாக இருந்து வரும் இலக்கிய மரபைத் தமிழகம் பெற்றிருந்தது என்பது எண்ணுந்தொறும் பெருமை தரத்தக்க ஒன்ருகும்.

**உயர்ந்த கருத்து :**

இலக்கியம் என்ருல் அது விழுமிய — உயர்ந்த பொருளைப் பற்றியதாக இருத்தல்

வேண்டும் என்ற உண்மையைத் தமிழர் மறந்தாரிலர். காலந்தோறும் தோன்றித் தழைத்த இலக்கியங்களை ஒருமுறை கண்ணோட்டம் விட்டாலேயே இதனை உணரலாம். பயன் கருதாத நூலே தமிழில் இல்லை. பொழுது போக்கு இலக்கியம் என்று தமிழில் எதுவுமே பழங்காலத்தில் எழுந்ததில்லை. மக்கள் பெருவாரியாக இன்று விழைவது பொழுது போக்கு நூல்களே என்றாலும், இன்று பொழுது போக்குக்குப் பயன்படுவன நிச்சயமாக நாளை இருக்கும் என்று சொல்ல இயலாது; உறுதியாக நிலைத்து நாளையோ, நாளை மறு நாளோ இருக்கப் போவன நிச்சயமாக இத்தகு பொழுது போக்கு நூல்கள் இல்லை; சமுதாய நிலை பேற்றிற்கு உறுதி பயக்கும் உயரிய கருத்துக்களை (Sublime thought) உடைய அரும் பெரு நூல்களே காலத்தை வென்று நிற்கும் 'இலக்கியங்கள்' எனப் படும். அவை அழகுணர்ச்சி, வெளியிடும் திறன், நிலைபேற்று ஆற்றல் முதலிய அனைத் தழகுகளும் பொருந்தி நிற்றலோடு உயர்ந்த கருத்தைப் பெற்று விளங்கும்.

**உணர்வின் எல்லையில்:**

இலக்கியத்தின் மதிப்பு அதன் பயனாலேயே விளங்கித் தோன்றும் என்று கூறலாம். பயன் தராத இலக்கியம் இலக்கியம் அன்று என்பது தமிழர் மதிப்பீடு. '**பொருட்கு இடனாக, உணர்வினின் வல்லோர் அணிபெறச்செய்வன செய்யுள்**' என்று பவணந்தியார் தம் காலத்தே சிந்தித்த அளவில், செய்யுளுக்குக் கூறிய வரையறையை இலக்கிய வரையறை என்று கொள்ளலாம்.[1] 'செய்யுள் எழுதுவோர் அறிவு வல்லோராய் இருத்தல் வேண்டும்' என்று பவணந்தியார் கூறாமையைச் சிந்தித்தல் வேண்டும். 'உணர்வின் வல்லோர்' என்று கூறுவது உணர்தற்குரியது. பாவலன் அறிந்ததை வெளியிடும் இடம் பாட்டு அல்லது கவிதை அன்று; உணர்ந்ததை வெளியிடும் இடமே பாட்டு என்பது நினைவில் இருத்தத் தக்கது. இலக்கிய ஆசிரியன் பெறவேண்டிய தகுதிகளில் அடிப்படையாக இருப்பது இந்த உணர்வுதான். அறிவின் எல்லையிலும் உணர்வின் எல்லை ஆழமானது. உணர்வின் எல்லையில் — கொடுமுடியில் நிற்பவர்களே உண்மையான கவிஞர்கள்.

**உணர்வின் விழிப்பு:**

கவிஞன் இலக்கியம் படைக்கும்போது ஆழ்ந்த உணர்வின் மீது அரியாசனம் இட்டு அமர்ந்து அதன் வயப்படுகின்றான்; அதனால் விழுமிய உணர்வுக் காட்சிகள் அவனுக்குத் தென்படுகின்றன. அறிவுக் காட்சிகளுக்கு அப்பாற்பட்ட தெய்விக நிலை என்று கூட அதனைக் கூறலாம். உணர்வின் விழிப்பில் இருந்து கவிஞன் வெளியிடும் கருத்துக்கள் நிச்சயமாக உள்ளத்தை உயர்த்துவனவாகவே இருக்கும்; அதனால் தான் அறிவியலுக்கு முரண்பாடான நிலைகள் போன்று தோற்றமளிக்கும் கவிதை நிலைகள் பல வற்றைக் காண முடிகின்றது.

இமயமலையை எங்கள் மலை என்று பெருமை ததும்பப் பேசி நிற்கும் கவிஞன், உலகில் அதற்கு நிகரான மலைகள் பல இருந்த போதிலும் பெருமித உணர்வு ததும்ப வேறு எதுவுமே அதற்கு நிகர் இல்லை என்றே பாடிவிடுகின்றான்:

"மன்னும் இமயமலை எங்கள் மலையே
மாநிலம் மீது அதுபோற் பிறிது
இலையே"

என்ற வரிகள் புதுத் துள்ளலுடன் இலக்கிய வடிவம் பெற்றுவிடப் பார்க்கின்றோம்.[2] இது போன்றே தமிழ் என்ற மொழி தன்னுடைய மொழி என்ற உணர்வு-மொழிப் பற்று-கனலாக மூண்டு கவிஞன் மனத்திலே கவிந்து கிடக்கும்போது அவனுடைய கவிதை ஆவேசம் பீறிட்டுக் கிளம்புகின்றது; 'தமிழுக்கு அமுதென்று பேர்' என்று சுவையனுபவத்தைச் சில சொற்களில் வெளியிட்டு விடுகின்றான்; தமிழ் அமுது போன்றது என்ற கருத்தை உணர்ச்சி வசப்பட்டு அவன் பேசும்போது, இவ்வாறு, தமிழுக்கு அமுதென்பது ஒரு பேர் என்ற வாய்ப்பாட்டில் வந்து விடுகின்றது; இதுவும் ஒரு சுவையான படைப்பு அன்றோ? 'தமிழைப் பழித்தவனைத் தாய் தடுத்தாலும் விடேன்' என்று தன் மொழியைப் பழிக்கும் மக்களுக்கு அச்சுறுத்தும் போது, 'தாயே

வந்து தடுத்தாலும் தாய்மொழியைப் பழித் தவனை விடலாகாது' என்று கருத்தமையப் பாடுகின்றான்.[3] இங்குப் பழிவாங்கும் உணர்ச்சி அறிவின் எல்லையைக் கடந்து, பண்பட்ட பாவலன் மனத்தில் விரவியிருப் பதைக் காணலாம்.

**சொல்லாட்சித் திறன்:**

இலக்கியம் அதன் சொற்களாலும் மதிப்படைகின்றது; உரைநடையில் கையாளப்படும் சொற்களை விடக் கவிதை களிற் கையாளப்படும் சொற்கள் தேர்ந்த தெளிவுடைமையைப் பெற்றுத் திகழ்வதைக் காணலாம். ஒரே பொருளைக் குறிக்கப் பல சொற்களைக் கவிஞன் இடமறிந்து கையாளு கின்றான்; அவை இடத்திற்கேற்ற பொருட் சிறப்பினைப் பெற்றுப் பொலிந்து புத் தழகைத் தோற்றுவிக்கின்றன. 'மற்ற இடங்களிற் கையாளப் பெறுவதினும் இவ் விடத்தில் இச்சொல் தனியழகுடன் உள் ளது' என்று கூறுமாறு அவ்விடத்திற் பொருந்தி நிற்கும் சொற்கள் இலக்கிய மதிப்பை உயர்த்துகின்றன. கவிஞன் வெளிப்படுத்த விழைந்த கருத்தை உணர்த் துதற்குத் தக்க கருவிகளாக அமைகின்றன அச்சொற்கள். '**சொல்லுக சொல்லைப் பிறி தோர் சொல் அச்சொல்லை, வெல்லுஞ்சொல் இன்மையறிந்து**' என்று திருவள்ளுவர் கூறு வது பேசும்போது சொற்களை ஆளும் வன்மைத் திறனுக்கே ஆயினும், கவிதையிற் சொற்களுக்கும் பெரிதும் பொருந்துவதாக உள்ளது[4]. உயர்ந்த கவிஞர்கள், இலக்கிய ஆசிரியர்களின் எழுத்துக்களில் இச் சொல் லழகு அமைந்திடக் காணலாம். இத்தகைய சொல்லுறுதிப்பாடு தமிழிலக்கியத்தில் கனிந்து பாடிய சைவப் பெரியார் திருநாவுக் கரசர் திருப்பாட்டுக்களில் இருத்தலைப் பிற் காலத்தே உணர்ந்தனர். 'சொற்குறுதிக்கு அப்பரெனச் சொல்' என்று பழம்பாடல் பேசுவது இங்கு உணரத்தக்கது.

**அப்பர் திருப்பாட்டு:**

"குனித்த புருவமும் கொவ்வைச்செவ்
வாயிற்
குமிண்சிரிப்பும்
பனித்த சடையும் பவளம்போல்
மேனியிற்
பால்வெண்ணீறும்
இனித்த முடைய எடுத்தபொற்
பாதமும்
காணப்பெற்றால்
மனித்தப் பிறவியும் வேண்டுவதே இந்த
மாநிலத்தே"[5]

இத்திருப்பாடல் அப்பரடிகளின் சொல் லாட்சித் திறத்திற்கும், தலையாய இலக்கியச் சொல்லழகுக்கும் தகுந்த எடுத்துக்காட்டாக அமைந்துள்ளமை தெளிவு.

'குமிண் சிரிப்பு' என்னும் சொற் றொடர் தமிழ் இலக்கியத்தில் வேறெங்கும் காணக் கிடைக்காதது. பொங்கிக் கொண்டு குமிழியிட்டுத் ததும்புதல் 'குமிழ்த்தல்' ஆகும்; தில்லைத் திருக் கூத்தப்பிரான் இதழ்களில், கொவ்வை போன்ற சிவந்த திருவாயில் இருக்கும் அற் புதமான நகைப்பை, ஆனந்தத் தாண்டவக் கடவுளின் அழகிய சிரிப்பை இதனினும் வேறு தொடரால் வெளிப்படுத்த இயலாது. இது போன்றே 'இனிமை' என்ற பொருளில் 'இனித்தம்' (இனிப்பு) என்ற சொல்லை அடிகளார் ஆளுகின்றார். 'எடுத்த பொற் பாதம்' தான் உயிர்களை ஆட்கொண்டு அருளும் திறன் வாய்ந்தது என்பது சைவ சித்தாந்த மரபு. 'போற்றியாம் உய்ய ஆட் கொண்டருளும் பொன்மலர்கள்' என்று திருவாசகம் ஓதுகின்றது;[6] 'ஆட எடுத் திட்ட பாதமன்றோ நம்மை ஆட் கொண்டதே' என்று அடிகளார் பிறிதோ ரிடத்துப் பேசுவர்.[7] ஆதலின் 'இனித்தம்' என்பது பேரின்பப் பேற்றைக் குறிப்பிடும் பொருளாழம் உடையதாக உள்ளமை ஓர்ந் துணரத் தக்கது; பேரின்பப் பேற்றை உணர்த்தக் கூடிய புதுச் சொற்பொருளை 'இனித்தம்' உடையதால் மறக்கவியலாதது. ஓர் ஓவியம் போன்று உள்ளத்தில் கூத்தப் பிரான் திருவுருவை எழுதக் கூடிய இவ் வழகிய கவிதை தலைசிறந்த இலக்கிய மதிப்பை உடையதாக உள்ளமை கண்கூடு. 'விழுமியது நுவல வேண்டும்' என்ற கவிதை உள்ளடக்கக் குறிப்பு இதற்குப் பெரிதும் பொருந்தும் திறன் எண்ணுந் தொறும் இன்பம் பயப்பதாகும்.

**சங்க இலக்கிய மாண்பு :**

சங்க இலக்கியங்களிற் காணும் பாட்டுக் களில் சொல்லாட்சித் திறனும் கற்பனை மாண்பும் விளங்குதல் இனிது அறியப் பட்ட ஒன்று. புலவர்கள் தமது பாட்டுக்களில் உவமைகள் பலவற்றால் தம் கருத்தை இனிது விளக்குகின்றனர். அவ்வுவமைகள் தாம் விளக்க வரும் கருத்துக்களை நன்கு விளக்குவதுடன் பொருட் சிறப்புடன் விளங்குகின்றன. ஒன்றுபட்ட உள்ளங் களுக்குச் 'செம்புலப் பெயல் நீரை' உவமை கூறிய கற்பனையழகை மறக்க வியலுமா ?[8] இறைவன் திருவடியைத் 'தாமரை புரையும் காமர் சேவடி' எனக் கூறும் அமைப்பழகு நிலைபேறுடைய ஒன்றாகும்.[9] 'அடிதாங்கும் அளவின்றி, அழலன்ன வெம்மையதாய்க் கடியவே கனங்குழாய், காடு' என்ற தலை வன் காட்டின் கடுமைக் காட்சியிடையே ஓர் அன்புக் காட்சியைக் கற்பனை நயத்துடன் தீட்டுகின்றான் ; துடியடியையும் மென்மை யான தலையையும் உடைய இளைய யானைக் கன்று கலக்கிய சின்னீரைத் தன்னுடைய பிடியை உண்பித்துப் பின்னே உண்ணு கின்ற களிறு அங்கே உண்டு என்ற கற் பனைக் காட்சியைக் கலித் தொகையிற் காண்கின்றோம் ; இந்தக் கற்பனையை — இலக்கியத் தரமுடைய இனிய காட்சியை மறக்கவியலுமா ?[10] ஒவ்வொரு பாட்டும் ஒவ்வொரு கருவூலம் ; கற்பனைப் புதையல் ; உணர்ச்சி விருந்து ; மெய்ப்பாட்டு நாடகச் சாலை ; இசைப் பூங்கா.

**நூற்றாண்டுகள் தோறும் தமிழ் இலக்கியம் :**

தமிழின் ஒரு கூறாகிய 'இயல்' தொல் காப்பியர்க்கு முன்பிருந்தே தோற்றம் கொண்டதாகும்; பின்னர் பாட்டும் தொகையும் ஆகிய இலக்கியங்கள்; கி. பி. முதலாம் நூற்றாண்டினதாகக் கருதப்பெறும் திருக்குறள் பின்னே பூத்தது; சிலம்பும் மேகலையுமாகிய காப்பியங்கள் அடுத்து இரண்டு, மூன்றாம் நூற்றாண்டுகளில் எழுந் தன. நான்கு முதல் ஏழு வரை உள்ள நூற்றாண்டுகளில் வடமொழியிலிருந்து காப்பியங்களை மொழி பெயர்க்கும் மரபைத் தோற்றுவித்து எழுந்த இலக்கியமாகிய பெருங்கதை முதலில் சில நூல்கள் அரும் பின. அடுத்துப் பக்தி இலக்கியங்கள் பல்கிச் செழித்த இடைக்கால இலக்கியங்கள். தமிழ் மொழியின் பொற்காலம் எனப்படும் நூற்றாண்டுகளாக ஏழாம் நூற்றாண்டு முதல் பன்னிரண்டாம் நூற்றாண்டுவரை உள்ள ஆண்டுகளை உரைப்பர். இதன் பிறகு சமய சாத்திர இலக்கியங்கள். ஏழாம் நூற் றாண்டில் தோன்றிய இறையனார் களவியல் உரைநடை இலக்கிய முதனூல்; பதின் மூன்று பதினான்காம் நூற்றாண்டுகளில் மீண்டும் உரைநடை தமிழிலக்கிய போக்கில் பல்கியது. ஆதீனங்கள் எனப்படும் அற நிலையங்களால் தமிழ் இலக்கிய வளர்ச்சி பதினைந்து முதல் பதினெட்டாம் நூற்றாண்டு வரை பெருகிற்று என்று கூறலாம். பத் தொன்பதாம் நூற்றாண்டில் வீரமாமுனிவர் காலம் தொடங்கி ஐரோப்பியச் சார்பினால் வேகமாக வளர்ந்து வந்த தமிழிலக்கியம் இவ்விருபதாம் நூற்றாண்டில் புதுமுறையில் மேலும் பலதுறைகளில் முன்னேறி விளங்கு கின்றது.

**இக்காலக் கவிதை இலக்கியம் :**

தமிழ்க் கவிதை இலக்கியம் கவியரசர் பாரதியார் காலம் தொடங்கி மறுமலர்ச்சி பெற்று விளங்குவது தெளிவு. பாரதிதாசன் முதல் இன்று கண்ணதாசன் வரை தமிழ்க் கவிதை எளிமையும், சந்தமும், பொருட் சிறப்பும் கூடியதாய்ப் புதுவடிவம் பெற்று வளர்ந்து வருகின்றது. சிறுகதை, புதினம் ஆகிய இரண்டும் இலக்கிய வகைகளும் இன்றைய தமிழ் இலக்கியத் துறையில் இன்றியமையாத இடம் பெற்று விளங்கு கின்றன. எண்ணற்ற எழுத்தாளர்கள் இவ் விரண்டு துறைகளிலும் புகுந்து இயற் றமிழைப் புதிய கோணத்தில் வளர்த்து வரு கின்றனர். இவற்றுள் காலத்தை வென்று நிலைபெறும் சிறப்பு தோன்றுகின்ற எல்லா வற்றிற்கும் உண்டு என்று கூறமுடியாது. புதுமைக் கவிஞர் பாரதி, புரட்சிக்கவிஞர் பாரதிதாசன், மறுமலர்ச்சிக் கவிஞர் கண்ணதாசன் பாடுகின்ற எல்லாப் பாடல் களுமே காலத்தை வென்று நிற்கும் என்று ஒருதிறனாய்வாளன் கூறத் துணியமாட்டான். இவர்கள் பாடல்களில் பயன் கருதி அவ்வப் போது எழுந்த இயக்கப் பாட்டுக்கள், அந்த

ஆவேசம் தணிந்த பிறகு காட்டாற்று வெள்ளமாகத் தாமே தணிந்து அடங்குவன. தரமான இலக்கியச் செஞ்சொற் கனிகள் மட்டுமே இவர்களது இலக்கியப் பெரும்புகழை என்றும் இயம்பிய வண்ணமே இருக்கும். இவ்வாறே, புதிய 'முறை'களில் (New wave) இன்று எழுதப் பெறும் சிறுகதை, புதினங்கள் இன்று வேண்டுமானால் ஒரு சிலரால் போற்றப் பெறும் நிலை பெற்றனவாகலாம்; அவை இலக்கிய மதிப்பைப் (Classical value) பெற்று எதிர் காலத்தே நிலைக்குமா என்பது காலம் கூற வேண்டிய விடை.

மேலை நாட்டுத் திறனாய்வாளர்களில் அட்சன், ஆபர் கிரோம்பி, ரிச்சர்ட்சு,, பிராட்லி போன்றவர்களும் நம் நாட்டுத் தொல்காப்பியர் போன்ற பழம்பெருஞ்சான்றோரும் ஒருசேரக் கூறும் இலக்கியக் கொள்கைகளை விரிவாக ஆராய்ந்து சிந்தித்தால் நம் உள்ளத்துத் தோன்றும் கருத்துக்கள் இக்கட்டுரையில் தெளிவாக்கப் பெற்றன. **தன்னுடைய பண்புகளால் அழியாத 'அமர' வாழ்வை எது பெற்று நிற்கிறதோ, அது கவிதை, உரைநடை — எதுவாயினும் சரியே, அதுவே இலக்கியம் என்பது உறுதியாய் கூறலாம்.**

---

**அடிக்குறிப்புகள் :**

1 நன்னூல் — "பல்வகைத்தாதுவின்" நூற்பா — பவணந்தியார்.

2 பாரதியார் பாடல்கள்—"இமயமலை"—1.

3 பாரதிதாசன் கவிதைகள்—"தமிழ்".

4 திருக்குறள் – பொருட்பால் — சொல்வன்மை (645)

5 திருநாவுக்கரசர் தேவாரம் — கோயில் — திருவிருத்தம் (நான்காம் திருமுறை)

6 திருவாசகம் — திருவெம்பாவை — பா 20

7 திருநாவுக்கரசர் தேவாரம் — கோயில் — திருவிருத்தம் (நான்காம் திருமுறை)

8 குறுந்தொகை — "யாயும் ஞாயும்" — செம்புலப்பெயல் நீரார்

9 குறுந்தொகை—கடவுள் வாழ்த்து—பெருந்தேவனார்

10 கலித்தொகை — பாலைக்கலி—பெருங்கடுங்கோ



# ஸ்ரீபகவான் ஆலயத் திருப்பணி

**கொசவலசு - பொன்னிவாடி கிராமம்**

**தாராபுரம் வட்டம் - கோவை மாவட்டம்**



ஸ்ரீ திருமலைச்சாமி சுவாமிகளின் திருவருட் பார்வைக்கு உட்பட்ட பொன்னிவாடி கிராமத்தில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீபகவானின் ஆலயத் திருப்பணிக்கு இயன்ற பொருள் உதவி செய்ய வேண்டுமாய் அன்புடன் கேட்டுக்கொள்கின்றேம். நன்கொடை அளித்து இறையருள் பெற விழையும் அன்பர்கள் "**செயலர், ஸ்ரீபகவான் ஆலயத் திருப்பணிக் குழு, ஸ்ரீ அகஸ்தீஸ்வரர் ஆலயம், தாராபுரம் அஞ்சல், கோவை மாவட்டம்**" என்ற முகவரிக்கு பணம் அனுப்பி அச்சு ரசீது பெற்றுக் கொள்ளும்படி கேட்டுக்கொள்கின்றேம்.

ஸ்ரீபகவான் ஆலயத்தில் ஆண்டுதோறும் யுகாதிப் பெருவிழாவும், அக்கினி நட்சத்திரக் காவடித் திருவிழாவும் சிறப்பாகக் கொண்டாடப்படுகின்றது.

ஸ்ரீபகவான் ஆலயம் தாராபுரம் ஒட்டன்சத்திரம் பேருந்துப் பாதையில் தாராபுரத்திலிருந்து 11 கல் தூரத்தில் உள்ளது.

தங்களின் அன்புள்ள,

S. முருகேசன், B. A.
செயலர் & பொருளாளர்
ஸ்ரீபகவான் ஆலயத் திருப்பணிக்குழு
ஸ்ரீ அகஸ்தீஸ்வரர் ஆலயம்
தாராபுரம் அஞ்சல்
கோவை மாவட்டம்

S. P. இராமசாமிக் கவுண்டர்
தலைவர்

M. P. T. பிள்ளையார்சாமி
துணைத் தலைவர்

S. கந்தசாமிக் கவுண்டர்
K. R. நாச்சிமுத்து
S. K. திருமலைச்சாமி செட்டியார்
K. தண்டபாணி, B. E.
திருப்பணிக்குழு உறுப்பினர்கள்

# Mysticism and Metaphysics



Dr. S. GOPALAN

Has Metaphysics anything to do with Mysticism? We have funny definitions of both the words. Voltaire, for instance, says that when both the speaker and the listener do not understand what is meant, that is metaphysics. Mysticism also is defined as what mystifies the intellect, clouds reason, confuses thinking and produces bewilderment. Though these definitions may make one feel that any body can say anything or nothing about their relationship, there is a fundamental truth in these definitions which explains clearly their intimate relationship.

Before coming to that, however, it should be noted why mysticism is so difficult of comprehension. This difficulty can be accounted best by the psychological concept of APATHY. When A suffers from tooth-ache, B does not feel it. What A thinks B is sure, he can never know. Indeed B may pity A's tooth-ache and successfully guess A's thought also. That is, he may imaginatively effect a sympathetic identification of his own personality with 'A's and suffer and think with him. 'Yet the reality of personal experience seems so different from such imaginative vibrations to other men' experiences that we refuse to think that there can be any truth in the identity of two personalities. So, this conviction of the separateness of the individual selves from the environment, of the subjective from the objective, is the prime cause of our inability to understand (and much more to realise) mystical truths.

The essence of mysticism is that ALL creation is ONE in these sense in which each of us feels he is one. That is, the fundamental concept is UNITY — a unity behind all differences, we ourselves forming part of the latter. If we ourselves are only a part of that unity, it is doubtless to say that, that cannot be subjected to mere sensory experience.

This is the point which metaphysics takes up and leads to mysticism. Meta-Physics, as the name itself implies, is the 'beyond' of physics. The enquiry does not stop with the outer world alone, for there is something beyond the sensory presentations. Here again the conception of Unity is the essential.

Does it then mean that metaphysics and mysticism are the same? It is only in a limited sense that they can be so. For, as soon as we come to the logical goal of Unity, ie., 'experience', we see clearly that metaphysics is the incomplete form of mysticism. More over, here we can apprehend the defects of merely stopping with metaphysics, for, that involves a lot of self-contradiction. This statement can be substantiated by referring to some systems of metaphysics of the West.

If we go back in mind to the beginning of European philosophy, we find Thales who declares water to be the ultimate reality of which everything else in the universe is a mode. The seeds of things and beings contain, as he argues, moisture. Water is therefore an element common to them all, and this common element he raises to the status of the ultimate unity which transforms itself into the multitudinous things and beings of the world. There are two distinct stages in the development of his philosophy. He first intuits that there is a fundamental unity behind the differences of things. Then he seeks to make articulate this felt unity by indentifying it with an element that is found to be common to certain things. The main defect, it will be noted at once, with this system of thought is that, whatever the unity is, in its essential nature, it cannot be a common element observable in some things; for, a similarity between the things in question does in no way make any essential unity of which the phenomena of Nature are manifestations.

Thus a bare sense of unity is not enough. Intuition of unity is all important; still more important is its proper articulation. This aspect of the question becomes clear when we pass on to consider Spinoza's philosophy. He also talks of 'unity! He says that there are some steps which can be arranged in the hierarchy of knowledge. Thus, sensual knowledge is the lowest stage in which the objects of knowledge are believed to be particulars without any ultimate relations whatever. The next higher stage is that of scientific knowledge wherein systematic relations between things are discerned and formulated in the shape of general ideas principles. The third level of knowledge is that of philosophy at which the system of Nature reveals a fundamental unity in the heart of things. This revelation is intellectual intuition which supervenes on the thinking consideration of things.

Here also we should note that mere intuition of a vague unity behind the multiplicity of things and beings is not enough; for, if it is not merely subjective, it must be communicable and made intelligible through concepts. This defect is manifest in Spinoza's conception of 'Substance' as the unity. It is not shown with sufficient carity how the Supreme Substance ramifies itself into the things and beings of Nature. And, what is more, he squeezes into the essence of the unity two attributes among countless others, namely, thought and matter that can by no means be placed on the same footing. If there is anything material is not there for itself, ie., as an end in itself, but is there always for thought as its content, and, as an environment of all that is conscious. It is not only that anything physical and finite does not contain within itself its explanations; whatever is, is revealed through thought which is to be taken as self-conscious spritual being. Thought in this large sense is then obviously the prius of the whole realm of existence. Such being the case, Spinoza's conception of the unity that he intuits as Substance containing as it does thought and matter amongst its infinite attributes, is but a clumsy way of explaining things. It is then clear that the content of the original intuition still remains indeterminate.

The defects of these systems mentioned can be got over easily on the basis of the conception of 'SYSTEM'. What is a system? It is a whole of mutually determined parts such that a part is a part in the whole, occupying its position and performing its function. And the whole is nothing but the inter-dependent parts together. Now then, if the system of Nature is just a whole of reciprocally determined things and beings, we do not find the ultimate principle of explanation of all existence either in this system or in any of its parts; for, every part pre-supposses all the others, and again the whole is exactly that which they together ie., in their mutual relationships, make up. There is obviously need for pushing beyond to penetrate to a principle which determines itself in the system of Nature. Without itself being determined by anything else; otherwise an infinite regress would soon be under way. So, the principle that would explain Nature with her wealth of details must be self-determined, or which is the same thing, absolutely free.

Of this freedom we find analogue, though a remote one, in finite spirits. On a reflective analysis of our inner being the concept or the category of self-conscious and self-determined being, ie., spirit, wells up in our consciousness. But the difficulty is that, though the conception of spirit has, as its basis, experience of our inner being, the conception cannot get its fulfilment in the actual extistence that is there. Unlike the lower animals, human beings enjoy a measure of self-determination. More over they are to a great extent determined by their environments. We thus come to a pretty pass that, though we have a conception of spirit, yet we cannot fill it from actual existence. There is then clearly need for a change-over. Intellectual analysis and comprehension can carry us far towards the Supreme Being. But that way we reach in the end a point where we must halt to betake ourselves to an altogether fresh means and method to reach the destination!

Now mysticism is precisely that kind of life or experience wherein one relizes oneness with the One. It has been made clear that cannot be matter of mere feeling or concept. The content of a feeling is subrational, while that of a concept is rational. The content of mystic experience, however, transcends both, and is really suprarational.

How then is this experience to be gained? It is perfectly clear that we, ordinary men, have not yet gained such an experience. There is in us in short, a lack of the supreme knowledge which is ignorance. But this cannot be dispelled at once. We have to progress towards the goal only gradually, and to this end we have to gather up our being. We have to pass through a strenuous discipline under the guidance of a master soul; for those who can lead us on into the supreme experience are verily the persons who have themselves traversed and known the Path. (astiti bruvanto anayatra katham tadupalabhyate)-(Kathopanised II, iii, 12). The whole thing then linges upon us-finite spirits. We can attain mystic experience only by way of the unfoldment of our real being which is infinite and eternal. That we shall attain only through the transformations of our emperical, finite, conscious being as none other but the supreme source of everything in the Worlds.

After the detailed discussion of the relation between mysticism and metaphysic it is quite obvious that the justification of Voltaire's statement promised in the beginning has been carried out. If both the speaker and the listener 'do not understand what is meant' or if 'it confuses thinking', it is not because there is nothing for serious consideration but because it is only in the supreme mystic experience — which again is nothing but the 'completion' of the metaphysical experience,—that the truth of the whole thing can be seen.



# பாரதிதாசனும் கீட்சும்







திரு. சி. கனகசபாபதி

'இன்றைய ஒப்பியல் இலக்கியம்' என்ற புதுத் துறையின் வளர்ச்சியில், இரண்டு கவிஞர்களுக்கிடையே நேர்முகமான அறிமுகமோ, ஈடுபாடோ, தொடர்போ இல்லாவிட்டாலும், அவர்களுடைய படைப்புக்களை ஒப்பிட முடியும். ஒரு கவிஞனுக்கு அவன் வாழ்ந்த காலத்தில் வாய்ப்பாக இருந்த சமூகவியல் காரணம் மற்றொரு கவிஞனுக்கும் இருக்கக்கூடும். இப்படிப்பட்ட ஒப்பியல் ஆய்வுமுறை அறிவியல் நோக்கில் காரண விளக்கமுறையை[1] அடிப்படையாகக் கொண்டது.

கீட்சு வாழ்ந்த காலம் இங்கிலாந்து நாட்டில் பத்தொன்பதாம் நூற்றாண்டின் தொடக்கம். கண்கூடான பொருள்களைப் பற்றிய இயற்கையான புலன் உணர்வுக்கு ஆங்கிலக் கவிதையில் இடம் குறைந்து கொண்டே வந்தபோது கீட்சு தோன்றினான். அவன் தன் கவிதைக்குக் கூரிய கண் பார்வையையும் செவியறிவும் அவசியமானவை என்பதை உணர்ந்து பாடத் தொடங்கினான். இவ்வுண்மையை சி. எம். பௌரா தமது 'புனைவியல் கற்பனை'[2] என்னும் ஆய்வு நூலில் எடுத்துக் கூறுகிறார்.

ஏறக்குறைய இதே கவிதைச் சூழ்நிலை தமிழ்நாட்டிலும் பாரதி காலம் வரைக்கும் நீடித்திருந்தது, பாரதியால் மாற்றப்பட்டது. பாரதிக்குப் பிறகு பாரதிதாசன் இந்த மாற்றத்தில் தான் தீவிரப் பங்கு கொண்டார். '*புனர்ஜென்மம்—1*' என்ற கட்டுரையில் 'இடையில் நமக்கு நேர்ந்த கேடுபற்றி பாரதியே கூறியிருப்பதைக் கேட்கலாம்:

*"மலைப்பாம்புக் கதை கேட்டிருக்கிறீர்கள் அல்லவா? அதன் வாலிலே தீப்பற்றி எரியுமாம், மலைப்பாம்பு சுகமாகக் குறட்டை விட்டுத் தூங்குமாம், செல்லரித்துக் கொண்டு போனது நமது ஸ்மரணையிலே தட்டவில்லை. அத்தனை கர்வம், அத்தனை கொழுப்பு, அத்தனை சோம்பர்"*[3].

இப்படிச் சொல்லிய பாரதியை இதனால்தான் புதுநெறி காட்டிய புலவன் என்று பாரதிதாசன் போற்றிப் பாடியுள்ளார்.[4]

மேலும் கீட்சு வாழ்ந்த காலத்தில் இயற்கையில் அழகைக் காணும் மனித ஆர்வம் மறக்கப்பட்டுப் போயிருந்தது. அது மீண்டும் தம் கவிதை உள்ளங்களில் துடித்தெழப் பாடிய ஆங்கிலக் கவிஞர்களில் ஒருவன் கீட்சு. 'அழகைத் தேடல்' அவனுடைய ஒரே குறிக்கோளாக அமைந்தது. துன்பங்கள் சூழ்ந்த இவ்வுலகில்

அழகுத் தத்துவத்தின் வாயிலாக நிலை பேறுடைமையை (permanence) அடையவே கீட்சு துடித்தான். கீட்சின் இந்த மன வேட்கை நிலையோடு பாரதிதாசனின் நிலையும் ஒத்தது என்று பார்க்கின்றோம். சி. எம். பௌரா, கீட்சிடம் இருந்த இந்த 'அழகு தேடல்' பற்றி விளக்கியிருக்கிறார்.[5]

"காணும் பொருளிளெல்லாம் அழகைக் காணவும், கண்டவாறு தாமேயாகச் சொல்லோவியம் செய்யவும், திறம் பெறுதல் வேண்டும் தமிழர்கள்". இது பாரதிதாசன் "அழகின் சிரிப்பு" முன்னுரையில் கூறியது.

இங்கு இதுவரை நாம் பார்த்து வந்த இரண்டு நோக்கங்கள் இவை: 1. இயற்கையான புலனுணர்விற்கு இடம் தருதல். 2. அழகைத் தேடல் வாயிலாக நிலை பேறுடைமையை அடைய அவாவுதல். இவ்விரு நோக்கங்களும் கீட்சுக்கும், பாரதிதாசனுக்கும் தோன்றக் காரணம் அவர்களுடைய சுத்த சுயம்புவான உள்ளுணர்வு அல்ல. அவரவர் சமூகவியல் காரணத்தால் தான் இந்த நோக்கங்களைக் கொண்டு புது நெறியில் கவிதை பாடினார்கள் இருவரும்.

தமிழகத்தில் மதத்தின் பெயரால் சடப் பொருள் உலகம் மறுக்கப்பட்டுக்கொண்டு வந்தது. மதத்தின் சார்பான மூட நம்பிக்கையால் இயற்கையான புலனுணர்வின் விடுதலை ஏற்றுக்கொள்ளப்படாமல் போயிற்று, ஐம்புலனுணர்வை சுட்டெரிப்பது, அல்லது பொய்யென்று கழித்துக் கட்டுவது, அல்லது அப்புலனுணர்வால் மனிதனுக்கு ஆகவேண்டியது ஒன்றுமில்லை யென்று பலவீனப்படுத்துவதுதான் நடந்து கொண்டு வந்தது. இதைத்தான் பாரதி, தமிழ்மக்கள் எங்குமுள்ள அழகைப் பார்ப்பதில்லையென்றும், சனிக்கிழமை மாலையில் குளக்கரைகளில் கருடனைப் பார்க்க மட்டும் கூடுகிறார்களென்றும் நையாண்டியாகக் கூறியதிலிருந்து அறிகிறோம்.

"எண்ண எண்ண இனிக்கும் காட்சிக்
கேது கோயில்? தீபம் ஏனோ?
வண்ணம் வேண்டில் எங்குமுண்டாம்
மயில் வெற்பும் நன்றே — தோழி"

என்று பாரதிதாசன் பாடியதும் இயற்கையான புலனுணர்விற்கு மதச்சடங்கு தடையாக இருப்பதைக் காட்டுவதுதான்.

இது மட்டுமல்ல நமது நாட்டின் வறுமையும் அறியாமையும் அழகுத் தத்துவம் மறக்கப்பட்டுப் போனதுக்குக் காரணம் என்று கூறலாம்.

கீட்சு காலத்து இங்கிலாந்து நாட்டிலும், இதே போன்ற நிலைமை நிலவியிருந்த தென்றும், அதனால் சடப்பொருள் உலகத்தோடு — புற அனுபவத்தோடு — நேரடியான புலனுணர்வுத் தொடர்புடைய கவிதையைக் கீட்சு எழுதினான் என்றும் ஜாக்சன் பேட் என்னும் திறனாய்வாளர் கூறுகிறார்.[6]

கீட்சு பாடிய 'கிரேக்க தாழிப்பானையின் போற்றிப்பாடல்' என்பது முதலில் ஒரு முரண் தோன்றி அமைந்த அழகுடன் வளர்ந்து, முடிவில் ஒரு ஒன்றிணைப்பில் முற்றுப்பெறுகிறது. அந்தப் பானையில் படைக்கப்பட்டுள்ள சித்திரங்களின் கருக்களில் கீட்சு ஈடுபட்டு அதைக் கலையின் குறியீடாக உருவாக்கி விடுகிறான். ஆனால் கலைக்கும் இயற்கைக்கும் முரண் ஏற்படுவதை அவன் கண்டு, அம்முரணை அப்படியே விட்டுவிடாமல் அதுக்கொரு ஒன்றிணைப்பும் காண்கிறான். 'அழகே உண்மை; உண்மையே அழகு' என்ற தத்துவமே கீட்சு காட்டியிருக்கிற ஒன்றிணைப்பு.

கிரேக்கத் தாழிப் பானையில் உள்ள கலை என்றும் அழியாதது; காலத்தால் நிலைத்து நிற்கக்கூடியது. ஆனால் இந்த உலகத்தில் துன்பங்கள் சூழ்ந்த இயற்கையும் மனித வாழ்க்கையும் நிலை மாறிக் கொண்டே இருக்கின்றன. இப்படிப் பாடுகின்ற கீட்சு இங்கும் தனது நிலை பேறுடைமை என்னும் கருவைக் கொண்டு வந்து விடுகிறான் என்று பார்க்கிறோம்.[7]

கலை இயற்கையை விட உயர்ந்ததா? இயற்கை கலையை விட உயர்ந்ததா? இந்தக் கேள்வி ஒரு போராட்டத்தை விளைவிக்கக் கூடியது. கீட்சைப் போலவே பாரதி

தாசனும் இந்தப் போராட்டத்திலிருந்தது தெரிய வருகின்றது. கீட்சைப் போலவே பாரதிதாசனும் இந்தப் போராட்டத்தின் முடிவில் ஒரு ஒன்றிணைப்புக்கு வந்து கூடு வதும் நன்கு புலப்படுகிறது. பாரதிதாச னின் முதல் கவிதைத் தொகுப்பிலுள்ள 'தமிழ்' பற்றியப் பாட்டுக்களும் 'அழகின் சிரிப்பி'ல் உள்ள 'தமிழ்' என்னும் பாட்டும் இவ்வுண்மையை மெய்ப்பிக்க உதவும் சான்றுகள்,

'தமிழின் இனிமை' என்னும் பாட்டில் தமிழ் இயற்கையை விடவும், வீட்டிலிருக் கும், அனைவரையும் விடவும் உயர்ந்தது என்று பாடுகிறார் பாரதிதாசன் இயற் கையை மேல்நின்று எழுதும் கவிஞர்களைப் பார்த்து, 'நீங்கள் தமிழின் விந்தையை எழுதத் தரமோ'? என்று கேட்கிறார். இதுபோலவே 'தமிழ்ப்பேறு' என்னும் பாட் டிலும் இயற்கையை விடத் தமிழே உயர்ந் தது என்னும் கருத்துடன் பாடுகிறார். கவி ஒன்று வரைந்திடக் கவிஞர் ஏடெடுத் தாராம், இயற்கைப் பொருள்களெல்லாம் தம்மை எழுதச் சொல்லி, கவிஞர் முன் நின்றனவாம். ஆனால் கவிஞரோ, அவை களைப்பற்றி ஒன்றுமே எழுத நினைக்கவில்லை. 'இன்பத் தமிழ்க் கல்வி யாவரும் கற்றவர் என்றுரைக்கும் நிலை எய்திவிடல் வேண்டும்' என்று பேசிவிடுகிறார் கவிஞர்.

இவ்விடத்தில் தமிழ் என்று பாரதி தாசன் பாடுவது மொழியை மட்டும் அல்ல. தமிழைச் சார்ந்த கலை, பண்பாடு பற்றியும் அவர் கருதுகிறார். முதல் தொகுப்புக் குள்ளேயே தமிழுக்கும் இயற்கைக்கு மிடையே உள்ள முரணை ஒன்றிணைப்ப தாகிய கருவோடும், பாரதிதாசன் குறிப் பாகப் பாடியிருப்பது உண்மைதான். ஆன லும் 'அழகின் சிரிப்பில்' 'தமிழ்' பற்றி பாரதிதாசன் பாடியதில்தான் முரண் தவிர்ந்த ஒன்றிணைப்பு தெளிவாகப் பொருத்தி அமைந்துள்ளது என்று பார்க் கிறோம்.

1. தமிழைப் பற்றிய பத்துப் பாக்களில் முதற்பா இயற்கையைப் போன்றே தொன்மையான தோற்றம் தமிழுக்கு உண்டு என்று அறிமுகம் செய்கிறது. 2. இரண்டா வது, மூன்றுவது, நான்காவது பாக்கள் இயற்கையின் தொடர்பால் இசை, இயல், நாடகம் தமிழில் உருவானதைச் சொல்லு கின்றன. 3. நான்கு முதல் எட்டு வரை உள்ளபாக்கள் தமிழையும் தமிழ் மக்களையும் பகைவர் அழிக்க முடியாதென்று பேசுகின் றன. 4. ஒன்பதாவது பா இயற்கையோ டியைந்த தமிழை சாதியிலும் மதத்திலும் சாய்த்துவிட முடியாதென்று பேசுகிறது. இதனால் முன்னால் சொன்ன தமிழுக்குப் பகை சாதி, மத, வேற்றுமை உணர்ச்சி என்பது உணர்த்தப்படுகிறது. எனவே, 5. இறுதியான பத்தாவது பா தமிழுக் கிணை இயற்கை தானென்று முதலாவது பாவில் எடுத்து மொழிந்ததை முற்றுப்பெற வைத்துக் காட்டுகின்றது.

**தமிழின் தொன்மையான தோற்றம்**

"புனல் சூழ்ந்து முடிந்து போன
நிலத்திலே புதிய நாளை
மனிதப் பைங் கூழ் முளைத்தே
வகுத்தது! மனித வாழ்வே
இனிய நற்றமிழே! நீதான்
எழுப்பினை."

**இயற்கையின் தொடர்பில் கலைகள்**

"தழை மூங்கில் இசைத்ததைத் தாம்
தழுவியே இசைத்தாலே
எழும் இசைத் தமிழே"

**தமிழ் பகை வெல்லுதல்**

"அறங்காக்கும் தமிழே! இங்குத்
தடைக் கற்கள் உண்டென்றாலும்
தடந் தோளுண் டெனச் சிரித்தாய்!"

**சாதி மத வேறுபாடே தமிழுக்குப் பகை**

"வாளின எடுங்கள் சாதி
மதம் இல்லை தமிழர் பெற்ற
காளைகள் என்றுய் காதில்
கடல் முழக்கத்தைக் கேட்பாய்"

**தமிழும் இயற்கையும் ஒன்றிணைப்பு**

"கன்னற் பொருள் தரும் தமிழே!—நீ ஓர்
பூக்காடு; நானோர் தும்பி!"

இங்கே காட்டிய ஐந்து பகுதிகளில் கடைசியாக உள்ள பத்தாவது பாவில் ஒரு உருவகத்தின் வழியிலான படிமம் இருப்பதைக் காண்கிறோம். தமிழைப் பூக்காடென்றும் தம்மைத் தும்பியென்றும் பாரதிதாசன் இயற்கையையொட்டியே கற்பனை செய்கிறார். இது வெறுமனே ஒரு கற்பனையாக மட்டும் இல்லை. மேலும் ஏதோ, உருவகப் பொருள் தருகிறது என்று மட்டும் சொல்ல முடியவில்லை. பூக்காடும் தும்பியும் பற்றிய ஜடத்தன்மைப் பொருளைக் கடந்த ஆன்மீகத் தன்மையான உயர்நிலைக்கு இங்குள்ள உருவகக் கற்பனை நம்மை மேலே உயர்த்திவிடுகிறது. தமிழும் இயற்கையும் ஒன்றிணைப்புக் கொண்டுள்ள இக்காட்சியில் கலைக்கும், இயற்கைக்கும் முரண் அற்றுப் போய்விடுகிறது; வாழ்க்கையுடன் தொடர்பு கிட்டிவிடுகின்றது. ஒரு பூ என்று மட்டும் சொல்லாமல் பூக்காடு என்றது கவிதைச் சிறப்பு மிக்கது.

கீட்சு 'அழகே உண்மை; உண்மையே அழகு' என்று 'கிரேக்கத் தாழிப்பானையின் மேல் பாடலி'ல் பானையின் கூற்றாக அமைத்து முடித்ததும், பாரதிதாசன் 'அழகின் சிரிப்பில்' 'தமிழ்' பற்றிய பாட்டில் "நீ ஓர் பூக்காடு — நானோர் தும்பி" என்று கவிக்கூற்றாகச் சொன்னதும் ஒப்புடையன, அழகுப் தத்துவத்தால் கலையையும், இயற்கையையும் வாழ்க்கையுடன் தொடர்பு கொள்ள வைப்பதுதான் இவ்விரு கவிஞர்களுக்கும் அடிப்படை நோக்கம் என்று சுருங்கக் கூறலாம்.

ஆனாலும் இவ்விடத்தில் சிறப்புப் பண்பின் ஒப்பியல் ஆய்வும் தேவைப்பட்டு வருகிறது. கீட்சின், 'அழகே உண்மை; உண்மையே அழகு' என்ற தத்துவம் முழுமையான வாழ்க்கைத் தத்துவமா? அல்லது கவிஞனுக்குப் படைப்புத் தொழில் செய்யும் போது தேவைப்படும் கலைத் தத்துவமா? என்ற கேள்வியை எழுப்புகிறார் சி. எம். பௌரா, இது ஒரு கலைத் தத்துவம் ஆகவே கீட்சுக்குப் பட்டிருக்கிறதென்று திறனய்ந்து முடிவு கூறுமிடத்தில் அவர் தெரிவித்து வருகிறார்.[8]

பாரதிதாசனோ "நீயோர் பூக்காடு — நானோர் தும்பி" என்று பாடியது கலைத் தத்துவத்துக்கும் மேலாக அவருடைய தமிழ் மக்களுடைய வாழ்க்கைத் தத்துவமாக ஒலிப்பது போல் தோன்றுகிறது.

---

**அடிக் குறிப்புகள்:**

1. காரண விளக்குமுறை — Causal Explanation
2. "More than this, they were all gifted with a high degree of physical sensibility and sometimes so enthralled by what they saw that it entirely dominated there being. This is absolutely true of Wordsworth and of Keats who brought back to poetry a keeness of eye and of ear, which it had hardly known since Shakespeare."
   Page 12. Romantic Imagination — C. M. Bowra
3. பாரதியார் கட்டுரைகள்.
4. பாரதிதாசன் கவிதைகள் — தொகுதி II.
5. "The beauty of visible things carried Keats into ecstasy, and this was the goal of his desires, since it explained the extra-ordinary hold which objects of sense had on him and justified his wish to pass beyond them to something permanent and universal."
   Page 16. Romantic Imagination — C. M. Bowra.
6. "The experimentation moves constantly forward great honesty — greater openness to Concrete life and the climbs of experience toward greater fullness and richness of expression and at the same time a growing strength of control and sensitivity to the formal climbs of Poetic art"
   Page 341. English Romantic Poets — ஜாக்சன் பேட்.
7. "When old age shall this generation waste
   Thou Shalt remain, in midst of other woe
   Than ours, a friend to Man, to whom Thou Sayst,
   'Beauty is Truth, Truth Beauty' that is all
   Yee, no on earth, and all yee need to know"
   Ode to Gracian Urn — Keats.
8. "This is not a Complete Philosophy of life, nor did Keats intend it to be. It is a theory of Art, a doctrine intended to explain his own creative experience."
   Romantic Imagination — C. M. Bowra.

# THE ART OF THE BRONZES







**Thiru K. V. SOUNDARARAJAN**

It is part of an organised religion to expand the rituals connected with the worship or divinities. Early religion did not envisage worship of images or icons. It was a relatively later development. It was therefore necessary to find new media for the making of images which can stand the new rituals getting introduced into temple worship. The earlier media was stone and stucco, not to mention wood. These media however, continued to be in use, as their importance for the varying contexts of temple worship continued to be valid. It is to be noted here that the use of small personal effigies and images especially in the nobler metals such as gold and silver had a fairly early origin, and were perhaps prevalent from the 3rd century B. C. in the Maurian Empire of the north. These however, did not involve mass usage nor were technically of superior artistry. In the wake of expanding Agama controlled temple worship, the new role of images in bronze became necessary, since the image in the sanctum became unshakable and fixed. Further, the introduction of the *shodasha upacharas* including abhisheka called for images which could be daily bathed, ritually. Images of stucco in this respect became unsuitable as their painted exteriors would have been spoiled by the *abhisheka*. Although the Buddhists had utilised bronze images earlier than the Hindus in their worship, it was in Hinduism the importance of bronze images as *utsava-murtis* became established. In Tamil Nadu the clear reference to metal in use in temples could be taken as of the early Pallava period. The famous Mandagapattu cave record of Mahendravarman I (580–630 A. D.) refers to his new creation of temple without the use of brick, wood, metal or stucco, obviously referring to the rock cut medium. In the later Pallava period, we see the first introduction of small sized bronze images, especially of Vishnu, in various forms. It is not possible, however, to assert if the small images could have been intended for collective worship in temples. Most probably, they were personal images for daily *aradhana* by individuals. Bronze figures for *utsava - murtis* in temples were to be not only ritually bathed daily, but also carried in procession in and around the temple

during the festivals in the annual calendar. This concept of the *sthavara* and *jangama* forms of images representing the movable and immovable universe controlled by god is all the more typical of the motivations of the close relationship between idea and icon in religious worship.

The preparation of the bronze idols involved two types of models, one hollow, the other solid. The Buddhist bronzes of the north and of Andhra Pradesh of the 5th - 6th centuries A. D. are all of the hollow variety. Many of the bronzes of Tamil Nadu are of the solid type. They are executed by the 'lost wax' process (Cire Perdue) or *Madhucchisthavidhana*, as it is called. The proportionate measurements are similar to those adopted for the stone sculptures. The bronzes comprise three main parts, the pedestal, the image proper and, in the case of Saiva images, of the *Prabhamandala* or *Tiruvachi*. The majority of the earliest bronzes, around the closing decades of the 9th and the early 10th century, were vigorous, varied and unconsolidated in the posses. However, when the conventionalisation of the ceremonial postures suitable for worship was made through the *Agamas*, it was the standing posture, in *samabhanga* stance of legs that found favour for the main *utsava murtis*, whether Vaisnava or Saiva. Seated images which had already gained a usage, such as the Somaskanda, were, however, part of the conventionalised icons. The Somaskanda itself goes out of vogue after a century or two, and the Tyagaraja image (in the modified form without the boy skanda) takes its place. Skanda or Subrahmanya starts getting his own image as a *svayampradhana* deity, in his sub-shrine or separate shrine. The galaxy of bronze figures in a Siva shrine was high-lighted by the Nataraja image, which becomes a constant factor in all temples from the second half of the 10th century A. D. The posture was that of *Ananda Tandava* which, alike in its vitality and beauty, summarises the artistic and philosophic elements of life cycle and its controlling divine principle. The dancing Siva figures before the standardization of Nataraja icon in Tamil Nadu were representing several interesting postures and murtis of Saiva legend, like Gajantakamurti or variously of *utkutika chatura*, Lalitha, leg-postures, but they were yet a far cry from the standardised '*Ananda Tandava*' concept and icon. This concept which was the creation of the *Pratyabhigna* school of Kashmir Saivism was, by their settlement at Perumbarrappuliyur (which was in the immediate neighbourhood of Tillai Chitrambalam), given iconic shape by local religious movements and art guilds, and the Nataraja image was born and was to become an ubiquitous feature of all Saiva temples of Tamil Nadu subsequently. Although Nataraja became also a chief god of veneration and patronage from the time of parantaka I onwards (the king who is said to have laid tiles of gold to the roof of the shrine of this deity at Tillai) and in the time of Raja Raja (a king who named his god, unit of measure, unity of weight, all as 'Adavallan' - after this deity, in the Great temple at Thanjavur), it was always customary to keep the Nataraja image separate from the main shrine sanctum, or its immediate *utsavabheras*. The fixation of Nataraja shrine facing south along the north east part of the temple became a practice, and the shrine was for all intents and purposes considered separate, though subservient to the main deity in deity ritual sense. The roots of this division are also traceable to Chidambaram, when the first creation of this icon (which began at the hands of an exclusive group) was assimilated into the Saiva Siddhanta base of the mass Saivism, under Meykandar and Umapati Sivacharya in the late Chola period. After

the rise of the Acharyas or leaders of Sectarian Hinduism, as different from the saints (Alwars and Nayanmars) of earlier stage, these saints and leaders were also canonised duly and worshipped in temples, giving rise not only to a proliferation of bronzes, but also a development of portrait bronzes as well.

All these developments of bronze images were a special feature of Tamil Nadu primarily, although Karnataka and Andhra, wherever influenced by Cholas, due to empire expansion, had a modicum of such subsidiary processional images. Thus, in Tamil Nadu, it is possible to see the development of bronze-casting and ritual expansion of the bronze images from the Imperial Chola times, through the Pandyan and Vijayanagar and Naik stages of the mediaeval period. The late Pallava stages marks only an incipient stage of the rise of personal images for worship in bronze of a less than medium size and varied type – which was due to the firm establishment of Agama and Pancharatra traditions in the community life and in the temples by the middle - late 9th century A. D.





நீலங்கொள் மேகத்தின் மயின்மீதே
நீவந்த வாழ்வைக்கண் டதனாலே
மால்கொண்ட பேதைக்குன் மணநாறும்
மார்தங்கு தாரைத்தந் தருள்வாயே
வேல்கொண்டு வேலைப்பண் டெறிவோனே
வீரங்கொள் சூரர்க்குங் குலகாலா
நாலந்த வேதத்தின் பொருளோனே
நானென்று மார்தட்டும் பெருமாளே

— திருப்புகழ்

# "படிமக்கலை"





திரு. அரு. இலக்குவன்

"பண்புடையார்ப் பட்டுண்டு உலகம்" என்பது பொய்யாமொழி. இக் கூற்றை மெய்ப்பித்துக் காட்டு முகத்தான் அமைந்துள்ளது படிமக்கலை. மனிதன் பண்பட்டு காட்டு மிராண்டியிலிருந்து பழைய கற்கால மனிதனாகவும், பின் புதிய கற்கால மனிதனாகவும், உலோககால மனிதனாகவும் படிப்படியாக வளர்ச்சியடைந்தான். பட்டறிவு அவனைப் பண்படுத்தியது. உள்ளம் தெளிவுறத் தெளிவுற தன் தேவைகளுக்கு வேண்டிய காலம் (நேரம்) போக எஞ்சிய காலத்தை கவினுறு அழகுக் கலைகளில் செலவிட்டு மேன்மையானவனாக ஆனான். இந்த நுண் கலைகளில் ஒன்று படிமக்கலை. இக்கலை மனிதனின் அறிவு வளர்ச்சிக்கு ஒரு நற்சான்று.

கற்கால மனிதன் தன் தேவைக்கு வேண்டிய கருவிகளைக் கற்களில் சமைத்தான். தன் கலைத் திறனைக் கோட்டின் மூலம் வரைந்து உருவங்களை வடித்தான். பிந்தைய மனிதன் களிமண்ணைச் சட்டிபானை தட்டுமுட்டுச் சாமான்கள் செய்வதற்கும், கட்டிடக் கலைக்கும் பயன்படுத்தியபொழுது சிறிய பொம்மைகள் (figurines) செய்யவும் பயன்படுத்தினான். இக்களிமண் பொம்மைகளை முதலில் கைகளாலேயே செய்தான். பின்னர் அச்சுக்களைப் பயன் படுத்தினான்.

கைகளினால் இந்த உருவங்களைச் செய்தபொழுது, உருட்டியும், அழுத்தியும், கிள்ளியும் இவைகளைப் படைத்தான். உறுப்புகளையும், அலங்காரப்பொருள்களையும், சாதனங்களையும் தனித்தனியே செய்து பிறகு அவைகளை உடம்போடு ஒட்டி ஒன்று சேர்த்து இச்சிறிய பொம்மைகளைச் செய்தான். இவைகளை உருவாக்கிய பொழுது தன் கற்பனை வளத்தைப் பெய்து புதிய புதிய உருவங்களைச் செய்தான். அவைகள் தான் காணும் உலகின் மறு பிரதியாகவும் கற்பனை உலகின் படிமமாகவும் பல்வேறு உருக்களைப் பெற்றன. கைகளைத் தவிர கத்தி, குத்தூசி போன்ற கருவிகளையும் படிப்படியாக பயன்படுத்தி உருவங்களை எழில் மிகுந்தவைகளாகச் செய்தான். இப்பொம்மைகள் விரைவில் அழியாதிருக்க அவைகளைத் தீயில் இட்டுச் சுட்டான். இந்தச் சுட்ட களிமண் பொம்மைகள் (Terratottas) ஒரு நாட்டின் வரலாற்றையும், பண்பாட்டையும் பற்றி அறிய இன்றியமையாத சாதனங்களாக அமைகின்றன. பேராசை பிடித்த மனிதன் முன்னோர் விட்டுச் சென்ற உலோகத்தால் ஆகிய உருவங்களைப் பொருளுக்காக உருமாற்றி விடுகிறான். இல்லாவிடில் அவைகள் அரசுடமையாக்கப்படும். ஆனால் சுட்ட களிமண் பொம்மைகள் அவ்வாறு மாற்றப்

படுவதில்லே. தவிரவும் அவைகள் ஓரிடம் விட்டு மற்றோரிடத்திற்கு எடுத்துச் செல்லப் படுவது மிகக் குறைவு. எனவே படிமக் கலையின் முன்னோடியான இச்சுட்ட களிமண் பொம்மைகள தோன்றிய இடங்களிலேயே விட்டுவைக்கப்பட்டுள்ளன. இது ஆராய்ச் சிக்கு பெரிதும் பயன்படுகின்றது.

பிற்காலத்தில் மரத்திலும் கல்லிலும் உருவங்களை மனிதன் செதுக்கத் தொடங்கி னன். மரத்தில் வேலை செய்வது எளிது. ஆனல் அது விரைவில் அழியக் கூடியது. கல்லிலே செதுக்கப்பட்ட உருவங்கள் பல்லாயிரம் ஆண்டுகள் இருக்கக் கூடியவை கள். கடினமான செயலாக இது அமைந் தாலும் மனிதன் கல்லிலே கலை உருவங் களைப் படைத்தான். நம் நாட்டின் எந்தத் திசையிலே சென்ருலும் கல்லில் செதுக்கப் பட்ட சிற்பங்களைக் காணலாம். இவை களில் பெரும்பான்மையானவை தெய்வங் களின் திருவுருவங்களாகவும், சில மனித வாழ்க்கையையும் அதன் சூழலையும் சித்த ரிக்கும் உருவங்களாகவும் இருக்கின்றன.

கல்லின் அமைப்புக்கு ஏற்ப உருவங்கள் வன்மையாகவும் அல்லது மென்மையாகவும் அமைந்தன. மணற் கல்லில் செய்த உருவங் கள் தடித்ததாக அமைந்தன. உளியினல் செதுக்க எளிதாகத் தெறிக்காத கல்லினல் ஆகிய உருவங்கள் மெல்லிதாக நளின முள்ளதாக அமைந்தன. இவ்வுருவங்களைச் சிற்பி உயிரோவியங்களாகப் படைத்தான். உணர்வுகளும், தெய்வீகத்தன்மையும் இவைகளில் வடிக்கப்பட்டன. மரத்திலே செய்த தேர்ச்சி பெற்ற மனிதன் அதே அமைப்புக்களைக் கல்லிலே காண முற்பட்டான் அம்முயற்சி முழு அளவில் வெற்றி பெற்றது. இது மரத்திலே செய்யப் பட்ட சிற்பமோ! என்று அதிசயிக்கத்தக்க வகையில் அவ்வளவு நுண்ணிய செதுக்கல் களைச் செய்து கலைவண்ணத்தைக் கல்லிலே கண்டான் மனிதன்.

மேற்கண்ட உருவ அமைப்புக்களுக்கு முடிசூட்டுவது போல (மேம்பாடாக) உலோ கங்களில் உருவங்களைப் படைத்தான். இன்றைக்கு ஐயாயிரமாண்டுகளுக்கு முன் சிறப்புற்றிருந்த "ஹாரப்பா" நாகரிக காலத்தில் உலோகத்தில் உருவங்களை வார்க்கும் கலை மேன்மை பெற்று விளங் கியது. செம்பினல் செய்யப்பட்ட ஒரு "நடன மாதின்" சிற்பம் மெழுகிலே உருச் செய்து அச்சிலே அமைத்து உருக்கி உலோ கத்தை வார்த்து உருவம் செய்யும் முறைக்கு (Lost wax process) எடுத்துக் காட்டாக அமைகிறது. இதைச் செய்த சிற்பி, ஆயிர மாண்டுகள் வளர்ந்து வந்த ஒரு கலைத்திறனை பின்பற்றி இவ்வுருவத்தைச் செய்திருக்க வேண்டுமென்று அறிஞர்கள் கருதுகின்ருர் கள். இப்படி பல்லாயிரமாண்டுகளுக்கு முன் இந்த மண்ணில் தோன்றிய இந்தபடிமக்கலை மற்றைய நாடுகளிலிருந்தும் வேறுபட்ட சிறந்த பண்பாட்டை உடைய நாடாக நம் நாட்டைத் தலைநிமிர்ந்து நிற்கச் செய்கிறது.

பற்பல மன்னர்களால் இப்படிமக் கலை ஆதரிக்கப் பெற்றுள்ளது. பாரத நாடு முழுவதும் குறிப்பாகத் தமிழகத்தில் பல கோயில்களில் காணப்படும் திருவுருவங்கள் நம் நாட்டுக் கலைஞனின் திறனைப் பறை சாற்றுகின்றன. திருக்கோயில்களில் காணப் படும் திருவுருவங்கள் கல், உலோகம், மரம் (பூரி, ஜகன்னதம்) சுதை வேலை (ஸ்ரீரங்கம், சமயபுரம்), பாஷாணம் (பழனி ஸ்ரீ தண்டாயுதபாணி சுவாமி) முதலியவை களால் செய்யப்பட்டுள்ளன. பழனி மலைக் கோயிலில் உள்ள மூலவர், போகர் என்ற சித்தரால் பாஷாணங்கள் ஒன்பதைக் கொண்டு செய்யப்பட்டதாகும். இம் முருகப் பெருமானின் திருவுருவத்தின் மேல் அபி ஷேகம் செய்யப்பட்ட பஞ்சாமிருதம் பல மாதங்களுக்கு நலம் கெடாமல் உள்ளது. இராக்கால பூசையில் சாற்றி மறுநாள் உஷாக்கால பூசையில் எடுக்கப் பெற்ற சந்தனம் பலநோய்களுக்கு மருந்தாக அமை கிறது. இப்பொழுது பாஷாணங்களைக் கட்டி ஒன்று சேர்த்து திருவுருவம் செய்யக்கூடிய ஆற்றல் படைத்தவர் யாரும் இருப்பதாகத் தெரியவில்லை.

திருக்கோயில்களில் உள்ள உலோகப் படிமங்கள் அக்காலத்தில் வாழ்ந்த கலைஞர் களின் உலோகக்கலவை முறையின்

தேர்ச்சியை நமக்குப் புலப்படுத்துகிறது. அதுபோன்ற கலவைகளை இன்று செய்வதற்குப் பல சாதனங்கள் தேவைப்படுகின்றன. இதை மிக எளியமுறையில் நம் முன்னோர்கள் செய்து முடித்திருக்கிறார்கள் என்பது நமக்குப் பெருமையைத் தருகிறது இந்த உலோகத்தால் ஆன திருவுருவங்கள் ஒவ்வொன்றும் பல இலட்ச ரூபாய்கள் மதிப்புடையதாக இருக்கிறது. பணத்தாசை பிடித்த கும்பல்கள் இத் திருவுருவங்களைத் திருடி வெளிநாடுகளுக்கு விற்கின்றன, நம்நாட்டுப் பண்பாட்டிற்கு இது ஒரு மாசாக அமைகின்றது.

உலோகத்தில் படிமங்களைச் செய்வதற்கு முன் மெழுகில் அவ்வுருவத்தைச் செய்து கொள்ள வேண்டும். மெழுகில் உருவம் செய்தல் கலைஞனுக்கு மிக எளிது. அதை வழிகள் வைத்து களிமண்ணில் மெத்தி மூடி வெடிப்புகள் ஏற்படாவண்ணம் உலரவைக்க வேண்டும் நன்கு உலர்ந்த பின் அதைத் தீயிலிட்டால் வழிகளின் மூலம் மெழுகு உருகி வெளிவந்து விடும். இது நமக்குத் தேவைப்படும் உருவத்தின் அச்சாக அமைகின்றது. இந்த அச்சில் உருக்கிய உலோகக் கலவையை ஊற்றி நன்கு குளிர்ந்த பிறகு அச்சை உடைத்து எடுத்தால் உருவம் கிடைக்கும். இதில் சிறிய பள்ளங்களும் முனைப்புக்களும் இருக்கும். வழித்தண்டுகளை வெட்டியெடுத்தும், பள்ளங்களில் உலோகக் கலவையைச் செலுத்தி மேவியும், முனைப்புக்களை அரம் கொண்டு தேய்த்து எடுத்தும் உருவத்தை முழுமை பெறும்படி செய்வார்கள்.

நம் நாட்டுப் படிமங்களின் எழில்மிகு தோற்றம், அமைப்புக்கள், முத்திரைகள் மூலம் பெறும் குறிப்புக்கள் ஆகியவற்றை மற்றைய நாட்டுப் படிமங்களில் காண இயலாது. ஒவ்வொரு படிமமும் ஒரு கற்பனைக் களஞ்சியமாக அமைகின்றது. திருவுருவத்தின் தலையில் கிரீட மகுடம், கரந்த மகுடம், ஜடா மகுடம், அலங்கார மகுடம் என்று பலவிதமான மகுடங்களும், உடலில் பற்பல விதமான ஆடை அணிகலன்களும், கைகளில் வெவ்வேறு விதமான ஆயுதங்களும் பொருள்களும் காணப்படுகின்றன. உடல் ஒரே செங்குத்துக் கோடாகவோ, ஒருவளைவு உள்ள இரு கோடுகளாகவோ, இருவளைவுகள் உள்ள மூன்று கோடுகளாகவோ, பல வளைவுகள் உள்ள பல கோடுகளாகவோ, அமைந்துள்ளது. யோகாசன முறைப்படி இருக்கும் முறையும் (Asanas) பலவாக அமைந்துள்ளது. இருக்கையும் (Pedestal) பலவகையாகக் காணப்படுகின்றன. மேற்கூறிய ஒவ்வொன்றும் ஒரு கருத்தை நமக்குத் தெளிவுபடுத்துகின்றது.

படிமங்களில் காணப்படும் முத்திரைகள் தனித்தன்மை வாய்ந்தவைகள். அக்காலத்தில் தெய்வீகத் தன்மையுடைய இடங்களில் வாய்விட்டுப் பேசினால் எச்சல் படும் என்பதற்காக முத்திரைகள் மூலம் கருத்துக்களைப் பரிமாறிக் கொண்டனர். இது முதிர்ந்து தர்க்கங்களுக்குக்கூட முத்திரையைப் பயன்படுத்தும் நிலைமையை இந்நாடு ஒரு காலத்தில் பெற்றிருந்தது. இம்முத்திரைகள் திருக்கோயில்களில் உள்ள படிமங்களில் சில குறியீட்டு நோக்கங்களோடு அமைந்துள்ளன.

திருவுருவங்களிலே சிறந்ததாக அமைந்துள்ள நடராஜப் பெருமானின் திருவுருவத்தில் உள்ள குறியீடுகளை நாம் இங்கு காண்போம். இறைவனின் செயல்களை ஐந்தொழில்களாகப் பிரிக்கின்றோம். அந்த ஐந்தொழில்களை ஆடற்பெருமானிடத்தில் காணலாம். பின் வலதுகையில் உள்ள உடுக்கையிலிருந்து "ஆக்கல்" பிறக்கின்றது. பின் இடது கையில் உள்ள தீயிலிருந்து "அழித்தல்" செயல்படுகின்றது. முன் வலதுகை அபய முத்திரையிலுள்ளது. இது "காத்தல்" தொழிலைக் குறிக்கும். முயலகனை (அறியாமையை) நெறித்து ஊன்றியிருக்கும் வலதுகாலும் அதைச் சுட்டிக்காட்டும் முன் இடதுகையில் கஜஹஸ்த அமைப்பும் "மறைத்தல்" இயல்பைக் குறிக்கின்றன. தூக்கிய திருவடி "அருளல்" தன்மையைக் குறிக்கும். திருமேனியில் காணப்படும் பொருள்கள் யாவையும் பல கருத்துக்களை நமக்குப் புகட்டுகின்றன. அடுத்ததாக ஆலமர் கடவுளாகிய தக்ஷிணாமூர்த்தியின் திருவுரு

வத்தில் உள்ள குறியீடு நம்மைச் சித்தாந்த செல்வர்களாக ஆக்குகின்றது. இருந்ததனை இருந்தபடி இருந்துகாட்டி என்ற சொற்றொடர் ஐயனின் ஆசிரியத் தன்மையை நமக்கு வெளிப்படுத்திக் காட்டுகின்றது. நல்லாசிரியன் குறிப்பால் உணர்த்தவல்லவன் என்பதற்கு எடுத்துக்காட்டாக அமைகின்றது இத்திருவுருவம். ஆலமரத்தின் படர்ந்த நிழல் அறியாமை எவ்வளவு பரவிக் கிடக்கின்றது என்பதனைக் காட்டுகின்றது. எம்பெருமான் ஆடாது அசையாது உட்கார்ந்திருக்கும் நிலை ஆசிரியன் ஒரே நோக்கத்தோடு இருக்கவேண்டும் என்பதை வெளிப்படுத்துகின்றது. பாடம் கேட்கும் முனிவர்கள் கவனத்துடன் குறிப்பறிந்து உணரவேண்டும் என்பதனைப் புலப்படுத்துகின்றது. யாவற்றுக்கும் மேலாக மூர்த்தியின் முன் வலது கையில் உள்ள "வியாக்கியான" முத்திரை சைவ சித்தாந்தக் கோட்பாட்டைப் புகட்டுகின்றது. இம்முத்திரையில் கட்டைவிரல் "பதி"யைக் குறிக்கின்றது. பதி தனித்து நிற்கும் தன்மையுடைத்தது. இவ்விரல் மற்றைய விரல்களை விட்டுப் பிரிந்து நிற்கின்றது. ஆட்காட்டி விரல் "பசு"வைக் குறிக்கின்றது. இது ஆணவம், கன்மம், மாயை என்ற மூன்று மலங்களை ("பாச"ங்களை)க் குறிக்கும் ஏனைய மூன்று விரல்களுடன் ஆட்காட்டி விரல் பொதுவாகச் சேர்ந்திருக்கும். பசு பாசங்களால் பிணைக்கப்பட்டு அவைகளோடு சேர்ந்திருக்கும். அதை அப்பாசங்களினின்று பிரித்து பதியை நோக்கி கொண்டுவர வேண்டும் என்பது சைவ சித்தாந்தம். ஆட்காட்டி விரலை மடக்கி கட்டைவிரலுடன் சேர்ப்பது சித்தாந்தம். இதுபோல நம் நாட்டுப் படிமங்களில் எத்துணையோ குறியீடுகள் உள்ளன.

கலையைக் கலைக்கண் கொண்டு பார்த்தால்தான் முழுமையாக உணர முடியும். அவ்வாறின்றி வேறு நோக்கோடு பார்த்தால் அது பலனில்லாது போய்விடும். மூடப் பழக்கவழக்கங்கள் தேவையில்லை. ஆனால் முதிய அறிவு தேவைப்படுகின்றது. நாம் முதிய அறிவைப்பெற புதிய கருத்துக்களோடு சில பழமையான கருத்துக்களையும் பின்பற்றினல் அது எளிதில் முடியும். பழையன கழிதலும் புதியன புகுதலும் இன்றியமையாததுதான். ஆனல் எக்காலத்துக்கும் உரிய முற்றும் உண்மையான கருத்துக்கள் களைய வேண்டுவனவற்றில் சேராது. நம் முன்னோர்கள் செய்த சில இன்றியமையாத காரியங்களை விடுத்து புதிய காரியங்கள் செய்யவேண்டுமென்று பகுத்தறிவு ஆராய்ச்சி செய்ய வேண்டியதில்லை. மதம் மனிதனைப் பண்படுத்தி நல்வழிப் படுத்துகின்றது. அதற்கு படிமங்கள் பெரிதும் துணை புரிகின்றன. மனிதனை மனிதனுக வாழ வகை செய்கின்றன. நம் நாட்டிற்குப் பெருமை தேடித் தந்துள்ள இக்கலையைப் போற்றி வளர்ப்போமாக.

வாழ்க கலை! வளர்க தமிழ்!

அஞ்சு முகந்தோன்றின் ஆறு முகந்தோன்றும்
வெஞ்சமரில் அஞ்சேலென வேல்தோன்றும் — நெஞ்சில்
ஒருகால் நினைக்கின் இருகாலும் தோன்றும்
முருகாவென் றேதுவார் முன்.

—திருமுருகாற்றுப்படை

# அறநிலையத் துறையில் பொறியியல் பிரிவு

திரு. ஏ. கிருஷ்ணமூர்த்தி

வரலாற்றுச் சிறப்புடைய, தமிழகத் திருக்கோயில்கள், ஆலயங்கள், சமய வழி பாடு மட்டுமின்றி, மக்களிடையே கல்வி, கலாச்சாரம், ஆகியவற்றினைப் பரப்புவதிலும், வழிபடும் பக்தர்களுக்குத் தங்கும் வசதிகளை அமைப்பதிலும், சீரிய முறையில் பல்லாண்டுக் காலமாய் பணியாற்றி வந்திருக்கின்றன. அதோடு மட்டுமின்றி பல பள்ளிகள், கல்லூரிகள், மருத்துவ சாலைகள், சிறுர் காப்பகங்கள், அனாதை இல்லங்கள் முதலியவைகளை நிறுவி சிறந்த முறையில் பேணி வருகின்றன.

பழையகலாச்சாரங்களை விளக்கும் சிற்ப ஓவியங்கள் பல திருக்கோயில்களில் உள்ளன. அதைப்பேணி பாதுகாக்கும் அளவில், திருக்கோயில்கள் திருப்பணி செய்யப்பட்டு வருகிறது. மேலும் வழிபடும் பயணிகளுக்குத் தங்கும் விடுதிகள், பல திருக்கோயில்களினல் கட்டப்பட்டுள்ளது. உதாரணமாக, அருள்மிகு தண்டாயுத பாணிசுவாமி திருக்கோயில், பழனி, அருள்மிகு சுப்பிரமணிய சுவாமி திருக்கோயில், திருத்தணி, மற்றும் திருச்செந்தூர். இராமேஸ்வரம் போன்ற பல இடங்களில் பெருமளவில் கட்டப்பட்டு விளங்குவது, இத் துறையின் பெருமையைக் குறிக்கின்றது. இத்தகைய வேலைகள் முன்பு, தனிப் பொறியாளர்களின் மூலம் செய்யப்பட்டு வந்தது. பெரும்பாலான தனி பொறியாளர்கள் அரசுப் பணியிலிருந்து ஓய்வு பெற்றவர்களே. அவர்களைக் கொண்டே இவ் வேலைகளைக் கவனிக்க இயலாததால் மேற் கூறியபடி, கட்டிடத் திருப்பணி வேலைகளைச் செவ்வனே செய்ய 1965 ஆம் ஆண்டில் சிறிய அளவில் பொறியியல் பிரிவு ஆணையர் அலுவலகத்தில் ஆரம்பிக்கப்பட்டது. அப் பிரிவில் குறைந்த அளவில் பிரிவு அலுவலர், வரைவாளர் ஆகிய பணியாளர் தொகுதியுடன் ஒரு கோட்டப் பொறியாளர் தலைமையில் செய்யப்பட்டு வரலாயிற்று.

1967 ஆம் ஆண்டிற்கு பிறகு, பெருமளவில் கட்டிட வேலைகள் மற்றும் திருப்பணி வேலைகள் மேற்கொள்ள வேண்டியிருந்ததால் பொறியியல் பிரிவு, விரிவாக்கப்பட்டு ஒவ்வொரு துணை ஆணையர் அலுவலகத்திலும், அவரது ஆட்சி எல்லைக்குள் பணியாற்ற ஒரு உதவிப் பொறியாளரின் பொறுப்பில் ஒரு பொறியியல் பிரிவு நிறுவப்பட்டது: தற்போது, தமிழகம் முழுமைக்கும் ஒரு மேற்பார்வை பொறியாளரின் தலைமையில் மிகச் சிறிய முறையில் இப்பொறியியல் பிரிவு இயங்கி வருகிறது. இப்பொறியியல் பிரிவு, கட்டிடம் கட்டுதல், புதுப்பித்தல் உள்பட திருக் கோயில் திருப்பணி வேலைகளுக்கான வரைபடம், மதிப்பீடுகளைத் தயாரித்து அவைகளை இத்துறை ஆணையாளர், துணை ஆணையாளர் மற்றும் உதவி ஆணையாளர் ஆகியோர் நிர்வாகப் பணிக்கு உறுதுணை புரிந்து வருகின்றது.

இப்பிரிவில் பணியாற்றும் பொறியாளர் நெடுஞ்சாலைத் துறையினைச் சார்ந்தவர்கள். திருக்கோயில்களில் திருப்பணி வேலைகள் அனைத்தும் முன்பு, ஒரு தோராயமாக மதிப்பீடு செய்து அதைத் தோராயத் தொகைக்கே ஒப்பந்தக்காரர்களிடம் ஒப்படைக்கப்பட்டு வந்தது. அந்த மதிப்பீடுகள் யூனிட், அளவு, ரேட் இல்லாமல் தயார் செய்யப்பட்டு ஒப்பந்தக்காரர்களிடம் ஒப்புவிக்கப்பட்டதால், ஒப்பந்தக்காரர்கள்,

வேலை முடியும் தருவாயில் கூடுதல் தொகையினைப் பெரும்பாலும் கேட்க நேர்ந்ததோடு பல இடங்களில் அதன் விளைவாகத் தாவாக்களும் ஏற்படலாயின, வேலையின் அளவிற்குத் தக்க ரேட்டிற்கு, குறிப்புகள் இல்லாததால் இவ்வாறு நிகழ நேரிட்டதோடு பல திருக்கோயில்களில் அதிக தொகையினையும் கொடுக்க நேர்ந்தது. ஒப்பந்தக்காரர்களில் சிலர் இந்த சந்தர்ப்பத்தை அவர்களது இலாப நோக்கத்திற்குப் பயன்படுத்திக் கொள்ள ஏதுவாயிற்று.

இதன் விளைவாக இத்துறை பொறியியல் பிரிவில் இதைப் போன்ற, சிற்ப, ஓவிய வேலைகளுக்கு டேட்டா (Data) தயார் செய்யக்கருதி இம்மாதிரி வேலைகள் பலவற்றைச் சோதனை செய்து, டேட்டா தயார் செய்யப்பட்டது. இதனால், இம்மாதிரி வேலைகளுக்கு மதிப்பீடு வரைபடம் தயார் செய்து, ஒப்பந்தம் செய்து கொள்வதில் திருக்கோயில்களுக்கு இலாபகரமாக இருப்பதோடல்லாமல், எவ்வித மான தாவாக்களும், அதிகத் தொகை கேட்பதும் அடியோடு நின்றுவிட்டது என்பதை பெருமையுடன் கூறிக்கொள்ள வேண்டியிருக்கின்றது. இந்த அறநிலையத் துறையில், பொறியியல் பிரிவு இத்தகைய, சிற்ப ஓவிய வேலைகளை கண்காணிக்க *1965* ஆம் ஆண்டு முதல் நன்குத் தேர்வு பெற்றுள்ளனர். மேலும், பொறியியல் துறையினர் சிற்ப வேலைகளின் நுணுக்கங்களைப் பயில, ஒரு குறுகிய கால பயிற்சியும் அளிக்கப்படுகின்றது. இதன் விளைவாக மேலும் சீரிய முறையில் சிற்ப வேலைகளையும் திருப்பணிகளையும் சிறந்த முறையில் செய்து முடிக்க உதவிகரமாகப் பணியாற்றப்படும் என்பதில் ஐயமில்லை.

மேற்படி வேலைகளுக்கான, மதிப்பீடுகள் முன்பெல்லாம், தனிப்பொறியாளர்களால் தயார் செய்யப்பட்டு அவர்களைக் கொண்டே மேற்பார்வை செய்யப்பெற்று மதிப்பீட்டுத் தொகையில் தோராயமாக வந்ததில் 8 விழுக்காட்டுத் தொகை தனிப்பொறியாளர்களுக்கு கொடுக்கப்பட்டு வந்தது. ஆனால் தற்போது பொறியியல் பிரிவு தான் அளித்துவரும் தொழில் நுட்ப உதவிக்காக அந்த தொகையினை வசூலித்து வருகிறது. அதனால் ஆண்டு ஒன்றுக்கு சுமார் ரூபா ஒரு இலட்சம் வரை பணியாளர் தொகுதிக்கான செலவு நீங்கலாக இத்துறைக்கு லாபம் கிடைப்பதோடு சீரிய முறையில் திருப்பணி வேலைகளை முடிக்க உதவி புரிந்து இயங்கி வருகின்றது.

பொறியியல் பிரிவின் மேற்பார்வையின் கீழ், பல இராஜ கோபுரத்திருப்பணிகள் செய்யப்பட்டிருக்கின்றன. அவைகளில் குறிப்பாக, புதிய இராஜ கோபுரத் திருப்பணி அருள்மிகு வடபழனியாண்டவர் திருக்கோயில், வடபழனி, அருள்மிகு பால சர்துலீஸ்வரர் திருக்கோயில், குடியாத்தம், அருள்மிகு சுந்தரேஸ்வரர் திருக்கோயில், கோவூர் முதலியன குறிப்பிடத்தக்கது.

*1965* ஆம் ஆண்டு முதல் ஒப்பளிக்கப்பட்ட வேலை மதிப்பீடு விபரங்கள் கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது.

| | வேலையின் எண்ணிக்கை | தொகை இலட்சங்கள் |
|---|---|---|
| *1965* | *107* | *26.97* |
| *1966* | *334* | *119.00* |
| *1967* | *278* | *111.00* |
| *1968* | *95* | *0.35* |
| *1969* | *153* | *0.57* |
| *1970* | *320* | *117.00* |
| *1971* | *515* | *220.00* |
| *1972* | *988* | *386.00* |

இந்த பொறியியல் பிரிவு அறநிலையத் துறையில், ஒரு முக்கிய அம்சமாக விளங்கி வருகிறது. இத்துறையினர் தமிழ்ச் சமுதாயத்திற்குத் திருக்கோயில் மூலம் சீரிய முறையில் பணி செய்து வருகிறார்கள்.

திருக்கோயில்களின் சிற்பக் கலையினை அபிவிருத்தி செய்வதிலாகட்டும், புதுப்பித்தல் அல்லது பேணி வருதல் அல்லது வழிபாட்டுப் பயணிகளின் வளர்ந்து வரும் எண்ணிக்கைக்கேற்ற வசதிகளை அளிக்கும் துறையிலாகட்டும் பொறியியல் பிரிவு ஆற்றி வரும் பொறுப்பு மிகவும் போற்றத்தக்கதாகும். திருக்கோயில்களின் வருமானம் ஆண்டுதோறும் பெருகி வருவதில் இப்பிரிவு ஆற்றிவரும் பணி பிரதிபலிக்கின்றது.

ஆகையால் இந்து சமய அறக்கட்டளைத் துறையில் இப்பொறியியல் பிரிவு மிகவும் அத்தியாவசியமானதொன்று என தயக்கம் ஏதுமின்றி கூறலாம். வரும் ஆண்டுகளில் அதன் பணி இன்னும் வளர்ச்சியுறும். ❁

# மானிடனைத் தேடுகிறேன்

கவியரசு முடியரசன்



1 மானுடத்தை உலகெங்கும் தேடித் தேடி
மனமயங்கிச் சோர்வுற்றுத் தளர்ந்தே னன்றி
நானெடுத்த முயற்சியிலே வெற்றி யில்லை;
நடுத்தெருவில் பகற்பொழுதில் விளக்கெ டுத்தே
ஊனொடுக்கம் கொண்டவுடற் கிழவன் ஓர்நாள்
ஒவ்வொருவர் முகம்பார்த்தும் சலிப்புக் கொண்டு
மானுடத்தைக் காணவில்லை என்ற யர்ந்த
மதிமிகுத்த கதையைத்தான் நினைவிற் கொண்டேன்.



2 அறமுரைக்கும் பெருநூல்கள் நமது நாட்டில்
ஆயிரங்கள் உண்டென்பர் ஆனல் அந்த
அறமனைத்தும் நூல்களுக்குள் அடக்கமன்றி
ஆறறிவு படைத்தவன்பால் அரும்ப வில்லை;
திறமிகுத்த அரசியலை உற்று நோக்கின்
தீவினைகள் அடிதடிகள் சூது வஞ்சம்
உருவெடுக்கக் காண்கின்றேன் தனிந லத்தை
உயிர்ப்பிக்கும் நிலைக்களனைக் கண்டு நொந்தேன்.



3 பட்டறிவும் நுண்மதியும் பொதுந லத்தைப்
பரிவுடனே புரிகின்ற தூய நெஞ்சும்
எட்டுணையும் அஞ்சாத துணிவும் கொண்டார்
எவர்அவரே அரசியலில் புகுதல் வேண்டும்;
பட்டம்விடும் சிறுவர்களும், பள்ளி சென்று
பயில்பவரும், குழப்பங்கள் விளைவிப் பாரும்,
கட்டவிழ்ந்த காளையரும் ஆடு தற்குக்
களனாக அரசியலும் ஆகக் கண்டேன்;



4 நன்றெனினும் தீதெனினும் தமது செய்கை
நாட்டைத்தான் சாருமென நினையா ராகித்
தின்றலையும் வாழ்வுக்கே அடிய ரானர்
சிறிதேனும் நாட்டுணர்வும் இல்லா ரானர்;
ஒன்றுணர்வால் இணைந்திருப்பர் துயரம் நேரின்
ஓடோடி உதவிநிற்பர் நண்ப ரானேர்;
கொன்றழிக்ய செய்தற்கும் கூசா மாந்தர்
குய்யங்கள் நட்பிடையே செய்யக் கண்டேன்.



5 எங்கெங்கும் வேலையில்லை வாழ்வுக் காக
ஏதொன்றும் வழியில்லை பிழைக்க வேண்டி
அங்கங்கே அவரவர்தம் தகுதிக் கேற்ப
அமைந்ததொரு வழியைத்தான் தேர்ந்து கொண்டார்
இங்கிதனைத் தொண்டென்று சொல்லிக் கொள்வார்
இதுதவிர வேறுபொருள் தெரிந்தே னல்லேன்
தங்குகிற நிழலாகத் தொண்டைக் கொண்டார்
தந்நலத்தை வளர்க்கின்ற வயலாகக் கொண்டார்.



6 துறவுநிலை தனைநோக்கின் மனந்தி றந்து
சொல்வதற்கோர் வழியில்லை சுருங்கக் கூறின்
கரவுநிலை எனலாகும் தீமைக் கெல்லாம்
காப்புநிலை எனலாகும் இதுவே சாலும்;
உறவுநிலை கெடுக்கின்ற மறத்தை நோக்கின்
உடல்நடுங்கும் உயிர்நடுங்கும் உளம்ந டுங்கும்
அறநெறியை அறமறந்த வெறிக்குப் பேர்தான்
அறிவறியார் மறமென்று விளம்பு கின்ருர்.



7 அணுவெடுத்தான் பிளந்துடைத்தான் அதனைக் கண்டேன்
அடடாஓ எனவியந்தேன்; அறிவால் பெற்ற
துணிவெடுத்தே அண்டத்தைத் தூள்தூள் ஆக்கத்
தொடங்கிவிட்டான் அன்பினையே உடைத்து விட்டான்;
கணுவடுத்த மூங்கில்மரம் தான்பி றந்த
காட்டகத்தை எரிப்பதுபோல் ஆகி விட்டான்
பிணமடுத்த காடாக உலகை ஆக்கும்
பேதமைகண் டய்யவோஎன் றலறு கின்றேன்.



8 **வி**ண்மதியை மிதித்துவிட்டான் மானு டத்தின்
வெற்றியென மகிழ்ந்திருந்தேன் வியந்து நின்றேன்
உண்மதியை மிதித்துவிட்டான் மானு டத்தின்
ஒருதோல்வி எனத்தளர்ந்தேன் ஓய்ந்து நின்றேன்;
விண்வழியில் மிதந்துவிட்டான் மானுடத்தின்
வெற்றியிது வெனமகிழ்ந்தேன் விறுங் கொண்டேன்
மண்வழியை மறந்துவிட்டான் மானு டத்தின்
மறுதோல்வி எனவீழ்ந்தேன் மயக்கம் கொண்டேன்.

9 **வா**ழ்வென்னும் வழியதனில் செல்லும் போது
வழுவாமல் நடுவில்தான் நடக்க வேண்டும்
பாழ்மனிதன் அதைமறந்தான் ஓரம் சென்றே
பழகிவிட்டான்; கடைத்தெருவில் ஏகும் போது
நீள்வழியின் ஓரத்தே நடக்க வேண்டும்
நெடுமனிதன் நடுவில்தான் செல்லு கின்றான்;
சூழ்மதியன் எதுசெயினும் மாறு பட்டே
தொலைகின்றான்; ஆறறிவிற் குறைந்தே போனான்.

10 **நா**னெடுத்து மொழிந்தவெலாம் பொய்மை யன்று;
நாட்டகத்தே இச்செயல்கள் மலியக் கண்டேன்
மானுடத்தைக் காண்பதெங்கே? பேசு கின்ற
மாவினத்தைக் காண்கின்றேன் யாது சொல்வேன்?
ஊனடுத்த உடலாலோ உடலை மூடும்
உடையாலோ உணவாலோ ஊர்தி யாலோ
மானுடத்தின் நிலையெய்த இயலா தாகும்
மனப்பண்பு மிக்கவரே மக்க ளாவர்.

11 **ம**ற்றவர்தம் துன்பத்தைக் காணும் போது;
மனமுருகி விரைந்தணுகி அதனை நீக்கக்
கற்றவனே கற்றவனாம்; உதவும் பண்பைக்
கல்லாதான் கலைபலவும் கற்றா னேனும்
முற்றியநல் மரம்போல்வான்; மரத்தில் ஒன்று
முறிந்தொடிந்து வீழ்ந்திடுமேல் நிற்கும் ஒன்று
மற்றதற்கு மனமிரங்கி உதவல் இல்லை
மானிடனும் அவ்வாறு நிற்றல் நன்றோ?

12 மற்றவர்க்கே உரியதனைக் கவர்வ தற்கு
மனத்தாலே நினைத்தாலும் செய்த தைப்போல்
குற்றமெனக் கருதுகின்ற உணர்வு வேண்டும்
குறைவறியா அறநூல்கள் உரைத்த வற்றைக்
கற்றவணங் கடைப்பிடித்து நடக்க வேண்டும்;
கடவுளெனத் தொழத்தக்க தந்தை தாயர்
சொற்றபடி நடக்கின்ற துணிவு வேண்டும்
தூய்மையிலே படிகின்ற நெஞ்சம் வேண்டும்.



13 நாடாளும் பேறுநமை நண்ணும் போதும்
நாடுநகர் வீடுவளம் யாவும் நீங்கிக்
காடாளும் வேறுநிலை வந்தபோதும்
கலங்காமல் முகம்மலர்ந்து தாங்கி நிற்கும்
பீடான மனமுடையான் மானி டர்க்குள்
பெரியனெனத் திகழ்ந்திடுவான் மாண்புங் கொள்வான்
ஈடாக மற்றொருவன் இல்லை என்றே
எந்நாளும் புகழ்ந்தேத்தும் உலகும் நன்றே.



14 சாதியினால் பதவியினால் சமயப் போக்கால்
தாழ்ந்தவரும் உயர்ந்தவரும் இல்லை என்றே
ஓதுவதாற் பயனில்லை, உள்ளம் ஒன்றி
உடன்பிறப்பென் றனைவரையும் சமமாக் கொண்டு
மேதினியில் வாழ்வதுதான் மானி டர்க்கு
மேன்மைதரும் செயலாகும்; மேல்கீழ் எல்லாம்
வேதமொழி எனவந்தால் மக்கள் நாமம்
வேருகி மாக்களென நீண்டு நிற்போம்.



15 கூடமைசெயத் தயங்குகின்றோம்; கண்ணி யத்தைக்
காற்றின்மிசைப் பறக்கவிட்டோம்; கட்டுப் பாட்டை
அடிமைநிலை எனக்கருதி உதறி விட்டோம்;
ஆதலினால் மானுடத்தைச் சிர ழித்தோம்;
கெடுவினையை விட்டொழித்தால், அருவ ருக்கும்
கீழ்மைதனைச் சுட்டெரித்தால், இருளில் வீழ்த்தும்
மடமையினைத் தகர்த்தெறிந்தால், மக்கட் பண்பை
மதித்திருந்தால் மானுடமே வெல்லும் வெல்லும்.





கார்த்திக் பள்ளி



செவிடர் பள்ளி

# நாடும் நாமும்



திரு. அ. மு. பரமசிவானந்தம்

'எவ்வழி நல்லவர் ஆடவர்
அவ்வழி நல்லை வாழிய நிலனே'

என்பன தமிழ் நாட்டில் சங்க காலத்தில் எழுந்த அடிகள். ஒரு நாடு நலம்பெற அந்நாட்டு மக்களே அடிப்படை என்ற உண்மையை இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னரே தமிழ் மக்கள் அறிந்து, அதற்கேற்பத் தம் நாட்டையும் உலகையும் 'வாழ் வாங்கு வாழ்ந்து' வளமுறச் செய்தனர். 'ஆடவர்' என்று ஒரு வகையினரைக் கூறியிருப்பினும் அனைத்து மக்களையும் அது உளப்படுத்தும் என்பது இலக்கண மரபு. எனவே நாட்டில் வாழும் ஆணும் பெண்ணும் வாழ்க்கை முறையினை அமைத்துச் செயல்படுத்தும் முறையிலேதான், அந்நாட்டில் சிறப்பு, ஏற்றம், எழில், இன்பம், இயைபு அனைத்தும் அமைந்து விளங்கும். இதைத் திருவள்ளுவர் தம் குறள் முழுவதிலும் சுட்டிக் காட்டுகின்றார். சிறப்பாக 'நாடு' என்ற அதிகாரத்தில் அந்த உண்மை நன்கு புலனாகின்றது.

வள்ளுவர் காட்டிய அரசியல் 'குடியாட்சி' யேயன்றி முடியாட்சி அன்று என்பதை முன்னரே வேறொரு காலத்தில் விளக்கி எழுதியுள்ளேன். அவர் கூறும் 'மன்னன்', 'வேந்து' போன்ற சொற்கள் குறிக்கும் குடியரசுத் தலைவரைப் பற்றிய விளக்கமும் தந்துள்ளேன். எனவே வள்ளுவர் குடிமக்கள் வாழ வகுத்த நல்லரசுக்கு — குடிமக்களால் ஆகிய நல்லரசுக்கு அவர் வாழும் நாடே அடிப்படை என்பதை உணர்ந்து அதை அந்த அதிகாரத்தில் வற்புறுத்துகின்றார். எல்லாவற்றிற்கும் அடிப்படையான நாடு நலம் பெற — உயர்வுற — சிறக்க இன்றியமையாது வேண்டப்படுவது மக்களின் மன நலம் சார்ந்த செம்மை வாழ்வுதான் என வள்ளுவர் வற்புறுத்துகின்றார்.

நாடு என்ற அதிகாரத்தைத் தொடங்கும் போதே வள்ளுவர்,

'தள்ளாவிளையுளும் தக்காரும் தாழ்விலாச்
செல்வரும் சேர்வது நாடு' (731) எனக்

காட்டுவர். நாட்டின் அடிப்படைக்குரிய மூன்று இன்றியமையாதது — இன்றியமையாதவர் — விளையுள், தக்கார், செல்வர் எனக் குறிக்கின்றார். இம்மூன்றின் முதலிலே 'தள்ளா விளையுளை'க் காட்டுகின்றார். நாடு பசியும் பிணியும் பகையும் நீங்கி வாழ நல் விளையுள் அடிப்படை என்பதை யாரே மறுக்க வல்லார்! உரிமை பெற்று இருபது ஆண்டுகள் இந்த வள்ளுவர் காட்டிய அடிப்படை உண்மையை மறந்த

காரணத்தினால் நாடே நம் தாய் நாடே அல்லல் வழிப்பட்டது. இன்று உண்மை தெளிவு பெற 'விளையுள்' நாடி விரைந்து செல்லுகின்றோம். வள்ளுவர் இத்தகைய நிலைக்குக் காரணம் 'தக்கார்' இல்லாமையே என்பதை உணர்த்தத்தான் அடுத்துத் தக்காரை வைத்துள்ளார். 'தக்கார்' என்ற சொல்லுக்குப் பரிமேலழகர் 'அறவோர்' எனப் பொருள் காட்டுகின்றார். அறநெறி பற்றி வாழ்வோர் தக்கோர் என்பது அவர் உள்ளக்கிடக்கை — உண்மையும் அதுவே. எந்நிலையில் நின்றாலும் எத்தொழிலைச் செய்தாலும் அவ்வந்நிலையிலும் அவ்வத் தொழிலிலும் அறத்தாறு இன்றேல் நாடும் உலகும் நலிவுறும் என்பதை வரலாறு காட்டுகின்ற தன்றோ. எனவே நாட்டில் வாழும் மக்கள் — மக்கள் என்ற பெயருக்குத் தக்கோராய், அறநெறியாளராய், எவ்வுயிரும் தம் உயிர் போல் எண்ணி நோக்குபவராய் இருப்பின் அவர்கள் அயராது உலகுக்கு உழைப்பர் — சோம்பி இரார். எனவே விளையுள் தள்ளா வகையில் பெருகும். இத்தகைய குன்றாத விளையுள், நாட்டில் நல்ல செல்வரைத் தானே உண்டாக்கும். அச்செல்வரும் 'தாழ்விலாச் செல்வர்' எனப்பெறுவர் ஏன்? அவர் தம் செல்வம் கெடாதது. வெறும் பொருட் செல்வத்தை மட்டும் வள்ளுவர் கூறினரல்லர். 'செல்வர்' என்ற சொல்லுக்குக் 'கலத்திலும் காலினும் அரும் பொருள் தரும் வணிகர்' எனப் பரிமேலழகர் கூறினாராயினும் வள்ளுவர் அந்த அளவோடு அச்சொல்லைப் பயன்படுத்தவில்லை என்பது உற்று நோக்கின் புலனாகும்.

வள்ளுவர் 'அருட்செல்வம் செல்வத்துட் செல்வம்' என்றும் 'கேடில் விழுச் செல்வங் கல்வி' என்றும் 'செல்வத்துட் செல்வம் செவிச்செல்வம்' என்றும் இன்னும் பல வகையிலும் செல்வத்துக்கு விளக்கம் தருகிறார். எனவே மக்கள் வாழ்வுக்கு — உயிர் வாழ்வுக்கு — சமுதாய வாழ்வுக்கு என்னென்ன செல்வங்களாக அமைகின்றனவோ அத்துணையும் தாழ்விலாச் செல்வங்கள்தாம். அத்தகைய செல்வங்களையும் அவற்றைப் போற்றும் மக்களையும் நாடு பெற்றிருப்பதே நாடு நாடாவதற்கும், எதற்கும் யாரையும் நோக்காத பேராண்மையுடன் வீறுநடையிட்டு விளங்குவதற்கும் காரணமாகும். இதை எண்ணியேதான் வள்ளுவர் பின்னால்,

'நாடென்ப நாடா வளத்தன நாடல்ல
நாடவளந் தரும் நாடு' (739) எனக்

காட்டுகின்றார். இதற்குப் பரிமேலழகரும் பிறரும் பல வகையில் பொருள் காண்பர். எனினும் மேலே தாழ்விலாச் செல்வர் வாழ்வதே நாடு என வள்ளுவரே கூறியதனால், அச் செல்வர் வாழும் நாடு, எதற்கும் பிறரை நாடா வளமுடையதாகும் என்பதையே ஈண்டும் வற்புறுத்துகிறார் எனக் கொள்ளல் வேண்டும். அதையே மறுபடியும் 'நாடவளந் தரும் நாடு நாடல்ல' எனக் காட்டுகிறார் வள்ளுவர். எனவே யாரிடத்தும் எதையும் கைநீட்டிக் கேட்காத, வற்றாவளம் பெற்ற நாடே நாடாகும். இன்று நம் நாட்டை எண்ணின் அந்த நிலையில் இல்லை என உணர்வோம். எதற்கும் பிறர் கையை எதிர்நோக்கி — சிறு சிறு நாடுகளிடத்திலெல்லாம் பெரும் பெருந் தொகைகளைக் கடன் வாங்கி முன்னேறி விட்டதாகக் கூறுகின்றோம். இதற்கும் காரணம் நாம் வள்ளுவர் திருக்குறளை வாழ்விடைப் பற்றாமையே யாகும். நாட்டு மக்களாகிய நாம் முற்றும் குறள் வழிப்பற்றி வாழ முடியாவிட்டாலும் — ஓரளவாவது குறளின் அடிப்படை உண்மைகளை உணர்ந்து வாழ்க்கை நெறியினை — சமுதாய வாழ்வினை — அதனை உயர்த்தும் வளம் காணும் திறத்தினைச் செயலில் மேற்கொள்வோமானால் விரைவில் நம் தாய் நாடு 'நாடென்ப நாடா வளத்தன' என்ற வள்ளுவர் வாக்கின்படி வளமுற்றோங்குமல்லவா?

வள்ளுவர் அச் செல்வ வளத்தை மேலும் நமக்கு விளக்கிக் காட்டுகின்றார். பிற நாட்டாரும் விரும்பத்தக்க பெருஞ் செல்வம் பெற்றதே நாடு என்பது அவர் கருத்து. நாட்டில் பல காலங்களில் நலிவு உண்டாவது இயற்கை. செயற்கை நெறியாலும் இயற்கை முறையாலும் நாட்டுக்கு நலிவு உண்டாகிறது. மழை இல்லாமலும் பெருமழை காரணமாகவும் பிற கொடுமை

களாலும் இயற்கை நாட்டை சோதிப்ப துண்டு. அப்படியே மாற்ருர் படை யெடுப்பு முதலியவற்ருலும் நாடு நலிவுறுவ துண்டு. இத்தகைய கோளாறுகளாலும் நாட்டு மக்கள் வளங்குறைந்து வாடலாகாது என்பது வள்ளுவர் ஆசை. அத்தனை ச் செல்வங்களும் எந்தக் கொடுமையாலும் குறைவுபடாது இருக்கக் காப்பதே ஒரு நாடாகும். இன்னும் அவர் குறளுக்கு அத் தகைய கேடுகள் ஒன்றும் விளையாமலேயே காக்கும் வகையில் மக்கள் வாழ்வு இலங்க வேண்டும் எனவும் பொருள் கொள்ளலாம். நாம் இனியாயினும் நாட்டை அந்நிலைக்குக் கொணர முயல்வோமாக!

'பெரும் பொருளால் பெட்டக்கதாகி
அருங்கேட்டால்
ஆற்ற விளைவதே நாடு' (732)

என்பது அவர் வாக்கு.

இத்தகைய வற்ரு வளமுடைய நாடும் அவ்வளம் பெருக்கும் மறவரும் அறவோரும் ஒரு நாட்டிடை வாழும் நிலை உண்டாயின் உலகில் எந்த நாட்டிற்கும் இது வலிந்து உதவக் கூடுமன்ருே! இன்றைக்குச் சில நாடுகள் அவ்வாறு உதவும் நிலையிலுள்ளன. எனினும் அந்நாடுகளில் வள்ளுவர் காட்டும் 'தக்கார்' உளரா என்பது ஐயமே! அதனல்தான் அவற்றின் உதவி பற்றிய அடிப்படையிலேயே உலகம் ஐயம் கொள்ளு கிறது. தத்தம் கொள்கை, வாணிபம், அர சியல் நெறி இவற்றை உலக அரங்கில் முத லிடத்தில் வைக்க நினைக்கும் நாடுகள் போலன்றி, உலகு தாங்கும் பொறை நம் நாட்டுக்கு உண்டாயின்—கடமை உணர்வால் அதை ஏற்றுக் கொள்ள வேண்டும். அந்தப் பெருநிலையில் நாட்டு மக்கள் அரசாங்கத் துக்கு இறையாகவும் பிறவாகவும் பெரும் பொருள் தரும் வகையில் நாட்டில் செல்வ வளம் கொழிக்க வேண்டும் என்கிருர் வள் ளுவர். வளம் பெற்ற போதும் வரி கொடா நிலையைக் காணும் நமக்கு வள்ளுவர் காட்டும் செம்மை நெறி வியப்பாகத் தோன் றும். எனினும் அவ்வாருய 'இறைநேரும்' நிலை இல்லையாயின் நாடு நாடாகாது என்பது தேற்றம். இதையே வள்ளுவர்:

'பொறையொருங்கு மேல்வருங்கால்
தாங்கி இறைவற்
கிறையொருங்கு நேர்வது நாடு' (733)

என்கிருர். 'இறைப்பொருள் முழுவதையும் உடபட்டுக் கொடுப்பது நாடாவது' என்ற பரிமேலழகர் உரை நாம் எண்ணிப் போற்றிச் செயல்படுதற்குரியது.

இத்தகைய கெடுதல்களால் குன்ருத, தேவையாயின் பிறநாடுகளைப் புரக்கும் பண்பார் நாட்டினை வள்ளுவர் மற்ருெரு குறள் வழியும் விளக்குகிருர். நல்ல நாடு கெடுதலறியாதது என்கின்ருர். ஆம்— உண்மையே. தக்காரும் தாழ்விலாச் செல் வரும் இருப்பின் கேடு உண்டோ? ஒரு வேளை எதிர்பாராது இயற்கை நிலைக ளாலோ வேறு வகையாலோ கேடு உண் டாயினும் அக்காலத்தும் வளங்குன்ரு நிலை யில் இருப்பதுவே நாடுகளுக் கெல்லாம் நாடாவது என்ற உண்மையை வள்ளுவர்,

'கேடறியாக் கெட்ட விடத்தும்
வளங்குன்ரு
நாடென்ப நாட்டின் தலை' (736)

எனக் காட்டுவர்.

இத்தகைய நாட்டிற்கு இயற்கையாக அமைய வேண்டிய சிறப்பியல்புகளை அடுத்தபடியாகவே வள்ளுவர்,

'இருபுனலும் வாய்ந்த மலையும்
வருபுனலும்
வல்லரணும் நாட்டிற் குறுப்பு' (737)

என்று காட்டுகிருர். நம் நாட்டில் இவை யெலாம் இயல்பாகவே இருக்கின்றன. எனினும் உணவுக்கும், பிற உயர்வு களுக்கும் வாழ்க்கை நெறிக்கும் பிற நாடு களை நோக்கும் நிலை மாறவில்லை. இயற்கை அன்னை இந்திய நாட்டை — இமயமுதல் குமரி வரையில் விரிந்த பெருநாட்டை — எந்த வகையிலும் குறையற்ற நாடாகவே ஆக்கியுள்ளாள். இந்தப் பெருமையினையே பல ஆயிரமாயிரமாண்டுகளாகப் பலப்பல மொழிகளில் பல்வேறு புலவர்கள் பாடி யுள்ளனர். எனினும் நாட்டில் நாம் வள் ளுவர் காட்டியபடி 'வாழ்வாங்கு வாழாமை' யே எல்லா அல்லல்களுக்கும்

காரணம் என்பதை உணர வேண்டும். உணர்ந்தால் உய்வு உண்டு.

இவ்வாறு இருக்க வேண்டுவனவாய வளம், வற்ரு உள்ளத்தொடு கூடிய தக்கார், செல்வர், இறை ஒருங்கு நேர்வர் பலர் இருப்பதே நாடு என்று காட்டிய வள்ளுவர், அத்தகைய பெருநாட்டில் எவை எவை நீக்கப் பெற வேண்டும் என்பதையும் காட்டத் தவறவில்லை. கொடுமை நீங்கினலன்றி நன்மை சிறவாதென்ற உண்மையை உணர்ந்த வள்ளுவர் நல்ல நாட்டில் அடியோடு களையப் பெற வேண்டுவன எவை எவையெனக் காட்டத் தவறவில்லை; தெளியக் காட்டுகிருர்.

'பசியும் பிணியும் பகையும் நீங்கி
வசியும் வளனும் சுரக்கென வாழ்த்தி'
(விழாவறை காதை 70 & 71)

வள்ளுவ முதுமகன் புகார் நகரில் முரசறைந்து, அரச ஆணையை அறிவுறுத்தினன் என மணிமேகலை காட்டுகின்றது. பசி, பிணி, பகை இவற்றை நீக்க வேண்டுமென அது குறிக்கின்றது. நாட்டில் அவற்றை வரவழைத்து — உண்டாக்கி, பிறகு அதை நீக்குவானேன்? எனவே வள்ளுவர் அவற்றைச் சேர ஒட்டாமலே துரத்த வேண்டும் எனக் காட்டுவர். நம் நாட்டிலே படி அரிசித் திட்டத்தால் 'பசி' யை ஓட்டி விட்டோமல்லவோ! அப்படியே மாற்ருர் என்று கருதிய வடநாட்டார் 'பகை' யையும் ஒட்டி, நாம் சொல்லியவற்றை யெல்லாம் நட்பு முறையுடன் வந்து, செயல் படுத்த உதவும் வகையில் பகையை ஓட்டிவிட்டோம் என்பது கண்கூடு, பிற பகைகளும் அவ்வாறே அகல்கின்றன. 'பிணி' நாட்டில் சேராது ஓட்டவேண்டும். நாட்டில் மருந்தகங்கள் எண்ணிக்கை பெருகுகின்றன. இது ஒரு வழியில் சரியானதே. வரும் நோயை நீக்க அவை பயன்படலாம். அத்தகைய மருந்தகங்களிலே இடமில்லை என்ற கூப்பாடு எதைக் காட்டுகிறது? நாட்டில் நோயின் பெருக்கத்தைத் தானே! எனவே நோயே வராமல் நாட்டிலிருந்து ஓட்ட வேண்டும் என வள்ளுவர் கூறுகின்ருர். வருமுன் காத்தல் தானே சிறந்தது. சென்னை நகரத்திலும் பிற பெருநகரங்களிலும் நோய்கள் பெருகத்தக்க மூலக்கூறுகள் பல வளர்ந்து வருகின்றன. அவற்றை யெல்லாம் நாம் கண்டும் காணுதது போல இருக்கின்ருேம். எனவே மருந்தகங்கள் பெருகியும் அவற்றில் இடமில்லா நிலை நேர்கிறது. நோய்முதல் நாடும் வள்ளுவர் இந்த நிலையை எண்ணி அந்நோயை நாட்டில் சேரவிடாத நாடே நாடாகும் எனத் திட்டமாக அறிவிக்கின்ருர். இனி அதையும் நாம் செயலாக்க முற்படுவோமாக!

'உறுபசியும் ஓவாப் பிணியும்
செறுபகையும்
சேரா தியல்வது நாடு' (734) என்பது

அவர் வாக்கு. இம்மூன்றினைச் சார்ந்து வரும் உரிச்சொற்கள் வழியே அவற்றின் கொடுமைகளையும் வள்ளுவர் விளக்கத் தவறவில்லை. எனவே அவற்றைச் சேராது விலக்க வேண்டுவது நம் கடமையல்லவா!

இதே கருத்தை—'பிணி இல்லா நிலை' நாட்டிற்கு முதலாக எண்ணப்படுவது என்ற உண்மையை—,

'பிணி இன்மை செல்வம் விளைவின்பம்
ஏமம்
அணி என்ப நாட்டிற்கிவ் வைந்து' (738)

என அவரே காட்டுகின்ருர். இங்கேயும் வள்ளுவர் 'பிணி நீக்கம்' எனக் கூருது 'பிணி இன்மை' எனவே குறிக்கின்ருர். மேலும் பின்வரும் செல்வர், விளைவு, இன்பம், ஏமம் இவற்றினைப் பெற்ருலும் பிணி இல்லாப் பெருவாழ்வு இருந்தால்தான் இவற்ருல் பயன் உண்டு என்பதையும் அதையே முதலில் வைத்துக் காட்டி விட்டார். எனவே நாடு 'நோயற்ற நல்வாழ்வில்'—'எல்லா வகையான பிணிகளும் சேர' நல்வாழ்வில் நிகழ்தல் வேண்டும்.

இனி நல்ல நாட்டில் நல்ல ஆட்சி நிலவாவிடின் இவை இத்தனையும் இருந்தும் பயனில்லை என்பதையும் வள்ளுவர் காட்டத் தவறவில்லை. முதற் குறளிலேயே 'தக்கார்' எனச் சுருக்கமாகக் குறித்தாரேனும், அத்தக்கார் வாழும் நாடு நாடாகும் எனச்

சொன்னரேனும், அந்நாட்டு அரசுநிலை பற்றியும் அதன் சூழல் பற்றியும் நாம் நன்கு அறிந்துகொள்ள வேண்டி, வேறு இரு குறட்பாக்களால் நன்கு விளக்குகிருர்.

ஆமதாபாத்திலும் பம்பாயிலும் நடந்த குழுக்களின் கூட்டங்களையும் அவற்றில் பெய்த வசைமாரிகளையும் கேட்ட நமக்கு நாட்டின் வருங்காலம் என்னகுமோ என்ற அச்சம் உண்டாகியுள்ளது. இதே அச்சம் வள்ளுவர் உள்ளத்தையும் வாட்டியுள்ளது. எனவே அக்'குழுக்'கள் இல்லாததே நாடு எனத்தக்கது என முதலில் காட்டி, பின் வேறு தேவையற்றவற்றையும் விளக்குகிருர்:

'பல்குழுவும் பாழ்செய்யும் உட்பகையும்
வேந்தலைக்கும்
கொல்குறும்பும் இல்லது நாடு' (735)

என்று இல்லாதிருக்க வேண்டியவற்றை வற்புறுத்துகின்ருர் வள்ளுவர். 'பாழ் செய்யும்' என்ற தொடரை முன்னும் பின்னும் கூட்டிப் பாழ்செய்யும் பல்குழுவும், பாழ் செய்யும் உட்பகையும் என்று கொள்ளுதல் பொருத்தமாகும். இன்று நம் நாட்டை நாடாகாமல் அழிப்பன இவை இரண்டு மல்லவோ! நாட்டில் கட்சிகள் எத்தனை? கட்சிக்குள் கட்சியாக அமைந்த பல்வேறு குழுக்களைத்தாம் அறுதியிட முடியுமா? நம் மோடு கூடவே இருந்து, 'தொழுதகை யுள்ளும் படை' ஒடுக்கி உட்பகையாக இருந்து, சமயம் பார்த்து நாட்டை அழிவுப் பாதைக்கு ஈர்க்கும் செயல்களையும் காண்கிருேமே! தமிழ்நாட்டில் ஓரளவு 'வேந்தலைக் கும் கொல்வினைக் குறும்பு' உள்ளது; எனினும் பிற பகுதிகளில் உட்பகைதானே மாநிலங்களின் அமைதியைக் கெடுக்கின்றது. முன் இரண்டின் கொடுமையினையும் 'பாழ் செய்யும்' என்ற தொடரால் காட்டிய வள்ளுவர் குறும்பின் கொடுமையை, வேந்தலைக்கும் கொல், என்றவற்ருற்ருல் விளக்குகிருர். 'குறும்பு' அடிக்கடி நாட்டை அலைப்பதைக் காண்கிருேம். கல்லூரிகளும் தொழிற்சாலைகளும் மூடப்பெறவும் பிற வேலை நிறுத்தங்கள் நிகழவும் இக் 'குறும்பு' கள் தாமே காரணமாக உள்ளன. அவற்ருலே அமைதியாகச் செல்லவேண்டிய அரசின் செம்மையான முறையும் அலைக்கப் படுகின்றதன்ருே! இவற்றையெல்லாம் எண்ணித்தான் வள்ளுவர் இவை இல்லாததே நல்ல 'நாடு' என்கின்ருர். 'தக்கார்' வாழ்நாட்டில் இவை இரா என்ற உண்மையைத்தான் முதற்குறளில் விளக்கிக் காட்டிவிட்டார்.

இத்தனையும் சிறக்க அமைந்தபோதிலும் நாடாளும் தலைவர்கள் நல்லவர்களாக அமையாவிடின் பயனில்லை எனக் கருதிய வள்ளுவர் தம் அதிகாரத்தின் இறுதிக் குறளாக,

'ஆங்கமை வெய்தியக் கண்ணும்
பயமின்றே
வேந்தமை வில்லாத நாடு' (740)

எனக்காட்டுகின்ருர். சில நாடுகளில் எல்லா வளங்களும் இருந்தும் அவை வீணகைப் பெறும் நிலையில் அரசுகள் இயங்குவதையும், சில நாடுகளில் வளங்கள் குறைந் திருப்பினும் அவற்றை பெருக்கிச் சமுதாய வாழ்வைச் செழிக்கச் செய்யும் அரசுகள் இருப்பதையும் நாம் நன்கு அறிவோ மல்லமோ! எனவேதான் வள்ளுவர் தாம் காண நினைக்கும் அத்தனை நலன்களும் வளங்களும் தக்காரும் செல்வரும் சேர்ந்திருந்த போதிலும்,நோய்களும், குற்றங்களும், கொடுமைகளும் தலைகாட்டா நிலையில் சிறந்திருந்த போதிலும் 'வேந்து அமைவில்லை' யாளுல் அவற்ருல் பயனில்லை என்பதைத் திட்டமாகக் காட்டுகின்ருர். நாம் முதலில் தொடங்கிய, 'எவ்வழி நல்லவர் ஆடவர் அவ்வழி நல்லை வாழிய நிலனே' என்ற அடிப்படையிலே தான் இந்த இறுதிக் குறளும் நமக்கு வழி காட்டுகிறது. இவற்றின் அடிப்படையில் நம் தமிழகம் இன்று சிறப்பது மகிழ்ச்சிக்குரியதாகும்.

'வேந்தமை' வென்பதற்கு அரசன் மாட்டுக் குடிகள் அன்புடைமையும் அவன் குடிகள் மாட்டு அருளுடைமையும் எனப் பரிமேலழகர் காட்டுவர். அந்த அளவோடு மட்டுமன்றி, வள்ளுவர் காட்டிய, ஆளுகின்ற தலைவருக்கும் அமைச்சருக்கும் அமைய வேண்டிய எல்லாவற்றையும் அமையப்

பெற்றிருப்பது எனக் கொள்ளல் வேண்டும். அந்த வேந்து அமைவு எய்தின் நாட்டில் நல்ல அமைதி நிலவும்; பசியும் பிணியும் பகையும் சேராது; பல்குழுவும் உட்பகையும் கொல்குறும்பும் இல்லையாகும். எனவே நாடு சிறக்க நல்ல தலைமை வேண்டும் என வள்ளுவர் தம் இறுதிக்குறளில் வற்புறுத்துகின்றார். எல்லா வளங்களும் நிறைந்து குறைபாடுகளும் மறைந்துள்ள சில நாடுகளிலும் அமைதி இன்மைக்குக் காரணம் இந்த 'வேந்தமை'வில்லாத நிலையேயாம். இந்த அடிப்படையை உணர்ந்து வாழும் நாம் வள்ளுவர் குறளை வாழ்விடை மலரச் செய்ய விரும்பும் நாம் தக்காராக இருந்து நாட்டை 'நாடா'க்க ஆவன செய்ய வேண்டும். நம் தாயகம் எல்லா நலமும் பெற்று உலக அரங்கில் உயர்ந்து ஓங்க வள்ளுவர் வழிநின்று 'நாடு' என்றால் 'இந்தியா' என்று உலகம் போற்றும் வகையில் ஒன்றிச் செயலாற்றிச் சிறப்போமாக!



## கந்தவேள் கருணை



நீர்உண்டு பொழிகின்ற கார்உண்டு விளைகின்ற
நிலன்உண்டு பலனும்உண்டு
நிதிஉண்டு துதிஉண்டு மதிஉண்டு கதிகொண்ட
நெறிஉண்டு நிலையும்உண்டு
ஊர்உண்டு பேர்உண்டு மணிஉண்டு பணிஉண்டு
உடைஉண்டு கொடையும்உண்டு
உண்டுஉண்டு மகிழவே உணவுண்டு சாந்தம்உறும்
உளம்உண்டு வளமும்உண்டு
தேர்உண்டு கரிஉண்டு பரிஉண்டு மற்றுள்ள
செல்வங்கள் யாவும்உண்டு
தேன்உண்டு வண்டுறு கடம்பணியும் நின்பதத்
தியானமுண் டாயில்அரசே
தார்உண்ட சென்னையில் கந்தகோட் டத்துள்வளர்
தலம்ஓங்கு கந்தவேளே
தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வமணியே

— திரு அருட்பா



# அறிவுச் சிறகெடுத்தோம் ஆய்வில் அதைத் தொடுத்தோம்!







டாக்டர்
**திரு. சாலை இளந்திரையன்**

**வா**னத்து மீன்களே!
உங்களுக்கு வாழ்த்துப்பாடல் இசைக்கிறேன்...
பூக்குலத்துப் புதுமைகளே!
உங்களுக்குப் புகழ்ச்சிகள் கூறுகிறேன்...
மண்ணில் குனிந்த எங்களை
நிமிர்த்தி வைத்தவர் நீங்கள்;
உழவுக்கும் தொழிலுக்குமே
உள்ளம் தந்த எங்களை
உறவுக்கு இழுத்தவர்கள் நீங்கள்; —
உயர்வுக்கு அழைத்தவர்கள் நீங்கள்...

**கா**ற்று வெளியைத் தாண்டினால்
காற்றில்லாத ஊமைவெளி!
ஊடே புகுந்தால்,
உயிர்கொண்டு வெளியேற முடியாத
மூச்சுத் திணறல் வெளி!
அந்த வெளியைத் தாண்டி
அப்பால் ஒளியைத் தீண்ட,
அடங்காத ஆசைதனை
அலையலையாய் எழுப்பியவர் நீங்கள்!
எங்கள் இதயத்துக்கு இறக்கை கட்டி
எங்கள் உடம்புக்கே பறக்கை ஊட்டி
இழுத்து அணைத்தவர்கள் நீங்கள்!

எப்போதோ பார்த்தவர்கள், - எம்முன்னோர் பலப்பலர்கள், —
இதயத்து வியப்பாலே இரண்டுவிழி பெரியவிழி
வைத்தார்கள் உங்களிடம்; வாங்கவில்லை பலகாலம்!
உங்களுக்குள்ளே நீங்கள் பேசிய
உரையில்லா உரைகளிலே
இங்கே எங்களவர் இனிப்பேறிப் போனார்கள்!

அந்த இனிப்புக் கிளர்ச்சியிலே,
அதைத் தொடர்ந்த ஆசை வருடலிலே,
'யார் இவர்கள் மேலிருப்போர்?
இவர்களுக்கும் நமக்குமுள்ள இடைவெளியை ஊடறுக்க
ஒளியுண்டு அவர்களிடம்; —
உள்ளபடி நம்மிடத்தே
என்னுண்டு, என்னுண்டு?' என்றே
ஏங்கித் தவித்தார்கள் ...

தவிப்பு அடங்கவில்லை; —
நட்சத்திர நீங்கள்
தவிப்படங்க விடவில்லை!
மேலிருந்து சிரிக்கின்ற மென்மைச் சுடர்களிலே
கீழிருந்த எங்களவர் கிறுக்காகிப் போனதினால்,
வருகஎன அழைத்தார்கள்; —
வருவம் எனத் துடித்தார்கள்!

நீங்களோ, —

பிள்ளைகள்போல் சிரித்தீர்கள், பெண்டுகள்போல் நகைத்தீர்கள்;
அன்னை அவள்போலே அழகுநகை பூத்தீர்கள்!
பார்த்தவர்கள் எல்லாரும் பட்டினத்தார் அல்லரே! ...
மூத்து நடைமடங்கி முடிந்தவர்கள் அல்லரே! ...

மலர்க்குலத்து வரலாற்றை மாற்றிவைத்த பூக்குலமே!
வாடா வடிவெடுத்த வானமலர்ச் சிட்டுகளே!
நீலம் குளித்த வானத்தில்
நிற்குமிடம் எழில்சொரிய
அங்கங்கே நிற்கின்ற அழகுப் பிறவிகளே!
கண்ணைப் பிடித்திழுத்துக் கருத்தைப் பறித்தெடுக்கும்
கற்கண்டுப் பிஞ்சுகளே?

உங்களை —

நினைத்தமனம் தேனூறும், தீண்டும்விழி ஒளியேறும்!
'யார்இந்தச் சிறுமியர்கள்; இவர்உடம்பே புன்னகையோ?'

இப்படித்தான் —
எங்களவர் நினைத்தார்கள்; எங்களுக்கும் சொன்னார்கள் ...

நாங்களோ —

'அவர்களங்கே, நாங்களிங்கே; அதுவேண்டாம்!' எனமுடித்தோம்;—
அப்போதே அடிபெயர்த்தோம்!
உங்களுடன் இருப்பதிலே
ஓராசை, பேராசை; உள்ளமெலாம் தேனாசை!
வானமென்றும் பூமியென்றும் வகைவேண்டாம் என்றுசொல்லி
அறிவுச் சிறகெடுத்தோம்; – ஆய்வில் அதைத்தொடுத்தோம்:
அப்படியே விண்படர்ந்தோம்!
'வாருங்கள், வாருங்கள்' எனக்கண் ஒளிகாட்டி
வானமென்னும் வீட்டுக்கு வாய்த்த பலவாசல்களில்
நின்றிருந்தீர்!

எங்களுக்கு

மாலையிட வானவில்லு; மழைத்துளியே பன்னீரு!
வாஎன் றழைத்தபிள்ளை வந்துமடி ஏறியதும்
தாயென்ற பூவு தன்மறந்து பூப்பதுபோல்,
எங்களை அள்ளி
எடுத்தீர்; களித்தீர்கள்!

நாங்களெனில், —

கண்காட்டிக் கவின்காட்டி கணக்காய் வழிகாட்டி
வரவழைத்துக் கொண்டஉங்கள் வண்ணத்தில் சொக்குகிறோம்!

எங்களுக்குள் தானிருந்த ஈடற்ற பேராற்றல்
வெளிப்பட்டு விழிப்புற்று வீரநடை கொண்டிடவே, —
நாடோறும் ஊக்கமிட்டு நல்லழகுத் தேக்கமிட்டுப்
பேரெழுச்சியாய் நின்ற பிள்ளைகளே!
கொள்ளைஎழில் குஞ்சுகளே குறுகுறுப்புப் பிஞ்சுகளே!
மானுடத்தை வானுடமாய் ஆக்கிவைத்த
பூக்குலத்துப் புதுமைகளே,
உங்களுக்குப் புகழ்ச்சிகள் கூறுகிறேன்!
வானத்து மீன்களே,
உங்களுக்கு வாழ்த்துப்பாடல் இசைக்கிறேன் ...



# அருள்மிகு கள்ளழகர் திருக்கோயில்

## அழகர் கோவில்

### மதுரை மாவட்டம்



பாண்டிய நாட்டு வைணவத் தலங்களுள் பல்வகையாலும் முக்கியத்துவம் பெற்றது அழகர் கோயில். இது அழகர் மலை, சோலை மலை, திருமாலிருஞ்சோலை, மாலிருங்குன்றம் எனப் பல பெயர்களால் அழைக்கப்பட்டு வருகின்றது. இத்தலம் மதுரைக்கு வடக்கே 20 கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது. அருள்மிகு அழகருக்கு கள்ளழகர் என்ற திருநாமம் உண்டு. இவ்வாலயம் பழமையானது. பெரியாழ்வார் "மதில்சூழ் சோலை மலைக்கரசே" என்று புகழ்ந்து பாடியுள்ளார். இங்கு பதினெட்டாம் படி கோபுரக் கதவுகளுக்கு, பூசைகள் நடைபெறுகின்றது. இக்கதவு ஆடிப் பெருவிழாவின்போது சக்கரத்தாழ்வார் வருவதற்கு மட்டும் ஆண்டுக்கு ஒரு முறை திறக்கப்படுகின்றது. அழகர் கோவிலில் நூபுரகங்கை (சிலம்பாறு) என்ற தீர்த்தம் உள்ளது. அருள்மிகு கள்ளழகர் குதிரை வாகனத்தில் சித்திரை மாதம் பௌர்ணமியன்று மதுரைக்குச் சென்று வைகையாற்றில் இறங்குவது கண்கொள்ளாக்காட்சி. ஆடி மாதம் 10 நாட்கள் பிர்மோற்சவம் வெகு சிறப்பாக நடைபெறுகின்றது. இத் தலத்தைப் பற்றி பெரியாழ்வார், ஆண்டாள், திருமங்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், நம்மாழ்வார் ஆகியோர் பாடியுள்ளனர்.

தற்போது பக்தர்களின் சௌகரியத்தை முன்னிட்டு அழகர் மலை மீதுள்ள நூபுரகங்கை வரை மலைப்பாதை அமைக்கும் வேலை ரூ. 5,00,000/- மதிப்பில் துரிதமாக நடைபெற்று வருகின்றது. இது தவிர யாத்திரீகர்கள் தங்கும் விடுதி கட்டவும், மற்றும் கோபுரத் திருப்பணிகள் வேலையும் நடைபெற உள்ளன.

இவ்வாலயத்துடன், மதுரை திருமோகூர் அருள்மிகு காளமேகப் பெருமாள் ஆலயமும் உபகோவிலாகச் சேர்க்கப்பட்டு ஷ ஆலயத் திருப்பணிகளான மேல் தளவரிசை, கோபுரத்திருப்பணிகள், இராஜ கோபுரம் கட்டுதல், கல்யாண மண்டபம் மற்றும் கீழ் தளவரிசைக் கற்கள் பதித்தல் ஆகியவை வெகு வேகமாக நடைபெற்று வருகின்றன.

பக்தர்கள் ஷ ஆலயங்களின் திருப்பணிக்கு மனமுவந்து தங்களாலியன்ற நன்கொடைகளை நிர்வாக அதிகாரி, அருள் மிகு கள்ளழகர் திருக்கோயில், அழகர் கோவில் என்ற முகவரிக்கு அனுப்ப வேண்டுகிறோம்.

இங்ஙனம்,

**ஆலய நிர்வாகிகள்**

# Philosophy of Thirukkural Theory and Practice



**Dr. M. Muthuraman**

The form and structure of Tirukkural may be briefly explained. It consists of 133 chapters, constituted of ten couplets for each chapter. Thus it makes the grand total of 1330 couplets. It is divided into three major sections,[1] namely, the principles of Justice, Wealth and Happiness. It is the noble creation of a solitary genius Thiruvalluvar, the Tamil bard of the 3rd Tamil Sangam said to have lived 2000 years ago. The three major divisions are so well arranged beginning with the principle of Justice, that it clearly shows how the principle of Justice — The ideal perfection of human relationships — is the basis of the entire work! For, it is along the principle of Justice, wealth must be acquired, happiness should be secured. Only then, there is justification for both the acquisitions. For in either cases, if they are pursued apart from Justice, then both of them are condemned. This relevant, as it is a significant message, to the modern socialistic views of life etc. If a person steadfastly adheres to the life and conduct envisaged by Thiruvalluvar, through the three major aspects of his work, then that person is certain to achieve the highest aspect of life, in his lifetime itself, so it is said! This is why, Thiruvalluvar is also spoken of as the one, who has explained the four values,[2] of life — Justice, Wealth, Happiness and Bliss, through the three values constituted of his work!

As the family institution is the unit of social life so is the individual, both man and woman, who constitute the unit of family life. This corporate life starts on the basis of certain biological and economic factors, but continues to exist and acquires meaning only when the foundations are based on Love and Justice. Thiruvalluvar explains how life is to be lived only on the principle of Justice through the practice of virtues and it is better to have regard for other fellow-beings and their welfare. For, the life lived on the principles of Justice and Love, not only enhances the meaning of life but ennobles it as well to the extent of divinity! This is really a sensible explanation of the meaningfulness of life. For, it illustrates not only the recognition of a better life and its pursuit, but also the

onward march of the individual personality from humanity to divinity!! In fact, either the progress of the individual or of the society could be meaningful only when they move forward from the good to the better and the best. It is through the realisation of the values of Goodness, Truth and Justice, divinity is affirmed!

When love and virtue illumine the household, then it secures perfection and thereby all its end are fulfilled says Thiruvalluvar.[3] Mention has already been made of the principle of Justice as the foundation of life. Only on that principle life needs to be started as it alone guarantees the achievement of spiritual goal to man and woman. That is why it is pointed out that among those who aspire for the spiritual life of everlasting happiness, the greatest are those who lead a virtuous family life.[4] Herein we could perceive how much importance is attached to virtue as it alone gets the moral sanctions of the principle of Justice. While it is true that the virtuous acts could be pursued even by other persons having their own pursuits of life, yet, the fullest claim for virtue is from the side of the family institution. This is what we are able to understand when Thiruvalluvar speaks: 'virtue rightly belongs to the married life and other walks of life, if found blameless, due respect may claim.'[5]

It is worthy to note in this connection of the constructive role of the family intitution in the spiritual scheme of life envisaged by Tamil Sage, Thiruvalluvar. He had laid the greatest importance on the monogamous family institution as it secures safely the moral atmosphere not only for bringing up of the required offspring but also looking after them in the growth and development of their personalities. While there is the personal gain for the husband and wife in the establishment of the household, thiruvalluvar clearly brings home to of the social aspect of it. For it is said us that the true householder is the supporter of the student, the hermit and the ascetic.[6] It goes without saying that it is the householder who helps by feeding not only children at home but also protects by alms giving the needy and those who have no household of their own. This is the crucial point which strengthens the moral efficacy of the family institution. Thiruvalluvar adds the spiritual glory of the family institution, when he proclaims: verily the householder is the friend of the orphan, the poor and the dead.[7]

How could the householder help the dead and the departed is a pertinent question, the answer for which brings with it the philosophy of life practised by the Hindus through the ages. For the life of Hindus is a religious life, wherein there is a well planned scheme for rituals to be performed according to the requirement of the occasion. There is a prominent place for ancestor-worship in Hinduism and this view is prevalent among the orientals like the Chinese and the Japanese. By offering either food or other articles through fire, it is a symbolic expression of remembrance of the ancestors. This by reference to the 'dead and the departed', Thiruvalluvar has shown the bridge between life in the present form and life hereafter. The performance of rituals in honour of the dead is enjoined as a duty to the householder. For it is said that the greatest duty of the householder is to keep to the five-fold rules of conduct towards the departed, the gods, the guests, relativos and himself.[8] Thiruvalluvar has not ignored to point out the practical difficulties which would face the householder in the performance of multifarious duties and obligations. That is why it is mentioned far holier and more penitent than the recluse is the householder,

who helps the hermits in the observance of their duties and himself swerves not from virtue.[9] Thus when the householder steadfastly pursues the moral life of spiritual journey, then that life is said to be the best form of life. So it is said: 'no need for a householder to long for other spheres of life, if he keeps the lustre of his soul uncontaminated amidst the ceaseless toil of his home.[10]

The family life as envisaged by Thiruvalluvar is not an easy one. But it is an ideal one, in the pursuit of it, life acquires meaning and significance. An aimless life is no life. For in that case it would very well become a tale through not to be told by an idiot signifying nothing. All human endeavours are self evident indications of the march towards the better and the nobler. Only when the rational animal realises as he or she ought to do so, one day or other, then they are bound to reckon with the ethics of life envisaged by the Tamil Sage Thiruvalluvar. When it is done so, as it ought to be, then a God among men, he will be looked upon, who fullfils the duties at home in the best possible way.[11]

When these idealogies of Justice and Love are subordinated to expediency, then there is disruption of human relationships. This is what has happened in our times, where we find chaos and confusion rampant not only at the social level but more so at the national and international levels. These symptoms of degradation of the morale of human relationships are due to the non-recognition of the basic unity of humanity. That recognition could be possible and sensible only when the basic principles, Love and Justice are duly respected. For, human relationships are based on the moral laws of Truth and Goodness, sustained by Love and Justice. It is those cardinal virtues which constitute the cultural life of the people at large. And it is those principles which guarantee the pratice of virtues in the institutions of family, temple, etc. Through practice of moral virtues, man and woman realise their true nature and it is in that realisation lies the meaning of life!

Thiruvalluvar says that the recognition of the principle of Justice and its realisation in the practice of virtues of truthfulness, honesty and goodness, lies the meaning of one's life; so there is nothing greater than those moral values to one's realisation. Therefore, it would be no more an exaggeration to say that it is the non-recognition of those moral values, which has led mankind towards selfishness and emmity. These negative features are only accidental to man, whereas they are basic and essential to animals. So much so, man could claim to be a man, as he is a rational being, only when he dissociates from the nature of animals. This could be, may should be done only when he recognises the moral virtues enjoyed in the spiritual values of Truth and Goodness. Without those safeguards, neither mankind could progress nor there could be meaning and justification to their life.

The inculcation of virtues in the early stages of development of individual personality is the most requisite aspect of our lives at present. For, the true aim of education is to make the individual develop his faculties fully and freely so that he is enabled to realise the best. Precisely for this reason, Thiruvalluvar explains that the individual should learn well and also practise according to the precept he has learnt.[12] Thus acquiring knowledge he is enabled as well to process wisdom. Through wisdom he realises human limitations and thereby recognises the supremacy of an 'Agency' higher than human agencies. For it is said

that the recognition of the supremacy of 'Spiritual Agency' is the highest achievement of all education. Thiruvalluvar asks, what is the benefit of education, if the educated one does not respect the sacred nature of spiritual agency.[13] In other words, the aim of education gets fulfilled only when the spiritual aspect of our life is recognised and due respect is given to those moral valued. Unless this vital aspect of our life is accounted, not only the aim of education gets emptied, but education itself becomes futile and fruitless.

Thus the progressive aspects of a society or nation are decided by the moral and spiritual values they cherish. It does not mean that there could be no recognition of the material values, which are instrumental for the wellbeing of people. Thiruvalluvar recognises the economic basis of the social institutions. But he hastens to add that those values should be subordinated to the principles of Justice and Truth. Otherwise, it would lead to materialism devoid of moral values. The result would be, what history tells us of the tragedies of the past civilisation. For, history gives us evidences how different civilisations lived and perished while there remained for ever the spiritual values of Justice, Truth, Goodness and the search after them. When these values are personified, we call God. This is natural and normal process of human reasoning, by which we are enabled to apprehend the spiritual Agency, through known forms and names. For instance the term 'Kadavul' is significant in its explanation. It refers to the universal as well as the particular aspects of the spiritual Agency. That which is beyond the comprehension of human faculties is the universal aspect, known as the transcendental nature of God. It is that which is present in everything is the particular aspect, known as the omnipresence of God.

Thiruvalluvar pays respect to the 'First One' not only elucidating in the first couplet, but itself commencing with the first letter of the alphabet, as follows: 'A is the first stir in the world of sound; even so, the Eternal adorable One is the prime impulse of all creation'.[14] Evidently, 'A' is the primary sound that human voice could utter and it is also the sound present in every other letters, vowal or consonant. That is why, the noted commentator on 'Thirukkural, Parimelazhakar points out that the order of the Prime Mover is not, order in place, but order in origin. All this tells as only the truth, how Thiruvalluvar has given the sublime truths as a message to humanity in their march towards divinity. God is supreme; all human endeavours could be sensible and meaningful only when they are directed to Him; peace and happiness could be secured and theever lasting bliss could be achieved only through Him. Having read and realised these sublime truths embedded in the sacred work of Thirukkural, many eminent thinkers all over the world agreed to recognise it as the bridge between the earth and heaven. Yet more appropriate Tribute could be, in my humble opinion that the precepts practised properly could turn the earth itself heaven!

## References


1. அறம், பொருள், இன்பம்.
2. அறம், பொருள், இன்பம், வீடு.
3. அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
   பண்பும் பயனும் அது. (Kural 45)

4. இயல்பினுன் இல்வாழ்க்கை வாழ்பவன் என்பான்
முயல்வாருள் எல்லாம் தலை. (Kural 47)

5. அறனெனப்பட்டதே இல்வாழ்க்கை அஃதும்
பிறன்பழிப்பது இல்லாயின் நன்று. (Kural 49)

6. இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும்
நல்லாற்றின் நின்ற துணை. (Kural 41)

7. துறந்தார்க்கும் துவ்வாதவர்க்கும் இறந்தார்க்கும்
இல்வாழ்வான் என்பான் துணை. (Kural 42)

8. தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்றாங்கு
ஐம்புலத்தாறு ஓம்பல் தலை. (Kural 43)

9. ஆற்றின் ஒழுக்கி அறனிழுக்கா இல்வாழ்க்கை
நோற்பாரின் நோன்மை உடைத்து. (Kural 48)

10. அறத்தாற்றின் இல்வாழ்க்கை யாற்றின் புறத்தாற்றிற்
போஒய்ப் பெறுவது எவன். (Kural 46)

11. வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும். (Kural 50)

12. கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க அதற்குத் தக. (Kural 391)

13. கற்றதனு லாய பயனென்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின். (Kural 2)

14. அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு. (Kural 1)



கறங்குதிரைக் கருங்கடலும் காரவுணப்
பெருங்கடலும் கலங்கக் கார்வந்து
உறங்குசிகைப் பெருப்புஞ்சூ ரப்பொருப்பும்
பிளப்பமறை யுணர்ந்தோ ராற்று
மறங்குலவு மகத்தழலு மவுணமட
வார்வயிற்றி ழைலும் மூள
மறங்குலவு வேலெடுத்த குமரவேள்
சேவடிகள் வணக்கம் செய்வோம்

— திருவிளையாடற் புராணம்

# அருள்மிகு பட்டிப்பெருமான் திருக்கோயில்

## பேரூர் - கோவை-10

இது தொன்மையும் பழமையும் வாய்ந்த சிவாலயம். இங்கு எழுந்தருளியுள்ள இறைவன் சுயம்பு மூர்த்தி. இவ்வாலயத்திலுள்ள கனக சபையில் கோமுனி, பட்டிமுனி இருவருக்காக ஆடிய பாதத்தோடு விளங்கும் நடராஜர் வடிவம் மிக மிக அழகானது. நடராஜப் பெருமானை வலம் வரும் வண்ணம் அமையப்பெற்றுள்ள தலம் இது ஒன்றே என்று சொல்லலாம். இத்தலம் மேலைச் சிதம்பரம் எனவும் வழங்கப்படுகிறது. கனகசபை, மதுரை திருமலை நாயக்கர் சகோதரரான அளகாத்திரி நாயக்கரால் (1625 – 1659) கட்டப்பட்டது. இக்கனக சபையில் சிற்பக்கலை வேலைப்பாடுகள் மிளிர்கின்றன.

புராதனமான பட்டிப் பெருமான் கோவிலின் கர்பக்கிருகத்தை கரிகால் சோழன் அமைத்ததாகச் சொல்லப்படுகிறது. என்றும் அழிவற்ற இறவாப்பனையும், பிறப்பே இல்லாத பிறவாப்புலியும், பைத்தியத்தை நீக்கும் புண்ணிய தீர்த்தம் சுரக்கும் பிரம்ம தீர்த்தக் கிணறும் இத்தலத்தின் புனிதத்தை இன்றும் எடுத்துக் கூறுபவை. அப்பரும் சுந்தரரும் இத்தலத்தைப் புகழ்ந்து பாடியுள்ளனர். இங்குள்ள முருகப்பெருமான் தண்டாயுதபாணி என அழைக்கப்படுகிறார். மேற்கு நோக்கி நின்று அருள் புரிகின்றார். அருணகிரிநாதர் இத்தண்டாயுதபாணிப் பெருமானை இரு திருப்புகழ் பாடல்களால் பாடியுள்ளார். கடந்த 5 வருடங்களாக இச்சன்னதி திருப்பணி செய்யப்பெற்று கடந்த (12-7-1971) அன்று குடமுழுக்கு விழா சிறப்புற நடைபெற்றது.

ஆரூ ரத்தா! ஐயாற் றமுதே! அளப்பூர் அம்மானே!
காரூர் பொழில்கள் புடைசூழ் புறவிற கருகா வூரானே!
பேரூர் உறைவாய்ப் பட்டிப் பெருமான் பிறவா நெறியானே!
பாரூர் பலரும் பரவப் படுவாய் பாரூர் அம்மானே!

(சுந்தர மூர்த்திகள் தேவாரம் - ஊர்தொகை)

தீராப் பிணிதீர சிவாத்துமஞான
ஊராட் சியதான ஓர்வாக் கருள்வாயே
பாரோர்க் கிறைசேயே பாலாக் கிரிராச
பேராற் பெரியோனே பேரூர் பெருமானே

(திருப்புகழ்)

ஆலயத்திற்கு வரும் சேவார்த்திகளின் சௌகரியத்தை முன்னிட்டு ஆற்றங்கரையில் மேல்நிலைத் தொட்டி கட்டுதல், அதன் பக்கத்தில் குளியல் அறைகள் பத்து கட்டுதல், திருக்குளம் பழுது பார்த்தல், ஆலயப் பிரகாரத்தில் கருங்கல் தளவரிசை அமைத்தல், ஆகிய திருப்பணிகள் சுமார் 1½ இலட்ச ரூபாய் செலவில் விரைவில் மேற்கொள்ளப்படவிருக்கின்றன.

அன்பர்கள் வந்து தரிசித்து வணங்கிப் பச்சை நாயகி சமேதப் பட்டிப் பெருமான் தண்டாயுதபாணிப் பெருமானின் திருவருளைப் பெறுமாறு வேண்டுவதுடன் ஆலயத் திருப்பணிக்குத் தாராளமாக நிதியளிக்குமாறும் வேண்டுகிறோம்.

என். ஆர். லிங்கமராஜா, எம். ஏ.
செயல் அலுவலர்

மா. இரா. சிவசாமி
தலைவர் (அறங்காவலர்குழு)

க. சிவசாமி
இரா. கருப்புசாமி
கு. ப. ஜெகன்னாதன்
ந. இராசு
அறங்காவலர்கள்



# தண்டபாணிக் கடவுளும் தண்டபாணி அடிகளும்





திரு. தி. கெ. முருகதாச சுவாமிகள்

உலகில் வாழும் பல்வேறு வகைப் பட்ட உயிர்க் கூட்டத்தில் மிகவும் உயர்ந்த தாக மதிக்கப்படுவது மக்கட் பிறப் பொன்றேயாம். காரணம், "தக்க இன்ன. தகாதன இன்ன" என்றறிந்து, தக்கதைக் கொண்டு தகாததைப் புறக்கணித்து, வாழ விருப்பதாலேயாம். அவ்வாறில்லையாயின் 'மக்களும் விலங்கே' எனக்கோடல் வேண்டும். அவ்வாறு தக்கதைக் கொண்டு வாழ்பவர் மக்களாயினும் "வானுறையும் தெய்வத்துள் வைக்கப்"பெறுவர் என்பது தமிழ்மறை. இவர் ஒருசிலராகவேயிருப்பார் கள். அவ்வாறு வாழும்கால், இன்பத்துக்கு மாருகத் துன்ப நிலையும் இயல்பாயமையும். இதைக் கடந்து இன்ப வாழ்வமைய வழி செய்வது கடவுள் வழிபாடேயென்பது ஆன்ரேர் கண்ட முடிவு. சைவ நாயன்மார் களும், வைணவ ஆழ்வார்களும், மற்றும் பல பெரியோர்களும் காட்டியநெறி கடவுள் வழிபாடேயாகும்.

அத்தகைய கடவுள்நிலை பலவாயிருத் தலால், எது சிறந்ததென்பது ஐயத்துக் குரியதேயாம். கடவுள்நிலை பலவேயன்றிக் கடவுள் பல இல்லை. அது ஒன்றேயாம். பசுவின் நிறம், இனம் பலவாயினும் பாலின் நிறம் ஒன்று. பணிகளின் பெயர் வடிவம் பலவாயினும் பொன் ஒன்றேயானவாறென் பர். அவை பெறுபவர் மனவிருப்புக் கேற்ப, பொற்கொல்லர் செய்த வேறுபாடு. அதுபோல, மக்களாவார் பலரது மனநிலைக் கேற்ப ஒரு கடவுள் வடிவைப்பற்றிய வழி பாடு செய்யவேண்டுமென்பது கருத்து. இப்படி ஒவ்வொரு சமயத்தும் கடவுள் வடிவம் பல அமைத்துள்ளனர். யாவும் மக்கள் முதலில் ஒன்றைப்பற்றி வழிபடு வார்களாயின், படிப்படியாய், முடிவில் எல்லாம் ஒன்றேயென்ற சமரசவுணர் வமையப் பெறுவார்கள்.

இப்படிப் பல சமயங்களிருப்பினும், சிறந்தது முருகப் பெருமானுக்குரிய சமய மான கௌமார சமயம். ஏனெனில், சௌரம், சைவம், சாத்தேயம், வைணவம், காணபத்தியம் என்ற ஐந்துடன், கௌமார மென்ற சமயம் ஆறினையும் ஆறு திருமுகங் களாகக் கொண்ட பெருமான் குமாரக் கடவுள். இந்தக் கௌமார சமயத்திலும் முருகப் பெருமானுக்குப் பதினுறு வடிவ பேதம் கூறப்பட்டுள்ளன. அவற்றுள் ஒன்று, தண்டபாணிக்கடவுள் வடிவம். ஆறுமுகம், பன்னிரண்டு திருக்கரம், அவற்றுக்கான படைக்கலங்கள், அணிகலன் கள், வள்ளி தேவசேனையான பத்தினிகள், மயில்வாகனம் ஆகியவற்ருேடுள்ளது பெரு வடிவம். இவ்வுருவைத் தியானிப்பது மிகவும் கடினமான ஒன்ருகும்.

# அருள்மிகு கோபிநாத சுவாமி திருக்கோயில்

**ரெட்டியார் சத்திரம் - திண்டுக்கல் வட்டம்**



**தமிழ்நாட்டின் தனிப்பெரும் கால்நடை தெய்வம்**

தமிழ்நாட்டின் திலகமாய் விளங்கும் மதுரை மாவட்டம், திண்டுக்கல் வட்டம், காமாட்சிபுரம் கிராமத்தில் மாங்கரை ஆற்றின் கரையில் முக்கோண மலை மீது எல்லோருக்கும் நல்லருள் புரிய கால் புனைந்து நின்று வாயிற் குழலூதிய கோலத்துடன் ஸ்ரீ வேணுகோபாலன் ஆநிரை மேய்த்த கொண்டல் வண்ணன் கோவலன், ஸ்ரீ கோபிநாதனுக, ஸ்ரீ கோப்பம்மாள் என்றழைக்கப்படும் தாய் யசோதையுடன் எழுந்தருளியிருக்கும் திவ்விய திருப்பதியாகும். கறந்த பாலும், தயிரும், கடைந்துறிமேல் வைத்த வெண்ணையும் ஏந்தி சேவார்த்திகள் கோவிந்தா, கோபிநாதா என குரல் எழுப்பி மலை மீது ஏறும் ஸ்ரீ கோபிநாதன் திருவருள் காட்சி கண்கொள்ளாக் காட்சியாகும்.

குறிப்பு: *திண்டுக்கல் பழனி நெடுஞ்சாலையில் 10வது மைலில் உள்ளது. திண்டுக்கல்லில் இருந்து டவுன் பஸ் வசதி உண்டு.*

அறங்காவலர் குழு:

திரு. உ. சின்னச்சாமி பிள்ளை
அறக்குழுத் தலைவர்

திரு. அ. முத்துச்சாமி
அறங்காவலர்

திரு. M. வீரு
செயல் அலுவலர்

திரு. கோ. சுப்பைய மணியம்
திரு. சு. முத்துக்கோபால் மணியம்
திரு. சு. முத்துச்சாமி மணியம்
பூசாரி தர்மகர்த்தாக்கள்



# தண்டபாணிக் கடவுளும் தண்டபாணி அடிகளும்





திரு. தி. கெ. முருகதாச சுவாமிகள்

உலகில் வாழும் பல்வேறு வகைப் பட்ட உயிர்க் கூட்டத்தில் மிகவும் உயர்ந்த தாக மதிக்கப்படுவது மக்கட் பிறப் பொன்றேயாம். காரணம், "தக்க இன்ன. தகாதன இன்ன" என்றறிந்து, தக்கதைக் கொண்டு தகாததைப் புறக்கணித்து, வாழ விருப்பதாலேயாம். அவ்வாறில்லையாயின் 'மக்களும் விலங்கே' எனக்கோடல் வேண்டும். அவ்வாறு தக்கதைக் கொண்டு வாழ்பவர் மக்களாயினும் "வானுறையும் தெய்வத்துள் வைக்கப்"பெறுவர் என்பது தமிழ்மறை. இவர் ஒருசிலராகவேயிருப்பார் கள். அவ்வாறு வாழும்கால், இன்பத்துக்கு மாருகத் துன்ப நிலையும் இயல்பாயமையும். இதைக் கடந்து இன்ப வாழ்வமைய வழி செய்வது கடவுள் வழிபாடேயென்பது ஆன்ருேர் கண்ட முடிவு. சைவ நாயன்மார் களும், வைணவ ஆழ்வார்களும், மற்றும் பல பெரியோர்களும் காட்டியநெறி கடவுள் வழிபாடேயாகும்.

அத்தகைய கடவுள்நிலை பலவாயிருத் தலால், எது சிறந்ததென்பது ஐயத்துக் குரியதேயாம். கடவுள்நிலை பலவேயன்றிக் கடவுள் பல இல்லை. அது ஒன்றேயாம். பசுவின் நிறம், இனம் பலவாயினும் பாலின் நிறம் ஒன்று. பணிகளின் பெயர் வடிவம் பலவாயினும் பொன் ஒன்றேயானவாறென் பர். அவை பெறுபவர் மனவிருப்புக் கேற்ப, பொற்கொல்லர் செய்த வேறுபாடு. அதுபோல, மக்களாவார் பலரது மனநிலைக் கேற்ப ஒரு கடவுள் வடிவைப்பற்றிய வழி பாடு செய்யவேண்டுமென்பது கருத்து. இப்படி ஒவ்வொரு சமயத்தும் கடவுள் வடிவம் பல அமைத்துள்ளனர். யாவும் மக்கள் முதலில் ஒன்றைப்பற்றி வழிபடு வார்களாயின், படிப்படியாய், முடிவில் எல்லாம் ஒன்றேயென்ற சமரசவுணர் வமையப் பெறுவார்கள்.

இப்படிப் பல சமயங்களிருப்பினும், சிறந்தது முருகப் பெருமானுக்குரிய சமய மான கௌமார சமயம். ஏனெனில், சௌரம், சைவம், சாத்தேயம், வைணவம், காணுபத்தியம் என்ற ஐந்துடன், கௌமார மென்ற சமயம் ஆறினையும் ஆறு திருமுகங் களாகக் கொண்ட பெருமான் குமாரக் கடவுள். இந்தக் கௌமார சமயத்திலும் முருகப் பெருமானுக்குப் பதினறு வடிவ பேதம் கூறப்பட்டுள்ளன. அவற்றுள் ஒன்று, தண்டபாணிக்கடவுள் வடிவம். ஆறுமுகம், பன்னிரண்டு திருக்கரம், அவற்றுக்கான படைக்கலங்கள், அணிகலன் கள், வள்ளி தேவசேனையான பத்தினிகள், மயில்வாகனம் ஆகியவற்ருேடுள்ளது பெரு வடிவம். இவ்வுருவைத் தியானிப்பது மிகவும் கடினமான ஒன்ருகும்.

# அருள்மிகு கோபிநாத சுவாமி திருக்கோயில்

**ரெட்டியார் சத்திரம் - திண்டுக்கல் வட்டம்**



**தமிழ்நாட்டின் தனிப்பெரும் கால்நடை தெய்வம்**

தமிழ்நாட்டின் திலகமாய் விளங்கும் மதுரை மாவட்டம், திண்டுக்கல் வட்டம், காமாட்சிபுரம் கிராமத்தில் மாங்கரை ஆற்றின் கரையில் முக்கோண மலை மீது எல்லோருக்கும் நல்லருள் புரிய கால் புனைந்து நின்று வாயிற் குழலூதிய கோலத்துடன் ஸ்ரீ வேணுகோபாலன் ஆநிரை மேய்த்த கொண்டல் வண்ணன் கோவலன், ஸ்ரீ கோபிநாதனுக, ஸ்ரீ கோப் பம்மாள் என்றழைக்கப்படும் தாய் யசோதையுடன் எழுந்தருளியிருக்கும் திவ்விய திருப்பதியாகும். கறந்த பாலும், தயிரும், கடைந்துறிமேல் வைத்த வெண்ணை யும் ஏந்தி சேவார்த்திகள் கோவிந்தா, கோபிநாதா என குரல் எழுப்பி மலை மீது ஏறும் ஸ்ரீ கோபிநாதன் திருவருள் காட்சி கண்கொள்ளாக் காட்சியாகும்.

குறிப்பு: *திண்டுக்கல் பழனி நெடுஞ்சாலையில் 10வது மைலில் உள்ளது. திண்டுக்கல்லில் இருந்து டவுன் பஸ் வசதி உண்டு.*

அறங்காவலர் குழு:

திரு. உ. சின்னச்சாமி பிள்ளை
அறக்குழுத் தலைவர்

திரு. அ. முத்துச்சாமி
அறங்காவலர்

திரு. M. வீரு
செயல் அலுவலர்

திரு. கோ. சுப்பைய மணியம்
திரு. சு. முத்துக்கோபால் மணியம்
திரு. சு. முத்துச்சாமி மணியம்
பூசாரி தர்மகர்த்தாக்கள்

# தமிழ் மொழியில் நாடோடி இலக்கியம்

திரு. எஸ். வி. சுப்பிரமணியன்

உலகில் பேச்சு மொழிக்குப் பின்பு தான் இலக்கிய மொழி தோன்றியிருக்க முடியும். அதேபோன்று உலக மொழிகள் அனைத்திலுமே முதலில் நாடோடி இலக்கியங்கள் தோன்றித் தழைத்துப் பெருகி வளர்ந்து மக்கள் மத்தியில் பரவிப்படர்ந்த பின்தான் முழுநிலை இலக்கியங்கள் வந்திருக்க இயலும். தமிழ் மொழியிலும், சங்க இலக்கியத் தோற்றத்தின் முன்னோடியாக நாடோடிப் பாடல்கள் இருந்திருக்க வேண்டும். தமிழ் மொழியில் இன்று கிடைக்கின்ற நூற்களுள் முதல் நூலாகத் தொல்காப்பியம் என்ற இலக்கண நூலை அமைத்திருப்பதால் அதற்குமுன் ஏறத்தாழ ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே நாடோடி இலக்கியங்களும் இருந்திருத்தல் வேண்டும். அத்தொல்காப்பியம் கூறும் பிசி, பண்ணத்தி என்பன இவ்வகை இலக்கியங்களைச் சுட்டிச் சென்றன போலும்.

நாடோடி இலக்கியம் பொதுமக்கள் இலக்கியம். சங்கப் பாடல்கள் போன்ற தனிப்பாடல்களும் அவற்றில் உள. அவற்றை folk songs என்று கூறுவார். அதற்குப் பின்பு தோன்றிய கதைதழுவிய பாடல்களும் உள. அவற்றை folk lore என்று சொல்லலாம். இரண்டும் நாடோடி இலக்கிய வகையைச் சார்ந்தவையே.

நாடோடி இலக்கியங்கள் மக்கள் வாழ்வில் பெரும் பங்கு பெறுகின்றன. அவை மனிதத் தோற்றத்திலிருந்து மறைவு வரை பிறப்பிலிருந்து இறப்பு வரை, வாழ்வின் ஒவ்வொரு நிகழ்ச்சியோடும் இணைந்து அமைகின்றன. காட்டாற்று வெள்ளம்போல் உள்ளத்து உணர்ச்சிகளையெல்லாம் அவ்வாறே தங்கு தடையின்றிக் கொட்டுகின்றன. முழுநிலை இலக்கியங்கள் அணை கட்டப்பட்டு அதன் வழியே வெளியேறும் ஆற்று வெள்ளம்போல், கட்டுத்திட்டங்கள் —வரையறைகள் இவைகட்கு உட்படுகின்றன. அதனால் இம் முழுநிலை இலக்கியங்களை விட நாடோடி இலக்கியங்கள் உணர்ச்சிகளை வெளியிடும் நிலையிலும் முதலிடம் பெறும் எனலாம். உணர்வுக் களஞ்சியமாக மட்டுமின்றி ஆழ்ந்த தத்துவக் கருவூலமாகவும் அவை அமைகின்றன.

நாடோடி இலக்கிய வகைகளாகத் தாலாட்டு, நிலாப் பாட்டு, அம்மானை (கழற்சிக்காய்), கந்துகவரி (பந்தடிப் பாட்டு), ஊசல், காதல் பாடல், ஏற்றப் பாட்டு, வள்ளைப் பாட்டு, கோலாட்டம், கும்மி, நையாண்டி, பள்ளு போன்ற உழவர் பாடல் கதைப் பாடல்கள், ஒப்பாரி என்பன உள்ளன.

பழமொழி, சொலவடை, விடுகதை, போன்றவையும் பொதுமக்கள் இலக்கியமே. இவை பழங்காலக் கல்வி, பொருள் பொதிந்து அமைந்தமையைத் தெளிவுறுத்தும். இத்தகைய இலக்கிய வரிகள் சில வற்றைச் சிறு குழந்தைகளுக்குச் சொல்லி

வைத்தார்கள். அவற்றுள் ஒன்று 'வாலு போச்சுது கத்தி வந்தது டும்டும்டும்' என்பது.

ஒன்று போனால் ஒன்று வரும், பிறப்புப் போனால் இறப்பு வரும், தலைவலி போனால் கண்வலி வரும், இது உலக இயற்கை. உலகில் மனிதன் விரும்பும் எப்பொருளாயினும் அப்பொருள் இழக்கப்படும்—புதுப் பொருள் தோன்றும் என்பது அந்நாட்டோடிப் பாடல் வரியின் பொருள் எனலாம்.

ஆயின், இதை இராமாயணக் கதைப் பகுதியைக் குறிப்பதாகக் கொள்வர். இராவணனைத் தன் வாலில் கட்டித் தூக்கியவன் வாலி. அவன் இறந்துவிட்டான், ஆனால் அதற்குப் பதிலாக இராவணனைக் கொல்லும் கத்தியாகச் சுக்ரீவன் தோன்றுகிறான்—இது விளக்கம். குரங்கும் பிளந்த மரக் கட்டையும் பற்றிய கதையும் நமக்குத் தெரிந்தவையே.

உலகம் தோன்றிய போதே ஓசையும் ஒலியும் தோன்றின. குழந்தை பிறந்த போது இசையும் முகிழ்ந்திருக்கவேண்டும். அவ்விசை தாள லய இயைபோடு தாலாட்டாக உருக்கொண்டது. இத் தாலாட்டு, மக்களிடையே பரந்தபோது பல்வகைக் கோலம் புனைந்தது.

வறுமையுடைய உழவன் வீட்டில் பிறந்த ஒரு குழந்தையைத் தாலாட்டும்போது, அக் குழந்தை, பணமும் பெருமையுமுடைய ஒருவன் வீட்டில் பிறந்திருந்தால் இன்னும் சிறப்பாக வளருமே என்ற ஏக்கம் அப் பாடலில் வெளிப்படுகின்றது. அதோடு சமுதாயத்தின் சூழலுக்குத் தக எண்ணங்கள் இலக்கியங்கள் தோன்றுவதை இங்கே காண்கிறோம்.

முத்துச் சிரிப்பழகா முல்லைப்பூப் பல்லழகா
வெத்துக் குடிசையிலே விளையாட வந்தாயா
ஏழைக் குடிசையிலே ஈரத்தரை மேலே
தாழம்பாய் போட்டு தவழ்ந்தோட வந்தாயோ?
தரையெல்லாம் மேடுபள்ளம் தவழ்ந்தால் உறுத்தாதோ?
பளிங்கால் அரண்மனையும் பவளத்தூண் மாளிகையும்
பணக்காரன் வீடிருக்க பஞ்சனிடம் வந்ததும் ஏன்?
பச்சரிசிச் சோளம் பாதிநாள் பட்டினி தான்
பசும்பால் கொடுத்துந்தன் பசி தீர்க்கப் பார்த்தாலும்
பருத்தி விதை இல்லையடா பசு பாலு தரலையடா
ஆட்டுப்பாலூட்டியுன்னை ஆதரிக்கப் பார்த்தாலும்
ஆடு கடிக்கும் மரம் அத்தனையும் மொட்டையடா
பிள்ளைப் பாலூட்டியுன்னை போசனைகள் செய்திடவே
கொள்ளை யுத்தம் பஞ்சம் குரங்காகிப்போனேண்டா
நெல்லைப் பதுக்கிவைத்து நிட்டூரம் பண்ணிடுவோர்
கொல்லை வழி போகாமல் குடிசைவழி வந்தாயோ
தொட்டால் பிசுக்கொட்டும் துணிமூட்டைத் தையவிட்டு
தொட்டில் கட்டித்தாலாட்ட தூக்கம் வருமோடா
கதிரறுக்கும் நேரத்திலே கட்டியுன்னைத் தோளிலிட்டால்
மதியத்து வெயிலிலே மயக்கமும் தான் வருகாதோ.

தொட்டிலில் குழந்தை வளர்கின்றது. இளமை அடைகின்றது. அவ் இளமையில் இதயங்கள் இணைய எண்ணங்களைப் பரிமாறிக்கொள்ளுகின்ற பருவம் வருகின்றது. காதல் பாடல்கள் பல வருகின்றன. எண்ணப் பரிமாற்றத்தைக் கீழ்க்கண்ட பாடல்கள் தருகின்றன.

ஆண் : ரோட்டோரம் தோட்டக்காரி
மல்லியப்பூ சேலைக்காரி
நீ இறைகும் தண்ணியிலே
மல்லியப்பூ மணக்குதடி

பெண்: குத்துக் கல்லு மேலிருந்து
குறும்பு பேசும் மச்சானே
அத்தை மகன் முறையாலே
அடக்கிக் கொண்டேன் மையலிலே

ஆண் : ஆத்தோரம் நாணலடி
அதன் நடுவே செய்வரப்பு
செய்வரப்புப் பாதையிலே
தேனமிர்தம் உண்களாமோ

இவ்வாறு இணைய நினைக்கின்றன உள்ளங்கள். அந்நிலையில் தற்காலிகப் பிரிவு ஏற்படுகின்றது. தலைவனைக் காணாதபோது கண்ணீர் விட்டுக் கலங்கிக் கதறும் தலைவியைச் சித்திரிக்கின்றது ஒரு பாடல்:

கரும்பா இணங்கினனே
கருத்த மத யானையிடம்
துரும்பா உணருரனே
துடிகாரர் உன்றலே

எண்ணங்கள் வளர்ந்தன. இதயங்கள் ஒன்றின. ஆனல் உறவினரும் சமுதாயமும் சில காரணங்களைக் கூறி இதயப் பிணைப்பைத் தடுத்தனர். அதை எண்ணி ஏங்குகின்றுள் இன்னொரு பெண்:

கரும்பு வெட்டி மொழி நொறுக்கி
மொழிக்கு மொழி தேனடைச்சு
கரும்பு திங்கற நாளையிலே
நமக்கு கசப்பு வந்து நேர்ந்ததென்ன

நாடோடிப் பாடல்களில் துன்ப உணர்வைக் கூறும் பாடல்கள், மிகுந்த இன்பத்தைக் கற்போருக்குத் தருகின்றன. பெரும்பான்மையான உணர்வு வெளியிட்டு நாடோடிப் பாடல்களும் அவ்வாறு அமைதல் நினைத்தற்குரியது.

மனிதனுடைய இன்பதுன்பங்கள் அனைத்திற்கும் காரணம் அவனுடைய உள்ளமே. ஆனல் அவன் இன்பத்தை வெளியே தேடி அலைகிருன். துன்பம் வரும்போது அத்துன்பம் பிறரால் தரப்பட்டதாக நினைக்கின்ருன். ஆயின் 'தீதும் நன்றும் பிறர்தர வாரா' என்ற சங்ககால இலக்கிய வரியைக் கற்றவன், தத்துவ நிலையில் உணர்ந்தாலும், வாழ்க்கை நிலையில் ஏற்றுக்கொள்வதில்லை. இத் தத்துவக் கருத்து நாடோடிப் பாடல்களிலும் கலந்து விட்டதைக் காணலாம்.

தலையிலே தண்ணிக்குடம்
தாகமெல்லாம் உங்கமேலே
ஊரெல்லாம் ஓமலிப்பு
ஒருபலனும் நானறியேன்

தலையில் தண்ணீர் இருக்கும்போது, தாகம் ஏன் ஏற்படுகின்றது?

இளமைத் துடிப்பை நினைக்கும்போது இதுபோன்ற காதலர் அன்பு அமைகின்றது. பின்பு வாழ்வை வகுக்கும் போது முயற்சி செய்து உழைக்கும் நிலை காணப்படுகின்றது. பெண்கள் நெல் குற்றுகின்ருர்கள். நெல் குற்றும்போது பாடும் பாடல்களை வள்ளைப் பாட்டு என்று கூறுகின்ருர்கள். ஆண்கள் நீர் இறைக்கும்போது ஏற்றப் பாட்டுப் பாடுகின்ருர்கள். இவ்வாறு உழைக்கும்போது பாடுகின்ற பாடல்கள் பல. உழைப்பால் ஏற்படும் சோர்வையும் தளர்ச்சியையும் வருத்தத்தையும், மறப்பதற்காகவே இவை போன்ற பாடல்கள் பாடப்படுகின்றன.

| | | |
|---|---|---|
| மலையோரம் கெணறுவெட்டி தில்லாலங்கிடிலேலம் | | |
| மானுக்கொம்பு ஏத்தம்வச்சு | ,, | ,, |
| மாமன்மகன் இறைத்த தண்ணி | ,, | ,, |
| மஞ்சாத்தோட்டம் பாயுதோடி | ,, | ,, |
| குன்னேரம் கிணறுவெட்டி | ,, | ,, |
| கொய்யாக்கொம்பு ஏத்தம்வச்சு | ,, | ,, |
| கொழுந்தனரு இறைக்கும் தண்ணி | ,, | ,, |
| கொய்யாத் தோட்டம் பாயுதோடி | ,, | ,, |

உழைத்து உழைத்து உருக்குலைந்த உடல் ஒரு நாள் வீழ்ந்து விடுகின்றது, வீழ்ந்த உடலிலிருந்து உயிர் பிரிந்து செல்கின்றது. அங்கே ஒப்பாரிப் பாடல்களின் தோற்றத்தைக் காண்கிறேம். ஒன்று மடியும் போது மற்றென்று தோன்றுவது இயல்பு தானே.

ஒப்பாரிப் பாடல்கள் பலவகை, குழந்தையை இழந்த தாய் அழுவது, தம்பியை இழந்த தமக்கை அழுவது; தாயை இழந்த மைந்தன் அழுவது; இவ்வாறு கணவனை இழந்த பெண் பாடும் பாடல்களே இவற்றை விட உணர்ச்சியோடும் உருக்கத்தோடும் அமைந்து கேட்போர் உள்ளத்தைப் பிணிகின்றன. ஏனைய இழப்புக்களைப் பிறர் அன்பால் நிறைவு செய்துகொள்ள இயலும். ஆனல் கணவன் இழப்பு அவ்வாறன்று. அதனல்தான் பாண்டிமாதேவியும்,

'கணவனை இழந்தோர்க்குக் காட்டுவதில்' எனப் பேசுகின்றாள்.

தலைவிக்கு விதியில் சிறிது நம்பிக்கை இருந்தது. இப்போது இவ்விழப்புக்குப் பின் அந்த நம்பிக்கையையும் இழந்து விடுகின்றாள்; தனக்கு அந்நிலை வரக்காரணம் பிறருடைய பிழையோ என எண்ணுகின்றாள்.

தாலிக்கு அரும்பெடுத்த தட்டானும் கண்குருடோ
சேலைக்கு நூலெடுத்த சேணியனும் கண்குருடோ
பஞ்சாங்கம் பார்க்கவந்த பார்ப்பானும் கண்குருடோ
எழுதினவன் தான்குருடோ எழுத்தாணி கூரிலையோ

என்று பேசுகின்றாள்.

இவ்வாறு வாழ்க்கை நிகழ்ச்சிகளுக்குத் தற்காலச் சிறுகதை போன்று முற்காலத்தில் சங்க இலக்கியம் போன்ற சின்னச் சின்ன பாடல்கள் தோன்றின. பிற்காலத்தில் கதைப் பாடல்கள் இதினின்று வளர்ந்தன. தாலாட்டுப் பாடல், தாலாட்டு இலக்கியமாக விரிந்தது, காதலி அனுப்பிய தூதுப் பாட்டு, பின்பு தூதிலக்கியமாக வளர்ந்தது. உழவன் உழத்திப்பாட்டு, பள்ளிலக்கியமாகப் பரிணமித்தது; குறவன், குறத்திப்பாட்டு குறம், குறவஞ்சி போன்ற இலக்கிய வடிவங்களை எடுத்தன.

இதோடு மட்டுமன்றிக் கற்றவர்கள் கற்கின்ற இலக்கியக் கதைகளின் அடிப்படையிலேயே பொதுமக்களுக்கு எனத் தனியே நாடோடி இலக்கியம் உருக்கொண்டன. சிலப்பதிகாரம், கோவலன் கதையாக வடிவெடுத்தது. பாரதக் கதைகளிலிருந்து, பஞ்சபாண்டவர் வனவாசம், கர்ணன் சண்டை, பவளக்கொடி மாலை, பாரத விலாசம் எனும் சூது, துகிலுரிதல், புலந்திரன் தூது, புலந்திரன் களவு மாலை போன்ற கதைகள் தனித்தனியாக நாடோடி இலக்கியங்களாகப் பொழுதுபோக்குக்காக எழுதப்பட்டன.

இவைபோக வரலாற்றில் சிறப்புப் பெற்ற வீரர்களைப்பற்றிய கதைகளும் நாடோடி இலக்கியங்களாக உருவாக்கப் பட்டன. மதுரைவீரன் கதை, இராமப்பையன் அம்மானை, இரவிக்குட்டிப்பிள்ளைப் போர், கட்டபொம்மன் கதைப்பாடல் தேசிங்குராஜன் கதை முதலியன.

நாட்டில் நன்மை செய்யத் துணிந்த சில சிறு தலைவர்களின் கதைகளும் அங்கங்கே வழங்கின. அவற்றைக் கள்ளர் பாட்டு என்ற வகையில் இணைக்கலாம். 'ஜம்புலிங்கம் கதை', 'சந்தனத்தேவன் கதை' என்பன இத்தகையன.

சமய அடிப்படையிலும் இதுபோன்ற இலக்கியங்கள் தோன்றின, சித்திரபுத்திர நாயனர் கதை, சிறுத்தொண்டபக்தன் கதை, மாணிக்க வாசகர் அம்மானை போன்றவை குறிப்பிடத்தக்கன.

இவைபோன்ற பொதுமக்கள் இலக்கியத்தில் எதுகை மோனையும் ஓசை நயமும் மிக முக்கியமானவையாகக் கருதப்பட்டன. சொன்ன சொல்லே மறுபடியும் மறுபடியும் வருவதுண்டு. அளந்து, நிதானித்து, இன்ன சொல்லை அமைத்தல் வேண்டும் என்று, இலக்கிய ஆசிரியர்கள் எண்ணிப் பாடுவது போன்று, இப்பாடல்கள் பாடப்படுவது இல்லை. ஆகவே பிறமொழிச் சொற்கள் கலப்பு மிகுதியாயிருக்கலாம், உணர்ச்சியை அப்படியே கொட்டுதல் வேண்டும், அதுவே அவர்களுடைய நோக்கம், பிற்காலத்தில் இவற்றிற்கும் ஒரு வரன்முறை அமைந்து, கடவுள் வாழ்த்து என்றால் அனைவரும் ஒரே போன்று பாடுதல் அமைந்தது. எந்தப் பாடலுக்கும் எந்தக் கதைக்கும் ஒரே விதத் தோத்திரம் தொடக்கமாக அமைந்தது.

ஐந்து கரத்தோனே அருட்சடையான் புத்திரனே
ஆனைமுகப் பிள்ளையாரே ஆறுமுகர்க்கு மூத்தோனே
வேறுவினை வாராமல் விநாயகரே முன்னடவீர்
ஆதிசிவன் தன் மகனே ஆயர்மருகோனே

பேழை வயிற்றோனே பெருமாள் மருகோனே
முன்னடக்கும் பிள்ளையார்க்கு கண்ணடக்கம் பொன்னாலே
கண்ணடக்கம் பொன்னாலே காற்சிலம்பு முத்தாலே
முத்தான தண்டைகொஞ்ச முன்னடவும் பிள்ளையாரே
பாட்டுக் குகந்தருளும் பார்வதியாள் புத்திரனே
ஆலமடியில் பிள்ளையாரே ஐந்து கரத்தோனே
மூலமுதலே நீர் முன்னடக்க வேண்டுமையா

இவ்வாறு கடவுள் வாழ்த்தோடு தொடங்குகின்றன கதைப் பாடல்கள். இவற்றில் சில கதைப்பாடல்கள் இடையிடையே உரை விரவி சிலம்பை நினைப்பூட்டும், சில இராக வகுப்போடமைந்து இனிமை பயக்கின்றன. உள்ளத்தில் நற்பண்புகள் வளர்ப்பதற்கும், வீர உணர்வுகளைத் தூண்டியெழுப்புவதற்கும் வீரர்களின் கதை மக்களிடையே வழங்கலாயின.

நாட்டு விடுதலைக்காகத் தம் உடல் பொருள் ஆவி அனைத்தையும் கொடுத்தவர் பலர். உரிமைக் குரலை முதல் முதலில் எழுப்பியவன் பாஞ்சாலங் குறிச்சியில் அரசு செலுத்திவந்த கட்டபொம்மன் என்பவன். அவனைப்பற்றிய பல கதைகள் தமிழகத்தில் பல இடங்களில் வழங்குகின்றன. ஊர் பெயர் தெரியாத புலவர் ஒருவர் அவன் கதையைப் பாடலாக எழுதியுள்ளார். அக்கதைப் பாடலே இன்று அவன் வரலாற்றை அறியத் துணையாய் அமைகின்றது. கதைப்பாடலால் வீரம் ஊட்டுவது போன்று, பாஞ்சாலங்குறிச்சி மண்ணைப் பாலோடு கலந்து குழந்தைகட்கு ஊட்டியும் வீரவுணர்வை வளர்த்தனர் தாய்மார்.

திருநெல்வேலிச் சீமையில், வீரத்திற்கும் கருணைக்கும் புகழ்பெற்ற ஜம்புலிங்கம் வாழ்ந்து வந்தான். அவன் என்ன குறிக் கோளுடன் கள்ளன் ஆனான் என்பது நமக்குத் தெரியவில்லை. செல்வந்தரின் மிகுதியான செல்வத்தைக் கவர்ந்து பணத் தேவை மிகுதியாகவுடைய ஏழைகட்குக் கொடுத்து அவர்களை வாழச்செய்வது அவன் தொழில். அவன் இருபத்துநான்கு அடி விட்டமுள்ள கிணற்றையும் ஒரே எட்டில் தாவுவானாம். அந்நேரத்தில் கிணற்றுக்குள்ளிருந்து குருவி வெளியே பறந்தால் அதனையும் பற்றிக்கொண்டே தாண்டிவிடுவானாம். இவ்வாறு அவனைப் பற்றிப் பல வீரக் கதைகள் நெல்லை மாவட்டத்திலே வழங்கி வருகின்றன. அவனைப் புகழும் பாடல்கள் சில.

தாய்ப்பிள்ளை எல்லாம் விட்டுத்
தன் வீட்டையும் கூட விட்டுத்
தர்மத்தை மனசில் வைத்துத்
தைரியத்தைக் கையில் பிடித்து
வாரார் சொக்கத் தங்கம் – நம்ம
நாடார் ஜம்புலிங்கம்.

பணக்காரனை இளைக்க வைத்துப்
பாவங்களைத் தழைக்க வைத்து
பக்கத்திலேயே உட்கார்ந்து
பசிகளெல்லாம் அமர்த்தி விட்டு
வாரார் சொக்கத் தங்கம்—நம்ம
நாடார் ஜம்புலிங்கம்.

நாடோடி இலக்கியத் தனிப் பாடல்களில், தாலாட்டுமுதல் ஒப்பாரி வரை, பெரும்பான்மையும் 75 சதவிகிதத்திற்கு மேல் பெண்களாலேயே பாடப்படுகின்றன. இவ்விலக்கிய வகையில் விளியாகச் சொற்கள் அமையும்போது இன்னும் சிறிது சுவை கூடுகின்றது. தங்க ரத்தினமே, பொன்னு ரத்தினமே, ராசாத்தி, ஏலேலோ, ஐலேசா போன்ற சொற்றொடர்களைக் குறிப்பிடலாம். கதைப் பாடல்களிலும் இதுபோன்று சொற்றொடர்கள் மீண்டும் மீண்டும் வருவது மரபாக அமைகின்றது.

மண்ணும் மனிதனும் இருக்கும் வரை இம் மக்கள் இலக்கியமாகிய நாடோடி இலக்கியம் நிலைபெறும் என்பது உறுதி.





# முருகனின் அழகும் சீற்றமும்

டாக்டர். திரு. இராம. பெரியகருப்பன்

முருகனின் வரலாறு, பழங்கதையாய் (Myth) உருவெடுத்துத் தமிழர் தம் அகவாழ் விலும் புறவாழ்விலும் பின்னிப் பிணைந்தது. தமிழரின் சமய வாழ்விலும் பண்பாட்டு வளர்ச்சியிலும் ஊடாடி, ஒன்றி நின்றது. தமிழர்களின் இலக்கியத்தை முருக வரலாறு உவமை வடிவமாய், உட் கருத்தாய், பழங்கதைப் பண்பாய் ஆட் கொண்ட இடங்கள் எத்தனையோ உள.

ஜவகர்லால் நேருவின் ஆளுமை பாரத நாட்டை — இந்நாட்டு ஆடவரைப் பாதித்துத் தன்வழிப் படுத்தியதுண்டு. கென்னடியின் ஆளுமை குறிப்பிட்ட காலப் பகுதியில் அமெரிக்க நாட்டை — அந்நாட்டு இளைஞர்களைத் தன்வழிப் படுத்தியதுண்டு. இவற்றை நாம் அறிவோம். இதுபோலத் தான் வரலாற்றுக்கு முற்பட்ட காலத்தில் முருகனின் ஆளுமை தமிழ் மக்களைப் பெரிதும் ஆட்கொண்டிருந்திருக்கிறது. இக் கருத்தினை வலியுறுத்தும் சான்று ஒன்றினை இலக்கிய மேற்கோளுடன் தருவதே இக் கட்டுரையின் நோக்கமாகும். முருகன் பற்றிய குறிப்புக்களை உற்று நோக்குங்கால் இவை காப்பியக் கதை என்பது மறந்து, புராணக் கதை என்பதும் மறந்து, வர லாறே என்ற ஐயவுணர்வே நம் நெஞ்சில் மீக்கூர்ந்து நிற்கக் காணகின்றோம்.

முருகன் அழகன். பேராற்றலும் பெருஞ்சீற்றமும் உடையவன். 'முருகு' என்ற சொல்லுக்கு 'அழகு, இளமை, மணம், கடவுள்தன்மை' என்ற நான்கு பொருள் உண்டு எனத் திரு. வி.க. எடுத்துக் காட்டுவார். 'முருகன் அல்லது அழகு' என்ற ஒப்பற்றதோர் நூலினை அவர் எழுதியுள்ளார்.

பழங்காலத் தமிழ் மக்கள் — குறிப்பாக இளம் வீரர்கள் "முருகனைப் போல் அழ குடையவனாக இருக்க வேண்டும்; முருகனைப் போல் ஆற்றலுடையவனாக இருக்க வேண் டும்" என்று ஆசைப்பட்டனர். ஒருவனின் கடுஞ்சீற்றத்தைக் கண்ணுற்ற பொழுது, அன்று, "ஆ! இது முருகனின் சீற்றம்போல் தடுக்கவொண்ணாதது" என்று மனம் கலங் கினர். போர் புரிந்தால் முருகனைப் போலப் பேராற்றலுடன், வெற்றி தரும் போர் புரிய வேண்டும் என்று அக்காலப் பெருவீரர்கள் பலரும் விழைந்தனர். முருகன் வள்ளியைக் களவில் காதலித்து, தடைகளைக் கடந்து மணந்து கொண்டது போலத் தாமும் 'காதல் வாழ்வு' பெற வேண்டும் என அக்கால இளைஞர்கள் அவா வினர். அரசர்கள் தமக்கு அடங்காத, தீய பகைவர்களை அடக்கி வேரறுக்கின்ற பொழுது, முருகன் சூரனை வென்றது போல வெற்றி பெற வேண்டும் என்றே விரும் பினர். இவ்வாறு முருகன் தமிழ் மக்களின் வாழ்வுக்கு ஓர் உவமையாயினன் என்பதை யும் அனைத்துத் துறைகட்கும் ஓர் எடுத்துக் காட்டாயினன் என்பதையும் தமிழ் இலக் கியம் பறைசாற்றுகின்றது. தமிழரின் அக வாழ்வும், புறவாழ்வும், பண்பாடும், நாக ரிகமும் இம் முருக வழிபாட்டோடு தோய்ந்து, இரண்டறக் கலந்து காணப்படு

கின்றன. தமிழரின் சமயவுணர்வும் முருக வழிபாட்டுடன் அடியொற்றி வளர்ச்சி பெற்றதேயாகும். சுருங்கக் கூறினல் முருகன் தமிழர் வாழ்வோடு இணைந்து, இரண்டறக் கலந்து காணப்படுகின்ருன்.

## முருகனின் அழகு

முருகன் வள்ளியைக் களவில் மணந்தான். பெற்ரேரும் தமையன்மாரும் ஒப்பாத பொழுது வள்ளி முருகனுடன் 'உடன் போக்கை' மேற்கொண்டாள். அன்று தலைவன் தலைவியர் 'உடன் போக்கு' உண்டு. தான் காதலித்தவனையே மணந்து கொள்ளவேண்டும் என்பதனல்தான் வள்ளி, தடையை மீறி உடன்போக உடன்படுகின்ருள். இங்கு பாசத்தைக் கற்பு வென்று விடுகிறது.

"முருகு புணர்ந்து இயன்ற வள்ளி போல" (நற்: 82) தலைவி தலைவனுடன் போயினள் என்று அம்மள்ளனர் உவமை கூறுமளவு இது நாடறிந்த கதையாக அன்றே வழங்கியது. எனவேதான் வள்ளியைச் சிறையெடுத்து மணந்த முருகன் கதை இங்கு உவமையாக வருகிறது. தலைமகனின் அழகைச் சுட்டும் பொழுதும் பல இடங்களில் முருகனையே உவமை கூறியுள்ளனர். தலைமகன் தேன்பிலிற்றும் மாலை சூடி வரும் அழகைக் கண்டதும் 'இவன் முருகனே?' என ஐயுறுவர். இன்றும் மாப்பிள்ளையை 'ஆள் முரு(க்)காய் இருக்கின்ருன்' என்று கூறுவது இதன் வழிப்பட்டதேயாகும்.

"முருகு முரண்கொள்ளும் தேம்பாய்
கண்ணி" (அகம்: 28)

"முருகு முரண்கொள்ளும்
உருவக்கண்ணியை (அகம்: 4)

என்ற அடிகளில் முருகனைப்போலவே மாலை சூடிவரும் தலைவனின் அழகு புனையப்படுகின்றது.

இளங்கோவடிகள் கோவலனின் அழகை முதன் முதலாகச் சிறப்பித்துக் கூறுமிடத்தில்:

"பண்தேய்த்த மொழியினர் ஆயத்துப்
பாராட்டிக்
கண்டேத்தும் **செவ்வேள்** என்று"
(சிலம்பு 1—30)

எனக் கூறுகின்ருர். சீவக சிந்தாமணியிலும் திருத்தக்க தேவர் சீவகனை முருகனுக்கு ஒப்பிடும் இடங்கள் பலவுள. காந்தருவதத்தையார் இலம்பகத்தில் சீவகனின் அழகை வருணிக்குமிடத்தில்,

"திருந்திழை மகளிர் வெஃகும்
**தேஇளங்குமரன்** ஒத்தான்" (698)

என்று கூறுகின்ருர். மற்றுமோர் இடத்தில் சீவகனை முருகனகவும் அவன் ஏறிநின்ற தேரை மயிலாகவும் காட்டுகின்ருர்:

"திருவரை மார்பன் திண்தேர்
மஞ்ஞையே; முருகன்
தான்என்று" (812)

என்பது அவர் வாக்கு.

சேக்கிழார் பெரியபுராணத்தில் சுந்தரரும் பரவையாரும் முதன் முதலாகச் சந்தித்துக் கொள்ளுமிடத்தில், இவ் உவமையையே ஆள்கின்ருர். பரவையார் சுந்தரரின் அழகில் ஈடுபடுமிடத்தில்,

"முன்னே வந்து எதிர்தோன்றும்
**முருகனே**?" (தடுத்: 144)

என்றே நினைக்கின்ருர்.

இவ்வாறு முருகனின் அழகு வழிவழியாக — ஓர் இலக்கிய மரபு எனும் அளவு தமிழ் இலக்கியத்தில் உவமையாக எடுத்தாளப் பெற்றுளது. 'மன்மதனைப் போன்ற அழகுடையவனே?' என்பது வடமொழி இலக்கியத் தாக்கத்தால் தமிழில் முகிழ்த்தது என்பதும் பிற்காலத்தது என்பதும் அறியத்தகும். சிலப்பதிகாரத்தில் முருகனேயன்றிக் காமனும் அழகுக்கு உவமையாக வரக் காண்கின்ரேம். சங்க இலக்கியத்திலோ முருகனே பேரிடம் பெறுகின்ருன்.

## முருகனின் சீற்றம்

முருகனின் வேல் "சூர் மருங்கறுத்த சுடரிலைய நெடுவேல்" என்று புகழப்படு

கின்றது. முருகனின் கடுஞ் சீற்றமும் போருடற்றும் திறனும் தொடர்ந்து பல இடங்களில் பாராட்டப்படுகின்றன. முருகனை 'வெல் போர் இறைவ' என்று, வெற்றிக் கடவுளாகவே பரிபாடல் பகர்கின்றது. முற்காலத்தில் போரில் வெற்றி பெற விரும்புவோரெல்லாம் முருகனையே வழிபட்டனர். இன்று வாழ்க்கையில் வெற்றிபெற விரும்புகின்றவர்கள் அனைவரும் முருகனை வழிபடுவதும் அறியத்தகும்.

"முருகற் சீற்றத்து உருகெழு குரிசில்" (புறம்: 16) என்று முருகனின் சீற்றம் மன்னனின் கடுங்கோபத்திற்கு உவமை கூறப்படுகிறது. முருகன் பேராற்றலுடையவனாதலின் அவனது சினம் வெற்றியளித்தது. "முருகு உறழ் முன்பொடு கடுஞ்சினம் செருக்கி" (நற்: 225) என்று கபிலர் முருகனின் ஆற்றலையும் சினத்தையும் ஒருசேர உவமையாக்கிக் கூறுகின்றார். ஒரு பெண் தன் தந்தையைப் பற்றிக் கூறுமிடத்தில் முருகனைப் போன்ற சீற்றத்தையும் ஆற்றலையும் உடையவர் என்று கூறுவதாக அகப்பாடல் ஒன்று வருகிறது.

"முருகன் அன்ன சீற்றத்துக்
கடுந்திறல்
எந்தையும் இல்லன் ஆக..."
(அகம்: 158)

என்று தலைவி கூறுகின்றாள். 'சினம் மிகு முருகன்' (அகம்: 59) என்பதும் ஓர் அகப்பாட்டு.

முருகன் பிறந்தபோதே மாற்றார் அஞ்சும் ஆற்றலுடையவன் என்றும் எப்போதும் வெற்றி தரும் போரினைப் புரிபவன் என்றும் பரிபாடல் பாராட்டும்:

"பிறந்த ஞான்றே நின்னை உட்கிச்
சிறந்தோர் அஞ்சிய
சீர்உடையோயே!" (பரி: 14)

எனவரும் பகுதி நோக்கத்தக்கது. நினைத்ததை முடிப்பதிலும் 'முருகனைப் போன்றவன்' என்று அக்கால மன்னன் ஒருவன் புகழப்படுகின்றான். "முருகொத்தீயே முன்னியது முடித்தலின்" (புறம்: 56) என்பது புறநானூறு. முருகனின் போராடும் திறமையைப் புகழும் முறையில் 'முருகன் நற்போர் நெடுவேள் ஆவி' (அகம்: 1) என்று மாமூலனார் குறிப்பிடுகின்றார். நெடுவேள் ஆவி முருகனைப் போல் நல்ல போர்த் திறமை உடையவன் என்பது இதன் கருத்தாகும்.

இவ்வாறு போருடற்றும் பேராற்றலும், போர்த் திறமையும், கடுஞ்சினமும், வெற்றி வாய்ப்பும், நினைத்ததை முடிக்கும் சிறப்பும் உடையவன் என்று முருகன் புகழப் படுகின்றான். இவற்றால் அக்கால வீரர்களுக்கு — அழகிலும் வீரத்திலும் — ஒரு மேல்வரிச் சட்டமாக முருகன் கருதப்பட்டான் என இலக்கியங்கள் சான்று பகர்கின்றன. முருகன் வள்ளி காதல் வாழ்வும் — களவு மணமும் தமிழ் அகத்திணை மரபுக்குத் தக்கதொரு எடுத்துக்காட்டாயின.

**வெறியாட்டும் அதன் உட்பொருளும்**

'வெறியாட்டு' என்னும் நிகழ்ச்சி குறிஞ்சிநில மக்களிடையே வழக்காற்றிலிருந்து வந்தது. கட்டுவிச்சியோ வேலனோ (சாமியாடி) வெறியாட்டை நிகழ்த்துவர். அக்காலத்தில் ஒரு கன்னிப் பெண் சிறிது நோயுற்றாலும் 'அதனை எக்காரணத்தால் வந்தது?' என ஆராய்வர். பெரும்பாலும் கன்னிப் பருவத்தில் — இளமையில் காதல் எனும் மனநோய்தான் ஏற்படும். அதனால் உடல் சிறிது சிறிதாக மெலிவுறும். வேறொரு விதமாகவும் கன்னியர்க்கு நோய் ஏற்படக் கூடும் என்பர். அஃதாவது, பூப்பெய்திய பெண்கள் நடுநிசி, நண்பகல் போன்ற நேரங்களில் தனிமையில் சென்றால் பேய் முதலிய தீண்டி வருத்தும் தெய்வங்களால் அணங்குறுவர் என்று கருதுவர்.

சங்க காலத்தில் கன்னிப்பெண் உற்ற காதல் நோய் — அறியப்படாத நிலையில், முருகனால் வந்த நோயோ என்று ஐயத்திற்கு உரியதாகியது. இதனை 'முருகன் ஆர் அணங்கு' — 'முருகன் அணங்கியதால் வந்துற்ற நோய்' என்று தமிழ் இலக்கியம் பேசும்.

பெண்ணுல் காதல் நோயாளனுகிய தலைவன் 'அணங்குகொல்' என்று அவளைத் தீண்டி வருத்தும் தெய்வம் எனக் கொண்டு ஐயுற்றுக் கூறுவான். அது போலத் தலைவியுற்ற காதல் நோயை அவளே கூறுவதில்லையாதலின், அவளுடைய தாய் இது "முருகன் ஆர் அணங்கு" என ஐயுற்றுச் சிந்திப்பாள். இவற்றில் புராணக் கதையின் நம்பவியலாத் தன்மை இருப்பினும் ஓர் அடிப்படையுண்மை அடித்தளத்தில் இருக்கும் ஒற்றுமை நயத்தை நாம் உணர்தல் வேண்டும். ஆணுக்குக் காதல் நோய் ஏற்படும் பொழுது அது 'அணங்கு' என்ற பெண் தெய்வத்தால் வந்ததோ என்றும் பெண்ணுக்குக் காதல் நோய் ஏற்படும் பொழுது அது 'முருகன்' என்ற ஆண் தெய்வத்தால் வந்ததோ என்றும் ஐயுறுவானேன்? அணங்கும் அழகு மிக்க தீண்டி வருத்தும் தெய்வம்-முருகனும் அழகு மிக்க ஆற்றலுடைய தெய்வம். எனவே மனித இனத்தால் வந்ததெனினும் தெய்வீக ஆற்றலை ஏற்றியுரைக்கும் மனித மனப்பண்பால் இவை இங்ஙனம் மரபு வழியாக அமைந்தன எனலாம்.

காதல் நோய் மட்டுமே 'முருகனுல் வந்ததோ' என்று ஐயப்பட நேர்ந்தது எனில், அவற்றிடை ஒற்றுமை இருக்க வேண்டுமன்றோ? ஒரு பொருள் மற்றொன்று என்று ஐயப்பட நேர்வது அவற்றிடையே யுள்ள ஒற்றுமைக் கூறுகளாலேயேயாகும். 'குற்றியோ' மகனோ என்று ஐயம் ஏற்படுகிறது என்றால் அவை இரண்டிற்கும் ஒற்றுமை பல உள என்பது பெறப்படும். "பாம்போ, கயிறோ" என்ற ஐயத்திற்கு அவற்றிடையேயுள்ள ஒற்றுமையே காரணமாகும். காதல் நோயை முருகன் அணங்கியதால் வந்ததோ என்ற ஐயத்திற்கு இவற்றிடையேயுள்ள ஒற்றுமையே காரணமாகும். இரண்டும் மனநோய்கள். பருவக் கோளாறு காரணமாகவும் இளம் பெண் ஒருத்தி மனநோய்க்கு ஆளாகலாம். அதனையும் முருகன் அணங்கியதாகி உலகியலார் கொள்வர். ஆனல் தலைவன் மீது கொண்ட காதலால், தலைவி மெலிவுற, உண்மையறியாத தாய் "இது முருகனுல் வந்ததோ? என இந்நோய்களிடை ஒற்றுமை இருப்பதால் ஐயுற்று முருகனையே நோய் தீர்க்க வேண்டுவாள். 'வெறியாட்டு' நிகழ்த்த வேலனை அழைப்பாள்.

புராண வரலாறு அல்லது காப்பியக் கதையின்படி முருகனது பேரழகு கண்டு மயங்கிக் காதல் கொண்ட வள்ளி 'ஆரணங்குற்று' அல்லது அரிய மனநோயுற்று வாடி வதங்கினாள். அவளை அடையவொட்டாமல் பெற்றோரும் தமையன்மாரும் தடுத்தனர். பேராற்றலுடைய முருகன் அவளைச் 'சிறையெடுத்து' 'உடன்போக்கில்' அழைத்துச் சென்றான். தன்னை எதிர்த்தவர்களுடன் கடுஞ்சினத்தோடு போரிட்டு, யாவரையும் வென்று வள்ளியை மணந்தான். இந்தப் பழம் மரபுக்கதை வாழ்க்கையில் தோய்ந்து கிடந்ததால், தலைவி 'பாலும் உண்ணாளாய்ப் பழங்கண் கொண்டு'வாடத் தொடங்கியதும், இது வள்ளிக்கு வந்த நோய் போன்றது என்ற எண்ணம் சாதாரண வாழ்வில் நிழலாடுகிறது. அதிலிருந்து வள்ளிக்கு முருகனுல் வந்ததுபோன்று கன்னிப் பெண்ணுக்கு வீரன் ஒருவனுல் விளையும் நோயும் 'முருகனுல் வந்த நோயென்று' உட்பொருளாகப் பேசப்படலாயிற்று. இதிலிருந்துதான் காதல் நோயை, 'முருகன் ஆர் அணங்கு' என்று கருதவும், அதை நீக்குவதற்கு வெறியாட்டு எடுக்கவும் நேர்ந்தன எனலாம். ஒரு புராணக் கதைக் குறிப்பு (Myth), படிமப் பொருளோடு (Symbolic) ஆளப்படுவதை வளர்ச்சியுற்ற சமுதாயத்தில் சாதாரண மக்களிடமும் காணலாம் என்பதற்கு 'முருகனுல் வந்த நோயென்று' பேசப்பட்டது ஒரு சான்றாகும். இப்படிமப் பொருளாட்சி அவர்களையும் அறியாமல் உருவாவதுதான் வியப்பாகும்.

'வெறியாட்டு' எடுக்கிற நிலைமை வந்துவிட்டால், தலைவி அல்லது தோழி இது கற்புடைமைக்கு இழுக்காகும் என்று கருதி, குறிப்பாகவோ வெளிப்படையாகவோ 'தலைவன் மீது கொண்ட காதலே நோய்க்குக் காரணம்' என்று உண்மையைக் கூறி 'வெறி விலக்குவர்'. 'இதற்கு அறத்தொடுநிலை' என்று பெயர். தலைவி தன்

காதலனையே மணக்கும் வாய்ப்பு இதனல் கிட்டும். நோயும் அவளை விட்டு நீங்கும். இவ்வாறு முருகனை வேண்டும் வெறியாட்டு, அந்நோயினைப் பிறிதொரு வகையாகத் தீர்க்கின்றது. தலைவிக்கு வாழ்வு தருகிறது. எனவே முருகன் பற்றிய வரலாற்றில் எழுந்த, கற்பனையில் உருவான பழம் மரபுக் கதை (Myth) தமிழர் சமுதாயப் பண்பாட்டில் தோய்ந்திருந்தமையையும் அகத்திணைக் கவிதை மரபு ஒன்றிற்கு வித்தாகியமையையும் அறிந்து இன்புறுகின்ருேம்.

பிரமசாரி என்ற நற்றிணைப் புலவர் ஒருவர் தோழி கூற்ருக ஒரு பாடல் புனைந்துள்ளார். முருகன் கடவுளாதலின் ஒரு கன்னிப் பெண்ணிற்கு வந்த நோய் அவள் காதலனல் வந்ததேயன்றித் தன்னல் வந்ததன்று என்பதை அவன் முன்கூட்டியே நன்கு அறிந்திருத்தல் வேண்டும். இருந்தும் தாய் தெரியாமல் ஏற்பாடு செய்ய, வேலன் அறியாமல் வெறியாட, முருகனும் உண்மை உணராதவன்போல் வருவானகின் அவன் கடவுளாயினும் அறியாமை உடையவனே எனலாம். இவ்வாறு அத்தோழி வேடிக்கையாகச் சிந்தித்து முருகனையே அழைத்துக் கூறுவதாகப் பாடல் அமைந்துளது.

"....................................நாடன்
மார்புதர வந்த படர்மலி அருநோய்
நின்அணங்கு அன்மை அறிந்தும் அண்ணுந்து
கார்நறுங் கடம்பின் கண்ணி சூடி
வேலன் வேண்ட வெறிமனை வந்தோய்!
கடவுளாயினும் ஆக,
மடவை மன்ற வாழிய முருகே!"
(நற்: 34)

இவ்வாறு தோழி வெளிப்படையாகக் கூறி வெறி விலக்குகிருள். உண்மையறிந்த பெற்ருேர் தலைவியை அவளுடைய காதலனுக்கே மணம் முடித்து மகிழ்கின்றனர். எனவே முருகன் புறவாழ்விலும் 'வெற்றி தரும் கடவுளாகப் போற்றப்பட்டான்; அக வாழ்விலும் 'வெற்றி தந்து' மணம் முடிக்கும் கடவுளாக விளங்கினன் என்ற உண்மையை அறிகின்ருேம்.



அந்திப்போ தழகுறவே நடித்தருளும்
வழித்துணைவ ரருளும் கோவை
வந்திப்போர் நினைத்தபடி மயிலேறி
அயிலெடுத்து வருஞ்செவ் வேளைச்
சந்திப்போம் மலர்சொரிவோம் புகழ்ந்திடுவோம்
அவன்கமலத் தாளும் தோளும்
சிந்திப்போம் ஆதலினல் நமதுபழ
வினைகளெல்லாம் சிந்திப் போமே.

— திருவிரிஞ்சைப் புராணம்

# உறுப்புகள் காட்டும் உண்மைகள்

திரு. வை. தட்சிணாமூர்த்தி

அப்பரடிகள் கூத்தப்பிரானின் திருக் கூத்துக் காட்சியைப் பாடும்போது[1] "குனித்த புருவம், கொவ்வைச் செவ்வாய், புன்சிரிப்பு, பனித்தசடை, பவளமேனி, வெண்ணீறு, எடுத்த பொற்பாதம் முதலிய திருமேனியழகை நோக்கினர்க்கு மனிதப் பிறவியே இம்மாநிலத்து வேண்டாம்'' என்பார். உண்மை விளக்கம் தந்த மன வாசகம் கடந்தார்[2], "இறைவனது திருக் கைகளில் திகழும் துடி, அங்கி, முத்திரை களான வீசுகரம், அபயகரம் அடிக்கீழ் அழுத்தப்படும் முயலகன்'' முதலியவற்றைக் குறிப்பிடுகின்றார். திருவாலங்காட்டில் எம்பிரான்[3] புனல்சூடி, இளவெண் திங்கள் முதிர, அரவு பூண்டாடிய வேடங்காட்டுகின் றார் என்கிறது ஆளுடைய பிள்ளையார் அருளிய தேவாரம். திருக்குற்றாலத்துறை கூத்தப்பிரான்[4] எண்தோள் வீசி நின்று, யானை உரிபோர்த்து ஆடும் கோலத்தைத் திருநாவுக்கரசர் எடுத்துரைத்தார். சிதம் பரநாதர் பதிகம் கூத்துக்காலத்தில்[5] விரித்த செஞ்சடை, வதன சந்திரன், கமலநயனம் தமருகம், வீசுசெங்கை, புலிஅதள், அபய கரம், தோல், நூல், பவளமேனி, உரித்தகரி முதலியன ஆடுவதைக் காட்டுகின்றது.

எப்பொருட்டும் எவ்வுயிர்க்கும் உள்ள கத்தும் புறத்தும் இயல் உண்மை அறிவின்ப வடிவாகித் திருநடம் புரியும் கூத்தப்பிரா னின் ஒவ்வொரு உறுப்பின் ஒவ்வொரு செயலுக்கும் சான்றோர்கள் பொருள் பகன்றுள்ளனர். அவ்வறிவின்பத்தைக் காண்டல் இனித்தமுடையது. இனி உறுப்பு நல உண்மைகளைத் துய்ப்போம்.

### பனித்த சடை :

கூத்தப்பிரானின் பனித்த சடை இறை வன் பற்றற்ற பரமயோகி, உயர்ந்த குளிர் நிலையன் என்பதைக் காட்டுவது[6]. நச்சரவு, இளம்பிறை, தூநீர்க்கங்கை முதலியவற் றிற்கு அடைக்கலம் தந்தமைபோல் உயிர் கட்கும் அருளும் தயவினை இத்திருமுடி சுட்டும். பாம்பொடு திங்கள் பகைதீர்த்த பண்பையும் இம்முடி காட்டுகின்றது. திரு மந்திரம் "நுண்சிகை ஞானமாம்"[7] எனச் செப்பும்.

### குனித்த புருவம் :

உயிர்கள், உடல், கருவி, கரணம், புவனம், போகம் ஆகியவை பெற்றும் அவற் றின் பயன் கொள்ளாது நழுவுகின்றனவே என்றவன் கருணையால்[8] எழுந்த கவலை யால் புருவவில் வளைந்தது.

### கொவ்வைச் செவ்வாயின் புன்முறுவல் :

நாட்டங்கொண்டு வந்த நல்லோரை எண்ணி மகிழ்வாய் வருவது.

### பவளமேனி :

ஐம்பூதங்களுள் ஒன்றுய ஆகாயமே[9] இறைவன் திருமேனி எனத் திருமந்திரம் செப்பும்.

**தவளநீறு :**

ஐம்பூதப் புணர்ப்பினலாய பருப் பொருள்கள் பெருக்கச் சுருக்கத் தன்மையன. எல்லாப் பொருள்களின் உண்மைத் தூய்மைநிலை உணர்த்துவது சாம்பரேயாகும். அகத்தூய்மையினைத் திருநீறு காட்டும். இறைவன் தன்னைச் சார்ந்த உயிர்களின் மும்மல அழுக்கை எரித்துத் தூய்மை செய்து தன் வண்ணமாய் ஒளிரச் செய்வதன் குறியாகும் இது[10]. திருமூலர் இதனைக் கங்காளன் பூசும் கவசத் திருநீறு[11] என்பார்.

**தூக்கிய திருவடி :**

தூக்கிய திருவடி மலநீங்கிய ஆன்மாவைக் குறிக்கும் என்பர். குஞ்சிதபாதம் எனப்படும் தூக்கிய திருவடியால் அருளிப்பாடு நடைபெறுகிறதென்பதைத் திருமந்திரமும்[12] நான்ற திருவடியால் அருளாகிய முத்தி இயல்கிறதென்பதை உண்மை விளக்கமும் விளம்பும்[13]. "இணையார் திருவடி என் தலைமேல் வைத்தலுமே. துணையான சுற்றங்கள் அத்தனையும் துறந்தேன்" என மணிவாசகர்[14] மொழிந்தார். இறைவனது திருவடிகளைப் பொதுவாக அறிவொளிகள் என்பர்.

**ஊன்றிய திருவடி :**

நிலையாக ஊன்றிய வலது திருவடியினைக் கருவின் மிதித்த கமலப்பதமெனத் திருமந்திரம்[15] புகலும். இவ்வூன்றிய திருவடி திரோதம் எனப்படும் மறைத்தல் தொழிலைப் புரியும் உறுப்பாகும் என்பதை உண்மை விளக்கமும் திருமந்திரமும்[16] உரைக்கும். இருவினையொப்புக்கு இத்திருவடி வழியாயமைகின்றது.

**துடி :**

வலது பொற்கையில் உடுக்கையாகிய துடி தோன்றுகிறது. தோற்றமாகிய படைத்தல் தொழில் துடியின் ஒலியால் அமைகிறது என்பதை உண்மை விளக்கம் கழறும்[17]. நாத தத்துவமே உலகத்தோற்றமாதலால் துடியில் தோற்றமென்றூர். துடியோசையினை ஓங்கார ஓசை என்பர்.

**அங்கி :**

"அங்கி தன்னில் அறையிற் சங்காரம்" எனத் திருமந்திரமும்[18], சாற்றியிடும் அங்கியிலே சங்காரம்[19] என உண்மை விளக்கமும் கூறுகின்றன. இறைவனது இடது திருக்கையிற்றிகழும் அங்கி துடைத்தல் தொழிற் கருவியாகும். இதனை மெய்யுணர்வுத் தீ எனவும் திருமந்திரம் புகலும்[20].

**வீசுகரம் :**

சீயென்றுதறிய கை[21] எனக் குறிப்பிடப் படுகின்ற இடது திருக்கையினை வீசுகரம் என்பர். நான்ற மலர்ப்பதமாகிய தூக்கிய திருவடியினைச் சுட்டியவாறு இதன் ஒரு விரல் இருக்கும். குமரகுருபரர் இச்செயலினை "ஒரு கால் காட்டி கை அமைத்து நாதனுர் செய்யும் நடம்" என்பர். ஒரு கால் இறைவன் திருவடியினை வழிபட்டாலே போதும் என்ற குறிப்பை இது காட்டும்.

**அமைந்த கரம் :**

அருந்தவத்தாரைத் தன் திருவடி சேர வாவென்றழைத்து அணைத்துக் கொண்ட பொருந்து முறையது. இவ்வலது அஞ்சலிக்கை அமைத்தல் திதியாம் எனச் சுட்டித் திருமந்திரனுர் இத்திருக்கை காத்தல் தொழிற்குரித்தென்பார்[22]. இதனை உண்மை விளக்கமும் "திதி அமைப்பில்" எனச் சாற்றும்[23].

**முயலகன் :**

கரிய நிறமுடைய முயலகன் என்பது நன்னெறி நான்மையின் கண் முயல்வுறும் நல்லாரை முயலவொட்டாது தடுக்கும் ஆணவம்[24]. இவ்வாணவத்தால் மருள் உளதாகும். அதனை அடிக்கீழ் அமுக்குவது ஆண்டவன் திருச்செயல். முயலகனென்னும் இயல் பெருங்கரும்பை இறைவன் அடியிட்டு அரைத்து அகவயிரங் கரைவித்த வரலாற்றினைப் பட்டினத்துப் பிள்ளையாரும் திருக்கழுமல மும்மணிக் கோவையில் பகர்ந்துள்ளார்.

**கங்கை :**

விழுப்புனலாகிய கங்கையினைப் படைத்தற்காம் ஆதிப் பெருந்திரு எனத்

திருமந்திரம் புகலும்[26]. இறைவன் திரு முடிக்கண் நிலைத்திருக்கும் நிலையாற்றல் என்பதுமுண்டு. இதனைக் "கொண்டல் வரைநின் றிழிந்த குலக்கொடி" என்பர். நிலைப்பாற்றலைக் கூறுவதால் பெண்பாலாக் கினர் என்பர்.

**இள வெண் திங்கள் :**

பாதி மதியினை ஆருயிர் என்பர் திருமூலர் (2705)

**அரவு :**

அரவுகள் குண்டலினி ஆற்றலைக்குறிக் கும் என்பர். காமிகாகமம் நாகசக்தியினைக் குறிக்கும் என்பர்.

உயிர் தூலவுடம்பினை விட்டுச் செல்லு தலைப் பாம்பு தன் சட்டையினைக் கழற்று தற்குக் காட்டாகச் சிவஞானபோதம் பதினொன்காம் வெண்பா கூறும். "அரைமிசை அஞ்சுபோலரை யார்த்தீன்றத்துவம்" என அப்பர் புகன்றார். பாம்பினை ஜீவாத்மா என்பாருமுண்டு. பரமாத்மாவாய பரமன் மேல் ஜீவாத்மா தவழ்வதைக் குறிக்கும் என்பர்.

**தோள்கள் :**

எண்திசைகளும் இறைவனது கைகளாகத் திகழ்கின்றன. "ஆகாசமாம் திசையெட்டும் திருக்கைகள்" எனத் திரு மந்திரம் புகலும்[27]. "எண்டிசை எண்டோள்" எனப் பட்டினத்தடிகளும், "திசை தோள்" எனச் சேரமான் பெருமாள் நாயனாரும் புகன்றுள்ளனர்.

**முக்கண்கள் :**

மூன்று ஒளிப்பொருள்களாய ஞாயிறு, திங்கள், தீ என்ற மூன்றும் இறைவனது முக்கண்களாகும்[28]. இவை இச்சா, கிரியா, ஞானசக்திகளைக் குறிக்கும் எனக் காமிகா கமம் கூறும். இறைவனது இடது திருக்கண் பெண்மை குறிப்பதாகையால் நீலநிற முடைத்தாய்த் திகழும். திருமந்திரம் இதனை "மோகாய முக்கண்கள் மூன்றொளி தானாக" எனும்[29].

**புலித் தோல் :**

தாருக வனத்து முனிவர்கள் ஏவிய கொடிய புலியின் தோலினை இறைவன் அரையில் உடுத்தார். நஞ்சுண்ட கண்டர்க்குக் கொடும்புலியையும் அரை அணியும் ஆடையாக்கிக் கொள்ளும் தன்மை உண்டென்பதைக் குறித்ததாம்.

**தோல் (கேடயம்)**

தடுப்பாற்றலைக் காட்டக் கேடயம் இருந்ததெனலாம். அருளாளராய இறை வன் உயிர்கட்குத் துன்பம் வராமை தடுக் கும் தூயன் என்பதைக் காட்டும் அறிகுறி யாகலாம்.

**முத்தலைவேல் :**

திரிசூலமாகிய முத்தலைவேல் ஆன்மா வின் முக்குணங்களைக் குறிக்கும்.

**பாசக் கயிறு :**

உயிர்களை வினை செய்வதில் அழுத்தி இருவினையொப்பும் மலபரிபாகமும் ஏற்படச் செய்வதன் அறிகுறி பாசக் கயிறு எனக் காமிகாகமம் கழறும்.

**கோடரி :**

கோடரி இறைவனது பேராற்றலைக் குறிக்கும்.

**அக்குமணி :**

அனைத்துயிர்கள் மாட்டும் வைக்கும் கண்ணோட்டத்தின் அடையாளமாகத் திகழ் வது அக்குமணி என்னும் சிவமணி[30]. இதனைக் கண்மணிமாலை திரு அடையாள மாலை என்றெல்லாம் மொழிவர். ஞான சம்பந்த அடிகள் "நெக்குளார்வங்கொடு அக்குமாலை கொண்டங்கையில் எண்ணுவார் தக்க வானவராய்த் தகுவிப்பது" என்பார்கள்.

**நான்முகன் மண்டையோடு :**

அழிப்பும் மாயா காரியப் பொருட் களும் சிவபெருமான் கையதேல் அழிவினை எய்தாதெனும் பெற்றி காட்டும் சின்ன மாகவும்,[31] படைத்தல் தொழில் செய்தார்க்

கும் இறுதியுண்டென்பதைக் காட்டுவதாக வும் கழறலாம்.

**சிலம்பு :**

நான்மறைகளும் சிலம்பாக நின்ருெலிக் கின்றன என மறைச் சிலம்பொலி என்ருர் திருமூலர்.[32] அச் சிலம்பொலியின் விரிவு திருமுறைப் பாடல்களும் திரு நடனங்களும் திருவடிப் பேறெய்த அழைக்கும் நல்வர வொலியென்பர்.

**காதுகள் :**

ஓங்காரமே இறைவனது திருக்காது களாக உள என்பர்.

**உடல் :**

"ஆகாசமாமுடல்'' என்னும் திரு மந்திரம்.[33] "தீயுறு செம்மை வெளுப்பொடு மத்தன்மை எனக்கூறி உடல் சிவத்தன்மை யைக் குறித்ததென்பர்.'' விசும்பே உடம் பென்ருர் "பட்டினத்தடிகள்.'' "விண்ணவர் முதலா வேரேர் இடமாக் கொண்டுறை விசும்பே'' என்றும் அவர்கள் மொழி வார்கள்.

**அரங்கம் :**

திருமந்திரம் "ஆகாய மன்னுள் நடஞ் செய்கின்ருனன்றே"[34] எனப் புகலும். அறிவுப் பேரொளியாய பெருவெளியில் இறைவன் அறிவுப் பெரு நடம்புரிவதை இது குறிக்கும். "ஆனந்தம் ஆடரங்கம்'' என்ற திருமூலர் வாக்கும் போற்றத் தக்கது.[35]

**சிவகாமி :**

சிவ+காமி சிவனுர் விழையும் விருப் பமே சிவானந்த சக்தியாகிய சிவகாமி. "ஒளியாம் பரமும் உளதாம் பரமும் அளி யார் சிவகாமியாகும்'' என்பது திருமந் திரம்.[36] அறிவுப் பேரொளியாய் விளங்கும் முழு முதலும் என்றும் மாரு உண்மை யாகத் திகழும் முழு முதலும் பேரருள் நிறைந்த சிவகாமியாகும். பெருமான் செய் யும் திருக்கூத்தினைக் கண்டு வழிபட்ட திருப்பேற்றின் பயன் சிவகாமி என்பர்.

**ஊமத்த மலர் :**

உன்மத்தமாய மிக்க களிப்பைக் காட்டு வது ஊமத்த மலர்.[37]

**மான் :**

"மானின் கண் வானுகி" என்ருர் திருமூலர். மான் அசுத்த மாயையைக் குறிக்கும்.[38]

கலையறிவு தோன்றும் கற்பனையில் வந்த கூத்தப்பெருமானின் உறுப்புகட்கு நூலோர் நவின்ற நுண்பொருள் தன்மைகள் சித்தாந்த நலம் மலியச் செய்யும் சிறப் புடைத்தெனலாம்.

---

**அடிக்குறிப்புகள் :**

1. "குனித்த புருவமுங் கொவ்வைச் செவ்வாயிற்
குமிண்சிரிப்பும்
பனித்த சடையும் பவளம்போல் மேனியிற்
பால்வெண்ணீறும்
இனித்த முடைய எடுத்த பொற்பாதமுங்
காணப்பெற்ருல்
மனித்தப் பிறவியும் வேண்டுவதேயிந்த
மாநிலத்தே"

2. "தோற்றம் துடியதனில்'' உண்மை விளக்கம் 35.

3. "ஈர்க்கும் புனல்சூடி இளவெண்திங்கள் முதிரவே
பார்க்கும் அரவுபூண் டாடிவேடம் பயின்ருரும்
கார்க்கொள் செடிமுல்லை குருந்தமேறிக்
கருந்தேன் மொய்த்து
ஆர்க்கும் பழையதூர் ஆலங்காட்டெம் அடிகளே"

4. "கண்காள் காண்மின்களோ — கடல்
நஞ்சுண்ட கண்டன் தன்னை
எண்தோள் வீசிநின்ருடும் பிரான் தன்னைக்
கண்காள் காண்மின்களோ".

"வாயே வாழ்த்து கண்டாய் — மத
யானை உரிபோர்த்துப்
பேய் வாழ் காட்டகத்தாடும் பிரான் தன்னை
வாயே வாழ்த்துகண்டாய்."

5. "விரித்த செஞ்சடையாட வதன சந் திரனுட
விரிகமல நயனம் ஆட
வெண்முறுவல் நிலவாட நண்ணுதம ருகம் ஆட
வீசுமொரு செங்கை ஆடத்
தரித்தபுலி அதளாட அபயகரம் ஆட இரு
தங்குதோல் ஊசல் ஆடத்

தாங்கு நூல், ஆடமேல் ஓங்குநீர் ஆடவொளிர்
தண்பவள மேனி ஆட
உரித்தகரி உரிஆட உரககங் கணமாட
உபய பரிபுரமும் ஆட"

6. "நடமாடும் நம்பன்" சே. த. இராமலிங்கம் பிள்ளை சைவ சித்தாந்த மகா சமாஜப் பொன்விழா மலர்.

7. திருமந்திரம்

8. நடமாடும் நம்பன்

9. திருமந்திரம் 2728 "ஆகாச மாமுடலங்கார்"

10. திருநீறும் சிவமணியும் ப. இராமநாதப் பிள்ளை

11. திருமந்திரம் 1638 "கங்காளன் பூசுங் கவசத் திருநீற்றை"

12. திருமந்திரம் 2753

"அரன்துடி தோற்றம் அமைத்தல் திதியாம்
அரன் அங்கி தன்னில் அறையிற் சங்காரம்
அரனுற் றணைப்பில் அமருந் திரோதாயி
அரனடி யென்றும் அனுக்கிர கம்மே"

13. உண்மை விளக்கம் 35

14. திருவாசகம் திருப்பூவல்லி

"இணையார் திருவடிகள் என்தலைமேல் வைத்தலுமே
துணையான சுற்றங்கள் அத்தனையும் துறந்தொழிந்தேன்"

15. திருமந்திரம் 2752

"மருவுந் துடியுடன் மன்னிய வீச்சு
மருவிய அப்பும் அனலுடன் கையுங்
கருவின் மிதித்த கமலப் பதமும்
உருவில் சிவாய நமவென வோதே"

16. திருமந்திரம் 2753,
உண்மை விளக்கம் 35

"தோற்றம் துடியதனில் தோயும் திதி அமைப்பில்
சாற்றியிடும் அங்கியிலே சங்காரம் - ஊற்றமா
ஊன்று மலர்ப்பதத்தில் உற்றதிரோ தம்முத்தி
நான்ற மலர்ப்பதத்தே நாடு"

17. உண்மை விளக்கம் 35

18. திருமந்திரம் 2753

19. உண்மை விளக்கம் 35

20. திருமந்திரம் 407 "அங்கிச்செய் தீசன்"

21. திருமந்திரம் 2751

22. திருமந்திரம் 2753

23. உண்மை விளக்கம் 35

24. திருமந்திரம் 2728

25. திருக் கழுமல மும்மணிக் கோவை

"முயலக னென்று மியல்பெருங் கரும்பை
உதிர மென்னும் முதிர்சா றெழுக
நகையெனு முத்தந் தொமையுறத் தோன்றச்
சுந்தரம் பதமெனும் எந்திர ஆலையிட்டு
அரைத்தக வயிரங் கரைத்தவித் தகனே."

26. திருமந்திரம் 410

27. திருமந்திரம் 2728

28. திருமந்திரம் 2735

29. திருமந்திரம் 2728

30. திருநீறும் சிவமணியும்

31. திருமந்திரம் 357

32. திருமந்திரம் 2735

33. திருமந்திரம் 2728

34. திருமந்திரம் 2728

35. திருமந்திரம் 2679

36. திருமந்திரம் 2680

37. திருமந்திரம் 2705

38. திருமந்திரம் 385



# 'PAZHAM...... NEE'

*( Ancient Past — Present — Future )*





**Thiru. S. VENKATACHALAM**

**PRAYER**

1. **'Kalpadrumam pranavatham kamalarunabam**
**Skandam bujathvayam manamayamehavatram**
**Kathyayani priyasutham kadhibathavamam**
**Koubhina dhanda dhara dakshina hasthameede'**
*( Palani Andavar Dyanam — Sanskrit Verse in English )*

*( We Pray Lord Muruga who is*
*Kalapagavriksham to those who prostrate*
*Attractive like Lotus flowers*
*Blessing with his two arms*
*Removing the illness of those who approach*
*Having the Charming face*
*Puthira of Kathyayani*
*Having his left hand on his hip*
*Wearing Koubina*
*Holding the Danda on his right hand )*

2. **'Thiruvadiyum thandayum silambum silambuduruva**
**Poruvadivelum kadambum thadampuyam arirandum**
**Maruvadivana vathanankal arum malar kankalum**
**Guruvadivay vandhen ullam kulira kudikondave'**

( திருவடியும் தண்டையும் சிலம்பும் சிலம்புடுருவ
பொருவடிவேலும் கடம்பும், தடம்புயம் ஆறிரண்டும்
மருவடிவான வதனங்கள் ஆறும் மலர்க்கண்களும்
குருவடிவாய் வந்தென் உள்ளம் குளிரக்குடிகொண்டவே )

The famous Palani Kshetra is one of the most enchanting places where LORD MURUGA is the presiding deity with its fertile and beautiful surrounding landscape the panorama of the Hill temple on the crest of the Shapely hill, the meandering steps leading to the top, the Vasantha Mandapam and the Majesty of the premier tower. All these combined with the Holy waters of River Shanmugha flowing down from the

loftly Hills forming as a background to the Holy Palani hill and 'Saravana Poigai' and several others are bound to lure the Baktha visiting the place and will certainly make him happy. Added to this the Hill has the background of wonderful scenic beauty and there is no comparision to this. The climax of the visit is the unforgettable Darshan of Lord Muruga at the top of the Hill standing in the Arthamantabham or Mahamantabham, which penetrates deeply into the hearts of every devotee and never allows him to go from the superb standing posture of the Lord and he feels as if the Lord has asked him to stay on and beckoned him to closer quarters. The soul stirring prayer of 'Arohara' rends the precincts and the sweet singing of Thirupughazh adds to the sublimity of the occasion while the silent pilgrims are immersed in devotion to God. The sight of these innumerable pilgrims from far and wide is equivalant to prayer to God. Adjacent to this Hill on its eastern side there is another Hill by name 'Idumbar Hill' and if one can imagine a cross bar in 'between the two hills it would look like a 'Kavadi'.

**Ancient Past — Mythology:** Everyone is aware of the Mythological thesis of how Lord Subramania came to Thiruvavinankudi and when Lord Siva and Goddess Parvathi came there, Lord Siva swelled in heart and told that HE (Lord Subramania) is himself a fruit and no fruit is necessary for him calling—him 'pazham Nee', pazham Nee, pazham Nee.

It is not to be inferred from this Mythological theory that Lord Subramania was short-tempered and got angry for a small fruit. Like the other great Mythological events and epics, this has a great inward impact and a lessen to the Humanity at large. Every act of God is for the Humanity and every act of humanbeings is controlled by God and nothing can happen without God in this world (Avanandri Or Anuvum Asaiyathu). The greatness of 'Matha and Pitha' (mother and father), the love for the devotees, the establishment of righteousness in this world created by the Lord are the various facts which are signified by such events in mythology and they are the most significant. Lord stated 'whenever the righteousness is destroyed and unrighteousness prevails, 'I WILL DESCENT IN THIS WORLD'.

**Presence of Two Hills:** (Palani Hill and Idumban Hill)

Lord Subramania after vanguishing the evil of Surapadman and others of his class saved Indra and the other Devars. Idumbasura and his wife escaped and were under the mercy and protection of the Sage Agasthiya. Idumbasura, on the instructions of Sage Agasthiya, had lifted the two hills forming a Kavadi and commenced his journey towards Pothigai Malai. On his way he placed the hills in between Thiruavinankudi and Varaha Malai, when Lord Muruga in the form of a child began to play near a 'KURA TREE'. When Idumba tried to lift the mountains again he could not and not being aware as to who was the child Idumba tried all means to lift the hills, but in vain. Then Agasthiya also came there. At last Agasthiya attained 'Gnana' and found that the child was Lord Muruga and composed songs on Muruga. Then the Lord pardoned Idumba for all his misdeeds and now the special Sannadhi of Idumban could be seen by the devotees on the way to the Hill temple. The significance of this is that the Lord wanted to destroy the evil and make us realise the absolute and attain Moksha. If people realise their mistakes by the punishment and suffering and ultimately offer themselves to God, they are blessed. If everyone realises this main feature in everything the evil would be minimised in the world.

**PRESENT:** Leaving the above Mythological and philosophical matter to the background, the existence of the temple and devotion to Lord Muruga in Palani Hills have increased and is increasing day by day. So the administration of temple is improved and adopted to the advancing trends. Now the entire administration is vested with the Tamil Nadu Hindu Religious and Charitable Endowments Board, a Statutory body who in turn administer the temple through their Officer and a Board of Trustees.

In the course of the management, certain fee restrictions are placed to maintain serenity, calmness and order in the temple. This is a temple where, if it is opened in the morning for the 'VISVA-ROOPA DARSHAN' remains open till the 'RAKKALAM' is over. The deity being an 'ABISHEKAMOORTHY' the pouring of Milk, Panchamirtham, 'Vibhoothi', Panneer etc. etc. day in and dayout by pilgrims from far and wide, certain regulations are imposed in order to please the pilgrims to the maximum extent possible.

The funds of the Temple are not kept idle and it would be seen from the fact that the Devasthanam is running Colleges both for men and women, Hospitals, Schools for children. There is a Nathaswaram School, a school for deaf and dumb and an orphanage and other institutions. The offerings of the people are used for the good of the people themselves.

**FUTURE:** Palani is growing town and the future is extremely bright and the major responsibility to feed the needs of the visitors and pilgrims rests with the Devasthanam. A lot more remains to be done for the welfare of the pilgrims at the same time maintaining the serenity and sanctity of the temple and its premises. The proposed 'Thirupani' in the temple and its premises is a welcoming feature and it is the duty of everyone in Palani Town and outside to get to know the proposals and contribute their mite to the holy task.

The temple administration has to think of clearing the bushes etc. between the bottom of the Hill and the Giri Veedhi and make provisions for parking of cars and tourist buses, free or at a nominal rate and lodging facilities all round the Hill as the atmosphere around here is very healthy. The Devasthanam should also try to provide free lodging facilities for the poor. Inadequacy of water facility is another problem of the pilgrims. So sinking of a number of wells all round the Giri Veedhi area and providing distribution facilities is a thing which should be thought of.

The road to Kodai Hills via Palani which is under construction and the coming up of the Palar Porundalar dam would attract more visitors and tourists and their visits would be a combined one both on the religious side and otherwise. Hence it is the bounden duty to think of the future and provide more facilities. To add to the attraction ways and means could be thought of for a visit to Idumban Hill also either by road from Giri Veedhi or by a Rope way from the Palani Hill, which would attract more people and also help the administration financially in carrying on the Thiruppani to the Lord.

All these and others would certainly make the Humanity to think of our ancient traditions and past glory and the great things that have been left and to keep up the great traditions and religious outlook and think of the future and act upto the same to maintain them in all its resplendent glory and gift it to the future generations to come. It is all in the Hands of LORD MURUGA.



# அருள்மிகு கோட்டை பெரிய மாரியம்மன் திருக்கோவில்

## சேலம் - 1

சேலம் நகரின் மத்திய பாகத்தில் குடிகொண்டிருக்கும் சேலம் கோட்டை அருள்மிகு பெரிய மாரியம்மன் திருக்கோவில் மிகப் பழமையானது. ஒவ்வொரு வருடமும் ஆடி மாதத்தில் நடைபெறும் பெருவிழாவிற்கு லக்ஷக் கணக்கான மக்கள் ஒருங்கே கூடுகின்றார்கள். "ஆடிப் பெருவிழா" மிகவும் சிறப்பான முறையில் நடைபெறுகின்றது. சமீப காலத்தில் நகர மக்கள் பெருமைப்படத்தக்க அளவில் இக்கோவிலின் வெளி மண்டபம் ஒரு லக்ஷம் ரூபாய் செலவில் கட்டி முடிக்கப்பட்டுள்ளது. சுமார் ரூபாய் நாற்ப தாயிரத்தில் இந்த வெளி மண்டபத்திற்கு இரும்பு தள்ளுகதவுகள் பொருத்தி வேலைகள் நடைபெற்றுக்கொண்டு இருக்கின்றன.

மேலும் வரும் பக்தர்கள் குளிப்பதற்குக் குளியல் அறைகள் முதலியன வும் கட்டப்பட்டுள்ளன. குடிதண்ணீர் வசதியும் செய்யப்பட்டிருக்கின்றது. தற்போது இந்தத் திருக்கோவிலின் வருமானம் நகரம் பிரமிக்கத்தக்க வகை யில் மிகவும் உயர்ந்து ரூபாய் ஒரு லட்சம் வரை வருகிறது. கோவிலுக்கு வரும் வழியில் இருபுறமும் நுழைவு வாயில்களும் திருமண மண்டபம் முதலிய னவும் கட்ட ஏற்பாடுகள் நடைபெற்று வருகின்றன. அம்மையான மாரியம் மன் அருளுடைய சுடராய், ஞானத்தின் சக்தியாய், அருந்தவத்திற்கரசியாய், பொருளுடைக் கலையாய், யோகத்தின் பொலிவாய் அடியவர்தம் சிந்தையுள் எந்நாளும் குடிகொண்ட செல்வமாய், சிவசக்தியாய் விளங்கும் மிகவும் சக்தி வாய்ந்த தெய்வமாகும்.

இங்ஙனம்,

என். கே. ராமஸ்வாமி, பி. ஏ.
செயல் அலுவலர்
அருள்மிகு கோட்டை
பெரிய மாரியம்மன் திருக்கோவில்
சேலம் - 1
திருக்கோவில் போன் நெ. 3845

திரு. பி. கோவிந்தசாமி, எம். சி.
தலைவர், அறங்காவலர் குழு
திரு. கே. எஸ். மாணிக்கம்
திரு. ஏ. ஆர். ரங்கசாமி செட்டியார்
திரு. ஆண்டவர் கிருஷ்ணன்
திரு. ஆர். விஸ்வநாதன்
அறங்காவலர்கள்

# ஏரகத்தில்
# எழிற் குமரன்





**திரு. எஸ். மகாலிங்கம்**

நீரகத் தேதனை நினையும் அன்பினோர்
பேரகத் தலமரும் பிறவி நீக்கிடும்
தாரகத் துருவமாந் தலைமை யெய்திய
ஏரகத் தறுமுகன் அடிகள் ஏத்துவாம்.

**ஏ**ரக வெற்பெனும் அற்புதமிக்க சுவாமிமலை, படைவீடுகள் ஆறினுள் நான்காவதாக விளங்கும் மேன்மையுடையது. தமிழகத்தில் சோழ நன்னாடான தஞ்சை மாவட்டம் தென்னாட்டில் நெற்களஞ்சியமாக விளங்கும் சிறப்புடையது. இத் தஞ்சை மாவட்டத்திலே சிறந்து விளங்கும் முருகன் தலம் சுவாமிமலையே யாகும்.

நக்கீரர், முருகப்பெருமான் "பெரிது கந்து ஏரகத்து உறைதலும் உரியன்" எனத் திருமுருகாற்றுப்படையில் குறிப்பிடுகிறார்.

சுவாமிமலை என்பது திருப்பரங்குன்றம் முதலிய ஏனைய மலைகளைப் போன்று இயல்பான மலையன்று. காவிரிக்கரையில் வெண் மணற் குன்றில் அமைந்த கட்டு மலையாகும். எனவே முருகன் எழுந்தருளிய ஏனைய குன்றங்கள் போலன்றி வெண்மணலால் அமைந்த இக்குன்றினை நம் முன்னோர் "வெண்குன்று" என்ற பெயரால் போற்றி வந்துள்ளார்கள் எனத் தெரிகிறது.

"சீர்கெழு செந்திலும் செங்கோடும் வெண்குன்றும்
ஏரகமும் நீங்கா இறைவன்கை வேலன்றே
பாரிரும் பௌவத்தி னுள்புக்குப் பண்டொருநாட்
சூர்மா தடிந்த சுடரிலைய வெள்வேலே"

என வருகின்ற இளங்கோவடிகள் வாக்கினால் தெள்ளிதின் விளங்கும்.

குமாரக்கடவுள் மேதினியில் விளங்கும் தெய்வங்களுள் மிக மேலானவர். கண் கண்ட தெய்வமாக விளங்குபவர் ஆவார். ஒரு சமயம் குமாரக்கடவுள் படைத்தல் தொழிலைச் செய்து வரும் பிரமனிடம் ஓங்காரத்துக்குப் பொருள் உரைக்குமாறு வினவினார். பிரமன் பொருள் தெரியாது திகைத்து நிற்கவே, பிரணவப் பொருள் தெரியாத பிரமன் படைத்தல் தொழிலுக்குத் தகுதியுடையவனல்லன் என நினைத்துத் தாமே படைத்தல் தொழிலை ஏற்றார். பிரமனது தலையில் குட்டினார். அவனைச் சிறையிலும் இட்டார். திருமாலும் பிரமனைச் சிறையிலிருந்து விடுவிக்க நினைத்துத் திருக் கயிலாய மலைக்குச் சென்று நந்தியெம்பெருமான் அனுமதி பெற்று உள்ளே சென்று சிவபெருமானிடம் பிரமனைச் சிறையிலிருந்து விடுவிக்க வேண்டுமென இறைஞ்சினார். நந்தியெம்பெருமான் வாயிலாகச் சிவ பெருமான் பிரமனை விடுவிக்க முருகப் பெருமானுக்குச் சொல்லி அனுப்பினார். முருகன் மறுத்து விட்டார். அச்செய்தி கேட்டு எம்மிறைவன் திருநகை புரிந்து இடப வாகனத்திலேறித் திருமால், ஏனைய தேவர்கள் புடைசூழக் கந்த வெற்பை அடைந்தார்.

திருக்குமரனிடம் பிரமனைச் சிறையிலிருந்து விடுவிக்க ஆணையிட்டார். கண்ணுதற் பெருமான் சொற்கேட்ட முருகப் பெருமான் தன் அருகில் இருந்த வீரர்களை அனுப்பி பிரமனைக் கொண்டு வரச் செய்தார். சிவ பெருமான் பிரமனைப் பார்த்து முன் போலவே படைத்தல் தொழிலைச் செய்ய திருவருள் புரந்தார்.

பின்னர் கயிலை நாயகன் முருகப் பெருமானைத் தன் மடியில் அமர்த்திப் பிரமன் அறியாது திகைத்த பிரணவத்தின் உட்பொருளைக் கூறுமாறு வினவினர். எம்பெருமான் திருச்செவி சாய்த்தார். ஞான பண்டிதனாகிய முருகப்பெருமானும் பிரணவத்தின் உட்பொருளை உள்ளவாறு உபதேசித்தார். உடனே முருகப் பெருமானை சுவாமிமலையாகிய இத்தலத்தில் இருக்கச் செய்து சிவபெருமான் திருக்கயிலை ஏகினர். இச்செய்தியினை

"பொன்னவங் கடுக்கைப் புரிசடையோன்
முன்னம் பிரமம் மொழிந்தோனே"

எனக் குமரகுருபரரும் திருவாய் மலர்ந்தருளினர்.

சுவாமிமலையில் குருநாதனே குரு வடிவாய் இருந்து சுவாமிநாதக் கடவுளாகக் காட்சி தந்து அடியார்களுக்குக் கருணை பாலிக்கின்றார். திருவேரகம் என்னும் சுவாமிமலை தொன்மையான தலம் என்பது தெள்ளிதின் போதரும். ஏறக்குறைய 1200 ஆண்டுகட்கு முன்பு கடைச்சங்க காலத்தில் வாழ்ந்த சங்கப் புலவர்களின் தலைவரும், நான்மாடக்கூடலில் தருமிக்குப் பொற்கிழியின் பொருட்டு ஆலவாய் அண்ணலைச் சிவபெருமானே என்று தெரிந்தும் பொருள் குற்றம் குற்றமே என்று கூறியவரும், திருமுருகாற்றுப் படை தந்தருளியவருமான நக்கீரர் பெருமான் தம் நூலின் கண்ணே நான்காவது படைவீடாக இத்திருவேரகத்தைக் கூறும் பொழுது பதின்மூன்றே வரிகளில் அதன் சிறப்பினை எடுத்துக் காட்டுகின்றார். அஃது பின் வருமாறு: கற்றல், கேட்டல், ஈதல் என்ற மூன்று நெறியையும் இதற்கு எதிரிடையான கற்றுக் கொடுத்தல், வேட்டுவித்தல், ஏற்றல் என்ற மூன்று நெறியையும் வழுவாதவாறு மேற்கொண்டு ஒழுகுபவராய், தாய், தந்தையாரின் குல நலப்பெருமை குன்றா நெறியில் பிரமசரியத்தில் நாற்பத்தெட்டு வயதுவரை வேதத்தை முறையாகச் சொல்லும் முயற்சியில் முயன்று சாத்திரப் பயிற்சியில் தேர்ந்து இல்லற தருமத்தினை மேற்கொண்டு மூன்றுவித அக்கினி பூசனை செய்வதாகிய பெருஞ்செல்வ வளம் பெற்று ஒன்பது புரிகளையுடைய பூணூல் தரித்த வேதியர், காலமறிந்து நீராடி, ஈரம் புலராத ஆடை உடுத்து, ஓம் நம: குமாராய, சரவண பவ, என்று சொல்லப்பட்ட சடாக்ஷரப் பெருமையைத் தன்னுள் அடக்கிய பிரணவத்தின் வேத மந்திரங்களை ஓசை குன்றா முறையில், நாதக் கட்டுடன் ஓதி, வாசம் பொருந்திய மலர் கொண்டு அருச்சித்துத் தோத்திரம் செய்யும் வைதீக வழிபாட்டுக்கு மிகவும் உளமகிழ்ந்து கேட்டு திருவேரகத்தில் குரு மூர்த்தமாய் சுதந்திரம் முருகப் பெருமானுக்கு உண்டு என்பதாகும். மலையின்மீது திருக்கோயிலில் ஸ்ரீ சுவாமிநாத சுவாமி வலது கையில் தண்டமும், இடது கையை இடுப்பில் அமர்த்தியும் அருமைக் காட்சியினை அளிக்கிறார்.

மலையின்மேல் ஏறுவதற்கு 60 படிகள் உள்ளன. பிரபவ, விபவ என்ற அறுபது வருஷ தேவதைகளும் அமைந்துள்ளன எனப் புராணங்கள் கூறுகின்றன. வருஷ தேவர்கள் படிகளாக அமைந்துள்ளனர் என்று வழிபாட்டிற்கு வரும் மெய்யன்பர்கள் முதற் படியில் தேங்காய் உடைத்துத் தீபாராதனை செய்து, அவர்களின் அனுமதி பெற்றுக் கொண்டே, மேலேறிக் குருநாதனை வணங்குகின்றார்கள் என்ற செய்தி திருவிடைமருதூர்ப் புராணத்தில் காணப்படுகிறது.

தென்னாட்டையே ஒரு சிவாலயமாக்கி, சிதம்பரம், திருவாவடுதுறை, முதலிய தலங்களைப் பரிவாரத் தெய்வங்களின் இருப்பிடமாக்கி அவற்றினுள் விதிப்படி முருகன் ஆலயம் அமைய வேண்டிய இடத்தில் திருவேரகமாகிய சுவாமிமலை தலம் அமைந்துள்ளது எனக்கூறித் தென்முகக் கடவுள் எழுந்தருளிய தலமாக ஆலங்குடி (திருவிரும்பூளை) என்றும், விநாயகர் தலமாய் அமைந்தது திருவலஞ்சுழி என்றும் கூறியுள்ளார்.

''திணிபுகழ் ஆலங்குடியில் குருமூர்த்தி
யானைத்
திருமுகத்தோன் வலஞ்சுழி ஏரகத்திற்
செவ்வேள்''

என்றும் திருவிடைமருதூர்த் தலபுராணத்தில் ஆசிரியர் குறிப்பிடுகின்றார்.

ஸ்ரீ சுவாமிநாதன் எழுந்தருளியுள்ள பீடம் சிவலிங்கத்தின் ஆவுடையார் போன்றும், சுவாமிநாதன் இலங்கத்தின் பாண ரூபமாகவும் அமைந்திருப்பது முருகனே சிவபெருமான், சிவபெருமானே முருகன் என்ற தத்துவத்தை விளக்குவதாய் உள்ளது. இத்தலத்தில் வச்சிர தீர்த்தம் குமார தாரை (காவிரி) சரவண தீர்த்தம், நேத்திர தீர்த்தம், பிரம தீர்த்தம் என்று சிறப்பித்துக் கூறும் தீர்த்தங்கள் அணி செய்கின்றன.

அரிகேசன் என்னும் கொடிய அரக்கனால் தன் வலிமையை இழந்த இந்திரன், இத்தலம் சார்ந்து, புனல் மலராதி கொண்டு, ஸ்ரீ சுவாமிநாதனை வழிபட்டு, எம்பெருமான் அருள்பெற்றுத் தன் வலிமையை மீண்டும் அடைந்துய்ந்தான். அதன் நினைவுக்காக தேவேந்திரன் தன் வாகனமாகிய ஐராவதத்தை (வெள்ளையானையை) ஸ்ரீ சுவாமிநாதன் திருமுன்னர் நிறுத்திச் சென்றான். அந்த வெள்ளையானையே ஸ்ரீ சுவாமிநாதன் திருமுன்பு இன்றும் இருக்கக் காணலாம்.

இத்தலம் சார்ந்து மெய்யன்போடு ஸ்ரீ சுவாமிநாதனைத் தரிசிப்போர்கள் பிறவித் துன்பத்தினின்றும் நீங்கி எல்லையில்லாத இன்பங்களைப் பெறுவர். தமக்கு ஏற்படுகின்ற இடையூறுகள், நோய்கள், பில்லி சூனியம் போன்ற ஏவல் வினைகள், பாம்பு, பிசாசு, கொடிய பூதம், பெரும் தீ, நீர் வெள்ளம் பகைவர்களின் கொடுமை முதலிய வற்றினின்றும் நீங்கப் பெற்றுக் காக்கப்பட்டு இரட்சிக்கப் பெறுவர். தன்னடியாரின் இடைஞ்சல் களைவோனாகிய முருகப் பெருமான், ஸ்ரீ சுவாமிநாதன் கழல் பேணி, இகபர சௌபாக்கியங்களையும் இஷ்ட சித்திகளையும் பெறுவோமாக. ஸ்ரீ சுவாமிநாதன் திருவருட்டிறத்தினைப் பேணி, நினைந்து அவனருளால் மக்கள் வாழ்வார்களாக,

வேலும் மயிலும் துணை நிற்க.

**டி. எஸ். சுவாமிநாத உடையார்,**
நிர்வாக அறங்காவலர்.

**எஸ். மகாலிங்கம்,** பி. எஸ்ஸி.,
நிர்வாக அதிகாரி.

**ஆர். எஸ். முத்து.**
**ஆர். கோவிந்தசாமி பிள்ளை,**
**எஸ். சுவாமிநாதன்,**
அறங்காவலர்கள்.



# அறியும்......  ......அறிவு

திரு. எஸ். முருகேசன்

திசைதோறும் கூவிக்குரல் எழுப்பிக் குவலயத்தாரைக்கூட்டி அறை அறிவு ஆறும் பெற்றே உலவுகின்றோம். மேன்மையுற்றோம் என்று மார்தட்டி ஒளிவீசும் நிலவில் ஓடியாடவில்லையா? ஆழ்கடல் துளைத்து வாழும் வளம்பல சேர்க்கவில்லையா? பெருகி வரும் பிணி அகற்றிடச்செய்ய வழிவகை காணவில்லையா? புயலென, மழையென, நிலப்பிளவையென வரும்நிலை உரைக்க வகை செய்யவில்லையா? என்று அளவற்ற அழிவுறு நிலைகளைச் சான்றாக எடுத்துக் காட்டியும் மனிதன் மேன்மையுறவில்லை என்பது கூற்றம் அன்னகூற்று என்று குற்றம் உரைப்போர் உளர். ஆறறிவும் அற்ற பல்லுயிரினங்கள் இன்று இறுதியில் அழிவதைப்போல் அழிவுறும் நாம் மேன்மையுற்றோம் என்பது நகைப்பிற் இடமானதாகும்.

உடல்பிணி தீர்க்க எண்ணற்ற வழிவகைகள் கண்டபோதிலும் பிணி பிணக்கமடையவில்லை. கடலில் மிதந்து, வானில் பறந்து வேண்டுவனவெல்லாம் வேண்டியபடி வேண்டிய காலத்தில் வேண்டிய இடத்தில் பெற்றாலும் வாழ்வில் நிறைவு ஏற்படுவதில்லை. நாம் அறிந்ததில் விளைந்ததெல்லாம் நோயின் பெருக்கமும் ஆண்மையின் சுருக்கமும், மனதின் செருக்கமும், தர்மத்தின் நடுக்கமும், சத்தியத்தின் இறுக்கமும், அழிவின் முழக்கமும் இன்றிப் பிறிதொன்றில்லை.

வெளுத்ததெல்லாம் பாலாய் இருக்குமாயின் நாமறிந்த அறிவும் அறிவாக இருக்கும். ஆனால் இயற்கையின் நியதி, தெய்வத்தின் வரையறை இதற்கு மாறுபட்ட ஒன்றாகும். அறிவின் உண்மை நிலையை உணர்ந்து அதன் வழிநின்று நித்திய வாழ்வு வாழும் பெரிய அறிவுச் செல்வங்கள் நிறைந்த பெருமை தமிழ் மண்ணுக்கு உண்டு. அவர்தம் ஆழ்ந்தநிலை அறிவின் ஆழத்தை அளக்கும் கருவியாக அமைந்துள்ளது. அவர்கள் வாழ்க்கை முறையில் அறிவு நம் போன்ற மக்களுக்கு உணர்த்தப் படுகின்றது.

'விழியும் நெஞ்சும்' கரைபுரளும்போது கருத்தினுள்ளே தெளிநின்ற ஞானம் நிகழ்கின்றதை அந்தமில்லா ஆதியை அந்தாதி பாடிய அபிராமிப்பட்டர் திருவாய் மலர்ந்தபோது அறிவு அறிவிக்கப்படுகின்றது. துணையாகவும், தெய்வமாகவும், பெற்ற தாயாகவும் எண்ணி "பிங்கலையே, என் கண்மணியே பிணிக்கு மருந்தே, விழுப் பொருளே" என்றெல்லாம் கண்ணீர் மல்கக் கதறியபோது மனம் பதறவில்லை. ஆழ் கடலில் அமைதி காணப்படுகின்றது. அறிந்த அறிவை அதற்குரிய இடத்தில் சேர்ப்பித்துவிட்டதால் அதன் பயன் அளவிறந்ததாகி விடுகின்றது. அறிந்த அறிவு திருவடியைச் சாரும்போது அறிவு அறிந்ததாகக் கொள்ளப்படுகின்றது.

புனித நூல்களைக் கற்றலும், தெய்வ நெறி நின்றோர் அருளிய பாடல்களைப் படித்தலும், மனனம் செய்தலும் இறையைப்பற்றி இடையிறாது பேசுதலும், பாடுதலும் எழுதுதலும் உண்மை அறிவை அடைய அழைத்துச் செல்லும் பாதையே தவிர இவை அறிவை அறிந்ததாகக் கொள்ள வாழ்க்கையில் அன்றாடக் முடியாது.

காரியங்களிலும்,செயலிலும் ஒன்றிப் பின்னர் மும்மலமும் முக்காலமும், கடந்ததும், அருவருவும் உருவும் உருவற்றதுமானதும் ஆன இறையின் திருமலர் அடிகளில் செறியும் போது அறிவு அறிந்ததாக ஏற்கப்படுகின்றது. ஆதலால் "அறிந்தேன் எவரும் அறியாமறையை அறிந்து கொண்டு செறிந்தேன் உனது திருவடிக்கே" என்பார் அபிராமிப்பட்டர்.

"ஐயனுண்டகை அந்தணன் அருமா
மறைப் பொருளாயினன்"

என்பார் சம்பந்தர்.

"மறையுமாய் மறையின் பொருளாய் என்றன் மனத்திடை மன்னிய மன்னே" என்று பிடித்த பத்தில் அறிவின் செறிவிடம் உணர்த்தப்படுகின்றது.

அறிவின்நிலை இறையில் உறையாவிடில் பிஞ்சில் கனியாய் காலப்போக்கில் இராவணன்போல், பத்மாசூரன்போல், தக்கன் போல் பொலிவிழந்து அழிந்து விடுகின்றதை வரலாறு உணர்த்துகின்றது. அறிவின்நிலை இறையில் உறையும்போது இறைவனால் ஒரு பொருள் அளிக்கப்படுகின்றது.

இறையளிக்கும் விலைமதிப்பற்ற இந்தப் பொருளை 'அருள்' என்பார் கல்லும் நெகிழும் வாசகம் பாடிய மாணிக்கவாசகர். அருள் என்னும் பொருள் மாறுபடும் தன்மை அற்றது, நிலைத்தது, நித்தியமானது. ஆதலால் அருளை ஒத்தபொருள் என்பார். ஒத்த பொருளாயின் பல பொருளாமோ என்று ஐயம் உண்டாகாதிருக்க 'ஒரு பொருளே' என்று மேலும் கூறுகின்றார்.

மாணிக்கவாசகர் கூறும் ஒத்த பொருளை, ஒரு பொருளையே "செம்பொருள்" என்ற கருத்தில்

"பிறப்பென்னும் பேதமை நீங்கச்
சிறப்பென்னும்
செம்பொருள் காண்பது அறிவு"

என்று வள்ளுவர் கூறுகின்றார்.

அருள் என்னும் ஒத்தபொருளை, ஒரு பொருளை, செம்பொருளை அடையும் அறிவே அறிவு என்பது தெளிவாக்கப்படுகின்றது.

இந்த அருள் என்னும் பொருளைப்பெற யாராவது வரமாட்டார்களா என்ற ஏக்கத்துடன் காத்திருக்கின்றான் ஒரு பித்தன், ஊமத்தன். அவனே அனைத்துயிருக்கும் அத்தன், சித்தர்க்கெல்லாம் சித்தன், காலனுக்கும் எத்தன், படை நடுங்கும் பாம்பை இடையிலும், வளர்நிலா உலாவரும் சடையிலும் முடித்தவன். முடிவின் முடிவானவன். முடிகொண்ட கங்கை மங்கையின் அழகு முகத்தில் தங்க உலகலந்த நாயகி அவனது உடலின் பாதியை அளந்து பெற்றிருப்பான். சுழலும் உலகில் உழலும் உயிரை உய்விக்க அறிவைப் படைத்தான். அறிவை அறிந்து கொண்ட உயிருக்கு அருளைக் கொடுத்து வில்லடியும், கல்லடியும், பிரம்படியும், சொல்லடியும் திரும்பப் பெற்றுக் கொண்டவன். மேலும் மேலும் யாராவது அருள் என்னும் பொருள்பெற அறிவு கொண்டு வரமாட்டார்களா என்று காத்திருக்கும் பித்தனை பித்தன் என்று சொல்லாமல் எப்பெயர் இட்டு அழைப்பது.

அருள் பெற்றால் நிழல்போல் தொடரும் பிறவி எல்லாம் நிழலில் மறைந்த நிழலாய்ப் போகும். தொடர்ந்த பிறவி தொடராது. இறவாப் பெருநிலையடைய உதவும் அருள் பெறப் பயன்படும் அறிவன்றோ உண்மை அறிவு. அரும்திறல் இறவான் பிறவான், மாணிக்கவாசகனார் இதனையே அழகுபட

"செத்திடமும் பிறந்திடமும்
இனிச்சாவாது இருந்திடமும்
அத்தனையும் அறியாதார்
அறியும்அறிவு எவ்வறிவோ?
ஒத்தநிலம் ஒத்தபொருள்
ஒருபொருளாம் பெரும்பயனை
அத்தன்எனக்கு அருளியஆறு
ஆர்பெறுவார் அச்சோவே"

என்று அறிவின் அறிய வேண்டிய பகுதியை அறிவிக்கின்றார்.



# அட்ட நாகபந்தனம்

திரு. இல. பழநிச்சாமி



## நேரிசை வெண்பா

சீரார் கவிமாலை சேமனே மன்நீபா
தாரா வின்னேசே தனமன்ன — மாராவா
வீவாநன் னுக விமலாமா வானதே
வாவாமா நீதவதி பா. 1

மாரா குகனுமா வாசேம னேநன்றே
பாராரா மன்னுசே வானரன்கு — மாராவா
காவாநன் னுக கமகாமா ஞானநா
வாவாமா சேதனதி பா. 2

சேயா சகபூமா தேசேம னேதென்தே
பாயாரா மன்னுசே பானயன்தே — மாயாவா
மேவாரின் வாக விமலாமா கானனே
வாவாமா போதனதி பா. 3

தூயா நகநேமா தூசேட னேபன்னு
பாயாரா மன்தேசே வானயன்த — மாயாவா
னுவாருன் மோக வமராமா மோனனே
வாவாமா தாதபதி யே. 4

நாலா முகனுமா ராசே முனேமன்பா
பாலாரா மன்தேசே மானகன்கோ — மாலாவா
னுவாமன் மோக னமயா மாவானனு
வாவாமா நாததி வா. 5

சீலா ரொகரமா சேசேவ னேருன்தே
பாலாரா மன்றேசே கானமின்மா — மாலாவா
தோவாமுன் பாக துமவேமா யூனத
வாவாமா பாதகதி தா. 6

தேசு மிகவாமா தேசேது னேமன்கோ
பாசுரா நன்றேசே பானவின்று — மாசிவா
தாவாநன் ஞக சிமயாமா கானனே
வாவாமா நீதநிதி தா. 7

தேசு சிகனமா தாசேய னேயுன்னி
பாசுரா மன்கோசே பானலின்கோ — மாசிவா
காவாதென் வாக கமகாமா ஞானமூ
வாவாமா நீதததி வா. 8

1. *(ப-ரை)* சீரார் — சிறப்புப் பொருந்திய; கவிமாலை — க வி யா கி ய மாலையானது; சே ம னே — சேமநிதிக்கு இருப்பிடமான வனே; மன் — நிலை பெற்ற; நீபா — கடப்ப மலர் மாலையைப் புனைந்தவனே; தாரா — நீ அணியும் மாலையாக; இன்னே — இப்பொழுதே; சேதன — ஞான வடி வினனே; மன்ன — விளங்க; மாரா— செவ்வேளே; வா — வருவாயாக; வீவா — அழியாத; நல்நாக — நன்மை மிகும் குறிஞ்சிநிலக் கடவுளே; விமலா — மும் மலங்களை யழிப்பவனே; மா — பெரிய; வா ன தே வா — தேவசேனாதிபதியே; வாமா — உயர்வுமிக்கவனே; நீ த வ தி பா — நீதிசெலுத்தும் இறைவனே. எ-ம்.

2. *(பதை-ர)* மா ரா — பேரழகு வாய்ந்த; குக நாம — குகக் க ட வு ளே; வா — வாவுதலைக் கொ ண் ட; சே — இடப வாகனத்தை உடைய; ம னே — அர சனே; நன்றே — அடிமை நன்மை பெற நன்றே; பார் — கண்பார்த்தருள்; ஆரா — குரவ மலர் மாலையணிந்தவனே; மன்ற— நிலைபெற்றவனே; சே — செம்மையும்; வான் — உயர்வும் பொருந்திய; அரன் — சி வ பெ ரு மா னி ன்; குமாரா — குமாரனே; வா — வருவாயாக; காவா — கா த் த ரு ள் வா ய்; நல் — நல்ல; நாக — தெய்வயானையின் ம ண வா ள ா; கமகா — புலவனே; மா — பெ ரு மை த ங் கி ய; ஞான நாவா — ஞான உப தேச குருவே; வாமா — அ ழ க னே; சேதன — அ ஞ் ஞா ன இருளை நீக்கும்; தி பா — செழும் சோ தி வ டி வா ன தெய்வமே. எ-ம்.

3. *(ப-ரை)* சேயா — குமாரக் கடவுளே; சகபூமா — உ ல க காவலனே; தே — தெய்வமே; சே — செம்மையான வண் ணம் பெற்றவனே; மனே — அரசனே; தென் — அழகிய; தே—தேன் நிறைந்து; பாய் — ஒ ழு கு ம் ப டி யா ன; ஆரா — கடப்ப மலர் மாலையை அணிந்தவனே; மன் — நிலை பெ ற் ற; ஆசே — ஆசு முதலாகிய நாற்கவித் துறையும் வல்ல; பானயன் — வண்ணப் பாக்களைப் பாடும் நயமிக்க அருணகிரிநாதரின்; தேமாயவா — இன்பரசமானவனே; மேவாரின் — பகைவரை வெ ல் லு ம்; வாக — வெற் றியை உடையவனே; விமலா — விம லனே; மா — பெரிய; கா ன னே — கு றி ஞ் சி நிலத் தலைவனே; வாவா — வருக வருக; மா—உயர்வான; போதன் — பிரமனின்; அதிப — த லை வ னே. எ-ம்.

4. *(ப-ரை)* தூயா — பரிசுத்தமானவனே; ந க நே ம ா — ம லை க ளி ன் வி ரு ப் ப மிக்கவனே; தூ — உயர்வான; சேடனே — ஆதிசேடனும்; ப ன் — துதிக்கும்படி யான; உ பா ய — சதுரப்பாடு உடை யவனே; ராமன் — விட்டுணுவும்; தே — தெய்வமாகிய; சே வா ன் — இடப வாகன சிவபெருமானும்; அயன் — பிர மனும்; தமாய — தமது கூட்டமாகிய; வா னு வா ர் — தேவர்களும்; உன் — எண்ணித் துதிக்கும்படியான; மோக — இச்சையை உடைய; அமரா — கட வுளே; மா — பெரிய; மோனனே — ஞான வடிவினனே; வா வா — வருக வருக; மா—தெய்வநாயகியினது; தாத— தொண்டனை; பதியே—அரசனே; எ-ம்.

5. *(ப-ரை)* நாலாமுகன் — நான்கு முகங்களை உடைய பிரமன்; நாம் — அச்சப் படும்படியான; மா — பெருமை தங்கிய; ராசே — அரசனே; முனே — முன் காலத்திலே; மன் — பொருந்திய; பாபு — பாம்பையும்; ஆல் — ஆலகால விடத்தினையும்; ஆர் — ஆத்திப் பூமாலையும்; ஆ — இடபத்தையும் கொண்ட; மன் — நிலை பெற்ற; தே — தேவனும்; சே — அழகிய; மானகன் — பெரிய மலையை உடையவனுமான; கோ — சிவபெருமானும்; மாலாவான் — மகாவிட்டுணுவும்; நாவாமன் — பிரமதேவனும் போற்றும்; மோகனமாயா — இன்பச் செழுஞ் சோதியே; மா — மேலான; ஆனனு — ஆறுமுகங்களை உடையவனே; வாவு — தாவுதலைக் கொண்ட; ஆ — இடபத்தையும்; மா — யானையையும் வாகனமாகக் கொண்ட, நாத — நாதனே; ததி — இச்சமயத்தில்; வா — வருவாய். எ-ம்.

6. *(ப-ரை)* சீலார் — சிறப்புப் பொருந்திய; ஒகரம் — மயிலும்; மா — யானையும்; சே — இடபமும்; சேவல் — சேவற் கொடியும்; நேர் — நேராக; உன் — துதிக்கும்படியான; தே — தேவனே; பாலார் — பாலைப் பொழியும்; ஆ — பசுக்களுக்கு; மன் — இறைவனுன; தே — திருமாலின்; சே — அழகிய புதல்வியராகிய; கானமின் — வள்ளி நாயகிக்கும்; மா — தெய்வநாயகிக்கும்; மாலா — இச்சையை உடையவா; வாதோ — அடியேன் மீது ஏன்வாது; வா — வருவாய்; முன்பாக — நேராக; துமவே — தும்முதலினுலே; மாய் — இறத்தலைக் கொண்ட; ஊன — அற்பமாகிய இவ் வுடலினது; தவா — துன்பம்; ஆமா — ஆகுமா; (ஆகாது ஆதலினுல்) பாதகதி — உனது பாதாரவிந்தமாகிய நல்ல கதியை; தா — தருவாய். எ-ம்.

7. *(ப-ரை)* தேசு — அழகு; மிக—மிகவும்; ஆம் — ஆகிய; மா — இலக்குமிக்கு நாயகனும்; சேது — சமுத்திரத்திலே திருவணை கட்டிய; நேமன் — திருமாலும் ஆன கடவுளுக்கும்; கோ — தலைவனே; பாசுரா — நாற்கவிப்பாடல் நயம் கொண்ட புலவனே; நன்றே — நன்மையாகவே; சே— சேயாகிய யான்; பானவின்றும் — பாக்களை நின்மீது பாடியும்; ஆசு — குற்றமாகிய; இ — இந்த; வாதா — துன்பமா; வா — துன்பம் நீங்க வருவாய்; நல் — நல்ல; நாகசிமயா — மலை உச்சியிற் கோயில் கொண்டவனே; மா — பெரிய; கானனே — இசை ஞான வடிவினனே; வா வா—வாழ்வதற்கான; மா—மேலான; நீத — நீதியாகிய; நிதி — செல்வத்தை; தா — தருவாய். எ-ம்.

8. *(ப-ரை)* தே—தெய்வத் தன்மையையும்; சுசி — நன்மையையும்; கனம் — மேன்மையையும் கொண்ட; மாதா — உலக மாதாவான உமா தேவியின்; சேயனே — புதல்வனே; உன் — யாவரும் துதிக்கும் படியான; நீபா—கடப்ப மலர் மாலையைத் தரித்தவனே; சுரா — தேவதேவனே; மன் — உயர்வாகிய; கோ — இறைவனே; சே — அழியாத இளமைப் பருவத்தை உடையவனே; பானலின் — நீலோற்பலம் போன்ற; கோ — கண்களை உடைய; மா — தெய்வயானையின் கணவரே; சிவாக — சிவ குமாரனே; வாதென் — அடிமை மீது கோபமென்ன; வாக — வெற்றியைக் கொண்ட; கமகா—புலவனே; ஞான — ஞான தண்டாயுதபாணியே; மூவா — முடிவில்லாத மும்மூர்த்திக்கும் தலைவனே; வாமா—பேரழகு பெற்றவனே; வா — வருவாயாக. எ-ம்.



